கணபதியேநம:

# ஸ்ரீமஹாபாரதக் கீர்த்தனை

என்றுவழங்காநின்ற

# ஸ்ரீமஹாபாரதநாடகம்.

இஃது

கொன்றைமாநகரம். முருகப்ப முதலியார் புத்திரர்களாகிய,

**கொ. அருணாசலமுதலியார்**

**கொ. சிங்காரவேலுமுதலியார்**

இவ்விரண்டு பிரபுக்களும்,

உலகத்தார் யாவருங்கேட்டு சிரவணானந்தமடையும்படி தமிழில் காவியமாகவும், வசனமாயுமிருக்கப்பட்ட ஸ்ரீமஹாபாரதத்தை நூதனமாய் கீர்த்தனரூபமாகச் செய்யும்படி,

**வேலூர். சுப்பராய முதலியார்**

**கோ. முத்திராமக்கவிராயர்**

இவ்விரண்டு வித்துவான்களுக்கும்

விசேஷப் பொருளுதவிசெய்தும்,

சிலமுக்யமானவிடங்களில் பாடாமல் விட்டுவிட்டதினால் அநேகநாளாய் சம்பூரணமாகாமலிருந்ததை மேற்படி பிரபுக்களின்

மைத்துனராகிய,

**ஸ்ரீபெரும்பூதூர். பொன்னுசுப்பராய முதலியார்**

பொருளுதவிசெய்து

கதிர்வேல் கவிராஜபண்டிதரால்

மேற்படிகுறைவுகளை சம்பூரணப்படுத்தி

ஸ்ரீ. பொன்னுசுப்பராய முதலியாரும்,

அவர் குமாரர்

**ஸ்ரீ. முருகப்பமுதலியாரும்,**

முன் அச்சிட்டிருந்தபடி

இந்நூலிந்துரிய சகல சுதந்திரமும் பெற்று

சென்னபட்டணம் சூளை:

திருவொற்றியூர். பரசுராம முதலியார் குமாரர்,

**தி. இராஜுமுதலியாரால்**

தமது

பரப்பிரம்ஹ அச்சியந்திரத்திற

பதிப்பிக்கப்பட்டது.

---

இரண்டாம் பதிப்பு.

கலியுகாதி-௫௲ள-ல்-நிகழ்கின்ற விசுவாவசு௵ சிங்க௴.

உ

கடவுள் துணை.

# பாரத நாடகம்.




## விநாயகர் துதி.

நேரிசை-வெண்பா-க.

வெற்பார்புயத்து வியாசர்சொன்னபாரதத்தை ... ... *
நற்பாரதக்கீர்த்தனம் பாடப்-பொற்பார் ... ... ... *
மன்றினருமாதுமையும் வாழ்த்தியெடுக்கும்யானைக் ... *
கன்றினருஞ்சேவடியே காப்பு. ... ... ... ... (க)

இதுவுமது.

துதி-விருத்தம்-க.

சதுமறையின்பொருளானசிவன்முடிமேற் றும்பைமலர்தனையும்பிள்ளை *
மதியினையுமவல்தேங்காய்க்கீற்றெனவே யெண்ணியுளமகிழ்ந்துமெல்லத் *
துதிபாவுந்துதிக்கையினைநீட்டுகரி முகக்கடவுள்துய்யசெம்பொற் ... *
பதமலரையுளத்தமைத்துப்பாரத நாடகமெளியேன்பகருவேனே. (க)

க. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

[பல்லவி.]

விக்நேஸ்வராசரணம் - ஜயஜய
விக்நேஸ்வராசரணம்.

[அநுபல்லவி.]

முக்யமானதெய்வங்-களுக்குமிடர் ... ... ... அகற்றும்
முக்கண்ணுடையமூர்த்தி-யேயுன்பதத்தை ... முற்றும்
இக்குவலயந்தன்னில்-நம்புமென்எண்ணந் ... தானே
ஈடேறும்படியருள்-பொழியவேணுங்கோ ... மானே
(விக்நேஸ்வரா.)

[சரணங்கள்.]

க. சகலரும்புகழ்பரா-சரமுனியா ... ... ... துதித்துத்
தக்கமெய்ஞ்ஞானசுக-நிஷ்டையினிற் ... ... கதித்து
மகிமைபெற்றிடுவேத-வியாசர்மிக ... ... மதித்து
மனத்திலன்பினைப் ... ... ... ... பதித்துப்
புகலும்பாரதத்தைநா-டகமா ... ... உரைக்கப்பூணும்
புன்மையேனுக்குத்துணை-நீ ... ... யாகவேணும்வேணும்
(விக்நேஸ்வரா.)

உ. நன்னெறியுற்றிடுபாண்-டவர்மேற்கிருபை ... நாட்டி
நயந்தமாலேதூதுபோய்-அவர்கள்கவலை ... யோட்டிப்
பொன்முடிதனைத்தன்ம-ராசன்றனக்குச் ... சூட்டிப்
புவியாளுமுறை ... ... ... ... காட்டி

தன்னுள்மகிழ்பாரத ... ... சரித்திரத்தைநீயே
தமியனுலேமுடிப்பித்-திடக் ... ... கடாக்ஷஞ்செய்வாயே
(விக்நேஸ்வரா.)

ங. மதிகுலமென்றுமோங்கிச்-செழிக்கும்படிசெங் ... கோலே
வாய்ந்தஜனமேஜய-மகாராஜனெருக் ... ... காலே
துதிசெய்துகேட்கவைசம்-பாயனர்பரி ... ... வாலே
சொன்னதெனமென் ... ... ... ... மேலே
நிதமுமெங்கும்பரவும் ... ... பாரதத்தையிப்போது
நிலைகொள்கிர்த்தனஞ்-செய்யக் ... கருணைசெய்யென்றன்மீது
(விக்நேஸ்வரா-க.)

---

## வெண்பா-உ.

வெற்பானயேட்டிலொருவெண்கோட்டினுலெழுதும் ... *
நற்பாரதக்கிர்த்தனம் பாட-பொற்பார் ... ... ... *
கனகசமுகன்மணத்தாள் கண்களிக்கவாய்ந்த ... ... *
கனகசமுகன்மணத்தாள் காப்பு. ... ... ... *

உ. இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

[பல்லவி.]

கணநாதாசரணம்-சிவசுத-கணநாதாசரணம்.

[அநுபல்லவி.]

குணமார்பற்பலதெய்வக் ... கூட்டத்திற்கெல்லாம்பெருங்
கோனுகிநினைத்தவர் ... ... குலதெய்வமாகவருங்
(கணநாதா.)

[சரணங்கள்.]

க. இதவானமறைகளு ... ... ... மிதுவேநமக்குச்சரி
யென்னும்படிக்குவியாச ... ... ... ரியம்பக்கனககிரி
யதனில்நீயெழுதிய ... ... ... வரும்பாரதத்தைப்பரி
வாகநாடகஞ்செய்ய ... ... ... வடியேனுக்கருள்புரி
(கணநாதா.)

உ. சாரதியாகமாயன் ... ... தடந்தேர்நடத்திநண்பார்
தனஞ்செயனுற்பூபாரந் ... ... தன்னைநீக்கியபண்பார்
பாரதநாடகத்தைப் ... ... பகாவடிமைக்கின்பார்
பரமகுருவாயல்லும் ... ... பகலுமுன்கடைக்கண்பார்
(கணநாதா.)

ங. பலவிதத்தவஞ்செய்திப் ... படியில்மேலோர்கள்காணும்
பயனெல்லாமிதுதரும் ... படித்தோர்க்கென்றன்புபூணும்
நலமாரும்பாரதத்தை ... ... நவரசங்களுந்தோணும்
நாடகஞ்செய்யவென்முன் ... ... நாடிரக்ஷிக்கவேணும்
(கணநாதா-உ.)








நன்றாக.　　குருவாழ்க.　　குருவேதுணை.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# ஸ்ரீமஹாபாரதநாடகம்.

## பாயிரம்.

## காப்புடைக்கடவுள் வணக்கம்.

### கண்ணன்துதி.

விருத்தம்-க.

குந்தனைநன்மருகனெனப்படைத்தபார்தாமனிசைக்குணத்தினோடெங் *
குந்தனைநினைக்குமடியார்க்கருள்செய்திருமேனிக்கொண்டலாம்வை ... *
குந்தனையென்னாருயிருக்குயிராகக்கொத்தடிமைகொண்டசீர்மு ... ... *
குந்தனையனந்தனைநினைந்தினிதினிந்தகதைகூறுவேனே ... ... (க)

### அவையடக்கம்.

விருத்தம்-உ.

வென்றிபெறுவில்லிநல்லாப்பிள்ளையுரைபாரதத்தின்விருத்தப்பாவி ... *
லொன்றுகதைதவழுவாமலிசைமிகுத்தகீர்த்தனம்நீருரையுமென்னக் ... *
சொன்றைநகர்ச்சிங்காரவேலுபூபதிகேட்கக்குளிர்ந்தஅன்பில் ... ... *
நின்றெழில்கொள்முத்துராமன்சுப்பராயனிவர்நிகழ்த்தினரே ... (உ)

க. தரு-இராகம்-மோகனம்-சாப்புதாளம்.

[பல்லவி.]

காக்கவேணும்பெரியோரே-நிதங்
கதிக்குமுங்கள்சீரே.

[அநுபல்லவி.]

வாக்கினுற்பாரதமென் ... ... ... ருரைதுமொழிதனை
வசனித்திடவேசற்று ... ... ... மதியில்லாதவனைக்
(காக்கவேணும்.)

[சரணங்கள்.]

க. பண்டுவியாதமுனி-லக்ஷங்கிரந்த ... ... மாகப்
பாரில்விளங்கும்படி ... ... செப்பினர்-பின்பு
அண்டும்வில்லிபுத்தூரார்-நல்லாப்பிள்ளை ... பதினு
ருயிரங்கவியால் ... ... ... நிரப்பினர்
தொண்டரவர்சொன்னதை-நாடகமாகக் ... கோத்துச்
சொல்லலுற்றேனன்பு-தோற்றுச்சொற்களைச் ... சேர்த்துக்
கண்டவென்குற்றத்தைக்-கட்டறவே ... ... தீர்த்துக்
கல்லாப்பிள்ளையென்றுங்கள்-கடைக்கண்ணினாலே பார்த்துக்
[காக்கவேணும்.]

உ. குயில்கூவியவோசை-கேட்போர்செவியிற் ... காக்கை
கூவத்தலைப்பட்டது ... ... ... போலே-கல்வி
பயிலாதமூடன்யான்-பாரத ... ... நாடகம்
பகரலுற்றேன் ... ... ... புவிமேலே
இயல்பானவிக்கதையைக்-கெடுத்தானென்று ... விதித்து
ஏழையையுங்கள்சிந்தை-யினிற்றிரணமா ... மதித்துத்
தயவில்லாமல்வைய-வேண்டாமிகக் ... ... கொதித்துத்
தாசானுதாசனென்று-தாங்கள்கிருபை ... ... பதித்துக்
(காக்கவேணும்.)

ங. உதயசூரியன்முன்னே-மின்மினியும் ... பறந்து
ஒளிதருமோசற்றுந் ... ... தானே-அதுபோற்
பதருக்கும்பதருநான்-பதறிஉள்ளா ... சையாற்
பாரதம்பாட ... ... லுற்றேனே
அதிமதுரமாப்பாடி-அரங்கேற்றிடு ... ... நிதானம்
அறியாவிட்டாலும்யான்-சொன்னதுகிஷ்ணத் ... தியானம்
இதையெவ்வகையா-வுரைத்திடினுமென்ன ... வூனம்
எல்லாந்தெரிந்தநீங்க-ளென்மீதுவைத்து ... மானம்
(காக்கவேணும்-க.)

## மங்களம்.

உ. தரு-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

[பல்லவி.]

மங்களம்-ஜய-மங்களம்

[அநுபல்லவி.]

சங்குசக்கரகதா ... ... ... கட்கதோதண்ட
தாசாதியெனு ... ... ... மாசறுபிரசண்ட
துங்கபுயாசல-பவளச்செவ் ... ... வாயனுக்குச்
சுருதிமுடிவில்நட ... ... மிடுநெடிய-மாயனுக்கு

(மங்களம்.)

[சரணங்கள்.]

க. நீலப்பசுமையுள்ள-முகில்மேனி ... ... நாதனுக்கு
நீண்டபுவனமெல்லாம்-வளர்பஞ்ச ... ... பூதனுக்கு
சீலமிகுமுருக்குமணிதன்சமேதனுக்குத்-திகழ்சதுர் வேதனுக்கு
ஆலின்மேற்பள்ளிகொண்-டகமகிழ் ... ... வாமனுக்கு
அவனிபுகழும்யா-தவகுல ... ... ... சோமனுக்கு
சாலவடிவுநிறை-சதகோடி காமனுக்கு
தங்குமன்பர்மனத்திற் ... பொங்கு-பரந்தாமனுக்கு

(மங்களம்.)

உ. மதிபிரகலாதனன்முன்-வந்தருள் ... ... சீலனுக்கு
மணிமுடிதரித்தோங்கும்-வசுதேவன் ... பாலனுக்கு
கதறுங்கஜேந்திரனைக்-காத்தருள்கோலனுக்கு- கருதாதிமூலனுக்கு
ததியில்வரையெடுத்துத்-தாங்கிய ... ... கையனுக்குத்
தகுமும்பருக்கமுதந்-தந்தருள் ... ... துய்யனுக்குப்
பதறிப்பூதகிமுலைப்-பாலுண்ட மெய்யனுக்குப்
பாம்பின்மேலாடிக்கர்வம் போம்படிசெய்-ஐயனுக்கு

(மங்களம்.)

ங. இந்துமரபினில்வந்-திடுதர்ம ... ... ... ராசனுக்கு
இசைவீமனுக்கர்ச்சுன-னென்னு ... மூலாசனுக்கு
சந்தமுறுநகுல னுனவிலாசனுக்கு-சாதேவனும் ... நேசனுக்கு
இந்தக்கதையைப்பாட-எனக்கருள் ... ... தீரனுக்கு
இஷ்டரஞ்சிதமிகு-நற்கொன்றை ... ... பூரனுக்கு
அந்தமுருகப்பமால்-தந்த ... ... ... குமாரனுக்கு
அரியசிங்காரவேலு ... ... பதியாங்-குபேரனுக்கு

(மங்களம்-உ.)

பாயிரம்-முற்றும்.

வெண்பா-உ. விருத்தம்-ங. தரு-ங. ஆ அ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# முதலாவது
# ஆதிபர்வம்.



## கடவுளர் வணக்கம்.

க. தோடயம்-இராகம்-நாட்டை-தாளம்-ரூபகம்.

க. நீடுசடைகொள்வியாசமாமுனி-நீதமறையொருநாலொடணியுற ... *
நாடியினிதுடனோதுபாரத-நாடகத்தைச்சொலவே ... ... ஆ-ஆ *
விடுதவஅடியார்கள்பழவினை-வேரினொடுபொடியாகவிரைவொடு ... *
சாடவருமதவேழமாமுக-சாமிபதந்துணையே ... ... ஜயஜய *

உ. யாவரினுமுயர்சிலமுனிவர்கள்-யாருநினைவுகொள்போதிலவரவர் *
நாவினிடையமுதூறுபாரத-நாடகத்தைச்சொலவே ... ஆ-ஆ *
சிவவதைபுரிபாவநிருதர்கள்-தீரவொழியவிணுடர்மகிழது ... ... *
தாவஅயில்தொடும்ஆறுமுகமுள-சாமிபதந்துணையே ... ஜயஜய *

ங. சிலமதிகுலராசராசசெய்-சிருமருமறையோர்கள்பெருமையும் ... *
நாலுவருணமும்ஓதுபாரத-நாடகத்தைச்சொலவே ... ... ஆ-ஆ *
ஆலமதையமுதாகவுணவரு-மாதிசிவனுமைமாயன்மலர்மகள் ... *
கோலஅயனெழில்வாணியிவர்பத-கோகனகந்துணையே ... ஜயஜய *

ச. தாளிணைகள்மிகநோகவெருதன-தாகஅருமைகொள்தூதுபுகலமுன் *
னுளிலரிசெலநாடுபாரத-நாடகத்தைச்சொலவே ... ... ஆ-ஆ *
ஆளஅருள்புரிவேடர்மகள்தெய்வ-யானைகுருபரன்வேல்வில்மயில்கொடி
வாளிகதையுடைவாள்திகிரிதொடி-வாரணமுந்துணையே ... ஜயஜய *

---

## ஜனமேஜயமகாராஜன்
### அரசியல்.

விருத்தம்-க.

ஜயமிகுத்தகாண்டீபசமரவிக்ரமவிஜயன்செய்தவத்தால் ... ... *
வயமிகுத்தாணாங்கசிங்கமெனவந்தவபிமன்னளித்த ... ... *
பயன்மிகுத்தபரிட்சித்தென்றேதுமகாராஜனருள்பாலனான ... ... *
நயமிகுத்துரைஜனமேஜயன்குருநாட்டினிற்செங்கோல்நடாத்தினனே *

உ. தரு-இராகம்-கௌளிபந்து-ஆதிதாளம்.

[பல்லவி.]

ஜனமேஜயபூ-பாலனன்றுஅரசு-செய்திருந்தானே

[அநுபல்லவி.]

நனிபுகழஸ்தனு-புத்தியல் ... ... பாராட்டி
நலத்தினுயர்சந்திர-குலத்தை ... நிலைக்கநாட்டி
(ஜனமேஜய.)

[சரணங்கள்.]

க. அமைத்திடுதேவபிர-மாலயங்கள் ... ... ... விதி
யாக்நிதம்நித ... ... ... ... மிலங்கவே
அரியமகாமந்திர-தந்திரங்கிருதுக் ... ... ... களோ
யாமலேமிகத் ... ... ... ... தங்கவே
குமைக்கும்பாபமென்ற-கொடுஞ்சொலென்பதென் ... றுங்
குடியில்லாமலங்கே ... ... ... விலங்கவே
கொல்லும்புலியுடனே-பசுவுஞ்சிநேக ... ... மாகக்
கூடிக்கொண்டுவிளை-யாடிப் ... ... பொங்கவே
(ஜனமேஜய.)

உ. தருந்தஅந்தவைகுந்தத்-தலத்துக்கிந்த ... ... நகர்
சமமென்றே ... ... ... ... பலர்கூறவே
சகலதன்மமுஞ்-செழித்துநாள் ... ... தோறுந்
தாராளமாயோங்கி ... ... ... ... மீறவே
புகுந்தஜயலட்சுமியு-மவடமேகுடி ... ... யாகப்
பொருந்தியன்பில்நிதம் ... ... ... விறவே
புவியிலாறிலொன்று-கொண்டுகுடிக ... ... ளைப்
போற்றியவர்துய-ராற்றி ... ... யீடேறவே
(ஜனமேஜய.)

ந. ஆடவரைம்பொறியும்-பெண்கள்கண்பார்வை ... யும்
அருநெறிவிட்டுச் ... ... ... செல்லாமலே
ஆனைமுதலெறும்-பீறுகமனி ... ... ... தரு
மாகுலப்பட்டு ... ... ... நில்லாமலே
தேடுந்துஷ்டவொன்னுருந்-தன்செங்கோல்மேற் ... பழி
சிரிப்பினிலுஞ் ... ... ... சொல்லாமலே
தீனருண்டெனுநாம-தேயத்தைக்கனவி ... ... லுஞ்
சித்தத்திலொருபோதுஞ்-சற்றும் ... ... புல்லாமலே
(ஜனமேஜய உ.)

## உதங்கன் கதை.

விருத்தம்-௨.

இந்தமன்னனரசுசெய்யுநாளிற்சத்திர ... ... ... *
பேரியாகமுஞ்சாந்தியாகமுந்தன் ... ... ... *
சிந்தைமகிழ்ந்தேமுடித்தான்மேலுமன்னோன் ... *
சிறந்தசபையினிலிருக்கும்போதுதங்கன் ... ... *
வந்துபயிலவர்மனையாளுக்காகத்தான் ... ... *
வாங்கியமணிக்குண்டலங்தெட்சகன்கொண்டேகுங் ... *
தந்திரமுரைத்தரியசர்ப்பயாகஞ்செய்யித் ... ... *
ததியென்றான்என்சொலைநீமதியென்றானே. ... ... (௨)

——(*)——

## பிருகுமுனிகதையும், கத்துருவைசாபமும், பரிட்சித்தை சர்ப்பந்தீண்டினவரலாறும்.

விருத்தம்-௩.

உதங்கனுரைகேட்டமன்னன்தெட்சகன்செய் ... ... *
யோர்தீமைக்கநேகசர்ப்பவதையேனென்றான் ... *
அதுதனக்குப்பிருகுவமிசத்தொருரு ... ... ... *
அரவினமாய்த்திடுகதையுமறையோனென்னு ... *
மதிமிகுமாயிரபாதன்தாயின்சாபம் ... ... ... *
வல்லாவுக்குற்றதென்றகதையுஞ்சொல்லிச் ... *
சதிர்கொளுன்பிதாவினைமுன்தெட்சகன்கொன் ... *
றானென்றான்மகிபனிப்பாடேனென்றானே. ... (௩)

௩. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

[பல்லவி.]

ஜனமேஜயாவுனக்குச்சொல்கிறேன்-நன்று
ஜனமேஜயாவுனக்குச்சொல்கிறேன்.

[அநுபல்லவி.]

வனவேட்டையிலுன்தந்தை-மிருகத்திரளைக் ... கொன்றான்
வன்புலியோடக்கண்டங்-கதன்மேற்றுடித்துச் ... சென்றான்
(ஜனமே.)

[சரணங்கள்.]

௧. ஏகுமன்னன்சமிக மகாரிஷிதவஞ் ... ... செய்யும்
இடஞ்சார்ந்தவரெதிரில் ... ... நேர்ந்து-புலி
எப்படிபோச்சுதென்றான் முனிமௌனத்தாற் ... பேசா
திருந்தாருன்தந்தைகோபஞ் ... ... சார்ந்து
நாகமொன்றிறந்தங்கேயிருந்ததை ... மாமுனி
நற்கழுத்தினில்மாட்டிப் ... ... போந்து-தன்

னகர்சேர்ந்தான்முனிபுத்ரன்சிரிங்கியோர்ந்தின்றைக் கேழா
நாள்தெக்ஷகனாலாவி ... ... சோர்ந்து
சாகும்படியுன்பிதா-வினைச்சபித்தவன் ... தந்தை
தனக்குச்சொன்னான்மாமுனி-கேட்டுப்பதைத்தான் சிந்தை
(ஜனமே.)

உ. மனம்பதைத்தசமீகர்மகனைப்பார்த்தறி ... வில்லா
மையினாற்றருமவானைக் ... ... கோதித்து-அர
வத்தாலிறக்கச்சபித்திட்டீயே ... ... சாபநி
வாரணஞ்செய்வாயென்றார் ... ... மதித்து
புனிதசிரிங்கிசாபமொழிக்கத்தனக்குத் ... தவம்
போதாதென்றான்மிகவுந் ... ... துதித்து-அப்
போதுமன்னன்தப்பித்துக்கொளச்சமிகர் ... சிஷாற்
போக்கினார்சேதியன்னோர் ... ... குதித்துத்
தனதாயுரைத்தார்வேந்தன்-களித்தாறுநாள்சி ... ருற்ற
சமுத்திரத்தில்மாளிகைசெய்-திருந்தான்பேர் ... பெற்ற
(ஜனமே.)

ங. ஏழாநாள்தெட்சகனாசனைக்கொல்லத் ... தாழை
யிடஞ்சேர்ந்திருந்தான்வழி ... ... கடந்து-அங்
கேழைப்பிராமணன்காசிபனென்போ ... ... னிந்த
இறைவனைத்தெட்சகன்போ ... ... யடர்ந்து
பாழாக்கிடக்கடித்தாலந்தவிஷத்தை ... நீக்கும்
படிக்குநாம்வேந்தன்தன்பாற் ... றொடர்ந்து-வெகு
பணஞ்சம்பாதித்திடலாமெனவேமிக ... யோசனை
பண்ணியாசைக்கடலிற் ... ... படர்ந்து
தாழாஎண்ணங்கொண்டுவந்-திருந்திட்டானொருக் ... காலே
சர்ப்பரூபத்தைமாற்றி-னான்தெட்சகன்மென் ... மேலே
(ஜனமே.)

ச. கடிதிற்றெட்சகனுருமாறிப்பிராமண ... ... னாகிக்
காசிபன்முன்னேயங்கே ... ... ... கிட்டி-யென்ன
காரியமாப்பரிட்சித்தண்டைக்கேகிறு ... யென்னக்
காசிபன்கேட்டுத்துசங் ... ... ... கட்டிப்
படியாளுமன்னனைத்தெட்சகன்கடித்தாலவ் ... விடம்
பறக்கஈசன்மந்திரத்தை ... ... ... யட்டி-சற்றும்
படுத்தாமற்சொல்லிவேந்தன்தனைப்பிழைப்பித்துத் தனம்
பறிக்கப்போகின்றேன்துடை ... ... தட்டி
அடுத்ததுசொன்னேனென்றான்-தெட்சகன்கேட்டுச் ... குலத்
தானுமென்விடந்தீர்க்க-மாட்டானென்றனன் ... சில
(ஜனமே.)

௫. அத்தெட்சகன்பினுங்காசிபனுடனங் ... ... கிருக்கு
மாலமரத்தினையான் ... ... ... கடித்து-நீ
ருக்கிறேனுன்மந்திரத்தால்மரங் ... ... கிளைத்திடி
லருமையுன்மந்திரமென்று ... ... அடித்து
மித்திரவேதியரூபம்நீங்கிப்பாம்பாகி ... ... யந்த
விருட்சத்தினைப்பல்லினாற் ... ... கடித்து-மிக
வெந்தசாம்பலாக்கினான்காசிபன்தழைக்கச் ... செய்
வித்தானீசன்மந்திரம் ... ... ... படித்து
இத்தைப்பார்த்ததெட்சக-னையாவுனது ... ... மந்திர
மெளிதல்லவென்றிப்படி-யுரைத்தான்மிகு ... சுந்தர
(ஜனமே.)

௬. அருமைப்பட்டதெட்சகன்காசிபனோடுன் ... மந்திர
மரிதானாலும்விதியை ... ... ... வெல்லச்-சற்று
மாகாதெனத்தனமீந்தனுப்பியபின் ... ... பூசுரா
னாகியம்மன்னவனைக் ... ... ... கொல்ல
வொருளனுமிச்சம்பழங்கைக்கொண்டு ... சமுத்திர
முற்றனைதமன்னனன்பு ... ... ... புல்ல-ஆசி
யோதிக்கொடுத்தானவன்மோந்திறந்தான் ... மந்திரிமா
ருயர்கர்மஞ்செய்திட்டபின் ... ... னல்ல
திருமுடியுனக்குச்சூட்டிய-தால்நீசர்ப்ப ... யாகஞ்
செய்துன்தந்தைபழியைத்-தீர்ப்பதுவே ... விவேகம்
(ஜனமே-ந.)

---

## சர்ப்பயாகம் அஸ்திகன்சொல்லால் நிறுத்தப்பட்டது.

விருத்தம்-௪.

இதையறிந்தமன்னவன்செய்சர்ப்பயாகத் ... ... *
தினில்நாகமெட்டொழியமற்றயாவும் ... ... *
பதைபதைத்துக்குலத்துடனேமாய்ந்ததாலே ... *
பயம்பிடித்துத்தேவேந்திரானாசனத்தை ... ... *
மதிகலங்கித்தெட்சகன்போய்ச்சுற்றிக்கொண்டு ... *
மந்திரத்தால்வந்தஅன்னோர்கிலிபோய்வாழ ... *
அதிநயஅஸ்திகன்சொல்லால்மகிபன்கோப ... ... *
மாறினான்மகம்புரிதல்மாறினானே. ... ... (௪)

---

## அஸ்திகன்வேந்தனைவாழ்த்திப்போனபின் ஜனமேஜயன் வியாசரை நிர்பாரதயுத்தத்தை விலக்கலாகாதாவெனல்.

விருத்தம்-௫.

அஸ்திகனிம்மகம்நிறுத்தம்வேந்தனைப்பார்த் ... *
தர்னுன்னுல்முப்புரிநூல்பெற்றான்மாயன் ... *

நித்திரைகொள்பாயல்பெற்றானிந்திரனுவி ... ... *
நிலைத்திடப்பெற்றனமுதங்கடையவானோர் ... *
சித்திரமணித்தாம்புபெற்றுசென்னவாழத்திச் ... *
சென்றபின்புஅங்குவந்தவியாசனோடு ... ... *
வெற்றிகொள்மாமுடிவேந்தன்மிகவும்அன்பில் ... ... *
வீறுவான்இந்தவண்ணங்கூறுவானே. ... ... (௫)

ச. தரு-இராகம்-அசாவேரி-சாப்புதாளம்.

[பல்லவி.]

தேவர்வேணுமென்றால்-முன்சண்டைநடக்குமா
திருக்கூத்துபார்த்துநின்றீர்.

[அநுபல்லவி.]

ஜீவகாருண்ணியகுண-வானேயென்குலக் ... கோனே
தெருள்சேர்தவமிகுந்து—வருவியாசபக ... ... வானே
(தேவர்வேணு.)

[சரணங்கள்.]

க. பூணிப்பொறுத்துப்புத்தி ... சொல்லியிருப்பீரானால்
போரேதுமண்ணேது ... ... ... கைவிடுத்தீர்—மேலும்
கோணிகொண்டதெருது ... சுமந்ததுமாளண்ணிக்
கொண்டென்பாட்டமா ... ருயர்ந்தவாழ்வைக்கெடுத்தீர்
(தேவர்வேணு.)

உ. அவதரித்தபோ ... ... மார்க்குப்போமார்க
ளவர்மக்களோடு ... ... ... பெருந்தண்டு-திகழ்
நவமுடிவேந்தர்கள் ... ... முதலானோரைக்கொன்று
நாசப்படுத்தக்கொண்ட ... மோசநினைப்பைவிண்டு
(தேவர்வேணு.)

ந. நரைத்தகிழவன்குடிக் ... கொருத்தன்வேணுமென்று
நவிலுமேகட்டுரை ... ... ... யிக்காலம்-நீ
ரொருத்தரவ்வாறுபெருந் ... தலையாயிருந்துமுன்னம்
ஊன்தின்னும்படிசெய்தீர் ... பூனைபோல்நிர்மூலம்
(தேவர்வேணு-ச.)



## வைசம்பாயனர் சந்திரவம்சமுரைத்தலும், சந்தனுமச்சகந்தியின்மேல்மோகங்கொள்ளலும்.

விருத்தம்—௬.

இப்படியாசன்புகன்றனன்வியாசனிதுவிதிப்படிமுடிந்திட்ட ... [னிவ்
தென்னவவ்விறைவனவர்கதைகேட்க விறைஞ்சினான்முனியையன்னோ
வினையிலாவைசம்பாயனருரைப்பாரெனச்சொலிப்போனபின்பவனல் *
மெலுழில்புறுசந்திரகுலத்தினிற்சந்திரனின்றிடுபுதனருங்கலதயு ... *

மொப்பறுமவன்புத்திரன்புரூரவன்றனுயர்கதையும்மவன்மைந்த ... *
னுரிமைசேராயுகதையுமவ்வேந்தனுதவியநகுஷனற்கதையு ... *
முவமையில்யயாதிதுஷ்டியந்தன்சிருற்றிடுகதையுந்துஷ்யந்த ... *
னுளமகிழ்மகனும்பரதனற்கதையுமுத்தமகுருமகாராசன் ... *
செப்பமாஅரசுசெய்திடுகதையுந்தெளிந்தநல்லத்திகன்கதையுந் ... [னன்
திறத்தொடுசொலிமுன்னெய்துசாபத்தாற் செகத்தினிற்கங்கையைவரு
சிறந்தசந்தனுவாய்ப்பிறந்தபின்சேர்ந்தசெயலையுமுரைத்தவள்பெற்ற *
திவ்வியபுத்திராம்வசுக்களெண்மர்க்குட்சிறியகாங்கேயனிப்புவியிற் *
றப்பிவாழ்ந்ததுவும்பராசரமுனியாற்றவவியாசன்றனையீன்ற ... *
சௌந்தரமச்சகந்தியென்றுரைக்குந்தையலைச்சந்தனுவேட்டை ... *
தான்வரும்போதுகளிந்தையிற்கண்டுதனுமதன்சரத்தினுன்மெலிந்து ... *
சங்கடங்கொண்டதும்புகன்றனனச்சங்கதியான்பகருவனே. ... (சா)

௫. இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

[பல்லவி.]

ஆரோயிவளாரோதெரியாதே-என்னை
யாளவந்ததனிப்பொருளோ-புவிமீதே.

[அநுபல்லவி.]

பாரோர்மகிழ்ந்திடுபைந்-தொடியோமின்னற் ... கொடியோ
பாவுமிந்திராணியோவாணியோ-பார்
வதிமார்பினிற்சாருமதாணியோ.

(ஆரோ.)

[சரணங்கள்.]

௧. அலர்ந்தசெந்தாமரை-தளநிகரிரு ... நேத்திரம்-படைத்துலகை
யசைத்திடக்கரத்தினிற்-பிடித்திருக்கிருள்சூத்திரம்
நலங்கொள்மடவார்தமி-லிவள்முதற்சற் ... பாத்திரம்-ரதியுமிந்த
நடமயிலுக்கிணையோ-வடவவளெம் ... மாத்திரம்
துலங்குமிளங்கமுத்து-துகளிலாதவெண் ... சங்கம்
ஜோதிப்பசுந்தங்க-மிவ ... ... ளங்கம்
சொக்கிமுச்சகமும்-பிரமிக்கும்பெண் ... சிங்கம்

(ஆரோ.)

௨. அமிர்தகலாமதி-யாமேமுக ... ... பிம்பம்-சுகபஞ்சாலிர
அனங்கன்முடிதனிலுந்-தனங்களேமிகு ஜம்பம்
சமையுமிளந்தொடை-பசுங்கதலியின் ... கம்பம்-இந்தச்
சௌந்தரியைமருவியணைந்தவர்க்கல்லோஇன்பம்
நிமலரத்தினவளைகள்-நெருங்கியசையச் ... செங்கை
நிறைமலர்மங்கை-தன் ... ... தங்கை
நிச்சயமெனநின்ற-வுச்சிதமிகு ... நங்கை

(ஆரோ.)

௩. நீண்டமணிப்புருவ-மந்தமதப்பையல்கை ... வில்லு-மூவர்சிந்தையும்
நெக்குவிட்டிட-உருக்குமேயவள்செஞ் சொல்லு
பூண்டிடுகொடியமூ-வாசையின்மனஞ் ... செல்லு-வதைவிடுத்து
புனிதமாதவர்கள்மீதினிலே-மதன் ... மல்லு
வேண்டியபடிசெய்வான்-சொல்வாராரிவள் தேசை
மீறுதேயாசை-இப்பிர ... ... யாசை
விடுமாஎவ்விதமா-இருக்குதோஎன் ... பூசை
(ஆரோ-டு.)

---

## காங்கேயன்தாசராஜனுடன்பேசிபீஷ்மிக்கிறது.

விருத்தம்-எ.

மோகமிகுவேந்தனந்தக்கன்னிசொல்லின் ... ... *
முறையறிந்துதாசனுடன்பேசவன்னேன் ... ... *
சாகரஞ்சூழ்புவியைப்பெண்பெறுமைந்தற்குத் ... ... *
தரவிசைந்தால்நான்மணஞ்செய்விப்பேனென்றான் ... *
சோகமுற்றேகினன்காங்கேயன்றேர்ப்பாகன் ... ... *
சொலக்கேட்டங்கணுகிநின்றன்மகளேயெந்தாய் ... *
பாகின்மொழியாள்பெறுமக்கட்கேயிந்தப் ... ... *
பாரென்பான்என்னிலையைத்தேரென்பானே. ... ... (எ)

௬. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

[பல்லவி.]

நயமாகப்பேசினானே-சந்திரகுலத்தை-நாட்டுங்காங்கேயன்றானே

[அநுபல்லவி.]

அயனேடுமூவருமன்-பாற்றும்பொய்சொல்லா ... தீரன்
அக்கிரகண்ணியசிங்கந்-தனைப்போலுமிகு ... வீரன்
(நயமாகப்.)

[சரணங்கள்.]

௧. தலைமையாகியவேத ... ... சாஸ்திரக்கருத்திற்சென்று
சத்தியமேநற்கவச ... ... மாகத்தரித்துநின்று
உலகையாளுமென்றந்தைக் ... குன்மகள்தனையின்று
ஓதுங்கல்யாணஞ்செய்து ... நீதாவேணுமென்று
(நயமாகப்.)

௨. அவளெந்தாயவள்மக்க ... ... ளேசிங்காதனமேறி
அரசாளச்செய்வேனீதி ... யனுவும்பிசகேன்மாறி
எவளவும்நீசந்தேக ... ... மெண்ணுமலுளந்தேறி
என்னிஷ்டப்படிசெய்யென் ... றேவுபசாரங்கூறி
(நயமாகப்.)

௬. எனக்குப்பாட்டனியே ... இன்புற்றேனுனைக்கண்டு
இதுவுமல்லாமலிந்த ... உலகாளும்பட்டம்விண்டு
மனக்களிப்புறநிற்பேன் ... மைந்தர்பிறக்கப்பெண்டு
வாய்த்திடமதியேனென் ... றுடனேபிஷ்மித்துக்கொண்டு
(நயமாகப்.சு.)

---

## பீஷ்மர்தந்தைக்குமணம்புரிவித்தலும், விசித்திரவீரிய னுக்குமுடிசூட்டலும், மச்சகந்திதன்மக்கட்குக்கருப்பதா னஞ்செய்ய வியாசரைவேண்டல்.

விருத்தம்-அ.

இவ்விதமாக்காங்கேயனங்குரைத்தவ்வேந்திழைதன்னைத்தன்றந்தைக் ... *
கெழில்மணம்புரிவித்தவள்வயிற்றுதித்தோரிருவரில் முன்னவனிறக்கச்
செவ்வியவிசித்திரவீரியன்றனக்கேதிகழ்முடிசூட்டிநற்காசிச் ... *
செம்மல்தன்புத்திரிமார்களைவலுவிற்றேரினிற்கொணர்ந்தவன்றம்பிக் *
கொவ்விய இருவர்தமைமணமுடிப்பித்தொழித்திடவம்பை யென்பவளுன்
னுயிர்தனைவாங்குவேனெனச்சிகண்டியுருவமாய்ப்பிறந்தனளப்பால் *
வெவ்வியநோயால்வேந்தனுமிறந்தான்விசனமேமற்சகந்திக்கு ... *
மேலிடலாலேவியாசனைநினைத்தாள்மேவினுனிவள்புகன்றனளே ... (அ)

எ. இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

[பல்லவி.]

மகனேயென்னென்றுசொல்லிக்-கொள்ளுவேன்-என்
மனத்திற்றுயரெவ்விதந்-தள்ளு ... வேன்

[அநுபல்லவி.]

ஜெகத்தையொருகுடைக்கி ... மாளுமைந்தர் பிறந்தார்
தெய்வந்தனக்குக்கண்ணில் ... லாமலவ ரிறந்தார்
(மகனே.)

[சரணங்கள்.]

க. இடியின்மேலிடிவிழ ... என்றலையி னிற்றானே
என்னென்றயனெழுதத் ... துணிந்தானோ வறியேனே
அடிவேரேபோனகொடி ... யாகினேனு மென்றுநானே
அனலிடுமெழுகாக ... ... வாடி யுருகிறேனே
(மகனே.)

௨. கனவினிற்கண்டபொரு ... ளாச்சுதென்னெண்ணமிந்தக்
கதையையாருடனேயான் ... மொழிகுவேன்முந்தமுந்த
தினமுமினம்பிரிந்த ... ... மான்போற்கண்ணீரேசிந்த
தீவினைசெய்தபாவி ... ... யென்னைப் படிக்குவந்த
(மகனே.)

ங. இழந்தவோர்மகன்மனைவி ... யர்க்கும் புத்திருன்றாலே
யிங்குண்டாகிமுன்னோர்பேர் ... விளங்கவேணுமென்மேலே
தழைந்தவுலகத்தோர்மீ ... னடிகாணு வகைபோலே
சந்திரகுலமறைந்து ... ... போகுதே யொருக்காலே
(மகனே-எ.)

## வியாசர்மச்சகந்திக்குப்புத்திரோற்பத்திவரலாறுகூறல்.

விருத்தம்-கூ.

வருந்துமனைசொற்படிமுடிக்கவகையுட்கொண்டான்கணவனிழந் ... *
திருந்தமடவாரன்னேன்பாலிணங்கப்பலநீதியிற்றேற்றி ... ... *
மருந்தன்னவள்சொன்னாள்புணர்ந்தான்மதவேள்சுகததைமேலுமகன் ... *
விரைந்தேயன்னைசெவிப்புலத்தில்விரைப்பான்றுயரைக்கரைப்பானே.(கூ)

அ. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

[பல்லவி.]

என்வார்த்தையைக்கேள்தாயே-யிங்கேநீயே
என்வார்த்தையைக்கேள்தாயே.

[அநுபல்லவி.]

உன்றிருவருளாலே-உலகத்தினிற் ... செங்கோலே
என்றுஞ்செழிக்குமேலே-என்விசார ... மொருக்காலே
(என்வார்த்தை.)

[சரணங்கள்.]

க. மூத்தவள்தன்னைக் ... ... கண்டு-அளவில்லாத
மோகமனத்திற் ... ... கொண்டு
சேர்த்தணைத்தித ... ... முண்டு-நான்சையோகஞ்
செய்யும்வேளையில் ... ... ரண்டு
நேத்திரம்புதைத்தாள் ... கிள்ளை-நேர்ந்ததிலொரு ... சள்ளை
பேர்த்துரைப்பதோஇக் கொள்ளை-பிறக்குங்குருட்டுப் பிள்ளை
(என்வார்த்தை.)

உ. இளையாள்வெண்துகில் ... தேடி-உடுத்துமெய்போர்த்
திருந்தாள்நானுளம் ... வாடிக்
கொளும்போதுபயம் ... நாடி-மஞ்சந்தன்னிற்
குழைந்துவெறுப்பாற் ... கூடி
தளாச்சியுற்றதாலங் ... நேரஞ்-சந்ததியின்றன் ... சரீரம்
வெளுத்திருக்குமிது ... சாரம்-விட்டதுன்றன்றலைப்பாரம்
(என்வார்த்தை.)

ங. பத்துமாத்தபரஞ்சி ... போலே-யொரு
பாங்கிநல்லிள ... ... வஞ்சி

சித்தசலீலையில் ... ... மிஞ்சிக்-கெஞ்சிமிகச்
சிந்தைமகிழ்ந்ததாற் ... கொஞ்சி
புத்திரன்செனித்தே ... யோகம்-பூண்பானவன் வில்கிர் ... வாகம்
மெத்தவுங்கொண்டாடும் ... லோகம்-வீரவனுக்கோர் ..., காகம்
(என்வார்த்தை-அ.)

——(*)——

## திருதராஷ்டரனுக்குமுடிசூட்டிப் பாண்டுவுக்கிளவரசும், விதுரனுக்குமந்திரித்துவமுங்கொடுத்து, விவாகத்துக்கு யத்தனித்தல்.

விருத்தம்-௰.

சதிர்கொள்மாமுனிவனுரைப்படிபிறந்த ... ... *
தநயருக்குச்சகலவித்தையுங்கற்பித்த ... ... *
மதிகொள்விட்டுமன்முதற்பிள்ளைக்குச்செம்பொன் ... *
மகுடஞ்சூட்டிப்பாண்டுசேனைக்கெல்லாம் ... ... *
அதிபதியேயாகமந்திரிவிதுரனுக ... ... ... *
அமைத்துமுன்னோனுக்குமணஞ்செயப்பெண்வேண்டிக் ... *
ரூதிகொளுந்தூதரைவிடுத்தானவர்வந்தன்பு ... ... *
கொள்ளுவார்செய்திதனைவிள்ளுவாரே. ... ... (௰)

௬. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

[பல்லவி.]

விட்டுமராசனே கேளாய் - பகைவரை
வென்றிடும்வரைத்தோளாய்.

[அநுபல்லவி.]

நாட்டினுயர்காந்தார ... ... நாட்டரசன்றன்பெண்ணைக்
கேட்டோமிசைந்தனன் ... ... சிலர்பேசயில்லை
கிணத்திற்கல்லெறிந்தாற்போ ... விருந்தாததுதொல்லை
மாட்டின்கொம்பினிற்கட்ட ... வேண்டுவதேன்பசும்புல்லை
மனமுமக்குத்தானேவரு ... மென்றுசொன்னோமொருசொல்லை
(விட்டு)

[சரணங்கள்.]

௧. ஒன்றுமில்லாதபெண்ணுக்-கொன்பதுசடங்கேனோ
ஊர்மெச்சக்கஞ்சிதனில் ... ... வடிக்கிறீர்-குன்றி
முடைபடத்துரும்புகொண் ... ... டிடிக்கிறீர்-கொசுமூச்சி
லுலகஞ்சுழலவெண்ணம் ... ... பிடிக்கிறீர்
கன்றைவேண்டாதபசு-கறக்குமோ ... குறியீரோ
கருங்கல்லின்மேல்நெல்முளை-வீசாதென் ... றறியீரோ
வென்றொருவனிக்கதை-யெடுத்தான்றடுத்தே ..., யதை

நன்றுநன்றெனச்சிர ... ... மசைத்துடன்சிரித்தோம்
ஞாயத்தைக்காட்டிப்பல ... ... பலவிதம்விரித்தோம்
அன்றியுமுனதாண்மை ... ... யெடுத்தலங்கரித்தோம்
அடிக்குங்கையணைத்திடும் ... ... வகையுபசரித்தோம்

(வீட்டு)

உ. மேலுமிருவர்கண்ணு-டயிலுருவத்தைத்தொட
விரும்புவாருமுண்டோவென் ... ... றேசினர்-சொத்தை
விரைநட்டுப்பலனனு ... ... பவிக்க-ஆசிப்பதிங்கு
விந்தையில்விந்தையெனப் ... ... பேசினர்
ஞாலத்திற்காதில்லாத-வூசியிற் ... சறடேற
நண்டின்வளையின்மத-யானைபோய்க் ... குடிவீற
வேலைசெய்கிறீரிந்த-வேடிக்கைதனை ... யெந்தக்
காலத்தினுங்கேட்டறியோ ... மென்றூர்துடிதுடித்தோம்
காற்றுள்ளபோதேதூற்றிக் ... கொள்ளுமென்றுபடித்தோம்
பாலைக்குடிக்கக்கசந் ... ... தவர்தம்மையிடித்தோம்
பயிர்க்குவேலிபலன்வேணு ... மென்றோர்பேச்சிலடித்தோம்

(வீட்டு)

ஙு. கைநிறைந்தபொன்னிலுங்-கண்ணிறைந்தகணவன்
கன்னியர்க்கிட்டமிது ... ... ... சேதி-வைய
கந்தனிற்றெரியாத ... ... பேரில்லை-என்றுமூவர்
சற்றுக்கற்றுப்பேசினர் ... ... ... நீதி
பையநுழைந்துகொடுத்-தோங்கினேமவர் ... பெட்டிப்
பாம்பானூர்நால்வர்பேசிப்-பார்த்தடங்கினர் ... கிட்டி
ஐவரங்குரையாடி-அசந்தார்திகைத்து ... வாடி
நெய்யிற்பொரித்திடுமன்னன் ... ... சுற்றத்தாரப்போது
நேரிழையந்தகனுக்கு ... ... வாய்க்காதென்றூரீது
மெய்தருமோளங்கள் ... ... சகுனமும்வீண்போகாது
வேண்டிப்பெண்கொடுக்க ... ... வருவாரதுதப்பாது

(வீட்டு-ங.)

---

## திருதராஷ்டரன்விவாகமும், கன்னன்பிறப்பும்.

விருத்தம்-௰க.

தூதர்சொல்வீண்போமோகாந்தாரிகண்ணைச் ... ... *
சொர்னபட்டத்தால்மறைத்தவ்விழியில்லானென் ... *
கோதில்நாயகனெனக்கல்யாணஞ்செய்தார் ... ... *
குந்திபோஜன்புதல்விகுந்திமுன்றன் ... ... *
தாதைசொல்லாற்றூர்வாசனேவல்செய்தத் ... ... *
தவசிசொல்மந்திரங்களிற்பின்பொன்றைச்சொன்னாள் ... *

ஜீதிலாஅவனோரவிசேர்ந்தான்கிர்த்தி ... ... *
சிறக்கின்றான்கன்னனங்கேபிறக்கின்றனே. ... ... (௰௧)

௰. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

[பல்லவி.]

கன்னன்பிறந்தானே விதரணசம்-பன்னன்பிறந்தானே

[அநுபல்லவி.]

இன்னிலத்தினிலின்ன ... ... யிருள்தங்குமோவென்ன
சொர்னகவசந் ... ... ... துன்னச்
சோதிக்குண்டல ... ... ... மின்னக் (கன்னன்)

[சரணங்கள்.]

௧. சதகோடிமதி ... ... ... நாண முகவிலாசந்
தழைந்துபேரொளி ... ... ... தோண
மதாசனெதிர் ... ... ... ... காண மனதுமிக
வாடியெண்ணம் ... ... ... பூணக்
கதிக்குமழகுமொய்க்கக் ... ... காகினியொருமிக்கத்
துதித்துமிகமதிக்கச் ... ... சுடரோன்மெய்புளகிக்கக்
(கன்னன்)

௨. எங்குந்தன்மஞ் ... ... ... செழிக்க அதனல்மிடி
யிடியுண்டுபோய் ... ... ... ... விழிக்க
மங்களமே ... ... ... கொழிக்கத் தேசங்களின்
வளமளகையைப் ... ... ... பழிக்கப்
பொங்குநன்னெறிதங்கப் ... ... புகலும்புலவர்சங்கம்
இங்கிதபிரசங்க ... ... ... மிடுநயகுணதுங்க
(கன்னன்)

௩. வெய்யோன்றன்னருளூற ... ... ... ஜயலட்சுமி
வெற்றிப்புயத்தி ... ... ... லேறத்
துய்யபுகழேவிறப் ... ... ... பகைவர்தங்கள்
சுகமிழந்துரு ... ... ... மாற
வையகத்தினிற்கிரீட ... ... மன்னவர்புடைகூட
மெய்ம்மையைத்துணைநாட ... ... மேலவர்கொண்டாடக்
(கன்னன்-௰.)

---

குந்தி கன்னனைப்பெற்றுநதியில்விடலும், பாண்டு குந்தியையும் மத்திரையையும்மணம்புரிதலும், அமுதந்திரிஷிபாண்டுவைச்சபித்தலும், பாண்டு குந்தியைத் தருமசந்தானம்பெற நியமித்தலும்-

விருத்தம்-௰௨.

குந்தியவன்றனையொருபெட்டிக்குள்வைத்துக் ... ... *
கொண்டுநதியினில்விட்டாள்நதியிற்சென்ற ... ... *

மைந்தனைத்தேர்ப்பாகன்வளர்த்தான்வில்வித்தை ... ... *
வகையாகஅவன்பரசிராமன்றன்பாற் ... ... *
சிந்தைமகிழ்நதேயுணர்ந்தான்பாண்டுராசன் ... ... *
சிறந்திடுகுந்தியைமத்திரைதனையும்நீங்காத் ... ... *
தொந்தமொடுகல்யாணஞ்செய்தவர்க்குச் ... ... *
சொல்லுவான்றன்பின்வரச்செல்லுவானே. ... ...(௰உ)

க. திபதை-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. சீர்கொள்பொன்முடிபூண்ட பாண்டுராசனேகுண ... *
தீரன் ரண சூரன் ... ... ... *
ஏர்கொண்டபத்தினி மாருடனேயிணை ... ... *
யில்லான் கலை வல்லான் ... ... ... *

உ. மண்ணுலகோர்துதி யிமயச்சாரலைநண்ணி ... ... *
மகிழ்ந்தான் அதைப் புகழந்தான் ... ... *
வண்ணமிகுந்த அரையினிற்கச்சையை ... ... *
வரித்தான் சிலை தரித்தான் .. ... *

ங. கருமலைபோல்வரும் யானைத்திரள்களைக் ... ... *
கண்டான் உயி ருண்டான் ... ... *
பாவிவருஞ்சிங்கக் கூட்டத்தைப்பார்த்துமெய் ... ... *
பதைத்தான் மிக வதைத்தான் ... ... *

ச. காயும்புலிகளைக்கண் டார்ப்பரித்துப்பற் ... ... *
கடித்தான் கவை முடித்தான் ... ... *
வாயினிற்சோரி கக்கும்படியாளியை ... ... *
மாய்த்தான் சிரந் தேய்த்தான் ... ... *

ரு. கூடிப்புணர்கலை மானைத்தனியேகுக் ... ... *
குறித்தான் கணை தெறித்தான் ... ... *
சாடுமம்பதுபட்டுப் போகம்விட்டுக்கலை ... ... *
தாங்கி யுடல் நீங்கி ... ... ... *

சு. மறைமுனியாகி கூடணந்தனில்மன்னவன்முன் ... ... *
வந்து மனம் நொந்து ... ... ... *
நிறையன்பினுலனை வோரைக்கொல்லமனு ... ... *
நீதி முறை யோதி ... ... ... *

எ. இந்நிலந்தனையாளும் புண்யவானீயோவென் ... ... *
றேசிப் பின்னும் பேசி ... ... ... *
மன்னுமுன்தேவிய ரொடுநீயுன்முக ... ... *
மலர்ந்து நெஞ்சங் கலந்து ... ... *

அ. எனைப்போற்போகித் திடும்போதிலிறப்பாய்நீ ... *
யிது பிசகாது ... ... ... *
முனிவினுற்சாபங் கொடுத்தேனென்றுமுனி ... *
மொழிந்தான் உயிரொழிந்தான் ... ... *

கூ. அவனிறந்திடக்கண்ட பெண்மான்தீயினில்மாண்ட ... *
தறிந்து தனு செறிந்து ... ... ... *
தவமுறமனைவியரோடுவடதிசை ... ... *
சார்ந்தான் நெறி சேர்ந்தான் ... ... *

ய. கர்மத்தீயினையவித் தோமத்தீவளர்க்கவுட் ... ... *
களித்தான் விழி துளித்தான் ... ... *
பூமகளுறையுஞ் சதானந்தருருக்குப் ... ... *
போனான் உற வானான் ... ... *

யக. மைந்தனில்லான்மோட்சங் காணானென்றங்குள்ளோர் ... *
மதித்தார் முறை விதித்தார் ... ... *
வெந்தழலிற்புழு வாகிக்குரிசில்மெய் ... ... *
வேர்த்துத் துயர் போர்த்து ... ... *

யஉ. மெல்லிடையாள்குந்தி தேவிக்கிவ்வார்த்தையை ... *
விரித்து உப சரித்துச் ... ... *
செல்வமேமைந்தனைப் பெற்றென்கவலையைத் ... *
தீர்ப்பாய் முகம் பார்ப்பாய் ... ... *

யரு. துடியிடையேயென்றான் புலிபசித்தாற்புல்லைத் ... *
தொடுமோ இடர் படுமோ ... ... *
விடலையேபுத்திரனுக் காகவொருவனை ... ... *
மேவி வசை தாவி ... ... *

யச. வாழ்பவருண்டோவென் றாள்கன்மிடபாதன் ... *
மனையாள் ரதி யனையாள் ... ... *
ஏழ்புவிதொழும்வதிஷ் டர்க்கின்பந்தன்னையே ... *
ஈந்தாள் சுதன் வாய்ந்தாள் ... ... *

யரு. மந்திரமென்னஎன் செய்திடீயறியாத ... ... *
வாழ்வோ இது தாழ்வோ ... ... *
சந்தேகமேதிதற் குச்சாத்திரங்களைத் ... ... *
தானே மொழி வேனே ... ... *

யசா. தான்சாகப்பாம்பின்வா யினிற்கையிடுவதார் ... ... *
சாற்று என்ன கூத்து ... ... *
யான்சொன்னபடிகேளா லஸ்யமமுதவிஷ ... ... *
மென்றான் நெறி நின்றான் ... ... (யக)

## தருமனுற்பவம்.

விருத்தம்-௰௩.

இறையவன்றன்வார்த்தைதமறுத்திடமாட்டாம ... ... *
லேந்திழைதூர்வாசர்சொன்னவுபதேசத்தை ... *
நெறியுடையபாண்டுமகிழ்ந்திடவுரைத்து ... ... *
நெஞ்சிலன்புகொண்டோர்மந்திரத்தைச்சொன்னாள் ... *
பறிகொடுத்தபொருளகப்பட்டாற்போலுள்ளம் ... ... *
பரிந்தியமன்வந்திவளைச்சேர்ந்தானப்போ ... ... *
தெறிகடலினின்னமுதமெனயாவர்க்கு ... ... *
மினிக்கின்றான்தருமனங்கேஜனிக்கின்றானே. ... (௰௩)

௰௧. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

[பல்லவி.]

ராஜராஜமகராஜன் சுகுணதன்மராஜன்—பிறந்தானே

[அநுபல்லவி.]

மாசிலாதபாண்டு மகராஜன் ... ... துயர்நீங்க
மதிகுலஞ்செழித்தோங்கக் கதிர்கொள்பொன் ... முடிதாங்க
(ராஜராஜ)

[சரணங்கள்.]

௧. சுந்தரமேவிய-வதனமும் வதனத்திற்
றுலங்குஞ்செந்திருவுறை ... ... கோலமும்
கந்தம்வீறுங்கமலவிழிகளும் விழிகளிற்
கருணைகுதிகொண்டிடு ... ... சீலமும்
சிந்தையையுருக்குஞ்செவ்வாயும் வாய்மொழியினிற்
றிசையுளோர்வழிபடு ... ... காலமும்
மந்தரகிரிபோற்றோளுந் தோளில்வீரலட்சுமி
மருவியிருக்குமனு ... ... கூலமும்
சந்ததம்நினைப்போர்நெஞ் சந்தனிற்றேன்துளிக்கத்
தனிவில்மதனுமழ கினைக்கண்டிடைந்தொளிக்க
இந்திராதருந்தலை மறைந்தங்கேதத்தளிக்க
இருகையோயாமலள்ளிப் பொருளளித்துக்களிக்க
(ராஜராஜ)

௨. ரதகஜதுரகபதாதி-யணியணியா
ரஞ்சிதமொடுபுடை ... ... சூழவே
அதிபுஜபலசௌ-ரியமுளஅரசர்க
ளனைவரும்மடிமிசை ... ... வீழவே
பொதுமடவாரும்வரு-மாடவர்மீதிலன்பு
பொருந்தியொருமனதாய் ... ... வாழவே
முதியநிலமடந்தை பொறுமையதனையெண்ணி
முற்றும்யோசனைதன்னி ... ... லாழவே

சதியில்மாதமும்மாரி விதிபுரளாமற்பெய்யச்
சத்தியசம்பன்னனென்றே உத்தமர்துதிசெய்யச்
சதிசெய்யொன்னலர்காற்றிற் பதர்போற்பறந்துநையுந்
தன்னுயிர்போலென்னாளு மன்னுயிர்களும்உய்ய
(ராஜராஜ)

கூ. நல்லசர்ப்பமுமுற-வாடநாடும்புருஷ
ரத்தினமென்றுகற்றோர் ... ... தேறவே
வல்லமுனிவர்சர்க்கரைப் பந்தலிற்றேன்மாரி
வருஷித்தாற்போல்மங்களங் ... ... கூறவே
கல்லுங்தேங்காயுஞ்சந்தித்-திடுபொழுதுக்குள்வாத்தியங்
களிதேசைவானோர்செவிக் ... ... கேறவே
நெல்லுக்கிறைக்கும்நீரற்-புல்லுஞ்செழிப்பதொத்து
நீள்செல்வம்யாவர்கட்கும் ... ... விறவே
அல்லலொருவருக்கு மில்லாமலேவிடுக்க
அந்தணர்வழுவாமல் மந்திரவேள்விதொடுக்கத்
தொல்லைமனுவிக்கியானஞ் சொல்லும்நெறியடுக்கத்
துரும்புமதிர்ந்திடாமற் றிருந்துமடியெடுக்க
(ராஜராஜ-ம்க.)

---

## சுயோதனனுற்பவம்.

விருத்தம்-ம்ச.

தருமனுதித்ததுதாளாமற்காந்தாரி ... ... *
தன்வயிறுதனிலிடித்துக்கொள்ளக்கர்ப்பங் ... ... *
குருதியாயிடவதனைவியாசர்நூறு ... ... *
கூறுறக்கடங்களிற்சேர்த்தொன்றுமீதி ... ... *
யருமைகண்டிங்கிதுபெண்ணுமெல்லாம்ரூப ... ... *
மாமளவுங்காத்திடெனக்கூறிச்சென்றார் ... ... *
கருணையுடனவள்காக்கக்கவிகைநாளுங் ... ... *
கவிக்கின்றான்சுயோதனனுற்பவிக்கின்றானே. ... (ம்ச)

ம்உ. தரு-இராகப்-சுருட்டி-ஆதிதாளம்.

[பல்லவி.]

ராஜகெம்பீரன் துரியோதனமகராஜேஸ்வரன்பிறந்தான்

[அநுபல்லவி.]

மாசில்காந்தாரியனு-தினமுமுளம் ... ... பரிய
வந்தடுப்போர்துயர-மோர்கணத்திற் ... பிரியத்
தேசுறுதிரிபுவன-மும்புகழே ... ... விரிய
ஜெகத்தையொருகுடைக்கீ-ழமைத்தரசு ... புரிய
(ராஜகெம்)

[சரணங்கள்.]

க. சித்திரமிகுந்திடு கமலமலரைநிகர்
திருமுகந்தன்னிலொளி ... ... வீச
அத்தன்முன்வளைத்திடு மேருமலையதனை
யழகியதிண்புயங்க ... ... ளேசத்
தித்திக்குதெனச்சொல்லி மாதர்பருகுந்துய்ய
செவ்விதழ்க்குப்பவளங் ... ... கூசக்
கைத்தலங்கட்குச்சரி சொல்லவொருபொருளுங்
காணுமென்றுபாவலர் ... ... பேச
நித்தம்வீதிமகரதோரணத்தெழில்கூட
நெடுமிரதங்கள்கடும்பரிகள்கரிகளோட
முத்துப்பந்தல்நிலவின்வெள்ளம்வல்லிருள்சாட
முழுதுந்தந்திரயுத்திகளையேமிகக்கொண்டாட
(ராஜகெம்)

உ. அஷ்டலட்சுமிகளோ ரட்டியில்லாமனுய
ராமனையினிற்குடி ... ... சேர
மட்டில்லாதமறு தேசத்துமன்னர்கடை
வாசலில்வந்துநின்று ... ... சோர
இஷ்டமேவுமாணிக்க மாலைகள்வகைவகை
இறைவர்கள்மிகவலங் ... ... காரத்
தட்டினிற்கொடுவந்து தாள்மிசைவைத்துமுடி
தாழ்ந்தவர்கள்கண்களி ... ... கூர
வட்டமுலைமடவார் நடித்தன்னம்போலுலாவ
வானரம்பையரிவர் நடைகற்கஇச்சைமேவக்
கட்டியக்காரர் பட்டையங்களுடனேதாவக்
கல்லுமுருகப் பாடுவோராருகிற்குலாவ
(ராஜகெம்)

ங. மின்னல்திரண்டுதிரண் டுருக்கொண்டுருவிந்திடு
விதமெனவே ... ... ... யநேகப்
பொன்னின்குவைகளெங்கும் விளங்கக்குபேரன்கண்டு
பொறுக்காமலவன்மனம் ... ... வேகப்
பன்னுமாடக்கொடியா லடியுண்டுகருமுகில்
பயந்தேமெலிந்தொதுங்கி ... ... யேக
மன்னுசுடலொலியும் இடியினொலியும்நாண
வாத்தியவொலியின்மய ... ... மாக
வன்சமர்செய்பகைவர் தலைமண்டைகள்கிழிய
வருமித்திரர்மேலன்பு கரைபுரண்டுவழிய
இன்பமறையோர்ந்து பூசுரர்க்குநன்னாள்கழிய
இவனேபாக்கியவானென் றெடுத்துப்பலர்மொழிய
(ராஜகெம்-மஉ.)

## குருகுலபுத்திரருற்பவமும், பாண்டுமரணமும் பாண்டவர் திருதராஷ்டிரனையடைதலும், சுயோதனன் முதலிய துஷ்டசதுர்த்தர் பீமனைக்கட்டி நதியிற்றள்ளலும், சர்ப்பங்களால் கடிப்பித்தலும்.

விருத்தம் ௫௫.

மைந்தர்கள்தொண்ணூற்றென்பதுபேரை
மற்றுமோர்பெண்ணையும்பின்பு
வனிதைகாந்தாரிபெற்றனள்குந்தி
வாயுவிந்திரனிவரருளாற்
சந்திரபிம்பம்போலவீமனையுந்
தனஞ்சயன்றன்னையும்பெற்றாள்
தங்கைமத்திரையும்அஸ்வனிதேவர்
தங்களால்நகுலனேனானச்
சிந்தையின்சாதேவனையுமேபெற்றாள்
தேவியைமானுருவாக்கிச்
சேர்ந்திடுமுனியால்பாண்டிறந்தான்மத்
திரையனலிடைவிழுந்திறந்தாள்
பந்தமுற்றிடுகுந்தியினுடனைந்து
பாலரைஅஸ்தனுபுரியிற்
படர்சடைச்சரதசிங்கனேகொடுபோய்ப்
பார்த்திபன்முனம்விடுத்தனனே.

௫௬. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

அங்கேநடந்ததைக்கேளும் - ஜனமேஜயா
அங்கேநடந்ததைக்கேளும்.

அநுபல்லவி.

அங்கேபாண்டுபுத்திரர் யாவர்தமக்குமித்திரர்
சிங்காசனபதியாந் திருதராட்டிரன்
திருவடி வணங்கினார்
பரிவுட னிணங்கினார்
அங்கே

சரணங்கள்

௧. மன்னன்மைந்தர்களேச்சீ ராட்டினான்-வீட்டு
மனுங்கண்டுமகிழ்ச்சிபா ராட்டினான்
பின்னுங்காந்தாரிபாலர் நூறுபேருடனைந்து
பேருந்தண்ணீரொடுதெண் ணீர்சேர்ந்ததாவுவந்து

உந்ததமாவளரும்நாளினிற் கிருப
ருறுகல்விக ளுரைத்தார்
நெறியில்நிற்கக் களைத்தார்
அங்கே

உ. வீமன்புஜபலத்தைக் கண்டு-எமன்
விலங்குவானெனத்திடங் கொண்டு
கோமகன்றனைப்படுபாவி-சகுனி தட்டிக்
கொடுத்திவனைக்கொடியா-லசையவொட்டாமற் கட்டிச்
சூமாத்திரிதனிலோர்பெருநதி யினிற்
றள்ளிவிட் டகஞ்சேர்ந்தார்
உள்ளத்திற் சுளிகூர்ந்தார்
அங்கே

௩. நதியினில்வீமன்விளை யாடினன் - துஷ்டர்
நடுங்கப்புலிபோல்வந்து கூடினன்
பதிதர்மேலும்விடுத்த-பாம்புகளெல்லாந் துள்ளிப்
பதைக்கவெற்றிலைக்காம்பு-போல்நகத்தினுற்கிள்ளி
உதிருமாவதுபிசைந்-திடுவதுபோற் பிசைந்
தூதிமுக மலர்ந்தான்
சோதரர் பாற்கலந்தான்
அங்கே

---

## வீமனுக்கு நஞ்சிடல்.

விருத்தம் ௰௫.

உலகோர்கள்மகிழ்பாலும்நீரும்போலே
உறவாடிக்கலந்தோரைப்பின்னும்வஞ்சக்
கலைதேருஞ்சகுனிமதியினையிழந்த
கன்னன்காதகத்துர்ச்சாதனன்பாவத்தை
விலையீந்துகொளுந்துரியோதனனிந்நால்வர்
வீமனுழிந்தாலவன்றன்றுணைவர்தோளின்
வலியோடுந்தங்கள்மனக்கிலிபோமென்று
மதித்திட்டார்விஷத்தைவைக்கக்குதித்திட்டாரே.

௰௪. தரு-இராகம்-அசாவேரி-சாப்புதாளம்.

பல்லவி.

சோற்றில்விஷம் வைத்தாரே-வீமனைக்கொல்லத்
துரோகம்நெஞ்சினிலுற்றுரே.

அநுபல்லவி.

தூற்றும்பழிக்குட்பட்டுத் துர்புத்தியேமேலிட்டு
சோற்றில்.

சரணங்கள்.

க. மதப்பட்டாலுடன் கேடு
வருமென்றெண்ணும லாடு
எதிர்போய்ப்புலியைத் தட்டி
யெழுப்புவதுபோற் கிட்டி
சோற்றில்

உ. தெள்ளித்தெளிந் திடாமல்
தெய்வத்துக்கும் அஞ்சாமல்
உள்ளேபகையை நாட்டி
உதட்டிலுறவைக் காட்டி
சோற்றில்

௩. முற்பகையால் பிற்பகை
மூளுமென் றிடும்வகை
சொர்ப்பனமெனத் துள்ளித்
துணிந்துகையினு லள்ளிச்
சோற்றில்

---

## துஷ்டசதுர்த்தர் நஞ்சிட்டுப்பீமனையாற்றிலிட அவன் பாதாளத்தில் எட்டுநாள் நாகர்களால் போஷிக்கப்பட்டு மீட்டுந் துணைவரொடு கூடல்.

விருத்தம் ௰எ.

மேலுமத்தீயோர்கொடுவிஷந்தன்னை-வீமனுக்கருத்தியோர்நதியில்
விடுத்தனரவனைப்பாம்புகள்கடித்து-மெலிந்திவன்யாவனேவென்று
கோலவாசுகியோடுரைத்திடவாயு-குமாரனென்றவன்மிகத்தெரிந்து
கொண்டுபாதலத்திலெட்டுநாளமுத-குணத்தினன்றனக்கமுதளித்துச்
சிலனைக்கொணர்ந்தந்நதிக்கரைசேர்க்கச்-சிற்றரவங்களுக்குவந்து
செப்பினனரவின்றிரள்நதிக்கரையிற்-க்ஷேமமாவிடுத்தது திகைத்துச்
சாலவெங்கெங்குந்தேடியேக்கங்கொள்-தாயொடுதுணைவருங்களிக்கத்
தரியலர்நடுங்காஜசிங்கம்போற்-க்ஷணத்தினில்வீமன்வந்தனனே.

---

## துரோணர் பீஷ்மரிடத்துக்குவந்து தான்பாஞ்சாலனு லடைந்த அவமானத்தைச் சொல்லுதல்.

விருத்தம் ௰அ.

வருமதவீமன்முதலோர்திரிதராட்டிரன்
மைந்தர்களுஞ்சரத்துவந்தர்மகிழ்ந்துபெற்ற
கிருபரிடத்தினிற்படிக்கும்போதுதுரோணர்
கிட்டினர்பீஷ்மருகினிலமைத்தே

அரவுபிடித்திடுஞ்சந்திரன்போலேயுன்ற
னருள்முகத்தின்களைமழுங்கிமனம்வேருகி
யொருவிதமாயிருப்பதுநீர்சொல்வீரென்ன
வுரைத்திட்டார்பீஷ்மர்நெஞ்சைக்கரைத்திட்டாரே.

ருடு. தரு-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

கேளுமையாவீட்டுமராஜனே-நல்ல
கீர்த்திதனிலதி-பிரகாசனே.

அநுபல்லவி.

நீளுமென்சரித்திரத்தை நிசமாகச்சொல்கிறேன்
கேளுமையா

சரணங்கள்.

க. பரசிராமரிடத்தில் வில்வித்தைகளைக்கற்றேன்
பாஞ்சாலன்சிநேகத்தைப் பாங்குடனேயுற்றேன்
அரிவனத்தில்வானப் பிரஸ்தனுய்ச்சஞ்சரித்தேன்
அரனருளாலேயங்கே யஸ்வத்தாமனைப்பெற்றேன்
கேளுமையா

உ. இச்சையுறப்பிறந்த பிள்ளைதனக்கமுதம்
இல்லாதாற்பாஞ்சாலன்பா லேகியுரைத்தேஇதம்
பிச்சைதாவோர்பசுவென் றேன்கொண்டுசென்னதம்
பேய்போற்கூத்தாடிமிகப் பேசினுன்வாய்மதம்
கேளுமையா

ங. என்னடாபாஞ்சாலா நல்லதென்றுநொந்தேன்
என்சிஷனுலுனையி டழிப்பேனென்றுபகர்ந்தேன்
அன்னகாரியத்தை முடிக்கஇங்குவந்தேன்
ஐயாஉன்னைக்கண்டு மெய்யாமனதுவந்தேன்
கேளுமையா

---

## குருகுலப்புதல்வர் தனுர்வித்தை யரங்கேற்றல்.

விருத்தம் ருகூ.

இந்தவகைதுரோணர்சொலக்கேட்டபீஷ்ம
ரிறையவன்பாலகர்நூறுபேர்க்கும்பாண்டு
மைந்தருக்குந்தனுசாஸ்திரங்கற்பித்தேயும்
மனப்பகையைத்தீருமென்றுரிவர்கற்பித்தார்
சிந்தைமகிழ்ந்தேபீஷ்மராஜனெட்டுத்
திசைராஜர்களையும்வருவித்தாரங்கே
வந்தமன்னர்மிகமதிக்கராஜபுத்திரர்
வருகின்ருர்பரிட்சையினைத்தருகின்ருரே.

௰௯. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

பரிட்சைவெகுநேத்தியாகக் கொடுத்தாரே-வந்து
பார்த்தோர்நெஞ்சினிற்பிரமையடுத்தாரே.

அநுபல்லவி.

திருதாட்டிராமகாராஜன் மகிழ்ந்துபெற்ற
செல்வமைந்தர்கள்நூறு பேருடனேவர்கற்ற
சீரியராங்கிருபர்-துரோண ரிவரிருவர்
திருவடிகளையதி-விரைவொடு மனதிடைச்
சிந்தித்துவெஞ்சிலைகளை வளைத்துநாணியைச்சேர்த்துத்
திவ்வியாஸ்திரங்களை வகைவகையாக்கோத்துப்

பரிட்சை

சரணங்கள்.

௧. சிங்கங்களென்னச்சிலை வீரத்தைநிலைநாட்டிச்
சிறந்தஆயுதங்களின் வரிசைவிக்கிரமங்காட்டித்
துங்கமனோவேகமும் வாயுவேகமுஞ்சரி
சொல்லவொண்ணாதபடி திரள்பரிமதகரி
துடித்தொருக்காலே குயவன்சக்கரம்போலே
சுழலமுடுகும்விசை யதனிலிரதமொடு
சூரியனுங்கலங்கி மேற்கடலிலொளிக்கத்
துதிக்குங்கஜங்களெட்டும் நடுங்கியுடல்நெளிக்கப்

பரிட்சை

௨. மதயானைகள்நெடிய இருப்புலக்கையைமேவி
வந்ததெனவீமனுந் துரியோதனனுந்தாவிக்
கதையொடுகதைதாக்க நெருங்கியவர்கள்திறங்
காட்டும்விதங்களிலே இருதயத்தில்வயிரம்
முதிரப்பிள்ளையார்குட்டிக் கொண்டுமிகவுங்கிட்டி
முனிவுடனமர்செய்ய நினைவுகொள்வதுதனை
முழுதும்யாவர்க்குந்தனு சாஸ்திரங்களையுரைக்கும்
மூதறிவோன்மைந்தனஸ்வத் தாமன்விலக்கும்வரைக்கும்

பரிட்சை

௩. வருணாஸ்திரம்வாயு வாஸ்திரங்கருடாஸ்திரம்
வன்னியாஸ்திரமிரு ளாஸ்திரஞ்சூரியாஸ்திரம்
ஒருநொடியில்விஜய னெய்தானிதனைநெஞ்சி
லுவந்துமேலோர்கள்கொண் டாடும்போததிலுமிஞ்சிச்
சரமாரிக்கன்னன்போக்கித் தநஞ்சயன்றனைநோக்கி
சதிர்கொள்மகுடமுடி யரசர்சபையதனில்
தனுயுத்தஞ்செய்யவழைத் தான்கிரீடியப்போதிடி
தானிடித்தாற்போல்நீயின னென்றுரைத்தானிந்தப்படி

பரிட்சை

அரசர்மக்களை இழிகுலத்தோர் போர்க்கழைத்தல்தகாதென்ற கிருபரைத் துரியோதனன் கண்டித்தலும், வீரர்முதலியோருக்கும் ஜாதியுயர்வு தாழ்வில்லையெனலும்.

விருத்தம் ௨௰.

தநஞ்சயன்கன்னனைப்பார்த்துச்சிரித்துராஜ
சபைதனிலேயென்றனொடுவிற்போர்செய்யச்
சினந்தழைத்தாயுன்தரமுன்தனக்குச்சற்றுந்
தெரியாதோவென்னவுனைக்கொல்வேனென்று
னினந்தெரிந்தகிருபர்மன்னர்புத்திரர்தம்மை
யிழிகுலத்தோர்சமர்க்கழைப்பதேற்காதென்றுன்
மனங்கொதித்துச்சுயோதனனங்கதற்குநியாயம்
வளர்த்துவான்குலமுறைகள்கிளர்த்துவானே.

௰எ. தரு-இராகம்-தன்னியாசி-சாப்புதாளம்.

பல்லவி.

யோசித்துப்பார்த்திடில்-யார்தானல்லகுலம்-ஒருவரில்லை-ஐயனே

அநுபல்லவி.

நேசித்துவணங்குவோர்க் - கருள்சுரக்குந்திண்ணியனே
நெறிகொள்சாஸ்திரமுணர்-கிருபனெனும் புண்ணியனே
யோசித்துப்

சரணங்கள்.

க. அரிபிறந்ததெங்கே அரன்பிறந்ததெங்கே
தாமார்பிரம்மா பிறந்தஸ்தானமெங்கே
விரியுமொளிகொள்கதிர் வேலன்பிறந்ததெங்கே
வீசுபுகழவ்வேத வியாசர்பிறந்ததெங்கே
யோசித்துப்

௨. அறியாதுபோற்பேசும் அடிகள்பிறந்ததெங்கே
பிறழாக்கும்ப முனிபிறப்பெங்கே
முறைசேரிந்தக்குரு மூர்த்திபிறந்ததெங்கே
மோனமுனிநற்சுகர் பிறந்திடுமிடமெங்கே
யோசித்துப்

௩. கற்றவர்க்குந்திகழ் கன்னியர்க்குநல்ல
கொற்றவர்கள் தமக்குங்குறையாத
சுத்தவீரர்தமக்குந் தூயமாதவருக்கும்
நற்குலமேதுநன்று இப்போதெண்ணிப்பாரும்
யோசித்துப்

## கன்னனுக்கு அங்கதேசாதிபத்தியங் கொடுத்தலும், அர்ச்சுனன் துருபதனை ஆசாரியபாதகாணிக்கையாகக்கட்டி வந்து துரோணரிடமொப்பித்தலும், துரோணர் பாஞ்சாலனை யேசுதலும்.

விருத்தம் உக.

அரவகேதனனிவ்வாறுரைத்துக்கன்ன
னங்கனுடாளமுடிசூட்டிவிட்டான்
துருபதனைக்கட்டிவாநூற்றைவர்க்குந்
துரோணர்சொன்னர்சுயோதனனாதியர்போய்த்தோற்றார்
தாவிஜயன்சரத்தாலேதுளைத்தன்னோனைத்
தன்றேரிற்றிருடனைப்போற்கட்டிவந்து
குருவினிடம்விடுக்கப்பாஞ்சாலன்கண்டு
கூசுவான்துரோணன்மிகவுசுவானே.

௰அ. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

முட்டிப்பார்ப்பான்செய்த - காரியத்தைப்பார்த்தையா
மூடா பாஞ்சாலா

அநுபல்லவி.

வட்டியுமுதலுமா வருவித்துக்கொள்வானென்ற
வகையறியாமல் வைதாயே
பகைமிகவுறவே செய்தாயே
முட்டிப்

சரணங்கள்.

க. பாதிநாடுனக்குத்-தருவேனென்றுநீசொன்ன
படிக்கேநான்வந்துகேட்டே னேசினாய்-அடா
பார்ப்பாரப்பையலேநீ-போடாவென்றுமுன்பின்
பாராமற்கண்டபடி பேசினாய்-உன்றன்
சேதியறிந்துகொண்டோர் பசுகேட்டேனலங்கோலஞ்
செய்தனுப்பினாய் செட்டியாருக்குமொருகாலஞ்
சேவகனுக்கு மோர்காலமென்று
செப்புவார்களே யதைப்போலின்று
முட்டிப்

உ. பரமசண்டாளலோபர்-தமக்குமுச்செலவென்று
பகருவாரே யதுபோலே-நீயும்
பதிதன்கையாலுன்ற-னுடுநகரும்போயிப்
பாடுநேர்ந்தது புவிமேலே-என்றுந்

திறமனோதத்தம் வாக்குதத்தந்தாரார்தத்தஞ்
செய்துவிட்டிலையென்று செப்புவாரோவபத்தம்
தீயாஅதுவி ணுமாபுவிமிசை
பேயாகட்டுண்டு கொண்டாயேவசை
முட்டிப்

௩. எட்டினுற்குடிமியு-மெட்டாவிட்டாற்காலையு
மிறங்கிப்பிடித்துக்கொள்வ தாரு-மகா
ஈனர்க்குமீனனு-மீனன்செய்வானல்லாமல்
எவர்கள்செய்வாரோசித்துப் பாரு-செட்ட
பட்டிமாடேயின்றுநா னுனக்குநாடுங்கொடுத்தேன்
பரிந்துவாழ்வுங்கொடுத்தே னுனைமன்னித்துவிடுத்தேன்
பையலேநீபட்ட பாட்டைமனதிலெண்ணு
பதிபோய்ச்சேர்ந்துமேலோ ருடன்யோசனைபண்ணு
முட்டிப்

---

## துருபதன்யாகஞ்செய்தலும், தருமனுக்கிளவரசுகொடுத்தலும், அரக்குமாளிகையயனலூட்டலும்.

விருத்தம் ௨௨.

குருபழித்திட்டமொழியவன்மனத்திற்
கொதிப்பொடுசுடச்சுடஅங்கங்
குன்றியேபதிபோய்ச்சேர்ந்தபின்குருவைக்
கொல்லவோர்பிள்ளையுங்கிரீடி
மருமகனுகப்பெண்ணுமுற்பவிக்க
மகத்துவயாகமேமுடித்தான்
மணிமுடிகவசகுண்டலம்வில்லும்
வாய்ந்திளஞ்சிங்கமொப்பாக
எரியினிற்றிஷ்டத்துய்ம்மன்முன்பிறந்தா
னிராவணன்குடிக்கெழிற்சீதை
யென்னவேதுரியோதனன்குடிவாழ
வந்திழைதிரௌபதிபிறந்தாள்
வரசுதன்தருமனிளவரசானுன்
வயிறெரிபவட்குமாலைக்கண்
மாப்பிளைவந்தாற்போற்சுயோதனன்றன்
வயிறெரிந்திதுபகருவனே.

௨. திபதை-இராகம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்

### கண்ணிகள்.

௧. துரியோதனனெஞ்சங்-குழைந்துசகுனிகன்னன்
துர்ச்சாதனனிவரைப் பார்த்துப்-பாம்பின்
றிரளைச்சேர்த்துக்கொண்டாற்போ-லவர்களைநம்முடன்
சேர்த்ததன்றியுங்கண்ணைப் பேர்த்து

௨. கொடுத்தவகைதன்மனுக்-கிளவரசென்றன்றந்தை
கொடுத்தானிதிலுமுண்டோ தீமை-காணு
இடத்திற்றேள்கொட்டிவிட்டாற்-போற்பல்லைக்கடித்துக்கொண்
டிருந்தாலதுவேதெரி யாமை

௩. என்றான்வெறுவாய்மெல்லு-கிறவனுக்கவல்கிடைத்
திட்டதுபோற்சகுனி துடித்துக்-குணக்
குன்றேமருமகனே-யுன்பிதாவேசத்துரு
கூசாமல்விளக்கினைப் பிடித்துக்

௪. கொண்டுகிணற்றில்வீழ்வா-ருண்டோகிழவனுமுன்
குடிய்டியுடன்மூழ்கிப் போச்சு-நாளும்
அண்டுமுன்கீர்த்தியும்-புஜபலமுமையோகா
டதனிற்காய்ந்தநில வாச்சு

௫. சட்டமாக்கரையான்புற்றைக்-கட்டச்சர்ப்பங்குடி
தான்போயிருந்தாற்போலுன் னுடு-நகர்
முட்டஐவர்க்குத்தாரை-வார்த்தாயின்னம்வெறுங்கை
முழம்போடுவதேன்கையி லோடு

௬. ஏந்திக்கொள்வதுநன்மை-யென்றான்துர்ச்சாதனன்
எழுந்துசகுனிதனை நோக்கி-யக்கினி
சார்ந்தாற்சருகுநீறு-காதோகொடியமந்திரத்
தாலைவருயிர்களை நீக்கிப்

௭. போடுகிறேனென்றான்-கன்னனரசர்க்கிது
புகழல்லவொருகணை யாலே-நான்
சாடுகிறேனெருப்-பிடிதலைமேல்விழுந்தால்
தப்பிப்பிழைப்பதார்மண் மேலே

௮. ராஜசிங்கமொடுங்கி-யிருந்துவிட்டால்வெள்ளாடு
நாடியதைப்போயெதிர் கண்டு-பையலே
நீசுகமாவென்று-கேளாதோ ஐவரிந்த
நெடுநிலமவர்வசங் கொண்டு

௯. ஆள்இளைக்காரங்கண்-டால்சுயோதனுவுன்னை
யடுத்துக்காத்திருப்போர்கள் காரியம்-காற்றிற்
பீளைப்பூவாகாதோ-பகைவர்கள்மீதிலன்பு
பூண்பதோராஜர்கட்கு வீரியம்.

௰. மணிமாமுடிவேந்தனே-யென்றான்கையைக்கொடுத்து
வாரியெடுத்தால்நூறு பேரை-யொரு
க்ஷணத்தில்வெட்டுவேனென்ற-பித்தன்போலேதுரியோ
தனன்பாண்டவர்களைம னாைப்

௰௧. போய்ச்சேரப்போர்செய்து-கொல்வேனெனச்சகுனி
பூராயந்தன்னாலவன் மூர்க்கம்-மாற்றி
ஏய்த்துலகாளுமைவ-ருன்னப்பனால்நாட்டைவிட்
டின்றேதொலையச்செய்தால் மார்க்கம்

௰௨. தள்ளவேண்டாமெனது-வார்த்தையையென்றான்சுயோ
தனன்றகப்பன்றனைப்போய்ப் பணிந்து-சொந்தப்
பிள்ளையிருக்கப்பகை-வர்க்கிளவரசினைப்
பெற்றோன்றாலாகுமோ துணிந்து

௰௩. யாதும்யோசித்திடாம-லென்னைப்பகைஞர்களை
யிணங்கவிடுத்தாயிது சீரோ-இங்கு
மாதருமெனைக்கண்டால்-நகையாரோசக்ரேசன்
மைந்தனென்றுமெனக்குப் பேரோ

௰௪. கண்ணிருக்கும்போதில்லாக்-காட்சியேதுக்கென்றனக்
கண்ணில்லாதான்கேட்டுளம் வெம்பி-வெந்த
புண்ணைக்கொள்ளியிற்சுட்டாற்-போலுரைத்தாயென்னையிப்
புவியாளச்செய்தனன்றன் தம்பி

௰௫. பாண்டுபுத்திரர்வேறோ-நீவேறோஎன்றானந்தப்
படுபாவிகேட்டுமுகம் வாடி-யென்றன்
ஆண்டவனேகாக்கையுங்-கோட்டானுமோரிடத்தில்
அன்புற்றிருந்திடுமோ கூடி

௰௬. சொர்ப்பனத்திலுமில்லை-என்றான்திருதராட்டிரன்
துரியோதனனெண்ணத்துக் கிசைந்து-கீர்த்தி
பெற்றபாண்டவர்களை-வருவித்தணைத்துப்பாண்டு
பெருமையைச்சொல்லிக்கண்ணைப் பிசைந்து

௰௭. எங்கும்புகழென்றம்பி-யிறந்தபின்செய்யுங்கடன்
யான்செய்ததில்லையவன் பதவி-தன்னிற்
றங்கும்படிக்குநீங்கள்-வாரணுவதஞ்சேர்ந்து
தருந்ததானதன்மங்கள் உதவி

௰௮. மேலுங்கங்கைக்கரையில்-திலதர்ப்பணாதிமுதல்
விதிபுரளாமலே புரிந்து-நீரும்
பாலும்போலேயொருவர்க்-கொருவர்நெஞ்சினிலிஷ்டம்
பதித்துவாழ்ந்திடுமென்று பரிந்து

௰௯. அனுப்பும்போதுபூசுரர்-வாழ்த்தினர்பாண்டவர்
அஸ்தினாபுரம்விட்டு நீங்கிப்-போமுன்
தனித்தனிக்கண்டோர்கள்-நொந்தார்சுயோதனன்புரோ
சனனையிருகையாலுந் தாங்கி

௨0. மந்திரியேஇவரு-மடியும்படியரக்கு
மாளிகைசெய்தவரைக் கொன்று-வந்தால்
இந்தராச்சியமுனக்-களிப்பேனென்றனவன்
இருதோள்களும்பூரித்து நின்று

௨௧. அப்படியேமுடிப்பே-னென்றான்விதுரனையுற்
றைவர்க்குச்சொல்லிவழி விடுத்தான்-வேந்தன்
சொற்படியேபாண்டவ-ரேகும்போதவருடன்
துஷ்டமந்திரியும்போ யடுத்தான்

௨௨. ஐவர்கங்கைக்கரையி-லோமஞ்செபந்தியானம்
அடுத்துச்செய்நாளிற்புனி தருக்கு-இந்த
வையகம்புகழ்வார-ணவதத்திலரக்கு
மாளிகைக்கட்டியதி லிருக்கும்

௨௩. உபாயஞ்செய்துகலத்தில்-சோற்றையிட்டுக்கழுத்தை
யுடன்பிடிப்பார்போறபகை தரித்துத்-துஷ்டன்
அபாயஞ்செய்யக்காக்குநாள்-விதுரனேவு சிற்பியன்
அணுகிவீமன்பால்மனஸ் கரித்துப்

௨௪. பார்த்திவனுங்களுக்கு-மாளிகைவகுத்திடும்
படிசொன்னநாளில்யானும் வந்து-வெகு
நேத்தியாநிலவறை-கானகத்திற்போய்க்கிட்டி
நிலைக்கச்செய்ததிற்றுவார மமைந்து

௨௫. விளங்குமிம்மண்டபமும்-வகுத்தேன்கபடமந்திரி
வித்தியாசமில்லான்போலப் போது-வந்தான்
இளங்கன்றுபயமறி-யாதென்பாரதுபோலிங்
கிருந்தாலவன்செய்குவான் சூது

௨௬. தூணொன்றுநிறுத்தினேன்-யாருமறியாரந்தத்
தூணின்றுவாரத்தினூ லேக-வழி
காணலாமென்றுங்காதி-லுரைத்துத்தியாகங்கைக்கொண்டு
கடிதிற்சென்றனதிவி வேக

௨௭. வீமன்மந்திரிதலைக்குத்-தாம்பூலம்பிடித்திட
வேணுமென்றுளத்தினில் மதித்துக்-கானில்
நாமிப்பொழுதுவேட்டை-யாடச்செல்லுவோமென்று
நயமாஅழைத்தவனைத் துதித்து

௨௮. வேட்டைக்கவனும்வரக்-கூட்டிப்போய்ஐவர்களும்
வேசாரச்செய்தோர்நிமி ஷத்தில்-மகா
பூட்டகமாக்கட்டிய-மாளிகையிற்சேர்ந்தபின்
புரோசனன்தூங்குஞ்சமை யத்தில்

௨௯. மதவிமனவ்வரக்கு-மாளிகைதனிற்கொள்ளி
வைத்துவிட்டுக்குந்தியை மெள்ள-அவன்
முதுகிலுந்தன்மன்கிரீடி-நகுலன்சாதேவனையும்
முன்கையாற்றூக்கிக்கொண்டு கள்ள

௩0. வழியால்நடந்துவிட்டான்-துரியோதனன்போதித்த
வார்த்தையாற்றேனில்விஷங் கலந்து-அதை
பழிகாரவேடரைவ-ருந்தாயுமைவர்க்கிடும்
படியெண்ணியவர்முக மலர்ந்து

௩௧. நல்லவிருந்துண்பார்போல்-வந்தரக்குமாளிகை
நண்ணியபின்றங்களை மறந்து-அவர்
பொல்லாதகாலத்தினு-லுறங்கிவிட்டார்கள்வாயு
புத்திரனதிலிட்டதீ சிறந்து

௩௨. தாவிமூண்டெரிந்தது-பிள்ளையாரைப்பிடித்த
சநியரசமரத்தை மாட்டிக்-கொண்ட
பாவம்போல்மந்திரியோ-டைந்துவேடருந்தாயும்
பதைத்தரக்கினுற்கட்டும் வீட்டில்

௩௩. இறந்தார்பாண்டவர்களுங்-குந்தியுமிறந்தாரென்
றெவருமழுதுகண்ணீர் பொழிந்தார்-செல்வங்
குறைந்துதுரியோதனன்-குடிநாசமாமெனவே
கொற்றவர்பலபோர்கள் மொழிந்தார்

௩௪. புலிவாயிலகப்பட்ட-மான்பிழைத்துவந்தது
போற்சுயோதனன்கேட்டுக் களித்தான்-சற்றுந்
தலைதெரியாச்சன்னதங்-கொண்டுகூத்தாடிவிழி
தன்னிலானந்தபாஷ்பந் துளித்தான்

௩௫. வீராதிவீரன்துரோணன்-முதலானோர்நொந்தார்மதி
வீமன்திடத்தைநெஞ்சிற் றொடர்ந்தான்-மகா
சூராதிசூரர்போகா-வழியினிலுக்கிரஜய
துரைச்சிங்கம்போல்கொடிக்குள் நடந்தான்

---

சந்தவிருத்தம் ௨௩.

அண்டமொடெண்டிசையுங்கிடுகிடெனவதிர்ந்திடமதவீமன்
ஆசைகொள்தாயொடுசோதரர்நால்வரையார்சடைபோல்வாரிக்
கொண்டெவருஞ்செலநெஞ்சுதளர்ந்துகுழைந்திடுவழிமேவுங்
கோடியர்நீள்மரம்வேரொடுவீழவகோரமகர்வீரக்
கண்டகவெம்புலிகண்டுமருண்டுகலங்கிடஇமையாமுன்
காடுகள்தூள்படராவினிலேகியொர்காலனும்நாடாவுத்
தண்டனிடும்பனிருந்தவனன்புளதங்கையுமணமாலை
தானிடவேமுகில்சூழ்வனநாடிநிதானமொடுற்றனனே.

## பீமனோடு இடும்பன் போர்புரிதல்.

விருத்தம் ௨௪.

அவ்வனந்தனில்வாழரக்கிபீமன்பாலடுத்துநீயாரருகிருக்கு
மைவராரென்றாள்நீயெவளென்றுனதற்கவளென்றனக்கண்ணன்
இவ்விடத்துங்கள்காற்றடித்திடலாலெனையுமைக்கொன்றுதின்பதற்கே
யேவினானுன்மேல்மோகம்நான்கொண்டேனென்விரகந்தனைத்தீர்த்தால்
செவ்விதழழகாவுன்னையாகாசத்தின்வழிகொண்டுபோய்க்குகையிற்
சேர்க்கிறேனின்னமிருந்திடிலிடும்பன் சினந்துவந்துனைக் கொல்வானென்
எவ்வுலகோருநடுங்கிடஇடும்பனிடும்பியைக்கூவிவந்தணுகி [றாள்
யேசிபீமனைப்பார்த்துன்றனைக்கொல்வேனென்றனனவனடித்தனனே.

௨௯. தரு-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

விளைந்துவிட்டதேசண்டை-மத
வீமனுக்குமிடும்பன்றனக்கும்-நொடிக்குள்ளாக
விளைந்துவிட்டதேசண்டை.

அநுபல்லவி.

களங்கமில்லாதஐவர்-களைக்கொன்று தின்னவந்து
காளையாம்வீமன்மைய-லாலுள மிகநொந்து
தளர்ந்ததிடும்பன்கண்டு-தாளாமற் சீறியென்றன்
றங்கைக்கோமண வாளனீயென்னவே
சிங்கக்குட்டிகள் போல்விழிமின்னவே
விளைந்து

சரணங்கள்.

௧. என்னுடன்சண்டைசெய்து-பிழைப்பவருமுண்டோவென்
றிடும்பன்வடவாக்கினி யதுபோலே-கோபச்
சன்னதங்கொண்டிடிபோற்-கர்ச்சித்துமாருதி
தனைமோதிமாமலைபோ லொருக்காலே
சின்னமனிதனென்றோர் கொசுவாகவேமதித்தான்
திராணியறியாமலே தலைகிழாகக்குதித்தான்
பின்னிடுகிறவனோ வீமனவனையோங்கிப்
பெரும்புலிபோலடித் தான்பல்லுதிரவே
அரும்பகையிருவர்க்கும் வரவாமுதிரவே
விளைந்து

௨. ஆனையோடானையெதிர்த்-தாற்போற்பின்போய்முன்
அடுத்தொருவர்க்கொருவர் தாக்கினர்-தேவர்
கோனஞ்சமரங்களை-வேருடனேபிடுங்கிக்
கொண்டுசாடிப்பொடிபொடி யாக்கினர்

மானபார்நால்வருங் குந்தியுமருகிருக்க
வாயுபுத்திரன்வடிவ மிடும்பிநெஞ்சையுருக்கத்
தீனரட்சகராம ராவணயுத்தம்போல்நெடுங்
கானகத்திற்செந் தூள்கள்சூழவே
வானில்நட்சத்திரம் புவிமிசைவீழவே
விளைந்து

௩. இடசாரிவலசாரி-வந்துபுயத்தொடுபுய
மிடிபடஇருவரு மோதினர்-உயர்
வடகயிலாசமுங்-குலுங்கவீரபாஷைகள்
வகைவகைசினந்தங்கே யோதினர்
குடல்சரிந்துரத்தம்பீ றிட்டுவரக்குத்தினர்
குன்றுகள்போலெழும்பிக் காலினாலேயெற்றினர்
விடவிடென்றெமனுடல் பதைத்துக்கண்மூடமனத்
திடங்கெட்டுரகனுந் திகிலிட்டுகலங்கவே
இடர்பட்டஷ்ட கஜங்களும்விலங்கவே
விளைந்து

## இடும்பன்மரணமடைதலும், இடும்பி பீமன்மேல் மோகித்தலும்.

விருத்தம் ௨௰.

இந்தவகைபோர்கொடுத்தங்கிரவுதன்னில்
இடும்பனெமபுரஞ்சேர்ந்தானவனைக்கிட்டி.
யந்தவனந்தனில்வாழ்நாய்நரிகள்பேய்க
ளரியவிருந்துணப்பரிந்துவிளக்கொன்றேந்தி
வந்ததுபோற்சூரியன்விண்ணிடையுதித்தான்
வல்லிடும்பிமதவீமன்றன்பாற்சென்று
சிந்தைமகிழ்ந்தென்விரகவேதைதன்னைத்
தீரென்பாள்கடைக்கணருள்பாரென்பாளே.

## இடும்பி பீமனைப்புணர அழைத்தல்.

௨௧. தரு-இராகம்-தன்னியாசி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

வீமாஎன்னசாலம்-என்னைச்
சேரவேயிதுகாலம்.

அநுபல்லவி.

சீமானே-விரக வேதனை
செய்யும்போதோநீ
செய்வது சோதனை
வீமா

சரணங்கள்.

௧. அட்டிசெய்வ தின்னஞ்சிரோ
ஆனையேறித்திட்டி வாசல்நுழைவாரோ
கட்டழகாளன்னைக் கைவிடத்தோணுமோ
கரும்புதின்னவுங் கூலிவேணுமோ
வீமா

௨. எல்லாமறிந்தநீ யென்னைநிதானி
யினிமேற்றெரிய வரும்நான்மானி
வல்லாளாகாட்டினி லுனைத்தள்ளிக்கொண்டு
வந்தென்பாக்கிய முலகிலார்க்குண்டு
வீமா

௩. பானுக்கும்பழத் துக்குந்தொந்தம்
பார்க்குளதைப்போல் நானுன்சொந்தம்
காலையேசுற்றிக் கொண்டபாம்பு
கடிக்குஞ்செய்ய வேண்டாம்நீவீம்பு
வீமா

௪. இருவருமிசை வதுவேயோக்கியம்
எனைப்போற்பெண்களில் யார்சிலாக்கியம்
துணையேதுறட்டுக் கெட்டாப்பழங்கைக்கெட்டும்
சுகுர்தம்போலென்றன் கண்ணெதிர்ப்பட்டும்
வீமா

௫. மன்மதன்சண்டையை விலக்கப்போகாதா
மாமிநீயாகிலுஞ் சொல்லலாகாதா
சின்னஞ்செய்தாலோகங் கீர்த்திப்பாராட்டுமோ
தெய்வங்கொடுக்குங்கை யாலள்ளியூட்டுமோ
வீமா

௬. நான்மூன்றுகாலமுந் தெரிந்துசொல்லுவேன்
நடுப்படைக்குள்ளே யேகியேவெல்லுவேன்
வானமுதங்கேட்டாற் கொடுக்கமாட்டுவேன்
வைகுந்தமென்னுள்ளங் கைதனிற்காட்டுவேன்
வீமா

௭. முடிமன்னுகண்பா ரிதுதிவ்யக்ஷேத்திரம்
முழுதுமென்றன்மே லேணிந்தகூஷாத்திரம்
விஷத்தையூட்டியா கேலிதொடுப்பது
விடுவேகும்போதா கிணறெடுப்பது
வீமா

## தருமர் பீமனுக்கு இடும்பியின் நற்குணமுரைத்தல்.

விருத்தம் உகூ.

இடும்பியிந்தப்படிவருந்தும்போதுவீமன்
யான்விரும்பேனெனத்தீயில்மாள்வேனென்றம்
மடந்தைகுந்திக்குரைத்தாளுதிட்டிரன்கேட்டவ்
வனிதையைப்பார்த்துத்திரிகாலமுஞ்சொல்நீதா
னடந்திடுங்காரியத்தைச்சொல்லென்றுன்நீங்கள்
நறுநீரிற்படிவீர்வியாசனைக்காண்பீர்கள்
திடங்கொளலாமெனத்தருமன்வீமனுக்குத்
தெரிவிப்பானவள்நலத்தைவிரிவிப்பானே.

உஉ. தரு-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

இவள்நயகுணமாது-ஜயவீமாகேள்
இவள்நயகுணமாது.

அநுபல்லவி.

அவனிக்குளபிமானி யருகில்வந்துநிதானி
இவள்நய

சரணங்கள்.

க. ஆலத்துடனேமுன்னாள் அமுதம் பிறந்தாற்போலே
யரிவையிடும்பனுடன் பிறந்துவிட்டாள்மண்மேலே
காலினுலேகாட்டிய வேலையைத்தலையாலே
கனிந்துநிமிஷந்தன்னிற் செய்குவாளொருக்காலே
இவள்நய

உ. உப்புகளர்நிலத்தில் விளைந்தாலு மிழிவாமோ
உயர்செம்பொன்மண்ணிற்பிறந் தாலும்பெருமைபோமோ
அப்படிபோலிவள்தன் குணத்தையறிந்தநாமோ
அகலவிடுவதுபத் தினில்வீழ்ந்தபாம்புஞ்சாமோ
இயள்நய

ங. சஞ்சீவியைக்கேட்டாலும் க்ஷணத்தினிற்றருகுவாள்
சத்துருக்கள்தலையை பனங்காய்போற்றிருகுவாள்
நெஞ்சில்நினைத்ததைச் சொல்வாள்துணைவருகுவாள்
நினைப்போல்நாயகனில்லை யென்றுளமுருகுவாள்
இவள்நய

## வியாசர் பாண்டவரை மறையவர் வடிவமாய் வேத்திரகீயத்திருக்க நியமித்தலும், கமலக்கன்னிகையாகிய இடும்பியைப் பீமன் புணர்தலும், கடோர்க்கஜன் பிறத்தலும், பாண்டவர் வேத்திரகீயஞ் சேர்தலும்.

விருத்தம் உள.

தருமனிவ்வண்ணமிடும்பிமீதன்புதரித்துரைத்திட்டதால்வீமன்
றருக்குடனவளைச்சேருதற்கிசைந்தான்சகலருமோர்தடாகத்தில்
விருப்புடன்படிந்தாரங்கொருகொடிக்குள்வியாசன்வந்தவரைநோக்கி
வேதியர்போலவேத்திரகீயத்தில்விரைந்துநீர்போயிருமென்ன
உரைத்தகன்றுனவ்விடும்பியைவீமனுவந்தணைந்தான்கடோர்க்கஜனென்
றோருதிடம்வீரன்பிறந்துபாண்டவரையுடன்பணிந்தென்றனைநினைக்கில் [ல்
அருகினிலிருப்பேனெனவிடைகொண்டேயன்னையோடேகினான் முனிசொ
லால்மறையோர்போலவர்வேத்திரகீயத்தினிற்சென்றிருந்தனரே.

உ௩. தரு-இராகம்-மத்தியமாவதி-சாப்புதாளம்.

பல்லவி.

பாண்டவரிருந்தாரே-வேத்திரகீயத்திற்
பாண்டவரிருந்தாரே.

அநுபல்லவி.

ஆண்டவன்வியாசன் சொல்லினாலே
அந்தணர்போலுருக் கொண்டொருக்காலே
பாண்டவ

சரணங்கள்.

க. பட்டஞ்சுவேஷ்டியுடுத்துப்-பின்-பக்கங்குடுமிவிடுத்துச்
சட்டமாகக்கிறுசந்-தனந்தரித்துப்பிராமணத்
தமிழைப்பேசு வதிற்பிசகாமலே
தங்கள்பேரொரு வர்க்குஞ்சொல்லாமலே
பாண்டவ

உ. மந்திரங்களையுச்சரித்துத்-திகழ்-மார்பிற்பூணுநூல்தரித்துச்
சந்தியாவந்தனஞ்செபந்-தகுந்தபடிபுரிந்து
சாஸ்திரங்களை யாய்ந்துசீராட்டித்
தர்மமேதுணை யென்றுபாராட்டிப்
பாண்டவ

௩. சீலமிகவேகொண்டு-வேதியர்-திருமனையிற்போயுண்டு
காலத்துக்கேற்றவேஷங்-களைபோட்டுக்கொள்ளும்விதி
காட்டிற்போயொளித் தாலும்விடாதென்று
கண்டுகொண்டசைவிலாத் திடச்சித்தமாநின்று
பாண்டவ

## பகாசூரனுக்குத் தன்பிள்ளையை நரபலிகொடுத்தற்கஞ்சிக் குந்தியினிடத்தில் பார்ப்பனமகள் முறையிடல்.

விருத்தம் உஅ.

இந்தவண்ணமொருமறையோன்வீட்டிலவ
ரிருந்திடுநாளந்தமனைக்குரியாள்குந்தி
சிந்தைமகிழ்நல முடையாளுள்ளம்நொந்து
திகைத்துமெலிந்தழுதுருகிவாடும்போது
தொந்தமொடுகுந்தியவளிடத்திற்சென்று
சுகந்தமலர்க்கரத்தாற்கண்ணீர்துடைத்தேன்
வெந்தழலின்மலரானுயெனத்தன்வாயை
மெல்லுவாளவள்துயரைச்சொல்லுவாளே.

உசு. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

பகனென்றொருராட்சதப்படுபாவி-வசப்
பட்டிருக்குதிவ்வூரார்-தமதாவி.

அநுபல்லவி.

ஜகத்திலென்சஞ்சலத்தைத் தீர்க்கமனதில்நாடும்
தாயேயென்விதிக்கென்ன செய்வாயெமனும்வாடும்
பகனென்

சரணங்கள்.

க. வடவைக்கனல்போ விருவிழியான்-சீவ
வதைசெய்வதொருநாளு மொழியான்
இடர்செய்துவெகுபேரைக் கொன்றுவாழைப்பழம்போ
லெடுத்துவிழுங்கிவிட்ட எமனென்றறிந்தோங்கெட்ட
பகனென்

உ. அதனாலே தினமொருக்காலே-சோறு
மருங்கறிகளு மலைபோலே
பதனமாகப்பண்டியி லனுப்பியிங்குள்ளோர்நா
பலியுங்கொடுத்துக்கிலி படநின்றபெரும்புலி
பகனென்.

ங. என்னென்றுசொல்வே னென்றன்கொள்ளை-யின்றைக்
கென்முறை யென்னருமைப்பிள்ளை
யொன்றையுமுயிரோடே தாரைவார்த்துவிட்டுநா
ளேரிபோற்கத்திமாள வுற்பவித்தசண்டாளப்
பகனென்

## குந்திதருமனுக்குப்பீமன்வலிகூறிச் சந்தேகந்தெளிவித்தல்.

விருத்தம் உ௯.

அந்தணமாதீதுரைக்கக்கேட்டகுந்தி
யரக்கனுயிர்மாய்ப்பதற்குவீமன்றன்னைத்
தந்திடுவேனென்றுளங்கைராட்ச
தனக்குமுதுசமைக்கலுற்றுள்ளையிச்சேதி
தொந்தமுடன்தருமனுக்குச்சொன்னாள்வீமன்
றுள்ளினனண்ணனுறுத்தானப்போது
பந்தமுடனவன்றனக்குக்குந்திவீமன்
பலஞ்சொல்வாளவளறிந்தநலஞ்சொல்வாளே.

உடு. தரு-இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்.

பல்லவி.

தருமாசந்தேகம்வேண்டாம்-வீமனுக்காகத்
தருமாசந்தேகம்வேண்டாம்.

அநுபல்லவி.

பெருமாமரத்தைத்தள்ளிப் பிளக்குமோவொருசுள்ளி
தருமா

சரணங்கள்

க. இவனுக்கந்தராட்சத னெம்மாத்திரமோர்துரும்பு
ஈயேறிமலையசைந் திடுவதுண்டோகரும்பு
அவனிக்குளானவாயிற் சிக்கிவிட்டாற்றிரும்பு
மாதிரும்பாதுநூலாற் றுளைபடுமோர்இரும்பு
தருமா

உ. ஆலையில்லாவூர்க்கினுப் பைப்பூச்சர்க்கரைபோலே
யரக்கனேற்பட்டோரைநா சஞ்செய்கின்றான்மென்மேலே
காலருத்திரனுமுன்றன் தம்பிகைக்குத்தினாலே
கண்டகன்மாள்வானென்றன் சொல்லைநம்பொருக்காலே
தருமா

௩. குலவான்பிறந்தோர்மாத மாமுன்னெடுத்துக்கொண்டு
கொற்றவன்பின்சென்றேனென் கைவழுவிப்புரண்டு
மலைமேல்வீழ்ந்தானிடைந்து மருண்டுவிட்டேன்பின்கண்டு
மகிழ்ந்தேன்மலைதூளாச்சு திவன்பலமெவர்க்குண்டு
தருமா

---

## பீமன் பகனிடஞ்செல்லல்.

விருத்தம் ௩0.

அனைசொலாற்றருமன்வீமனைப்பகன்பாலனுப்பவேசம்மதித்தானவ்
வந்தணநங்கையொடுபலமாதாறுசுவைக்கறிகளுமமுது

மினிதுறச்சமைத்தார்மாருதிமறையோரியாவருங்களிகள்சிற்றுண்டி
யிவையுடனுண்டங்கிருந்தனரந்தவந்திழையார்பினுஞ்சமையல்
சினவரக்கனுக்குச்செய்தனருடனேதிருந்தெழிற்பண்டியிலேற்றிச்
சிகரமேருவைப்போற்கடாக்களையதனிற்சிறந்திடப்பூட்டிவேதியர்கள்
மனமகிழ்வுடனேசிவப்புறுவஸ்திரமாருதிக்கணிந்தனரன்னேன்
வாலசூரியன்போற்பண்டியிலேறிமதப்புலியென்னவேகினனே.

---

## பீமனும் பகனும் போர்புரிதல்.

விருத்தம் ௩௧.

பண்டியின்மேற்செலும் வீமன்பகனைக்காணும்
படிவானின்முகடோங்கவளர்ந்தேயந்த
மிண்டனையோர்மலையிலெலும்பாசனத்தின்
மீதினிற்யார்த்துச்சிரித்தங்கவனுக்காகக்
கொண்டுபோமமுதுகறிதானேயுண்டு
கொண்டேகினனரக்கன்பார்த்திடித்தா
னண்டம்நடுங்கிடப்பகனும்வீமனுங்காய்க்
தடுத்திட்டார்சண்டைசெய்யத்தொடுத்திட்டாரே.

உசு. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-சாப்புதாளம்.

பல்லவி.

பகனுக்கும்வீமனுக்கு-முலகங்களதிர்ந்திடும்
படிநேர்ந்ததேசண்டை.

அநுபல்லவி.

குகைவிட்டிரண்டுசிங்கங் குதித்திந்தப்புவிமேலே
பகையுற்றகோரயுத்தம் பண்ணுகின்றவகைபோலே
பகனுக்கும்

சரணங்கள்.

௧. ஒருவர்க்கொருவர்தோளைத் தட்டினர்-அண்ட
முடையக்கொக்கரித்தெதிர் கிட்டினர்
பருவதம்போல்மல்லுக் கட்டினர்-கண்ணிற்
பட்டருந்தீப்பொறிகளைக் கொட்டினர்
இருவரும்நெற்றியொடு நெற்றியிணைத்தாக்கினர்
எறியுஞ்செண்டுகளைப்போ லெடுத்துவிண்ணிற்போக்கினர்
இப்படிவெகுநேரம் இளையாமல்வெகுவீரம்
இசைந்தோர்யுத்தத்திற் றிசையோர்வாட்டவே
எமனுந்திகைத்துத்தன் விழிகள்மூடவே ௳
பகனுக்கும்

உ. வன்கண்ணன்பற்களைக் கடித்தான்-வீமன்
மார்பிலிடியைப்போ லிடித்தான்
பின்புமாருதியெட்டி யடித்தான்-விழி
பிதுங்கக்கழுத்தினைப் பிடித்தான்
என்செய்குவானரக்க னெண்ணுதுமெண்ணினன்
இவன்பிரளயருத்திர னெனயோசனைபண்ணினன்
தன்சங்கடத்தைத்தள்ளத் தந்திரத்தால்மெள்ளத்
தப்பிவந்தடா பயலேயுன்மதம்
தனையடக்கிறே னென்றுனிவ்விதம்
பகனுக்கும்

ங. காலோடுகால்களைச் சுற்றினர்-மரங்
களைப்பிடுங்கிச்சுழற்றி மொத்தினர்
வாலிசுக்கிரீவனைப்போ லெற்றினர்-அனு
மானிராவணனெனக் குத்தினர்
மேலும்மேலும்நெடிய மலையைக்கையினிற்றுங்கி
விரைந்துவந்துமேற்போட்டுக் கொடுஞ்சமரினிலோங்கி
விடுவதிற்சேடனிலை விட்டுக்கலங்கித்தலை
விறுவிறென்று சுழன்றருங்கிடி
மிகுந்துமெய்நடு நடுங்கிடும்படி
பகனுக்கும்

## பீமன் பகனைக்கொன்று வேத்திரகீயஞ்சேர்தல்.

விருத்தம் ௩௨.

பகனிந்தப்படிபோர்செய்தேயிறந்தான்
பானுமறைந்தான்வீமனன்னீர்தோய்ந்து
தருமனைச்சேர்ந்தானைவர்வாழ்நாளங்கோர்
சதுர்மறையோன்சென்றுனசனந்தெவ்வூர்
சுகசேதியாதுரையுமென்றூர்தேசந்தொறுந்
தீர்த்தம்படிந்தேன்மேற்றிசைக்குப்போக
மகிழ்வினைக்கொண்டேனெனவேதத்தின்சாரம்
வடிக்கின்றான்சேதியினைப்படிக்கின்றானே.

## தீர்த்தயாத்திரைச்சென்ற மறையவன் பாண்டவர்க்குப் பாஞ்சாலியின் அழகை வர்ன்னித்துரைத்தல்.

விருத்தம் ௩௩.

துருபதனுட்டினிலோர்நாளிருந்தேன்பாண்டு
சுதரரக்குமாளிகையில்மாண்டாரென்றந்
நிருபன்வருந்திப்பினுந்தன்மகளைப்பார்த்த
னேர்ந்துமணஞ்செயத்தன்மரமூழாமென்று

கருதித்தன்பாலிருக்கும்வில்வளைப்போர்
களுக்கவன்பெண்தாரமென்றோராஜர்க்கெல்லாந்
தரமறிந்தேவோலைவிட்டானப்பெண்ணேசுந்
தரியென்பானவட்கவளேசரியென்பானே.

உஎ. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

பாஞ்சாலன்பெண்ணழகைக் காணும்விபவத்திற்குப்
பதினாயிரங்கண்களே வேணும்.

அநுபல்லவி.

பூஞ்சேவடியில்மருவலர்கள் நிதமும்பணி
புஜபலமிகுந்திடு ராஜசிகாமணி
பாஞ்சாலன்

சரணங்கள்.

க. சீதளமலர்க்குழல் மேகம்-அவள்
சிற்றிடையேதுவண்ட நாகம்
காதல்கொளுஞ்சொர்ன்ன தேகம்-பசுங்
கழுத்தினுக்கொக்கும்வளர் பூகம்
மாதவத்தினைச்செய்யு முனிவோர்தங்கள்விவேகம்
மயங்கித்தொண்டுபுரியச் செய்திடுவார்சிநேகம்
சோதிமின்னல்போலுருவைச் செய்தஅயன்றன்னிர்வாகம்
சொல்லப்போமோதோகை லபித்திடலதுசுக்கிரயோகம்
பாஞ்சாலன்

உ. திருக்கணிரண்டும்வரி வண்டு-என்றுந்
தெவிட்டாதவள்மொழிகற் கண்டு
அரியஇதழ்பவளத் துண்டு-வட
மணிந்துபூரித்தமுலை செண்டு
வரையைவில்லாவளைத்த சிவதற்பரன்மேற்பண்டு
வன்சமராடிய மதவேள்மகிழும்பெண்டு
பருவாதியவளைக் கண்டுபிர்மானந்தங்கொண்டு
படந்தனிலேயெழுதித் தெண்டனிடவிதியுண்டு
பாஞ்சாலன்

௩. தந்தபந்திகள்முல்லைக் காடு-முகஞ்
சந்திரபிம்பமொப்பாகும் நீடு
இந்திரதனுசேநெற்றிக் கீடு-செங்கைக்
கிணையாங்கமலம்நீழ் லாடு
சுந்தரமிருங்கன்னங்கண் ணாடிவிண்ணோர்தேடு
சுவையமுதெழுந்தபாற் கடலவள்சொந்தவீடு
சந்ததம்பஞ்சூட்டும்பதத் தலங்காரஞ்சுமையேடு
தனிலெழுதப்போமோமின் னுள்நடையன்னப்பேடு
பாஞ்சாலன்

## கங்கைக்கரையிற் பாண்டவர்வரவுகண்டு சித்திராங்கதன் கோபித்தல்.

விருத்தம் ௩௪.

அந்தணனிந்தப்படிதுரோபதைதன்னழகினையோதியேகியபின்
 யைவருந்தாயும்வேதியருடனேஆயிழைமணத்தினைப்பார்க்கத்
தொந்தமாய்ப்போகும்வழியினிலரியதூயனும்வியாசனைக்கண்டு
 துதித்தடிபணிந்தார்துருபதன்மகள்தன்சுகம்பெறல்வீரமாமென்றே
வேந்திறல்முனிவனுரைத்துடனகன்றான்விஜயனற்காத்தினிற்கொடுபோம்
 விரியனலொளியாற்கானகங்கடந்துவிரைவிலோர்பொய்கையோரத்திற்
பந்தமுற்றேகும்பேர்துகந்திருவன்பாவையருடன்சலக்கிரீடை
 பண்ணியசித்திராங்கதனென்போன்பார்த்திருவிழிசிவந்தனனே.

உ௮. தரு-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

இருவிழிசிவந்தானே-சித்திராங்கதன்
இருவிழிசிவந்தானே.

அநுபல்லவி.

மருவியவிண்ணின்மேலே வருபாலசூரியன்போலே
இருவிழி

சரணங்கள்.

க. சேதியை யறியாமல்
 சித்தத்திற் குறியாமல்
தீதினை முறியாமல்
 சினத்தினைப் பறியாமல்
இருவிழி

உ. இந்தராவினி லின்று
 இங்குவந்தீரே நன்று
வந்தவுங்களைக் கொன்று
 வதைத்துவிடுவே னென்று
இருவிழி

௩. மனித ரெனவேநாடி
 மதத்தின லுரையாடி
யினியவில்லைக் கைகூடி
 யிணையில்லாக் கணைதேடி
இருவிழி

## பாண்டவருடன் சித்திராங்கதன் நண்புபூண்டு தௌமியரிஷியைக் குருவாகக்கொள்ளச்செய்தல்.

விருத்தம் கூரு.

அங்கதைக்கேட்டிடுகிரீடிமனிதருன்ற
னரியசமர்காணவந்தாரெனஅவ்வீரன்
வெங்கணையேவினன்விஜயனக்கினியாஸ்திரம்
விடுத்தவன்றன்குடுமிபிடித்திழுத்துவந்து
துங்கமிகுதருமன்முன்னேவிட்டான்பாண்டு
சுபுத்திரரென்றவன்றெரிந்துவணங்கிமேலு
மங்களஞ்சேர்சிலகதைகள்விஜயனுக்கு
வழுத்துவான்மனத்திலன்பையழுத்துவானே.

உகூ. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

கேளருச்சுனமகாராஜனே-யென்றுங்
கீர்த்திதனில்மிகும்பிரகாசனே.

அநுபல்லவி.

கேளுங்குலத்துமன்னன் சவ்வர்ணன்வேட்டையாடக்
கிரமமாப்போம்வனத்திற் றேழியர்புடைசூட
நீள்கிரணசூரியன்மகள் தபதியன்புற்று
நிறைமலர்கொய்யவந்தா ளரசன்கண்டுபிரமித்து
நிலைகலங்கினனவ ளருகினில்வந்துநின்றாள்
நினைச்சேரயென்றன்பிதா அனுமதிவேணுமென்றாள்
கேளருச்

சரணங்கள்.

க. சொல்லியவள்விண்ணுல-கேகினாள்சவ்வர்ணனத்
தோகைமையலாலுளம் நொந்து-மதன்
றொடுகணைவேதையாலே-வாடும்நாளினிலண்ணல்
தூயமனைக்குமன முவந்து
வல்லபஞ்சேர்வசிஷ்ட முனிசென்றான்வேந்தன்கண்டு
வணங்கினான்முனியவன் பருவந்தெரிந்துகொண்டு
தொல்லுலகத்திலந்த பானுபெற்றிடுமின்னைச்
சோதிமின்னலைவென்ற வடிவந்திரண்டபொன்னை
எல்லாருமகிழ்ந்திட வருவித்தேயன்பினாலே
கல்யாணமகாராஜனுக்குச் செய்தகன்றானருக்காலே
கேளருச்

உ. காதிமைந்தன்விஸ்வாமித்திரன்-வேட்டையாடியோர்நாள்
கனங்கொள்வசிஷ்டனாசிர மத்தில்-ஏகிக்
கனிவினெடுமுனியைப்-பணிந்தானவன்வேந்தே நீ
கனியமுதுண்டுன்னூர்க்கு க்ஷணத்தில்

ஆதரவாப்போவென்று னென்சேனைக்கெல்லாமுண்டி
யகப்படுமோவென்றுனவ் வருந்தவத்தோன்பாலண்டி
நீதமுற்றிடுகாம தேனுவாலெல்லாம்வர
நினைத்தபடியாவர்க்கும் அதுவேபட்சணைதர
மாதருருக்கொண்டதை விஸ்வாமித்திரன்மதித்தான்
வண்பசுவைத்தான்கொண்டேகு மார்க்கம்நெஞ்சினிற்பதித்தான்
கேளருச்

௩. பின்னும்விஸ்வாமித்திரன்-வசிஷ்டமுனியைப்பார்த்துப்
பெருந்தவஞ்செய்கின்றவுன் றனக்கு-ஒப்
பில்லாதகாமதேனு-எதுக்குப்பாராளும்
பிரபலனாகியஎன் றனக்கு
நன்மையுறநீதா லாமென்றான்தவராஜன்
நற்பசுவிண்வாழ்வதென் றன்கேட்டபுவிராஜன்
என்வலிமையாலதைக் கொண்டேகுவேனென்றோதி
இசையுங்கயிற்றைவீசித் துயரஞ்செய்தானந்நீதி
தன்னைச்சுரபிமுனிக் கோதிநின்றங்கப்போது
தவத்தோனீடயங்கொள்ள லாகாதென்றான்புவிமீது
கேளருச்

ச. அந்தமொழியைக்கேட்ட-சுரபிவெகுண்டுநீண்ட
அருங்கொம்பினாலும்வாலி னாலும்-கிட்டி
யடுத்தசேனையைமாய்க்கும்-போததன்தேகத்தினி
லணிகொள்மயிர்முனையின் மேலும்
வந்தகரிபரிதேர் காலாள்களும்நேரிட்டு
வானுலகுமதல குதலப்படப்போரிட்டு
மந்த்ரகிரிபோலுயர் யானைத்தலையுருள
வாயிற்குடல்கக்கிக்கொண் டரும்பரிகள்மருள
வதைத்துச்சமஸ்தத்தையு மழிப்பதைநோக்கிச்சீறி
மன்னன்மைந்தர்நூறுபேரும் வந்தார்வசிஷ்டன்மேல்மீறி
கேளருச்

ரு. மீறுராஜபுத்திரர்-பிரமன்மகன்வசிஷ்டன்
மீதிற்கணைமாரிகள் சொரிந்து-சிவன்
விழியால்முன்னாளெரிந்த-மதனைப்போல்தவமுனி
விழியனலாலவர்க ளெரிந்து
நீறெனவேமுடிந்தார் விஸ்வாமித்திரன்சிரித்து
நெருப்புப்பொறிபறக்கக் கண்சிவந்தார்ப்பரித்து
வீறுமாயுதம்விட்டான் முனிவன்தண்டம்விழுங்கி
விட்டதைக்கண்டுமன்னன் முகத்திற்களைமழுங்கி

வாதுபட்டுடனன்னே ளரசினேக்கைவிடுத்தான்
மகத்துவமிருக்கல்ல மாதவத்தினையடுத்தான்
கேளருச்

சு. முடிமன்னன்கன்மிடபா-தன்றனக்குமுன்சாப
மூண்டதும்வசிஷ்டன்றன் புத்திரன்-சத்தி
முனியவனேக்காய்ந்தது-மவனுலேபின்னுமந்த
முனிமுடிந்ததுந்தவ மித்திரன்
படர்சடையோனும்பரா சானுற்றபெருமையும்
பார்மெச்சும்பிருகுசே யருப்பகனருமையும்
திடங்கொளிவரிருவர் தவத்தால்வடலிவத்தீயும்
செறிந்திடுகொனிற்றீயு முண்டாச்சுதின்பந்தோயும்
நெடியமாமுனிவர்கள் புகழென்னுற்சொல்லப்போமோ
நிலந்தாங்குஞ்சேடனேதத் துணிந்தாலுநிறைவாமோ
கேளருச்

---

## பாண்டவர் குலாலனில்லஞ்சேர்தல்.

விருத்தம் ருசு.

கந்தருவனிவையுரைத்துவிஜயனுக்குக்
கடும்பரியஞ்ஞூறுதவியக்கினியாஸ்திரம்
அந்தமிகுகிரீடியினுலவன்பெற்றுக்கொண்
டாசருக்குக்குருவிருக்கவேண்டுமென்று
பந்தமறுதௌமியர்பேர்கூறஐவர்
பரிந்துநண்புபூண்டுதுருபதனுட்டுக்கம்
மந்த்ரமறையோனேடுநடந்தேகால்கள்
வருந்தினுர்குயவனகம்பொருந்தினுரே.

ருய. தரு-இராகம்-சஹானு-ஆதிதாளம்.

பல்லவி.

தங்கியிருந்தார்பாண்டவர்-குயவன்வீட்டில்
தங்கியிருந்தார்பாண்டவர்.

அநுபல்லவி.

செங்கமலவல்லிகுந்தி தேவியோடன்புபொருந்தி
தங்கி

சரணங்கள்.

க. பகைவர்கள்மணி முடி
படவருந்துமெல் லடி
மிகனேகவே நடந்து
வெங்கானகங் கடந்து
தங்கி

உ. தீமையென்பதை நீங்கிச்
சித்தத்திலுண்மை தாங்கி
மாமன்னர்மிக நாண
மணக்கோலந்தனைப் பூணத்
தங்கி

ந. விஜயனைக்காணே மென்று
வெம்புந்துரோபதைக் கன்று
இசையுமிடக்கண் துடிக்க
எங்குமங்களம் படிக்க
தங்கி

---

## துரோபதை சபாமண்டபத்துக்கு வருதல்.

விருத்தம் ௩௭.

வங்கணங்கொள்குயவனகந்தனிலேகுந்தி
மாதையிருத்திக்குருவினோடுமைவர்
துங்கமிகுதுருபதனன்னாட்டிலுற்ற
தூயவில்லைவளைக்கவந்தமகுடமன்னர்
பொங்கமுற்றசபையதனிற்சேர்ந்தபின்பு
புத்தமுதநிகர்மொழித்தோழியர்கள்சூழ
மங்களபாஞ்சாலன்மகிழ்ந்தீன்றபுண்ய
வதிவந்தாள்துரோபதைப்பெண்ணிதிவந்தாளே.

௩௧. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

வந்தாள்துரோபதைமின்னாள்-மலருறைதிருவன்னாள்
வந்தாள்துரோபதைமின்னாள்.

அநுபல்லவி.

செந்தாமரைவதனத் தோழியரெனுநட்சத்
திரக்கூட்டநடுவிலே மருவியபூர்வபட்சச்
சந்திரோதயமென்னப் பரப்புமென்மலர்மேலே
தகும்யாகசாலைக்கு மடவனந்தனைப்போலே
வந்தாள்

சரணங்கள்.

க. சிரத்தினிற்கோடி சூரியப்பிரகாசமென்னச்
சிறந்திடுபூஷணங்க ளொளிவீசியேமின்னத்
திருநுதலிற்சுட்டி நிகநிகெனஇலங்கச்
செங்கைக்கங்கணத்திறற் பொங்குமிருள்விலங்கத்

தாளவடமும்ரத்தின வடங்களும்வாய்ந்து
ததும்புங்கும்பத்தனத்திற் கலவைகள்தோய்ந்து
தங்குமஷ்டதிக்கும் பரிமளவாடைமுட்டச்
சகலராஜர்க்குநெஞ்சில் மிகுபிரமையேதட்ட
வந்தாள்

௨. காதிற்கிரணமய சோதிக்குழைபொருத்திக்
கதிர்விடுசெம்பொன்னுழி பவளவிரற்கிருத்தி
மேதகுமுவல கத்தையும்விலைகொள்ளும்
மேகலையணிந்துகைப் பிடியென்றுவமைவிள்ளும்
ஆதரவில்லாஇடைக் கொட்டியாணம்பூட்டி
ஆபரணங்களுக்கு அழகினைக்கூட்டி
அந்தலோகத்துநங்கை யென்றெவருமதிக்க
அனங்கவேள்சாஷ்டாங்க தெண்டனிட்டன்பாற்றுதிக்க
வந்தாள்

௩. அல்லும்பகலுமேவண் டசலாதகருங்கொண்டை
யதனுடனேயோயாமற் றொடர்ந்தெதிர்த்தருஞ்சண்டை
வல்லமையால்விளக்கும் விழிவலைதனைவீசி
வண்குடைநீழலில் மயில்போலுமகராசி
மருவிமங்கையர்கள் வெண்சாமரைபோட
மங்கலவாத்தியங் களிஞேசைநீட
வடிவுகண்டுருகுவோர்க் கிரங்கிவிண்மீன்மெல்ல
வருமோதூண்டிலுக்கென்று சிலம்போசையிட்டுச்சொல்ல
வந்தாள்

---

## பாங்கியர் துரோபதைக்கு வந்தராஜர்கள்பேரைச் சொல்லிக்காட்டல்.

விருத்தம் ௩௮.

வந்தநற்றுரோபதைதமையன்திஷ்டத்துய்மன்
மன்னரைப்பார்த்திதுவேவில்லிதுகளம்பு
அந்தரத்திற்சுழன்றுகொண்டேயிருக்குஞ்சக்ர
மதுவேயாமதினடுவிலமைத்திருக்கும்
யந்த்ரம்விழவெய்வோரென்றங்கைக்கேற்றோ
ரெனச்சபையிலரசரின்னாரின்னாரென்றே
விந்தைகொள்தோழியரழகாலிரதிதன்னை
வெல்லுவார்துரோபதைக்குச்சொல்லுவாரே.

ங. திபதை-இராகம்-முகாரி-ரூபகதாளம்

## கண்ணிகள்.

க. பாஞ்சாலன்றவத்தினி-லுற்பவித்தபாவையே பாராய்-இவன்
பாராளுஞ்சுயோதன-னெனுஞ்சத்திரபதியிதோ நேராப்

உ. பூஞ்சோலைக்கிளியே-யவனருகினிலன்பு பூண்டு-இருப்
போரவன்தம்பிமார்கள்-கூர்வேலினைப்போல நீண்டு

ங. காதோடடரும்விழி-மயிலேகடுஞ்சூதும் வாதும்-எக்
காலமுஞ்செய்யக்கங்-கணங்கையிற்கட்டி யெப்போதும்

ச. நீதேநினைக்குஞ்சகுனி-யிவன்றன்திருவே வில்லாசான்-பெற்ற
சிறுவனஸ்வத்தாம-னிவன்போர்செய்திடக் கூசான்

ரு. மங்கையேநல்லகொடைக்கும்-படைக்கும்வலிமைக்குஞ்சிலைக்கும்புகழ்
மணத்துக்குங்குணத்துக்குஞ்-சத்தியவாய்மைக்கும் நிலைக்கும்

சா. துங்கமிருந்தவடி-வழகுக்குந்தூய்மைக்குஞ் சிறந்து-இந்தத்
தொல்புவியோர்கள்மகிழ்-கன்னனிவன்சொன்னமேகேள்மறந்து

எ. பொய்சொல்லாவிரதன்-கடலினைப்போல்வெகு சேனை-யுற்ற
புனிதநீளலாயுதப்-படையினுல்போர்வெல்மத யானை

அ. தையலர்மீதினி-லெங்நாளுந்தமிகொள்ளுஞ் சோமன்-நீள்
ஜகமெலாமிகமெச்சிய-இவன்றன்பல ராமன்

கூ. இந்நிலத்தினைமுன்னு-ளினிற்றன்னீரடியா லளந்தோன்-வீறும்
இமையோர்நடுங்கவிஸ்வ-ரூபமெடுத்துமுன் வளர்ந்தோன்

ய. பின்னுங்கஞ்சனிரு-விழிகளும்பிதுங்கவே முடித்தோன்-ஆயர்
பெருமனையினிலுதித்-தவன்பாம்பின்மீதில் நடித்தோன்

யக. இவன்றன்கள்ளமாய-னென்பதுமின்னிசைக் குயிலே-யிதோ
இங்கிருப்பவன்சாத்-தகியென்போனிணையிலா மயிலே

யஉ. அவன்சல்லியராஜ-னிவன்அடல்கொள்ளுஞ் சேரன்-மட
வனமேஅன்னேனீல-னென்றேயறைகின்ற சூரன்

யங. பகைவர்களுயிர்துடி-துடித்திடும்படிக்கொல்லுங் காலன்-இவன்
பாவையேமாயனுக்கவ-மரியாதைபண்ணுஞ்சிசு பாலன்

யச. மகிமைபெறுசக்ராயுதஞ்-செங்கைமருவியமு குந்தன்-ஓட
மாதேயிவன்சமர்-புரிந்திடவருசரா சந்தன்

யரு. பெண்கனியேயிவன்சோழன்-கீர்த்திபெறும் ரவிகுலத்தோன்-அவன்
பிரபலபாண்டியனென-நிதம்பேசும்புஜ பலத்தோன்

யசா. மண்டலம்புகழ்மேருவை-வில்லாவளைத்திடுங் கர்த்தன்-எதிர்
வரினும்போர்செய்ய-வருகுவானிவன்பக தத்தன்

## வந்த அரசர்கள் வில்வளைத்தல்.

விருத்தம் ருக.

மதுரமொழிக்கிள்ளைதுரோபதைக்குத்தோழி
மார்களரசரைக்காட்டியவர்க்குள்யாவ
னதிவிசையிற்சுழன்றிடுசக்கரத்திலெந்திர
மதைக்கணையாலெய்பவனுன்புருஷனென்னப்
பதுமையைப்போற்சிலவரசர்நெஞ்சில்மிக்க
பயத்தினைக்கொண்டாசனத்திலேயிருந்தார்
சிதைவறுகாரியமறியாச்சிலமாமன்னர்
திறப்பட்டார்வில்வளைக்கப்புறப்பட்டாரே.

ச. திபதை-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்-

கண்ணிகள்.

க. வில்வளைக்கிறேனென்று-சல்லியன்புலிபோலே
வீறியெழும்பித்தொடை தட்டியே-ராஜ
ரெல்லாரும்பார்த்திட-சொல்லுமவ்வில்லின்பா
லெய்திப்பெண்ணாசையாற் கிட்டியே

உ. இஷ்டத்துடனேயுயிர்க்-கொட்டியேயதைமெள்ள
இருகையினால்வாரி யெடுத்து-நாணி
தொட்டேற்றக்கூடிய-கஷ்டப்பட்டுமண்ணில்
துடித்துவீழ்ந்துதுய ரடுத்து

ங. நாலுபேர்நகைக்க-கேலிகொண்டோமென்று
நாணித்தலைகுனிந்து நடந்தான்-தனு
நூலிற்சொல்லியபடி-மேலுஞ்சராசந்தன்
னெடிக்குட்சிலையருகில் தொடர்ந்தான்

ச. தொடர்ந்துதன்புஜபலம் அடங்கலுங்காட்டவே
துள்ளிவிற்கயிற்றினைச் சார்ந்து-துடி
துடித்துத்தனதுபல்லைக்-கடித்துக்கொண்டிழுத்துஞ்
சூரன்சராசந்தன் சோர்ந்து

ரு. சுகங்கெட்டுவிரதமு-மிகக்கெட்டோமெனநெஞ்சந்
தூண்டிலில்மீனைப்போல் மெலிந்தான்-அந்த
முகில்வண்ணன்றன்னுடன்-தருவெஞ்சமரில்நின்று
முனைகொண்டபுகழ்கெட்டுத் தொலைந்தான்

சா. வானிடிபோலவே-மாநிலமதிர்ந்திட
மாகதனென்பவன் குதித்து-இந்த
ஈனவில்வளையாமற்-போனுரென்றவர்களை
யிழிவுகூறிமிகக் கொதித்து

எ. அத்தனுவினையுன்றிச்-சித்ரநாணியைமார்பி
னளவுக்கிழுத்தாண்மை யழிந்தான்-நாளும்
வெற்றியானையையொத்தோன்-முற்றும்பூனையைப்போல
வேமதங்குன்றியே யொழிந்தான்

அ. அந்தமூவருக்குத்தா-னிந்தவில்மகமேரு
அணுவெனக்கென்றுகை வீசியே-திகழ்
சந்திரவதனமின்னாள்-சுந்தரிபாஞ்சாலி
தன்பெருமையைமெச்சப் பேசியே

கூ. வருநீலனெடுவில்லை-யொருசாண்வளைத்தால்நாணி
மாட்டலாமெனும்படி வளைத்தான்-அப்பால்
பிரமித்தேயிடியின்முன்-னரவெனத்திகில்கொண்டப்
பேச்சுங்கைவீச்சும்போய்க் களைத்தான்

௰. தையல்துரோபதையெந்திர-மெய்தவன்றனக்குத்
தாரமென்றவளண்ணன் சொன்ன-போது
வெய்யமனந்தீயில்-நெய்விட்டவகைபொங்க
மேலுந்தன்முகங்களை மின்னச்

௰க. சூதுகொண்டிருந்த-காதகனுந்துரி
யோதனன்துணிவுற்று வில்லை-நோக்கி
ஈதொருபொருட்டோவென்-றேதிவில்வில்நாணி
யேற்றநால்விரற்கடைத் தொல்லை

௰உ. தன்னிவிருக்குதென்றே-யுன்னுமுன்னமந்தத்
தனுவினலவனுண்மை யொடுங்கி-ஒரு
கன்னிகைநகைத்திடச்-சென்மித்தோமென்றுளங்
கலங்கிக்கள்ளனைப்போ லொடுங்கி

௰௩. வயிறெரிந்துசென்றான்-புஜபலவான்கன்னன்
வந்துவில்லைக்கண்டு சிரித்து-நெடுங்
கயிலைமலையெடுப்போன்-பயனில்லாமண்கட்டி
களைத்தாங்கவரிதோவென் றுறைத்து

௰ச. நெடுநாணிமயிர்முனைக்-கடையுற்றால்வில்லினில்
நேர்ந்திடுமெனஎண்ணங் கொண்டு-மிகப்
படபடெனவளைத்தும்-நொடியிற்றிகைதிகைத்துப்
பார்மிசைவிழுந்தவன் புரண்டு

௰ரு. மணிச்செம்பொன்முடிசிந்தித்-துணைத்தோள்வலிகள்சிந்தி
மாதின்மேலாசையுஞ் சிந்திச்-சொலும்
இணையறுபுகழ்சிந்தித்-துணிவுஞ்சிந்திமனத்
திறுமாப்புஞ்சிந்தியே யந்திப்

௰சு. பொழுதிற்றுமரையென்ன-எழில்முகமிகவாடிப்
போனுன்பலரவ்வில்லைப் பார்த்து-மலர்க்
குழலாள்துரோபதைதன்-னழகும்பார்த்துமிகக்
குழைந்தாண்மையினைத்தாரை வார்த்து

௰எ. யோசனைதோற்றுமல்-நீசச்சமணர்கையி
லுழல்கின்றாசாது போலே-வெகு
மோசத்துக்குள்ளாக-வேசிக்கிஞேமென்று
மொழிந்தேகினர்கள்மென் மேலே

௰அ. இமிசைசெய்யெமனுக்குத்-தமிகொள்வில்லென்றுபே
ரிட்டோராஜன்வரு வித்து-அவர்
தமைக்கொல்லவேயொரு-நிமிஷத்திலுடன்பட்ட
சத்துருபாஞ்சாலன் சமர்த்து

௰கூ. நேத்திநேத்தியென்று-தூற்றினர்பலர்மேலும்
நெடியவில்லைப்பலர் புரட்டித்-தூக்கிப்
பார்த்துத்தேகமெல்லாம்-வேர்த்துமதமொடுங்கி
பயந்தவ்வில்உயிர்களைச் சுருட்டி

உ௰. வாரிவிழுங்குமினிக்-காரியமில்லைநாம்
வந்தவழிபோவதே நீதி-யென்று
தீரத்தெரிந்துகொண்டு-தூரநழுவிவிட்டார்
தெளிவுறவேதங்க ளோதி

உக. கனத்தில்மிகும்பிராமண-ரினத்தில்வந்திருந்த
காளைநிகரில்லாக்கி ரீடி-திட்டத்துய்
மனைநோக்கிநெடியவில்-லினைவேதியர்குலத்தோர்
வளைத்தாலப்பாஞ்சாலி நாடி

உஉ. தாட்டியமணமாலை-சூட்டுவாளோவெனத்
தடையில்லையென்றே விளம்பினன்-கேட்டுக்
காட்டில்வாழ்ஜெயசிங்கம்-நாட்டில்நேர்ந்ததெனக்
கர்ச்சித்துக்களிப்பிற் கிளம்பினன்

உரு. கிளம்பிராஜர்நாண-இளங்கொடிமகிழ்பூணக்
கினரவ்வில்வளைத்ததில் நாணி-நொடி
யளவில்மாட்டிச்சுழல்-கொளுஞ்சக்கரத்தெந்த்ரம்
அறுந்துவீழ்ந்திடவேதன் திராணி

உச. செலுத்தினன்பிராமண-குலத்தோர்யாவர்களுஞ்
சிந்தைமகிழ்வுடன் வாழ்த்தினர்-விண்
ணுலகத்தில்நிலையுற்ற-பலதேவர்கள்களித்தே
யோயாமலர்மாரி தூற்றினர்

உரு. பங்கயமலர்முகச்-செங்கனிதிரௌபதி
பார்த்தனுக்குமணமாலை சூட்டினுள்-எரி
வெங்கனலினில்வந்த-மங்கைபுண்யவதி
யெனச்சொல்லும்படிபுகழ் நாட்டினுள்
உசு. அக்கணமின்னுளைப்-பொற்கைத்தலத்திலேந்தி
அருச்சுனனனந்தம் ஆனன்-எட்டுத்
திக்கும்புகழ்துணைவர்-பக்கத்தில்வரவாத்தியம்
சிறந்துமுழங்கும்படி போனன்

## திரௌபதியின் மாலைபெற்றுக் குயவனகஞ்சேர்தல்.

விருத்தம் சமி.

புகலுந்திரௌபதியைவேதியர்கொண்டு
போவதைநோக்கியுங்கட்குப்
புகழுமுண்டோவென்றரசரைப்பார்த்துப்
பொருமையாற்சுயோதனன்விளம்பச்
சகலவேந்தர்களுஞ்சமர்செயநேர்ந்தார்
தருமறையோர்களுமெதிர்த்தார்
தனஞ்செயனவரைவிலக்கியேதன்மேற்
சரம்விடுகன்னனைப்பிளந்தான்
இகல்செயவந்தசல்லியன்றன்னை
யெலும்பெலாமுறிந்திடக்குத்தி
யெழில்மதவீமன்விண்ணிடையெறிந்தா
னிராசர்களமர்விடுத்தகன்றார்
அகமகிழ்வெய்தித்திரௌபதியுடனே
ஐவருங்குயவன்வீட்டிற்போய்
அன்னையேபிச்சைகொண்டுவந்தோமென்
றறைந்தனர்பொரசியுமென்றனளே.

## துருபதன் திரௌபதியின்க்ஷேமத்தைத்தெரியத் துஷ்டத் துய்மனையனுப்பியதற் கவன்சேதிசொல்லல்.

விருத்தம் சுக.

குந்திபுசித்திடுமெனவேயுரைத்தபின்பு
கோதைதிரௌபதிதனைப்பார்த்துளம்வேருரு
ளந்தவருத்தத்தையுதிட்டிரனொழித்தா
னைவரிடத்திற்பலராமனுமாயோனும்
வந்தகன்றார்துருபதன்றன்மகளின்க்ஷேம
மறைந்தறிந்துவரத்திட்டத்துய்மனைவிடுத்தான்
அந்தவகைதெரிந்துவந்தேதுருபதன்முன்
அடங்குவான்சேதிசொல்லத்தொடங்குவானே.

௩௪. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

சேதிதனைக்கேளையனே - அங்கேநடந்த
சேதிதனைக்கேளையனே.

அநுபல்லவி.

கோதிலாவன்புருக்கும் குயவன்வீட்டிலிருக்கும்
சேதி

சரணங்கள்.

௧. வல்லமாதவ னேர்ந்து-அங்கே
மகிழ்ந்தைவர்தாயைச் சார்ந்து
புல்லுங்கனிவு கூர்ந்து-வணங்கிப்
போனான்கைமிகத் தீர்ந்து
வில்வளைத்தோனும்போர்செய் தோனும்பிச்சைக்குநாடி
வேதியர்வீடுதோறும் போனாரொன்றாகக்கூடி
சேதி

௨. போனபின்சதுர் வேதம்-ஓதும்
புனிதர்வீட்டினில் நீதம்
தானுறுவோர்வெண் சாதம்-வாங்கிநற்
றாய்முன்வைத்தவள் பாதம்
தீனரெனப்பணிந்தா ரதையிரண்டாகக்கையால்
செய்வித்தோர்பங்கையொரு வனுக்கிடச்சொன்னாளன்பால்
சேதி

௩. மாமிசொற்றவ ராது-ஒருபங்கொரு
வனுக்கிட்டுப்புவி மீது
நேமத்தோரென்றே யோது-நால்வர்க்கோர்பங்கை
நிரவிப்போட்டபின் மாது
சாமியைப்பூசைசெய்யத் தருமச்சாதத்தில்மீதி
தனில்மாமியுண்டபின்பு தானுமுண்டாளோர்பாதி
சேதி

---

## வியாசர் திரௌபதியின் பூர்வகதையைத் துருபதனுக்குச் சொல்லல்.

விருத்தம் ௬௨.

பந்தமுடனிச்சேதிதிஷ்டத்துய்மன்
படித்தபின்பங்கைவர்குலந்தெரியவேண்டித்
தொந்தமுடனவர்கள்வரநால்வகைத்தேர்
துருபதன்விட்டான்தருந்தேரினில்வந்தன்னோர்

விந்தைமிகுதமதுருக்கொண்டார் கிரீடிக்கவ்
வேந்தன்மணஞ்செயுமெனத்தன்மன்தடுத்தான்
புந்திதுருபதன்மருண்டானவனுக்கின்பம்
பொருத்துவான்வியாசன்வந்துதிருத்துவானே.

ருடு. தரு-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

பாஞ்சாலனேநீகேளு நான் சொல்வதைப்
பாஞ்சாலனேநீகேளு.

அநுபல்லவி.

பாஞ்சாலாமேலோர்மொழிப் படிநேரும்விதிவழி
பாஞ்சா

சரணங்கள்.

க. உன்மகள் முற்பிறப்பில் நாளாயினியென்றோத
உதித்துமௌற்கல்லியனென் றுரைக்குமுனிக்கபேத
நன்மனைவியாகினு ளவளன்பினையவ்வேத
நாதன்சோதிக்கப்பெரு வியாதிகொண்டான்பிரக்கியாத
பாஞ்சா

உ. ஒருநாள்முனிகைவிர லழுகிச்சாதத்தின்மேலே
உற்றதைக்கண்டம்மாது ஒறுக்காமலொருக்காலே
பரிவுடனுண்டாளவன் கண்டுமகிழ்வினாலே
பாவைமுன்வடிவங்கொண் டான்மன்மதனைப்போலே
பாஞ்சா

ங. வடிவங்கொண்டமுனிவன் போகமிழந்திருந்த
மாதைப்பார்த்தென்னவரம் வேணுமென்றனங்கந்த
மடமயில்சென்மந்தோறும் பிரியாவரத்தைமுந்த
வாங்கியின்பத்தையடைந் திறந்தாள்யாவுமுணர்ந்த
பாஞ்சா

ச. அவளிறந்திந்திரசேனை யெனவேசெனனமேவி
அந்தமாமுனிவாழும் பதிசென்றுளின்பந்தாவி
இவள்போகந்தனையவ னுறுத்துக்கட்டுடன்சீவி
எறிந்துமாதவந்தன்னிற் பொருந்தினனவனாவி
பாஞ்சா

ரு. தையல்துயரமாகிப் புருடனைவேண்டிநெஞ்சம்
தளர்ந்தபின்தவஞ்செய்தாள் சிவன்றிருவுளக்கஞ்சம்
மெய்யன்பினுக்குருகி யேயிந்தப்பிரபஞ்சம்
மீதவட்கைவர்நாதரென்றான் யான்சொன்னேன்கொஞ்சம்
பாஞ்சா

## கலியாணச்சடங்குசெய்தல்.

விருத்தம் சங.

இந்தவகைதுருபதனைமனமுவந்தே
யெவருமதித்திடுவியாசமுனிவன்றேற்றச்
சிந்தையவன்மிகமகிழ்ந்துதனதுபுத்ரி
சிறப்புமைவர்தம்பெருமையாவுந்தேர்ந்து
மந்த்ரமறைமுகுந்தனுக்குமராஜருக்கு
மணவோலைவிட்டபின்சிங்காரந்தன்னைச்
சந்ததஞ்செய்வோர்க்குரைக்கஅவர்களன்பு
தரிக்கின்றாரெங்குமலங்கரிக்கின்றாரே.

ரு. திபதை-இராகம்-காம்போதி-சாப்புதாளம்.

### கண்ணிகள்.

க. வாசமிருந்தவண்ணப்-பச்சைப்பாளைக்கமுக
மரங்களும்வாழைகளும் நாட்டினார்-ஒளி
வீசுந்தம்பங்கள்நட்டுச்-சூர்யன்றேர்க்குதிரையை
விரைந்துசாடக்கொடிகள் மாட்டினார்

உ. மகரதோரணமிக-வரிசைவரிசையாக
மண்டலத்தோர்மதிக்கக் கட்டினார்-உயர்
சுகபரிமளவாடை-யஷ்டதிக்கும்போய்வீசச்
சுகிர்தகதம்பங்களைக் கொட்டினார்

ந. பொற்குடங்களைப்பந்தி-பந்தியாகவேவைத்துப்
புனிதமுத்துமாலைகள் சூடினார்-சூட்டி
கற்புள்ளபாஞ்சாலிக்-கொப்பெங்குமில்லையென்று
கனிந்தவர்மிகவுங்கொண் டாடினார்

ச. மாதர்புருஷரோடு-பிணங்கியெறிந்தரத்ந
மாலைகள்தனைவாரி வீசினார்-நெடு
மேதினிதிக்குங்கு-பேரன்செல்வத்தையு
மிகவுங்குறித்திழிவு பேசினார்

ரு. ரத்நமிழைத்திட்ட-தூண்களுக்கமைந்திடும்
நல்லுறைகளைமெல்ல நீக்கினார்-எங்குஞ்
சித்தத்தைச்செலுத்தாம-லந்தப்பொற்றூண்களிற்
சேர்ந்ததூசிகள்தன்னைப் போக்கினார்

சு. போக்கிமேலுஞ்சித்ரப்-பதுமைகளைநிறுத்திப்
புட்பச்சரங்கள்தொங்க விடுத்தார்-இந்தப்
பார்க்குள்நிகரில்லாத-நிலைக்கண்ணாடிகளையே
பட்சத்துடனெடுத்துத் தொடுத்தார்

எ. சந்தனத்தால்மெழுகி-நவரத்நப்பொடிக்கோலந்
தனையிட்டுப்பாலிகைகள் நிறைத்தார்-வெகு
விந்தைபெறுஞ்செம்பொன்னிற்-செய்தமலர்களெங்கும்
விளங்கும்படிக்குவாரி யிறைத்தார்

அ. உச்சிதமாணிக்க-விளக்குகளைத்துடைத்தே
ஒப்பில்லமாதர்தீப மேற்றினர்-சித்ரப்
பச்சைமயில்போற்சில மடவார்கடகக்கையிற்
பனினீர்களைமொண்டுமொண் டேற்றினர்

௯. வண்ணமிகுங்கல்யாண-பேரிகைமுழக்கியவ்
வானோர்செவிகட்கின்பம் புகட்டினர்-கமலக்
கண்ணன்செவ்வாய்வைத்தூதும்-வேணுநாதமுங்
கலங்கவீணைவாசித்துப் புகட்டினர்

௰. அருமைச்சங்கிதங்கள்-பாடிக்கந்தருவரை
யந்தரத்திற்பறக்க முடுக்கினர்-கல்லை
உருகச்செயுந்தும்புரு-நாரதரும்பிரமித்தே
உள்ளந்திகைக்கும்படி யொடுக்கினர்

௰௧. அன்னக்கூட்டமுமயிற்-கூட்டமும்போலமாத
ரம்பையர்நாணும்படி நடித்தார்-அங்கே
பின்னுஞ்சிலமின்னார்பாஞ்-சாலன்செய்தயாகம்
பெரிதுங்கைகூடிற்றென்று படித்தார்

௰௨. பூவைதிரௌபதிக்குந்-தருமராசனுக்கும்
பொற்குடத்தில்நீராட்டி மகிழ்ந்தார்-சொனு
மூவுலகத்தினை-விலையிடும்பட்டினால்
முழுதுந்துவட்டியன்பில் நெகிழ்ந்தார்

௰௩. கனமிகுபாஞ்சால-னனுப்பும்பலபூஷணங்
களையிருவர்க்குமலங் கரித்தார்-பூமி
தனிற்பெண்ணுருவும்பிள்ளை-யுருவமுமோரச்சினால்
தான்சமைந்ததெனவே விரித்தார்

௰௪. மேலும்நவரத்திந-மிழைத்தமண்டபத்தில்
விளங்கும்வேதிகையினி லிருத்தினர்-முத்து
மாலையொடுசண்பக-மாலையுமல்லிகை
மாலையுமிருவர்க்குப் பொருத்தினர்

௰௫. தௌமியர்வேத-முறைப்படிமாவிலை
தர்ப்பைசமித்துக்கொண்டு வந்தார்-மேலும்
நவிலுந்தருமனுக்குச்-செய்யுஞ்சடங்குகளை
நயந்தானந்தத்துடன்பு ரிந்தார்

௰௬. வேதத்தினெறிப்படி-ஓமாக்கினிமிக
விறப்பசுவின்நெய்யைப் பொழிந்தார்-பொழிந்து
தீதற்றபலசாந்தி-மந்திரங்களேயெல்லாஞ்
சிந்தைதனில்நாடியே மொழிந்தார்

௰௭. மறைவாணர்கடலொலி-போலவேமந்தர
மறையைவிருப்பமொடு துதித்தார்-தமி
ழறிவாணர்புண்யகதாப்-பிரசங்கங்களே
யன்பினுற்செய்தவர்கள் கதித்தார்

௰௮. பலவாத்தியமுழக்கொடு-தருமன்திருமங்கல்யம்
பாஞ்சாலிக்குத்தரித்துக் களித்தான்-முன்னுள்
உலகையளந்தமாய-னிந்தவைபோகந்தன்னை
யுளத்திற்கொண்டானந்தத்திற் குளித்தான்

௰௯. வனிதைதிரௌபதியுந்-தன்மராசனுமிக
மனத்திற்பரிவைப்பொ ருந்தினர்-பவளத்
தினில்முத்தைச்சேர்த்தாற்போ-லோமாக்கினியினிற்
செங்கையாற்பொரிவாரிச் சிந்தினர்

உ௰. மெல்லியுந்தருமனும்-அக்கினிவலங்கொண்டு
மிகக்கனிந்துளத்திற்றேன் பெய்தார்-அந்த
வல்லவீமன்கிரீடி-நகுலன்சாதேவனும்
மகிழ்பாஞ்சாலியைமணஞ் செய்தார்

உக. தூயகற்பகமலர்-களேக்கொய்துதேவர்கள்
சொரிந்தவர்கள்கண்களி கூர்ந்தார்-வேல்போற்
பாயும்விழிமின்னுளும்-நால்வருமருந்ததி
பார்த்துப்பால்பழமுண்டு தேர்ந்தார்.

---

## பாண்டவர் பங்கைக்கொடுக்கும்படி திருதராட்டிரனுக்கு விதுரன் முதலியோர் போதித்தல்.

விருத்தம் ௪௪.

தையல்திரௌபதிக்குமணமுடிந்தபின்பு
சதுரங்கசேனையும்பூமியுஞ்செம்பொன்னும்
ஐவருக்கும்பாஞ்சாலனீந்தானங்கே
யவரிருக்குஞ்சேதியைத்தூதர்களாற்கேட்டுத்
தெய்வவருளாமெனக்கண்ணில்லான்தேர்ந்தான்
தீயசுயோதனன்முதலோர்கிருபன்மற்றோர்
மெய்ப்மைகொள்ளவ்வீழியில்லான்முன்தம்பன்வீப
வீசுவாரவரவர்கள்பேசுவாரோ.

ருஎ. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

திருதராட்டிரன்முன்னே பேசுஞ்சங்கதிகளைத்
தீர்க்கமுடனேகேளும்.

அநுபல்லவி.

பரிவுடன்பாஞ்சாலியை ஐவர்மணம்புரிந்து
பாவுஞ்சேதியதனைத் துரியோதனன்தெரிந்து
விரைவிலுகிர்ச்சுற்றின்மே லம்மிவீழ்ந்தாற்போல்நேர்ந்து
மேலுமணியக்காரன் வயிறெனவேயெரிந்து
திருத

சரணங்கள்

க. தன்மகல்யாணஞ்செய்து-கொண்டோர்கள்நாடாளத்
தரமாமோவென அவன் குதித்தான்-கன்னன்
தரையினில்மண்பூனை-வேட்டையாடாதெனவே
தருக்கின்றசொல்லியுள்ளங் கதித்தான்
பின்னுமவரைப்போரில்-வெல்லாவிடில்நானுண்டும்
பிரயோசனமோவெனக் கொதித்தான்-அவப்
பிரக்கியாதியாமிதெனத்-திருதராட்டிரன்கேட்கப்
பீஷ்மனவர்நிலையை மதித்தான்
இந்நாட்டிற்பாதியவர்க் களிக்கும்படிகரைத்தான்
இடக்கைக்குவலக்கையே துணையெனவேயுரைத்தான்
திருத

உ. அதுநலமென்றான்கிருபன்-துரோணன்சுயோதனனைப்பார்த்
தவ்வார்த்தையோக்கியமென்று கூறினான்-கன்னன்
ஆகாப்பகையாளியைப்-பஞ்சாங்கங்கேட்டதுபோ
லாச்சுதன்னலமென்று சீறினான்
ததியிலிப்படிசொல்லும்-அன்பெவருக்குண்டென்று
தன்பேச்சினைவிடாமல் மீறினான்-பீஷ்மர்
தன்னைநோக்கித்ரோணன்-சிரித்துக்கன்னன்சொல்லினால்
தன்னிருவிழிசிவப் பேறினான்
இதுவேநேத்தியிவனைக் கரையேற்றுவாய்நீயென்றான்
யானும்பகையாளிநீ யொருவனேதோழனென்றான்
திருத

௩. மிகுகோபங்கொண்டிருக்கும்-நற்றுரோணரையங்கு
விதுரன்வெகுபரிவி னாலே-கண்ணில்
விரல்பட்டால்தறிப்பரோ-எனச்சொல்லியேதணித்து
விட்டபின்புவந்துமென் மேலே

சுகுணமுடையதிருத-ராட்டிரன்றன்னைநோக்கித்
தூயபாண்டவரொருக் காலே-வெகு
தொந்தமுடனேபாதி-நாடாளும்படிக்கிங்கு
சுகிர்தமிருந்திடுசெங் கோலே
அகமகிழ்ந்தளித்திடும் வகைசொல்லியேமுடித்தான்
அயனிணைத்திடிலாயுள் அரிதோவெனப்படித்தான்
திருத

## பாண்டவர்களையழைத்துக்கொண்டுவரும்படி விதுரனையனுப்புதல்.

விருத்தம் ௬௫.

திருதராட்டிரன்முன்னிவர்களிவ்வண்ணஞ்
செப்பினரவன்விதுரனைப்போய்ச்
சிறந்தஐவரைநீயழைத்துவாவென்றான்
தேர்மிசையவனுடன்சென்றான்
அரியவீட்டுமனுதியரும்ராஜர்களு
மவரவரிருப்பிடஞ்சார்ந்தார்
அளவிலாவஞ்சச்சுயோதனன்முதலோ
ரசருமகன்றனர்விதுரன்
விரைவொடுபாஞ்சாலன்பதியடைந்து
விளைந்தகாரியமெலாமுரைத்த
விதுரனற்குந்திதிரௌபதிஐவர்
விறற்றிட்டத்துய்மனுமாலுந்
தாமுறுசதுரங்கத்தொடுந்துரோணன்
தானுமற்றோரெதிர்செல்லச்
சகம்புகழஸ்தினபுரத்திற்குத்
தமியொடுவந்துசேர்ந்தனரே.

## தருமனுக்கிளவரசுபட்டங்கட்டுதல்.

விருத்தம் ௬௬.

வந்தஐவர்வீடுமனைக்கண்ணில்லானை
வணங்கியபின்பவர்களைந்துவருடமங்கு
சிந்தைமகிழ்ந்தேயிருந்தார்திருதராட்டிரன்
திருமுடிதன்மனுக்கணியநன்னாட்கொண்டு
தொந்தமொடுயாவரையும்வருவித்தானற்
சுகிர்தமிகுவியாசனன்னீராட்டினன்சீர்க்
கந்தமலர்விழித்தருமன்மிகுசந்தோஷ
சாரங்கொண்டான்செம்பொன்முடிசிரங்கொண்டானே.

௬௮. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

மகுடந்தரிக்கக்கொண்டானே-தருமராஜன்
மகுடந்தரிக்கக்கொண்டானே.

அநுபல்லவி.

திகழ்ஜேஷ்டனுத லாலே
சிங்காசனத்தின் மேலே
தருசூரியனைப் போலே
தவசுந்த்ரனொருக் காலே
மகுடந்

சரணங்கள்.

௧. காதிற்செங்கதி ரென்ன-ரத்நமிழைத்த
கனககுண்டல மின்ன
சோதிமயமாஞ் சொர்ன்ன-பூஷணமெழில்
துலங்குமெய்யினிற் றுன்ன
வேதவியாசர்தௌமி யருளங்களிக்கவே
வீறுஞ்சுசனமெல்லா மன்பினிற்குளிக்கவே
சீதளமலர்விழி கருணையைத்துளிக்கவே
திரிலோகத்திலுங்கீர்த்தி போய்ப்பரிமளிக்கவே
மகுடந்

௨. எங்குந்தன்மமே செழிக்க-அதனுல்மிடி
யிடியுண்டுபோய் விழிக்க
மங்களம்நாளுங் கொழிக்கத்-தேசங்களின்
வளமளகையைப் பழிக்க
மங்கையர்மயில்போலு மொருபுறம்நடிக்கவே
வட்டவெண்குடையொரு புறத்தினிற்பிடிக்கவே
இங்கிதமணிமுர சொருபுறமடிக்கவே
இந்திரபோகமிது வெனப்பலர்ப்படிக்கவே
மகுடந்

௩. மும்மழைமாதந் தேங்கத்-திஷ்டத்துய்மன்
முதலோர்களிப்பி லோங்கப்
பொய்மையென்பது நீங்க-அன்னைதனைப்
போல்யாவரையுந் தாங்க
இம்மாநிலந்தனையே யாள்கின்றராஜராச
ரெல்லாருஞ்சூழ்ந்தேயிரு மருங்கினிற்றுதிபேச
விம்முஞ்சங்கத்தொனிக்குத் திருமால்வெண்சங்கங்கூச
மின்னுந்தங்கப்பிரகாச மாதர்சாமரைவீச
மகுடந்

## கண்ணன் விஸ்வகர்மனால் இந்திரப்பிரஸ்தநகரமைத்தல்.

விருத்தம்-சஎ.

பொன்முடியணிந்ததன்மபூபதிநற்புகழுறப்பாதிநாடாளும்
பொருமையினாலேசுயோதனன்செய்யும்போதனையால்விழியில்லா
னிந்நிலத்தரசர்தமைச்சிலேவேடரெனமதித்திடுவதுபோல
எழில்பெறுமவர்காண்டகப்பிரஸ்தத்திருப்பதற்குரைத்தனனங்கு
மன்னியசதுரங்கத்துடனவருமாயனுஞ்சேர்ந்தனரிந்த்ரன்
வரவெழிற்றிருமால்நினைத்தனனன்னோன்மயனொடுதானும்வந்தடைந்த
பின்னர்தேவேந்த்ரனோர்நகர்படைக்கப்பேசுமம்மயனுடனுரைக்கப்
பிரபலமாகஒப்பிலாஇந்த்ரப்பிரஸ்தமங்கவன்படைத்தனனே.

கூகூ. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

உண்டாக்கினானேயிந்திரபிரஸ்தம்-விஸ்வகர்மன்
உண்டாக்கினானே.

அநுபல்லவி.

கண்டோர்கள்தம் பசிதீரக் கண்கள்ரெண்டுங் களிகூர
விண்டோதவொணுச் சிங்கார வேலைப்பாடி தெனச்சார
மிகுபுகழ்மாமுனி வரர்கள்துதிக்க
விந்தைபெறுங்கந் தருவர்மதிக்க
அகிலலோகமும்படைத் திடுமயன்விதிக்க
ஆகாதெனப்பலர் சிந்தையிற்பதிக்க
உண்டாக்

சரணங்கள்.

க. சோதிப்பிரகாசரத்நம்-வைடூரியமளவற்ற
சுடர்விடுபுட்ப ராகம்-வான
மீதிற்சந்திரன்போலு-முத்துகள்மாணிக்கங்
கோமேதகந்திரி லோகம்
பாதிவிலைகாணுத-மரகதம்பச்சைகள்
பவளமிவைய நேகம்-மிகத்
தீதறவேயெங்கும்-கிரணமயமாகவே
திகழுமிந்தவை போகம்
மேதகுகயிலாச பதிகொண்டாட
விண்ணவர்களும்நக ரழகினைநாடப்
பாதலகங்கையுடன் கழிநீர்கூட
பகர்மதிலண்டமுகட் டினைக்கிழித்தோட
உண்டாக்

உ. பைங்கிள்ளைமொழிமட-வார்கள்மயிலைப்போலும்
பாதநடனஞ்செய்யுஞ் சாலையும்-அவர்
தங்கட்கிசைந்திடுநல்-லாபரணமும்மரத்ந
கசிதகுந்தளப்பொன்னின் ஓலையும்
எங்கெங்கணுமிருந்து-வருமெளியோருக்கெல்லாம்
எடுத்தளிப்பதற்கெந்த மூலையும்-ஒளிர்
துங்கமிருந்ததிர-வியராசிகளும்வெகு
தூய்மைநிறைந்தவேதம் நாலையும்
இங்கிதமுறத்தேர்வோ ரசங்களுந்துன்ன
இணையறுதேவா லயங்களுமன்ன
மங்கலமுரசதிர் மேடையுஞ்சொர்ன
மகரதோரணங்களும் விதம்விதமாய்மின்ன
உண்டாக்

ஈ. மாடமாளிகைகளுங்-கூடகோபுரங்களும்
வகைவகையாக இலங்க-விண்ணில்
ஓடுஞ்சூரியன்தேரிற்-குதிரைகளிளைப்பாற
உயர்பசுஞ்சோலை துலங்க
நீடும்ராஜவீதியி-னழகினைக்கண்ட இந்த்ரன்
நெஞ்சம்பிரமித்தே கலங்க-இஷ்டம்
நாடியங்கேயிருந்த-தவ்வையோட்டங்கொண்டினி
நமக்கிடமில்லையென்று விலங்கத்
தேடரும்பொற்கொடிகள் விண்ணிடையசையச்
சிறப்புள அஷ்டலட்சு மிகட்கிடமிசைய
வேடிக்கையாகஐவர் வாழ்ந்ததிவிஜய
மேவச்சுயோதனன்றன் வயிற்றினைப்பிசைய
உண்டாக்

---

## நாரதர் சுந்தோபசுந்தர் கதையுரைத்தல்.

விருத்தம் சஅ.

எப்பொருளும்விளங்குமிந்திரப்பிரஸ்தந்தன்னி
லெழிற்றருமன்யாவரொடுமிருந்தேமுன்னஞ்
செப்பியமயன்றனக்குவிடைகொடுத்தான்
திருமாலிந்திரனவர்கள்பதிக்குச்சென்றா
ரொப்பறுநாதமுனிவனுதிட்டிரன்றன்பா
லுளமகிழ்ந்தேவந்தானங்கவன்பதத்திற்
பொற்புடனேப்பணிந்ததன்மன்மீதிலன்பு
பொழிகின்றான்முனிகதையைமொழிகின்றானே.

சமி. திரு-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

பல்லவி.

நான்சொல்லுங்கதையினைக்-கேட்கவேணுந்தன்ம-ராஜனேநீதானே

அநுபல்லவி.

ஊன்தின்னுஞ்சுந்தோப சுந்தரன்பையுற்றார்
உயர்தவஞ்செய்தார்மும் மூர்த்திகள்வரம்பெற்றார்
நான்

சரணங்கள்.

௧. வரம்பெற்றஅவ்விரு வோரும்-மேரு
மலையிடத்துந்தஞ் சாரும்
அரியநகரமொன்று நேரும்-படி
யமைத்துக்கரிபரிகள் தேரும்
திறமிருசேனையுங்கொண் டமரரைவருத்தினர்
தேவேந்திரனையுந் துயரத்திலிருத்தினர்
நான்

௨. இந்தச்சேதியினைமென் மேலே-பிரமன்
இடத்தினிலவரொருக் காலே
பந்தமுடன்சொன்ன தாலே-வேதன்
பரிந்தெழில்மாமயில் போலே
விந்தைகொள்திலோர்த்தமை வரநெஞ்சில்நாடினன்
மெல்லியவரைக்கொல்லும் வகையுரையாடினன்
நான்

௩. அவள்தீயர்களைத்தேடி வந்து-மெல்ல
அருகுற்றாளவர்கள் மகிழ்ந்து
குவிமுலையாளைநீ யிசைந்து-எங்களைக்
கூடுமென்றார்நகை புரிந்து
புவியில்வல்லவனேதன் புருஷனென்றுநின்றாள்
போர்செய்தவர்கள்மாண்டா ரவள்தன்பதிக்குச்சென்றாள்
நான்

---

## அர்ச்சுனன் தீர்த்தயாத்திரைபோய் உலூகியையும், சித்திராங்கதையையும், சுபத்திரையையு மணமுடித்து, அரவானையும், பப்புருவாகனையும் பெறுதல்.

விருத்தம் ௭௧.

இக்கதைதன்மற்குரைத்துநீர்பாஞ்சாலியினுடனெவ்வொருவருட
மின்புறவாழ்தல்முறைமையாமென்றுமியம்புமவ்வருடமாமுன்னே
பொற்கொடியொருவனிடத்தினிலிருக்கும்போதுமற்றோரெதிர்கண்டாற்
புகலுருமாறியாத்திரைதனக்குப்போவதும்நீதியென்றுரைத்துத்

தக்கநாரதன்சென்றுஒருமறையோன்றன்பசுக்குலத்தினைவேடர்
தாங்கொடுபோனுரெனக்கிரீடிக்குச்சாற்றவில்லவனெடுக்கப்போம்
அக்கணந்தன்மனிடந்திரௌபதிதன்னடியினைக்கண்டுடல்நடுக்குற்
றரியவிற்கொண்டப்பசுக்களந்தணனுக்களித்துடன்யாத்ரைபேகினனே.

சுக. தரு-இராகம்-கல்யாணி-சாப்புதாளம்.

பல்லவி.

விஜயன்புண்ணியதீர்த்த-யாத்திரைக்கேகிய-விந்தைதனைக்கேளும்

அநுபல்லவி.

திசைபுகழ்நாரதர் சொற்படியுருமாறிச்
சித்தந்தனிலேயள வற்றவானந்தமீறி
விஜயன்

சரணங்கள்.

க. கயிலையரணணியும்-பாகிரதியில்மூழ்கிக்
களிக்கும்போதுமின்னலைப் போலே-அங்கே
நயமுகசுந்தர-நாகலோகமங்கையர்
நடந்தெதிரில்வந்தார்மென் மேலே
ஜயகிரீடியவர்தம்மில் உலூகியென்பாளைநோக்கிச்
சிந்தையைத்தன்வசப் படுத்தாமல்மிகப்போக்கிச்
செப்பியஅம்மாது பின்செலவேபரிந்தான்
திருகில்லாமலவளை யெழில்மணமேபுரிந்தான்
விஜயன்

உ. அந்தமாதுடனுக-லோகத்தினிற்கொஞ்சநா
ளருச்சுனனிருந்தான் மாசூரன்-அரவான்
சந்த்ரோதயமெனப்-பிறந்தானவன்விருப்பிற்
சார்ந்ததேவேந்த்திரன் குமாரன்
வந்தவழியேசென்றப் பாகிரதியிலாடி
மலையரசன்வண்சாரல் நீர்குளித்தின்பம்நாடி
இந்த்ரன்மருவுங்கிழ்த் திசையதனிலேகினுன்
இசைந்தகளிந்தாநதி யதனிலுமூழ்கினுன்
விஜயன்

ந. திரிதண்டசந்நியாசி-யானபேரொடுபார்த்தன்
தீர்த்தங்களாடிச்சேஷ கிரியைச்-சார்ந்து
அரியகல்லாலடியிற்-கயிலையைக்கண்டுமுரு
கையன்வாழுந்தணிகை வரையைத்

திரமாப்பணிந்துதிரு    வருள்பொழியுங்காமாட்சித்
தேவியுறையுங்கச்சி    நகர்சேர்ந்தபின்கண்காட்சி
பரவியவேதகிரி    யினைச்சேவித்துமகிழ்ந்தான்
பகாருணையைப்பார்த்துக்    கனிந்துநெஞ்சநெகிழ்ந்தான்

விஜயன்

ச. மாலயனறியாத-ஆதிசிவன்மருவு
மகத்துவமுற்றசிதம்    பரமும்-இந்த
ஞாலந்தொழுவீரட்டஞ்-சிரங்கந்திருவெண்ணெய்
நல்லூர்சிறந்தஇந்த்ரா    புரமும்
சிலமுடனேகண்டு    சோரன்பதியிலுள்ள
தீர்த்தம்படிந்துபாண்டிய    ராஜன்பதிக்குமெள்ள
மேலுமன்னோருடன்சென்    றவனுக்காசிபுகன்றான்
வேந்தேகன்னியிற்றேய    நாடிநான்வந்தேனென்றான்

விஜயன்

ரு. பார்த்தன்சொல்லியசேதி-பாண்டியராஜன்கேட்டுப்
பரிந்துதேவமாதரன்    புற்று-முன்னே
பேர்த்துவந்தவன்மனை-தனில்வைத்தசோலையிற்
பிரியமாகவேஇட    மமைத்து
ஏற்றவிஜயனுக்கு    விடுத்தானல்லமுதுண்ண
இவனிருந்தஇடத்தின்    வழியாத்தோழியர்நண்ண
சீர்கொள்சித்திராங்கதை    சென்றாளிவன்மோகித்தான்
சிலைமதன்ரதிபோலும்    பிரியத்துடன்போகித்தான்

விஜயன்

சு. போகித்தவுடன்தனஞ்-சயனேரமாச்சிதுநீ
போகாவிடிலுன்மீதில்    நிந்தை-நேரும்
ஆகையால்நீயேகுவா-யென்றுந்தான்வெற்றி
யருச்சுனனெனவும்நீள்    விந்தை
நாகரத்திநம்நீயே    யென்றுமவளைக்கொஞ்சி
நயந்தனுப்பினனந்த    மாதுவிரகமிஞ்சித்
தோகைபோலுந்தோழி    மார்க்குச்சொல்லத்தொடுத்தாள்
சொல்லிப்பஞ்சணையினில்    மெய்களைத்துப்படுத்தாள்

விஜயன்

எ. இச்சேதியைப்பாண்டியன்-கேட்டவுடனேபார்த்தன்
எதிரினிற்றுனேபோய்க்கொண்    டாடி-நீ
உச்சிதமானன்றன்-மகள்பெறும்பிள்ளையை
உதவுவாயெனஎண்ணம்    நாடி

மெச்சுங்கிரீடியிசைந் — தவன்பெண்ணைத்திருமணம்
மேவினன்பப்புருவா — கனன்பிறந்தஅக்ஷணம்
அச்சுகுணபாண்டியன் — றனக்கர்ச்சுனனளித்தான்
அப்பால்மேற்கடற்புற — நதிகளினிற்குளித்தான்
விஜயன்

அ. ஆயும்நதிகள்தோய்ந்த-பின்புசுபத்திரையை
அக்கிரீடியேகல்யாண — மேவி-இன்பந்
தோயத்திரிதண்டமேந்தித்-துவாரகையிடத்தினிற்
றுலங்கியஅன்பர்கள் — சஞ்சீவி
மாயன்றனைநினைத்தான் — ஐயன்தேரேறிக்கொண்டு
வந்திம்மணம்நடக்குஞ் — சூதுமார்க்கத்தைவிண்டு
நேயமாச்சென்றுபின்கல் — யாணம்முடித்துவந்தான்
நெருங்குமிந்த்ரன்தேவர்க்கும்-விடைகொடுத்துநடந்தான்
விஜயன்

---

## அர்ச்சுனன் சுபத்திரையுடனே இந்திரப்பிரஸ்தஞ்சேர்ந்து அபிமன்னுவையும், இளம்பஞ்சபாண்டவரையும் பெறுதல்.

விருத்தம் ருல.

அங்குமணமுடிந்தபின்பார்த்தன்தேர்மீதி
லரியசுபத்திரையொடுவில்லம்புறுத்தூணி
மங்கலமாக்கொண்டேகப்பார்த்ததோழி
மாரிதைக்கூறிக்கூவக்காவலாளர்
சிங்கம்போலெதிர்மறுத்தாரவரைக்கிரீடி
சிறுகொசுகுபோற்றுரத்தியுதிட்ரன்மற்றோர்
பொங்கமுறஎதிர்வரக்கண்டன்பாற்கண்ணீர்
பொழிகின்றான்தன்பதிக்குளிழிகின்றானே.

சூ. திபதை-இராகம்-நாதநாமக்கிரியை-சாப்புதாளம்.

### கண்ணிகள்.

க. தேர்விட்டிறங்கிய-பார்த்தனேவலிற்சுபத்
திரையெழிற்பாஞ்சாலிதன் — பதத்தில்-வண்ணத்
தார்முடியுறப்பணிந்-தாள்திரௌபதியந்தத்
தையலைப்பார்த்துத்தன் — மனத்தில்

உ. அன்புற்றுநீபுத்-திரரைப்பெறுவாயென
அணைத்தெடுத்தாளிந்தப் — பூமி-தேவி
தன்னிலும்பொறுமை-மிகுத்தகுந்தியெனுஞ்
சற்குணவதியவள் — மாமி

௩. தனையுங்கிரீடியுடன்-வணங்கினளவளிவர்
சகலசம்பத்துமே மேவிப்-புவி
யினிற்சுகமாகஇரு-மென்றுள்பார்த்தனுமந்த
இளங்கொடியுமகிழ் தாவி

௪. மேலுங்குந்திதேவியைப்-பணிந்தாசீர்வாத
மேவிமாளிகைசேர்ந்தா ரந்தப்-பார்த்தன்
கோலச்சுபத்திரையைக்-கொண்டேகும்போதிற்சமர்
கொடுத்திளைத்துளமிக நொந்த

௫. நகர்க்காவலாளர்பேரி-யடித்தாரவ்வொலிகேட்ட
நாழிகையிற்பிலத்து வாரம்-விட்டுப்
புகழ்சிவன்திருவிழா-வினைவிட்டுநகரிக்குள்
பொல்லாச்சத்துருக்கள்தம் வீரம்

௬. செலுத்தநுழைந்தாரென்-றெல்லாரும்விரைவினிற்
சேர்ந்தார்பலராமனை மாயன்-நோக்கிக்
குலக்கொடிசுபத்திரை-தன்னைவிஜயன்தேர்மேற்
கொடுபோனானென்னஅத் தூயன்

௭. இருவிழிவடவைபோற்-சிவந்துபார்த்தன்றனை
இன்றைக்கேமாய்ப்பேனென் றெழுந்தான்-அந்த
நரிக்குளிப்பாட்டியை-நான்விடேனெனமிக
நவின்றுசேல்போற்றுள்ளி விழுந்தான்

௮. அக்கணத்தில்வெகு-சேனையுடனாசர்
அணிகொள்தேர்மீதினி லேறி-மகா
உக்கிரத்துடன்சென்றார்-பலராமனுஞ்செல்ல
உடனெழுந்தான்சின மீறி

௯. அதைக்கண்டமுகில்வண்ணன்-பலராமனைநோக்கி
யாதுங்கபடறியான் கிரீடி-சற்றும்
மதத்தினாலிக்காரியஞ்-செயஇல்லைசுபத்திரை
மாமன்மகளென்பதை நாடி

௰. சொந்தம்பாராட்டினா-னந்நியனிவ்வேலை
துணிந்துசெய்திடத்தலை பத்தோ-நான்
இந்தமட்டும்பொறுப்-பேனேபொறுப்பதற்கு
யான்றயிர்கடைகின்ற மத்தோ

௰௧. நாமெல்லாம்வெறுத்தேகி-னாலும்விஜயனெதிர்
நாடானன்றுஎண்ணிப் பாரு-வெகு
நேமமாக்கடைந்திடு-கிரையிற்புல்லாய
நெஞ்சினில்நினைப்போர்கள் யாரு

௰௨. அண்ணுமனம்பொறுத்-திடவேணுங்கோபத்தால்
அறுத்தேயெறிந்துவிட்ட நாசி-பின்னுந்
திண்ணமாச்சேருமோ-வென்றானவனகைத்துத்
திரிதண்டந்தாங்குஞ்சந்நி யாசி

௰௩. போலமாயவேஷங்-கொண்டுநமதுமனை
புகுந்துகற்புடையாளைக் களவு-செய்த
ஜாலவித்தைக்காரன்-தனைவிட்டுவிடிற்புகழ்
தானேஅன்னேனுமுன்ற னுளவு

௰௪. கொண்டுமின்னாள்தனைக்-கொண்டுபோனானெனக்
கோபித்தான்சந்நியாசிக் கொக்கு-போலும்
மிண்டுசெய்யுங்கள்ள-மாயனதற்குமேலும்
வேப்பிலையடித்தங்கவ னுக்கு

௰௫. சாந்தப்படுத்தியன்னே-னுடனாண்மனைதனிற்
சென்றான்விஜயன்றன் மேலே-அமர்
நேர்ந்திடப்போஞ்சேனை-திரும்பிவிட்டதுகரு
நீலமேனியனையன் பாலே

௰௬. வெல்லரும்பலராமன்-பார்த்துச்சுபத்திரைக்கும்
விஜயனுக்குமண முடித்து-வாச்
சொல்லமனமுவந்தான்-மாயன்மிகக்களித்துச்
சுகவாத்தியத்தால்திசை வெடித்துப்

௰௭. போகமுழக்கநால்-வகைச்சேனையோடந்தப்
புனிதன்இரதந்தனி லேகி-மகா
நாகரீகமுள்ள-உதிட்டிரன்முதலானோர்
நயந்தெதிர்வாஇன்ப மாகி

௰௮. இந்திரப்பிரஸ்தத்திற்-சேர்ந்துநன்னாட்கொண்டே
எத்தேசராஜர்க்கும் ஓலை-வெகு
தொந்தமுடனேபோக்கி-வருவித்திந்த்ராதியர்
சுபங்கூறும்படிசிறு நாலை

௰௯. ஒப்பிடப்போகாத-இடையாள்சுபத்திரைக்கும்
உயர்கிரீடிக்குங்கல் யாணம்-முடித்
துப்பலசேனையா-பாணஞ்சீதனந்தந்து
சொல்லுதற்கப்பிர மாணம்,

௨௰. மேவுஞ்சந்தோஷமுற்-றான்திருக்கலியாணம்
விபவத்துடன்முடிந்த மறுநாள்-சீர்
தாவியபலராமன்-வெகுசேனையுடன்ஐவர்
தம்பதியினில்வந்து நெடுவாள்

உக. விழியாள்சுபத்திரை-தனையுங்கிரீடியையும்
மிகநோக்கிமகிழ்ந்தானம் மாதும்-திரு
அழகினில்மிகுத்தகாண்-டீபனுஞ்சித்தமொன்
றாகிக்கலந்தாரெப் போதும்

உஉ. அத்தையபலபிமனைப்-பெற்றுளானந்தங்கொண்
டண்டர்கள்மலர்மாரி சொரிந்தார்-தன்ம
புத்திரன்களித்தான்சு-யோதனன்முதலானோர்
பொறுக்காமலவர்வயி றெரிந்தார்

உங. இணையில்லாஅபிமனை-மணிப்பொற்றொட்டிலிலே
ஏற்றிப்பலதிஷ்டிகள் கழித்தார்-அவன்
துணையடியழகுக்கு-மதனழகைச்சரி
சொல்லலாகாதெனப் பழித்தார்

உச. இளஞ்சூரியன்போலே-அபிமன்னன்வளர்ந்தனன்
ஏந்திழைதிரௌபதிக் கைந்து-மைந்தர்
களங்கமில்லாச்சந்திரன்-போலேபிறந்தார்கள்
காலங்களிற்சிறப்ப மைந்து

உரு. வீறியவசந்த-காலம்போலமைந்தரில்
வில்வித்தையிலுங்கல்வி தனிலும்-நாளும்
மாறுபாடுசெய்யும்-பகைவர்கள்கொண்டிடு
மதத்தைப்போக்கும்விதத் தினிலும்

உசு. சூரனபிமனென-விளங்கினான்குளிர்நெடுஞ்
சோலையினில்வசந்த காலம்-தன்னிற்
தீரமிகுந்திடு-விஜயன்திருமாலிவர்
தேவிமாருடன்மிகு சீலம்

உஎ. தங்கியஇந்திரப்-பிரஸ்தத்திலுற்றிடு
ஜனங்களுஞ்சூழவே சேர்ந்து-அங்கே
மங்கையர்சாமரை-வீசஇருந்தார்கள்
மறையோனெனவடிவஞ் சார்ந்து

உஅ. கடிதிற்றிருமால்கிரீடி-யிவரெதிர்வந்துதன்
கடும்பசிதீர்த்திட வேணும்-என்றான்
தடையில்லாமற்றீர்ப்போ-மென்றுரைப்பொருளுக்குஞ்
சாட்சியாகமிகத் தோணும்

உகூ. செயலுள்ளஅக்கினி-தேவனுனேயென்று
தெரிவித்தும்புராக்கர் நாக-லோகர்
நயமொடுவாழ்கின்ற-மனைகளுக்கிடமாகி
நாடுந்தட்சகனூர்நற் போக

௬௰. முறவாழ்வதுமன்றிப்-பலவகைமிருகமும்
உலவுங்காண்டவவனந் தன்னை-யான்
நெறியுடனேயுண்ணப்-புறப்பட்டாலிந்திரன்
நெடுமுகில்களையேவி யென்னை

௬௧. அவிக்கக்கங்கணங்கட்டிக்-கொள்ளுகிறேனென்றான்
அரும்பசிதாகமும் நீங்க-நான்
தவிக்கிறேனெனக்கிரீடி-யுனக்கக்காண்டவவனந்
தந்தேனிப்போதுபின் வாங்க

௬௨. வேண்டுவதில்லையென்றான்-மாளாஅம்புறாத்தூணிவில்
வெள்ளைப்புரவியோ டிரதம்-அவன்
பாண்டுபுத்திரன்கிரீடிக்-கீந்தானவன்பசியைப்
பார்த்தன்தணிக்கக்கொண்டான் விரதம்

---

## காண்டவதகனம்.

விருத்தம் ௫௧.

அக்கினிதேவன்கொடுத்தரதத்தின்மீதி
லருணனைப்போற்பாகன்சாரத்தியஞ்செய்யத்
திக்குகளெல்லாநடுங்கவிஜயன்செங்கைச்
சிலைவளைத்துவிடுசரத்திரளைையாலே
மைக்கடலுஞ்சுவறிடக்காண்டவவனத்தில்
வாழ்சீவராசிகளும்பிரம்மித்தேங்க
மிக்கவிரைவினிற்சென்றவ்வனமக்னிக்கு
விடுத்திட்டான்பசிதணியக்கொடுத்திட்டானே.

௪௩. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

பார்த்தன்காண்டவவனம்-அடுத்தானே-அக்னி
பகவானையதிற்போக விடுத்தானே.

அநுபல்லவி.

ஏற்றஅம்புறாத்தூணி சேர்த்துச்சிலையில்நாணி
கோத்துச்சங்கபாணி பார்த்துமகிழுந்தராணி
கொண்டுகண்களை இமைக்கும்போதினி
லண்டுவெண்பரி ரதத்தின்மீதினில்
பார்த்தன்

சரணங்கள்.

க. இந்திரன்காவல்மென் மேலே-பூண்ட
அந்தவனமொருக் காலே
முந்தக்கயிலேயீச ஞலே-முப்புரஞ்
செந்தூளெழுந்தது போலே
வெந்துவெம்பரிசுற்ற விள்ளுமகிமைபெற்ற
மந்திரமுனிவர்சித்த மயங்கஅருமையுற்ற
மரங்கள்வகைவகை-யெரிந்துகிளேயொடு-முறிந்து திசை திசை வெடிக்க
உரங்கொள்நிருதரை-வளேந்தபுகைவழி-நுழைந்துநமனுயிர் பிடிக்க
நிறங்கொள்பறவையின்-குலங்கள்குடல்வெளி-புரண்டுகிளேயொடு துடிக்க
வரங்கொளமார்கள்-விலங்கநெடுமலே-சரிந்துவிழஅழ லடிக்கச்
சிரங்கள்குழைந்தர வினங்கள்சாகவே
நெருங்குமிருகங்கள் சுருண்டுவேகவே
பார்த்தன்

உ. எங்குஞ்சுவாலே யளாவத்-தட்சகன்
இங்குய்யும்படிமழை மேவ
மங்குலேயிந்திர னேவ-விட்டுத்
துங்கவெள்ளானேயிற் ருவ
அங்கந்தமுகிலினம் அன்னவன்தன்மனம்
பொங்கவந்தக்ஷணம் பொழிந்துநிற்குமுனம்
சங்கையற்றிட-விஜயமேவிய-சரங்களணியணி சிறக்க
எங்குந்தட்சக-னெனநல்வானவ-ரிடங்கள்தொறுமொலி பிறக்க
பங்கமற்றிடும்-அசுவசேனனே-விழுங்கியெழும்அனே யிறக்கத்
தங்குபுத்திர-னரியவால்தனே-யிழந்துதுயர்கொடு பறக்கச்
செங்கைதொட்டிந்த்ர னதையெடுத்திட
வங்கையுற்றங்கு கணேதொடுத்திடப்
பார்த்தன்

ந. சோனேமேகம்பொழிந் தோய-சின
மானஉம்பர்படை தேய
வானிறைகொண்டேகுந் தீய-அஸ்வ
சேனன்தன்வாலது போய
ஊனத்தைமிகநாடி யுயர்பகையினேக்கூடி
தானகன்னனேத்தேடி தான்சேரஅமாடிப்
பானுஇனமுற்றும்-வெட்கச்சீர்கொள-பல்லுடைந்துரத்தங்கொப் புளிக்க
மானழிகும்அஷ்ட-திக்குப்பாலகர்-குழைந்துசித்தந்தத் தளிக்க
ஞானமுறுசத்த-முக்யச்சீர்வசு-முனிந்திளேத்தம்பிற் குளிக்க
மேனிதுளேபட்டு-ருத்ரர்க்கேதலே-பிளந்துறக்கம்பெற் ருெளிக்க
ஈனமுறயிந்திரன் கொடிவிழுந்திட
வானிலுறுகங்கை கொதியெழுந்திட
பார்த்தன்

## அர்ச்சுனன் காண்டவதகனஞ்செய்து, இந்திரப்பிரஸ்தஞ்சேர்தல்.

விருத்தம் ருஉ.

ஜயகிரீடியினுலிந்திரன்கொடிபோய்த்
தேவர்களோடுவிண்சார்ந்தான்
திகழும்வெண்சங்கந்தனஞ்சயன்ஞெனித்தான்
செப்புமக்காண்டவவனத்தில்
மயனுறையகத்தைப்பார்த்தன்வெஞ்சாங்கள்
வளைந்ததைத்தகிக்கவேநெருங்கி
வருதல்கண்டவனர்ச்சுனன்சரணடைந்தான்
வனமெலாமக்கினிவிஜயன்
தயவினுலுண்டுபசிதணிந்தன்னேன்
றனையுமாயவனையும்வாழ்த்தித்
தான்மிகக்களித்தானுலகெலாமதிரச்
சங்குபேரிகையொலிமுழங்கப்
புயபலவிஜயன்மாயனற்றரும
பூபன்மற்றேரெதிர்கொள்ளப்
புகழ்பெறுமெழில்சேரிந்திரப்பிரஸ்தம்
போயுளமகிழ்ந்திருந்தனரே.

---

## ஆதிபர்வம்-முற்றிற்று.

---

பாயிரம் க-இ, விருத்தம்-ரு. தருக்கள்-ரு. வெண்பா-உ.

———:( * ):———

ஆதிபர்வம்-விருத்தம்-ருஉ. தோடயமுள்பட-தருக்கள்-ருஎ. திபதைகள்-சு.

---

ஆ பாயிரம் க-இ-ம், பர்வம் க-இ-ம், கூடிய வெண்பா உ.

விருத்தம் ருரு. தருக்கள் சம. திபதைகள் சு. ஆ ரு.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---



ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

இரண்டாவது

# சபாபர்வம்.

## கண்ணன் துதி.

விருத்தம் க.

ஆழ்வார்களகப்பொருளே-அம்புயத்தாளகப்பொருளே-அனந்தங்காலம்
வாழ்வார்களானசிரஞ்-சீவிகளின்கண்மணியே-மதிவைகுந்தம்
சூழ்வார்கள்சுடரொளியே-நித்தியசூரியர்க்குமுனந்-தோன்றிநிற்கும்
வாழ்வானமுச்சுடரே-முப்பொருளேநின்மலர்த்தாள்-வழுத்துவோமே.

## முருகன் துதி.

—: (*) :—

விருத்தம் உ.

அரியசதுர்வேதத்தினுடன்-ஐந்தாம்வேதமெனவிளங்கத்
தெருள்சேர்வியாசமுனியுரைத்த-சீர்மேவியநற்பாரதத்தில்
உரிமைமிகுத்தசபாபர்வ-முலகிலுணராமிகுசிறியேன்
பரமகுருவாமுருகனடி-பணிவேன்சொல்லத்துணிவேனே.

## மயன்சபாமண்டபம் அமைத்தல்.

விருத்தம் ந.

அரியதேவேந்த்ரன்முதலோர்விண்சேர்ந்தார்
அசுரமயன்அர்ச்சுனனாற்பிழைத்ததெண்ணித்
தருமனுக்குவிடபருவன்திறையாக்கொண்ட
தாழ்விலாநவமணிகளிந்துவென்னும்
ஒருதடத்திலிருக்குதென்றானுதிட்ரன்கேட்டே
யோதுமறுபதுலட்சங்கிங்கராலே
பிரியமுடன்வருவித்தான்மயனுள்ளன்பு
பெய்கின்றான்மண்டபந்தான்செய்கின்றானே.

க. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

சபாமண்டபஞ்செய்தான்-ராட்சதமயன்
சபாமண்டபஞ்செய்தான்.

அநுபல்லவி.

குபேரனொடுதுதி கூறுங்கைலாசபதி
தபோதனர்களதி சயங்கொள்ளச்சேடன்மதி
தன்னாலளவது சொலவரிதென்னப்
பொன்னாடதனிலு மொளியதுமின்னச்

சபாமண்ட

சரணங்கள்.

க. மேதகுசெம்பொன் னாலே-சுவர்செய்து
மிளிர்மரகதத் தாலே
தீதில்லாமல்மென் மேலே-தூணிறுத்திச்
சிறந்திடவொருக் காலே
ஓதும்பவளங்தைத்தே உத்ரங்களையமைத்து
மாதிவ்யமானமுத்து மாலையணிவகுத்து
வகைவகைரத்நக் கமலமிலங்க
அகமகிழ்சித்ரப் பதுமைதுலங்கச்

சபாமண்ட

உ. இருளினைமிகச் சாட-ஆயிரங்கண்ணால்
இமையாமலிந்த்ரன் நாடத்
திருமால்மகிழ்வு கூட-ஆதவன்றன்
தோதுவிண்ணி லோட
அருமைகொள்அழகாக அமைத்திட்டஅதிவேகப்
பரிகளடிகள்நோகப் பாய்ந்துவிரைவிற்போக
வரும்வழிதெரியாம லுறுகண்கள்கூச
மரகதவொளிசூரிய னுடலெங்கும்வீசச்

சபாமண்ட

௩. சதுமுகன்திரு வுள்ள-முழுதுங்கொண்ட
தனிமண்டபம்போல் மெள்ள
நிதங்கட்டினாலும் எள்ளத்-தனையளவும்
நிகராகாதென விள்ளச்
சிதைவிலாஎழில்வர்க்கத் தேவர்மிகப்பிரம்மிக்க
மிதமற்றிடுமாணிக்க விளக்கின்பிரகாசமொய்க்க
புதுமதிவெட்கியே நாள்தோறுந்தேயக்
கதிர்விடுவச்சிர நீள்சுடர்தோய்ச்

சபாமண்ட

## நாரதர் தேவசபையைப் புகழ்ந்துரைத்தல்.

விருத்தம் ௪.

மண்டபஞ்செய்திட்டமயன்வீமனுக்கு
வண்கதையுநீடுசங்குமகிழ்வாலீந்தான்
பண்டுலகந்தனையுளந்தோனவர்மண்ட
பத்திலிருந்தார்முனிநாரதனங்கெய்தக்
கண்டிடுபாண்டவர்பணிந்தார்மண்டபத்தைக்
கண்டமுனிதேவர்சபைநிகரோவென்று
விண்டனனதைச்சொலெனத்தருமன்கேட்க
வீறுவான்முனிமகிழ்ந்துகூறுவானே.

௨. தரு-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

நாரதன்தன்மனுக்கு-தேவர்சபையழகை-நயமொடுசொல்வானே

அநுபல்லவி.

சீரிலகியரத்நக் குண்டலந்தனைப்பூட்டுஞ்
சிவன்திருச்செவியிலின் னிசையமுதத்தையூட்டும்
நாரதன்

சரணங்கள்.

க. ஒருநூறுயோசனை யகலநீட்சிமுந்நூறு
யோசனையுயர்ச்சியஞ் ஞூறுயோசனைவீறு
பெருமையுளமண்டப முண்டதிற்கலைதேறு
பிரபலஅமரர்கள் சூழநல்லமுதூறு
கிரணமதிவதநி யிந்த்ராணியுடனன்று
கிளர்சிங்காசனத்திலிந் திரன்மேவுவானென்று
நாரதன்

௨. அங்கிரிச்சந்த்ரன்முத லரசர்கள்வெகுபேரும்
அகமகிழ்வதுமிந்த்ரன் மண்டபத்தினைச்சாரும்
சிங்காரமுறுகுபேரன் தன்மண்டபச்சீரும்
ஜெகத்திற்பொன்னவரத்நந் தானம்வழங்கிநேரும்
விங்களமில்லாமற் சூழவிமான
மீதிற்குபேரனுறை வானெனஞான
நாரதன்

௩. நிகரில்லாதவுப நிடதம்நல்விதியாசம்
நிதமும்பயிலச்சரஸ் வதியுடனேவுல்லாசம்
மிகவேவிளங்குஞ்சத கோடிசூரியப்பிரகாசம்
மேவுமண்டபத்திடை மனந்தனில்விசுவாசம்

அகலாமல்மனுமுத லோர்கள்முனிவரினம்
அமையப்பிரமன்கமலா சனத்திலிருப்பானென
நாரதன்

௪. கொடியநீள்பாசமெழிற் செங்கரத்தினிற்கொண்டு
கொலைசெயுங்கிங்கரர்கள் நெருங்கிநாளுந்திரண்டு
அடிதொழும்படியிணை யில்லாதநெடுந்தண்டு
அழகியசூலங்கட்கந் தரித்துப்பாவத்தைப்பண்டு
திடமொடுசெய்தோரைத் தென்பாலினில்மெல்லச்
சேர்க்குங்கூற்றனிடம்பாண் டிருக்கிறானெனவல்ல
நாரதன்

---

## நாரதர் பாண்டவரை ராஜசூயஞ்செயநியமித்தலும், கண்ணன் பீமார்ச்சுனருடன் கிரிவிரசநகரஞ்செல்லுதலும்.

விருத்தம் ரு.

நாரதமுனிவன்தேவர்கள்சபையி-னல்லழகுரைத்துதிட்டிரற்கு
நவிலரும்பாண்டுதன்னைவெங்கூற்ற-னற்றிசையதுதனிற்கண்டு
சீருறுராஜசூயயாகத்தைத்-திரிசங்குதன்பிதாமுன்னாட்
செயும்வகைநீசெய்தவனைவிண்ணாடு-சேர்த்திடும்படியுரைத்தனனென்
றூரமுதெனவோதிக்கடந்தான்மா-லதுநலமெனச்சொலிமேலும்
அருநரமேதயாகமேமுடிக்க-அரசரைச்சிறையினில்வைத்த
வீரனாஞ்சராசந்தனுக்கெமனிங்கு-வீமனாமெனத்தன்மனிசைந்தான்
வேதியர்வேடங்கொண்டவன்பதிக்கு-வீமன்மால்விஜயனேகினரே.

---

## சராசந்தனும் வீமனும் மல்லுத்தம்புரிதல்.

விருத்தம் சா.

போகுமிந்தமூவர்சராசந்தனுக்குப்
புனிதமுறும்ஆசிசொலும்பொழுதிற்றேள்மேல்
வேகமொடுவிற்றழும்பேதென்றான்மாயன்
மெய்கூறப்பதினெட்டுத்தரம்நீதோற்றாய்
ஆகட்டுங்கிரீடிபையலெனநகைத்தே
அம்பொன்முடிமைந்தனுக்குச்சூட்டிப்போர்க்கு
நாகரிகவீமனைவாவென்றான்கோபம்
நாடினரிருவருங்கைகூடினரே.

௩. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-அடதாளசாப்பு.

பல்லவி.

சராசந்தனும்-வீமனுங்குதிகொண்டு-சண்டைகொடுத்தனரே

அநுபல்லவி.

இராஜர்மெச்சுங்கிருஷ்ணன் துவாரகாபுரிசேர
இணையிலாஅமர்செய்து துரத்தியஅதிசூர
சராசந்தனும்

சரணங்கள்.

௧. மந்த்ரகிரியும்விந்த-மலையுமெதிர்த்திடு
வகைநேர்ந்துபற்களைக் கடித்தார்-கடித்
தெந்தவிதத்திலும்-மொருவனையொருவன்கொன்
றிடும்படியெண்ணங்கைப் பிடித்தார்
அந்தரத்திடிபோலே-கர்ச்சித்துமிகுந்த
கோபாவேசமோங்கியே நடித்தார்-நடித்துச்
சந்திரன்ஒளிக்குமுன்-மின்மினிப்பூச்சியோ
சரியென்றுண்மைபேசி யிடித்தார்
சிந்திரத்தங்கள் நிலத்திற்றேயவே
சேடனுயிர முடிகள்சாயவே
விந்தைபெறும்அஷ்ட கஜங்களோயவே
வெருவிச்சூரியன் கடலிற்பாயவே
சராசந்தனும்

௨. தோளொடுதோள்களை-வெம்புலிபோற்றுவித்
துள்ளிக்கிளம்பியே தாக்கினர்-தாக்கித்
தாளொடுதாள்களைக்-கட்டிமண்டலந்தத்
தளிக்கத்தவிடுபொடி யாக்கினர்
மீளவும்அதைவிட்டு-விக்கிரமத்துடன்கிட்டி
விரைந்துசெங்கையினுற் றூக்கினர்-தூக்கிக்
காலையரிருவருஞ்-சலித்திளையாமலர்
காசத்திற்சென்டுபோற் போக்கினர்
தேளின்விஷமென வயிரமேறியே
சிரங்களுடைபடச் சினந்துமாறியே
மூளுஞ்சமர்செய்யு முறைமைகூறியே
முஷ்டியுத்தமுங் கொடுத்துவீறியே
சராசந்தனும்

௩. பதினைந்துநாட்சண்டை-செய்யுஞ்சராசந்தன்
பலத்தினைமாருதி யறிந்தான்-அறிந்து
மதயானையெனவுதைத்-தானவன்வேரற்ற
மரம்போல்விழுந்துள்ள முறிந்தான்
அதிவேகத்தாற்சரா-சந்தன்வீமனைக்கொல்ல
ஆலோசனைநெஞ்சிற் செறிந்தான்-யாரும்
எதிரில்லாநரசிங்கம்-போல்வீமன்மிண்டனை
யிருகூறுகப்பிளந் தெறிந்தான்

சிதைந்தவுடலொன்றுச் சேர்ந்துதிசையெட்டும்
திகைக்கக்கிளம்பிறு னவனைச்சரிக்சட்டும்
விதத்தைமால்செய்யுங் குறிப்பையெதிர்க்கிட்டும்
வீமனுற்பின்னும் பிளவுபடுமட்டும்

சராசந்தனும்.

---

## அருச்சுனனுதியர் திக்குவிஜயஞ்செய்தல்.

விருத்தம் எ.

வயவீமன்கொன்றசராசந்தன்பெற்ற
மைந்தனுக்குமுடிசூட்டிச்சிறையில்வாடுஞ்
ஜெயஅரசர்தம்மைவிடுத்தன்னேன்றந்தை
தேர்மீதிலவன்பறித்ததனமுங்கொண்டு
நயவுதிட்ரனெதிர்கொளமால்வீமன்பார்த்த
னற்பதிசார்ந்தார்பொருட்குக்கிரீடிதானும்
அயர்வறுமூவருந்திசையைவெல்லல்நன்மை
யாமென்றுன்தருமனன்பாற்போமென்றுனே.

க. திபதை-இராகம்-அடாணு-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. சதிர்பெறுராசசூ-யத்தைமுடித்திடத்
தளத்துடன்மேற்குத்திக்கை நாடியே-மாருதி
கதித்துச்சென்றுன்கிரீடி-வடதிசையேகினுன்
கனங்கொள்கிழ்த்திசையினைத் தேடியே

உ. நகுலன்போனுன்சக-தேவன்றென்றிசையினை
நண்ணினுன்மாலெனச்சொல் நாமன்-யாரும்
புகழுந்துவாரகையிற்-சேர்ந்தனன்வாயுதேவன்
புத்திரனுமத வீமன்

ங. இந்திரன்மதித்திட-அங்ககலிங்கம்
எழிற்குலிங்கம்நெருங்கி வீறியே-அமர்
தந்தமன்னவர்தங்க-ளாயுதத்தினையுதிர்
தவிடுபொடியாகவே சீறியே

ச. அடித்தஅடியிற்றலை-பிளந்துரத்தங்கள்பொங்கி
யாறுபோலோடச்செய்யும் வீரம்-கண்டு
இடிக்குமுன்அரவென-நடுங்கிமன்னவரெலாம்
இணையற்றிடுபர்வதா காரம்

௫. எனச்செம்பொன்ராசியைக்-கொடுவந்துமதவீமன்
இருதாளில்வைத்தார்பல ஆனை-மீதிற்
கனிவாகஏற்றிக்கொண்-டதிவிரைவினில்வீரங்
காட்டத்தன்னுடன்வந்த சேனை

௬. யொடுதன்பதியடைந்தான்-விஜயன்றன்சேனையொ
டுலகங்களதிரமென் மேலே-கதிர்
விடுமிளஞ்சூரியன்-போல்வடதிசையுற்று
விளங்குநல்லீசனுருக் காலே

௭. வாழ்கயிலாசத்தி-லிருப்போரையுமிமய
மலையிலிருப்போரையு மாட்டியே-அங்கே
சூழ்நற்கந்தருவர்கின்-னரர்திறையிடும்படி
துடித்துத்தன்புஜபலங் காட்டியே

௮. ஏமகூடம்விந்தம்-நிடதநல்மந்தரம்
இலகுகந்தமாதன கிரியும்-சிறப்
பமையும்நீலமலை-சைலமலையும்இன்ன
மரியமலையிலுள்ளம் பரியும்

௯. உந்தஅந்தராதி-பரும்நெஞ்சங்கலங்க
ஒடுக்கிமேருகிரிக்கப் பாலும்-தாவி
நன்னயமாயங்கே-யுறையுங்குபேரனும்
நடுங்கச்செய்தேதிக்குகள் மேலும்

௰. இவ்வண்ணஞ்சென்றுதன்-வீரத்தால்ஜயக்கொடி
யெழில்பெறநாட்டிக்கோடித் தேரும்-சொலு
மெவ்வுலகிலுமிலா-வெம்புரவிகள்கோடி
யானைகள்கோடிகளி கூரும்

௰க. நவமணியொன்பது-கோடியும்பொன்களும்
நற்கிரீடியெய்திநகர் கிட்டினன்-ஓதும்
அவனிலுமெண்மடங்கு-கீழ்த்திசையில்நகுலன்
அரும்போர்செய்யக்கங்கணங் கட்டினன்

௰உ. கட்டியேபோர்செய்யு-முக்ரத்துக்கஞ்சிராஜர்
கப்பணம்வாரிவந்தே யளித்தார்-நாளும்
இட்டுணுலோபர்பொரு-ளொளிப்பதுபோற்சில
எழில்முடிமன்னரஞ்சி யொளித்தார்

௰௩. மாளவதேசந்திக்குகள்-சூரியசந்திரர்
மறைந்திடத்தூள்பறக்க மேவியே-நேர்ந்து
நீளமர்செயுமண்ட-லீகர்வெயிற்புழுப்போல்
நெளிந்தோட்டங்கொள்ளக்கணை யேவியே

௰௪. சாடினன்வருணனுங்-திகைத்தான்மற்றராஜர்
தனங்களைவாரிவாரி வந்து-நெஞ்சில்
நாடருமேருமலை-போற்குவித்தாரதை
நகுலன்கைக்கொண்டிதய மகிழ்ந்து

௰௫. ஒப்பறுதுவாரகை-சேர்ந்தங்கைமருவிய
உயர்மாதவரைத்துதி விண்டு-லட்சுமி
எப்போதுமருவிய-இந்திரப்பிரஸ்தத்தி
லிருக்குந்தன்மராஜனைக் கண்டு

௰௬. வணங்கினன்சதுரங்கத்-துடனேதென்றிசையினை
மதிக்குஞ்சாதேவன்மிக வென்று-வெகு
பணங்கொண்டுவரஏகி-னனவன்வீரமெண்ணிப்
பார்த்தாலிதயம மூன்று

௰௭. அத்திசைநடுவுறு-மன்னர்மேற்போர்செய்தா
னவர்களாண்மையடங்கி யிளைத்து-மகா
பத்தியினற்கட்டுங்-கப்பணத்தொடுநீலன்
பதினுழைந்தான்வெஞ்சினங் கிளைத்து

௰௮. அங்கருங்காவல்பூண்ட-அக்கினிசேனைகள்மே
லடர்புகையாய்ச்சூழ்ந்தானப் போது-ஜய
துங்கன்சகாதேவன்-சந்திரமுகவாளியைத்
தொடுத்துவிட்டானக்கினி மீது

௰௯. நெஞ்சமன்னேன்கலங்கி-னனுயர்நீலனெனும்
நிருபன்பிரகாசஞ்செய்யும் நீலம்-ரத்ந
முஞ்சொர்ன்னமுந்திறை-யளித்தான்விந்தகிரி
முதல்நெடுங்காட்டையலங் கோலம்

௨௰. ஆக்கியேசென்னிநாடு-கன்னிநன்னடுகொங்க
ணிநாடுசேர்ந்துதிறை வாங்கினன்-மிகும்
ஊக்கத்தினன்மகத்-துவஅகத்தியமுனி
யுறுமலையிற்சேனையோ டோங்கினன்

௨௧. ஓங்குஞ்சாதேவன்கடோர்க்-கஜன்வரயெண்ணினன்
ஓர்நொடிக்குளாகஅவன் வந்தான்-அவனைப்
பாங்காச்சாதேவன்தென்-னிலங்கைக்கனுப்பினன்
பறந்தவனங்கேயமர் புரிந்தான்

௨௨. சூரனைக்கண்டவிபீ-ஷணனீயாரென்றனவன்
தூயபாண்டுமன்னன்தன் பேரன்-மிகுத்த
வீரனுகுமிடும்பன்-மருமகன்வாயுபுத்ரன்
வீமன்றனக்குநான்கு மாரன்

உங. நீதிசேரென்பெரிய-தந்தையாந்தன்மராஜன்
நிகரறுராசசூய யாகம்-செய்ய
ஓதியநாற்றிசைக்குஞ்-சோதரர்நால்வரை
யுவந்தனுப்பினனதி யோகம்

உச. உறுமுன்றனன்னகர-மடைந்தேனென்றனந்த
உத்தமன்களித்தெழுநற் சொர்ன்னப்-பணிகள்
நிறையன்பினுலுதவி-ஞன்கடோர்க்கஜனதை
நிகரில்சாதேவன்மகிழ் துன்ன

உரு. வைத்தடியினிற்பணிந்-தான்சகாதேவனதை
மன்னவர்மன்னன்தன்ம ராஜன்-தனது
சித்தத்தில்மகிழ்ந்திடக்-கைக்கொண்டிந்திரப்பிரஸ்தஞ்
சேர்ந்துவிட்டானவ்விசு வாசன்

---

## ஸ்ரீகிருஷ்ணன் பவனிவருதல்.

விருத்தம் அ.

சகதேவன்முதலாந்தம்பியர்கள்திக்கிற்
சார்ந்துகொடுவந்ததனங்கண்டுதன்மன்
அகம்பரிந்தொப்பறுராஜசூயயாகம்
அதுமுடிக்கமாவிடம்நாரதனைப்போக்கிச்
சுகவுனுகனைவியாசர்முதலோர்க்கேவிச்
சுபவோலைவிடஅரசர்மற்றோர்வந்தார்
தரும்யானைமீதுகிருஷ்ணதேவர்சேவை
தருகின்றார்பவனியதுவருகின்றாரே.

ச. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

பவனிவருகின்றாரே-ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி
பவனிவருகின்றாரே.

அநுபல்லவி.

எவரும்புகழுந்தன்ம ராஜன்தேரினிலேக
இந்திரப்பிரஸ்த்தத்தில்மத தந்திமேல்நன்றாகப்
பவனி

சரணங்கள்.

க. பங்கயமலர்முகச் சுந்தரமடமாது-மார்பிற்றிரண்டு
பரந்துகுவிந்து ததும்பியதனமீது

மங்கலமாகச்சித் திரமெழுதும்போது-பலவாத்தியங்கள்
வகைவகைதருமொலி குண்டலமொளிர்காது
தங்களழுந்துமெல் லிடையதுவாடத்
தரளவடம்புனை கொங்கைகளாட
இங்கிதமடவன மெனச்சென்றுநாட
இருசெங்கைக்கிடுவளை யுடன்கழன்றோடப்
பவனி

உ. சீதளமுகிலிடை யுறைதருமிகுசோதி-மின்னல்போலுருத்
திரண்டிடுமங்கைய ரழகியமலரோதி
மீதினிலனுதின மருவியவுயர்சாதி-வண்டுகளிசை
விளைத்தெழுந்திடஅதி விரைவினில்நெடுவீதி
பாதச்சிலம்பொலி யிடச்சென்றுமெள்ளப்
பார்த்துச்செவ்வாயினிற் றேன்குதிகொள்ள
வேதைகொள்சன்னதங் குலுக்கிமுன்தள்ள
வெயிற்புழுகெனஆவி பதைபதைத்துத்துள்ளப்
பவனி

ங. சிலமங்கையர்களை மதன்சரந்துளைக்கச்-சிலர்விரகந்
தீர்த்திடென்றேயுடல் வேர்த்தெதிர்போய்வளைக்கக்
கலைசோர்ந்ததறியாமல் சிலமானுர்களைக்கச்-சிலமின்னுர்கள்
கண்டனல்வெண்ணெய்போ லுருகியேயுடலிளைக்க
உலகமுண்டிடுசெவ்வா யினில்முத்தமிடவே
ஒருநங்கையெண்ணங்கொண் டேகிக்கும்பிடவே
பலமங்கையர்விழி திப்பிரமைபடவே
பலர்சித்ரங்களைப்போ லசைவற்றுவிடவே
பவனி

---

## ராஜசூயத்துக்கு அரசர்முதலியோர் வருதல்.

விருத்தம் கூ.

ஆனைமேற்பவனிவந்திடுகிருஷ்ண ரரியகுந்தியினடிபணிந்தார்
அங்நெடுமாலுந்திரௌபதிபணிவேற் றணிகொள்சிங்காசனந்தன்னில்
தீனரட்சகனுமுதிட்ரனேடிருந்தான் தேவகியெழில்வசுதேவன்
ஜெயசராசந்தன்மகன்சகதேவன் சேனைகள்சூழ்ந்திடவந்தார்
மானியாம்பீஷ்மர்சுயோதனன்முதலோர் மன்னியபூருவகுலத்து
மன்னவர்பாஞ்சாலன்பலராமன் மகததேசாதிபர்வந்தார்
வானிடைதாவுங்குதிரையஞ்ஞூறு மகிழ்ந்துமுன்பார்த்தனுக்களித்த
வல்லவன்சித்திராங்கதன்சார்ந்தான் மறையவர்வந்துசேர்ந்தனரே.

## ராஜசூயயாகஞ் செய்தல்.

விருத்தம் ம.

சகலரும்வந்தார் தருமன்வீமன்றன்னைத்
தானேக்கிச்சேனைகட்குப்போசனப்நீ
வகையாவிசாரியெனக்களபங்கிரீடி
வழங்கிடத்தாம்பூலநகுலன்சாதேவன்
றகுதியுடனேயுதவக்கன்னன்ருனந்
தாத்துரியோதனன்றனத்தைக்காத்திருக்கப்
பகர்ந்துநன்னீராடியுயர்விரதநெஞ்சிற்
பரிகின்றுன்யாகமதுபுரிகின்றுனே.

ரு. தரு-இராகம்-சாவேரி-சாப்புதாளம்.

பல்லவி.

ராஜசூயயாகஞ்செய்தானே-தன்ம-ராஜனென்னுங்கனவானே

அநுபல்லவி.

தேசுலவியதிரு மாலைவணங்கிக்கண்டு
செல்வத்திரௌபதியைத்தன் வலதுபக்கத்திற்கொண்டு
ராஜசூய

சரணங்கள்.

க. பரமனைப்போல்வண்ணச் சருமம்மெய்யினிற்றரித்து-உயர்
பசும்பொன்னினுற்செய்தகங் கணஞ்செங்கையிற்றரித்துத்
திருவரையினிலெழில் மருவுபீதாம்பரம்விரித்துச்-செபந்
தினஞ்செயும்பூசுரரினங் களைமிகநமஸ்க்கரித்துத்
தாணிமீதினிற் புகழும்நீதச்
சதுர்வேதஞ்சொலும் நெறிதப்பாத
அரியதௌமியர் கனிந்தங்கோத
அடுத்தமுகுர்த்தத்தி லதிப்பிரக்கியாத
ராஜசூய

உ. அந்தணர்சுருதியின் மந்திரம்விந்தையாப்படிக்க-நாளும்
அணியுலவியபல திணிமுரசங்களையடிக்க
வந்தனைபெறுமாலா நந்தத்தில்வீறியேநடிக்கப்-புவி
மாதுதன்துயர்நீங்குஞ் சோதனைக்கிடக்கண்ணேதுடிக்க
உரங்கொள்தீவினை யதனைச்சுடவே
ஓமாக்கினிவலக் கொழுந்துவிட்வே
சொரிந்தநெய்மணம் விண்ணிற்ருேடவே
துரியோதனன் கர்ப்பவேதைபடவே
ராஜசூய

௩. சிங்காரவேணுவுத் துங்கன்பாவாணர்மிடியோடவே-சொர்ணத்
திணைப்பொழிவதுபோலே தனத்தினையாருங்களிகூடவே

பொங்கமாகக்கன்னன் தியாகம்வழங்கியின்பம்நாடவே-யிந்தப்
புகழார்க்குமிலேயென்று-ஜெகராஜர்மெச்சிக்கொண்டாடவே
எங்குமங்கள வோசைபிறக்க
இமையோர்திரண்டவி சுண்ணப்பறக்க
வெங்கட்கூற்றுவன் திசையைத்துறக்க
விரும்பும்பாண்டுவின் சென்றுசிறக்க
ராஜசூய

---

வியாசர் அக்கிரகண்ணியபூசை கிருஷ்ணருக்குச் செய்யலாமென்றதற்குச் சிசுபாலனிகழ்தல்.

விருத்தம் ௰க.

மகந்தனையேழ்நாள்வரைக்குஞ்செய்ததன்மன்
மால்பீஷ்மனிவர்கள்திருத்தாள்பணிந்து
தருமராசர்முனிவோரைப்பார்த்தேயிந்தச்
சபையின்முன்றும்பூலமெவர்பெறலாமென்றான்
சுகவியாசன்மால்பெறுதல்நலமாமென்று
சொன்னான்யாவருமிசைந்தாரங்கப்போது
ககனநடுங்கச்சிசுபாலன்கோபித்துக்
கதறுவான்மாயவனைவதறுவானே.

௨. திபதை-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

கண்ணிகள்.

க. சிசுபாலன்றிருமாலைப்-பழிக்களண்ணங்கொண்டு
திசைமன்னரைப்பார்த்துக் காடு-தன்னிற்
பசுமேய்ப்போனுக்குமுன்-தாம்பூலமீனச்செம்
படத்திப்புத்திரன்வியாசன் நீடு

௨. தைரியங்கொண்டந்தச்-சோரன்றனக்குத்தான்
தாலாகுமெனச்சொன்ன நியாயம்-கேட்
டியைந்தீர்களெருதீன்ற-தென்றுற்கொட்டிலிற்கட்
டிடுமென்பதோசாம்பிர தாயம்

௩. குருடன்ராஜவிழி-விழிப்பானோவியாசனுக்
கோதெரியும்ராஜ நீதி-யவன்
தரத்துக்கேற்றபடி-சொன்னான்சொன்னாலது
தருமோஅவ்விடைப்பையல் சேதி

௪. தனக்கேளுமாமனுங்-கஞ்சன்மேற்கோபித்தோர்
க்ஷணத்திற்கொன்றானவன் ஆவி-கற்பின்
வனிதைதேவகிவசு-தேவர்க்குமகனாக
வாய்த்தவர்களைப்படு பாவி

௫. காலில்விழும்படி-யுரையாடியவர்கள்முன்
காட்டினான்இந்திர ஜாலங்-துஷ்டன்
மேலுங்காளிந்தியை-நீந்திச்சென்றுசத்திய
மிருந்தவன்போலனு கூலங்

௬. கொண்டேநந்தகோபா-லன்மனைதன்னிலே
குடிகேடன்சேர்ந்தவன் பதியை-ஆண்டான்
சுண்டெலிசர்ப்பத்தி-னுடன்சிநேகஞ்செய்யத்
துணிந்ததுபோற்றலை விதியைப்

௭. பூண்டிடுமொருமங்கை-யிவன்பசிதன்னையே
போக்கமுலைகொடுத்தாள் அவளைக்-கொல்ல
வேண்டியேமுலையுண்டு-தோலிருக்கச்சுளை
விழுங்குவதெனக்கருந் தவளை

௮. இணைகொண்டதிருமேனி-யழகினனவளாவி
யினையுமுண்டான்கொடுந் துரோகி-வெள்ளம்
அணிவிரலிற்றடை-யாகாதுபோலென்றும்
ஆணைக்கஞ்சான்றூர் விவேகி

௯. எத்தனையோதர-முரலினிற்கட்டுண்டும்
எள்ளத்தனையுமானம் இல்லை-பட்ட
மத்தடிகொஞ்சமோ-அடிவடைதோசைதுன்
மார்க்கனைச்சேர்ப்பது தொல்லை

௰. கோபியரிடத்தினிற்-றயிர்நெய்யினுக்காகக்
கூத்தாடியுபசாரம் புரிவான்-முற்றும்
பாபத்துக்கஞ்சாம-லவர்களைமெல்லப்
பதம்பார்க்கத்தொடைதட்டித் திரிவான்

௰௧. வெண்ணெய்யைத்திருடி-யுண்ணுங்கொழுப்பாற்கன்றுய்
மேய்ந்தராட்சதன்றனைப் பிடித்தான்-மகா
வண்ணவிளாங்கனி-யானஅரக்கனும்
மாளஅக்கன்றினு லடித்தான்

௰௨. வல்லசர்ப்பமும்பட்சி-யும்பேயுங்கூற்றனூர்
வழிகொண்டுபோம்வழி யடுத்தான்-பின்னுஞ்
சொல்லுநல்லிடையரிந்-திரன்றனக்கிடும்பொங்கற்
சோற்றினுக்குந்துஜம் தொடுத்தான்

௰௩. அதையறிந்திடுமிந்த்ரன்-மழையினைப்பொழிவிக்க
அகம்பொங்கிக்கோபத்தி லோங்கினன்-ஓங்கிச்
சதுராகமழைபொழி-வித்தானம்மழையினைத்
தடுக்கஅவன்மலை தாங்கினன்

௰௪. மாரீசன்மேய்க்கின்ற-பசுவுங்கன்றும்ஆயர்
மைந்தர்தமையுமாயை யாலே-பிரமன்
யாருந்தெரியாவகை-யொளித்தானிவனும்வேறே
யிடைப்பிள்ளைகளுமழ காலே

௰௫. விறியகோக்களுங்-கன்றுமுன்போலவே
விதம்விதமாகவே படைத்தான்-இவன்
மாறுபாடாற்சொல்லத்-தாம்பெற்றதாய்தந்தை
மாரைச்சிறையினி லடைத்தான்

௰௬. கூடப்பிறந்திட்ட-ஆறுபேர்களைவிணிற்
கொல்வித்தானித்துடை காலன்-கொஞ்சு
காடியாதேவகி-வயிற்றிற்பிண்டமான
கண்ணனென்றநாம சீலன்

௰௭. பலராமன்றனையுரோ-கணிமாதுகர்ப்பத்திற்
படைக்கஎண்ணத்தைப்பா ராட்டினன்-இந்த
நிலத்தோரன்ஞேணிரு-தாய்க்குப்பிள்ளையான
நிசிதத்தைவெளியினிற் காட்டினன்

௰௮. சராசந்தனுலடி-பட்டிடுமவமானந்
தன்னுற்றலையெடுப்பு முண்டோ-வெகு
தூரதுரைகள்நெருங்-குஞ்சபைதனிற்றுரௌஷி
சூதுவித்தைகளேது கொண்டோ

௰௯. வந்தான்வயதில்-முதிர்ந்தவசுதேவன்
வல்லவனுங்க்ருபை யாளன்-பீஷ்மன்
இந்தவுலகாளும்-ராஜர்கள்வில்வித்தை
யினிற்குருதுரோணன்திண் டோளன்

௨௰. தங்களைப்பார்க்கிலும்-இடைச்சேரியினில்வளர்ந்
தவனேலைப்பில்லாத யோக்கியம்-புவி
மங்குங்கட்டுமாடு-கட்டியென்றறியாதோ
என்மலைப்பவன்தன் சிலாக்கியம்

௨௧. சேர்த்தணைக்கும்அணை-கயிற்றினுக்கேகன்றுத்
தெரியுமென்றேதியன் புகன்றுன்-ஜெய
பார்த்திபர்சபைதனி-லிழிகுலத்தோன்வரப்
படாதெனச்சபையைவிட் டகன்றுன்

௨௨. அகன்றிடுஞ்சிசுபாலன்-தன்னைத்தன்மராஜன்
அன்பினுற்றழுவிக்கொண் டாடி-நீங்காச்
சுகம்வாழ்வுமுதுமைநற்-குலநலமிவைபெரி
தோவேநத்திலும்வெகு கோடி

௨௩. ஞானசாத்திரத்திலு-மகிமைபெற்றேன்சபை
நாயகனென்பதை மறந்தாய்-தியான
மோனிகள்மனம்நொந்தாற்-குலநாசமாமென்று
முன்னோர்சொல்மதியினைத் துறந்தாய்

௨௪. ஊழேதோநாம்செய்த-புண்யமோமுகுந்தனே
உலகிலரசனாக உதித்தான்-என்றுன்
ஏழுருக்கொருகொள்ளி-முழுப்பாய்சுருட்டியென்
றிகழ்ந்தச்சிசுபாலன் மதித்தான்

௨௫. மதித்துமோர்க்குடத்தைத்-திருடிவெட்கங்கெட்ட
மனிதப்பதரைக்குல தெய்வம்-ஆகக்
கதிக்கின்றாயாசாரக்-கள்ளன்நீரில்மீன்
களைத்தின்னுதிருக்கின்ற சைவம்

௨௬. கொக்குக்குண்டோஅவன்-வேஷத்தைமெய்யென்று
கொளவேண்டாம்நீசிறு பிள்ளை-யேட்டிற்
சர்க்கரைநாவுக்கு-ருசிக்குமோமூடனைச்
சாமியென்பதென்ன கொள்ளை

௨௭. நீகண்டசொர்ப்பனத்-தினைவிடென்றான்பீஷ்மர்
நிலத்திலம்மாயனே கர்த்தன்-என்று
வேகின்றநெருப்பில்நெய்-விட்டதுபோற்சொன்னான்
மிகவுங்கொதித்தந்தப் பித்தன்

௨௮. எனுஞ்சிசுபாலன்வீட்-டுமன்மீதினிற்சீறி
யிணையில்லாசரமாரி பொழிந்தான்-அன்னோன்
தனைக்கொல்வேனெனப்பீஷ்மன்-தன்சேனையைக்கூவி
ஜயசிங்கம்போற்கர்ச்சித் தெழுந்தான்

௨௯. எழுந்தபோதுராஜ-ருலகம்நீறுமென்றே
யேக்கங்கொண்டார்கள் எப்போது-நன்மை
தழைந்திடுதன்மரா-ஜன்ஜெயவீட்டுமன்
தன்னிருபதமலர் மீது

௩௰. வீழ்ந்துவணங்கினன்-கங்கைபாலன்கோபம்
விடுத்துத்தன்திருமுகம் மலர்ந்தான்-ஒன்னார்
தாழ்ந்திடுபுஜபலச்-சிசுபாலனுஞ்சினந்
தணிந்தேசபையினிற் கலந்தான்

௩௧. தியன்பின்னும்பழங்-குருடிநீகதவினைத்
திறவென்றகதையையொப் பாக-அங்கே
பேயன்மன்னவர்களை-நோக்கித்தந்தையுடன்
பிறந்திடுமாதைமேல் மோகம்

௩௨. மீறிவிவாகஞ்செய்-காமியைத்தெய்வமா
விதிப்பதுங்கோடாலிக் காம்பு-குலந்
தோறும்பாழாக்கின்ற-வகையினைப்போலிங்கு
கொல்லாதுகொல்லும்விஷப் பாம்பு

௩௩. வீட்டுமனைப்பெரி-யோனென்றுமதிப்பதும்
வெகுநேத்தியெனவுரைத் திட்டான்-எமன்
நாட்டினிலவனைச்சேர்ப்-பேனெனஅண்டங்கள்
நடுங்கவீமன்கதை தொட்டான்

௩௪. நீள்கதையினைவீமன்-தொட்டபோதேமனும்
நிலைகெட்டுளந்திகை திகைத்து-நின்றான்
தோள்வலியுடையவீட்டுமனதிவிரைவிலச்
சூரன்வெஞ்சினம்நீங்கக் குறித்து

௩௫. வெற்றிகொள்வீமாகேள்-தமகோடணன்வரத்தால்
வீரன்சிசுபாலன் றனையே-யன்பாற்
பெற்றதாய்முக்கண்ணும்-நாலுகைகளைக்கண்டு
பிரமித்தக்கொடுந்துன்மார்க் கனையே

௩௬. வளர்க்குநாள்மேலோரன்-னேனுக்குப்பகையாளி
வந்தெடுத்தாலெழில் நண்ணும்-இரண்டு
தளர்வில்லாக்கால்களும்-பூமியிலுள்ளபேர்
தம்மைப்போலேயிரு கண்ணும்

௩௭. தோன்றுமென்றுரோர்நா-ளவனைக்கண்ணன்செங்கை
தொட்டெடுத்தானந்தப் படியே-ஆனன்
ஈன்றதாயந்தவை-குந்தமூர்த்திதனக்
கின்சொலுரைத்தென்றன் குடியே

௩௮. ஓங்கவந்திடுமக-னுக்குப்பகையாளி
யுலகினிலென்றைக்கும் நீயே-யெனப்
பாங்குடனறிந்தேன்-தினநூறுதப்பவன்
பண்ணுமட்டும்பொறுப் பாயே

௩௯. இம்மாத்திரங்கருணைநீ-செய்யென்றுள்மாயவன்
இசைந்தானீதறியார்கள் யாரும்-மிண்டன்
சும்மாகுதிக்கின்றான்-கட்டையின்கோணல்நீள்
கோடாலியொடுபோகும் பாரு

௪0. மாதவனவனுயிர்-வாங்கவந்திருக்கின்றான்
வலியகூற்றனும்பாசம் வீசிக்-கட்ட
வேதிறமாவந்-திருக்கின்றான்கோபத்தை
விடுவாயென்றிதவுகள் பேசி

சக. வீமன்வெஞ்சினமாற்றி-னனெவரைச்சனி
விடும்பாம்பினுக்குநோய் போர்த்துக்-கொண்ட
தாமெனச்சிசுபாலன்-கெடுமதியாலந்த
அரியசெங்கண்மாலைப் பார்த்துப்

சஉ. பூவைருக்குமணி-தனக்குத்துர்ப்போதனை
போதித்துத்திருட்டுப்பொற் றலி-கட்டிச்
சீவனைவைத்திருக்-கின்றாயின்னமிங்கே
சீச்சீநீபயிர்மேயும் வேலி

சங. என்றான்பலதீட்டுக்-கோர்முழுக்கெனமாயன்
இதயங்கொதித்துத்தே ரேறினன்-வீரங்
குன்றாச்சிசுபால-னும்ரதமீதிற்
குதித்தேறிவடவைபோற் சீறினன்

---

## சிசுபாலன்மரணம்.

விருத்தம் ௰உ.

ஓதுமிருவரும்வடவையைப்போற்சீறி
யுகாந்தவிடியைப்போல்பேரிகைமுழங்க
வேதியர்மன்னவர்களுமாச்சரியங்கொள்ள
விண்டலத்தோர்கண்டுநடுக்கங்கொண்டேங்கக்
கோதறுசேனைகள்கடல்போல்சூழச்சேதி
குலச்சிசுபாலன்றிருமாலெதிரேநேர்ந்து
மோதுமமர்க்களத்தினிற்றேர்வேகமாக
முடுக்கின்றாரவர்கள்சண்டைகொடுக்கின்றாரே.

சு. தரு-இராகம்-கல்யாணி-சாப்புதாளம்.

பல்லவி.

சிசுபாலனெனுந்தீயன்-மீதிற்சண்டை-செய்தானேநெடுமாயன்

அநுபல்லவி.

திசைராஜர்தமையொரு கொசுபோல்மதிக்கவரு
தீரவிக்கிரம வீடுபுஜபல
சூரனற்புத மானசெதிகுலச்
சிசுபால

சரணங்கள்.

க. ஆனைக்காருடன் ஆனைக்காரடுத்தார்-அடுத்தேமத
யானைகளின்மீதி லானைகளைவிடுத்தார்
சேனைக்கதிபதிகளும் வெம்போர்கொடுத்தார்-கொடுத்தேயெட்டுத்
திசைகள்பொடிபடக் கணைகளைத்தொடுத்தார்
சோனைமழையெனச் சரங்கள்வைக்கவே
சொரியும்ரத்தத்திற் கடல்சிவக்கவே

மாநிலத்தோர்கள் மிகப்பிரமிக்கவே
மகிபர்சேனையை யணிவகுக்கவே
சிசுபால

உ. தேர்க்காரர்களொடு தேர்க்காரர்கிட்டினர்-கிட்டியண்டமுஞ்
செவிடுபடரதம் விடுத்துமுட்டினர்
ஏற்கும்பரிக்காரர் பரிகளைத்தட்டினர்-தட்டிவிடுத்தே
எதிர்த்துக்கிரமுடன் கொதித்தங்கேவெட்டினர்
சீர்கொளொட்டியர் சமரிற்றுள்ளவே
சினர்கண்கள்தீப் பொறிகள்கொள்ளவே
நேர்ந்தபோரினில் உரங்கள்விள்ளவே
நெடியசேடன்வாய் நுரைகள்தள்ளவே
சிசுபால

ந. ஐயனைக்கொல்ல வெய்யனுட்குறித்தான்-குறித்துச்சீறி
அஸ்த்திரத்தைச்சிரத் தின்மேலேதெறித்தான்
வெய்யன்கணையையென் னையனேமுறித்தான்-முறித்தையன்வேல்
விட்டான்துஷ்டன்வேல் தொட்டதைமறித்தான்
கைகொளாயுதங் களைப்பொடிப்பொடி
கண்டிடுந்தீயன் தேர்மீதிற்கொடி
கொய்துசக்கரம் ஏவியவன்முடி
கொக்கரித்துவீழ்ந் துருளஇப்படி
சிசுபால

---

## வியாசர் சிசுபாலன் வரலாறுகூறல்.

விருத்தம் ௰ந.

சுடர்முடியிழந்தாங்குறுஞ்சிசுபாலன்
தூயதேகத்திலோர்சோதி
சூரியன்றன்னைப்பிளந்துபோய்திசைகள்
தொறுமொளிவிளங்கவேவிளங்கி
நெடியமால்பதத்தில்வீழ்ந்ததப்புதுமை
நெருங்கியசபையுளோர்பார்த்து
நேசமாலீசனுமெனவியாசன்
நிறைசபையோரெலாங்கேட்கச்
சடைமுடிபெறுந்தூர்வாசன்வைகுந்தஞ்
சார்ந்ததுந்துவாரபாலகர்கள்
தடுத்ததுமுனிசாபத்தினிலிரண்யா
க்ஷதனிரணியனிராவணனீள்
திடமுளகும்பகர்னனக்கஞ்சன்
ஜெயசிசுபாலனுப்பிறந்திச்
செங்கண்மால்பகைகொண்டிறந்தவனடியிற்
சேர்ந்ததுந்தெரியவோதினனே.

## தருமராஜன் சிங்காசனத்திருத்தல்.

விருத்தம் ௰௪.

வேதவியாசன்பரிந்தீதுரைக்கக்கேட்ட
விதுரனுதியர்கள்மகிழ்ந்தாருதிட்ரன்
நீதமுனிவோர்க்குமுற்பூசனைசெய்தேநன்
னெறியொடுராஜர்க்குவெகுமதிகள்செய்தான்
ஆதிமால்பாஞ்சாலன்விராடன்சல்யன்
அந்தணர்சென்றார்துரியோதனன்மற்றோர்கள்
காதலுடனேபரவத்தன்மராஜன்
கனங்கொள்வான்அரியசிங்காதனங்கொள்வானே.

எ. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

வீற்றிருந்தானேதன்மராஜன்-சிங்காசன-மீதில்யாவர்க்கும்விசுவாசன்

அநுபல்லவி.

நாற்றிசையோர் மதிக்க
நாவலர்கள் கதிக்க
ராக்ஷதமயன்முன்பு தன்காத்தினிலே
நாட்டியநீள்சபா மண்டபந்தனிலே
வீற்றிருந்

சரணங்கள்.

௧. செம்பொன்மணிமகுட மின்ன-எழில்
சிறந்தபூஷணவொளி மன்ன
விம்பசூரியர்நிக ரென்னக்-காதில்
விளங்குங்குண்டலசோதி துன்ன
சம்பிரமராஜர் சூழத்
தனைநம்பினோர்கள் வாழத்
தழைத்திடுந்திருமுக மலர்ந்தொருக்காலே
சதகோடிமன்மத ராஜனைப்போலே
வீற்றிருந்

௨. இலகுபூச்சக்கிரகுடை பிடிக்க-நல்
லிசைவாணர்சங்கிதங்கள் படிக்க
ஒலிமிகுந்திடுபேரி யடிக்கப்-பொல்லா
ஒன்னலர்நெஞ்சிலிடி யிடிக்க
மலர்வதன உல்லாச
மாதர்சாமரை வீச
மாமுனிவோர்மகிழ்ந் தாசிகள்கூற
மங்களகாம்புவி யெங்கெங்குமீற
வீற்றிருந்

க. புதியமதாதிகல் யாணப்-பெண்ணைப்
போற்றலைசாய்த்துமிக நாண
துதிசேர்பாஞ்சாலனுக்குப் பிராண-ஞான
திரௌபதியோர்புறத்திற் றோணக்
கதைவீமன்மகிழ் கொள்ளக்
கருதுமானந்த வெள்ளக்
கடலிலர்ச்சுனன் முதலோர்கள்குளிக்க
காதகத்துரியோ தனன்தத்தளிக்க
வீற்றிருந்

## தருமர் துரியோதனனாதியோர்க்குப் பரிசளித்தல்.

விருத்தம் மிறு.

தருமணிச்சிங்காசனத்தினிலுதிட்ரன்
சதுருடனிருந்தனன்துரியோ
தனனவன்மாமன்சகுனிநீள்கன்னன்
தம்பிதுர்ச்சாதனன்முதலோர்
பகர்சபாமண்டபந்தொறுஞ்சென்று
பார்த்திடும்போதிலோரிடத்திற்
பளிங்கொளிநீர்போலிருந்ததாலதனைப்
பாதகன்சலமெனமயங்கிச்
சொருகுசுறவணிந்தசோமனைக்கையால்
தூக்கலுஞ்சலமுளயிடத்தைத்
தோற்றுநீள்பளிங்காமெனஅடிவைத்துத்
துயில்தனைநனைத்ததும்பின்னும்
முகக்களைமாறுபட்டதுந்தன்ம
மூர்த்திகண்டமுதைவேம்பினுக்கு
மொண்டுவார்த்ததனையன்பொடுவளர்க்கு
முறையவன்குறையொழித்தனனே.

## திரௌபதி நகைத்ததற்குத் துரியோதனன் வெட்கங் கொண்டு நகர்சேர்தல்.

விருத்தம் மிசு.

தயவுளதன்மன்சுயோதனன்முதலாந்-தம்பியர்க்குப்பரிகரிதேர்
சமஸ்த்தமுங்கொடுத்தானரவவெங்கொடியோன்-றன்பதிநோக்கியேதங்க
மயமுறுமுப்பரிகையிடந்தோறும்-வகுத்தகண்ணுடிகள்நிழலால்
வழியிலாஇட்மும்வழியெனக்காட்டும்-வகையினுற்சுவரினில்முட்டி
உயர்முடியிழந்தானன்தத்திரௌபதிகண்-டுறுதகப்பன்குருடாகில்
உற்றிடும்பிள்ளையுங்குருடோவென்-றேதியேநகைத்தனளுதிட்ரன்
நயமிகுசாதேவனைவழிகாட்ட-நவின்றபின்தம்பியர்சூழ
நாணுடுவணங்காமுடிவளைத்தவன்றன்-நற்பதிசென்றுசேர்ந்தனனே.

இராஜசூயயாகம்-முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

# சூதாடல்.

---

துதிவிருத்தம் ௰௭.

சுகத்துக்கேதுவாம்ராஜ சூயயாகந்தனையாறு
முகத்தென்னையன்முருகனடி முடிமேற்சூட்டிமுடித்தபின்னர்
மகத்தைப்புரிந்தகிரிராஜன் மகளாயுதித்தவுண்மையையன்பால்
மிருத்துள்ளிருத்திச்சூதாடல் விரிப்பேன்மகிழ்வுதரிப்பேனே.

---

## கன்னன் துரியோதனனுக்குத் துர்போதனைசெய்தல்.

விருத்தம் ௰அ.

மாதுதிரௌபதிநகைக்கநாணித்தம்பி
மார்பீஷ்மரொடுபதிக்குமுடிவளைத்து
வேதையொடுசென்றசுயோதனன்சபைக்கு
வேந்தர்மறுநாள்சேர்ந்தங்கிருக்கும்போது
பூதலத்திலுட்சுவரைவிட்டுமுற்றும்
புறச்சுவரைத்தீற்றும்வகையதுபோற்கன்னன்
நாதனெனவருந்துரியோதனனுக்கின்பம்
நாட்டுவான்போற்கலகமூட்டுவானே.

௬. திபதை-இராகம்-சாவேரி-சாப்புதாளம்

கண்ணிகள்.

க. துரியோதனனுக்குக்-கன்னன்பெருநெருப்பைத்
துருத்திவைத்தூதுதல் போலே-வந்த
தரணிமன்னவர்கேட்க-ராஜசூயயாகந்
தன்மராஜனைப்போல்மண் மேலே

உ. ஆர்செய்தாரினியவ-னுக்கார்தானிகரென்றான்
அப்போதுபருப்பின்மேல் நெய்யை-மொண்டு
வார்த்ததுபோலெலி-யிரும்பினைவிழுங்கிய
வழக்காடித்தான்சொல்லும் பொய்யைச்

ங. செவ்வையாச்சாதித்தோன்-தனையுண்டேப்பமிடுந்
தியசகுனிசேல்போற் றுள்ளிப்-புலி
கவ்வும்பூனையைப்போ-லிருந்தால்மானிளேக்காரங்
காணுதோவென்றனன் கொள்ளித்

ச. தேளென்னுந்துர்ச்சா-தனன்தமையனைநோக்கிச்
சிரித்துச்சீதளச்சந்திர னொளிக்கே-யெந்த
நாளுஞ்சூரியனொளி-மழுங்கும்புதுமைபோல
நாமிருந்தாலது வெளிக்கே

ரு. வெகுஎளிதமென்றான்-சுகங்கெட்டுவிரதமு
மிகக்கெடுஞ்சுயோதனன் கேட்டுத்-தம்பி
புகன்றதைக்குருடன்பீஷ்-மன்குருகன்னனிப்
புவிராஜர்கேட்கக்கை நீட்டு

சு. கொண்டுரைத்ததுமன்றிப்-பேய்களைக்குடித்தாற்போற்
குதித்துத்தேவேந்த்ரன்சீர் செய்ய-காலங்
கண்டிடுமுனிவோர்மந்-திரங்கூறச்சுபவானோர்
கற்பகமலர்மழை பெய்ய

எ. ராஜரேவல்செய்ய-ஊமைக்கோட்டான்தன்ம
ராஜன்மகுடித்துச் சிலாக்யம்-பெற்றான்
காசுபெருதஅ-வன்தம்பிமார்களுங்
கரிபரிமுதலான பாக்யம்

அ. தனைப்பெற்றார்கொஞ்சநாள்-போனால்நமதுராச்யந்
தனையாள்வாரவர்துஜங் கட்டிக்-காய்க்கும்
பனங்காயையும்பகை-யாளிகளையும்பதம்
பார்த்துவெட்டவேணும் அட்டி

கூ. செய்யலாகாதுமுக்-கண்ணுந்திறந்துபோய்த்
திரியுமைவர்செல்வச் செருக்கை-நானே
வெய்யயுத்தத்திலா-வதுசூதிலாவது
வென்றவ்வெட்டுணிகள்தங் கருக்கைப்

ய. போக்கிறேனென்றான்-துர்ச்சாதனன்கேட்டப்
பேதென்னண்ணன்நேற்று முடியை-முற்றுஞ்
சாய்க்கத்திரௌபதிநகைத்-ததும்வீமனகைத்ததுஞ்
சபையறியாதோவூர்க் குடியைக்

யக. கெடுத்துவேள்விசெய்த-அவர்கள்கொண்டிருக்குங்
கொவமொருவர்சொல்லத் தரமா-வான்
அடர்மலையைச்சுற்ற-அடித்தோரைச்செடிசுற்ற
அடியாமலிருக்கநாம் மாமா

௰உ. யாவருமகத்துக்குப்-போய்ப்பத்திறபதினென்று
இருந்தோமோர்மூலையை நாடி-மோர்
கூவிவிற்குமிடைப்-பையலைத்தலைவனுக்
குறித்தாரெல்லார்வாயு மூடி

௰௩. அவனங்கேஆகாச-மிரண்டுவிரற்கடை
யாகும்படிக்குவா லாட்டித்-துள்ளி
நவிலமுன்தாம்பூலம்-பெற்றான்சிசுபாலனை
நமனுலகஞ்சேர வாட்டி

௰௪. இப்படிமகத்துக்கு-வருவித்துக்கொல்வித்த
ஈனரைவிடுவதோ நன்மை-அங்கே
தப்பிலிகிருஷ்ணனங்-கிலையவர்களேயிந்தத்
ததியிற்கொல்லாவிடிற் றுன்மை

௰௫. என்றனன்கன்னன்கேட்-டுங்கட்கேன்பிரயாசை
யென்கையாலேவுமோ ரம்பு-தன்னை
வென்றிகொள்ளும்மூர்த்தி-யாகிலுஞ்செயிப்பாரோ
வீரர்களேமுருங்கைக் கொம்பு

௰௬. தானெனமதித்திடு-மென்திராணியறியாயோ
தன்மனுதியர்களை மடிக்க-யோசித்
தேனினமலைக்கிறு-யொருவனுனேபோதும்
என்றானவ்வைவரை முடிக்க

௰௭. ஆகாதாகாதெனச்-சகுனிகூறிமன்னர்
அனைவரையும்பார்த்து நகைத்து-இந்த
ஆகாயமுமுலகும்-நடுங்கித்தத்தளிக்கும்
ஆற்றலன்பொல்லாளமனும் பகைத்து

௰௮. வெல்லொணுவீமன்வில்-வளைத்தபின்சல்யனை
விழிபிதுங்கவேயெனும் பொடித்தான்-எழில்
வல்லிதிரௌபதிக்காக-வளைத்தநம்மைக்கிரீடி
வளைத்துத்துரத்தியே யடித்தான்

௰௯. இஞ்சிதின்றகுரங்-கைப்போலேபல்லைநாம்
இளித்தோட்டம்பிடித்தோமே யன்று-வீண்
கஞ்சிபிகுவேன்சிற்-றெறும்பின்மூச்சினிற்பெருங்
காற்றெடுங்கிப்போகா தென்று

உ௰. உங்கட்கேன்யோசனை-யில்லைத்தன்மனைமாய்க்க
ஒருவராலேயுமா காது-மகா
சிங்காரமண்டப-மமைத்ததன்வேடிக்கைத்
தெரிவிக்கும்வகைபோலோர் சூது

உக. செய்தழைப்பித்திடிற்-றருமன்வருவானந்தத்
திருடன்கீழேகட்டிற் போடும்-விதம்
பையப்பொழுதுபோக்கிக்-கையிற்கப்பரைதரும்
படிசொக்கட்டான்விளை யாடும்

உஉ. மோசத்துக்குள்ளாக்கு-வதுவேதந்திரமென்று
மொழிந்தான்முடவன்கொம்புத் தேனைப்-பார்த்தே
ஆசிப்பதெனச்சுயோ-தனன்தன்மராஜன்ராச்சி
யந்தனைக்கைக்கொளப்புதுப் பானே

உ௩. அதுபோற்பொங்கிமாமன்-தன்னைக்கரைசேர்ப்பதற்
கட்டியிலையெனவே மதித்தான்-பின்னும்
புதுமருள்கொண்டவன்-போற்றலைதெரியாமற்
புயமிகப்பூரித்துக் குதித்தான்

உச. மாமன்சொன்னதேதந்த்ரந்-தந்த்ரமென்றுமுடன்
மகிழ்ந்துவிதுரனிடம் அடுத்துச்-சொன்னான்
நேமத்தோர்சூதாட-லாகாதென்றுபல
நீதிகளைமிகத் தொடுத்துச்

உரு. சூதும்வாதுமென்றும்-வேதைசெய்யுங்குலத்
துரோகஞ்செய்வதுதன்மம் அன்று-சந்தி
ராதித்தருள்ளநாள்-வரைக்கும்வசையுன்தந்தை
யாலோரோலைதனை யின்று

உசு. பாண்டவர்க்குப்போக்கி-னலவர்வாழ்வுஞ்சம்
பத்தெல்லாமுங்களுக் களித்துத்-தாங்கள்
ஆண்டிவேஷங்கொண்டு-காட்டிற்போய்விடுவார்கள்
அதனால்நீங்களுள்ளங் களித்து

உஎ. வாழலாகுமென்று-னுரலோடுமத்தளம்
வந்துமுறையிட்டாற்போல் ஆச்சு-மகா
ஏழைக்குறும்பனென்-றறியாமல்யான்சொன்னேன்
இறங்குந்துறையதனில் நீச்சுக்

உஅ. கொள்ளவேணுமானல்-கரையேற்றுதற்குன்னைக்
கூடவைத்துக்கொள்ள வேணும்-சற்றுங்
கள்ளங்கபடறியாய்-சூதறிவாயென்னைக்
காப்பாற்றுதற்கன்பு பூணும்

உகூ. பக்குவத்தினிலுன்னைப்-போலேகாணேனென்றன்
பாக்யமெல்லாமனுப வித்தும்-சுக
துக்கத்துக்குத்தூர-நிற்குமைவர்மீதிற்
றுவேஷியுனக்குப்பட்ச முற்றும்

௯௰. புத்திரர்களிற்பக்ஷ-பாதமேதுனைநம்பப்
போமோநீகழுத்துக்கே கத்தி-பரி
சுத்தம்பேசவந்தா-யென்றான்விதுரன்கேட்டுத்
துடிதுடித்தேகல்லைக் குத்தி

௯௧. நற்கையிழந்தாற்போ-லாச்சுநாய்குலைத்து
நத்தம்பாழாகாதென் றறிந்து-சற்றும்
விற்பனமில்லாச்சு-யோதனன்சபையினை
விட்டேகினான்மன முறிந்து

## திருதராட்டிரன் விதுரனைக்கொண்டு பாண்டவரை அத்தினபுரம் வரும்படி ஓலைபோக்குதலும், பாண்டவர் விதுரனோடுசாவுதலும்.

விருத்தம் ௰௯.

விதுரனத்துரியோதனன்றனைச்சபையில்-வெறுத்தகன்றிட்டபின்சகுனி
விவேகமில்லாதசுயோதனனிதமு-மெச்சியசோதரர்மகிழ்ந்தே
அதிவிரைவினிற்சூதாடுமண்டபமொன்-றருநவரத்திநந்தன்னு
லமைத்தனரதனைத்திருதராட்டிரனோ-டரவகேதனனுரைத்திட்டான்
பதிதனுங்குருடனவரைவெல்லும்-பங்கிதென்றெண்ணியம்மண்ட
பத்தினையவர்கள்பார்த்திடத்தனது-பாலகர்பதைக்கிறாரெனவே
சதுருடனோலைவிதுரனால்விடுத்தான்-றருமவனவரிடமதனைத்
தந்ததின்தந்த்ரம்புகன்றனன்தருமன்-தம்பியர்நால்வர்பேசுவரே.

அ. தரு-இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐவர்தனித்தனியே பேசினார்-விதுரன்
அறியத்தம்மெண்ணம்வெளி வீசினார்

அநுபல்லவி.

வையகந்தனையாண்டு-மகிழ்ந்தமகிபன்பாண்டு
வாத்தில்வருகுமாரர்-மாபுஜபலவீரர்
ஐவர்

சரணங்கள்.

க. கள்ளுண்பதைப்பார்க்கிலுஞ் சூது-தன்னைக்
கனிந்தாடல்பாவம்புவி மீது
மெள்ளவிஷத்தினையப் போது-மத
வீமனுக்கூட்டிச்செய்தார் தீது
உள்ளத்தில்மேலும்பகை யுற்றரக்குமாளிகை
யொடுமாய்க்கப்பார்த்தாரென உதிட்ரன்சொன்னான்விற்பன
ஐவர்

௨. தகப்பனிறந்தபின்னுந் தம்பி-தனக்குத்
தரைமீதழுவார்களோ வெம்பி
பகைவரையோசியாமல் நம்பிப்-போகப்
படுமோளரியுதென்றன் கும்பி
யிகல்கொள்ளவரையின்று யான்சொல்லுதல்நன்றென்று
இடிபோல்வீமன்கர்ச்சித்து இயம்பினன்விவரித்து
ஐவர்

௩. கத்திகொண்டோன்கைத்தழை தேடி-ஆடுபோங்
கதைநாம்செல்வதெனக் கிரீடி
சித்தங்கொதித்தானுற வாடிக்-கெடுப்பார்
தீயரென்றானகுலன் நாடிக்
குத்திக்கோள்சொல்லக்கூலி கொடுப்பதேனவர்சோலி
கூடாதென்றனன்வல்ல குணவான்சாதேவனல்ல
ஐவர்

---

## ஐவர் விதுரனுடன் அஸ்த்தினபுரிக்குச் செல்லுதல்.

விருத்தம் ௨௰.

வையகமாள்பாண்டுமைந்தர்விதுரனோடிவ்
வாறுரைக்கத்தன்மனுந்தம்பியர்சொல்நீதி
கையில்நெல்லிக்கனிபோற்கண்டும்பிதாசொற்
கடப்பாரார்நாளை அஸ்த்தினபுரிக்குப்
பையநாம்செல்வதழகென்றானந்தப்
படியேபேரிகைமுழங்கச்சேனைசூழ
ஐவர்களுங்குருடனெழுதியவோலைக்குள்
ளாகின்றார்தேரின்மிசையேகின்றாரே.

௩. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐவரோர்மனதா-நின்றாரேதேர்மே-லஸ்த்தினபுரிக்குச்சென்றாரே

அநுபல்லவி.

எய்தும்ராமலக்ஷ்மண ரெனவேவுத்தமகுண
மிசைந்தேஒருமையாக இருக்குமகாவிவேக
ஐவரோர்

சரணங்கள்.

௧. சுந்தரமுளஇந்து-சந்திரோதயமெனத்
துலங்கும்பூச்சக்கிரகுடை கவிக்க
விந்தைமகுடமன்னர்-சந்தித்துத்தொந்தமுடன்
விரைந்துவணங்கிச்செங்கைக் குவிக்கப்

பைந்தருவைப்போற்றுனந்-தந்தஅவர்காத்தைப்
பார்த்தமுகில்நிதம்பிரம் மிக்கச்
சிந்தைகலங்கவேசிங்-கந்தனைக்கண்டயானைத்
திரள்போற்பகைவர்பா தவிக்க
ஐவரோர்

௨. கொஞ்சுபைங்கிளிமொழி-வஞ்சியரிருபுறம்
கோலச்சாமரைமிகப் போட
வெஞ்சினமீறிய-குஞ்சரம்பலகோடி
மேருமலையதுபோல் நாட
மிஞ்சுவாயுவேகமும்-அஞ்சுங்குதிரைகளை
விடுவோரைக்கண்டருணன் வாடச்
செஞ்சொற்கவிவாணராலுஞ்-சிறப்பிக்கவொண்ணுத
தேவர்வான்மூகட்டினை மூட
ஐவரோர்

௩. இங்கிதமுள்ளவாத்தி-யங்களினேசையால்
எவ்வுலகும்பிரமித்தே யேங்கச்
செங்கனிவாய்மாதர்செல்-லுங்கவின்பெண்யானைகள்
திகழுமணியணியாத் தேங்க
மங்களமிருந்திடு-சங்கனுதந்தனக்கு
வானிடியுமஞ்சிப்பின் வாங்கத்
தங்கப்பல்லக்கிலேகும்-பங்கயப்பெண்திரௌபதி
தன்னுளத்தினிற்களிப் போங்க
ஐவரோர்

---

## பாண்டவர் அஸ்த்தினபுரம்போய்த் திருதராட்டிரன் பீஷ்மர் முதலானவரைப் பணிதல்.

விருத்தம் ௨௧.

தேர்மிசைவிதுரன்பின்வருமைவர்-திருதராட்டிரனெனுங்கபடத்
தீயனைப்பணிந்தார்திரௌபதியன்னேன்-தேவியையும்பணிந்திருந்தாள்
பார்வையில்லானைவரைத்துதித்தேநீர்-பணுமகத்தினைத்தம்பியர்கள்
பகர்ந்தனர்மகிழ்ந்தேன்சோதரரொடுநீர்-பரிந்துவாழ்ந்திடுமெனஅன்னேர்
சீர்பெறுகாந்தாரியினைநற்கங்கைச்-சிறுவனைப்பணிந்தவனேடு
சிலைவிதுரன்பின்வந்தகாரியமுஞ்-செப்பியேகிருபனைவணங்கி
ஏர்பெறுவிதுரனகந்தனிற்சார்ந்தா-ரெழிற்றிரௌபதியவணுற்ருள்
இசைந்திடுமறுநாளுதிட்டிரன்தான-மினிதொடுசெய்திருந்தனனே.

## இராஜசபையில் சூதாடலைக் குறித்துப் பேசுதல்.

விருத்தம் ௨௨.

தானந்தம்பியரோடுமுதிட்டிரன்செய்தான்
சகுனிதுச்சாதனன்முதலோர்பீஷ்மர்மற்றே
ரானிறைமண்டபத்தினிற்காமியனுலந்த
ஐவரைச்சுயோதனன்வருவித்திட்டான்மிக்க
மானமுளதன்மன்மண்டபத்தைநோக்கி
மகிழ்வினைக்கொண்டான்சகுனியோடுதிட்டிரன்
ஈனமுறுசூதாடல்சிலர்கள்நல்ல
இனமென்றார்சிலர்களவகனமென்றாரே.

௰. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

இவ்விதமாத்துரி-யோதனன்மண்டபத்தில்-இராஜர்கள்பேசுவரே

அநுபல்லவி.

ஒவ்வொருவன்தன்மனை யுற்றிங்குவிருந்தினை
யுண்ணுமுன்போதுபோ முபாயத்துக்கேதுவா
உறுசொக்கட்டான்சகுனி யுடனேநீவிளையாடி
யுவந்திருந்தாலதுவே நலமென்றனன்நாடி
இவ்வித

சரணங்கள்.

௧. நம்பினோர்மேற்றுரோகச் சித்தமும்-பிறர்
நங்கையர்மீதிச்சிக்கும் பித்தமும்
வெம்பவழக்கிற்சொல்ல பத்தமும்-ஒரு
மித்தோரைக்கலைக்குமுன் மத்தமும்
வம்புக்கிடமாஞ்சூதும் வாதுமாகாதென்றோதும்
வகையினையறியீரோ வஞ்சச்சூதாடுவாரோ
மாமனுடன்சூதாடே னெனத்தன்மன்புகன்றான்
மன்னனொருவன்கேட் டிதுவேநன்னெறியென்றான்
இவ்வித

௨. சகுனிதன்மராஜனைக் கிட்டி-நீயேதோற்
றுவில்லையுன்றனக்கு நட்டி
பகருநான்றோற்றாலொட்டி ரெட்டி-தாப்
பயப்படேனீயுஞ்சிங்கக் குட்டி
நிகராவிளையாடலாம் நீயேவென்றுபோடலாம்
நெஞ்சமஞ்சலாகாது நெருப்பென்றால்வாய்வேகாது
நிலைமைசொன்னேனெனப் பொய்வாசகம்படித்தான்
நீபொருட்கிடைந்தா லூர்சேரென்றுநொடித்தான்
இவ்வித

௩. கொடுஞ்சகுனிசெதுக்குங் கூச்சு-தன்மன்
குறிக்கத்தனக்குள்நகைப் பாச்சு
விஷங்கூவிக்கூட்டவேவாய்ப் பூச்சு-பூசிய
வீணனேடுதிட்ரன்வாய்ப் பேச்சு
விடாததைக்கன்னன்கண்டு விளையாட்டுக்கேமருண்டு
விடுந்தன்மாநீடுங்கும் விதத்தாற்காளான்பிடுங்கும்
வீரனீசண்டையெனிற் பிழையாயென்றுரைத்தான்
விஜயன்கன்னனைக்கொல்வே னெனமொழிவிரித்தான்
இவ்வித

---

## சகுனியோடு தருமராஜன் சூதாடல்.

விருத்தம் ௨௩.

கன்னனைக்கொல்வேனெனும்பார்த்தனையுதிட்ரன்
கையமைத்தேயெலிபுலியினைப்பழித்தா
லென்னநஷ்டியென்றுரைத்துச்சகுனிதன்னோ
டெழில்கொள்சொக்கட்டாடவேயிசைந்தான்
பன்னுசுயோதனன்தரித்ரன்புதையலிந்தப்
பார்க்குளெடுத்திட்டதுபோலேகுதித்தான்
நன்னெறியில்லாச்சகுனியெதிரேதன்ம
னுடுவான்சூதுவிளையாடுவானே.

௰௧. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

சூதாடினனேதன்மராஜன்-சகுனியோடு-சூதாடினனே

அநுபல்லவி.

காதாட்க்குழையாடக் கருணைவிழியிலாட
மீதார்பொன்முடியாட விரைமலர்க்காமாடச்
சூதாடி

சரணங்கள்.

௧. கொடுந்துரியோதன-னுலகத்தைத்தன்வசங்
கொளஎண்ணித்தன்மன்முன் அடுத்துச்-சகுனி
கூறும்பந்தயந்தனே-நானேதந்திடுவேனீ
குறித்தபந்தயம்நீயே கொடுத்து
விடவேணுமென்றனன்-கோடிசந்திரன்போலே
விளங்கிடுமுத்துமாலே யெடுத்துத்-தன்மன்
விருப்பால்வைத்தான்அதற்-கிடாகச்சூரியனை
மிகவுநெஞ்சினிலச்சப் படுத்தும்

சுடர்விடுரத்தின மாலையும்விளைய
துதித்திடுமின்னலென நீடொளிதழைய
படர்வாருவலயமும் வைத்ததிற்குழைய
பதைத்துத்துரியன்மகம் ஆசையில்நுழையச்
சூதாடி

௨. மகிழ்வுடனுதிட்டிரன்பங்-தயமீதெனச்சொலி
வானிற்சுக்கிரன்போலே சொலிக்க-வைத்த
மணிமுத்துமாலையைத்-துரியோதனன்கண்டெவ்
வகையினும்அதைமாமன் வலிக்க
அகத்தினில்நினைத்திடுங்-குறிப்பையவ்வஞ்சகன்
அறிந்துமோசத்தினாற் கெலிக்க-நாடி
அடர்மாயப்பாச்சிகை-யுருட்டினான்மருமகன்
அடுத்திடுமெண்ணங்கள் பலிக்க
பகர்சுயோதனனாட்டப் படிஜயந்தரிக்கப்
பந்தயம்வீழ்ந்ததில் மணலையுந்திரிக்கச்
சகுனிவல்லனெனத் தம்பியர்விரிக்கத்
தலைச்சுமைகழிக்கஇப் புவிமங்கையுஞ்சிரிக்கச்
சூதாடி

௩. தாளமாலையைத்தோற்ற-தருமராஜனைக்கொடுஞ்
சகுனியைவெல்லநெஞ்சிற் பதித்து-உயர்
தனமுதல்யாவையுந்-தோற்றுத்தம்பியரொடு
தனையுந்தோற்றான்சேல்போற் குதித்துத்
துரியோதனன்திரௌ-பதியினைக்குறித்தாடச்
சொன்னான்சபையில்மிக்க் கொதித்து-அந்தத்
துடைகாலன்சொல்லுக்குப்-பதிலொன்றும்பேசாமல்
தோதகக்குருடன்சம் மதித்து
இருந்ததால்விதுரனங் கிடுசாபம்வளைக்க
எரிந்தவன்பினுஞ்சொல்லுஞ் சொல்லம்புதுளைக்க
துரைப்பெண்பாஞ்சாலிபின் சுகத்தினிற்கிளைக்கச்
சுயோதனப்பாவிமனை தொறும்புற்றுமுளைக்கச்
சூதாடி

---

## விதுரனைத் துரிய னவமதித்தல்.

விருத்தம் ௨௪.

சகுனியொடுசூதாடியாவுந்தோற்ற
தன்மனுக்குச்சிலருருகச்சிலர்கண்ணில்லான்
சுகவாழ்வுமைந்தரொடுமழியுமென்றே
சொலும்போதேசகுனிபுண்பந்தன்மன்பாவம்

பகர்வேசிதிரௌபதியின்தீங்குமிங்கே
பலித்ததென்றான்சுயோதனன்பீஷ்மனைப்பார்த்திச்சொல்
வெகுதீதென்றான்விதுரனதுகேளாமல்
வீறுவான்சுயோதனன்தான்கூறுவானே.

௰உ. தரு-இராகம்-தன்யாசி-ரூபகதாளம்.

பல்லவி.

பஞ்சாங்கஞ்சொல்லவேண்டாம்-விதுராஎனக்குப்
பஞ்சாங்கஞ்சொல்லவேண்டாம்.

அநுபல்லவி.

அஞ்சாக்கெர்வம் பிடித்த
ஐவர்க்காநீ படித்த
பஞ்சாங்கஞ்

சரணங்கள்.

௧. தாரணிமீதினில் யாரும்-வாழ்த்துந்
தன்மன்தோற்றிடு மூரும்
பரிகரிநெடுந் தேரும்-எழில்
பாவியமட் வாரும்
அரைநொடிதனி லென்றன்கைவசம்
ஆகவேணுமொளி சிறந்திடுரசம்
அனலிடைஆழ்ந்தாற் றிரும்பவும்படுமோ
அகப்பட்டஎலியமு தாற்பூனைவிடுமோ
பஞ்சாங்கஞ்

௨. ஆகாசம்பூமி யென்று-சற்றும்
ஆலோசியாமல் நின்று
ஒகோதுள்ளினு ரன்று-எல்லாம்
ஒடுங்கிப்போச்சுதே யின்று
சாகேனென வேநெடுங்காடு
தனிலேகுதி குதித்தோராடு
தனித்துப்புலிக்கூட் டத்திற்பாயலாமா
தனைக்கொல்லவரும் பசுவினைவிடப்போமா
பஞ்சாங்கஞ்

௩. தன்மராஜனைக் கேட்டுப்-பொருள்
தனைவாங்கநெஞ்சில் நாட்டு
என்முன்பச்சைப்பாம் பாட்டு-தொழி
லினைக்கட்டுதிட்டிடா வீட்டு

பன்னுமிச்சபை யினிற்சூதாடிப்
பறந்ததேஉயிர் போனபின்னடி
பார்ப்பதேன்தன்மனை யெனக்குத்தொண்டு
படச்சொல்பாஞ்சாலியும் வரவிதியுண்டு
பஞ்சாங்கனு

---

## விதுரன் துரியோதனனுக்கு அவன் பிறப்பின் வரலாற்றைக் கூறிப் புத்தியுரைத்தல்.

விருத்தம் உரு.

துரியோதனன்கெடவேவிதுரராஜன்
சொற்கேளாதாலவனைப்பின்னும்நோக்கித்
தருமனைமாயச்சூதால்வெல்வித்தன்னோன்
தனமுதல்யாவும்பறித்துவாழ்தல்நன்றோ
வரிசைபெறுமன்னர்சபையிற்பாஞ்சாலி
வரலாமோஅவள்மனம்நொந்தால்வீண்போமோ
மறுவுமதிகுலமதற்குநீயேநற்கூர்
வாளென்பான்யென்மதியைக்கேளென்பானே.

யக. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

யோசனைசெய்துரியோதனா-நீயே
யோசனைசெய்துரியோதனா.

அநுபல்லவி.

ராஜலட்சுமிசீதை தன்னால்ராவணனந்த
நாளில்மாய்ந்தாற்போலத்திரௌ பதியால்மாயாமல்முந்த
யோசனை

சரணங்கள்.

க. ஆதியில்நீயுந்தம்பி மாரும்ராக்ஷதராக
அருமையாகச்சென்மித்து மடிந்தபின்பும்பூலோக
மீதினிலிணையில்லாக் கீர்த்திகொள்மகாயோக
வேந்தரானீர்கள்நில மாதுதன்குறையேக
யோசனை

உ. உங்கள்சுமையொழிக்கஅவள் பிரமன்றனைத்தேடி
உரைத்தாளயன்தேவர்கள் தேவேந்திரனுங்கூடி
மங்களமாயனுடன் சொன்னார்விரைவிலோடி
மால்பூமிபாரத்தைத்தீர்ப் பேனென்றானன்புநாடி
யோசனை

௬. அதைக்கேட்டபுவிமங்கை சந்தோஷங்கொண்டாளென்று
அம்புவிசொல்லக்கேட்ட திலையோவுன்றனைக்கொன்று
வதைக்கநமன்காத்திருக் கின்றானோர்காவில்நின்று
வாவென்றவனுக்கோலை விட்டழைப்பதோநன்று
யோசனை

---

## துரியோதனன் சபைக்குப் பாஞ்சாலி வரமாட்டேனென்று நியாயஞ் சொன்னாளெனப் பிரதிகாமியன் பொய்யுரைத்தல்.

விருத்தம் ௨௫.

இந்தவகைவிதுரன்சுயோதனனுக்கந்த
எழில்மால்மண்மீதரசனாகவந்த
தந்திரமுஞ்சொன்னானன்னோனைகைத்துத்
தன்வீட்டில்மேவுதிரௌபதியையிங்கே
யிந்தநிமிஷந்தனில்நீகொடுவாவென்றே
இகல்பிரதிகாமியனைவிடவேயன்னோன்
தொந்தமாப்போய்வந்தாற்போலேவந்து
துள்ளுவான்சுயோதனன்பால்விள்ளுவானே.

௧. தரு-இராகம்-எமுனா-ரூபகதாளம்.

பல்லவி.

என்னசொல்லுவேன்-சுயோதனா
என்னசொல்லுவேன்.

அநுபல்லவி.

பன்னுமென்சேதியினைக் கேளு
பாஞ்சாலிகொடுங்கொள்ளித் தேளு
என்ன

சரணங்கள்.

௧. ஞாயமாநீசொன்ன சேதி-தனை
நான்சொன்னேனிந் நீதி
பேயுங்கேளாதெனக் குதித்தாள்-எனைப்
பித்தனாகவே மதித்தாள்
என்ன

௨. கூலிக்குவிஷ முண்ண-எண்ணங்
கொள்வதாருன்றன் வண்ணச்
சாலவித்தைநேத்தி யென்றாள்-அழைத்
தால்பதிக்காமல் நின்றாள்
என்ன

௩. தனைத்தன்மன்தோற்று முன்னே-யென்
றனைத்தோற்கவும் பின்னே
மனுநீதியோவென் றெடுத்தாள்-வாரா
மற்றடுத்தெனை விடுத்தாள்
என்ன

---

## துச்சாதனன் பாஞ்சாலியின் கூந்தலைத்தொடல்.

விருத்தம் ௨௭.

இயம்புமப்பிரதிகாமியன்பாஞ்சாலியையழைத்தாலருஞ்சாப
மெய்துமென்றஞ்சிச்சுயோதனப்பாவியிடத்திலிப்புளுகுவாசகத்தைத்
தயவொடுபடித்தானவன்கொடுந்துச்சாதனன்தனையனுப்பினனந்த
க்ஷணந்திரௌபதிபாலவன்குதித்தோடித்தன்மனைப்பொருளையுந்தோற்
சுயமதியில்லாத்தம்பியர்களையுந்தோற்றெனதண்ணனையன்றுன் [றுச்
றுணைமுலைகுலுங்கநகைத்தவுன்றனையேசுடர்முடிராஜர்கள்நகைக்க
நயமொடுதோற்றான்வேசியைப்போலேநாள்தொறுமைவரைத்தழுவும்
நங்கைநீயென்பின்வாவெனக்கொடியோனறுமலர்க்கூந்தல்தொட்டனனே.

---

## துச்சாதனன் பாஞ்சாலியைக் கூந்தலைப்பிடித்துச் சபைக்கிழுத்துப்போதல்.

விருத்தம் ௨௮.

துஷ்டத்துச்சாதனன்பாஞ்சாலிகூந்தல்
தொட்டழுதுகாந்தாரியுடனுரைத்தாள்
பொட்டெனஅத்தோஷிசுற்றத்தார்கள்முன்னே
போகுதற்கேனேகசப்பென்றுள்தீயோனக்
கட்டழகிதிரௌபதியின்குழல்பிடித்துக்
கடிதிழுக்கக்கண்டோரையோபெண்பாவம்
விட்டுப்போகாதென்றுசொல்லநெஞ்சம்
வேகின்றான்சபைக்கவளோடேகின்றானே.

௰௫. தரு-இராகம்-ஆநந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

பாவிதுச்சாதனன்திரௌ-பதிகூந்தல்மண்மேற்-படஇழுத்தேகுவானே

அநுபல்லவி.

பூவுலகிலிதனைப் போலுங்கொடுமைசெய்யப்
போமோஇப்பாவம்பொல்லா தெனச்சொல்லஐயோவெய்ய
பாவி

சரணங்கள்.

க. இதற்கோபாஞ்சாலனிவள்-தனைப்பெற்ருனென்றுசில
ரேங்கிக்குழைந்துகண்ணீர் விடவே-இந்தப்
பதிவிரதைபாஞ்சாலியிப்-பாடுபடவுடன்
பட்டோருடனேநாசப் படவே
விதிநேர்ந்ததற்குத்தடை-யில்லையெனவேசிலர்
மிகவும்நொந்தருஞ்சாபம் இடவே-லோக
மீதிலேழையழுதகண்-ணீர்கூர்வாளாய்க்கொன்று
விடுமென்றுசிலர்புகன் றிடவே
பாவி

உ. எந்தக்கதையிலுமிவ்-வநீதிதனைக்கேட்ட
திலையென்றுபலர்சொல்லி முடிக்க-நீதி
யிலையோதிரிலோகமு-மழியச்சம்பவித்ததோ
எனப்பலர்மிகக்கிலி பிடிக்கச்
சந்திராதித்தருள்ள-நாள்வரைக்குமிவ்வசை
தான்போகாதெனப்பலர் துடிக்க-அர
சன்கோபித்தன்றுகொன்ருல்-தெய்வம்பொறுத்துக்கொல்லத்
தலைப்படுமென்றுபலர் படிக்கப்
பாவி

ந. மதத்தாற்செயுமித்தீமை-யினைப்பார்த்தன்சகிப்புதெவ்
வாறென்றுமேலோருளம் பதறக்-குல
மாதுபடுந்துயரங்-கண்டோர்வலைக்குட்பட்ட
மான்போல்நடுங்கிக்கைகா லுதறக்
கதிக்குந்தலையுஞ்சோ-தரர்தலைகளும்வீமன்
கதையாற்றிசைகள்தொறுஞ் சிதற-அதைக்
காந்தாரிகேட்டுடனே-வக்கணையிட்டோரிபோற்
கலங்கிப்புரண்டழுது கதறப்
பாவி

---

## பாஞ்சாலி சபையில் முறையிடல்.

விருத்தம் உக.

இந்தவகைபலருருகக்கண்ணீர்சோர
ஏந்திழைதிரௌபதிசபையில்வந்தாள்மன்னர்
சிந்தைநொந்தாரிரத்தமழைபெய்ததங்கு
சினவீமன்கதைதொட்டான்சிலைமேற்பார்த்தன்

சுந்தரக்கண்வைத்திட்டானிளையோர்சிறித்
துள்ளினரிவர்தமைத்தன்மன்றணித்தான்
விந்தைகொள்பாஞ்சாலிதுச்சாதனனல்வேந்தர்
வீறுவார்சபையதனிற்கூறுவாரே.

௰௬. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

சபையில்நடந்ததைச்சொல்வேன்-விவரமாகச்
சபையில்நடந்ததைச்சொல்வேன்.

அநுபல்லவி.

விபவலட்சுமிவாச மிகுந்தஅதியுலாசச்
சுபங்கொண்டிடும்பிரகாசச் சுடர்முடிபெறும்ராஜ
சபையில்

சரணங்கள்.

௧. முடிமன்னரைப்பார்த்துப்பாஞ் சாலி-வெம்பி
முறையிடும்போதாண்பிள்ளை சோலி
அடல்வில்வளைத்தநாளில் நீலி-கேட்
டறியாயோகள்ளிக்கேன்முள் வேலி
கடைகட்டடி யென்றந்தக்
காலனூர்க் கேகமுந்த
விஷத்துச்சா தனனிந்த
வீம்புசொன்ன னிறைந்த
சபையில்

௨. இதுவும்நீதியோராம ராமா-மான
மில்லையோயென்னருமை மாமா
மதிகுலத்தோர்க்கிவ்வினம் ஆமா-என்
வதையிடிக்காமல்விட்டுப் போமா
உதிட்ரன்றனை முன்வென்று
உறுமென்பேர் பின்புகன்று
குதித்தாட ஒவ்வாதென்று
கோதைமொழிந் தாள்நின்று
சபையில்

௩. அவள்வார்த்தைபளிங்குக்கண் ணடி-யென்
றறிந்துமென்னண்ணன்பட்சங் கூடிச்
சுவர்போலிருப்பதற்கோ கோடி-ராஜர்
சூழ்ந்தீர்நீர்பெண்பாவத்தைத் தேடித்

தவிக்கவேண்டாங் கண்கெட்டுத்
தரும்ஞாயத்தை வாய்விட்டு
விவரியுமென் றேற்பட்டு
விகர்ன்னனிட்டா னேஓட்டு

சபையில்

ச. கட்டுத்தடிக்குமிஞ்சுக் தோண்டி-வி
கருணன்தானென்றுன்பாதந் தீண்டித்
தட்டிற்றும்பூலம்வைத்து வேண்டித்-தீர்ப்புத்
தாச்சொன்னாரோநீமடத் தாண்டி
முட்டையிற் கூவச்சிசி
முளைத்தாயெனக் கைவீசித்
தொட்டெனக் கன்னனேசிச்
சொன்னான்சுயோ தனத்தோஷிச்

சபையில்

---

## திரௌபதியைத் துகிலுரிதல்.

விருத்தம் ௯௰.

விகருணனுடனேக்ன்னனிவ்வாது
விளைத்திடச்சுயோதனன்கண்டு
வெய்யதுச்சாதனன்முகம்நோக்கி
வீண்வழக்காடுதிரௌபதியின்
துகிலினையுரியென்றியம்பினன்விதுரன்
துடித்தெழிற்கன்னனைப்பார்த்துத்
தோஷிநீவழக்கோரஞ்சொலப்போமா
சுகப்படாயெனவிழிசிவந்தான்
தருமதவீமன்கதையினைப்பார்த்தான்
தனஞ்சயன்வில்லினைப்பார்த்தான்
தம்பியர்கொதித்தாருதிட்டிரன்தணித்தான்
தையல்திரௌபதிநெடுந்துகிலை
வெருகொடியோன்துச்சாதனனுரிந்தான்
மெய்ம்மனங்குழலுடல்சோர
விழியில்நீர்சோரமாயனைநினைத்து
மிகவருந்தவள்புலம்புவளே.

௪. திபதை-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

## கண்ணிகள்.

௧. அருமையாநான்பெண்பிறந்தேன் — செங்கண்மாலே-ஐயோ
ஐயய்யோபழியென்செய்தேனோ — செங்கண்மாலே

௨. பருத்திதன்னைப்போலும்பாடு — செங்கண்மாலே-யான்
படஎன்றலையிலயனெழுதினனோ — செங்கண்மாலே

௩. பாஞ்சாலராஜன்செய்தவமோ — செங்கண்மாலே-அம்
பலத்தினிலிப்படிவலித்தெனைவிட்டது — செங்கண்மாலே

௪. வேஞ்சாலதிலேநெய்யதுபோற் — செங்கண்மாலே-நெஞ்சம்
வெந்துடல்சோர்ந்துநடுங்கவுந்தகுமோ — செங்கண்மாலே

௫. பூனைவாய்ப்பைங்கிளியைப்போலே — செங்கண்மாலே-வெம்பிப்
புலம்பித்தவித்திடவிடுவதுநலமோ — செங்கண்மாலே

௬. ஆனதுணையைநான்காணேனே — செங்கண்மாலே-நெடும்
ஆனையுண்டிடுவிளாங்கனியானேனே — செங்கண்மாலே

௭. தாதுபிராதொன்றிலைஐயோ — செங்கண்மாலே-வெண்
தயிரிற்சுழல்மத்தெனவுழல்கின்றேன் — செங்கண்மாலே

௮. ஆதரவெனக்குனையல்லாமற் — செங்கண்மாலே-யெனக்
காராவாரெனநீகுறியாதேன் — செங்கண்மாலே

௯. பட்டகாலினில்முள்வேதைக்குச் — செங்கண்மாலே-ஊசி
பாய்ச்சிநடக்கச்செயும்வகையைப்போற் — செங்கண்மாலே

௰. வெட்டுணிதுச்சாதனன்றீண்டிச் — செங்கண்மாலே-யென்
மென்துகிலுரியவுஞ்சம்மதிதானோ — செங்கண்மாலே

௰௧. புண்ணிற்காரச்சீலையைப்போற் — செங்கண்மாலே-வம்பு
புகன்றசுயோதனன்மகிழ்ந்துபூரிக்கச் — செங்கண்மாலே

௰௨. மண்மிசையெனைக்கூத்தாட்டுவதற்குச் — செங்கண்மாலே-யுன்
மனத்திலும்பகைவருவானேனையா — செங்கண்மாலே

௰௩. ஏழையைக்கண்டால்மோழைபாயச் — செங்கண்மாலே-தடை
யிலையென்றவனின்னமுந்துள்ளலாமோ — செங்கண்மாலே

௰௪. கோழையிற்சிக்கியஈயைப்போற் — செங்கண்மாலே-நிலை
குலைந்துள்மயங்கியேயலைந்திடவிதியோ — செங்கண்மாலே

௰௫. சந்திரகுலராஜரெல்லாஞ் — செங்கண்மாலே-ஐயோ
தன்முகங்கருடசேர்வையைப்போலெண்ணிச் — செங்கண்மாலே

௰சு. இந்தஅந்நீதந்தனைக்கண்டுஞ் செங்கண்மாலே-நீதி
இனைச்சொல்லாததுன்மனமறியாதோ செங்கண்மாலே
௰எ. ஆதரவில்லார்க்காதாஞ் செங்கண்மாலே-நீ
யன்றேவுனக்கிதுநன்றேநன்றே செங்கண்மாலே
௰அ. பேதைநானிவ்வேதனையிற்படச் செங்கண்மாலே-யென்ன
பிழைசெய்தேனுனக்கிதுவழகோசொல் செங்கண்மாலே
௰௯. தன்மந்தற்காத்திடுமென்றேமுன் செங்கண்மாலே-சொன்ன
சாஸ்த்திரமெனக்குமாத்திரம்வேற்றுமையோ செங்கண்மாலே
உ௰. துன்மையெனக்குச்செய்வோனுடல் செங்கண்மாலே-பனந்
துண்டெனவுருளும்படிசெய்யாயோ செங்கண்மாலே
உக. கொழுகொம்பில்லாக்கொடியதுபோலுஞ் செங்கண்மாலே-யான்
குழைவதுநீசெயுஞ்சூஸ்த்திரமலவோ செங்கண்மாலே
உஉ. அழுதபிள்ளைபால்பெறுமதனுற் செங்கண்மாலே-உன்
னடிதொழுதேன்கைநழுவவிடாதே செங்கண்மாலே
உ௩. குலைநடுங்கச்செய்வோனுடன் செங்கண்மாலே-நீ
கூடியேவேடிக்கைபார்ப்பதுவிருதோ செங்கண்மாலே
உச. மலைபோலுன்றனைநம்பியஎன்மேற் செங்கண்மாலே-அருள்
வையாவிடில்நானுய்வேனோநற் செங்கண்மாலே
உரு. உடுத்திடும்வஸ்த்திரமேசோர்ந்தாற் செங்கண்மாலே-கைக்
குபசாரஞ்சொல்லுவார்களுமுண்டோ செங்கண்மாலே
உசு. அடுத்தோர்களைரட்சிக்குந்தொழிலைச் செங்கண்மாலே-யென்
னளவினிலொளித்திடுங்களவறியேனே செங்கண்மாலே
உஎ. முதலைவாய்ப்பட்டிடுமதயானை செங்கண்மாலே-ஆதி
மூலமென்றுனையழைத்தேகனிவாகச் செங்கண்மாலே
உஅ. துதித்தநாளினிற்றுயரந்தீர்த்தாய் செங்கண்மாலே-அதன்
சுதந்தரமென்சுதந்தரத்திலும்பெரிதோ செங்கண்மாலே
உ௯. தீயஇரணியனைக்கொல்லச் செங்கண்மாலே-நர
சிங்கமாய்த்தூணினில்வந்தவதரித்துச் செங்கண்மாலே
௩௰. தூயபிரகலாதனன்றுயரைச் செங்கண்மாலே-அன்று
தொலைத்திடுங்கிருபையென்னிடத்திலிராதேன் செங்கண்மாலே
௩க. சிற்றிடையிற்றிகழ்வஸ்த்திரந்தனைச் செங்கண்மாலே-மென்
செங்கையிற்றுங்குமென்பேதைமைவிட்டுச் செங்கண்மாலே
௩உ. முற்றிலுமுனையேநோக்கிக்கைகுவித்துச் செங்கண்மாலே-மிக
முறையிடுமென்மேற்கருணைசெய்யையா செங்கண்மாலே

## திரௌபதிக்குத் துயில் வளர்ந்ததைக்கண்டு, சபையிலுள்ள பெரியோர்கள் அஞ்சலிசெய்து துதித்தல்.

விருத்தம் ௩௧.

இவ்வகைமாயனைத்துதித்ததிரௌபதிக்கே
யெனதையன்துகில்வளரவேநினைத்தான்
அவ்வகையுண்டாங்கோடிதுகிலெங்கெங்கு
மரும்வீரர்சேர்த்தசந்தனர்பினுமுதித்த
திவ்யவண்ணச்சேலையுரிந்திடமாட்டாமல்
திகைத்தான்துச்சாதனன்சுயோதனனங்குற்ற
செவ்வேல்மன்னவர்பாஞ்சாலியைக்குறித்துத்
தேறுவாரவரவர்கள்கூறுவாரே.

௰எ. தரு-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

ராஜர்கள்பேசினரே-சபையில்
ராஜர்கள்பேசினரே.

அநுபல்லவி.

பூசிதமிருந்திடு நெடுசுடர்வடிவேல்
போல்விழிதிரௌபதியைக் குறித்துச்செங்கோல்
ராஜர்கள்

சரணங்கள்.

க. மன்னுந்திரௌபதி துகிலினையொருக்காலே-உரிந்து
மனஞ்சலித்துத்துச் சாதனன்மென்மேலே
சின்னப்பட்டதைச் சுயோதனன்கண்ணாலே-கண்டு
ஜெகப்புரட்டிபாஞ் சாலிமந்திரத்தாலே
உந்தமிகுந்திடு வண்ணச்சேலை
உதிக்குதென்றுனது கேட்டுமூலைக்குமூலை
ராஜர்கள்

உ. மந்திரத்தாலாடை யுதித்திடாதென்றும்-எழில்
மாதுதிரௌபதி தெய்வமேயாமென்றும்
சிந்திப்போர்கள் பலன்பெறுவாரென்றும்-தங்கள்
சித்தமகிழ்ந்திவட் கிணையார்தானென்றும்
இந்தலோகந்தனைப்பெறு மாதாவென்றும்
இவள்கற்புக்கருந்ததி யேயாமென்றும்
ராஜர்கள்

௩. நித்தமும்பொற்குடத்தைப் பழித்திடுகொங்கை-யுற்ற
நேரிழையார்முழுதுந் தொழுதிடுகங்கை
புத்ரன்வீட்டுமன்திரௌ பதியெனுமங்கை-கற்பாற்
பூந்துகில்வளர்வதினாற் றன்னிருசெங்கை

பத்தியாற்கூப்பியே துதித்திடக்கண்டு
பைந்தொடிபுகழ்தனை யானந்தமேகொண்டு
ராஜர்கள்

---

## துரியோதனன் முதலியோரை பீமன் கொல்வேனென்று சபதஞ்செய்தல்.

விருத்தம் ௬௨

சாஜரிந்தப்படிமதிக்கஉயர்பாஞ்சாலி
நைந்தழுதாள்வீமனவள்துகிலுரிந்த
நாசகாலன்றுச்சாதனனோடங்கு
நண்ணுசகோதரர்நூற்றுவரையும்பார்த்தே
ஏசியெங்களைத்தடுக்குந்தன்மனாலே
யிங்குயிர்நீவைத்திருக்கிறீர்களென்று
வீசுநீள்கதைதொட்டென்னுடனேபோர்செய்
வீரென்பான்எனக்கிணையிங்காரென்பானே.

---

## பஞ்சபாண்டவரும் திரௌபதியும் சபதஞ்செய்தல்.

விருத்தம் ௬௩.

சிந்தைகொதித்திவ்வாறுவீமனோதத்
தீயதுச்சாதனன்றனைச்சுயோதனன்முன்பார்த்து
மத்திரத்தாற்றிரௌபதிக்குண்டாகுஞ்சேலை
வரலாறும்வீமன்மதத்தாலேசொன்ன
துந்தெரியத்தன்துடைமேல்வளைவைக்கச்
சொன்னனத்துடையழுகச்சபித்தாள்அந்தச்
சுந்தரிவீமன்கிரீடியினையோரங்கு
துள்ளுவார்சபைநடுங்கவிள்ளுவாரே.

௰அ. தரு-இராகம்-தோடி-ஏகதாளம்.

பல்லவி.

விவரமுடனேகேளும்-ஜனமேஜயா-விவரமுடனேகேளும்

அநுபல்லவி.

அவிர்செம்பொன்முடி யுறும்
—அரசர்களிடந் தொறும்
அச்சப்படுத்த நிதம்
ஐவர்செய்தார் சபதம்
விவரமுடனே

சரணங்கள்.

௧. தருமென்குழலைத் தீண்டு-துச்
சாதனன்போரில் மாண்டு

வெகுரத்தமோடிப் பாண்டு-மைந்தர்
விறல்முரசொலி நீண்டு
முகிலிடியெனச் சென்று
முழங்கினற்குழ லன்று
முடிப்பேனென்றே மார்தட்டி
மொழிந்தாள்பாஞ் சாலிகிட்டி
விவரமுடனே

உ. சடைபோலொன்னுரை மடித்துத்-துச்
சாதனன்ரத்தங் குடித்து
உடல்குளிருமுன் துடித்து-நீரை
யுறுகதையினு லடித்து
அடுத்துத்திவலைச் சலம்
அதையென்வாயினுல் நலம்
ஆக்கொள்வே னெனமீறி
அறைந்தான் மாருதிசீறி
விவரமுடனே

௩. கன்னனுயிரை யள்ளி-யுண்ணக்
கறுவினுன்பார்த்தன் துள்ளிப்
பன்னுநகுலன் கொள்ளிச்-சவு
பலன்தலைவிழத் தள்ளி
என்பகையினைதீர்ப் பேன்
என்றுன்சகுனிக்கு நான்
எமனெனச் சினந்தாவி
எழுந்தான்சா தேவன்மேவி
விவரமுடனே

---

## பாண்டவரை வனம்போக வுரைத்தல்.

விருத்தம் ௩௪.

இவ்வகைஐவர்செய் திடுஞ்சபத
மிராஜர்கேட்டுத்திகிலடைந்தா
ரியம்புபேய்த்திருடனெனுந்திருதராட்டிர
னெழிற்றிரௌபதியடிபணிந்தே
செவ்விதழமுதேமைத்துனன்முறைமை
சிந்தையிலெண்ணியென்மைந்தர்
செய்திடும்விளையாட்டினைப்பொறுத்தருள்நீ
செய்யெனப்பிதற்றிநீகேட்கு
மெவ்வகைவரமுமுதவுவேனென்று
னேந்திழைஐவர்களடிமை

இனையகற்றென்ருளவனவர்களைப்பார்த்
தெனதுபுத்திரர்கள்மேலிருக்கும்
அவ்வளவன்போடுங்களைவளர்த்தேன்
ஆதலால்தோற்றசம்பத்தை
யருளினேனிந்த்ரப்பிரஸ்த்தம்நீரேசென்
ருன்சிலாங்குபேசுவரே.

௫. திபதை-இராகம்-தன்னியாசி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧. திருதராட்டிரனிந்தப்-படிசொன்னனவன்றனைத்
தீயசகுனிபார்த்து மீறியே
அரியபுலியின்வாலை-யுருவிவிடுவாருண்டோ
அனலினற்சுட்டபுண் ணறியே

௨. போகும்வாயினற்சுட்ட-புண்ணருறைதவர்
பொங்கும்படியேமிகப் பேசியே
நாகசர்ப்பத்தினைப்-பகையாக்கிக்கொண்டாற்போல்
நாங்கள்பகைகொண்டோங்கை வீசியே

௩. எங்களைக்கொலைவ-செழுந்துசபதமிங்கே
யிட்டதைக்கேட்டறி யாயோ
தங்குந்தேள்தீயில்வீழ்ந்-தாலதையெடுப்பவன்
தனைக்கொட்டாதெனக்குறி யாயோ

௪. என்றனனதைக்கேட்ட-துரியோதனன்றனக்
கிளையோன்துச்சாதனன் றனையும்
கன்னனையும்நோக்கி-னனவன்குறிப்பினைக்
கண்டுகெபடமுந்தீ வினையும்

௫. செய்யுந்துச்சாதனன்-தன்மராஜன்வாடச்
சிரித்துநீதோற்றிடும் ஊரும்
வையகம்புகழ்நாடு-நகாமுங்குதிரையும்
மதயானையும்நெடுந் தேரும்

௬. உனக்குதவச்சொன்ன-என்தந்தைவார்த்தையா
லுளமகிழ்ந்தேநீமென் மேலே
மனப்பால்குடித்திட-வேண்டாம்உடம்பின்றன்
வாயினிலேயொருக் காலே

எ. அகப்பட்டவிரல்போய்விட்-டாலுங்கைதப்பினுல்
அதுவேநல்லகாலம் ஆதும்
வகையென்றுலோசித்துத்-தோற்றசம்பத்தின்மேல்
மனத்தைச்செலுத்திப்புண் ணுரும்

அ. மார்க்கத்தைக்கட்டிவை-நீர்பட்டஅடிமையை
மன்னனென்தந்தையால் நீங்கி
வீரிதுவேபதி-ஞ்யிரமாமென்று
நினைத்துவடவையும்பின் வாங்கித்

௯. தவிக்குங்கானகத்திற்-போய்வாழுமென்றனன்
சதிகாரன்கண்ணில்லான் கேட்டுச்
சவலைபோம்பிள்ளைக்கு-மலடிபால்கொடுத்த
சந்தோஷங்கொண்டுசீர் நாட்டு

௰. விதுரன்பீஷ்மரோட-வ்-விசுவாசபாதகன்
மேற்பூச்சுப்பூசவே நாடி
மதிக்குஞ்சுயோதனன்-கன்னன்சகுனியிவர்
மாநிலத்தினிலேகண் மூடி

௰௧. நான்தானென்றெண்ணியே-யென்சொற்குமீறியே
நாடுநகரமைவர் களுக்கு
வன்தரச்சொல்கிறு-யென்கிறுரவர்களுக்
கென்றுந்தீராமனச் சுளுக்கு

௰௨. ஞாயதுகொண்டிருக்-கின்றூர்கொட்டையில்
நூல்நூர்க்குமென்பிள்ளைகள் சமர்த்தை
ஆய்ந்துநன்றுக-அறிந்தநீங்களிங்கே
ஆலோசித்திதற்கொரு விதத்தை

௰௩. முறைமைப்படிசொலு-மென்றுன்விதுரனேடு
மூதறிவுளமந்த்ரி மாரும்
நெறிகொளுமனுநீதிப்-படிசெய்யாவிடிலது
நீணிலத்தனிலனே வோரும்

௰௪. வசையாகச்சொல்லுவா-ரென்றுர்கள்குருடன்தன்
மனைநோக்கிநீர்தோற்ற பதியை
இசைந்தென்புத்திரர்தர-மாட்டாரடிமைதனை
யிப்போதுநீக்கினன் விதியை

௰௫. வெல்லளவராலாகு-மாதலாற்காட்டுக்கு
மிகவுந்துரிதமதை மேவி
வல்லிதிரௌபதிதம்பி-மார்மற்றோருடனீபோய்
வாழ்வாயென்றுன்படு பாவி

௰௬. இந்தமொழியைக்கேட்ட-விதுரன்திருதராட்டிரன்
எண்ணத்தைத்தன்னெஞ்சில் மதித்துச்
சுந்தரத்தருமனைப்-பார்த்துன்பெரியதந்தை
சொன்னசூட்சியைநெஞ்சிற் பதித்துக்

௰௭. காட்டிற்பன்னிரண்டு-வருஷம்நீர்பாஞ்சாலன்
கன்னிகையோடன்பு பொருந்தி
நாட்டமுடன்சஞ்-சரிக்கவேணுமென்றும்
நல்லரிச்சந்த்ரன்முன் வருந்தி

௰௮. பதிதோற்றக்கதையையுஞ்-சொல்லிஅக்கியாதவாசம்
பகரோர்வருடஞ்செய்த பின்பு
சதிர்கொள்தேரும்யானை-யுங்குதிரையும்பரி
சனங்களுஞ்சூழ்ந்திட முன்பு

௰௯. போலரசினைச்செய்வீ-ரென்றுமவ்வோராண்டுள்
புனிதமாவாழுமோர் தினத்தில்
சாலஇங்கெதிர்ப்பட்டா-லத்தினமுதற்காட்டிற்
றடையில்லாமற்படி மனத்தில்

௨௰. மாறவொண்ணாத்துய-ரோடுபன்னிரண்டு
வருடம்பின்செலவேணும் என்று
கூறினன்பீஷ்மர்மற்-றோரதுநலமெனக்
குறித்தாரொருமனதாய் நின்று

---

## தருமன் தம்பியரோடு வனம்புகுதல்.

விருத்தம் ௯௫.

விதுரனிவ்வாறுசொன்னதைக்கேட்ட
மெல்லிதிரௌபதியவனடியில்
வீழ்ந்துபாண்டவரையெனதுபுத்திரரை
மென்குழல்விரித்தளன்றனைப்பூ

பதிகள்முன்னெங்களடிமையைநீங்கப்
பந்தயமிங்குவைத்தாடல்
பண்பெனவுரைத்தாளுதிட்டிரனிசைந்து
பாவியாஞ்சகுனியினுடனே
சதிர்பெறுதான்செய்புண்ணியந்தனைப்பந்
தயமெனவைத்துமாலருளால்
தான்கெலித்திட்டவ்வடிமையையொழித்துச்
சதிசுயோதனன்முதலோர்கள்
அதிபொறுமையினல்வெந்திடமற்ற
அரசரும்யாவருமுருக
அன்புளதம்பிமார்கள்மற்றவரோ
டரணியஞ்சேரவருவனே.

---

## சபாபர்வம்-முற்றிற்று.

---

சபாபர்வத்தில், விருத்தம்-௯௫. தருக்கள்-௰௮. திபதைகள்-௫.

———:( * ):———

பாயிரம் க-இ-ம், பர்வம் உ-இ-ம், கூடிய வெண்பா உ,

விருத்தங்கள் ௬௰. தருக்கள் ௫௮. திபதைகள் ௰௧. ஆ௶ ௱௬௰௧.

---

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

மூன்றாவது

# ஆரணியபர்வம்.

## கண்ணன் துதி.

விருத்தம் க.

முகமாறு முகமைந்து முகநான்கு முகமொன்று முதலுமாகிச்
சுகவாரி நால்வர்களும் பன்னிருவர் களுங்கண்ட சுப்பிரதீப
ஜெகஜால வல்லவனை அடியார்க்கு நல்லவனைத் திருமார்பானை
மகமாயை சோதரனை முகுந்தனைவை குந்தனையாம் வணங்கிவாழ்வாம்.

## பரமன் துதி.

——: (*) :——

விருத்தம் உ.

அரியுந்திகழ்சது முகனுஞ்சுரர்களு மணிவெம்பரிதியு மாமுனிவர்
திரளும்பரிவொடு நிதம்வந்தனையது செயமங்களமயில் மீதுறையும்
முருகன்றனையருள் பரமன்றிருவடி முடிகொண்டெழின்மிகுமாரணிய
பருவந்தனையடி யவனன்புடனெழில் பாவும்புவிமிசையோதுவனே.

## சௌனகமுனி சூரியனால் அக்ஷயபாத்திரம் பெறும்படி தருமனுக் குபதேசித்தல்.

விருத்தம் ங.

கானகஞ்சென்றிடுதருமன்றன்பின்போன
கனிவுளசேனைக்குவிடைதந்தங்குற்ற
மானசௌனகனைத்தாழ்ந்தானன்னோன்றன்
மனைநோக்கியுன்பாற்போசனமேகொள்ளுந்
தீனபிராமணர்கள்பன்னீராயிரம்பேர்
தினம்பசிபோக்கப்பாத்ரஞ்சூர்யனாலே
தூனலங்கொள்நீபெற்றீதல்நன்றென்று
சொல்லியேயம்முனிவன்செல்லுவானே.

## கிம்மீரன்வதையும், சூரியனால் அக்ஷயபாத்திரம் பெறுதலும்.

விருத்தம் ௪.

சௌனகமுனியிவ்வணந்தருமனுக்குத்
தான்சொலியகன்றபினுதிட்டிரன்
சகலரும்புகழ்சூரியன்றனாற்பாத்ரந்
தருமறையோர்பசிதணிக்க
நவில்மறுநாள்பெற்றீந்தவரோடும்
நள்ளிரவிற்செலும்போது
நங்கைதிரௌபதியைப்பகனிகற்றம்பி
நமனுமெய்நடுங்குகிம்மீரன்
எவர்களுமகிழுமலரெனவந்தி
யெழில்கொள்விண்தாவினன்கூட
எழும்பிவீமன்பாதகன்றனையுதைத்தான்
இணையில்பாஞ்சாலியையன்னோன்
அவனியில்விடுத்துமாருதியுடன்போ
ராடிமாண்டான்திரௌபதியோ
டம்மதவீமன்றருமனைப்பணிந்தான்
அவன்மிகவுளங்களித்தனனே.

௧. திபதை-இராகம்-மத்தியமாவதி-சாப்புதாளம்.

### கண்ணிகள்.

௧. மனமகிழுதிட்டிரன்-சோதரரொடுபிரா
மணர்பன்னீராயிரம் பேரும்
கனமுடன்சூழ்ந்தேகச்-செலும்போதுசூரியன்
கடலிற்றாழ்ந்தானெழில் சாரும்

௨. தைதவனமென்னுங்-கானகந்தன்னிலே
தன்மராஜன்தங்கி யிருந்து
எய்திடுமோரேழு-பச்சைப்புரவிகள்
இழுக்குந்தேரினிற்சோதி பொருந்து

௩. பானுவிண்ணிடையுதித்-தானவனடியினைப்
பரிவானுதிட்டிரன் துதித்து
மானிகளாமப்பன்-னீராயிரம்பிரா
மணரையுந்தாழ்ந்துளங் கதித்து

௪. அவர்களுந்தம்பி-மாரும்பின்னேவர
அழல்வீசுங்காட்டினைக் கடந்து
எவர்களுமதித்திடுங்-காமியவனந்தனில்
எய்தியங்கேமிக அடர்ந்து

௫. திரமுற்றயானையுஞ்-சிங்கமுமுறவாகத்
திரியும்வேடிக்கையைக் கண்டு
அருமையாக்கொண்டாடி-பலகனிவர்க்கங்கள்
அமுதிலுமினிதாக உண்டு

௬. இங்கிதஓமாக்னி-தன்னைவளர்ப்பதில்
எழில்முகில்போற்புகை தாவி
தங்குங்கானகமெல்லாம்-நீடுமிமையகிரிச்
சாரலைப்போல்வளம் மேவி

௭. ஓங்கியதாற்களித்-திருந்தார்நற்பாஞ்சாலன்
உயர்பாண்டியமகாராஜன் பின்னும்
நீங்காதநால்வகைச்-சேனைகள்சூழ்ந்திட
நிகரில்விராடன்வேல் மின்னும்

௮. கைத்தலத்தரசரு-முறவினத்தவர்களுங்
கற்றிடுங்கவிவாணர் இனமும்
உத்தமநெடுமாலும்-யாதவகுலத்தோரும்
உலகிலுள்ளோரனு தினமும்

௯. போற்றும்வேதவியாச-ரும்வந்தாரவர்களிற்
புகல்சிலராஜர்கள் பரிந்து
நாற்றிசைநிதமெச்சுந்-தன்மராஜனைப்பார்த்து
நண்ணும்பூலோகங்கள் எரிந்து

௰. போகக்கண்களினூற்றீப்-பொறிகளைச்சிந்தியே
பூவைபாஞ்சாலிதன் உள்ளம்
வேகச்சபையினில்-மானபங்கஞ்செய்த
விறற்சுயோதனன்சேனை வெள்ளம்

௰௧. தலைதலையாகவு-ருண்டிடவவனோடுந்
தம்பிமார்நூறுபேர் மேலும்
கலகநாரதனுகுஞ்-சகுனியுங்கன்னனுங்
கலங்கிடத்திசையிரு நாலும்

௰௨. நடுங்கிடப்போர்செய்து-கொல்லுகிறோமென்று
நாட்டும்வார்த்தையைமாயன் கேட்டு
அடுத்தந்தராஜரை-நோக்கிக்கொடுந்தீமை
யதனைமிகச்செய்வோர் மூட்டுப்

௰௩. பூச்சிபோல்மாய்வாரென்-றறியீரோவென்று
புகன்றுலட்சுமிபர தேசம்
வாய்ச்சிருப்பதுபோலே-தம்பியர்தாய்திரௌ
பதியுடனேவன வாசம்

௰௪. பண்ணுந்தன்மனைப்-பார்த்துக்குந்திதேவியைப்
பாவைகாந்தாரியின் இடத்தும்
வண்ணமிகுமுன்றன்-மைந்தரைப்புவியெங்கும்
மதித்திடநீள்செங்கோல் நடத்தும்

௰௫. குணவான்பாஞ்சால-னிடத்திலனுப்பென்றுங்
கூறிநீகொஞ்சநாள் காட்டில்
மணமுமலரும்போலே-சோதரர்தம்மொடு
மருவிக்கழித்தபின் னாட்டில்

௰௬. சகலசம்பத்தையும்-அனுபவிப்பாயென்று
தான்வாழ்த்தித்துவாரகா புரியை
மகிழ்வொடடைந்தான்வியா-சனும்வந்தமாமன்ன
வருமேகினார்மர உரியைப்

௰௭. பூண்டுவனவாசஞ்-செய்தராமனைப்போல
புகல்காட்டிலுறைதன்ம ராஜன்
ஆண்டவன்மால்சொன்ன-படிதாய்மற்றோரையும்
அனுப்பிவிட்டான்விசு வாசன்

---

## விதுரன் திருதராட்டிரனுக்குப் புத்திசொல்லுதல்.

விருத்தம் ௫.

தருமன்மால்சொற்படிமைந்தர்களைத்தாயைத்
தானீங்கிக்காடுறைந்தான்குருடனிங்கே
உரியவிதுரனைநோக்கிமிகவிஸ்வாச
முறுபூனையுறிதாவினாற்போலவர்
பரிவுடனேவருவாரோவாராரோஎன்
பாலகர்மீதிற்பகையுண்டோசொல்லென்ன
மருவுபகையொடுவருவாரென்றுன்தீயன்
வாடினன்விதுரனுரையாடினனே.

க. தரு-இராகம்-சங்காபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

அண்ணாயோசித்துப்பாரு-உன்மைந்தர்போல்
அநீதஞ்செய்தோர்யாரு.

அநுபல்லவி.

அண்ணுமுற்பகைசெய்தால் பிற்பகைதான்மூளாதோ
அக்கினியைக்கொட்டுந்தேட் கூட்டம்வெந்துமாளாதோ

அண்ணா

சரணங்கள்.

க. பெருங்குடங்குடமாகக் கள்ளைக்-குடித்த
 பேய்போலாடியுன்மூத்த பிள்ளை
அருஞ்சூதாலேவர்வாழ்வைக் கொள்ளை-யடித்
 தானந்தப்பட்டானந்தச் சள்ளை
பிரிந்துயிர்போமளவும் அவர்மறவார்மண்மீது
திரும்புதூணுகிவிட்டால் தூணெவ்வளவாகாது
அண்ணு

உ. அடர்கவரிமான்வால்போல் ஆடு-வீசல்
 ஆகாதென்றெண்ணுமலே நீடு
முடித்துச்சாதனனுக்குக் கேடு-காலம்
 மூளத்திரௌபதியினைப் பாடு
படுத்தியதற்காயவ ளோடைவர்கோபத்தாலே
தொடுத்தசபதத்தினை முடிப்பார்நீயொருக்காலே
அண்ணு

௩. வனத்திலுறையையவரை யிங்கு-மெள்ள
 வருவித்திந்நாட்டிலவர் பங்கு
தனைக்கொடுத்துத்தீமையே பொங்கு-சுயோ
 தனன்றனைமாய்த்தேயெழில் தங்கு
நினதுதொண்ணூற்றென்பது பிள்ளைகளுடனென்றும்
மனமகிழ்ந்துவாழ்தலுத் தமமாகையால்நீநன்றும்
அண்ணு

---

## மயித்திரேயர் துரியோதனனுக்குச் சாபமிடல்.

விருத்தம் சு.

மதிமிகுவிதுரனிவ்வணமுரைக்க-வயிறெரிந்தேதிருதராட்டிரன்
 மைந்தரைக்கொல்வாருலகினிலுண்டோ-வஞ்சகனுனீயிங்கென்
னெதிரினிற்காதேயெனக்கடிந்தானட்-டமச்சனியென்றனைவிட்ட
 தெனவவனவரிடத்தினிற்சென்றே-யிக்கதையொடுதுரோணன்சீ
ரதையுறுமிந்திரப்பிரஸ்தமாள்வதையும்-அறைந்தவணிருந்தனன்குருடன்
 அரியவில்விதுரனைவர்பாற்போன-தறிந்துசஞ்சயன்றனையேவச் [த
சதிர்கொளன்னேனவ்விதுரனைக்கொணர்ந்தான்-தம்பியைவிழியிலான்மகிழ்ந்
 சங்கதிகேட்டுக்கொடுமைசெய்துரியோ-தனனுளங்கொதித்திருந்தனனே.

உ. திபதை-இராகம்-தன்னியாசி-சாப்புதாளம்.

## கண்ணிகள்.

க. புகழ்சேர்சுயோதன-னுளங்கொதித்திருந்தஅப்
போது-புவி    மீது
மகிமைமேவுமைத்-திரேயமாமுனி
வந்து-நெஞ்சு    கந்து

உ. அக்கொடியோன்சபை-யினிலுற்றனவன்கனி
வாகி-விரைந்    தேகி
தக்கவாசனந்தந்து-பணிந்தான்முனியன்னோனைச்
சார்ந்து-எதிர்    நேர்ந்து

௩. உளம்நீகனிந்துகே-ளவர்தம்பகைவரை
யொடுக்க-துயர்    விடுக்க
வளமிகுவேதிய-ருடன்சிரோமாக்கினி
மண்ணும்-நெடு    விண்ணும்

௪. மதிக்கச்செய்கிறரென்றும்-அவர்விண்ணோர்குலம்வந்த
வழியும்-கொடும்    பழியும்
வதைசெயும்ராட்சத-குலத்திவனுதித்திட்ட
வாறும்-மிகத்    தேறும்

௫. படிபுகன்றைவரை-வெல்லமாட்டாயவர்
பகையைத்-தள்ளும்    வகையைக்
கடிதினிற்றேடிக்கொள்-ளுவதேஉத்தமமான
கார்யம்-வீண்    வீர்யம்

௬. ஆவிக்குச்சேதம்நீ-மானிவர்புலியாகை
யாலே-ஒருக்    காலே
தீவரத்துடன்கொடுஞ்-சூதினிலேவென்ற
தேரும்-அவ    ரூரும்

எ. பானுவின்றேர்க்குதி-ரையைப்பழித்திடுவேகப்
பரியும்-மத    கரியும்
ஆனபொற்பணிமுதற்-சகலமுநெஞ்சிலன்
படுத்து-இங்கு    கொடுத்து

அ. சிந்தைநீமகிழென்றுன்-விதுரன்பஞ்சவரைமுன்
தேடி-யுற    வாடி
வந்தானென்றேவபி-றெரியும்பாவிக்கிந்த
மானி-யுயர்    ஞானி

௬. சாலவேசொனும்புத்தி-யினைப்பினுஞ்சினங்கொண்டு
தள்ளி-மிகத் துள்ளி
சீலமோதஜேவ்-ரனுப்பினுரோஅவர்
தீதும்-உன்றன் சூதும்
௭. அறிவேனெனச்சபைவிட்-டேகுமுனியிடிபோ
லார்த்துச்-சினம் பேர்த்து
எறியுண்டுசுயோதனு-துடைமுறிந்திறப்பாய்நீ
யென்றான்-உடன் சென்றான்

---

## அருச்சுனன் தவஞ்செய்தல்.

விருத்தம் ௭.

இக்கொடுஞ்சாபமதைமயித்திரேய-னெனுமுனிகொடுத்துநீள்வனத்துக்
கேகினான்துரியோதனன்றனையைவ-ரீயெனமதித்தவர்நாட்டைக்
கைக்கொளச்சூதாலம்முனிதன்னைக்-கடிதினிலனுப்பினரென்றே
கருதியன்னோரைமாய்க்கிறேனெனப்பற்-கடித்துவெஞ்சேனையினோடு
மிக்கவேகங்கொண்டெழுந்திடும்போது-வியாசன்வந்தவன்சினநீக்கி [தான்
விட்டெழிற்றருமனிடத்தினிற்சார்ந்தான்- விளைவெலாமுதிட்டிரனுரைத்
அக்கணமுனிவன்தன்மன்வெந்துயரை-யாற்றியேபாசுபதாஸ்திரம்
அருச்சுனநீபெற்றிடல்நலமென்றான்-அருந்தவங்கிரீடிசெய்குவனே.

௨. தரு-இராகம்-ஆநந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

தவஞ்செய்தானேகிரீடி-சிவனைநாடித்
தவஞ்செய்தானேகிரீடி.

அநுபல்லவி.

பவந்தொலைக்கின்றஎழில் இமயகிரியைக்கண்டு
பணிந்தேகிப்பாசுபதாஸ் திரம்பெறஎண்ணங்கொண்டு
தவஞ்

சரணங்கள்.

௧. அருமாரணஞ்சொல் நீதி-தனை
அடுத்துமிகுவெண் சோதி
தருமொப்பிலாவீ பூதி-மெய்யில்
தரித்துப்பஞ்சாட்சரம் ஓதி
மருவுநித்திரையிற்கை யிற்பொருள்போகும்வாறு
மலமொருமூன்றுந்தானே யொழியப்புகழில்வீறு
தவஞ்
௨. சிலக்கியிலைக் குன்று-தன்
தெற்கிற்சாரலிற் சென்று

மேலுமோர்காலில் நின்று-தீமை
விளக்கும்புலனை வென்று
மூலக்கனலைமதி மண்டலமுறத்தாக்கி
மோனசுகவாரிக்குள் மூழ்கியின்பத்திற்றேக்கித்
தவஞ்

௨. உற்றகல்லெனக் கோடி-யானை
உடலைத்தேய்ப்பது மோடி
யுற்றென்றுமிகத் தேடி-சர்ப்பம்
போய்ப்படமெடுத் தாடி
முற்றும்வாழ்கின்றதுந்தன் உடலென்பதுமறந்து
முதிர்யனிநாள்மழைநா ளெனப்பாராமற்சிறந்து
தவஞ்

---

## பரமசிவன் வேடனாகவருதல்.

விருத்தம் அ.

பார்த்தனிவ்வண்ணம்வியாசமாமுனிசொற்
படிகொடும்பகைவரையடக்கப்
பாசுபதாஸ்த்ரஞ்சிவனிடம்பெறவே
பகாருந்தவஞ்செய இந்த்ரன்
நேத்தியாத்தனதுமகன்விஜயன்செய்
நெடுந்தவநிலையறிவதற்கு
நிகரிலா அரம்பாஸ்திரீகளைவிடுத்தான்
நெருப்பையீமொய்ப்பதற்கெளிதோ
ஏற்றஅம்மடவார்கிரீடிமுன்வந்தே
யினியகொக்கோகசாத்திரத்தின்
இங்கிதமுறைத்தும்மலர்பறித்தெறிந்தும்
இடையினிற்கலையவிழ்த்துடுத்தும்
பூத்தசெண்டென்னுந்தனங்களைத்திறந்தும்
புதுமையவீணைவாசித்தும்
புகழ்தனஞ்சயனைவெல்லமாட்டாமற்
புளகிதமுலைகுலுங்கப்போய்
கீர்த்திகொளிந்த்ரன்தன்னுடனுரைத்தார்
கேட்டஇந்திரன்பிராமணன்போல்
கிரீடிதன்னிடத்திலேகிநீதவஞ்செய்
கின்றதெக்காரணமென்னச்
சேர்த்தபஞ்சாக்னிமத்தியிற்றவஞ்செய்
திடுவிஜயன்கனிவுடனே
சிவனைநான்காணுமளவுமித்தவத்தைச்
செய்குவேனெனஅவன்சிரித்தே

யார்க்குமெட்டாதபொருளைநீகாண்ப
    தரிதெனவிஜயனென்னுயிருள்
ளளவுமித்தவத்தைவிடேனெனப்புகன்றான்
    அந்தணனிந்திரனாகிப்
போர்த்திடுகளிப்பால்விஜயனைநோக்கிப்
    புகலரும்பாசுபதாஸ்த்ரம்
பொருந்துவாய்நீயென்றன்பொடுவாழ்த்திப்
    போயவன்பதியடைந்தனனே.

௩. திபதை-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧. இந்திரன்தன்மகன்-விஜயன்செய்தவனிலை யினையே-மெச்சிச்
சந்திரசடாதரன்-பாசுபதாஸ்த்திரந் தனையே

௨. திரமாகநீபெறு-வாயென்றுவாழ்த்திவிண் சேர்ந்தான்-கங்கா
தரனைக்காணப்பின்னும்-கிரீடிதவனிலை சார்ந்தான்

௩. பத்தியாயிவன்செய்யுந்-தவத்தின்திசயம் பார்த்துச்-சுவைப்
புத்தமுதத்தின்-மொழித்தோழியரன்பைப் போர்த்து

௪. அம்மையுமைக்குச்சொன்-னாத்தவனிலை யருமை-தனைப்
பெம்மானுக்கவளுரைத்-தாளொப்பிலாதநற் பெருமை

௫. தான்கொண்டஎனதையன்-கேட்டுக்கரும்புவில் தாங்கி-யுயர்
வான்தங்குவோரையும்-வெறுமதனணிப்பின் வாங்கி

௬. தலைசாய்க்குமழகின-னரனெனும்நாமமுந் தரித்தோன்-அடைக்
கலமேயெனும்யானைக்-காய்முதலையினைச்சங் கரித்தோன்

௭. உயிர்க்குயிரானோன்-சுயோதனன்சூதினா லூரும்-வெகு
ஜெயத்தைக்கொள்காலாள்வெம்-புரவியும்யானையுந் தேரும்

௮. இழந்துகாடுறையுந்தன்மனுக்குத்-தம்பிவிண்ணாட் டிந்த்ரன்-இன்பந்
தழைக்கவந்தபுத்திரன்-விஜயனெனச்சொலுந் தந்த்ரன்

௯. வீறுவெஞ்சமரிற்றன்-பகைவர்தமைமுற்றிலும் வென்று-நீறு
நீறுசெய்வதற்கு-நமைநம்பித்தீயிடை நின்று

௰. ஆருஞ்செய்திடவொண்ணுத்-தவயோகந்தன்னையே அடுத்தான்-மகிழ்
கூருநாமுறைந்திட-அவனெஞ்சையிடமாகக் கொடுத்தான்

௧௧. என்றுநாமுன்னமே-யறிவோந்தவஞ்செய்யும் இவனைக்-கொல்லப்
பன்றியாய்ச்சென்றிட-ராட்சதமூகனென் பவனை

௰௨. கொடுஞ்சுயோதனனேவி-னவனவ்வுருக் கொண்டு-வெகு
கடிதில்வந்திக்குன்றில்-சேர்ந்தானவ்வரக்கனைக் கண்டு

௰௩. வயமுறுகணைவிட்டு-மாய்த்துக்கிரீடிகேட்கும் வரத்தை-அதி
தயவுடன்தரப்போக-வேணுமென்றுமையொடுத் தரத்தை

௰௪. கூறிநந்தியைப்பார்த்து-நமதுகணத்தோடு கூட-நெடும்
ஆறுங்குகைகளும்-உறுமிக்காட்டினில்வேட்டை யாட

௰௫. வேணும்யாவரும்வேட-வேஷங்கொளுமெனுஞ்சொல்விளைத்து-அருட்
கேணியாந்தாண்டவ-மூர்த்திகளிப்பினில் கிளைத்துத்

௰௬. தூயகொக்கிறகினைத்-தலையின்மேலழகாகச் சூடி-யுடல்
தேயுஞ்சந்திரனைப்பின்-மறைத்துப்பல்கறை தேடி

௰௭. நேத்தியாகத்தரித்-துக்கொண்டுதன்திரு நெற்றி-மீதில்
தோற்றச்சிங்காரமா-மயிலிறகின்மாலை சுற்றி

௰௮. காதில்வெண்மலர்மாலை-தன்னைக்குண்டலமாகக் காட்டி-அரை
மீதிற்புலித்தோலை-அலங்காரமாக்கட்டும் வேஷ்டி

௰௯. போலுடுத்தம்புறுத்-தூணிமுதுகினிற் பொருத்தி-மகா
சீலமுறுங்காலுக்-கிசையச்செருப்பினைத் திருத்தி

௨௰. அம்பொருகையிலும்-வில்லொருகையிலும் அணிந்து-நறுந்
தும்பையையுத்தத்திற்-சூடும்பார்த்தன்றனைத் துணிந்து

௨௧. வதைக்கவரும்பன்றி-பாயுமுன்பனிவரை மாதும்-அன்
புதித்துக்கையிற்சங்கு-வளையும்பொன்மலையென ஓதும்

௨௨. துணைமுலைமேற்குன்றி-மணிமாலையும்மொளி துலங்கச்-சங்குக்
கிணைசொல்லுங்கழுத்தில்வெம்-புலிப்பல்மாங்கலியமும் இலங்க

௨௩. மெச்சும்பசும்பச்சைத்-தழையைச்சேலையென மேவி-மார்பில்
செச்சைமாலையணி-வோனன்பருக்குச்சஞ் சீவி

௨௪. யெனுமெமதாண்டவள்-முருகையனைக்கையி லேந்தி-நிறை
கனிவாகத்தோழிய-ருடன்வரவொளிர்நீலக் காந்தி

௨௫. மேனிகொள்வேடராய்ச்-சிவகணத்தோடும்வி வேக-முறை
வானநந்தியும்வரத்-தான்செலும்போதெதி ராகப்

௨௬. போனஅந்தப்பன்றி-தனைவிஜயனுங்கண்ட போது-தன்
னீனமில்லாத்தவங்-கெடுமெனநினைத்திங்கே யீது

௨௭. பீடையேதென்றம்பை-விடுமுன்னோர்கணைவேடன் பெய்தான்-யாரும்
ஈடில்லாக்கிரீடியோர்-கணையதின்முகத்தின்மேல் எய்தான்

௨௮. பாவமிலானும்பார்த்-தனும்விட்டகணைரெண்டும் பட்டுக்-களை
மேவிக்கருங்கொடும்-பன்றிபதைத்துயிர் விட்டு

உக. சுயோதனனழிவது-போலழிந்ததுவேடர் துள்ளி-மகா
தயராஜவிஜயனைச்-சூழ்ந்தாரவரைப்பின் தள்ளி

௩௰. தங்குமர்ச்சுனனைச்சங்-கரன்பார்த்துயோகஞ் செய்தக்கோன்-ஆக
வெங்கொடும்புலனைந்தும்-வெல்நீயாயோக்கியத்தில் மிக்கோன்

௩க. நேராகவொருவனெய்-பன்றியைநீயெய்ய நீதி-உனக்
காரோதினரென்றான்-ஓர்பன்றிகாணுவ னாதி

௩௨. யிவ்வணமவன்சொலும்-போதுகிரீடிகேட் டிங்கே-எனக்
கெவ்வகைக்கனிவுமுண்-டுன்புத்திகுடிபோன தெங்கே

௩௩. இப்படிமதம்பேச-வேண்டாம்பன்றியைக்கைக் கொண்டேகு-துன்
மைப்பன்றிக்காயினம்-வழக்கிட்டாலுன்னையென் வாகு

௩௪. வெஞ்சரத்தினில்மாய்ப்பே-னென்றான்வேடனைப்போல வேடங்-கொ
பஞ்சாட்சரமூர்த்தி-கேட்டுமிரட்டும்வித்தை பாடம் [ண்ட

௩௫. செய்துகொண்டாயோவென்-றர்ச்சுனன்தனைப் பாத்துச்சீசீ-நீ
உய்யத்தவம்நீங்கிப்-பன்றிதனையுமாய்த்தாய் ஊசிக்

௩௬. கண்ணைப்பிலத்துவார-மென்றஞ்சுங்கோழைநீ காடு-தனில்
நண்ணித்தவம்பூண்டா-யுன்தவம்போலெந்த நாடு

௩௭. தேசத்திலுங்கண்ட-திலைத்தவஞ்செய்வோர்கள் சித்தம்-தேக
பாசத்தினிற்சிக்கா-தென்பாரதுன்னால பத்தம்

௩௮. ஆச்சுதன்னுயிருக்கா-யோருயிர்தனைக்கொல்ல லாமா-உயிர்
போச்சென்றாலும்யோகி-யிடிக்குந்தானிடைந்திடப் போமா

௩௯. தவத்தோனீயாவாயா-வென்றேசிநீராஜன் தானு-இந்தப்
புவிக்குள்மாமுனிவனு-அரக்கனுவைசியனென் போனு

௪௰. தேவனுளக்குறை-யாலுடல்பிறையைப்போல் தேய்ந்து-தவம்
ஆவலாற்செய்கின்று-யென்றானன்மனுநீதி ஆய்ந்து

௪க. நானிலமாள்தன்மன்-தம்பியென்றான்வேடன் நகைத்துக்-கோடி
பானுவைநிகர்முடிப்-பாஞ்சாலன்ராஜன்மேற் பகைத்துத்

௪௨. தருந்தேரிற்கட்டிவந்-தேகுருதட்சணை தந்தாய்-வில்லின்
மிகுந்திறல்வேடன்கை-விரல்போரும்படிக்குள்ளம் வெந்தாய்

௪௩. குழையக்காண்டவனம்-அழித்தபோதுவேடர் குலத்தைச்-சற்றும்
பழிபாவத்துக்கஞ்சாமற்-கொன்றுயென்பாரப் பலத்தை

௪௪. யீடில்லாவுலகிலும்-பெரிதென்றெண்ணியெனை யிகழ்ந்தாய்-ஊதிப்
போடும்பதராம்நீ-யெனைவெல்வேனெனவீணில் புகழ்ந்தாய்

௪௫. பாமரனுனையல்லா-லுண்டோவெனக்கேலி படித்தான்-திகழ்
சோமசேகரனிது-சொலக்கேட்டப்பார்த்தனுந் துடித்தான்

## பார்த்தனுக்கும் வேடனாகிய பரமசிவனுக்கும் யுத்தம்.

விருத்தம் ௬.

திடமுடையகிரீடிதுடிப்பதனைக்கண்டு
சிலைவேடன்மேலுமிகக்கேலிசெய்து
கடலுலகிலுனதுவில்லின்பலமுமல்லுக்
கட்டியுத்தஞ்செய்பலமுமலையுஞ்செந்தூள்
படுமுனதுபுஜபலமுநானிப்போது
பார்ப்பதற்கென்னோடுசெண்டைசெய்நீயென்றான்
வடவையெனப்பொங்கிப்பார்த்தன்றன்வில்லை
வளைத்திட்டான்வேடனும்போர்விளைத்திட்டானே.

௩. தரு-இராகம்-தோடி-ரூபகதாளம்.

பல்லவி.

செய்தாரேபெருஞ்சண்டை-கிரீடியும்வேடனுஞ்
செய்தாரேபெருஞ்சண்டை.

அநுபல்லவி.

செய்யாதபாதக மேயொருக்காலே
செய்யும்படி துரியோதனனாலே
மெய்தானெனவொரு பன்றியைப்போலே
விடுங்கொடுமூக ராக்ஷதன்மேலே
வெகுதந்திர மங்களசங்கரன் வன்கணைமுன்படவே
விஜயன்ஜெய சுந்தரவொண்சிலை யின்கணைபின்படவே
செய்தாரே

சரணங்கள்.

௧. புகழ்கொள்கிரீடியோர்-கணையையுக்கிரம்
பொருந்தும்வேடன்மேற் போட-அந்தப்
புனிதன்விஜயன்-தோளினுமார்பிலும்
புதையபாண்டம்பால் சாட
இகல்தனஞ்சயன்-வேடன்தோள்மார்பிலும்
இரத்தமாளங்கும் ஓடத்-துடித்
தேவியவாளிகள்-படுமுன்முக்கணை
யெடுத்தேவேடன்போல் வேடம்
மிகுதற்பான்மூன்று வாளியெடுத்து
விஜயன்மேற்பகை யதுபோற்றொடுத்து
மகிழ்வதைக்கிரீடிதன் னெஞ்சிலடுத்து
மதியாமற்கோபத்துக் கிடங்கொடுத்து
மதிகங்கையும் விண்குதிகொண்டிட வன்கணையெய்திடவே
மருவுந்திரி யம்பகன்வெம்பிறை யம்பதுபெய்திடவே
செய்தாரே

௨. அரன்விடுபிறை-யம்புவருதல்கண்
டளவில்லாக்கோப முதித்து-எழில்
அருச்சுனன்வேறொரு-பிறையம்பினை
யப்பொழுதேநெஞ்சங் கொதித்து
விரைவிலேவியச்-சந்திரவாளியை
விலக்கிவில்வித்தை கதித்து-மீறும்
விதத்தாற்கோடியம்-பேவினானேவிய
வெஞ்சரம்வேடனை மதித்து
திருமேனியிற்றை யாமல்மண்மீது
சேவிப்பதுபோல் வீழ்ந்திடும்போது
அருங்காண்டிபன்பார்த் தேயிந்தச்சூது
அவ்வேடன்செய்தானென் றெண்ணியேதீது
அடருஞ்சர-மொன்றதையெய்திட-எண்டிசைதுன்புறவே
அதில்நம்பரமன் - சிலையின்வடமுஞ் - சிதையுண்டறவே
செய்தாரே

௩. தனஞ்சயனம்பால்-நாணியிழந்திடு
தற்பரன்முச்சகம் வேக-விட்ட
சரங்களைக்கண்டு-பார்த்தனடங்கித்
தானோர்மாத்தின்பா லேக
கனிவுறுமுமைதவஞ்-செய்திளைத்தோன்
கலங்குதல்கண்டு லோக-மூர்த்திக்
காதுக்கிதமாச்-சொன்னாளாண்டவன்
கடிதிற்கேட்டன்ப தாக
மனமிரங்கிக் கிரீடிகைவண்ண
வரிவில்நாணியற் றேசிதைவுண்ண
வனிதையுமைப்புரு வம்மென்றெண்ண
வளையுந்தன்னெடுஞ் சிலையில்விண்ண
வருநெஞ்சதிரும் படியம்பொன்றது சென்றிடவே
வலியின்விடஎண் கரியுங்கதறும்படி குன்றிடவே
செய்தாரே

௪. சிவன்வாளியால்-விஜயன்வில்நாணி
சிதைந்தறவேயடி யுண்டு-விழுஞ்
செயல்கண்டிடுமர்ச்-சுனன்தன்கையினிற்
றிகழும்வில்லினால்வெ குண்டு
புவனேஸ்வரன்களை-கொள்ளவடித்த
போதிற்கமண்டலந் தண்டு-கையிற்
பூண்டிடுபிரமன்-மாலடியுண்டனர்
புகல்சூரியன்கதி விண்டு

தவித்தானவ்வடி யாற்களைமன்னும்
சம்புதெளிந்துநற் பார்த்தனைப்பின்னும்
எவருங்குழையமல் லுச்சண்டைதுன்னும்
என்னுடன்செய்யென இசைந்துமின்னும்
இடியுங்கடலுங் கிரியுஞ்சுழலுஞ்செயல் கொண்டிடவே
யெவரும்புகழும்பட நஞ்சரகன்சிரம் விண்டிடவே
செய்தாரே

---

## அருச்சுனனுக்கும் பரமசிவனுக்கும் மல்லுத்தம்.

விருத்தம் கூ.

வேடனுங்கிரீடியுமதிகோபத்தின்மீறி
வில்லினிற்போர்செய்தவுடனுலகோரேழும்
நாடரியமேனுலகுமீன்றஎன்தாய்
நங்கையுமையவள்மனமுஞ்சுழலஆதி
சேடன்முடியாயிரமுஞ்சுழலநட்சத்
திரஞ்சுழலமல்லமர்செய்பொழுதின்மான
பூடணன்பார்த்தனைத்திருமேனியில்வெண்ணீறு
பூசுவான்தூக்கிவிண்ணில்வீசுவானே.

ச. திபதை-இராகம்-பைரவி-சாப்புதாளம்.

### கண்ணிகள்.

க. வேடனருச்சுனன்-தன்னையாகாசத்தில்
விசினனவனெருக் காலே-யாரும்
நாடருமவ்வேடன்-கைவிசையாலண்டம்
நண்ணிப்பின்னும்புவி மேலே

உ. விழுமுன்னமேஞான-வெளியாகிவொளியாகி
விளங்கிமெய்யன்பர்செய் பாபம்-தனைத்
தழலிற்பஞ்செனச்செய்யுஞ்-சம்புவினெடுநீடு
சண்டைசெய்திடக்கடுங் கோபம்

ஈ. கொண்டானப்போதும்-அளகாபுரியிற்
குபேரன்சூரியனுயர் சித்தர்-நெடுந்
தண்டுகமண்டலஞ்-செங்கையிலேந்திய
தவமுனிவோர்சிவன் முத்தர்

ச. இந்திரன்மாயவன்-கின்னரர்புடைசூழ
என்னன்னையுமையொரு பாகம்-தன்னிற்
சுந்தரமொடுதுலங்-கிடவெள்ளைவிடையின்மேற்
சுடர்மிருந்திடுமணி நாகம்

௫. கங்கணமாகவுஞ்-சதுர்ப்புஜமுங்காள
கண்டமுமெழில்மழு மானும்-குளிர்
திங்களுங்கங்கையுந்-திகழத்தோன்றுனந்தத்
திருவழகினைச்சேடன் தானும்

௬. விள்ளஎளிதாமோ-மாலயன்காணுத
விமலனைத்தனஞ்சயன் கண்டு-தன்
உள்ளங்கரைந்துநெக்-குருகிப்பாவசம்
உற்றுநன்னெறியினைக் கொண்டு

௭. தும்பையறுகுவில்வங்-கொன்றையூமத்தைச்
சூதமெருக்கிவை பரிந்து-சீத
அம்பிறையின்கொழுந்-தொளிவிடுமுடியின்மே
லங்கையினுல்வாரிச் சொரிந்து

௮. தோத்திரமதுபாடி-யானந்தந்தனிலாடித்
தும்புருநாரதர் பாட-மகிழ்
பூத்திடுஞ்சோதியே-பதினாலுலகமும்
போற்றிநெஞ்சிற்களி கூட

௯. பவளமலையிலோர்-பச்சைப்பசுங்கொடி
படர்ந்தாற்போலோர்பாதி யுடலை-எங்கள்
சிவசௌந்தரிக்கரு-ளுருவமேயருவமே
சிரித்துமுப்புரத்தினைச் சுடலைப்

௰. பொடிசெய்ததாண்டவ-மூர்த்தியேபிரணவப்
பொருளேபொருளின்வா ரிதியே-கருங்
கடல்விடந்தனையமு-தெனவுண்டவமுதமே
கனியேகற்கண்டேநற் கதியே

௰௧. தருகின்றநித்யமே-மகிமைகொள்மறையுச்சி
தனில்நடிக்குஞ்சிவக் கொழுந்தே-மண
முருகின்றஅடியார்க-ளுறவின்றிவீணிலே
யுறுபவக்கடலினில் விழுந்தே

௰௨. துடித்தயர்வேன்றனை-யுள்ளமிரங்கியே
தூக்குநின்கைலிர வாழி-யென்னும்
படநாகமதுவாழி-யருள்நேத்திரம்வாழி
பவளநற்றிருமேனி வாழி

௰௩. பனிமதிமுகம்வாழி-திரிசூலக்கரம்வாழி
பதமலர்வாழியென் றெடுத்துப்-போற்றி
யினியென்னதையனே-யென்றனுக்கொருகுறை
யிலைமனுநீதியை யுடுத்து

௰௪. அவனியாள்தன்மராஜன்-தம்பியாயினேனாதி
யந்தமுமில்லா வுனையே-யென்றன்
தவத்தால்நண்புகொண்டே-னென்தவப்பயன்பெற்றோர்
தானில்லையென்றுசிந் தனையே

௰௫. செய்துவணங்கிய-தனஞ்சயன்றன்னையே
தேவேந்த்ரன்தழுவினான் அதனைக்-கண்டு
ஐயன்மழுக்கைய-னருச்சுனன்தனைநோக்கி
யகத்தினிற்றுயரமென் பதனை

௰௬. விளைவிக்குஞ்சூதுநீ-ராடியாவுந்தோற்று
வெங்கானில்வெயிலினால் வாடி-மேனி
களைவுற்றேயுழல்வதை-யறிவேனீயைம்புலன்
களைவென்றேஉயர்நிஷ்டை கூடி

௰௭. யென்றனையெதிர்காணப்-பெற்றாயுன்தவத்தினை
யாரளவிடுவதற் காகும்-ஒரு
பன்றிபோல்வந்துனைக்-கொலச்சுயோதனன்விட்ட
பாவிராக்ஷதமூகன் சாகும்

௰௮. விதமெண்ணியிக்குன்றின்-வாழ்வேடன்போலம்பை
விடுத்தேனிப்புவியடி யுண்ண-விண்ணிற்
கதிர்மதியடியுண்ணத்-தாய்வயிற்றினிற்சிசுக்
களுமடியுண்ணநின் வண்ண

௰௯. வில்லடிபட்டேனீ-மற்சண்டைசெய்திட்ட
விதத்திலுன்காலுதை பட்டேன்-எனச்
சொல்லியஆண்டவ-னுரைகேட்டஅர்ச்சுனன்
துள்ளியென்வினைதொலைத் திட்டேன்

௨௰. யான்சென்மசாபல்ய-மானேனென்றக்கர்த்தன்
இணையடியைச்சிரஞ் சூட்டி-சுவைத்
தேனுண்டவண்டுபோ-லுள்ளத்திற்களிகொண்டான்
சிவசங்கரன்செங்கை நீட்டி

௨௰௧. யிணையறுபாசுப-தாஸ்த்திரமும்நீள்வில்லும்
எழிலம்புந்தூணியும் அளித்துப்-பூத
கணமதுவும்வேத-முழக்கமுஞ்சூழ்ந்திடக்
கயிலைசார்ந்தானுளங் களித்துக்

௨௰௨. கயிலாசபதிசென்ற-வுடனிந்த்ரன்விஜயனைக்
கனிந்துவாழ்த்தயெதிர் நேர்ந்தான்-நேர்ந்து
ஜெயமேவுதனஞ்சய-னோடுமாதலிவிடுந்
தேர்மேலேறியின்பஞ் சார்ந்தான்

௨௬. சார்ந்ததேவேந்திரன்-ரம்பையர்மிகக்களி
தங்கவிண்ணுலகினை யுற்றான்-ஒளி
சேர்ந்தசிங்காதனத்-திற்றனஞ்சயனொடு
சிறந்தஇன்பத்தினைப் பெற்றான்

---

ஊர்வசி நடித்தலை அருச்சுனன் மெச்சுதல்.

விருத்தம் ௰.

இந்திரனோடந்தநற்சிங்காசனத்தி
லேயிருந்தகிரீடியையிந்த்ராணிநோக்கிச்
சிந்தைமகிழ்ந்திட்டனளன்னோன்பணிந்தான்
சேயிழைவாழ்த்திச்சென்றாள்தேவர்சூழக்
கந்தருவர்பாடவரம்பையர்நெருங்கக்
கரியமால்மகளாமூர்வசிநடித்தாள்
விந்தைகொளுங்கிரீடியதைக்கண்டானந்தம்
வீறுவான்அருமையெனக்கூறுவானே.

---

பார்த்தன்மேல் ஊர்வசி மோகித்தல்.

விருத்தம் ௰க.

அருச்சுனன்மாவருமையெனக்கேட்டஇந்திர
னுமிந்நாட்டியம்புதிதென்றான்வானோர்கள்
உருப்பசிரம்பையர்கள்விடைகொண்டுசென்றார்
உடனமுதமிருவருமுண்டார்தேவேந்த்ரன்
விருப்புடனோர்மாளிகையில்விஜயன்தங்க
வேயளித்தான்கதிர்மறைந்தான்பார்த்தனாலே
கருப்புவில்லிவேதையிலூர்வசிதன்மேனி
கருகுவாள்கிரீடியிடம்வருகுவாளே.

ச. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

பார்த்தனெதிர்வந்தாளே-ஊர்வசிமின்னாள்
பார்த்தனெதிர்வந்தாளே.

அநுபல்லவி.

போர்த்தஇரவில்மத ராஜன்சிலையாற்கோடி
புட்பச்சரம்விடு தவிற்றள்ளாடி
அன்புகூடி-வம்புதேடி-நாடிப்
பார்த்த

சரணங்கள்.

க. வாய்க்கடங்காதபிடி பிடித்து-உட்கொள்ள
மாருதஆசைக்கள்ளேக் குடித்துப்
பேய்க்குத்தேள்கொட்டினாற்போற் றடித்து-இரும்
பிணச்சிற்றெறும்பின்வாயாற் கடித்துத்
தேய்க்களண்ணுஞ்செயலென்னவுந் தீயாலபாஞ்சி
திகழ்நீடொளிமாறு மெனவுங்கெஞ்சி
பையக்கொஞ்சி-மையல்மிஞ்சி-வஞ்சிப்
பார்த்த

உ. முகிற்குலமுறையிட்டுக் கூவி-மலைகள்
முழைதோறும்பதுங்கிப்போய்த் தாவி
திகைக்கப்புனுகுசாந்து மேவி-வண்டின்
திரள்மலைக்குங்குழலைச் சீவி
வகுத்துமலர்மாலைகள் முடித்துநீரினிற்கொள்ளி
வைத்திடிலவிந்திடா தெனக்காமக்கள்ளி
முறைதள்ளி-மிகத்துள்ளி-மனதினிலுள்ளிப்
பார்த்த

ங. மூவாசைதனைமுற்றும் விண்டு-தவத்தை
முயல்கின்றமுனிவோர்கள் கண்டு
ஆவேசந்தலைமண்டை கொண்டு-கையி
லணிந்தநற்கமண்டலந் தண்டு
மாவேகமோடெறிந்து மயங்குஞ்சுந்தரிசுத்த
மலடிமைந்தனுக்கிச்சை கொளல்போல்மெத்த
புகழ்பெற்ற-பிரசித்த-அதிபரிசுத்தப்
பார்த்த

---

## ஊர்வசி அருச்சுனனைச் சபித்தல்.

விருத்தம் ௰உ.

ஊர்வசிவந்திடுகார்யமறியாப்பார்த்தன்
உத்தமியேசத்தியவந்தனுமென்பாட்டன்
சீர்கொள்புரூரவனுயிரேயிரவில்வந்த
சேதியென்னென்றுனவள்நானணையவந்தாற்
பேர்கொளென்றனைப்பணிந்தாயென்றுசீறிப்
பேடிநீயாகெனவேசபித்துச்சென்றுள்
ஏர்கொளவ்வூர்வசிபுரிந்தசதியைமெல்ல
எடுக்கின்றேனிங்குவிள்ளத்தொடுக்கின்றேனே.

௫. தரு-இராகம்-பியாகடை-ரூபகதாளம்.

பல்லவி.

ஊர்வசிசெய்திடுஞ்சதிகேளீர்-முறைதள்ளுங்காமி
ஊர்வசிசெய்திடுஞ்சதிகேளீர்

அநுபல்லவி.

பேர்பெறுநன்னிலை முழுதும்போகவே
பெருகுங்காமவெந் தீயினில்வேகவே
சீர்பெறுதன்பத மலர்கள்நோகவே
சென்றுவிஜயனங்கே பேடியாகவே
ஊர்வசி

சரணங்கள்.

௧. நீடுமுலகினி-லேழைகையிற்சிக்கு
நிக்ஷேபம்போனது போலும்-பயங்
தோடியசோரன்-கடுங்கொலையாளிகை
யுற்றிடுகாரணம் போலும்
காடுதன்னிலோ-ராடுகொடும்புலி
கண்ணெதிர்ப்பட்டது போலும்-சொந்த
வீடுடையோனந்த-வீடுநெருப்பினால்
வேகக்காணுந்துயர் போலும்
பேடிரூபங்கொண்ட அர்ச்சுனன்வாடவும்
பேயனைப்போற்பல யோசனையோடவும்
நாடரும்நாணந் தனைமிகக்கூடவும்
நற்போர்வைகொண்டுதன் தேகத்தைமூடவும்
ஊர்வசி

௨. தேகந்தனைத்துகி-லாலேமறைத்துநற்
சிரத்தில்நீள்சடை பின்னிக்-கொள்
ஏகமனதாக-மூவாசைதன்னையும்
எறிந்துதியிடை மன்னி
யோகம்விளைத்திடு-தூயமுனிவர்கள்
ஒன்றுமறியாவோர் கன்னி-மீது
மோகந்தனைக்கொண்டு-போகஞ்செய்தேயதில்
மூண்டதுபோற்சுக சன்னி
வகைகொள்பார்த்தன் மனமிகச்சோரவும்
வண்ணமிகும்புய வலிமைபெறவும்
தேகமிளைத்துத் துரும்புபோல்நேரவும்
செய்நித்திரையிலுந் துன்பமேசாரவும்
ஊர்வசி

௩. எத்திசையும்புகழ்-பார்த்தனிவ்வண்ணமா
ஏக்கங்கொளுந்துன்ப மேங்கிப்-போக
முத்தின்திரள்மரு-வுங்கடல்தன்னிலே
முளைத்தக்கடலை நீங்கி
உத்தமபாஸ்கரன்-விண்ணுற்றுனிந்திரன்
உயர்மண்டபத்தினி லோங்கி-குண
வஸ்த்துவாம்பார்த்தனை-யழைக்கக்கந்தரு
வனைவிட்டானன்பு தாங்கி
வித்துவகந்தருவன் சென்றுபிந்தவும்
விஜயன்சேதியன் ஞேன்சதைகொந்தவும்
மெத்தவிரைந்ததை வந்தோதமுந்தவும்
வீறுந்தேவேந்த்ரன்கேட்டுக் கண்ணீர்சிந்தவும்
ஊர்வசி

---

## ஊர்வசிசாபநீங்கி அருச்சுனன் நிவாதகவசரூர்க்குச்செல்லல்.

விருத்தம் ௫௩.

அவ்வருந்தேவேந்திரனுடனுரு-மழகினில்மிகுத்தகாந்தருவன்
அருச்சுனன்பேடியானதையுரைத்தா-னுயிரங்கண்ணில்நீர்விட்டுத்
திவ்யவிற்கிரீடியிடத்தினிலும்பர்-திரளொடுமிந்திரன்சென்று
செங்கையாற்றழுவிஊர்வசிசாபந்-தீர்ந்துபோமென்னவேதேற்றிச்
செவ்விதழுளவம்மாகிடமுற்றுன்-திருவடியினிலவள்பணிந்தாள்
தேவர்களவளைவணங்கிநின்விரகத்-தினைத்தணியாமிகச்சிறுவன்
இவ்விஜயன்றன்பழையநல்வடிவ-மெய்திடக்கிருபைசெய்யென்றுர்
இசைந்தவள்சாபநீக்கினள்விஜய-னிணையில்தன்னழகையுற்றனனே.

௫. திபதை-இராகம்-பந்துவராளி-சாப்புதாளம்.

### கண்ணிகள்.

க. அவ்வரந்தனையீந்த-ஊர்வசிபதத்தினில்
அருச்சுனன்பணிந்ததை நாடியே-நாளும்
எவ்வுலகும்புகழ்-தேவேந்திரன்கண்டே
யிணையில்லாஆனந்தங் கூடியே

உ. விரைவினிலவன்றனைக்-கொண்டுபோய்ஒளிமிக
வீசுஞ்சிங்காசன மீது-வெகு
அருமையுடனேவைத்துத்-தானுமுலாசத்தி
னுல்வீற்றிருந்திடும் போது

௩. தேவர்கள்தமைநோக்கி-நமைத்துன்பஞ்செய்கின்ற
தீயராக்ஷதர்தம்மை வாட்டச்-சொலும்
மூவுலகுந்தனை-மெச்சிடத்துந்துபி
முழங்கிடச்செயக்கொடி நாட்டக்

௪. காண்டிபனிவனொரு-வன்றன்னலாகுமுன்
காண்டவவனத்தினை யழித்தோன்-யாரும்
பூண்டிடற்கரிதான-அழகுற்றநீள்கரும்
புச்சிலைமாரனைப் பழித்தோன்

௫. எனக்கூறினனதைக்-கேட்டதேவர்மகிழ்ந்
திணையில்லாமந்த்ரோப தேசம்-கிரீடி
தனக்குச்செய்தாரவன்-தனையிந்த்ரன்வான்கங்கை
தனிலாட்டியதிவிசு வாசம்

௬. கொண்டுமிவ்விரவாத-வாசமாலையுஞ்சூட்டிக்
கூறும்பிரமன்முன்னம் புரிந்து-திரி
மண்டலமதித்திடும்-படியவன்றனக்கருள்
மகுடமும்புனைந்தொளி விரிந்து

௭. மீறும்பணிகளும்-வஸ்த்ரமும்பலபல
விதமாமாயுதங்களு மந்த்ரம்-அன்பாய்
கூறியளித்தபின்-னமுதோர்பொற்கலத்தினிற்
கூடவைத்துணவுஞ்சு தந்த்ரம்

௮. மேவினனதைக்கண்ட-இந்த்ராணியிந்த்ரன்மேல்
விழிசிவந்திடக்கடுங் கோபம்-தனைத்
தாவிமானிடனுன்னோ-டுண்ணத்தகுமோவென்றுள்
தனஞ்சயன்தன்பிர தாபம்

௯. ஆறிவாரெனத்-தேவேந்திரன்சிரித்
தவ்விஜயன்னெடு மாயன்-அன்பு
கூருமைத்துன-னெனக்குமைந்தன்பிறைக்
கொழுந்தினைமுடித்திடு தூயன்

௧௦. கயிலாசபதியொடு-போர்செய்திடுவீரன்
காணென்றுனும்பர்கள் கேட்டு-வண்ண
மயிலாஞ்சத்தியபாமைக்-காகமதுநாட்டில்
வளர்தருவின்மேற்கண் போட்டு

௧௧. வேரோடுபேர்த்துக்கொண்-டேகிப்புவியில்நட்டு
மிகமகிழ்ந்திடுகள்ள நெடுமால்-தன்
சீருமைத்துன-னாகிலிங்குவந்த
சேதியின்சூதினுக் கினிமேல்

௧௨. ஏதுவிளைந்திடு-மென்றார்கள்தேவரும்
இந்த்ராணியுஞ்சொன்ன சூட்சி-தன்னைக்
காதுறக்கேட்டிடு-பார்த்தன்தேவேந்திரன்
கமலச்சேவடியிற்கண் காட்சி

௰௩. யாகவணங்கியுன்-சிங்காதனத்தினில்
அடியேனிருந்து கிரீடம்-மிக
வாகுடன்யான்பெற்று-லெவர்பொறுப்பாரென்றான்
மைந்தாஎப்போதும் விசேடம்

௰௪. ஆனமனத்துய-ரெனக்குண்டுசொல்லக்கேள்
அலைமோதுங்கடலிலோர் துர்க்கம்-தன்னிற்
கானகப்புலிபோல்வாழ்-பவர்மும்மூர்த்திகள்வெல்லக்
கடிதவரெல்லாமோர் வர்க்கம்

௰௫. தவத்திலுமிகுத்தோர்கள்-முருகனோடுங்கிட்டிச்
சண்டைசெய்யுஞ்சுத்த வீரர்-என்றால்
எவர்தமக்கஞ்சுவார்-யோசித்துப்பார்நன்று
எமனைவெல்ராட்சத சூரர்

௰௬. மூன்றுகோடிபேர்க-ளவர்விடுமூச்சினால்
மூவுலகும்வேரோ டாடும்-தம்மை
யீன்றதாய்மார்மீது-மிரக்கமில்லாதவர்
இவர்தீமையார்சொல்லக் கூடும்

௰௭. வதைசெய்யஅஞ்சாச்-சண்டாளர்நிவாத
கவசர்களெனப்பெயர் பெற்றோர்-மகா
சதிகாரரெப்போது-மென்மேற்றீர்க்கபகை
தன்னையுளத்தினில் உற்றோர்

௰௮. அத்தியர்தமைவெல்ல-வுனையல்லாலெவர்களால்
ஆகும்நீயாக்கையி னாலே-என்
சித்தங்குளிர்ந்திடும்-படியங்குசண்டைக்குச்
செலவேணுமென்றான்மென் மேலே

௰௯. சமர்க்குத்தேவேந்திரன்-தன்னைப்போகச்சொன்ன
சந்தோஷமொருக்காலே மீறி-பார்த்தன்
நிமைக்குள்ளேயிருதோளும்-பூரித்தாணிந்த்ரனும்
நீங்காதமகிழ்ச்சியில் வீறி

௨௰. காற்றின்வேகமாச்செல்லும்-பதினாயிரம்பரி
கட்டுமழகுடைய தேரும்-என்றும்
நாற்றிசையும்புக-ழுங்கெடுரதத்தினில்
நயங்தெக்காலத்திலும் ஊறும்

௨க. மாதலியென்னுஞ்-சாரதியோடிரத்நக்
கவசமுந்தந்தேதுணே யாக-வெகு
நீதங்கொள்கந்தரு-வன்சித்திரசேன
னீங்காபல்விஜயன்பின் போக

உஉ. கூறியர்ச்சுனனுக்கு-விடைதந்தானவனந்தக்
கொடியராக்ஷதர்முற்று மாண்டு-போக
விறுடனேயந்த-க்ஷணத்திலாயுதங்கை
மேவிவெம்போர்க்கோலம் பூண்டு

உ௩. ரதத்திலேறிக்கொண்டு-மாதலியென்னுஞ்சா
ரதிதனைநோக்கியே யெந்தத்-திக்கில்
மதத்தந்தராட்சத-ரிருக்கிருரெனத்தோய
மாபுரமொன்றுண்டங் கந்தத்

உ௪. தியர்களிருக்கிரு-ரெனச்சொல்லித்துணைவந்த
சித்திரசேனனை நோக்கி-நல்ல
தூயனுங்கிரீடிக்கவ்-வசுரரூர்க்குவழி
சொலச்சொல்லியன்பதைத் தேக்கி

உரு. அச்சித்திரரதந்-தன்னைநடத்தும்போ
தமரர்முப்பத்துமுக் கோடி-பேரைப்
பச்சடியெனமதிக்-கின்றராட்சதர்தம்மைப்
பகைத்தொருமனிதன்போய்த் தேடி

உசு. வெல்லப்போகுதல்நேத்தி-யெனப்பலஅரம்பையர்
மிகச்சிரித்தார்பார்த்தன் கண்டு-நகைத்து
வல்லசிங்கம்போலே-போம்போதுமதில்வாசல்
வாய்ந்ததேவரெதிர் கொண்டு

உஎ. தேர்விடுசாரதி-தன்பாற்சென்றுபார்த்தன்
திகழ்போர்க்கோலந்தனை மேவி-எந்த
வூர்மேலேகிருனென்ருன்-தோயமாபுரத்துக்கென்
ருேதினனவரின்பந் தாவி

உஅ. விஜயனிடத்தில்வந்-தேமங்களங்கூறி
மிகச்சிறந்திடுதேவ தத்தம்-இஞ்சு
திசையஞ்சுஞ்சம்பவன்-சம்புமாலிதன்னைத்
தேவேந்த்ரனித்தேர்மேற் சித்தம்

உகூ. கொதித்தேறியுத்தஞ்செய்-தவரைக்கொன்றுஜெயங்
கொண்டான்ராவணனுயிர் மாள-லோகம்
மதிக்கின்றராமனு-மித்தேரின்மேற்சென்ருன்
வாகதுபெறுமண்ட கோள

௩0. முகடெட்டுமின்னெடுந்-தேர்மேல்நீயுஞ்சென்று
முழுதும்வெற்றியைக்கொண் டோங்க-எங்கள்
அகத்தினிலனுதின-முற்றிடுந்துன்பங்கள்
அனைத்துமிங்கொருக்காலே நீங்க

௩௧. நீஜெயஞ்செய்வாயென்-றேவாழ்த்திவிடைதந்தார்
நிகரில்சாரதியந்தத் தேரை-யெங்கும்
வீசுங்காற்றின்வேக-மாவிடுத்தானது
வீறுஜெயராட்சத ரூரைக்

௩௨. கிட்டியவுடன்பார்த்தன்-சாரதிதனைப்பார்த்துக்
கிளக்கின்றராக்ஷதர் கார்யம்-எல்லாம்
திட்டமாஎனக்குநீ-மொழியென்றனவன்கேட்டுத்
தீயர்மூவுலகினைவெல்லும் வீர்யம்

௩௩. பெற்றவரண்டமும்-நடுங்கிடுஞ்சொல்லினேர்
பெருநெருப்பினைக்கண்ணிற் கக்கும்-துஷ்டர்
எத்தொல்லாந்தெரிந்தோர்மே-கத்தையெண்ணெயிற்சேர்த்த
தெனும்ரூபத்தோரெட்டுத் திக்கும்

௩௪. மெச்சும்ஆதிசேடன்-தாங்கும்பூமிதன்னை
விரலாலேந்தும்புஜ பலத்தோர்-வஸ்து
நிச்சயங்காணமுச்-சடக்கித்தலைகீழாக
நின்றுதவஞ்செய்யுஞ் சலத்தோர்

௩௫. ஊழிமுடிவுகண்-டோரெழுகடல்நீரை
யுண்டுமிழும்பெரு வாயர்-இடி
விழினுந்துரும்பென்று-மதிப்பார்களெமன்றனை
விழுங்கியேப்பமிடுந் தீயர்

௩௬. ஈட்டிசூலமெரி-மழுவாள்வேல்சக்கர
மேந்துவோர்கள்பிரம ளோடும்-உக்கிரங்
காட்டியவன்றனைத்-துரத்தித்தோயமாபுரங்
கைக்கொண்டோர்தேவர்கள் நாடு

௩௭. சஞ்சலங்கொண்டிடச்-சென்மித்தோரெனப்பார்த்தன்
தருந்தகந்தருவனை யவர்பால்-தூது
நெஞ்சமகிழ்வொடு-நீசெல்வாயென்றனங்
நேரமனோவேக மதுபோல்

௩௮. அந்தரத்திற்செலுங்-தேரைச்சாரதிபுவி
யதில்நடத்தினன்திசை யெட்டும்-மேலோர்
சிந்தைமகிழண்டமும்-ராக்ஷதர்காதுஞ்
செவிடுறத்தன்காது மட்டும்

௩௯. வில்லைவளைத்து-விஜயன்குணத்தொனி
விளைத்தான்தேவேந்திரன் பகைத்து-தம்மேல்
வெல்லரும்போர்செய்ய-வந்தானெனராக்ஷதர்
வெகுண்டுடல்குலுங்கிட நகைத்து

௪௰. கண்சிவந்தார்பார்த்தன்-முன்னனுப்புந்தூதன்
கந்தருவனன்றே ரண்டை-யேகி
புண்ணின்மேற்றீவைத்தாப்-போலருச்சுனனுங்கள்
புஜபலம்பார்த்திடச் சண்டை

௪௧. செய்திடவருகிறு-னுமதுதளத்தோடுஞ்
சேர்ந்தகோரமான யுத்தம்-உங்கள்
கையிலானமட்டுஞ்-செயுமென்றுனவர்கேட்டுக்
கடிதிற்றலைக்கேறிப் பித்தம்

௪௨. குட்டிப்பூனையொன்று-புலிக்கூட்டத்தொடுசண்டை
கொடுத்துச்செயங்கொள்ள வெண்ணி-வந்த
சட்டமாச்சுதென்று-மட்டிநிருதர்மிகத்
தமக்குள்ளேயோசனை பண்ணி

௪௩. தேர்ப்பரிகரிகாலாள்-சமுத்திரம்போலவே
சேர்ந்தொன்றுஇடியைப்போ லார்த்து-நெடும்
பாரண்டமுகடுங்-கலங்கிடகண்ணிற்றீ
பறக்கக்கோபத்தினைப் போர்த்துச்

௪௪. சங்குபேரிசின்னம்-முழவுதுத்தாரிவேல்
தாரைசங்கிலிவகை யீட்டி-ஒளி
தங்குசக்கரந்திரி-சூலந்தோமரங்கூர்வாள்
தனுசம்புகொண்டுக்கிரங் காட்டி

௪௫. இளையாதவிஜயனைச்-சூழ்ந்துசுயோதன
னிடத்திற்றூதத்தையுந் தோற்று-காட்டிற்
றளர்வாகவாசஞ்செய்-பஞ்சையெம்மொடுசண்டை
தான்செய்வையோபெருங் காற்று

௪௬. முன்பஞ்சுநிற்குமோ-எமைக்கண்டிடிற்றிரி
மூர்த்தியுமெதிரில்நிற் காரே-உன்
தன்விதிமுடிந்தால்நீ-யென்செய்வாயெனச்சொலித்
தழைத்திடக்கேலிசெய் தாரே

---

## நிவாதகவசர்கள் மரணம்.

விருத்தம் ௰௪.

இப்படிநிவாதகவசர்களென்னும்
ஈனமுளராக்ஷதர்முக்கோடிபேரும்
நுப்பில்வடவாக்னிகண்களிலேசிந்த
வுதடுதுடித்திடஇடும்புபேசிக்கொண்டு

எப்புவியும்புகழ்பார்த்தன்றனைக்கொல்வோமென்
றேவளைத்துக்கொண்டார்கிரீடியுமன்னோரும்
முப்புவியுமதிர்ந்திடத்தட்சணத்திற்றேரை
முடுக்கின்றார்சண்டையதுகொடுக்கின்றாரே.

ரு. ஓரடித்தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

அர்ச்சுனனுக்கும்-நிவாதகவசருக்கும்-அண்டிக்கொண்டதேசண்டை.

அநுபல்லவி.

அர்ச்சுனன்தன்னிர்வாகம் அறியாமலெழுமேகம்
கர்ச்சித்துக்கொண்டுலோகம் கலங்கவந்தாற்போலவேகம்
களில்மிகுதிரள்பரி மதமொழுகியகரி
யிரதநிரைகள்விரி பரிசனமுடனெரி
கனல்கக்கியசக்கரம் வாள்தோட்டிகள்
மழுகத்திகள்பட்டையம் வேலீட்டிகள்
கதைத்தோமரமடு திரிசூலமும்விடு
கணைவார்சிலைகொடு துடிபேரிகையிடு
கனவொலிசங்கொலி துந்துமிவொலிசங்
கிலியொலிகொம்பொலி பம்பையினொலியங்
கடலொலிபோல்முழக்கி வருநிருதர்வளைக்க
அடல்பெறுநீள்சரத்தி லெழில்விஜயன்தொளைக்க,
அர்ச்சுனனுக்கும்

சரணம்.

க. சரத்தைப்பார்த்தன்விடுமுன்னாலே
{ தருசித் திரமுள் / தனுசிற் றெடுமுயர் } சரத்தைப்பார்த்தன்
{ தழையுங் கடவிடை / யுலவும் கொடுவட } { வையும்நெஞ் சினிலதி / திகில்கொண் டிடுஜெய } சரத்தைப்பார்
தடனெடு-வடவரை யதுமிகு-பொடிபட
அடமுறு-மதகரி நிகர்மன-வலிகொடு
தரைமிசை-யொருவரு நிகரிலை-யெனுமதி
சலமுறு-பகைவர்கள் முடிசித-றிடஅடு-சரத்தைப்பார்
தவமுற்றிடுமுனி வரர்கள்சித்தர்களனு
தினமெச்சியசது முகனற்கரமிசை
தங்கி-விளங்கு கமண்டல-சலமது
பொங்கி-வெதும்பி வறண்டிட-வும்பர்கள்
தலமிக-எரிபட அதல-விதலமொடு
சுதலநி-தலமகி தலயிவை-புகையது

தாவியெண்டிசாமுகமும் வேககூணத்திற்பற்றிச்
சூழுகின்றநீடுதணல் வாரிக்கொளுத்தும்வெற்றிச் சரத்
தைப்பார்த்தன்விடுமுன்னாலே கொடுஞ்
சமர்செய்யவொருக்காலே அருங்
கோபாக்கினியதனாலே கோடி
அசுத்தர்கள்பெருக்காலே
பாவியமண்ணும்விண்ணும் பயத்தினைமிகநண்ணும்
படியுயிர்களையுண்ணும் பழிக்கிடமாகப்பண்ணும்
பரும்பிண்டிபாலமுத-லனந்தமாயுதமம்புமெடுத்து-விடுத்திடுமுக் [த்
கிரங்கண்டகிரீடிநகை-புரிந்தென்னோடமரிங்குகொடுத்து-ஜெயங்கொண்டிட
திரண்டென்ற-னேரதனிலடர்ந்துநீர்மதம்நெஞ்சிலடுத்து-வந்நீருங்கள்
சிரந்துண்டமாவுலகி-லுருண்டுவிழஅதங்கள் படுத்து-கின்றயெந்தன்
தீரமேவுகணை விட்டெமனெனநின்று
வேரினோடுமுமை யிப்பொழுதுயிர்கொன்று
சூறையாடியெ னிருப்பிடமதுசென்று
சேருவேனென மதத்தஅசுரர்துன்று
சினத்தோடெதிர்த்திடக்குச் சூதினையாடியே
கனத்தகுடிக்கனர்த்தத் தீவினைதேடியே
தனத்தையழித்திளைத்துச் சோர்வினைநாடியே
மனத்துயரிற்சபத்தைப் போல்முகம்வாடியே
மாகனஇங்கித-ராஜர்நிறைந்திடு நீள்சபைமுன்பவ-மானமுறும்படி
ரூபசௌந்தர-மேவியமங்கை திரௌபதியின்றுகில்-சோரவுரிந்திட
ரோஷமிகவிட்டுடலில் நாணமதிலாமற்றிரியும்நீ
மீசையைமுறுக்கிவெகு வீரமதையோதிப்புலியின்வாய்
தனிற்பட்டாடுகத்திச் சாகும்வகைபோல்மடிய
இனப்பட்டாயெனப்பிர தாபஜெயமேவிய
விஜயன்கொதித்தவர்கள் மீதினிலஸ்த்திரமழை
பொழிந்திடக்கொடியர்கள் நீடுவிசித்திராத
மேற்குதித்தேறியண்ட பகிரண்டமும்வெடிக்க
ஆர்ப்பரித்தூழிபொங்கி யுலகந்தனிலடுத்து
மொய்த்தவகையுற்றகில புவனமெல்லாமெரியப்
பற்றியழலைச்சொரியு மயில்தடிவேல்வளைசக்
கரமவர்விடவிட அதுகள்தவிடுபொடி
படவொருகொடியள வினிலதிசினமுயர்
ஆவேசமுடனருச் சுனன்கணைகளையேவி
மாதீயர்கடுகெடுத் துடன்சரமதுதாவி
அக்கணைவகைகளை துகளாகக்கொய்திட
அவர்கள்முடிகள்பட பலகணைபெய்திட

விக்கிரமவில்விஜயன் வீரமுற்றுமென்திரத்துக்
கக்கிரமவசுர-ரதோ கதியென்காத்துக்
கெம்மாத்திரமெனச்சொலிப் பிரம்மாஸ்திரம்விடநிமி
ஷம்மாத்திரமதிற்கொலக் கர்ம்மாஸ்திரமெனவ்து
ஏகிமுந்துபோரில்நின்ற தீயர்தங்களாவியுண்டு
மீறுகின்றபோதுகண்ட சூராண்டுகோடியென்ற
பேரும்பதைத்துச்சத்தி வேலுந்துடிக்கக்கொல்லும்
வாளும்காத்திற்பற்றி மேலுஞ்சிதைக்கும்வில்லின்
விந்தைவிந்தையாகவிடு கின்றஅம்புராசிகளும்
கொண்டெதிர்ந்துபோர்விஜய னென்றசிங்கமீதுதிரண்
டெதிர்த்தேயவர்கள்நீடுங் கொழுப்பாலோயாதஅஸ்திரம்
தொடுத்தார்வியன்மீறுங் கொதிப்பாம்நாராயணாஸ்திரம்
ஏவிமடித்திட்டபின்பு மூன்றுகோடிராட்சதரும்
தாவியமர்க்குக்கடிந்து மீண்டபோதுருட்சமறிந்
திட்டவகையறியாத கிரீடிமயங்கும்பொழு
தினிலுயரசரீரீ யவர்கள்எமன்றன்வர
முற்றோர்கள்யாவரும் ஆத்திரம்
உற்றேகைநாசியில் மாத்திரம்
வைத்தாலுன்னீள்கணை காத்திரம்
தைத்தேயநீதர்கள் கோத்திரம்
சொல்லவொருவரில்லாமல் வல்லமையதுசொல்லாமல்
மல்லிடுசதிவெல்லாமல் புல்லுமுயிர்கள்நில்லாமல்
ஏங்கிமடிவார்களெனப் பாங்கினுடனேதவென்றி
யோங்கியகிரீடினுக் கோங்கியெழிலீசனம்பை
யக்கண-முக்கிர மிருத்து-விடுத்திட
மட்டறு-துஷ்டர் முடித்தலை-பட்டுரு
ளத்திசை-யிற்கரி யெட்டும்-நடுக்குற
மைக்கடல்-முற்று மிரத்த-மிதக்கவிண்
ணுடமாருமன-நிலைகலங்கி-மிகவொதுங்கச்
சேடனோராயிர-முடிசிதைந்து-விழிபிதுங்க
அர்ச்சுனனுக்கும்

---

## அருச்சுனன் காலகேயரூர்க்குச் செல்லல்.

விருத்தம் ௰௫.

அருச்சுனன்நிவாதகவசரையொழித்தே
யரியதன்தேரினைவிண்ணு
டடையநீநடத்தென்றளவில்மாதலிகேட்
டன்புடன்தேர்விடும்வழியிற்

றருக்குறுகிரீடியந்தரந்தன்னிற்
சார்ந்தவோர்நகரினைக்கண்டு
சாரதிதனையிவ்விந்தையேதெனநற்
றையலார்புலோமைகாளகைவுக்
கிரத்தினில்மிகுத்ததவத்தினாற்கால
கேயர்களறுபதாயிரம்பேர்
கிளைத்திடப்பிரமன்வரத்தினாற்பெற்றார்
கீர்த்திகொளப்புதல்வர்கள்வாழ்க்
திருக்கமுப்புரம்போலரியவோர்புரமு
மிமையவர்தங்களாலாவி
யிழந்திடாவரமுஞ்சதுமுகனளித்தா
னெனத்தனஞ்சயன்சிரித்தனனே.



---

## காலகேயர் மரணம்.

விருத்தம் ௰௬.

சிரித்ததனஞ்சயனீடிப்புரத்தின்மீது
தேர்விடெனச்சாரதிக்குக்கூறிநட்சத்
திரத்திரள்களுதிரவின்ஞெலிசெய்திட்டான்
தீக்கணிராக்ஷதர்காலகேயர்கேட்டுத்
தரித்தசிலைவிஜயனெதிர்சார்ந்தாரன்னோர்
தமையிவன்வேதியரெனயோசித்தான்தீயர்
சரத்தினைவிட்டேசினரச்சரங்கள்யாவுந்
தடுக்கின்றான்கிரீடியமர்கொடுக்கின்றானே.

எ. தரு-இராகம்-கலியாணி-ஆதிதாளம்.

பல்லவி.

பார்த்தனுங்காலகேயருங் கோபத்தினாற்சித்தம்
பதைத்துச்செய்தாரே யுத்தம்

அநுபல்லவி.

ஆர்த்தபே யொருகோடி
ஆளிக ளொருகோடி
யேற்ற பரிகள்கோடி
யானைக ளொருகோடி
யினிதினிழுத்திடு தேரைவாயுவின்
விசையில்நடத்தி விணுடும்வேகமின்
விழியனல்சிந்திச் சிலைவிஜயனைமுந்தி-நெடும்புவி
மேலார்ந்திடு மோர்புகழ்நீள்மலை
போலோங்கிய யானையைவெல்மதி

யாலாய்ந்துட னேர்படுவதைநிகர்
காலாந்தக ராகியஎமதெதிர்
கடிதினில்வருமுனை வதையதுபுரிகுவம்
எனமுகிலிடிதரு மொலியெனவுரைசெய்த
காலகேயரை நோக்கியுமைக்கொல்வேனெனக்
கோலநீள்வட வாக்கினியொளிக்ககன

பார்த்தனும்

சரணங்கள்.

க. கொல்வேனெனச்சொன்ன-பார்த்தன்மெய்யினில்ரத்தங்
குதிகொண்டே சுழல-விண்ணிற்
குளிர்மதியொடுகதிர்-சுழலப்பலதிசை
குலவெற்புகள் சுழல
வல்லவர்மனமது-சுழலத்தவமுறு
மாமுனிவர்கள் சுழல-ஈசன்
மலர்க்கையின்மான்மழு-சுழலச்சிரமிசை
வானதியுஞ் சுழல
செல்லுமகாவுக்கிரத் திரிசூலம்-நமன்
திகிலுறும்வேல்களிந் திரஜாலம்
எல்லாம்விளக்குஞ்சக் கரம்ஞாலம்-தனை
யிமைக்குமுன்கொளுத்தி யலங்கோலம்
புல்லச்செய்திடு மம்பும்-யாவருந்
தொல்லைக்குட்சிக்கி வெம்பும்-படிவெகு
பூராயமதா அதிவிசையொடுநெடு
காராருட னிசிசரர்விடவுட
னேராவண னீள்படையெனவர
வேராகவ னேரெனவொருநொடி
யினிலெழிலுலவிய விஜயனதுகளன
விடுமுமியெனவெரி படஅவர்தொளைபட
ஈடிலாக்கணை பொழிந்துதிரத்தின்வெள்ள
மோடியேயலை கடலிற்கலந்துகொள்ளப்

பார்த்தனும்

உ. இகல்கொள்தனஞ்சய-னம்பாற்றெளியுண்ட
யினர்தம்நக ரோடு-சுக
மெப்பொழுதும்பெறு-மொப்பில்குபே
னிருந்திடுநன் னூடு
தகுநற்சூரியமண்-டலமொளிவிடு
சந்த்ரமண்டலம் நீடு-திரை

தாவியஅலைகடல்-மேலவர்யாகங்கள்
தமைச்செய்திடத் தேடு
சிகரஇமோர்ப்பரு வதத்தந்தம்-நாளுஞ்
சிறந்திடுகந்தமா தனம்விந்தம்
திகழ்சந்திரகிரி வைதந்தம்-ஒத்த
திருமலோத்தின கிரிபந்தம்
அகலச்செய்திட வாய்ந்து-சித்தர்கள்
மிகமெச்சும்புகழ் தோய்ந்து-நிகராறு
வானோங்கிய மேருவிடமுமனு
மானோங்கிய வேகமதெனவொளி
தானோங்கிய தேசொடுபோய்நிறை
தேனோங்கிய சீர்மொழிவிஜயன்முன்
திருடர்களெனவரு வதும்நிலமதிலுடன்
மறைவதுமவர்புரி கபடெனமதிகொடு
தேர்ந்துவாயுவாஸ்த் திரம்விட்டான்சிதறமுடி
சார்ந்தசேடன்மெய் நடுங்கினனிந்தப்படி
பார்த்தனுங்

௯. உலகம்நடுங்கவே-கிரீடிசெய்யமரினை
யுறுமுடரானை வோரும்-நோக்கி
ஒருசிலையொருரதம்-ஒருகொசுவெனஅதி
லொருமனிதன் னேரும்
துலக்கமில்லாப்புத்தி-நேத்தியெனத்துள்ளித்
துடிதுடித்தெழு பாரும்-தொகை
சொல்லவொண்ணுச்சர-மழைகனல்மழையிடி
சொரிந்தார்பகை சாரும்
சிலைகொள்தனஞ்சய னவர்கள்காம்-மிகச்
சிந்தவில்சிந்தவோர் கோடிசரம்
பலவகையேவினு னதுகளரம்-தனிற்
படுமிரும்பின்பொடி யாகவுரம்
ருல்வியபாண மெடுத்து-கொடுங்
கொலையர்கள்மீறி விடுத்துத்-துணித்திடும்
போதுகண்ட கிரீடிநீசர்கள்
வாதைகொண்டுயிர் மாளஈசன்மு
னேதருங்கணை பேதுவாமென
வேதெளிந்து சிவாயவோம்நம
வெனவதுகாமிசை வாஅவன்விடவுப
ரசுரர்மடியஅவ ருட்களைவெகுபசி
யேக்கமுற்றபேய்த் திரளுண்டுகொழுத்தாடத்
தாக்குமஷ்டகஜங் கலங்கிக்கண்களைமூடப்
பார்த்தனுங்

## இந்திரன் நகரலங்கரித்து, விஜயனையெதிர்கொள்ளுதல்.

விருத்தம் ௫௯.

இந்தவகையக்காலகேயராவி
　　யினைமடித்தகிரீடிரதம்வருமுன்பாக
தொந்தமுடன்துணைபோனசித்ரசேனன்
　　துரிதமுடனேவந்திந்திரனிடத்திற்
சிந்தைமகிழ்ந்தேநடந்ததெல்லாஞ்சொன்னான்
　　தேவேந்த்ரன்மகிழ்ந்துநகர்க்கோலஞ்செய்வி
தந்தனைச்சொல்லித்தேவர்முனிவர்சூழ
　　சதிர்கொள்வான்கிரீடிதனையெதிர்கொள்வானே.

௬௰. திபதை-இராகம்-அடாணா-சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧. எதிர்கொண்ட-இந்திரன்-கின்னரர்வீணை
　　யினிலுயர்கீதங்கள் 　　பாட-மிருந்
சதிர்பெறுதேவ-துந்துமிகள்முழங்கத்
　　தகுமுனிவர்கள்புடை 　　சூட

௨. விஜயனைத்தழுவிக்-கொண்டுதன்மத
　　வெள்ளையானையின்மீது 　　வைத்து-யாரும்
அசைவிலாமற்பார்க்க-நகர்தனைவலம்
　　அன்பாகவரும்போது 　　கொதித்துக்

௩. கண்டவோர்கந்தரு-வன்மனிதனிக்
　　கனம்பெறயேற்குமோ 　　வென்னக்-கேட்ட
அண்டர்க்கதிபதி-யிந்திரன்விழி
　　யழல்சொரிந்தேமிக 　　மின்ன

௪. அவன்றனைப்பார்த்தே-யோசிக்காமலே
　　அவமாநீதுரைத்தாயிவ் 　　வேளை-நீடு
கௌரவகுலத்தினிற்-பகைவர்வயிறு
　　களில்நாளுங்கூர்வடி 　　வாளை

௫. வைத்திருக்கும்-வீரன்மாரும்புவி
　　மாதுந்துயர்முற்றும் 　　நீங்க-மாயன்
பத்தினிசீதை-மணாளனேயாக
　　பார்வந்தராமன்போ 　　லோங்க

௬. வந்தஇக்கிரீடியை-மனிதனுமென
மனதில்நாடக்கூடா  தென்று-யாருஞ்
சிந்தையிற்றெளிந்-திடும்படிசொல்லித்
தெய்வமாதர்களன்பில்  நின்று

௭. வீதிகள்தோறு-மலர்மாரிகள்பெய்து
விஜயனைவாழ்த்தமென்  மேலே-நெஞ்சிற்
காதல்கொண்டவ-னேடுமாளிகை
கடிதிற்சேர்ந்தானெருக்  காலே

## இந்திரன் கிரீடிக்கு விடுதிவிடல்.

விருத்தம் ௰௮.

கன்முறுமிந்திரன்மாளிகைசேர்ந்து-கடிதினிற்கிரீடியைத்தவிசிற்
கனிவுடனிருத்திமாதலிகீயிக்-காளையர்ச்சுனன்சமர்புரிந்த
இனமதையுரைப்பாயெனஅவன்பணிந்தே-யிணையறுநிவாதகவசத்தர்
யாவரும்நொடியிலிறந்ததும்வில்லி - லெழுமொலிகேட்டதும்க்ஷணத்துட்
சினமுறுகாலகேயரைமடித்த-சேதியும்புகன்றனனிந்த்ரன்
சிந்தையிற்களித்தானமராயுதங்கள்- செபிக்குமந்திரஞ்சொலியளித்தார்
தனதொடுகிரீடிதந்தையைவணங்கித்-தருமனைப்பணியவுத்தரம்நீ
தாவெனச்சிலநாளிங்கிருவென்னத்-தகுந்தமாளிகையளித்தனனே.

## இந்திரன் ரோமசரை தருமரிடம் அனுப்புதல்.

விருத்தம் ௰௯.

இந்திரன்கிரீடிக்குடன்மாளிகையுமையா
யிரம்போகமாதருமாயுதமுமீந்து
சுந்தரபிரமரண்டமொன்றங்கழியுமாகிற்
சூழுமுரோமங்களிலொன்றுதிருகின்ற
பந்தமிலாரோமசரைநோக்கிப்பார்த்தன்
பரன்கையஸ்த்திரம்பெற்றதும்ராக்ஷதரைமாய்த்த
துந்தருமனுக்குரைப்பாயெனவேசொல்லத்
தொடுத்திட்டான்அம்முனியைவிடுத்திட்டானே.

## தருமன் கிரீடி வரயில்லையென்று துன்பமுறல்.

கொச்சகம் ௧.

இந்திரனுரோமசரையேவியபின்பார்த்தனொடு
நொந்தமொடுதானிருந்தான் சூழ்காட்டிலேதருமன்
சிந்தைநொந்துபாசுபதா ஸ்திரம்பெறவேபோனதம்பி
வந்திலையேயென்றுமிகவாடுகின்றநாள்தனிலே.

## நளன்கதை யுரைத்தல்.

விருத்தம் ௨௰.

பிருகுதச்சுவதனென்னுமோர்முனியும்வந்தான்
பிரபலதன்மன்பணிந்தாசனமுமீந்து
தரணியைச்சூதாலிழந்தோரென்றனைப்போற்
சகத்திலுண்டோவென்றுசொல்லிவாடும்போது
பரமனருளிங்குமக்குண்டாகும்பார்த்தன்
பாசுபதாஸ்த்திரத்துடனேவருவான்பூமி
விருதுடனீகைக்கொள்வாயெனமூவாசை
வெல்லுவான்நளன்கதையைச்சொல்லுவானே.

அ. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

நளன்கதையைக்கேள்தன்ம பூபனே-நாளும்
நலங்கொள்கீர்த்தியினிற்பிரதாபனே.

அநுபல்லவி.

வளங்கொள்நிடதவெற்பொன் றுண்டுமாவிந்தமென்னும்
மாநகரதில்வாழும் மதிகுலவேந்தன்மன்னும்
இளமுலைமடவார்கள் உடன்போய்த்தடாகத்தோரம்
இறங்கியன்னத்தைப்பிடித் தான்பிடித்தவிசாரம்
உளங்கொண்டுபதைத்தானன் ஞேனன்பையன்னம்நோக்கி
யுனக்குவீமராஜன்புத் திரியைமனைவியாக்கிக்
களித்திடவேணுமவள் பேர்தமையந்தி
கட்டழகிக்குன்மேல் மோகமேமுந்தி
விளைந்திடநான்தூது செலவேணுமென்று
விடைபெற்றுக்கொண்டதோர் மனதாகநின்று

நளன்கதை

சரணங்கள்.

க. அன்னமுரைத்தசொல்லா-லரசன்மையலேமீறி
யமிசமேயோர்மனதாய்த் தூது-சென்றே
அவளையிசையச்செய்தா-லுனக்குமுன்குலத்தோர்க்கு
மரும்புகழுண்டாம்புவி மீது
இங்கிமிஷத்திற்போவென்-றுனன்னமவ்வனிதை
இருக்குமிடத்தில்நொடிப் போது-தன்னி
லேசேர்ந்ததைக்கண்ட-மின்னாள்தொடர்ந்தாளன்னம்
யார்மகள்நீயாருன்பேர் யாது

கன்னியேயெனக்கேட்க நான்விதற்பன்தன்சன்னி
கனிவாலுனைப்பிடித்து விளையாடநெஞ்சிலுன்னி
நன்னயமாத்துடர்ந்தே னெள்ளளவுஞ்சந்தேகம்
நாட்டாவிடிலென்கையில் வாவென்றாள்மூன்றுலோகம்
உன்னதமாச்சிருஷ்டிக்கும் அயன்செங்கைநளன்செங்கை
யுலவும்நானுன்கரத்தில் வருவேனேவென்றம்மங்கை
தன்னிலையறிந்திட மதன்கண்டுநாணும்
சக்ரேசனழகையா ரிணைசொல்லத்தோணும்
என்னவுமவன்புகழ் தனையமாக
எடுத்தோதியேயெதிர் நின்றதுமாயோக

நளன்கதை

௨. எரிகின்றநெருப்பின்மே-லெண்ணெய்விட்டாற்போலன்ன
மேந்திழைக்குக்காமத்தை மூட்டி-நீ
யிச்சித்தபொருள்கேட்கிற்-றருவேனென்றதுநள
னென்றனைமணமாலை சூட்டி
மருவும்வகைசெய்யென்று-ளவள்திடத்தினைநன்று
மனதிற்கொண்டுன்மீதிச்சை நாட்டி-ராஜன்
வருந்துந்துயர்சொல்வதோ-எவ்விதத்திலுமுன்னை
வள்ளல்மனைவியாகக் கூட்டி
விரைவில்முடிக்கமாட்டு வேனாலுன்றன்தந்தை
வேறொருவர்க்களித்தா லென்றன்மீதினில்சிந்தை
உரைக்கவேண்டாமென்றது நமனறியாமலுயிர்
ஒருக்காலும்போவதுண்டோ மத்தில்லாமலுந்தயிர்
தரணியிற்கடைவாரோ வென்றாளன்னந்தெரிந்து
தமையந்தியிடத்திலுத் தாரம்பெற்றுப்பரிந்து
புரவலனிடத்தில்வந் துணையந்தவல்லி
புனிதநன்மாலையிடு வாளெனச்சொல்லி
அரசனைவிட்டகன்ற தன்னமொருக்காலே
அங்குதமையந்திமெலிந் தாள்மையலாலே

நளன்கதை

௩. அந்தச்சேதியைவீம-னறிந்துசுயமரமண்
டபமலங்காரஞ்செய்து தேச-ராஜர்
அனைவரும்எழுநாளில்-வரத்தூதேவினன்மன்ன
ரங்கேகினாரதை விலாச
விந்தைநாரதர்சொல்ல-இந்த்ரனக்கினிவாயு
வெங்கூற்றன்தேவர்க ளுலாச-மொடு
மேவினாரவர்தம்மைக்-கண்டுநளன்வணங்கி
விதம்விதமாகத்துதி பேச

இந்திரன்களித்தாசி புகன்றுவிதற்பன்பெற்று
இதயமகிழ்கன்னிதன் னழகைக்கேட்டிச்சையுற்று
வந்தோமுன்பாகளன்ற னெஞ்சில்நோயினைப்போக்க
மருந்தென்னும்அந்தமங்கை தனையென்றன்பாரியாக்கத்
தந்திரஞ்செய்யெனநள னொருவர்கண்ணினிற்பட்டுத்
தயங்காவண்ணமனுப்பி னஞ்சனப்பொட்டிட்டுப்
பைந்தொடியிடஞ்சார்ந்து திலகத்தைக்கலைத்துப்
பார்வேந்தன்ரூபந்தோன்ற நின்றனவள்மலைத்துச்
சுந்தரமுருகனோ மதனோவென்றடுத்தாள்
தூணில்மறைந்துகிளி போற்பேசத்தொடுத்தாள்

நளன்கதை

௪. ஆர்நீயென்றாள்மன்னனை-நானளராஜனுன்ற
னழகையிந்த்ரன்விரும்பி யென்னைத்-தூ
தனுப்பினனீயவனுக்குப்-பாரியாகிவிட்டா
லளவில்லாஅன்னோன்பாக்ய முன்னைச்
சேர்வதற்குத்தடையோ-வலியவுன்றனைத்தானே
தேடிவருஞ்சீதேவி தன்னைக்-காலால்
தேனேதள்ளாதேயென்று-னதற்கவளெனைக்கந்தத்
தேவன்பிதாஇந்த்ராணி யன்னை
பார்த்திவனேயோசித்துப் பாரென்றுளந்தநீதி
பானக்னிநமன்வாயு தேவன்மையல்வியாதிக்
கார்க்கடலில்மெலிந்து வந்தாருன்னிச்சைமிஞ்சிக்
கரும்பேநீபாரியாகில் நலமென்றனந்தவஞ்சி
யேற்றபுருஷனெஞ்சி லிருக்கிறனென்றாள்மெள்ள
இதையுமன்னனிந்திரன் முதலோர்க்குச்சொன்னன்கள்ள
மார்க்கமாவண்டுருக் கொண்டவரிந்த
மாதுடனளன்பேசும் உண்மையைமுந்தப்
பூர்த்தியாக்கேட்டபடி யாவுளங்களித்தார்
புரவலன்மகிழ்வுற வெகுவரமளித்தார்

நளன்கதை

௫. மறுநாட்கல்யாணமெனப்-பேரிகையடித்திட்டார்
மணிமண்டபத்தில்வெகு கோடி-ராஜர்
வந்தார்நளனும்வந்தா-னிந்திரனக்கினிநமன்
வாயுவும்நளன்ரூபம் நாடித்
துரையாகஅங்கேசார்ந்தார்-தமையந்தியுடன்பல
தோகையர்சூழ்ந்தேவினை யாடி-யந்தத்
தூயமண்டபஞ்சேர்ந்தார்-சரஸ்வதியவளுக்குத்
தோழியாவந்தானந்தங் கூடி

நிறைவுற்றிருந்தவேந்தர் நாட்டினேடவர்பேரும்
நேமமாக்கூறிமாறு வேஷங்கொள்தேவர்சீரும்
குறைவில்லாமற்படித்தாள் படித்தும்நளன்மேல்மனங்
கொண்டுமாலைசூட்டினுள் நிருபன்மகிழ்ந்தெவ்வனஞ்
செறியுமாதுடன்வேள்போ லிருந்தானதனைப்பார்த்துத்
திசைமன்னர்பொறுக்காம லமர்செய்துகிலிபோர்த்து
முறிபட்டாரிந்திரன் முதலோர்விண்ணுடு
முறைமையாய்ப்போய்ச்சேர்ந்தார் தமயந்தியோடு
நெறியுளநளன்வீமன் மனையினிற்சார்ந்தான்
நிகரிலாச்சுகங்கொண்டு தன்பதிசேர்ந்தான்

நளன்கதை

௬. வனிதைதமயந்திகல்-யாணந்தனக்குமுன்னம்
வந்தஇந்த்ரன்முதலோர் போகும்-போது
வழியினிற்கண்டசனி-அவள்துன்பங்கேட்பீரென்றான்
வானேருத்தமர்மனம் நோகும்
இனஞ்செய்யலாகாதென்று-ரவன்தடுத்தான்துஷ்டருக்
கெவர்களாற்புத்திசொல்ல லாகும்-என்னும்
இடர்செய்யுங்கலிநளன்-பதிசேர்ந்தான்சேர்ந்தும்வெளி
யினிலிருந்தான்கற்கண்டின் பாகும்
கனியுஞ்சொற்றமயந்தி மகனென்றுபுத்ரியொன்று
காந்திமாணிக்கம்போற் பெற்றுள்தங்கக்குன்று
தனைநிகர்தோளானவரொடும் வாழ்ந்தானேர்காள்பாதம்
தனையலம்பினுன்புறங் கால்நனையாதபேதம்
சனிகண்டுதான்றிமாங் தனைவிட்டிறைவனகர்
தனிற்புகுந்தான்சூதாடச் செகத்திற்றனக்குநிகர்
இனியாருமில்லையெனப் புட்கான்விரைந்து
எழிற்கொடியோடும்வர நளன்மனம்வெந்து
புனிதமாச்சூதாடி நகர்பறிகொடுத்தான்
புட்கரன்நாடாள அவன்கானம்அடுத்தான்

நளன்கதை

௭. காடதுதனிற்செல்லுந்-தமயந்திதனைப்பார்த்துக்
கண்ணேயுன்மைந்தர்களும் நீயும்-இந்தக்
கருணைவேதியன்துணை-கொண்டுன்பிதாவூருக்குக்
கடிதிற்போய்ச்சேருமென்றான் பேயும்
நாடும்புருஷனைநீங்-காதென்றழுதாளெந்த
நாளும்பலகலைக ளாயும்-எழில்
நளன்தன்மைந்தரையந்தப்-பிராமணனெடுவீம
னகர்க்கனுப்பிக்கைகால்க ளோயும்

நீடுசெஞ்சலங்கொண்டு போகும்வழியினிற்பொன்
னிறமுற்றஅன்னந்தனை மடமாதுகண்டதைத்தன்
ஈடில்லாநாயகனைப் பிடியென்றுளோர்வஸ்த்ரத்தை
யிருவருந்தரித்துக்கொண் டோர்கலையைக்குத்ரத்தைத்
தேடிவரும்பக்ஷிமீ தெறிந்தாரவ்வஸ்த்ரத்தொடும்
சிறந்தஅப்பக்ஷிவானிற் பறந்துநீரிங்குபடும்
பாடதைவிளைத்திட்டே னிறைவனேநான்சனி
பகவானெனச்சொல்லிப் போனபின்போர்தனி
ஆடையோடிருவரும் அடவியில்நடந்தார்
அருணனுமறைந்தான்பாழ் மண்டபமடைந்தார்

நளன்கதை

அ. அங்குநித்திரைசெய்தார்-சனிக்கூத்தாலிவர்கட்டும்
ஆடையிற்பாதிமன்னன் கிழித்துக்-கொண்
டகன்றுகாட்டினிலுறை-சர்ப்பத்தால்வேறுருவ
மாகிச்செங்கரும்புகள் செழித்துத்
துங்கவெண்மதிதாவும்-அயோத்தியாள்வேந்தனுக்குச்
சுயம்பாகியானன்மங்கை விழித்து-அந்தச்
சுகராஜன்பாதிவஸ்த்ரத்-தொடுசென்றுனெனத்தேர்ந்து
சொரியுங்கண்ணீர்மையினை யழித்துப்
பொங்குங்கடல்போலோட இரவினிற்கானகத்தில்
போம்பொழுதினிற்சர்ப்பம் விழுங்கிடத்தானகத்தில்
இங்கிதமாப்பதித்த நளன்பேரைச்சொல்லிக்கூவி
யேபுலம்பக்கேட்டவோர் வேடன்கணையையேவித்
தங்கும்பாம்பினைக்கொன்று நங்கைமேல்மோகமானன்
தமயந்தியாலவ்வேடன் க்ஷணத்தினிற்சாம்பலானன்
செங்கதிருதித்தது நளனடிக்கண்டு
செலும்வழியினிற்செட்டி களைத்துணைகொண்டு
மங்கையோர்மன்னவன் பதியடைந்திட்டாள்
வயதுசென்றவள்கண்ணி லங்கெதிர்ப்பட்டாள்

நளன்கதை

௬. தமயந்திதனைக்கண்ட-மாதுவாழ்சேதிபதே
சத்துராஜனுரிய தேவி-சனந்
தையினிடங்கொண்டேகினு-ளிவளவட்குழுத்தாள்பெண்
தானென்றறியாளெதிர் மேவி
அமுதமேநீயெந்தனு-ரென்றுள்சிறியதாயென்
றறியுமங்கைபதைத்தே ஆவி-சோர
அழுதாள்யாதொன்றுசொல்லா-தாற்பின்னுஞ்சுவாகுபாபி
அச்சனந்தையிரக்கந் தாவிக்

கமலமுகவனிதை தன்மனையிற்பொருந்தி
கனசௌக்கியத்தைப்பெற வைத்துந்தண்ணீருந்தி
நமனுக்குப்பலநாளை யொப்பித்திருந்தாள்வீம
ராஜன்நளன்சேதிபெண் சேதிதெரியநேம
சமுகவேதியனைவிட்டான் ஸ்திரீகள்தங்கைரேகை
சொல்வேனென்றெங்குஞ்சென்று தமயந்தியெனுந்தோகை
விமலமோடிருக்கும் ஊர்சென்றனன்நீத
வேதியன்றனையந்த நகராள்பிரக்கியாத
சமுகன்தன்மாளிகைக் கழைத்துப்போய்த்தொழுதான்
தமயந்திகையைப்பார்த் தந்தணனழுதான்

நளன்கதை

௰. அவனழத்தமயந்தி-யழமகட்காய்ச்சுனந்தை
யழமன்னனுமழுதே ஆறி-வந்த
அந்தணனோடுதம-யந்தியைவீமனகர்க்
கனுப்பினனவனன்புள் ளூறிக்
குவிமுலையாளையங்குச்-சேர்த்தான்தந்தைதாய்துன்பங்
கொண்டார்மகள்துயரம் வீறி-வாடுங்
கோலத்தைப்பார்த்ததந்தை-நளனைத்தருவிக்கிறேன்
குயிலேஅஞ்சாதேயெனக் கூறி
நவமதனெனும்நளன் றனைத்தேடமுன்னேபோன
நல்வேதியனைவிட்டான் தமையந்தியரிதான
தவபுத்ரன்புத்ரிமுகம் நோக்காள்தண்ணீராற்பிராணன்
தனைவைத்திருந்தாளெங்குந் தேடியம்மறைவாணன்
கவினுர்புகழயோத்தி நகர்சேர்ந்துநடுக்காட்டில்
காதலியைக்காரிருளிற் கைவிட்டோர்கள்நாட்டில்
எவராகிலுமுண்டோ வெனஅவன்படித்து
எதிர்நிற்கநளனிரு கண்ணீர்வடித்துச்
சிவன்செயல்தப்புமோ வென்றுளங்கொதித்தான்
சீர்நளனவனென வேதியன்மதித்தான்

நளன்கதை

௰௧. வேதியனவனள-னெனத்தேறிவீமனிடம்
விரைந்தேகிச்சுருளோலை யொன்று-வாங்கி
வீறுமயோத்திமக-ராஜன்சபையில்வந்து
வீமன்மகள்நளனைய கன்று
ஆதியாகியசிவன்-தனைநோக்கித்தவஞ்செய்தே
அருங்கன்னிகையாகின ளென்று-ராஜர்
அனைவர்க்குமோலையிட்டார்-அவட்குமணம்நாளைக்கென்
றவன்சொல்லியோலைதந்தா னின்று

நீதமன்னவன்தூர மென்றஞ்சினனயோத்தி
நிரூபனுமயங்கின னவன்றனைநளன்போற்றித்
தீதறுசூர்யனுதித் திடுமுன்னம்வீமன்பதி
சேர்க்கிறேனெனக்கூறி ருதுபன்னன்தேரிலதி
காதலாய்ச்சாரத்தியஞ்செய வீமன்பதிதோன்றிக்
களித்தான்ருதுபன்னன்மேல் வீமனன்பினையூன்றி
ஆதரவாகிய விடுதிகளளித்தான்
அவன்பின்சாரதி யும்போய்க்களித்தான்
மாதோடிரவினில் நளராஜனங்கு
வந்தனைமறையவ னுரைத்தனனிங்கு

நளன்கதை

௰௨. இதைக்கேட்டதமயந்தி-நெருப்பும்விறகதுவும்
இல்லாமற்சாதங்கொதி யோங்க-வரம்
எழில்நளனுக்குண்டென்றாள்-வீமன்கேட்டவ்விடுதிக்
கேகியனல்விறகும் நீங்க
அதிவிரைவில்விருந்துக்-காம்வஸ்துசாரதிபால்
அளித்தானவன்மகிழ்வு தேங்க-அங்கே
அனல்விறகில்லாமற்பா-கஞ்செய்தாளேடியினில்
அமாரும்அதன்ருசிக் கேங்க
துதிபெறுருதுபன்னன் சாரதியுண்டாரிதை
தூதர்போய்வீமனிடம் உரைத்தார்களன்னேனதை
ரதிநிகர்தமயந்திக் குரைத்தாரவனேநள
ராஜனென்றறிந்தவள் மேலுமொப்பில்லாஇள
மதிபோல்வளர்பாலரை விடுத்தாள்சிங்காரஞ்செய்து
மன்னனவர்களைக்கையா லேந்திக்கண்ணீர்பெய்து
பதைத்தனனிச்சேதி வீமனைக்கிட்டி
படித்தானவன்களித் தேதொடைதட்டி
எதிரில்லாவொரு மறையோன்தனைநொடி
யினிற்சேதியறியவே பினும்விட்டான்மணிமுடி

நளன்கதை

௰௩. அத்தூயமறையவன்-ருதுபன்னனிடத்திற்போய்
அரசேயுன்சாரதிவிர்த் தாந்தம்-நீ
அறியெனவேயுரைத்-தகன்றானவன்கேட்டனன்
அதற்குத்தேர்ச்சாரதி காந்தம்
மெத்தவுந்துதித்திடும்-நளராஜன்யானென்றானவ்
வேந்தன்துடித்துன்சேதி பாந்தம்-ஆக
விழலனுக்குரையாதால்-பணிவிடைகொண்டேனென்று
விண்டானல்லார்கள்மீதிற் சாந்தம்

எத்தேசகாலமுங்கொள் நளனிதஞ்சொன்னனெல்லி
யெழில்மாத்தினிலேகா யெண்ணமற்றொருகைசொல்லி
சித்தமயோத்திமன்னன் மகிழ்ந்தானளனச்சூட்சி
தெரிவிப்பாயென்றானவன் விரைவிற்றேர்விடுகாட்சி
யுத்தமனேசொல்லென்று னொருவர்க்கொருவர்குரு
உரைக்குமந்த்ரம்போற்பெற்றுக் கொண்டார்துன்பத்தைத்தரு
சத்துருவாஞ்சனி யெண்ணத்திலாழ்ந்து
தருநளராஜன்பத மலர்மிசைவீழ்ந்து
சத்ரபதியேநான் செய்பிழைமறக்கும்
தயவுசெய்யென்றனன் எவரினுஞ்சிறக்கும்

நளன்கதை

௰௬. சலம்விட்டுக்கலிவணங்-கியுநளனவன்றனைச்
சபிப்பேனென்றேயெழுந்தான் னீல-மேனிச்
சனியுன்கதைபடிப்போர்-கேட்போரைச்சாரேனென்றான்
தமயந்திக்கிவ்வாசகஞ் சீலம்
உலவுதூதர்கள்சொன்ன-ரவள்பாதிவஸ்த்திரத்தோ
டுயர்நளனிடம்வந்து கால-மழை
ஒக்கக்கண்ணீர்பொழிந்தா-ளவனுமழுதனன்பின்
உத்தமியவளோடு சூலம்

இலகுகைகநமனுமஞ்சுங் காட்டிலெனைவிட
இசைந்தாயென்றனள்விதி யென்றானுன்ரூபங்கெட
வலியதீவினையுண்டோ வென்றுள்பகைவரேசா
வண்ணஞ்சர்ப்பத்தாலுரு மாறினேனென்றான்பூசா
பலனேயுன்ரூபத்தைக்கொள் ளெனச்சர்ப்பத்தைநினைந்து
பழையரூபானான்வீம னுங்கண்டுளங்கனிந்து
நலமிகுவரிசைதந் தனன்சீர்திருந்து
நளன்தமயந்திமைந்த ரோடுங்கல்விபொருந்து
புலவர்கள்புகழுந்தன் பதிசெலமீண்டான்
புட்கரன்தனைச்சூதால் வென்றுலகாண்டான்

நளன்கதை

---

## நாரதர் தீர்த்தமகிமை யுரைத்தல்.

விருத்தம் ௨௧.

நளன்கதையைஅம்முனிவன்சொல்லிப்போன
நாரதனுந்தருமனிடமுடனேவந்தான்
உளமகிழ்தம்பியரோடுமன்னோன்பணிந்தே
ஒப்பறுமாசனமுதவிஅனைபோலன்பை

எளியரிடங்கொண்டுவந்தாய்அடியேனுக்கிங்
கெழிற்றீர்த்தமகிமையிற்சந்தேகமுண்டு
தெளியவதைச்சொல்லெனவேதத்தினுட்பங்
தேறுவான்றீர்த்தநலங்கூறுவானே.

௬. தரு-இராகம்-கலியாணி-ரூபகதாளம்.

பல்லவி.

தீர்த்தமகிமைதன்னைச்சொல்லுவேன்-தருமாவுனக்குத்
தீர்த்தமகிமைதன்னைச்சொல்லுவேன்.

அநுபல்லவி.

மார்க்கமிருசன் மானம்விட்டு
மனமுறபுலத்தி யரைக்கேட்டுப்
பார்க்குளேதீர்த்த மாடியதுண்டு
பார்த்திபாவுய ரன்புகொண்டு
தீர்த்த

சரணங்கள்.

க. உடலம்வருந்திபலபொருள்களை யுண்மையாளடுத்துத்-தானம்
உதவியேபலயாகஞ்செய்திடு வோர்களையடுத்துக்
குடிகொளும்பலன்றீர்த்தமாடுவோர் கொள்வாரார்தடுத்துச்-சொல்லக்
கூடும்புட்கரமென்மேலோர்கள் குறித்துப்பேர்கொடுத்துப்
படிக்குள்மகிழ்நற் றீர்த்தமுண்டுசீர்
பரவுமாதவ ரமரர்தன்பேர்
அடைவுடன்னினைக் கிற்பவந்தேயும்
அரியவுத்தம ரெவருந்தோயும்
தீர்த்த

உ. எய்துநற்குலப்பசுக்களாயிர மின்பத்தாற்றேடித்-தானம்
ஈயஆயிரம்அஜமேத யாகத்தைநாடிச்
செய்வதிலும்நல்லமல்கரமென்னுந் தீர்த்தத்திலாடி-யந்தத்
தீர்த்தக்கரையில்மகத்தினைச்செய்து திடவன்பைக்கூடித்
துய்யநீவேதனந் தாங்கள்வாழச்
சுரர்க்களிக்கில்நன் றுமும்பர்சூழத்
தெய்வத்தேவிகைத் தடத்திலேயரும்
ஜீவன்வாழ வானன்னீர்முத்திதரும்
தீர்த்த

௩. பரசிராமன்தன்தகப்பனைக்கொன்ற பழிக்கொருக்காலே-நெடும்
பார்மன்னரைக்கொன்றவுதிரமடுவிற் பரிந்துகையாலே ‍ [ச்
தருப்பணஞ்செய்தான்பிதிர்க்கள்வந்தவன்-தன்னைமென்மேலே-மெச்சி
சல்தருப்பணந்தாவெனஅவன் தன்கோபத்தாலே

மருவலரத்தம் மடுக்களாக
வாய்த்ததாலது நீராய்ப்போக
வாமுந்தான்செய்த குற்றமுமாற
வகைசெய்யெனச் செய்தார்நீதேறத்
தீர்த்த

ச. பன்னும்அம்மடுக்களைச்சிமந்த பஞ்சகமென்று-யாரும்
பகர்வார்கன்னியாகுமரியாடிற் பக்தியில்நின்று
கன்னிகாதானம்வழங்கியபலன் களைத்தருந்துன்று-புவி
களித்திடுஞ்சரஸ்வதியெனும்நதி காட்சியாய்ச்சென்று
உன்னதமாக்கலந் திடுமுயர்தலம்
உவந்துகண்டவர் பெற்றிடுவார்நலம்
மன்னுகோதாவிரி யாடியிமய
மலையைநினைக்கில் வினைபோம்புண்ணிய
தீர்த்த

---

## உரோமசர் தருமனிடம் வருதல்.

கலித்துறை க.

நாரதன்தீர்த்த மகிமையெலாந்தன்ம ராஜனுக்குச்
சீருடன்சொல்லி யுரோமசமாமுனி சேர்வனிங்கு
வேரோடுநின்றுயர் போமென்றகன்றனன் வீறுசடா
பாரவம்மாமுனி வந்தான்தருமன் பணிந்தனனே.

---

## தருமன் தீர்த்தயாத்திரை செயல்.

விருத்தம் உஉ.

பணிந்ததன்மனுடுவிஜயனரன்கையஸ்த்ரம்
பற்றியதுமிந்திரன்பாலுற்றுவீர
மணந்தபுகழசுரரைவென்றங்குநின்று
மன்னுகந்தமாதனம்நீர்சேரும்போது
இணங்கவுனைக்கிரீடிவருவானென்றிந்திரன்
இசைத்தானீர்நற்றீர்த்தயாத்ரைசெய்தல்
குணந்தருமென்றிடத்தருமன்முதலோரன்பு
கூடினார்பலதீர்த்தமாடினாரே.

ய. தரு-இராகம்-புன்னுகவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

தருமராஜன்தீர்த்தயாத்திரைதன்னைச்செய்தானே-மூன்று
தம்பியர்மற்றவரோடும்நல்ல-சர்க்குணவானே.

அநுபல்லவி.

திருவளரிமை　　யவர்கள்கூடி
சேனுலகிந்த்ர　　னனுப்பஅன்போடு
வருமுரோம　　னழைக்கநீடு,
மகிழ்வுடன்செல்　　பத்தியைநாடி
தருமராஜன்

சரணங்கள்.

க. மகிபன்போம்போதோர்சூழலைக்கண்டுதன்　　மாமுனிதாள்மேவி-யிந்த
வளங்கொளாசிரமமெவருதென்னவு　　மகிழவனந்தாவி
அகத்தியன்முனந்தவஞ்செய்யிடமீ　　தாமென்றுரைதூவி-மேலும்
அன்னவன்தன்னிடபிதுர்க்கள்மோட்ச　　மடையச்சீதேவி
நிகர்த்தலோபாமுத்　　திரையைநன்மணம்
நேசமாச்செய்தது　　மளவில்லாப்பணம்
வகையாய்த்தேடப்போ　　னதுவுமரணம்
வாதாவிக்குற்றது　　வுஞ்சொன்னனக்ஷணம்
தருமராஜன்

உ. கனவான்கேட்டகத்தியதீர்த்தந்தோய்ந்து　　காசினியெங்நேரம்-துதி
கவுசிகதீர்த்தமாடியோராசிரமங்　　கண்டுசடாபாரம்
தனையுறுமுரோமசனைக்கேட்கச்　　சதுர்வேதசாரம்-உணர்
சாந்தனுங்கலைக்கோட்டுமகாரிஷி　　தன்னதென்றந்நேரம்
இனமுடன்சொல்லிப்　　பின்னையுமந்த
இருடியாலங்க　　தேசத்தில்முந்த
பனுமழைபெய்த　　துஞ்சொலஇந்தப்
பண்புகேட்டங்குநீ　　ராடிவினைசிந்த
தருமராஜன்

ங. சொலுமருங்கோதாவிரியில்மூழ்கித்　　துவாரகையைவிட்டு-வந்த
சுந்தரகிருஷ்ணனைக்கண்டுநிருமதை　　தோய்ந்தன்புதொட்டு
பலதீர்த்தமாடிசாஸ்வதிநதி　　படிந்துநீளெட்டுத்-திக்கும்
பணியுந்தெய்வலோகத்தில்வாழ்பாண்டு-பார்த்தன்கண்ணிற்பட்டு
துலங்கநோக்கியவ்　　விடத்தைப்பேர்ந்து
துங்கச்சிபிகதை　　கேட்டன்புகூர்ந்து
நலங்கொள்வனங்கள்　　தொறும்போய்ச்சேர்ந்து
நண்ணுந்தவத்தோர்கள்　　அருளைச்சார்ந்து
தருமராஜன்

---

## விசாகமுனிவனத்தில் திரௌபதி மந்தாரமலரைக் காணல்.

விருத்தம் உங.

தருமனிவ்வணந்தீர்த்தயாத்திரையைத்
தான்புரிந்துரோமசமுனிவன்

தன்மொழிப்படியேவிசாகமாமுனிவன்
தக்கநல்வனத்திலோர்வருடம்
பரிவுடனுறையுநாளினிலிந்த்ரன்
பருமணிமுடிமிசையணிநற்
பனிகொள்மந்தாரமலர்விழவதனைப்
பைந்தொடிதிரௌபதியெடுத்துத்
திருவளர்புயத்தோன்மாருதியிடம்போய்ச்
செகத்தினிலெங்கணுங்கிடையாச்
செழுமலர்தனக்குவேண்டுமென்றுரைத்தாள்
ஜெயம்பெறுவீமனம்மலரை
யிருகரத்தேந்திவிசாகமாமுனிவ
னிணையடிபணிந்தெதிர்வைத்தே
யிதிருக்கின்றஇடமதைக்கேட்க
எழின்முனியிவைபுகன்றனனே.

---

## வீமன் அனுமனைச் சிநேகங்கொளல்.

விருத்தம் ௨௪.

இந்தமலரிந்திரலோகத்திலுஞ்சி
றெழின்மிகுகுபேரபட்டணத்திலுந்தான்
சந்ததமுமுண்டெனக்காஞ்சனவனத்தைத்
தான்கடந்ததற்குவடக்கேநீள்வாழைக்
கந்தவனங்காக்குமிராட்சதரைமாய்த்துக்
கனத்தசிங்கநாதஞ்செய்தனுமன்வாலை
நிந்தையுறக்கடக்கவனுமன்முன்சென்று
நில்லென்றானடாநீயார்சொல்லென்றானே.

எ. திபதை-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

### கண்ணிகள்.

க. அனுமான்வீமனைவழி கட்டி-தேவர்
அரக்கரும்வரக்கூடாஇடங் கிட்டிப்
பனுதற்கரிதானநீ எட்டுத்-திக்கும்
பயப்படஇடிபோற்கர்ச்சனை யிட்டு

௨. வருமானுடனீயாரடா வென்ன-வீ
மனும்நீயாரெனவொளி துன்ன
ஒருமாமலையநுதனைப் போலே-வந்
துற்றனையென்றனனெருக் காலே

௩. அதைக்கேட்டனுமந்தனெனை யிங்கு-நீ
யாரடாவென்றதுன்காரந் தங்கு
கதைவில்லாண்மையினுலோநீ யென்வால்-தனைக்
கடந்துபோவதோசொல்லென்ருன் அன்பால்

௪. சொன்னதைக்கேட்டமத வீமன்-ராஜ
சுந்தரனுகியசெய ராமன்
தன்னால்மகிழ்தூதன்தவ மித்ரன்-எந்தன்
தமயன்சமீரணன்தன் புத்ரன்

௫. கோலவால்கடப்பதொன் றரிது-மற்றைக்
குரங்கின்வால்கடப்பதோ பெரிது
போலநீசொலவந்தாயென நாடித்-தம்பி
புகன்றதைகேட்டானந்தங் கூடி

௬. அடன்மருத்துக்குநானும் மைந்தன்-மேலும்
அனுமானென்பேரென்றபல வந்தன்
கதித்துச்சொன்னான்வீமனவன் சீத-பாத
கமலத்திற்பணிந்தனன்வெரு நீத

௭. ராகவதூதன்தம்பியைத் தூக்கி-மன
ரம்மியத்துடன்கண்களால் நோக்கி
மாகுணவானேயுன்பதம் நோக-நீ
வந்ததேதுக்கென்றான்கட டாகத்

௮. தாயாதிகளும்வெகு துஷ்டன்-அனு
சகுனியுஞ்சூதாடித்திகை முட்ட
ஓயாமற்றுதிக்குந்தன்சம் பத்தைக்-கை
யுற்றதும்தாம்நெடுந்தம் பத்தை

௯. யொத்ததுமெவர்களுமிகத் தாழும்-வண்ண
உரோமன்வந்ததுமலை சூழும்
சித்ரவனஞ்சேர்ந்தவா லாறுங்-கற்பிற்
சிறந்தபாஞ்சாலிதன்னிஷ்டம் வீறும்

௰. மலர்க்காகவந்தசேதியுஞ் சொல்ல-அனு
மான்கேட்டனசேசனுறை நல்ல
தலத்தினிலுண்டந்தமலர்ச் சோலை-யது
தன்னிலொருத்தருங்குதி காலைச்

௰௧. சற்றும்வைக்கொணுதெட்சர் தீய-ராட்
சதரங்குகாவலென்னு மாய
முற்றும்வதைப்போர்களென் னுண்மை-தன்னை
மொழிந்தானுன்னருள் வண்மை

௰௨. கொண்டுமும்மூர்த்திகள்வந் தாலும்-மகா
கொடியவுக்ரவெம்போர்வந் தாலுந்
தண்டாயுதத்திறைற்றலே சிந்த-அவர்
தமைவாட்டியம்மலர்தனை யிந்த

௰௩. நிமிஷங்கொண்டுவருவே னென்று-தம்பி
நெறிப்பாச்சொன்னதைக்கேட்டுமகிழ் துன்று
தமயனவனைப்பார்த்துநீ வேண்டும்-வரந்
தருவேன்கேளெனத்திரைக்கடல் தாண்டும்

௰௪. வெண்பரித்தேர்பார்த்தன்கீள் படியில்-சண்டை
விளைத்திடும்போதிலன்றேன் கொடியில்
பண்புடனேவந்துநீ கீர்த்தம்-பண்ணும்
படியிசைந்திடுவதற்குன் சித்தம்

௰௫. மைவென்றனவனந்த வரம்-தந்து
மகிமைக்குபேரன்வாழ்நன்ன சுரம்
எய்திடச்சிலயோசனை தூரம்-தா
னெனவும்பூஞ்சோலையின் சவிஸ்த் தார

௰௬. முந்தெரியும்படியப் போது-யாரும்
முக்கியமாப்புகழுமஞ்சனை மாது
தந்திடும்அனுமானன்பது தோய்ந்தான்-வீமன்
தண்மலர்க்குச்செலவிடை யீந்தான்

---

## வீமன் குபேரவனஞ்சென்று அரக்கரோடு போர்செயல்.

விருத்தம் ௨௫.

விடைகொளும்வீமன்போகும்வழியிற்சண்டை
விளைத்ததிவாகரன்மலேப்புண்டரீகன்சந்திர
அடலவரைப்புண்டரிகனிவர்தம்மைமாய்த்தே
யனுமான்சொற்படியளகைக்குத்தென்திக்கில்
தடமுமலர்ச்சோலையுங்கண்டுற்றனங்கு
தங்குமிராட்சதர்படைகள்கைக்கொண்டுற்றூர்
இடிநடுங்கக்கதையைமதவீமன்கையா
லெடுக்கின்றன்உக்கிரவெம்போர்கொடுக்கின்றனே.

௰௬. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

சண்டைசெய்தான்வீமன்-ராட்சதரொடு
சண்டைசெய்தான்வீமன்.

அநுபல்லவி.

எண்டிசைபுகழ்ந்திடு மலைகளில்நின்று
எதிர்த்திடுபுண்டரீ கரையுடன்கொன்று
அண்டியேகாற்றுநுழைந் திடப்பயந்துன்று
அளகேசன்தன்னெழில் வனத்தினிற்சென்று
சண்டை

சரணங்கள்.

க. ஆயிரஞ்சிரங்களு-மாயிரங்கரங்களு
மாகியலட்சம்ராட்சதர் வீர
அடல்மாருதியைக்கண்-டெற்றுங்குற்றுங்கோ
ளடியுங்களெனக்கூறிவெகு தீரத்
தூயவிண்ணவர்களு-மெப்பொழுதினும்வரத்
துணிந்திடாஇந்தநற்சிங்க ராஜ
சோலையில்வந்திடு-காரியமுனதுயிர்
தொலைத்திடுமுன்னமேகெம் பீரப்
பேயனேபுகன்றிடு வாயெனத்தடுக்கப்
பெருநாய்நரிகளுக்கும் மையிரைகொடுக்க
ஞாயமாவண்ணமண மலர்களையெடுக்க
நான்வந்தேனெனச்சொல்லி நமனும்பிரம்மையடுக்கச்
சண்டை

உ. தீரமாருதியிந்தப்-படிசொன்னதைக்கேட்ட
தீயவரக்கருமுயர் வால
சேனன்முதலான-சேனாதிபர்களுஞ்
சீறிநெருங்கிவிண்ணிடி போல
ஆரவாரஞ்செய்தா-யுதங்களையேவினா
ரதுகளைநொடியிற்பிரளய கால
அனல்விழிருத்திர-னெனக்கதையாற்பொடி
யாக்கிமிகுந்தஇந்திர ஜாலக்
கோரராட்சதர்சில பேருயிர்தள்ளக்
குத்தினான்சிலபேர்வா யினில்நுரைதள்ள
வாரியடித்தான்சில பேர்கையினுள்ள
வண்படையொடுமண்ணில் நெடுமூர்ச்சைகொள்ள
சண்டை

ந. முன்வந்தோரபரினில்-மாண்டார்பினும்லட்ச
மூடவரக்கர்வெம்போர் செய்ய
முதிர்சினவீடணை-வளைந்தாரவர்மார்பில்
மூக்கிறசன்களில்மெய்யில்மிகு துய்ய

வன்னநெடிஞ்சிலை-வளைத்துச்சரங்களை
மழைமுகிலென்னவேபவன் பெய்ய
வளைதடிசக்கரம்-வேல்வாளுலக்கைதோ
மரந்துஷ்டர்மாருதிதலை நைய
அந்நிமிஷத்தில்விடுத் தார்விடும்நெடிய
ஆயுதமெல்லாந்துக ளாகவேயொடியச்
சின்னபின்னஞ்செய்தே யுடனந்தக்கொடிய
தியர்மாவட்டைபோற் சுருண்டெங்குமடிய
சண்டை

---

## சங்கோடணன் வதை.

விருத்தம் ௨௬.

இந்தவகையுக்ரமதவிமன்கையா
லேயிரண்டுலட்சமரக்கருமாண்டார்கள்
சுந்தரகுபேரனுக்குச்சேதிகாவல்
துன்னுமிராட்சதர்சிலர்போய்ச்சொல்லக்கேட்டுச்
சிந்தைகொதித்துச்செங்கோடணனை நோக்கித்
தீரவெம்போர்செய்துவனமலரைக்கொய்ய
வந்தமனிதன்றனைக்கொல்லாமற்கட்டி
வாவென்றான்விடைகொடுத்துப்போவென்றானே.

அ. திபதை-இராகம்-சௌராஷ்டகம்-சாப்புதாளம்.

### கண்ணிகள்.

௧. அளகேசன்விடைகொண்ட-சங்கோடணன்தனக் காவி-யென்னுந்
தளஞ்சூழ்வந்தனனச்-சேனைவனத்தினிற் றாவி

௨. வீமனைவளைந்துகொண்-டளவில்லாஆயுதம் வீசிப்-பொல்லா
யேமனைக்கொலுமெங்க-ளிடஞ்சிக்கிக்கொண்டாயென் றேசிச்

௩. சண்டைசெய்தார்சிங்கந்-தனையானைத்திரள் தாக்க-வரில்
மண்டையைப்பிளக்காமற்-சிங்கம்விடுமோதுன் மார்க்க

௪. ரனைவர்மார்புந்தேகமுஞ்-சல்லடைக்கண்க ளாக-எழில்
துனும்பாணங்களாற்-றுளைத்துவிட்டானதில் சோகம்

௫. உற்றுச்சிலரிறந்தார்-சிலர்கிலிகொண்டே யோட்டம்-கொண்டார்
மற்புயமாருதி-கண்டுசெங்கோடணன் வாட்டம்

௬. அக்கணந்தனிற்கொள்ள-அவன்மார்பிற்றன்னடை யாளம்-இருக்கக்
கொக்கரித்துக்கதைபா-லடித்தானண்ட கோளம்

எ. கேட்டஅக்கதையடி-யாற்றிகைத்துத்திசை கெட்டு-மிகு
வேட்டையுடன்போய்க்-குபேரன்முன்பெருமூச்சு விட்டுப்

அ. புனைமலர்க்குவந்தோன்-ருத்திரன்மனிதனைப் போலே-வேஷங்
கனமாகக்கொண்டுவந்-திருக்கின்றனவனொருக் காலே

கூ. இலங்கையையனுமான்முன்-னதஞ்செய்தவகையைப்போ லின்று-வி
குலைநடுங்கிடஇந்த-நகரழித்துடனம்மைக் கொன்று [ண்ணோர்

௰. எகுமுன்னவனுக்குத்-திரவியமுதல்யாவும் எடுத்து-நய
மாகப்பேசிக்கொடுத்-தனுப்புதல்நலமென்றான் அடுத்து

---

வெண்பா க.

ஆனசங்கோடன் சொலைக்கேட் டர்ப்புதகுபோன்மிரு
மானபரன்றன்சீர்மகனுருத்ர-சேனனைப்பார்த்
துச்சிதமாநம்வனத்தி லுற்றவன்கொளிச்சையறிந்
திச்சணம்வாவென்று ளிசைந்து

---

கலித்துறை உ.

தந்தையுரைப்படிக் கங்கேகிராட்ச தரைமடித்த
விந்தைகொள்மானுடன் யார்நீயெனமத வீமனெமன்
மைந்தன்தருமனுக்குத் தம்பிநானென் னறுமலர்க்கு
வந்தனனென்ன அவனோர்விருக்ஷ்கூஷம் வழங்கினனே.

கூ. திபதை-இராகம்-சாவேரி-சாப்புதாளம்.

**கண்ணிகள்.**

க. இணையில்லாத்தருவினை-மாருதிதனக்கவன்
ஈந்துநீயேகுவா யென்று-சொல்லி
மணிமுடிதரித்திடும்-அளகேசனிடத்தில்
மகிழ்வாற்சேதியைச் சென்று

உ. தெரிவித்தான்புஜபல-மதவீமன்வனத்தினில்
திகழ்கின்றபொய்கைநீ ராடி-யங்கே
துரைபோலிருந்தன-னவனைக்காணுததால்
துடித்துத்தன்மனெங்குந் தேடி

ஙு. மங்கைபாஞ்சாலியைக்-கேட்டானவள்வீமன்
வண்ணமணமலர்க் காகச்-சென்று
சங்கதிகூறினளதைக்-கேட்டதன்மராஜன்
தன்னரும்புண்ணிய தேக

௪. முற்றுப்பதைத்துத்தன்-தம்பிக்கென்னசாபம்
மூளுமோவெனமனம் நொந்து-உயிர்
வெற்றிக்கடோர்க்கஜன்-தனைநினைத்தானவன்
விண்ணிற்போந்தேர்மீதில் வந்து

௫. தன்மனைவணங்கினன்-அன்னேனையுதிட்டிரன்
தயவாநோக்கியவன் தந்தை-யெழில்
துன்னுங்குபேரன்-வனத்துக்குப்போனதைச்
சொன்னதல்லாமனுஞ் சிந்தை

௬. நிலைகொள்ளாததால்-வீமனுக்கொருதுயர்
நேருமுன்னவ்வனத் துக்குத்-தான்
செலவேண்டுமெனவுரைத்-தக்கடோர்க்கஜனேறுந்
தேரின்மேல்தன்மனத் துக்குச்

௭. சரியாநடக்கின்ற-நகுலன்சாதேவனற்
றையல்திரௌபதியன்பி னாலே-கூட
வாரநாலுநாழிகைக்-குள்ளாகஅளகேசன்
வனத்திற்சேர்ந்தாரொருக் காலே

---

## தரும னளகேசன் வனஞ்சேர்தல்.

விருத்தம் ௨எ.

இனித்தவனஞ்சென்றதன்மன்வீமனைக்கண்
டேந்திழைபாஞ்சாலிசொற்கேட்டிங்குவந்தா
யெனத்துடித்தபீமன்மடமூழ்கித்தேர்மேல்
யாவரும்விசாகமுனிவனம்வந்துரோம
சனைப்பணிந்துதிரௌபதிக்குப்புட்பந்தன்னைத்
தந்துகடோர்க்கஜன்செலவுத்தாமீந்தந்தத்
தினத்திலுரோமசன்சொல்சிவன்கதைகேட்டின்பஞ்
செழிக்கின்றாரவர்வினையையொழிக்கின்றாரே.

௰. திபதை-இராகம்-காம்போதி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧. தன்மன்விசாகமுனி வனத்தில்-வெகு
நன்மையாய்வாழுமோர் தினத்தில்
கருதுமூவாசைகளை விண்டு-உதிர்
சருருகாய்கனிகளை யுண்டு

உ. மனமடக்கியேதவம் புரியும்-பல
முனிவர்களெவர்மீதும் பரியும்
உதிட்ரன்றனைக்குறித்துத் தேடி-வந்து
கதிக்குமன்பினைநெஞ்சில் நாடி

௩. ஆசீர்வாதஞ்செய்தவர் மேவும்-வனத்தி
லேசீறியெப்போதுந் தாவும்
தந்தியுமாளிகளும் புலியும்-செய்யுந்
தொந்தரையாற்றுங்கள் மெலியும்

௪. சேதிதனைச்சொன்னாரப் போது-அன்னோர்
பாதகமலங்களின் மீது
சுமுகனுந்தன்மராஜன் பணிந்து-கொல்லும்
எமனுந்தன்னுளநாணத் துணிந்து

ரு. எதிர்வருமாருதியைப் பார்த்து-இந்தச்
சதிர்கொள்முனிவர்துன்பந் தீர்த்து
வாவென்றன்பாகவே புகன்றான்-இன்பங்
தாவிவீமன்வேட்டைக் ககன்றான்

---

சடாசூரன்வதை.

விருத்தம் உஅ.

மாருதிசென்றான்மறையோன்போலேவந்து
வல்லசடாசூரனற்றிரௌபதியைக்கையால்
வாரியெடுத்தந்தரத்திற்சென்றானந்த
மயில்புலம்பக்கேட்டநகுலன்சாதேவன்
வீரசரம்விட்டவன்பின்னேதொடர்ந்தார்
மிண்டனுமங்கார்ப்பரித்தான்வேட்டையாடிக்
கோரகமனெனவருவீமன்கண்டுக்ரங்
கூடினான்சடாசுரனைச்சாடினானே.

௰உ. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-சாப்புதாளம்.

பல்லவி.

வீமனுஞ்சடா சூரனும்உக்கிர வெம்போர் செய்தாரே

அநுபல்லவி.

மாமலைபோலவே பலவந்த
வாலியுஞ்சுக்கிரீ வனுமுந்த
ஈமருத்திரன்யுத்தஞ் செய்வகையென்னவே
இருவர்கண்களினுந்திப் பொறியெங்குமின்னவே

வீமனுஞ்

சரணங்கள்.

௧. அரியமாமரந்-தன்னால்மாருதி
அரக்கன்தனை ன்-துஷ்டன்
அழகுள்ளதிரௌபதி-தனைவிட்டோர்மலை
யதையெறிந்தே துடித்தான்
நிருதனெறிந்திட்ட-மலைதனைமாருதி
நெடுங்கதையாற் பொடித்தான்-பின்னும்
நிர்மூடன்திகைத்திடும்-படியவன்தோள்களை
நிமிஷத்தினிற் பிடித்தான்
உரமாப்பிடித்தோன் வெஞ்சினந்துன்னி
யுறுதொடையோடு தொடையினைப்பின்னித்
தரைமேல்விழத்தள்ளி யவனுவிதுள்ளவே
தன்காலாலுதைத்தான்சே டனுந்திகில்கொள்ளவே
வீமனுஞ்

௨. உதைபட்டுநிலத்தினிற்-புரண்டவஞ்சகனெழுந்
துயரண்டமுங் கிட்டிக்-கேட்க
உகாந்தகாலத்திடி-போற்கெர்ச்சனையிட்டே
யுறுதோள்களைத் தட்டி
முதிர்சினவீமனை-நோக்கித்தன்மீசையை
முறுக்கியென்றனைக் கட்டி-யெனும்பு
முறியவுதைத்திட்ட-உனைக்கொல்கிறேனென்று
மொழிந்துசிங்கக் குட்டி
கொதித்துஎழும்பும் வகையெனமீறிக்
குதித்துப்பாய்ந்தனல் போல்மிகச்சீறி
யெதிர்த்துமாருதிமண்ணில் வீழ்ந்திடத்தப்படி
யெடுத்தக்ஷணந்தள்ளி நகைத்தனனிப்படி
வீமனுஞ்

௩. மின்னியவிழியரக்-கன்தள்ளிச்சிரித்ததை
விரைவில்வீமன் பார்த்து-அந்த
வெய்யவன்றனைத்தள்ளி-யவன்கோறதந்தத்தை
வேருடனே பேர்த்துக்
கன்னத்திலறைந்தனன்-தீயன்மாருதிநெஞ்சங்
கலங்கஇடித்தா னூர்த்துப்-பாத
கனையுடன்மாருதி-குத்தினன்துடித்தவன்
களைத்துடலெங்கும் வேர்த்து
என்னபுத்தியாற்பாஞ் சாலியைக்கொழுத்து
யெடுத்தனமென்றவன் தன்றலையெழுத்து

தன்னைநினைத்தன துன்மார்க்கனைவிண்மேலே
சடைபோல்மா( யெறிந்தனனொருக்காலே
வீமனுஞ்

---

## தருமன் அ... கோணமகாரிஷி வனஞ்சேர்தல்.

விருத்தம் உகூ.

மதத்தசடாசூரனெமலோகஞ்சேர்ந்தான்
மாருதிதிரௌபதிநகுலன்சாதேவன்சீர்
கதித்ததன்மன்பாற்போய்ச்சேர்ந்தாரெல்லாருங்
கருணைகொள்சூழலிலிருந்துவாழ்ந்தாரப்பால்
துதிக்குமஷ்டகோணமகாரிஷிவனம்போய்த்
துன்னியநாளொடும்வருடமொன்பதாக
உதிக்குமன்பாலம்முனிசொல்கதைகேட்டுள்ள
முருக்கின்றூர்மகிழ்வினுடனிருக்கின்றூரே.

---

## வீமன் அரவிந்தமலருக்காக அளகைபுரிக்குச் சென்று அனேகம் ராக்ஷதரை மடித்தல்.

விருத்தம் ௯0.

புனிதர்களிருந்தநாளினிலாற்றிற்-புதியநீர்வந்ததுமேலோர்
புகழ்ந்திடுகின்றமுனிவர்மங்கையர்கள்-போயினர்திரௌபதியும்போய்
வினையறநதியில்மூழ்குமப்போது-மிதந்துவந்திடுகமலத்தை
விரைவினிலெடுத்துக்கொண்டுவீமன்பால்-மேவியிவ்வகைமலர்வேண்டு
மெனஅவன்ரத்நகிரிகடந்தளகை-யின்மணிவாசலிற்சென்றே [வன்
இலகுசங்கத்தைத்தொனித்தனன்சிலர்கேட்-டெய்தினர்விஞ்சையனொரு
இனிதுறுமலர்க்குமுன்பும்வந்தோனென்-றெழில்மணிமாலனுக்குரைத்தான்
இணையில்மாருதியைக்கொலஅவனெண்ணுயிரமியக்கரைவிடுத்தனனே.

௰௧. திபதை-இராகம்-நாட்டை-சாப்புதாளம்.

### கண்ணிகள்.

க. எண்ணுயிரஞ்சேனு-திபர்களானஅந்த
இயக்கர்நாலுவகைச் சேனை-யோடும்
விண்ணேருங்கலங்கிட-யாருக்குமஞ்சாத
வீமனென்னும்பல வானை

உ. வளைந்தார்மாருதியும்-வில்விற்கணைவைத்தான்
வைத்திடுமச்சமை யத்தில்-உயர்
தளகர்த்தரிலொருவன்-சாலேந்திரன்றகு
வீமசேனன்தன்னி டத்தில்

௩. வந்துநீயாருன்னைக்-கொல்லுமுன்னேசொல்லு
வாயெனச்செயவீமன் கேட்டு-முன்பு
மந்தாரமலர்க்காக-வந்துபோர்செய்தோரை
வாரிவாரித்தூக்கிப் போட்டு

௪. நெடுங்கதையால்மாய்த்தோ-னுன்தானிப்போதும்
நிகரில்லாத்தாமரைப் புட்பம்-வேண்டி
அடைவுடனேவந்தே-னுதலாலெல்லோரும்
அகந்தனைக்கொள்ளாமல் நுட்பம்

௫. ஆகுநல்லறிவினால்-யோசித்தம்மலரெனக்
களித்திடினுமதுயிர் தரிக்கும்-நீங்கள்
சாகவேண்டுமாகி-லமர்செய்யுமுங்களை
க்ஷணத்தில்நாய்க்கும்பேய்க்கும் நரிக்கும்

௬. இரையாக்கிறேனென்று-னவன்சேனாதிப
ரெல்லாருங்கேட்டுக் கூவி-அதி
விரைவினிலவன்றனைப்-பிடியுங்களென்றனன்
வீமனவர்கள்தங்க ளாவி

௭. பதைபதைத்திடமாய்த்தா-னப்பொழுதினிலதைப்
பார்த்தவிஞ்சையர்சரம் பொழிந்தார்-நெஞ்சங்
கொதிகொதித்துவீமன்-விடுங்கணையால்நிலை
குலைந்தவருயிர்களை யொழிந்தார்

௮. சாரணர்தேரின்மீ-தேறிமாருதியுடன்
தண்டாயுதயுத்தம் புரிந்
வீரன்தண்டாயுதத்-தடியாலன்னோர்தலை
விண்டுருண்டிடஆவி பிரிந்தார்

௯. மேலும்விஞ்சையர்க-ளியக்கர்போர்கொடுத்து
விண்ணுலகினிற்குடி கொண்டார்-இக்
கோலத்தையியக்கரும்-ராட்சதர்மற்றோருங்
கோபாக்கினிமூளக் கண்டார்

௰. கண்டவுடன்சது-ரங்கசேனையொடு
கடல்போல்வளைந்தொருக் காலே-நெடும்
அண்டமுமறைந்திட-மாருதிமீதினில்
ஆயுதம்விடுத்தார்மென் மேலே

௰௧. அவரும்விமனம்பால்-மாண்டோர்க்குத்துணை
யாகப்போனார்சில ரோடி-நாளும்
எவரும்புகழ்சேனா-பதிமணிமாலன்தன்
னிடத்திற்சொன்னாரெதிர் நாடி

## மணிமாலன்வதை.

விருத்தம் ௩௧.

மணிமாலன்கேட்டடங்காக்கோபங்கொண்டு
வானுலகும்பொடியாகஇரதந்தன்னை
க்ஷணநேரமதில்விடுமென்றிமையோர்சூழத்
தந்தியின்மேல்வந்தனனப்படையைக்கண்டு
திணிகொள்மாருதிசிரித்துநின்றானன்னோர்
திரள்படைவிட்டார்மாத்தாலிவன்வதைத்தான்
இணையேற்கொளுஅவனைமணிமாலன்கண்
டெரிகின்றான்அகோரயுத்தம்புரிகின்றானே.

௫௩. தரு-இராகம்-தோடி-ரூபகதாளம்.

பல்லவி.

செய்தனரே யுத்தம்-உயர்
சேனுபதிமணி மாலனும்வீமனுஞ்
செய்தனரே யுத்தம்

அநுபல்லவி.

எய்தியபதினுலு லோகமுங்கிலிபட்டு
ஏங்கியேதத்தளித்துத் தவித்திருப்பிடம்விட்டுக்
கைகளைமுறித்துக்கொள்ளும் படிவிக்ரமத்தைக்காட்டிக்
ண்களிற்றீப்பொறிசிந்தக் கனத்தகோபத்தைநாட்டிச்
செய்தனரே

சரணங்கள்.

௧. வீமன்மீதினில்மணி-மாலன்சிறியொளிர்
வெருகோடியாயுதம் எடுத்தான்-உயர்
விண்டலமண்டலமெங்-கிலும்நிறையஅதி
விசையதுமேவியே விடுத்தான்
தாமசஞ்செய்யாமல்-மாருதிபொற்கடக்கை
தன்னுலோரிடி கொடுத்தான்-அவன்
சதையும்எலும்புகளுஞ்-சிதறியிடியின்முன்
சர்ப்பத்தைப்போற்பயம் அடுத்தான்
மாமுடிமணிமாலன் பயத்திணைநண்ணி
மாருதியைக்கொல்வதரி தெனநெஞ்சிலெண்ணி
நேமத்தைவிட்டுச்சூதா லுயர்வானிற்சென்றுபுகை
நெருப்புநீள்மழைகாற்றாய்த் தோன்றினனிந்தவகை
செய்தனரே

௨. அந்தரமும்நவ-கண்டமுந்திசைகள்தொடு
அக்கினிச்சுவாலைமிக வீச-ஆரும்
அறியவொண்ணுமாயை-யதுகொண்டமண
னடங்கியொடுங்கிமுகங் கூச
சந்திரகுலபதி-ஜெயமதவீமனந்தத்
தருணத்தில்வருணாஸ்திரம் ரேவு-மொடு
தானேவினனத-னல்வீரமணிமாலன்
சமர்த்துடனேசெய்த மோச
தந்திரமெல்லாஞ்சூரியன் றனக்குமுன்பனிபோலே
கூதணத்தினிற்றுலைத்தபின் பிருவருமொருக்காலே
இந்திரசித்தும்லட்சுமண னுந்தம்முள்ளம்வேக
எதிர்த்துச்செய்திட்டசண்டை யதுதனக்கிணையாக
செய்தனரே

௩. மேலுமாகாசத்தி-லிவர்களெழும்பிச்சண்டை
விளைத்திடுமயேந்திர சாலம்-தன்னை
வெகுநாள்முகபாடஞ்-செய்தஎழில்மணிமாலன்
வீமன்மீதினிலொரு சூலம்
காலருத்திரனெனக்-கொதித்தேவினனதனைக்
கண்டமாருதிவெகு சீலம்
கமலத்தயன்தந்தபிர-மாஸ்திரந்தொட்டவன்மேற்
கடிதில்விட்டானுல காலம்
போலதுதிகழ்கின்ற சொர்க்கமத்தியபாதாளம்
புழுங்கிடமேலும்விருந் ததற்குப்பலவேதாளம்
கோலமுடன்சேரநொடி யினிற்றிசையானையெட்டுங்
குழையப்போய்மணிமாலன் றனைவதைத்திடமெட்டுஞ்
செய்தனரே

---

## தருமனுக்கு ரோமசமுனி யுரைத்தல்.

விருத்தம் ௩௨.

மணிமாலன்மாய்ந்துசிங்கநாதமிங்கு
மாருதிசெய்தான்தருமனங்கேதேடிக்
கணைபோலும்விழியாள்திரௌபதியைக்கேட்டான்
கமலமலர்க்கவனகன்றசேதிசொன்னுள்
துணைகாணுமானதுபோலுதிட்டான்வாடித்
துய்யவுரோமசமுனிவற்குரைத்தானன்னோன்
தணியாச்சஞ்சலங்கொள்தன்மன்தெளியுமார்க்கந்
தனைச்சொல்வான்நடக்கும்வகையினைச்சொல்வானே.

### டார்க்கஜனை வருவித்தல்.

விருத்தம் ௩௩.

மன்னுமக குபேரனுக்குத்தோழனுன
மணிமாலன்றனையும்விஞ்சையரையும்வீமன்
அங்கீதமாமடித்தானவனோர்துன்ப
மடையுமுன்கடோர்க்கஜனென்றோதும்வீரன்
தன்றேர்மேற்செல்லுமென்றானவனைத்தன்மன்
தானினைக்கவந்தான்மாருதியின்சேதி
சொன்னான்யாவரும்ரதத்தில்வரவன்பன்னேன்
தொடுக்கின்றான்வீமனிடம்விடுக்கின்றானே.

௰௪. தரு-இராகம்-எமுனு-ஆதிதாளம்.

பல்லவி.

சேதியதனைக்கேளும்-அங்கேநடந்த
சேதியதனைக்கேளும்.

அநுபல்லவி.

வேதனெதிர்த்தானுஞ்சண்டை கொடுக்கமனத்திடத்தில்
மீறும்உக்ரவீமனமர் புரிந்திருந்தயிடத்தில்
சேதியதனைக்

சரணங்கள்.

க. ரதத்தைவிட்டிறங்கு-மகானுபாவனுந்தன்ம
ராஜனைவீமன் கண்டு-அதி
விரைவினிற்றவுத்திய-பானுகவேயள
வில்லாஅன்பு கொண்டு
மதித்தேயன்னேனுபய சாணாரவிந்தம்நாடி
வணங்கிபிணங்கியெதிர் நின்றானனந்தங்கூடி
சேதியதனைக்

உ. தன்மன்மாருதி-தனைப்பார்த்துநீ
தம்பியல்லை சதிகாரன்-சதிகாரன்
என்னவேவெகு-கோபந்தனைக்கொண்டே
யென்னுத்தாரமில்லாமலே குபேரன்
துன்னியநன்னகருக்கோர் புட்பமொருபொருள்போலே
திரௌபதிசொற்கேட்டுவந்தா யெனவசினன்மென்மேலே
சேதியதனைக்

௩. ஜெகம்புகழ்மதவீமா-இன்னமுங்கேளள
கேசன்தளத்தைமுன் கொன்று-விட்டுப்
பகைவைத்திருக்கும்பாம்புக்-கெதிர்வந்தாற்போலேயிந்தப்
பதிக்குள்நீதலைப் பட்டுத்

தருமணிமாலனையும் வதை ... ன்றேயிடித்தான்
சமர்க்கிடஞ்செய்தாயென்றுந் தரு ... றுந்துடித்தான்
சேதியதனைக்

---

## உருத்திரசேனன் அளகேசனுக்கு, ஐவர்பெருமையுரைத்தல்.

விருத்தம் ௩௪.

உதிட்டிரனிவ்வாறுரைக்கும்போதுவீமன்
யுத்தமதில்நேர்ந்தவொருவிஞ்சையன்போய்
மதித்திடுகுபேரனுடன்றீரனை
மணிமாலன்முதலோர்மாய்ந்ததையுரைத்தான்
கொதித்தளகேசனுஞ்சமருக்கெழுந்தானன்னோன்
குமாரனுருத்திரசேனன்தந்தைதன்னை
யிதத்துடனேபோற்றிஐவர்பெருமைதன்னை
யெடுக்கின்றான்தணிவுசொல்லத்தொடுக்கின்றானே.

௰௫. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயாகோபங் கொள்ளாதே-யிந்த
அடியன்வார்த்தையைத்தள்ளாதே.

அநுபல்லவி.

ஐயாகேள்கோபம்பாபம் என்றறிவதேசூட்சி
ஐவர்செய்தியைக்கேட்டா லாகுமுனக்கத்தாட்சி
ஐயா

சரணங்கள்.

௧. காருண்ணியஜெயவீமன் பலமும்-நிவாத
கவசர்காலகேயர்தங் குலமும்
வேரொடுமாய்ந்திந்திரன்சஞ் சலமும்-போக
விஜயன்விண்ணாட்டிற்சேர்ந்த நலமும்
ஆரெடுத்துரைத்திட வசப்படும்புவிமீது
அவருக்கவரேசரி யெனச்சொல்லலாமிப்போது
ஐயா

௨. ஜகமதித்திடு வீரர்-மகிழ்
தம்பியரெனவாய்த்த தீரர்
நகுலன்சாதேவனென்றுஞ் சூரர்-பாண்டு
நற்றவத்தால்வந்தகு மாரர்
தருமிவர்களெல்லார்க்கு மூத்தோன்யாவர்க்குமாவி
தருமராஜனென்பார்க ளவனேகுணசஞ்சீவி
ஐயா

௩. பரன்கட்டளையால்மென் மேலே-பூமி
பாரந்தீர்க்கமனிதர் போலே
அருமையாவந்தாரொருக் காலே-அதை
ஆலோசிக்கவேணுமுன் னாலே
வரம்பெற்றராவணுதி களைமாய்த்தோன்தேவன்தானே
வாமனமானமால்விஸ்வ ரூபமற்றுப்போனானே
ஐயா

௪. மணிமாலனோர்முனிவன் சாபம்-நேர்ந்து
மாண்டதறிந்துமிந்தக் கோபம்
தணியாததேனோஅதி லாபம்-எள்ளத்
தனையுண்டோகுந்திக்கோர்நிட் சேபம்
இணையில்லாவீமன்வேண்டும் பொருள்தந்தனுப்பினால்நன்மை
யில்லாவிடில்நம்மூர்க்கும் உயிர்க்கும்விளையுந்துன்மை
ஐயா

---

## குபேரன் தருமனுக்கு விருந்துசெயல்.

விருத்தம் ௬௫.

உரிமைகொள்மைந்தனிவையுரைத்திட்டும்
உலகெலாம்நிறைந்திடுதளமும்
ஒப்பிலாவிண்ணிற்றேவர்கூட்டமுஞ்சீ
ருயர்விமானங்களும்வாத்யத்
திரளொலியுஞ்சூழ்ந்திடக்குபேரன்போர்
செய்திடவந்ததாலெதிர்போய்
சிறியர்செய்பிழையைப்பெரியவர்பொறுக்கச்
செகமதிற்கடனெனத்தருமன்
விரைவொடுபணிந்தானவனுதிட்டிரனை
மெச்சிநல்லன்பினாற்றழுவி
மிகவுபசரித்தன்னோனுடனங்கு
மேவுதம்பியரையுங்கண்டு
பரிவுடன்தனதுபதிக்கழைத்துப்போய்ப்
பலவதிசயங்களையுங்கற்
பகவனமுதலாயாவையுங்காட்டிப்
பகாரும்விருந்துசெய்தனனே.

---

## தருமனுக்குக் குபேரன் வெகுமதிசெயல்.

மட்டு விருத்தம் ௬௬.

தருமமுதுண்டபின்-முகமதிமண்டல
மிகவொளிகொண்டிட-வெகுமதிதந்தனனே.

யசு. தரு-இராகம்-சுருட்டி-ஆ

பல்லவி.

வெகுமதிசெய்தானே அன்பாய்-வெகு-வீர-தீர- ருபேரன்
வெகுமதிசெய்தானே அன்பாய்.

அநுபல்லவி.

தகுநல்லமிர்தமூட்டித் தன்க்ருபைதனைகாட்டிச்
சந்திர-சூரிய - ருளபரி-யந்தம்
இந்திர-வானவர்-மகிழ-வசந்தம்
வெகுமதி

சரணங்கள்.

க. உசிதமிருகங் கணமும்-ஏழுசெண்
டுலகஞ்சொன்மாலை மணமும்
புஜவலயங்கள் படையும்-நவரத்திநம்
பொருந்தியமுத்துக் குடையும்
பூமரும்புகழ்கின்ற மாகதமாசாமும்
வீமனுமகிழ்கின்ற பத்மராகமோதிரமும்
வெகுமதி

உ. சீதளச்சந்திர னிடையும்-வஜ்ரகரம்
திகழ்கின்றபட் டுடையும்
ஓதும்சந்திர ஆரமும்-அபரஞ்சியும்
உயர்ந்தசொர்ன பாரமும்
ஒளிமிகுரத்திந வச்சிரமணிகளும்
களிமிகுஒளிர்நீல மொடுபலபணிகளும்
வெகுமதி

ஙட. சந்திரசூரியமண் டலமும்-நாளும்
தகதகெனும்குண் டலமும்
இந்திரன்மதிக்குங் குடையும்-திரிபுவன
மேத்துங்குபேரன் படையும்
எண்டிசைமெச்சிய எழின்மணிமாலைகளும்
மண்டலமதித்திடும் வண்சரிகைச்சேலைகளும்
வெகுமதி

---

விஜயன் சகோதரரைக்கண்டு தான்போய்வந்த சங்கதிகளை
யவர்கேழ்க்கச்சொல்லுதல்.

விருத்தம் ஙசு.

அளகேசன்மேலுநற்பூஷணமுஞ்சீத
அரவிந்தமலர்களுந்தந்தானெல்லோருங்

களிகூரக்கடோர்க்கஜன்றன்தேரிலேறிக்
கடிதில்நந்திசேனன்வனஞ்சேர்ந்திருந்தார்
ஒளிர்பூஷணங்கள்முதல்வீமன்மைந்த
னுறவுதிட்டான்றந்தனுப்பியுங்கிருந்தான்
உளமேவுசோதரரைப்பார்த்தன்காண
உருகின்றான்ரதத்தின்மிசைவருகின்றானே.

ம்எ. தரு-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

விஜயன்வந்துசேர்ந்தபின் - னடந்தசேதிகளெல்லாம்
விவரமுடனே சொல்லுவேன்

அநுபல்லவி.

திசைபுகழ்விண்ணோர்சூழ ஐராவதத்தில்மீத
தேவேந்த்ரனொடுமூன்று லோகமெச்சும்பிரக்யாத
விஜயன்

சரணங்கள்.

க. தன்மராஜனைவீமன்-தனைவேதியரைரோம
சனைக்கனிவாகவுப சரித்து-நற்
றனஞ்சயன்வணங்கினு-னவன்றனைநகுலனும்
சாதேவனும்நல்லன்பு தரித்து
நன்னெறியொடுபணிந்தார்-மறையோர்பார்த்தனை
நயந்துநீஒன்னுருயிர் பிரித்து-நெடு
நானிலந்தனையாள்வா-யெனஆசீர்வாதங்களை
நவின்றார்அவர்கள்மனஸ்க் கரித்து
விஜயன்

உ. அந்தாத்திலானைமீ-திருந்தஇந்த்ரனுமப்போ
தைவர்களுக்கெதிரில் நேர்ந்து-தன்மன்
அருள்முகத்தினைநோக்கிக்-கொல்லவருவோரையும்
ஆதரிக்கும்பொறுமை சார்ந்து
சிந்தைமகிழ்புண்யனே-உமைக்காட்டிற்போகவிட்ட
தீயர்மாண்டுநரகிற் சேர்ந்து-நைவர்
ஜெகம்நீகைக்கொள்வாயென-வாழ்த்திரோமசனும்பின்
செலச்சென்றான்மகிழ்வது கூர்ந்து
விஜயன்

ங. அவர்போனபின்மறையோர்-சபையிற்கிரீடியைத்தன்மன்
அப்பாசுபதாஸ்த்திரங் களித்துப்-பெற்ற
அதிசயத்தைச்சொல்லென்ன-பன்றிவந்ததுஞ்சிவன்
அருஞ்சந்த்ரனைச்சடையில் ஒளித்து

நவில்வேடரூபமாகிப்-போர்செய்ததுமவ்வ
நங்கையுமையுடன்வந்துப்-போன
நற்கிருபையுந்தான்விண்ணி-லுற்றதும்சொல,
நடித்தானனந்தபாவப்பந் துளித்து
விஜயன்

---

## நருஷனால் வீமன்கட்டுண்டு, அவனோடு தர்க்கித்தல்.

விருத்தம் ருஎ.

நெடுமகிழ்ச்சிகொண்டதன்மன்விஜயன்றன்னை
நிவாதகவசரைக்காலகேயர்தம்மைப்
படர்சமரில்நீமடித்தவகைசொல்லென்றான்
பாசுபதாஸ்த்திரவலியால்மாய்ந்தாரென்றான்
அடலுதிட்டிரன்தம்பியர்கேட்டல்லல்நீங்கி
அந்தநந்திசேனன்வனம்வாழ்நாள்பொய்கை
இடமுறப்போம்வீமனரவதனாற்கட்டுண்
டிளைக்கின்றான்சிலவசனம்விளைக்கின்றானே.

யஅ. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

வீமனுநருஷனுஞ் சிலசிலவார்த்தைகள்-விவரமாப்பேசினரே

அநுபல்லவி.

பூமியதனிற்புகழ் மலைபோல்ஸ்தூலகாய
புனிதநருஷன்சுற்றிக் கொண்டபோதினிற்றாய
மாமதிராருவினால் மழுங்கியேஒளிதேய
வாய்த்ததெனஅழகும் அறிவுங்குறைந்தும்நேய
வீமனு

சரணங்கள்.

க. பதினாயிரம்யானை-பலமுள்ளமாருதியோர்
பாம்பினாற்கட்டுண்டுள்ளம் ஏங்கித்-தன்
பருத்தவுடலசைக்கக்-கூடாததால்விதியின்
பயனெனயோசனையிற் றேங்கி
இதமாஅரவைநோக்கி-நீபியக்கர்மன்னனோ
இராட்சதனோபுவியைத் தாங்கி-வாழும்
எழிற்சேஷனோஎன்றனை-விடுவாயுபுத்திரன்யான்
இணையில்லாச்சந்த்ரகுலம் ஓங்கிக்
கதிக்கவந்ததருமன் தம்பிநான்வீமன்வல்ல
கரும்பதினாயிரந்தந்தி யின்பலம்பெற்றுஞ்சொல்ல
அதிசயமெனவுனக் கிளைத்தேன்நீமந்த்ரமெல்ல
அறிந்தாயோவென்றான்சர்ப்பந் சொன்னதைச்சொல்வேன்நல்ல
வீமனு

உ. அல்லல்கொண்டமாருதி-சொன்னமொழிகளெல்லாம்
அந்தநகுஷன்கேட்ட போது-தேகம்
அடங்கலுங்குலுங்கிட-ஙகைத்துமலையும்பொடி
யாகத்தந்தங்களினால் மோதும்
வல்லமதயானைகள்-சாபஞ்சர்த்தூலம்பன்றி
மான்சிங்கம்ஆளிநில மீது-எதிர்
வந்தாலொருநொடியி-லெளிதாயெண்ணிவிழுங்க
மாட்டுவேன்பேரும்பிச காது
வெல்லவேயென்முன்வந்தால் தன்பலமென்னைச்சேர
வீறும்வரம்பெற்றிட்டே னுதலாலுன்றன்வீரம்
எல்லாம்பறிகொடுத்துன் பலத்தைநீயென்முன்தீர
இழந்துவிட்டாயெனவே உரைத்ததுவெகுரூர
வீமனு

௩. நகுசர்ப்பம்பின்னும்வீம-னுடன்குலத்துத்தந்தை
சந்திரனென்பகை யாலும்-கிரே
தாயுகத்திலுன்பிதா-வாயுநற்சேஷனோடு
சமர்விளைத்திட்டஏது வாலும்
மிகுசம்பத்துள்ளதுரி-யோதனன்கொடியாக
விளங்களங்களைச்சேர்த்த தாலும்-வில்
விஜயனுன்றம்பிநீள்காண்-டவமழித்தநாளினில்
வெந்தென்குலத்தோர்மாண்ட தாலும்
பகையிலும்பகையெனக் காகும்நீசந்திற்சிந்து
பாடிப்பிழைக்களண்ணங் கொள்வதேதென்புட்பம்வெந்து
ஜகத்தில்மலர்வதுண்டோ சிக்கினையென்பால்வந்து
க்ஷணத்திலுனைப்பொசிப்பே னென்றதுவாய்திறந்து
வீமனு

---

## நகுஷப்பிரசினை.

விருத்தம் ௩அ.

நகுஷன்வீமனைத்தான்விழுங்குவேனென்ற-நாழிகைதனிலவன்தளர்ந்து
நற்கதியடையுநாளிதுவென்ன-நாடியைம்புலன்களையொடுக்கி
நயந்திடுசமாதியதனையுற்றிருந்தா-னன்மைசேர்வீமனைத்தரும
ராஜனப்புறத்திலுற்றிடுநெடுங்கா-னகத்திலெவ்விடத்திலுந்தேடிப்
பகாரும்வீமனரவினால்மெலியும்-பாடதைக்கண்டுளம்பதைத்துப்
பாம்பினைப்பார்த்தென்தம்பியைவிடுநின்-பசிக்குமிருகங்களைவிருந்து
பண்ணுவேனென்றுன்பாந்தள்கேட்டுள்ளம்-பரிந்துநீயாரெனநான்சீர்
படமதிகுலத்துப்பாண்டுவின்மைந்தன்-பண்புளவுதிட்டிரனென்பேர்

சுகமுறும்வீமனிவன்பினுமூவர்-சுயோதனன்கொ... காலந்
தொலைந்திட இங்குவந்தனமென்னத்-துயரொடுச... கண்ணீர்
சொரிந்துநானுனதுகுலத்தினானாயு-சுபுத்திரனென்... நகுஷன்
துதிக்குநூறஸ்வமேதயாகத்தைத்-துலக்கமாமுடித்துவிண்ணாட்டுக்
ககமகிழ்வுடனேஅரசனுமானே-னகத்தியனிட்டசாபத்தால்
அரவமாயுருவமாறினேன்மேலு-மம்முனியெனக்கெதிர்நேரும்
அருமிருகத்தைவிழுங்கவும்என்மு-னண்டினோர்பலமும்யானுறவும்
அருள்செய்தான்சாபந்தீரும்நாளென்றென்-றவனையான்பணிந்துகேட்ட
[னனே.

---

கொச்சகம் ௨.

அப்பொழுதம்மாமுனியென் னுட்சேபந்தீரவிடை
செப்புவராற்றீருமென்றான் சீமானேநீயுரைத்தா
லிப்பொழுதில்மாருதியை யான்விடுவேனென்றதற்பின்
ஒப்பில்நகுஷனுமுதிட்ட னும்முறவாய்ப்பேசினரே.

௰௨. திபதை-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

**கண்ணிகள்.**

௧. உலகிலெக்குணத்தினைப்-பெற்றவன்மறையவன்
உவந்துநீசொல்வாய்தன்ம ராஜனே-தவம்
நலமிகுசாந்தமொழுக்-கம்பொறுமையையுற்றோன்
நல்வேதியன்நகுஷ ராஜனே

௨. ஆருமப்பூசுரன்கைக்-கொண்டிடும்பொருளினை
அன்பாற்புகல்வாய்தன்ம ராஜனே-லோபம்
மோகமொழிப்பவன்-பொருள்முன்சொல்லொழுக்கத்தின்
முறைவிடிற்சூத்திரன்நகுஷ ராஜனே

௩. குணமொழுக்கம்பெற்ற-சூத்ரனைவேதியனெனக்
கூறலாகுமோதன்ம ராஜனே-சூத்திரன்
இணக்கங்கருணைதன்மஞ்-சத்தியமெய்திடில்சற்
சூத்ரனெனலாம்நகுஷ ராஜனே

௪. மறையவர்குலத்தினில்-வேதத்தினொழுக்கத்தை
வழுவினோன்யாவன்தன்ம ராஜனே-நன்
னெறியுறும்பூசுரன்வண்-சுருதிசொல்லுமுறைமை
நீங்கிற்சூத்திரன்நகுஷ ராஜனே

௫. ஒழுக்கம்பொறுமையுள்ள-சூத்திரனையந்தணனென்
றோதலாகுமோதன்ம ராஜனே-தீதை
அழிக்கும்பொறுமையொழுக்-கஞ்சூத்திரனுற்றாலும்
அந்தணனென்பாரோநகுஷ ராஜனே

சு. அந்தண பனுமருள்முறைதப்பில்
அ ன்சொல்வார்தன்ம ராஜனே-உயர்
சுந்தரமறை ன்தன்-மரபருள்தவறிற்சந்
சூத்திரனென்பார்நருஷ ராஜனே

எ. ஞானவேதியனன்றித்-தவந்தானமுள்ளசூத்திரன்
நற்கதிசேர்வானோதன்ம ராஜனே-சதி
ரானசூத்திரர்வானோர்-நல்வினைசெய்வதனால்
அருங்கதிசேர்வார்நருஷ ராஜனே

---

## மார்க்கண்டேயர் தன்மனுக்குத் தருமசூக்ஷ முரைத்தல்.

விருத்தம் ருகூ.

மானவுதிட்டிரன்மொழியைநருஷன்கேட்டு
மனமகிழ்ந்துமாருதியைவிட்டுத்தேவ
னுடன்தன்மனைப்பார்த்துன்னுலென்ற
னருஞ்சாபந்தீர்ந்ததிந்தவுலகந்தன்னை
நீநெடுநாளாள்வாயென்றன்பால்வாழ்த்தி
நிகரில்விண்சேர்ந்தானுதிட்ரன்விமனோடு
ஞானநந்திசேனன்வனம்வந்தின்பத்தை
நாடினன்நடந்ததுரையாடினனே.

ம்கூ. திபதை-இராகம்-பியாகடை-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. தருமனடந்ததெல்லாம்-அருள்விஜயன்முதலோர்
தமக்குரைத்துக்காலம் போன-பின்பு
சரஸ்வதிதீரத்தில்பா-வருந்நீராடிநெடுநாள்
தன்னைக்கழித்துமேலு மோன

உ. முனிவர்மற்றோருடனே-கனிவாசச்சம்பாஷித்து
முன்னிருந்தகாமிக வனத்தைச்-சேர்ந்து
தனிமைபாவிமன்செய்த-இனியபன்னசாலையிற்
சார்ந்துவாழ்கின்றநாளிற் சனத்தைப்

ங. பெற்றிடுங்கிருஷ்ணமூர்த்தி-சத்தியபாவையுடன்சீர்
பெறுரதத்தின்மீதினி லங்கு-வந்தான்
உத்தமரைவர்களும்-பத்திபாற்பணிந்துதம்
முள்ளத்தினிடத்தினில் தங்கு

ச. சகலகுறையுஞ்சொன்னார்-முகிகில்வண்ணன்சுயோதனன்றன்
சங்கதியவர்க்குச்சொல்லும் போது-நாளும்
மகிமைகொள்சாம்பமூர்த்தி-யுகபதமறவாத
மார்க்கண்டேயர்சடையின் மீது

௫. சந்த்ரன்குலங்கத்தண்ட-முந்திகழ்கமண்டலமுந்
தரித்துப்பலமுனிவர் கூட்டம்-சூழ
வந்தாரவரைக்கிருஷ்ண-னுந்தூயபாண்டவரும்
வணங்கினார்முனிகிருபை நாட்டம்

௬. கொண்டுவாழ்த்தியபின்தன்-னண்டையிலிருக்குந்தன்மன்
குளிர்முகம்நோக்கிநீர்நாட்டை விட்டு-என்றுங்
கண்டகமிருகங்களே-திரண்டுவாழுங்காட்டில்நீர்
காலம்போக்குதல்கேள்விப் பட்டு

௭. உங்களைக்காணவந்தேனென்-றுங்கிருஷ்ணனருள்நாளு
முமக்கிருக்கின்றபடி யாலும்-புகழ்
தங்குஞ்சிவனைமாட்டுந்-துங்கவிஜயனுன்றன்
தம்பியாகவாய்த்திட்ட தாலும்

௮. உன்றனுக்குத்தாழ்வில்லை-யென்றுகொள்ளும்மைத்துய
ருறச்செய்தோர்மாள்வார்புவி தன்னைத்-தடை
யின்றிநீயாள்வாயென்ன-வென்றிசேர்தன்மன்கேட்டே
எங்களைரட்சித்திடவோ ரன்னை

௯. போலுநெடுமாயனைக்-காணுமிருப்பதுண்மை
பொங்கும்பிரளயகாலம் அதிலும்-அழியாச்
சீலனேவுன்கடாக்ஷம்-ஞாலமதனிற்பெற்றேன்
சிறியேன்செய்ததே தவம் இதிலும்

௰. சிறந்ததொன்றில்லையென்றான்-துறந்ததவமியருஞ்
சூழும்பிராமணர்களுங் கேட்டு-நித்தியம்
அறிந்தமார்க்கண்டேயரை-நிறைந்தஆசையால்நோக்கி
அரியவுண்மையைநிலை நாட்டும்

௰௧. இப்புனிததருமன்-ஒப்பில்லாத்தன்மசூட்சம்
உம்மாலேதேறவெண்ணஞ் சார்ந்தான்-இன்
றப்படிநாங்களுங்கேட்டுப்-பூரிக்கச்சொல்லுமென்றார்
நாரதனும்வந்து சேர்ந்தான்

௰௨. மாசிலாநாரதனுக்-காசனந்தந்துதன்மன்
வணங்கினான்முனியன்பு தரித்து-விபூதி
பூசுமார்க்கண்டர்தம்மை-நேசமாய்நோக்கித்தன்ம
பூபதிக்குமேலோர்கள் விரித்து

௰௩. நீதியநேகஞ்சொன்ன-போதிலுமிணையில்லா
நித்தியத்தைப்பெற்றோர்நீர் என்றும்-வெகு
காதல்சேர்நன்மார்க்கம்நீர்-போதிக்கவேண்டுமென்று
கருதுந்தன்மன்முன்னாளில் துன்று

௰௪. தவமதனுல்மூவாசை-யவமெனவேயொழித்த
சடைமுனிவோருங்கிருஷ்ண மூர்த்தி-செய்த
நவிலருந்தவத்தாலு-மிவணெழுந்தருளிய
நற்புனிதரேவுயர் கீர்த்தி

௰௫. பூண்டதருமன்தேற-வேண்டுநன்னீதிகளைப்
புகலுவீரென்றுவிடை பெற்றுச்-சென்றான்
பாண்டுமைந்தன்தன்மனை-நீண்டசடைமார்க்கண்டர்
பரிந்துபார்த்துநேயன்பு வைத்து

௰௬. நாடும்பொருளையென்னுற்-கூடுமாத்திரமிங்கு
நவில்வேனென்றார்தருமன் இணங்கித்-தம்பியர்
நீடுசடையந்தண-ரீடிலாக்கிருஷ்ணமூர்த்தி
நெருங்கிக்கேட்டிடமிக வணங்கி

௰௭. வீறுந்தன்மசூட்சமுந்-தேறுமுனிவோர்சீரும்
மேலுநாங்கள்கொடிய துன்பம்-பூணும்
வாறும்எமக்கெப்போது-மாறுசெய்யும்பகைவர்
மாநிலந்தனையாளும் இன்பம்

௰௮. கொள்ளும்வகையினையும்-உள்ளத்திலுணர்ந்திடக்
கூறுமென்றார்மார்க்கண்டர் பரிந்து-தன்மா
விள்ளும்வினையையெவர்-தள்ளலாகுமுலகில்
மிகுபொருள்தேடித்தாந் தெரிந்து

௰௯. தானம்விரதம்நலம்-ஒழுக்கஞ்சத்தியவா
சகங்களிவைபொருளாக் கொண்டு-வாழ்வோர்
வானவருமதிக்க-வேகிதமிம்மைமறு
மையிலும்பேரின்பத்தினைக் கண்டு

௨௰. பூரிப்பார்கள்பொய்மோ-சஞ்சோரமீனவிர்த்தி
பூண்டோர்க்கிம்மைமறுமை யாலே-என்றுஞ்
சேர்வோர்சுகமில்லைப்-பாரினிற்பாவஞ்செய்வோர்
செல்வஞ்செல்வமாமோமென் மேலே

௨௧. பூமியைநீராள்வீர்-தீமைசெய்யுமன்னோர்கள்
பொல்லாநரகந்தனில் உறுவார்-நிலை
யாமருந்தன்மசூட்சம்-நேமமாச்சொன்னேனுன்றன்
அரும்புகழார்புவியில் பெறுவார்

---

## மார்க்கண்டர் மறையோர் மகிமைகூறல்.

விருத்தம் ௬௰.

இனித்ததன்மசூட்சமதைச்சொன்னேன்தன்மா
இனிமறையோர்தம்மகிமைவிளம்பக்கேளு

வனத்திலெழிற்றுந்துமன்னன்வேட்டைக்கேகி
மான்றூல்போர்த்திருந்தரிஷியினைமானென்று
நினைத்துயிரைமாய்த்தபின்புரிஷியென்றோர்ந்து
நிமிஷமதிற்சென்றவன்றந்தைக்குரைத்தான்
மனத்துயரமவனுமுற்றுனதனைத்தாக்கன்
வாட்டினன்றன்புகழைநாட்டினனே.

---

ய௬. தரு-இராகம்-தன்னியாசி-சாப்புதாளம்.

பல்லவி.

தாக்கரிஷியுடைய பெருமை-தருமா
ஜகத்தினிலுரைத்திடல்அருமை.

அநுபல்லவி.

ஊக்கமாகமூன்று காலங்களையுநல்ல
உண்மைஞானந்தன்னு லுணர்ந்துசொல்லவல்ல
தாக்க

சரணங்கள்.

க. இறந்தரிஷியைத்துந்தென் போனும்-அவன்
இனியபிதாஅயனென் போனும்
பறந்தோடிப்பார்த்துப் பதைத்துமிகஅழுதார்
பகர்தாக்கனுடுதங்கள் துயரஞ்சொல்லித்தொழுதார்
தாக்க

உ. அவர்சேதிதன்னைரிஷி கேட்டு-இரக்கம்
ஆகிக்கிருபையைநிலை நாட்டும்
நவிலுந்தன்மகன்றனை வனத்திலிறந்துபோன
நல்லிருடியையெழுப் பச்சொன்னனந்தஞான
தாக்க

ரூ. தந்தையுத்தாரப்பிர காரம்-ராஜர்
தம்முடனவனுமங் நேரம்
மந்த்ரவிதியால்மடிந் திட்டரிஷிபிழைக்கும்
வாறேகியேயெழுப்பி னன்மகிமைதழைக்கும்
தாக்க

---

மார்க்கண்டர் அரசர்பெருமை கூறலும்,
வைவச்சுதன் சரித்திரம் உரைத்தலும்.

விருத்தம் சுக.

உதிட்டிரனேமுனிவர்மகிமையினைச்சொன்னேன்
உலகில்மன்னர்பெருமையதையுஞ்சொல்வேன்பார்

மதித்திடுங்கைதனிய அரசன்றன்னை அத்திரி
மகாரிஷிமும்மூர்த்தியுநீதானென்றேதித்
துதித்தனன்கௌதமன்கேட்டுத்தர்க்கஞ்செய்து
தோற்றனனிப்பார்மீதிலினியநீதி
விதிக்கும்வைவச்சுதன்பெருமையெண்ணியின்பம்
வீறுவேனீதெரியக்கூறுவேனே.

உ௯. தரு-இராகம்-மத்தியமாவதி-சாப்புதாளம்.

பல்லவி.

வைவச்சுதன்சரித்திரம்பெரிது - தருமா - அதைச்சொல்வதார்க்கும் அரிது

அநுபல்லவி.

துய்யமேலவர்க்கெல்லா மினிமையாகியமித்ரன்
சுகிர்தகிரணசூரி யன்றனக்குயர்புத்ரன்
வைவச்சுதன்

சரணங்கள்.

க. அருந்தவமவன்செய்யும்-போதுவிஷ்ணுசிறுமீன்
ஆய்நேர்ந்துதனையனு கூலம்
பொருந்துமிடத்தில்விடு-வாயெனஅதைக்கேட்ட
பொழுதிலிணையில்லாத சீலம்
திருந்துமவ்வைவச்சுதன்-அதைத்தூவிற்றடாகத்
திற்சேர்த்தான்நீள்தூரவுங் கோலம்
தருந்தடாகமும்போதா-மற்படிவளர்ந்துமச்
சங்காட்டிவிட்டதிந்த்ர சாலம்
வைவச்சுதன்

உ. தூலமாகவளர்ந்த-மீனையன்னோன்கடலில்
துரிதமாக்கொண்டுபோயந் நேரம்
சாலவேவிடுத்திட்டான்-மீனவனைப்பார்த்திச்
சலத்தினில்நான்செய்வேன்சஞ் சார்ம்
சிலனேசலப்பிர-ளயம்வரப்போகுதோடஞ்
செய்ததிற்பண்டங்கள்விஸ்த் தாரம்
ஏலவேசேர்த்துஞ்சத்த-ரிஷிகளுடனேநீவந்
திருவென்றதுதண்கடல் ஓரம்
வைவச்சுதன்

ங. அப்படிக்கவன்சத்த-ரிஷிகள்தம்முடன்சென்ற
அச்சமுத்ரக்கரையில் சேர்ந்து
ஒப்பிலாதமீனதை-நினைத்திட்டானந்தமீனம்
உடனேஅன்னோனுக்கெதிர் நேர்ந்து

செப்பமாகத்தன்கொம்பில்-ஓடத்தின்கயிறது
சிக்கமாட்டிக்கொண்டுடன் பேர்ந்து
முப்புவிபுகழோட-மிதக்கச்சமுத்திரத்தில்
மூழ்கிவிட்டதுகளி கூர்ந்து
வைவச்சுதன்

௪. சகலலோகமுமழிந்-திடச்சலப்பிரளயந்
தான்வந்துவிட்டதுமென் மேலே
தகுபிரளயந்தீரு-மட்டுமவ்வோடத்தைத்
தற்காத்ததுமீனன்னே போலே
புகலநேகஆயிரங்-காலமாகியபின்பு
புவனமுண்டாச்சுதொருக் காலே
மகிமைகொளந்தமச்சம்-ஓடத்தினைநெடிய
மலைச்சாரலிற்சேர்த்ததின் பாலே
வைவச்சுதன்

௫. ஓடத்திலிருந்தபே-ரிறங்கினருடன்மீனுக்
குயர்கருணையின்வெள்ளம் ஓடி
நாடுமிம்மன்மந்த்ரத்-தினிலும்மைரட்சித்திட்டேன்
நான்தான்விஷ்ணுசத்தியத்தை நாடி
ஈடிலாஎழுவகைத்-தோற்றமுமுறச்செய்தே
யிவ்வைவச்சுதனன்பு கூடி
நீடுமுப்புவனத்துக்-கரசனாய்ஆள்வானென்று
நிமிஷத்திற்சென்றதுரை யாடி
வைவச்சுதன்

---

## மார்க்கண்டர் சலப்பிரளயத்தில் நீந்தி வருத்தமடைந்தமை கூறலும், பச்சை ஆலிலையின்மீது விஷ்ணுவாகிய குழந்தையைக்காணுதலும்.

விருத்தம் ௬௨.

தாணிபுகழுந்தருமாகேள்-தகுமுப்புவனங்களுமூழ்கப்
பெருகும்பிரளயந்தனிலே-பிரயாசையினையான்கொண்டே
இருகைசோரவேநீந்தி-யேகும்பொழுதிலிணையில்லாக்
கருணையுறுமோர்குழந்தைதனைக்-கண்டேன்வருத்தம்விண்டேனே.

௨௧. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

பச்சைஆலிலையின்மீ தினிலோர்குழந்தை
பள்ளிகொண்டிருக்கக்கண்டேன் தருமா

அநுபல்லவி.

முச்சகங்களுமழி வுற்றிடமென்மேலே
மூடிக்கொள்ளும்பிர ளயத்தினிலொருக்காலே
அச்சமுற்றயானு னந்தமதுகொள்ள
அறியொணாததிவ் வியசுந்தரமுள்ள
பச்சை

சரணங்கள்.

௧. சதகோடிசந்திர-ருதயமெனச்சொலத்
தருமுகமண்டலம் ஒளிவீச
அதிசீதளநறுங்-கமலங்கள்சிறந்தொளிர்
அருங்கரங்கண்டு முகங்கூசத்
துதிசேர்விழியருள் மழையினைப்பெய்யச்
சூழமாமுகிலென்ன மேனிஒளிசெய்ய
இதயம்நைகுவோர் துயரத்தினையொழிக்க
இணையிலாதமுப் புவனங்களுஞ்செழிக்கப்
பச்சை

௨. மாமந்தரகிரி-யாமெனவேயெழில்
வாய்ந்துதிரண்டிடும் இருதோளும்
க்ஷேமமுறும்படி-நேமமுடன்தொழு
திடுவோரையீடேற்று மலர்த்தாளும்
தாமதயானைத்துதிக் கையைநிகர்தொடையும்
தகுபிதாம்பரத்துக் கழகருளிடையும்
பூமியகலமென்ன மணிமார்பொளிதுன்னப்
புதியமாதளம்பூ ஒளிர்செங்கையுமின்னப்
பச்சை

௩. எண்டிசையோர்மகிழ்-கொண்டிடுபூங்கமு
கெனவளர்கழுத்தொளி யதுபூண
விண்டிடுமக்ஷய-தூணியைப்போலவே
மிகவுருண்டிடுமுழந் தாள்தோணத்
துண்டமுற்றிடுபவ ளத்திரள்கலங்கத்
தோற்றுகின்றநற்செங் கனிவாய்துலங்க
அண்டொணாதஎன் வருத்தமுற்றும்பறக்க
அழைத்தாட்சித்திடத்தன் திருவாயினைத்திறக்கப்
பச்சை

---

மார்க்கண்டர் அநேககாலம் விஷ்ணுவயிற்றிலிருந்ததும்,
யுகதருமமுங்கூறல்.

விருத்தம் ௬௫.

அந்தநல்லாலிலைமீதிலுறைகுழந்தை
யருளாலேயதன்வயிற்றில்நெடியகாலம்

விந்தைகொளண்டாண்டபிரம்மாண்டங்களெல்லா
மிகுவிருப்பத்தொடுகண்டுவெளியில்வந்தேன்
புந்திதனிலடங்காதவானந்தத்தைப்
பொருந்தினேன்யுகதருமத்தினையுமிங்கு
சந்த்ரகுலத்தன்மாநானுன்றனக்குச்
சாற்றுவேனின்றுயரைமாற்றுவேனே.

௨௨. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

தன்மராஜனேயுனக்-குகத்தினுடையதன்மந் - தனையன்பாற்சொல்லுவேனே

அநுபல்லவி.

உன்னருமந்தயுகங்களின்சேதி யைச்சொல்லக்கேள்
உயர்முதல்யுகத்தில் தன்மம்நாலுபங்கு
உறுமிரண்டாம்யுகத்தில் தன்மம்மூன்றுபங்கு
இயல்மூன்றும்யுகத்தில் தன்மம்இரண்டுபங்கு
இசைகலியுகத்தினில் தன்மம்ஒருபங்கு
தன்மராஜனே

சரணங்கள்.

க. அருங்கலியுகத்தி லெவர்க்குமாயுசுதேயும்
அதன்மர்க்குவாழ்வுண்டாமுத் தமர்க்குத்துன்பமும்நோயும்
வரவரமீறுமழை யில்லாமற்பயிர்தீயும்
மண்டலத்திற்சத்தியந் தலையெடுக்காமற்சாயும்
புரவலர்குடிகள்சொத் தினைமோசம்புரிவார்
பூசுரர்செபம்எக்கியஞ் செய்யும்நிலைபிரிவார்
ஸ்திரீகள்சோரம்போக ரிஷடம்போற்றிரிவார்
செல்வரைப்பார்த்துத்தரித் திரர்வயிறெரிவார்
தன்மராஜனே

௨. மந்திரமறையோரீனத் தொழில்களைச்செய்திடுவார்
மனத்திலொன்றும்வாக்கினி லொன்றும்பேசிக்கெடுவார்
விந்தைவேதாத்தியாளஞ் செய்யுமுறைவிடுவார்
மிகவுஞ்சூத்திராதை யுணரஅன்பைத்தொடுவார்
தந்தையர்புத்திரர் நிந்திக்கநைவார்
தகுபுருஷரைமாத ரஞ்சாமல்வைவார்
சுந்தரமன்னர்சே வகஞ்செய்தேஉய்வார்
துஷ்டவேடர்களுல கினிற்செங்கோல்செய்வார்
தன்மராஜனே

௩. அக்கலியுகமுடி வினிலுலகத்தில்வீறு
மரியபுருடர்களுக் காயுசுபதினாறு
பக்குவமற்றஏழு வயதிற்ஸ்திரீகளன்பூறு
பாலகரைப்பெறுவார் சந்தேகமில்லைத்தேறு

சிக்கும்பாவத்தைநீக்குங் குருவைநிந்திப்பார்
திருட்டுக்குயாவர்களுந் தடைதட்டிநிற்பார்
மிக்கஅந்தணர்சூத்ர ரால்வேதங்கற்பார்
மேலுமன்னோர்கள்தெரு வினிற்சாதம்விற்பார்
தருமராஜனே

---

## இந்திரதூய்மராஜன்கதையுரைத்தல்.

விருத்தம் ௪௪.

கோலமுயர்பொன்முடிசூடிக்கொள்ளுந்தன்மபூபதியே
ஞாலமதனில்நீவிருப்பம்நண்ணும்படிக்குநன்றாக
நாலுயுகதன்மம்புகன்றேனல்லிந்திரதூய்மன்கதையை
மேலுமுனக்கிங்கிப்போதுவிள்வேன்இன்பங்கொள்வேனே.

௨௫. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

தன்மபூபதியேயிந்த்ர-தூய்மராஜன்கதை-தனைநானுரைக்கக்கேளும்

அநுபல்லவி.

மன்னனிந்திரதூய்மன் உலகிற்செங்கோல்நல்ல
வளமாகச்செய்தநாளிற் பாவங்களின்வேர்கெல்லத்
தன்மங்கள்செய்தானிந்த்ரன் றன்னோடுமின்பம்புல்லச்
சமமானசிங்காசனந் தன்னில்மேவினன்வல்ல
தன்மபூ

சரணங்கள்.

௧. அவனிருந்தநாளினில்-இந்த்ரபட்டமுங்கழிந்
தாச்சுதனைத்தேவர்கள் தேர்ந்து
அப்பாவும்பேர்ஜெகத்தில்-முழுதும்மறைந்துபோச்சு
ததனாலிவ்விடம்விட்டுப் பேர்ந்து
புவியில்நீபோயிருக்க-வேணுமென்றார்களந்தப்
புண்யவானெனக்கெதிர் நேர்ந்து
பூலோகத்தினிலென்பே-ரறிவையாயெனக்கேட்டான்
புழுங்குந்துயரம்நெஞ்சிற் சார்ந்து
தன்மபூ

௨. அம்மன்னனென்றனக்கு-முதிர்ந்தவயதுடையோன்
ஆதலால்நானுண்மையில் நின்று
அறியேனென்றனனஸ்வ-ரூபமெடுத்தான்ராஜன்
அவன்மீதினில்நானேறிச் சென்று
எம்மிலுமூப்புடைய-கோட்டானிருந்துவாழும்
இமயமலையிடத்தில் அன்று
ஏகிக்கேட்டிட அது-வுந்தானறியேனென
எங்கட்குரைத்ததுசிர் துன்று
தன்மபூ

௩. கோட்டானுநானுமர-சன்மீதிலேறிக்கொண்டக்
கோட்டானிலுமூப்பினை மேவும்
கொக்கைப்போய்க்கேட்கஅது-வுந்தானறியேனெனக்
கூறிநெய்தலுங்கொட்டிப் பூவும்
கூட்டுறவினோர்போல-மருவும்மடுவுண்டதிற்
குடிகொண்டென்றுமின்பத்தைத் தாவும்
குணமுள்ளஆமையிருக்-கின்றததைப்போய்க்கேளுங்
கோளென்றதுசேதிகள் யாவும்
தன்மபூ

௪. அப்படியேநாங்கள்மூ-வரும்ராஜன்மீதேறிக்கொண்
டன்புடனேஓர்க்ஷணப் பொழுது
அட்டியில்லாமற்போனோம்-இந்த்ரதூய்மனேயந்த
ஆமைபார்த்துக்கண்ணீர்விட் டழுது
இப்புவியில்நீகோதா-னஞ்செய்தபோதுவிட்ட
எழிற்சலம்பெருகியோர் பழுது
மில்லாதஇம்மடுவுண்-டாச்சுனேயாரறிவார்
என்றுரைத்ததுமிகத் தொழுது
தன்மபூ

## இந்திரதூய்மனுக்கு ஆமையால் தேவவிமானம்வருதல்.

விருத்தம் ௬௫.

ஆமையிவைசொன்னவுடனிந்திரதூய்ம
அரசனுக்குத்தேவர்கள்விமானந்தன்னை
நேமமுடன்கொண்டுவந்தன்னோனக்கண்டு
நின்கீர்த்தியைப்புதிதாச்செய்தோமென்ன
மாமுடிமன்னன்கேட்டுக்கோட்டான்கொக்கை
மகிமைகொளென்றனையிருப்பிடத்திற்சேர்த்து
க்ஷேமவிமானத்தின்மிசையெழில்விண்ணாடு
சேர்ந்திட்டானினியஇன்பஞ்சார்ந்திட்டானே.

## மார்க்கண்டர் துந்துமாரன்கதை யுரைத்தல்.

விருத்தம் ௬௬.

தன்மாஇன்னமுரைப்பேனளவில்தன்மந்
தனைப்புரிந்தோர்பேர்பூமியினில்மறைந்தால்
மன்னுசொர்க்கந்தனையிழப்பாரெனநீதேறு
மதுகைபிடவாள்மகன்துந்தென்போன்தன்னைத்
துன்னுமிச்சுவாகுவமிசத்தில்வந்த
தூயநற்குவலயாச்சுவன்மாய்த்ததாலே
பின்னுமன்னோனரிய துந்துமாரனென்னப்
பேர்பெற்றான்இணையுரைக்காச்சீர்பெற்றானே.

௰௪. திபதை-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. துந்துமாரன்கதையைச்-சொன்னமார்க்கண்டேயரைச்
சுகுணதருமராஜன் பார்த்துத்-திவ்ய
சுந்தரபாஞ்சாலியைக்கல்-யாணஞ்செய்தநாள்முதல்
துலங்கும்நெடியவன்பைப் போர்த்து

உ. எனக்குமென்தம்பியர்க்கும்-இஷ்டம்வரும்படிக்கே
யிதமாகநடக்கின்றாள் என்றுங்-கற்பில்
இவட்குநிகராகிய-பேர்களில்லையென்றும்
எடுத்துச்சொல்லிநல்லருள் துன்றுங்

ங. தாய்தந்தைக்குதவியுற்-றவராய்நிதம்நாயகர்
தமதுகருத்தின்படி. யகத்தைக்-கொண்ட
தூயநெறியுமாதா-பிதாவுக்கவர்பெற்றிட்ட
சுபுத்திரரால்வருஞ்சவுக் கியத்தை

ச. ஈனகுலத்தோர்மைந்த-ராலேமோக்ஷத்துக்கேகும்
ஏதுவும்விவரமா எடுத்து-இந்த
மாநிலந்தனிலடி-யேன்கேட்கச்சொல்லுமென்றான்
மனத்துள்நிறையன்பினை யடுத்து

---

ஈனகுலத்திற்பிறந்தவரும், வேதமுறைப்படி நடந்தால் நற்கதிசேருவரென்றும், விசிட்டநகருக்குக்கௌசிகன்போய் வேதமுரைத்தகதையும் உரைத்தல்.

விருத்தம் ௬௭.

கேட்டிடுதன்மனுக்குமார்க்கண்டர்
கெண்டைபோல்விழிகொள்மங்கையர்க்குக்
கீர்த்திசேர்புருஷன்தெய்வமாமெனவுங்
கிளைத்தஅம்மங்கையர்வயிற்றில்
நாட்டுமொன்பதுமாதஞ்சுமந்தின்பம்
நயக்குமைந்தரைமிகுவருத்தம்
நண்ணியேபெறுவாரென்றுமைந்தருக்கு
நற்பிதாக்கள்நெடுந்தவமும்
மாட்சியாக்கற்பிப்பாரெனவும்நீள்
மாநிலந்தனிலவர்கட்கு
வருத்தமோர்சமமாமென்றும்நற்புத்ரர்
வாய்த்திடிலுதவியுண்டென்றும்

வாட்டமாமீனகுலத்தினோர்தாமு
மறைசொலுநெறியினினடக்கில்
வண்கதியடைவாரென்னவுமுரைத்து
மன்னுமிக்கதைபுகன்றனனே.

உச. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

இக்கதையினைப்புகன்றானே-தருமராச-னுக்குமார்க்கண்டேயன்றானே

அநுபல்லவி.

தக்கவிசிட்டமாந கர்க்குட்சோலையில்மான
மிக்ககௌசிகன்வேதம் முக்கியமாஒதப்போன
இக்கதை

சரணங்கள்.

க. சுந்தரமிருங்கௌசிக னென்னும்-அரியநற்பூ
சுரன்மறைகளோத மன்னும்
அந்தச்சோலையிலெழில் தந்தமரத்தின்மேலே
தொந்தமாகவோர்கொக்கி ருந்ததெனஅன்பாலே
இக்கதை

உ. கோதில்வேதம்வாசிக்கும் போது-விருட்சஞ்சேரக்
கொக்கினெச்சம்நேர்தப் பாது
தீதுறஅவன்தோளின் மீதில்விழுந்துபுல்லும்
ஏதுகண்டறியக்குறேத முற்றானெனச்சொல்லும்
இக்கதை

௩. குறுகுறுத்தவனுளம் எரிந்து-விருட்சத்தின்மேற்
கொக்கங்கிருந்தது தெரிந்து
உறும்விழியாற்பார்க்கவப் பறவைஎரிந்துதீயும்
மாணங்கண்டுகர்வம் பெறுமின்பத்தினிற்றேயும்
இக்கதை

---

விசிட்டநகரில் கௌசிகனடைந்த கர்வபங்கமும், பின்பு அவன்மணமும், இந்திரன்முதலியதேவர்கள் சிவனிடத்துச் சென்று அரக்கர் கொடுமைக்காகப் புத்திரரைக் கடாக்ஷிக்கும்படி வேண்டலும்.

விருத்தம் சஅ.

அதிககர்வத்தைத்தவத்தினாற்கொண்ட
அந்தணன்விசிட்டமாநகரில்
அருந்ததிநிகராம்பிராமணஸ்த்ரீதன்
னகத்தில்மாதவகாங்கேட்டுத்

ததியறியாமற்சினந்தசங்கதியுந்
தையலாள்நகைத்துவெண்கொக்குத்
தனையெரித்திட்டதைரியமிங்கு
சாயுமோவென்றுநன்மிதிலைப்
பதியுறைவேடன்றரும்வியாதன்றன்
பாலடைந்தன்னவனல்லீ
பதிவிரதையானதன்மங்தெளியென்னப்
பகர்ந்ததுங்கௌசிகன்சென்று
சதிரொடுகேட்டுச்சுபங்கொள்கல்யாணந்
தான்செய்துகொண்டதுந்தருமன்
றனக்குரைசெய்துதேவர்கள்கயிலை
சார்ந்ததுமுனிபுகன்றனனே.

உடு. தரு-இராகம்-சஹானு-ஆதிதாளம்.

பல்லவி.

தன்மனுக்குரைத்தானே-உயர்மார்க்கண்ட-னென்னும்புண்ணியவானே

அநுபல்லவி.

மன்னும்ராட்சதர்செய்யும் வருத்தத்தைவானவரும்
பன்னுமிந்த்ரனுமீசன்பாற் போய்ச்சொன்னுரென்றருந்
தருமனுக்

சரணங்கள்.

க. சொனுமவர்துயர் போகக்-கொடுமைசெய்யுந்
துஷ்டஅசுரர் சாக
மலர்கொள்செஞ்சடைஈசன் தனைமிகவும்வருந்தி
மகனைப்பெறுவாயென்ப தனைநல்லன்புபொருந்தி
தன்மனுக்

உ. பரவுவிண்ணோர் பரிந்து-கேட்டபோதப்
பரன்குறுநகை புரிந்து
அரியதன்வீரியத்தை அக்கினிதேவனுண்ணா
அருள்கொண்டளித்துவிட்டா னென்பதனையும்வண்ண
தன்மனுக்

௩. வீரியமக்கினிக் கிந்து-மகிழ்தற்பான்
விண்ணோர்மீதருள் வாய்ந்து
பூரணமாகநோக்கி யும்மைரட்சிக்கவல்ல
புத்ரன்செனிப்பானென விடையளித்தும்நல்ல
தன்மனுக்

## ஈசனுக்கருள்சுரந்து அக்கினியிடத்தில் வீரியத்தைவிட்டு புத்திரனைக்கடாக்ஷித்தலும், சப்தரிஷிகள் எக்கியஞ்செய்தலும்.

விருத்தம் சகூ.

ஈசன்விடைதரவானோர்பதிபோய்ச்சேர்ந்தா
 ரெனவும்பூரணஞானவீரியத்தைத்
தேசுறுமக்கினிதேவனுண்டுதாங்கத்
 திடமிழந்துதேகமெலிந்திட்டானென்றும்
பேசுமந்தநாளதனில்மகிமையென்றும்
 பெற்றசத்தரிஷிகள்எக்யஞ்செய்தாரென்றும்
பூசிததன்மனுக்குமுனிசொன்னவண்ணம்
 புகலுவேன்இருவினைவிட்டகலுவேனே.

உசூ. தரு-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

எக்கியஞ்செய்ததைச்சொல்லுவேன்-சத்தரிஷிகள்
எக்கியஞ்செய்ததைச்சொல்லுவேன்.

அநுபல்லவி.

அக்கினியைஓமகுண்டந் தனிலேயிருக்கச்செய்து
முக்கியமானநெய்யினை மொண்டவன்மீதிற்பெய்து
எக்கியஞ்

சரணங்கள்.

க. வேதமுறைத்தபிர காரம்-சடங்கின்
 விதிதப்பாமற்படியக் கேரம்
மாதிவ்யமந்திரம்விஸ்த் தாரம்-பிரா
 மணரோதவிண்ணினிற்சஞ் சாரம்
தீதறச்செய்யும்வானோர் திரண்டொருபுறந்தாவ
நீதமுனிவோர்திரள் நேர்ந்திருபுறமேவ
எக்கியஞ்

உ. உலகந்தனிலோருப மான-யாதும்
 உரைக்கவொண்ணாதநற்றி யான
நிலைதருகின்றஉயர் ஞான-வசிஷ்டர்
 நிதமகிழ்ந்திடுதேவி யான
நலமிகும்அருந்ததி முதலெழுரிஷிதுங்க
குலமலியரிவையர் பொரியிறைத்தவண்தங்க
எக்கியஞ்

௩. மங்களமெங்கெங்கு மோங்கச்-செய்திடுநல்
மகத்தாற்பாவங்கள் நீங்க
புங்கநாவலர்கூட்டந் தேங்க-ஓமப்
புகையைப்பலவுயிரைத் தாங்க
எங்கும்பரவுமேக மெனக்கண்டுமயிலாட
பங்குப்பிரகாரம்அவிர்ப் பாகத்துக்கும்பர்நாட
எக்கியஞ்

---

## சப்தரிஷி பெண்சாதிகள்பேரில் அக்கினிதேவனிச்சித்தலும், அக்கினி சுவாகையைச்சேர்தலும்.

விருத்தம் ௫௰.

எக்கியமுடித்தரிஷிகள்விண்ணோருக்-கினிதுறுமவிசினையளித்தே
யிருப்பிடமடைந்தாரும்பருமகன்ற-ரிருடிகள்தம்முடன்யாகத்
துக்குவந்திருந்தவெழுபத்தினிமார்-தூயநல்லழகினைக்கண்ட
சுடர்கொளக்கினிதேவன்மதன்சரத்தாற்-றுளைபடுமாசையினோடு
மிக்கவுன்னதஞ்சேர்சோலையிற்சேர்ந்தம்-மெல்லியர்விரகமேலிட்டு
வீறுமன்னோர்கள்போகம்வாய்ப்பதுபூ-மியிலரிதெனவுயிர்விடவே
அக்கணந்துணிந்தானவனுயிர்த்தேவி-அழகியசுவாகைமாதறிந்தங்
கவன்பிரமிக்கமாறுரூபங்கொண்-டடைந்தணைந்ததையுரைத்தனளே.

உஎ. தரு-இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

அக்கினிதனைச்சேர்ந்தாளே-சுவாகை-யணங்கெனுங்கற்பினாளே

அநுபல்லவி.

திக்கெட்டும்நிதந்துதி செயுமதன்கணையாலே
மிக்கவேதனையுற்று மெலியும்போதுமெண்பேலே
அக்கினி

சரணங்கள்.

௧. துதிகொள்ளாங்கிரசர்பத்-தினியாமென்னவே
துலங்குவோருருவந் தோணப்
புதுசோபனகல்யாணப்-பெண்ணைப்போல்முகத்தினிற்
புகலொணுநாணங் காண
மதாதியெனஎழில் வாய்ந்தவனின்பமோங்க
அதிவிரைவினிலீச னருள்விரியத்தைத்தாங்க
அக்கினி

௨. சுகமுறஅணைந்திட்ட-அந்தமடமாதிந்த
தொல்புவியினிலென்றும் ஓதும

மகத்துவஅகஸ்தியர்-புலஸ்தியர்கௌதமர்
வான்மீகர்காசிபரெப் போதும்
அகமகிழ்தேவியருனை யணைவார்களெனவிண்டு
தருமவருருவத்தைத் தான்கபடாகக்கொண்டு
அக்கினி

௬. அவள்தந்த்ரமாகச்சொன்ன-படிஆறுரிஷிதேவி
யரைப்போற்சொல்லமு தூட்டி
நவிலவன்றலைகொண்ட-காமாக்கினியைஅபி
நயத்தினால்மிக மூட்டி
உவமையில்தன்கொர்ப்பத்தி லுறும்விரியத்தைமிக்க
எவரும்புகழும்பொய்கை யினிலாறுதாங்கக்க
அக்கினி

---

## சுவாகையம்மன் ஈசன்வீரியத்தைக்கக்கியபின் அக்கினியிடம் வந்து அருந்ததி உன்னைச்சேர்தலரிதென்றல்.

விருத்தம் ௫௧.

அக்கினியைச்சேர்ந்தநற்சுவாகையீச
னரும்வீரியந்தனைத்தான்தாங்குதற்குத்
தக்கபலமற்றுறுதாமோர்பொய்கை
தனில்வாயாற்கக்கியவ்வாங்கிரசன்றன்
மிக்கபத்தினிபோல்நாயகன்முன்வந்து
மெய்ஞ்ஞானவான்வசிட்டன்தேவியுன்றன்
பக்கமுற்றுச்சேர்தலரிதனைதநீயெண்ணிப்
பாரென்றாள்உன்னிடம்போய்ச்சேரென்றாளே.

---

## ஈசன்வீரியம் உருக்கொண்டு,முருகர் அவதரித்தல்.

விருத்தம் ௫௨.

அந்தவண்ணமவனிசையுமுன்சுவாகை
யரியதன்ரூபத்தொடுதன்மனைபோய்ச்சேர்ந்தாள்
சிந்தைமெலிந்தவள்விடுத்தஈசன்வீர்யஞ்
சிறந்ததடாகத்திலொன்றாகத்திரண்டு
தொந்தமுறுசுக்கிலபட்சத்திலின்பந்
துலங்குபிரதமைமுதல்பஞ்சமிவரைக்கும்
விந்தையுருக்கொண்டதுவுஞ்செனித்தவாறும்
விறுவேன்முருகர்புகழ்கூறுவேனே.

உஅ. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

அவதரித்தாரேமுருகர்-சஷ்டித்திதியில்
அவதரித்தாரேமுருகர்.

அநுபல்லவி.

சிவவிலாசமிதென்னத் திசமூாறுமுகமின்ன
எவருமலேயென்றுன்ன ஈராறுபுயந்துன்ன
அவதரித்தாரே

சரணங்கள்.

க. பூரணஞான மூறும்-படிக்குநிதம்
புனிதராவுரு வேறும்
தாரகமந்திர மாறும்-ஒருருவாகச்
சமைந்ததெனவே வீறும்
வீரமுனிவர்விள்ள மேலும்வினையைமெள்ள
வேராறுத்திங்கேதள்ள மிகுந்தவானந்தங்கொள்ள
அவதரித்தாரே

உ. கோடிசூரியர் கூசக்-காதினிற்சொர்ன்ன
குண்டலமொளி வீசச்
சூடுங்கடம்பின் வாச-மாலைகளென்றுங்
துலங்குமார்பிற்பிர காச
ஆடகப்பூணுநூல்காண அரையிற்பட்டுடைதோண
வாடுமன்பர்கள்வேண வரம்பெற்றின்பத்தைப்பூண
அவதரித்தாரே

௩. கிரணசந்திரன் வாட-ஒளிர்முகத்தில்
கிருபையேகுடி நாட
மருவியஇரு ளோடச்-சிரத்திலணி
மகுடத்தினொளி சாடத்
திரிபுவனமுந்தாங்கத் தீயஅசுரரேங்க
அரியவமரரோங்க அடியேன்வல்வினைநீங்க
அவதரித்தாரே

---

முருகன்விளையாடல், கிரவுஞ்சமலையையும்,
சுவேதமலையையும் பிளத்தல்.

முடுகுவிருத்தம் ௫௩.

இப்படியாகவுதித்திடுசெண்முக-னீசன்வளைத்திடுமோ
ரிணையறுமேருவையொருகரமீதி-லிருத்தியவ்வாசுகியை

அற்புதமாகவமைத்துவிளைத்திடு-மாரொலியால்நாளும்
அழகுயர்வான்முசடிருபிளவாகி-யலைந்ததுசூழுமுகில்
ஒப்பில்குகைக்குளொளித்தது திசையிலு-மோதரும்விண்ணுடும்
உரக்தலத்திலுமுற்றிடும்பர்க-ளோடுநிசாசரரும்
எப்படியினியுயிர்தப்புவம்நாமென-எதிர்விழும்நீள்கோடை
இடியின்முன்னாவெனவுடல்பதறிட-அவ-ரிதயம்நடுங்கினரே.

உகூ. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னமென்னையன்முரு-கையன்பெருமைதனை
இங்கேயெடுத்துச்சொல் வேனே

அநுபல்லவி.

மன்னுஞ்சிகரமேரு வரையைவளைத்துநாட்டி
வாசுகிதன்னையெடுத் ததிலேயிசையப்பூட்டித்
துன்னுங்குணத்தொனிசெய் திட்டவல்லபமாரே
சொல்வாரெனவேதேர்ந்துந் துணிவினைக்கொண்டுநேரே
இன்ன

சரணங்கள்.

க. அஷ்டகுலகிரியும் நிலமும்-சொல்லும்
அதலவிதலநற்சு தலமும்
மட்டிலாமல்நீண்டிடு பிலமும்-துள்ளும்
வல்லஅசுரர்தங்கள் குலமும்
திட்டெனத்திகில்கொள்ளத் திசையுஞ்செவிடுபட
சேடனுதுங்கிவிழி பிதுங்கிநடுங்கிவிட
கொட்டமுறுங்கிரவுஞ்ச கிரிபிளந்திடமோது
கூர்வாளியொன்றைமெல்லக் குறித்தேவினுனிப்போது
இன்ன

உ. பரவுமவ்வாளியொருக் காலே-வாழைப்
பழத்தில்நுழையுமூசி போலே
கிரவுஞ்சத்திலுருவி மேலே-விக்
கிரமத்தைக்காட்டியபின் ஞலே
அரியஆறுமுகவே ளந்தக்கிரவுஞ்சமலைக்
கடுத்தசுவேதமலை மீதிலுக்கிரத்தைநிலை
மருவுமோர்பாணம்விட்டா னதன்சிகரங்கள்விண்டு
மண்மீதிலேமுறிந்து விழுந்ததன்பினைக்கொண்டு
இன்ன

ங. அந்தச்சிகரம்விண்டு முறிந்து-போக
அதஞ்செய்தவாளிபலம் அறிந்து

சந்திரசூரியர்நிலை பிரிந்து-ஓடித்
தவித்தார்நட்சத்திரமும் பரிந்து
முந்தஇருந்தஇடந் தெரியாமலேமயங்கி
முழுதுந்தத்தளித்துப்பிர மித்திடவேதியங்கி
எந்தமூலைதனிலோ ஒளித்துக்கொண்டதுவாடி
இமையோரெல்லாருநடு நடுங்கினூர்பயம்நாடி
இன்ன

---

## சப்தரிஷிகளில் வசிட்டரொழிந்தோர் தங்கள்பாரிகளைச்சபித்தலும், தேவேந்திரன் முருகரிடஞ்சென்று அயிராவதிக்கழைத்துக்கொண்டுபோய்ப் பணிவிடைசெய்தலும்.

விருத்தம் ௫௪.

கந்தனிவ்வண்ணமலைகளின்மீதிற்-கணைகள்விட்டேவிளையாடிக்
களித்திருந்திட்டானருந்ததிதவிரக்-கனங்கொளுமிருடிகளறுவர்
சிந்தையில்மகிழும்பத்தினிமார்கள்-செந்தழற்கடவுளைச்சேர்ந்து
திருமுருகனைப்பெற்றனரெனநிந்தை-ஜெகத்தினிற்பரவியபடியால்
அந்தமங்கையரையிருடிகள்நீக்கி-ஞாதைச்சுவாகைமாதறிந்தே
அருமிருடிகள்பால்நடந்தகாரியங்க-ளனைத்தையுமுண்மையாயுரைத்துந்
தொந்தமாகக்கேளாமலேவெறுத்தார்-தூய்மைசேரவர்மனைவியர்கள்
சொல்லுமோர்மலைச்சாரலிற்கடிதேகித்-துயரொடுவாசஞ்செய்தனரே.

௰௫. திபதை-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

**கண்ணிகள்.**

௧. அவர்பாடிப்படியிருக்கத்-தேவேந்திரன்பால்
அடைந்தக்கினிபகவான் பிள்ளை-நீடு
புவியிலாறுமுகம்பெற்-றிட்டோன்மகமேருவைப்
புட்பம்போலேயெடுத்து வெள்ளைப்

௨. பொடியணியும்பரமன்-கயிலாசமுமதிரப்
புகல்மலைகள்துகளாய்ப் போகத்-துடி
துடிக்கும்பாணத்தையேவி-அதஞ்செய்கிறானவன்
துன்மார்க்கத்தையடக்கி லோகம்

௩. எல்லாம்பிழைக்கஅமர்-செய்யவாநாங்களும்
இசைந்துன்னுடனேகூட வந்து-சொல்லும்
பொல்லாதஅப்பிள்ளையை-வாட்டுகிறோமெனவே
புகன்றாரவர்களுள்ளம் வெந்து

௪. இந்த்ரன்கேட்டுக்கோபமா-யாயுதத்தோடானேமீதில்
ஏறினனங்கேயொருக் காலே-வெகு
சுந்தருவரியக்கர்-வசுக்கள்தானவர்தேவர்
களுமுனிவருங்சடல் போலே

௫. சூழ்ந்தாரச்சமயத்தில்-தேவேந்திரன்பரமே
சுரன்தேவர்கள்துயரம் நீங்கி-நிதம்
வாழ்ந்துய்ய அளித்திட்ட-பிள்ளையென்பதைமுற்றும்
மறந்துமகிமைதனில் ஓங்கி

௬. வீரியசத்தமாதரைப்-பார்த்தந்தஇளஞ்சேய்
மீதினில்நான்போய்ச்சண்டை நேரே-செய்யில்
கூறுமெவ்வுலகமும்-நகைத்திடும்நீங்களந்தக்
குழந்தையோடெதிர்த்துவெம் போரே

௭. செய்துசெயித்துவாருங்-கோளென்றனுப்பஅவர்
திகழும்படைகளுடன் சென்று-முரு
கையனைப்பார்க்கும்பொழு-திற்சாட்சாத்காரமென
அறிந்துநெருங்கியெதிர் நின்று

௮. உளங்கனிந்துஸ்தெளத்தியஞ்-செய்துன்மகிமைதனை
ஓராமலிந்த்ரனுனே வெல்ல-அங்கே
அளவில்லாஇயக்கர்வா-னவரைச்சேர்த்திருக்கின்றான்
அவனுக்கனைப்படிக்குன்மேல் வல்ல

௯. சண்டைசெய்யவந்தோமுன்-மகிமையையறியாமல்
சண்முகத்தேவேநீயிப் போது-கிருபை
கொண்டெங்கள்குற்றத்தினைப்-பொறுத்துரட்சிப்பாயென்றார்
கூர்வேலன்நகைத்தவர் மீது

௰. இரக்கங்கொண்டவ்வரந்தந்-தான்பின்பவரையனே
எங்கட்குநீபுத்ரன் என்ன-நீடு
திரிபுவனத்திலும்பேர்-நிலைநாட்டவேணுமென்றார்
சிவகுருபரன்மயி லன்ன

௰௧. சாயலையுடையஅன்-னோர்க்குவரமளித்தான்
சந்தோஷமாகஅந்த வார்த்தை-வெகு
தூயநெறியுடைய-அவர்கள்பெற்றுக்கொண்டெங்குந்
துதிக்கும்படிக்குச்சுப காத்தை

௰௨. மேவிச்சென்றார்களிதைக்-கேட்டஇந்திரன்காய்ந்து
வில்லம்புவச்ராயுதத் தோடு-தேவர்
தாவுங்கடல்போற்சூழச்-சிவசுப்பிரமணியன்
தானிருக்குமிடத்தில் நீடு

௰௩. வேகத்துடனேசேர்ந்தான்-தேவர்சாமியின்மீதில்
மிதமில்லாஅஸ்த்திரம் ஏவி-மணி
நாகராஜனும்வாட-ஆர்ப்பாட்ஞ்செய்தாளயன்
நகைத்துக்கோபப்பார்வையைத் தாவிப்

௰௪. பார்த்தானப்போதுவிசாகன்-கண்ணிலோர்தீப்பொறி
பகர்வடவாக்கினியும் வாட-எழுந்
தார்ப்பரித்ததேவர்க-ளுடலைக்கொளுத்திவிட்ட
தப்போதவர்கள்தப்பி யோட

௰௫. வகையில்லாதாலுமது-எங்கொளித்தாலும்விட
மாட்டாதென்றுள்ளம்நடு நடுங்கி-ஆறும்
புகழ்கிருபைமூர்த்தியிடத்-திற்போய்ப்பணிந்துமிக்க
புனிதனேவுன்சொற்படிக் கொடுங்கி

௰௬. உனக்குப்பரிசனமாகி-றேமெங்களையெப்போதும்
உவந்துரட்சிப்பாயென்றார் கதித்து-நாளும்
அனைக்குச்சமானமான-ஆண்டவன்ரட்சிப்பேனென்
றபயஸ்தந்தந்தனன்சம் மதித்து

௰௭. அவ்வுரைகேட்டவிண்ணோர்-குமாரசாமியைச்சூழ்ந்தே
அங்கிருந்தார்கள்காத்துக் கொண்டு-திகழ்
எவ்வுலகத்திலுங்கா-ணுதஅதிசயமென்
றேகண்டஅவ்விந்திரன் வெகுண்டு

௰௮. வச்சிராயுதத்தைச்செவ்வேள்-மீதிலேவினனது
மகிமைசேர்கர்த்தன்வலப் புசத்தில்-ஏகி
அக்ஷணத்திற்பட்டது-பட்டுமோர்துன்பப்படுத்
தாமற்றிரும்பிவிட்டோன் வசத்தில்

௰௯. சென்றுசேருமுன்னே-செவ்வேள்வலத்தோளினில்
சிவந்தகண்களுஞ்சோதி துன்னும்-திவ்ய
சொர்னதேகமும்ரத்ந-கசிதப்பொன்மகுடமுஞ்
சூரியனொளிமழுங்க மின்னும்

உ௰. வேலாயுதமுந்தாங்கி-விசாகனெனவேயோதும்
வீரனுற்பவித்திட்டான் மேலும்-வெகு
கோலாகலத்துடன்கு-மாரவீரரும்வெற்றி
கொள்ளுமாயுதத்தையெக் காலும்

உக. நீங்காதவர்களாக-உதித்தாருதித்தஅந்த
நிமிஷத்திலிந்திரன்மேற் கணையை-ஆருந்
தாங்காதகோபத்துடன்-விடும்பிடியுமென்றவன்
றனைவளைந்தாரக்கினி அணையை

உஉ. வெண்ணெய்தடுப்பதுண்டோ-அதுபோல்தேவேந்த்ரனுளம்
வெருவியிப்பிள்ளை அந்தச் சிவனோ-நெடும்
வண்ணமாலோபிரம்மாவோ-மும்மூர்த்திகள்சொரூப
மருவியஒருருவத் தவனோ

உங. எனவுமிவனக்கினிமைந்-தனோவென்றுமுன்னாலே
ஈசன்மிகுகிருபை கூர்ந்து-சொல்லும்
இனிமையானபுத்ரனோ-வென்றுந்தியங்கிமெள்ள
இதையறிவோமென்றெண்ணஞ் சார்ந்து

உச. சாமியிடத்தில்வந்து-சரணாகதியடைந்தான்
சாமிக்கவன்மேல்கிருபை பிறந்து-மகா
நேமமாஅபயஸ்தங்-கொடுத்துத்தன்பக்கத்திலந்
நிமிஷத்தில்வைத்துக்களி சிறந்து

உரு. ஆசனத்தில்தேவர்கள்-சூழஇருக்கும்போதில்
ஐயன்பால்முனிவர்கள் திரண்டு-வந்து
ஈசன்கண்ணில்அக்கினிப்-பொறியாகவந்துதித்தெங்
கெங்குங்கருணைவெள்ளம் புரண்டு

உசு. பாயும்விழியுடைய-கர்த்தனேயெனத்தோத்ரம்
பண்ணிப்பந்தக்குழியில் எம்மை-நீ
தோயவொட்டாமற்காப்பா-யென்றுரைதைக்கேட்டிந்த்ரன்
சூழ்ந்தநீள்மயக்கங்கள் தம்மை

உஎ. உடனேவிட்டாண்டவனை-நோக்கிநீகர்த்தனென்ப
துணராமலுன்மேற்படை யெடுத்து-நேர்ந்து
கொடியகணைவிடுத்த-பாதகத்தினைத்தீர்த்துக்
கூறுமெங்கள்மேற்கிருபை யடுத்து

உஅ. பாதுகாத்திடவேணு-மெனவும்நீதேவசேனா
பதியாகவேணுமென்றுந் தீமை-செய்யுங்
காதகராம்நிருதர்-மதமுமொழிப்பாயென்றான்
கனிந்ததைக்கேட்டிருந்த ஊமைத்

உகூ. தேவர்சாமியைப்பார்த்து-நாங்களும்முனிவருந்
தினமுமுனக்குவழிப் பட்டு-விறும்
ஆவலோடுநடக்கும்-வரமருளென்றார்கேட்ட
ஐயன்கிருபையைநெஞ்சிற் றொட்டு

௩0. குறுநகைசெய்திந்த்ரனை-நோக்கிநீயேதேவர்க்குக்
கோமானெழிலிமையோர் சேனைக்-கெல்லாம்
உறுதலைவனாகவே-நானேயிருந்தசுரர்
உள்ளம்நடுங்கிச்சிறு பூனை

௩௧. போலொடுங்கவுனக்குச்-செயமுண்டாக்கிறேனென்று
புகன்றுனந்தமொழியைக் கேட்டு-அங்கு
சிலமுனிவருமும்ப-ரும்ஐயன்றனைத்தேவர்
சேனுபதியென்றிட நாட்டும்

௩௨. முக்கியப்பேர்கொடுத்திட்டார்-மேலுமிந்திரன்சாமி
முகத்தைப்பார்த்தென்மேற்கிருபை நண்ணி-நாளும்
மிக்கசுற்புடையஎன்-புத்ரிதேவசேனையை
விரைந்துநீயேகல்யாணம் பண்ணிக்

௩௩. கொள்ளென்றுன்குகன்சற்றே-யோசித்தேஅந்தவரங்
கொடுத்தானெல்லோருமுளங் களித்து-நின்றூர்
உள்ளமகிழிந்த்ரனும்-பிரமலோகத்திற்றவம்
உற்றுப்பத்தியிலின்பங் துளித்து

௩௪. வீறுந்தேவசேனையை-வருவித்துக்கொண்டுசோதி
விளங்கவமராவதி நகரஞ்-சேர்ந்து
மாறில்தெய்வதச்சனுல்-சிருஷ்டித்தநீள்கல்யாண
மண்டபந்தனிலதி பகரம்

௩௫. எய்திடுவிவாகஞ்செய்ய-எத்தனஞ்செய்தானீசன்
எழிலுமைமாயன்பிரம்ம தேவன்-உயர்
வைதிகப்பிரம்மரிஷி-யோபூலோகத்திற்
குமாரசாமிமகாநு பாவன்

௩௬. தங்குமிடத்தில்வந்து-குகனைப்பார்த்தபரமன்
தண்ணருட்பார்வதியைப் பார்த்துக்-குண
துங்கமுற்றஇப்பிள்ளை-யுன்மகன்தானெனவே
சொன்னபோதையனன்பு பேர்த்து

௩௭. சித்திரஆசனம்விட்டே-அரனுமையிவரிரு
திருவடியில்முடியைப் புனைந்தான்-அப்போ
தத்தன்புத்திரன்றனைத்-தழுவியெடுத்தணைத்தே
ஆனந்தவெள்ளமதில் நனைந்தான்

௩௮. அப்படிமகிழ்ந்திட்ட-பரமன்தெய்வமாலையும்
அணிகொள்வேலாயுதமும் வீர-முள்ள
பொற்படைகளும்பிள்ளைக்-களித்துச்சகலத்துக்கும்
புகலுந்தனைப்போலதி கார'

௩௯. முதல்வனுகஇருக்க-மகிமையுமளித்திட்டான்
முப்புவனத்தையும் பூத்துக்-காக்கும்
மதிமுகவுமையவள்-பூஷணமுதலாக
பற்றதுந்தந்துசேயைப் பார்த்துக்

சய. களிப்படைந்திட்டபின்பெல்-லோருந்தேவசேனைதன்
கல்யாணந்தனைப்பார்க்க வேணும்-என
உளங்கனிவால்விண்ணுடற்-றுரிந்த்ரன்மணக்கோலம்
உயர்பெண்ணுக்குச்செய்தெழில் பூணும்

சக. நவரத்நமயமான-கல்யாணமண்டபத்தில்
நற்செவ்வேள்தனையலங் கரித்து-நாளும்
புவனங்கள்மெச்சும்ரத்நக்-கசிதஆசனந்தன்னில்
பொருத்திவளரன்பினைத் தரித்து

சஉ. தேவசேனையைஆசீர்-வதித்துச்சாமிபக்கத்திற்
சேர்த்துத்தெய்வம்றைக ளோதும்-சடங்கை
மூவுலகும்புகழச்-செய்தையனுக்குப்பெண்ணை
முறையாத்தாரைவார்த்தீந்தெப் போதும்

சங. அடையாதசந்துஷ்டியை-அடைந்தான்தேவசேனையும்
ஆறுமுகசாமியும் அங்கு-மகிழ்
உடனிருந்தாருமையுஞ்-சிவனுங்கயிலைசேர்ந்தார்
உறுமற்றோர்களுமவர் தங்கும்

சச. நல்லிடத்தினிற்போய்ச்சேர்ந்-தாரக்கினியுஞ்சுவாகை
நங்கையும்அடியார்க்குப் பதவி-அருள்
வல்லமுருகேசன்தன்-னிடத்தில்வந்தெங்கட்குநீ
மைந்தனெனவரத்தை யுதவிக்

சரு. காக்கவரங்கொடென்றார்-கொடுத்தான்கங்கைஐயனைக்
கண்டென்றனுக்குநீயே புத்ரன்-என்
பாக்கியவரமரு-ளென்றுளவ்வரத்தினைப்
பத்தர்தமக்கென்றைக்கும் மித்ரன்

சசு. ஈந்துகாங்கேயனெனப்பேர்கொண்டானுங்கிரச
இருடிமுதலோர்தள்ளி விட்ட-எழிற்
பூந்தோகையராறுவர்-முருகனிடத்திற்கிட்டிப்
புவியிற்றங்களுக்குநே ரிட்ட

சஎ. தீங்கையுரைத்தெமக்கோ-ராதரவுமில்லாமற்
செகத்திலலைந்துநீள்துன் பத்தை-நாளுந்
தாங்கிக்கொழுகொம்பில்லாக்-கொடியதுபோல்மெலிந்து
தவிக்கிறோந்தொண்டருக்கின் பத்தை

சஅ. யூட்டும்புண்ணியவானே-யெங்கட்குநீபுத்திரனென்
றுறுமுறைமையாலுன்றன் தஞ்சம்-ஆரும்
நாட்டங்கொண்டிங்கடைந்-தோம்நாங்கள்பூர்ணத்தி
னண்ணிவாழும்படிக்குன் னெஞ்சம்

௪௯. இரங்கவேணுமென்றூர்க-ளையன்கேட்டுங்கள்மீதி
லேவிளைந்திட்டஅப வாதம்-முன்
புரிந்தவினையெனத்தே-றுங்கோளுங்களுக்குநான்
புத்ரனென்பதற்கொரு பேதம்

௫௰. இலையென்றுஞ்சொல்லித்தேவேந்-திரன்முகத்தினைப்பார்த்தா
னிந்த்ரன்கார்த்திகைஎனுநட் சத்திரம்
நிலைபெறுகின்றஇடத்-தினிலிந்தஆறுபேரை
நீசேர்க்கலாமென்றனன் பட்சத்

௫௧. தொடுகேட்டசண்முகன்-வரந்தந்தஸ்தானந்தன்னி
லுறும்படியெண்ணத்தினை வாய்ந்தான்-வாய்ந்
திடில்லாஅன்னோருக்-சப்படிக்கேகடாக்ஷித்
திடஅருளினைநெஞ்சிற் றேய்ந்தான்

௫௨. வஞ்சியராறுவருங்-கார்த்திகையிடஞ்சென்று
மருவினூரவர்க்கையன் பால-னென
வுஞ்சாருமுறைமையால்-கார்த்திகேயனென்றோர்பே
ருற்றான்மெய்ஞ்ஞானசிவ சீலன்

௫௩. கார்த்திகேயனெனப்பேர்-கொண்டகிருபைமூர்த்தி
கணக்கிடவொண்ணுஆத்ம கோடி-வினை
தீர்த்திடக்கார்த்திகையில்-விரதமிருக்கும்படி
செப்பினனீள்கருணை நாடி

௫௪. மேலுஞ்சாமியுதித்தது-மமரர்கள்தம்மைச்
செயித்ததுந்தேவசேனை தன்னை-மணஞ்
சீலமாச்செய்துகொண்-டதுஞ்சிறந்திடுசஷ்டித்
திதியாகையினாலேயிங் கென்னை

௫௫. ஆளுங்குமாரதேவன்-தனைக்குறித்துமுனிவர்
அமரர்மற்றோருமன்பான் விரதம்-சுகம்
நாளுந்தழைக்கஇருக்-கின்றூர்முன்னையனிடம்
நண்ணிவரம்பெற்றிட்டோர் இரதம்

௫௬. ஒக்குமல்குலார்சத்த-மாதாக்கள்சாமியின்பால்
உவந்துபின்பும்வந்தங்கே யடைந்து-பால
கர்க்குவருநோயெல்லாந்-தங்களாலேகூத்தினிற்
கனிவாகப்பூசைசெய்தா விடைந்து

௫௭. போகும்படிக்குவரங்-கேட்டாராண்டவன்கேட்டுப்
புத்திரருக்குப்பதி னாறு-வய
தாகுமட்டுமைந்தருக்-கவாரல்வியாதிர
அனுக்கிரகித்துப்புகழ் வீறு

௫௮. கசியப்பிரம்மாவின்மனை-வியர்தேவர்களையின்று
கனங்கொண்டிடும்அதிதி மங்கை-நல்ல
உசிதஅதிதிநற்கத்-துருவைசுரபிகல
முயர்திதியெனுஞ்சுப நங்கை

௫௯. இவர்கள்முதலேழுபே-ராற்கர்ப்பவுற்பவங்தொட்
டீரெட்டாண்டுவயது மட்டும்-இந்தப்
புவியில்மைந்தருக்குநோய்-தீரவரங்கொடுத்துப்
புனிதமிருந்ததிசை யெட்டும்

௬௰. உன்னதமுடன்போற்றுங்-கந்தருவர்சித்தர்கள்
உயர்முனிவர்கள்தேவ ருந்தான்-கண்ணுற்
சொன்னஏவலைச்செய்ய-அமராவதியிற்சாமி
சுடர்ச்சிங்காசனத்தில்வீற் றிருந்தான்

---

## மஹிடாசூரசம்மாரம்.

விருத்தம் ௫௫.

இந்தவகைசாமிபொற்சிங்காசனத்தி
லேயிருந்தபெருமைதனைதூதர்சொல்லச்
சிந்தைகொதிப்பொடுகேட்டமகிடாசூரன்
சீறிவடவாக்கினிபோலேயெழுந்தான்
வந்தஅவன்படைஅமராவதியைச்சூழ்ந்து
வளைந்ததும்போரிமையோர்செய்ததுவுமிந்த்ரன்
பிந்திவெருவியதுமையன்பார்த்துவில்லைப்
பிடிக்கின்றான்நிருதர்களைமடிக்கின்றானே.

௬௰. தரு-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

சண்டையின்பெருமைசொல்லுவேன்-குமாரசாமி
சண்டையின்பெருமைசொல்லுவேன்.

அநுபல்லவி.

விண்டலமதிர்ந்திடவே வில்லைநிருதர்கள்கையில்
கொண்டுகொடுங்கணைகளைக் குகன்றன்சிவந்தமெய்யில்
மண்டலவுருஷமென-வாரிச்சொரிந்தமரது செய்திட்ட
மிண்டுகளொடுங்கஐயன்-வில்லிற்கொல்லுமஸ்த்ரங்களை யெய்திட்ட
சண்டையின்

சரணங்கள்.

௧. அளவற்றதேர் மீதிலும்-கடல்போல்மதங்
களைப்பொழியானை மீதிலும்

இளைப்பற்றபரி மீதிலும்-மிருந்தபல
முளந்தப்புவன மீதிலும்
தளத்தொடுவந்துசூழ்ந்தே தனுர்ப்பாணம்விட்டவீரர்
புளித்தகள்குடித்தோர்கள் போற்பிதத்தும்வெஞ்சூரர்
களைத்தேஅமரிற்பலர்-கரந்தோள்குடலறவேவெளி கண்டிட்ட
முளைத்தேங்காயெனப்பலர்-முழிகள்பிதுங்கிடத்தலைக ளுருண்டிட்டச்
சண்டையின்

௨. தந்திகளுடைய ரத்தமும்-மடிந்தபல
வந்தர்களுடைய ரத்தமும்
விந்தைகொள்குதிரை ரத்தமும்-போர்க்குத்திரண்டு
வந்தசேனைகள் ரத்தமும்
முந்துகடலெனத்திசை முழுதுங்கரைபுரண்டு
வெந்திரைகள்மோதக்கண்டு வெஞ்சினம்மகிடன்கொண்டு
சந்திரவாளியைச்சாமி-தன்மேலேவிடுத்துத்தங்களை கடித்திட்ட
அந்தநிமிஷத்திலவன்-அருந்தேர்வில்லொடுகணையையு மொடித்திட்டச்
சண்டையின்

௩. சிங்கத்தின்தே ரழிந்து-பதாதியாகி
யுங்கோபக்கனல் பொழிந்து
செங்கையினுற் பிழிந்து-குமரனைக்கொன்
றிங்குவெல்வேனென மொழிந்து
துங்கவாளுருவிக்கொண்டு சுவாமிதனைவெட்டும்படி
உங்காரஞ்செய்திட்டேவந்தே உக்கிரநிருதன்முடி
செங்குருதிகக்கிக்கொண்டு-செண்டாடும்படிசிதைந் திடப்பட்ட
வெங்கணையையன்விடும்-வேளையில்நமனுமெய்பதை பதைத்திட்டச்
சண்டையின்

---

## ஈசன் முருகனைப்புகழ்ந்து,பின்பு உமையுடன் கயிலையைச்சேர்தல்.

விருத்தம் ௫௬.

தகுமகிடன்றனைமடித்தசாமிசிங்கா
சனத்திலிருந்தான்கணங்களோடுமீசன்
மகனிடம்வந்தானவன்பணிந்தான்மைந்தன்
வல்லநிருதரைமாய்த்தவீரந்தன்னை
மிகவுமெச்சியமரரைப்பார்த்தெனைவந்திப்போர்
மேவுபயனிவனையுற்றோர்பெறுவாரென்றே
குகனைமிகவாழ்த்தியுமையவளோடன்பு
கூர்ந்திட்டான்கயிலையைப்போய்ச்சேர்ந்திட்டானே.

முருகையன் தன்வலத்தோளில்செனித்தவீரர்களும், தேவசேனையும் அருகிருக்க வீற்றிருந்தகதையை, தருமர் கேட்டுப் பரவசமடைந்தபின்பு,
திரௌபதியைச்சத்தியபாமை நீ ஐவரை எப்படி வசப்படுத்தினையெனச் சங்கித்தலும், திரௌபதி தன்ஒழுக்கத்தை விரித்தலும்.

விருத்தம் ருள.

திரிபுரதகனன்சென்றபின்தேவ-சேனையுந்தன்வலத்தோளில்
செனித்திடுவிசாகனுடனுதித்திட்ட-தீரராம்வீரகுமாரர்
சிறந்திடுமுனிவர்போற்றிடவேலஸ்-திரங்கள்சஸ்திரங்களும்வெற்றிச்
சேவலங்கொடியும்யானைவாகனமுஞ்-சிறப்பொடுவிளங்கிடஎம்மை
இருமையுங்காக்குமுருகன்வீற்றிருந்தா-னென்னுமார்க்கண்டரன்பாக
இயம்பிடத்தருமபூபன்மெய்மறக்க-இணையிலாப்பரவசமடைந்தே
இருகையுங்கூப்பிக்கொண்டுகேட்டிருந்தா-னெழில்பெறுஞ்சத்தியபாமை
இன்புறுபன்னசாலையிலிருக்கு-மேந்திழைதிரௌபதிதன்னைப்
பரிவொடுபார்த்தேஸ்த்ரீவுருவெடுத்தோர்-பாரிலோர்புருஷனைவசியப்
படுத்தமாட்டார்களவர்களுன்சொற்-படியனுகூலமாயிருக்கப்
பண்ணுநன்மந்த்ரமருந்துகளுண்டோ-பக்குவமாகநீயெனக்குப்
பகர்ந்திடிற்கமலக்கண்ணனென்வசியப்-படும்படிசெய்குவனென்ன
மருமலர்க்குழலாள்திரௌபதிகேட்டு-மன்னியதுர்க்குணமுள்ள
மங்கையரைப்போலென்றனைநினைத்து-வருத்துகாமத்தினைப்பெரிதாய்
மனத்தினிற்பதித்தாய்புகழுறுதவள்நீ-மகிமைசேர்கற்பினைத்தள்ளும்
வகையினையெடுத்துப்பேசினையிதுதுன்-மார்க்கமென்றிவைபுகன்றனளே.

௰சு. திபதை-இராகம்-தன்னியாசி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧. தானமாயனுக்குநீபெண்-டானதுமிகுந்தமனஸ்த்
தாபமே முற்றும்-பாபமே
ஈனமருந்தால்மந்த்ரத்தால்-மாநிலத்திலேபுருஷர்
என்றும் மருள்-துன்றும்

௨. படிவசியப்படுத்துங்-கொடியஸ்த்ரீயுங்கொண்ட
பாரியா அவ-ளோரியா
முடியக்கத்தினைகுவாள்-வடிவநாயகன்நெஞ்சை
முழுதும் எப்-பொழுதும்

௩. அன்பால்மகிழச்செய்யாத்-துன்மார்க்கமாதுநெஞ்சில்
ஆழுந் துயர்-சூழும்
வன்னரகினில்வீழ்வாள்-தன்கணவனொடுசம
மதித்து இஷ்டம்-பதித்து

ச. மனதுகலந்திடாத-வனிதைகொடுந்துயரில்
வாடிப் பிணி-மூடித்
தினமுமெலிவாளெள்ளத்-தனையுஞ்சந்தேகமில்லை
தேறு புகழ்-வீறு

ரு. இவர்களையுநாளுந்-தெய்வமாகநானெண்ணி
யடுத்து அன்பு-தொடுத்து
மெய்மையாநடந்துகொள்ளுஞ்-செய்கையவர்நெஞ்சினில்
மேவிக் கிருபை-தாவிக்

சு. களித்திருக்கின்றார்புகழ்-கிளைக்குமன்னோர்ஸ்த்ரீகளைக்
கண்டு மோகங்-கொண்டு
வளத்தொடுசேர்ந்திட்டாலும்-உளத்தினில்வித்யாசத்தை
வையேன் கோபஞ்-செய்யேன்

எ. சந்துஷ்டியையடைவேன்-விந்தைப்பணியாடைகள்
தரிக்க அலங்-கரிக்க
அந்தமுடனேசம-யந்தெரிந்தவர்தமக்
களிப்பேன் மனங்-களிப்பேன்

அ. எழிற்கோடைகாலத்திலும்-மழைகாலத்திலுமவர்
இசைந்து கையாற்-பிசைந்து
தழையுமகிழ்வினுலே-வழுவில்லாமலுண்ணும்போ
சனத்தை நல்ல-மனத்தைக்

கூ. கொண்டுதவியேகாலங்-கண்டவர்கள்கனிவு
கூர அலங்-கார
திண்டொடுசயனத்தை-அண்டுமன்னோர்கள்சுகஞ்
சிறக்கத் தம்மை-மறக்க

ய. நித்திரைசெய்யும்படி-யெடுத்துப்போடுவதன்றி
நித்தம் பரி-சுத்தம்
உற்றிடப்பாடுவோராடல்-கற்றபேராயுதத்திருல்
ஓங்குஞ் செயந்-தாங்கும்

யக. பரிட்சைசெய்வோரையும்-விருப்பாற்சோதித்துநானேற்
பாடு செய்து-நீடு
உருக்கமுடனவர்பா-லிருக்கவுவேன்கணக்
கோதக் கூ-டாத

யஉ. மங்கையரேவல்செய்ய-எங்குமிருந்தாலும்நானே
வணங்கி அவர்க்-கிணங்கி
சங்கையில்லாமலூழி-யங்களைச்செய்யஇஷ்டந்
தரிப்பேன் உப-சரிப்பேன்

௰௩. கஜங்களைப்பசுக்களை-அசுவங்களைப்போஷித்துக்
காக்கும் அனை-வோர்க்கும்
இசையும்பலபலநல்-வசனமுரைத்துவேண
தீவேன் கனி-வாவேன்

௰௪. பணிகாகளம்பேரிகை-மணித்தேர்மன்னவர்வெற்றிப்
படைகள் முத்துக்-குடைகள்
இணையிலாதஇடத்தி-லணியணியாக்கிரமத்தோ
டிருக்க நெஞ்-சுருக்க

௰௫. மோட்மைத்திடுவேன்சீ-ராடையாபரணங்கள்
ஒருமை கொண்-டருமை
நாடியமாதர்க்களித்து-நீடுமகிழ்ச்சிகொள்ளுவேன்
நாளும் உல-காளும்

௰௬. அதிகார்மன்னர்சபை-யதில்வந்தாலவர்தரம்
அறிந்து நலஞ்-செறிந்து
விதம்விதம்வேணதெல்லா-முதவிமிகஅவர்கள்
வியந்து நெஞ்சம்-நயந்து

௰௭. எதார்த்தமுடனேதரும்-பதார்த்தங்களைக்கைக்கொள்வேன்
எங்கும் புகழ்-தங்கும்
நிதானமுடனெப்போதும்-இதாகிதந்தேர்தன்மனுடன்
நேர்ந்து களி-கூர்ந்து

௰௮. சிராப்பபோசனங்கள்பன்-னீராயிரம்பிராமணர்
சித்தம் தனிற்-குற்றம்
வாராமற்குறிப்போர்ந்து-நேராகஏவல்செய்யும்
வண்மை தனை-யுண்மை

௰௯. ஆகநெஞ்சினிற்கொள்வேன்-போகஸ்த்ரீகள்தவத்துக்
கான நற்றி-யான
ஓகைவேதியர்தாசர்-நாகரீகபந்துக்கள்
ஊடி யங்கள்-நாடி

உ௰. செயுஞ்சேவகர்கள்தாயா-தியரிவர்க்குவேணது
தெரிந்து மிகப்-பரிந்து
நயமுடனீந்துராஜ-ரியல்பின்படிமாமிபால்
நண்ணித் துதி-பண்ணி

உக. முறையாப்பணிந்தவள்தன்-கிருபைகொள்வேன்யான்செய்யும்
மூலம் தன்னா
பெறுமைவரென்னிடத்தில்-நிறையன்புகொண்டார்சற்றும்
பேதம் செய்ய-நீதம

௨௨. அணுவளவுந்தெரியேன்-பிணிசெய்மருந்துமந்த்ரம்
அறியேன் மோசங்-குறியேன்
கணைவிழியாளேனக்-கிணையாகநீநடந்தால்
கனத்தை மாயன்-மனத்தை

௨௩. நீவசஞ்செய்வாயென-வேவுரைத்தபாஞ்சாலி
நெறியைக் கேட்-டுறியை
ஆவலாற்றுவுமால்பெண்-டாம்பாவைசத்தியபாமை
யகத்தில் மலர்-முகத்தில்

௨௪. தள்ளொணுநாணங்கொண்டு-விள்ளொணுஆச்சர்யமுந்
தாங்கி மிக-வுங்கி
தெள்ளமுதினையொத்த-உள்ளத்தாள்திரௌபதியைச்
சீராய்ப் பார்த்து-நேராய்

௨௫. தப்பிதஞ்சொன்னேனீ-பொறுப்பாய்கமலக்கண்ணன்
தன்னை உன்-முன்னை
செப்பமாநடக்கஅவர்-கற்பித்தாலுமுனைப்போற்
றீர்க்கச் சன்-மார்க்க

௨௬. நிலையெனக்குவருமோ-பலசீவராசிகளும்
நீரை யுண்டு-சீரை
இலகுறஅடைந்தாலுஞ்-சொலுநற்சங்கைப்போல்முத்தை
யிலங்கப் பெற்றுத்-துலங்கப்

௨௭. புகழ்பெறுமோவெனவு-மிகுதியாவாழ்த்தவாஞ்சை
புனைந்தாள் அதில்-நனைந்தாள்
சுகமாமவ்வாழ்த்தைக்கேட்கத்-தகுந்திரௌபதியருளைச்
சொரிந்து நகை-புரிந்து

௨௮. நேயமாயிருந்தாள்மார்க்கண்-டேயர்சொன்னகதைகேட்டு
நீண்ட இன்பம்-பூண்ட
மாயவனம்முனியருள்-தோயவிடைபெற்றபின்பிரா
மணரும் நீதி-யுணரும்

௨௯. பஞ்சவரும்விடைதர-வஞ்சிசத்தியபாமையுடன்
பலரும் முக-மலருஞ்
சஞ்சலமில்துவாரகையை-நெஞ்சிலெண்ணியேகத்தேர்மேற்
சார்ந்தான் போய்ச்-சேர்ந்தான்

௩௰. ஆதரவாம்புவிமீதிற்-றீதுறச்சௌனித்திறக்கும்
அவஸ்த்தை தீரச்-சிவத்தைக்
காதல்கொள்மார்க்கண்டருபா-நீததன்மனுக்காசிகள்
புகன்றார் உட-னகன்றார்

## ஐவரிடம்பிராமணன்செல்லல்.

விருத்தம் ருஅ.

இங்கரியபாண்டவர்காமியவனத்தி
லேயிருந்தாரஸ்த்தினாபுரத்தில்வாழு
மங்களவேதியனொருவனவர்மேவும்
வனத்தினிற்சென்றேன்காற்றிலிருளிற்கானிற்
றுங்கவுருமாறிடப்பாஞ்சாலியோடு
துயர்கொள்வனவாசமுறுஞ்செயலைக்கண்டு
பொங்கமுடன்விழியில்லானிடம்வந்தெய்திப்
புகன்றிட்டானவ்விடம்விட்டகன்றிட்டானே.

---

## அந்தணன்சொல்லால் குருடன்நடுங்கி விதுரனோடு புலம்பல்.

விருத்தம் ருசு.

அந்தணன்சொல்லக்கேட்டதிருதராட்டிரன்
அகம்நடுங்கிமெய்சோர்ந்துபின்தெளிந்து
பந்தமொடுபஞ்சணையிற்பள்ளிகொள்ளும்
பாண்டவர்காட்டிற்பாறையிற்படுக்கும்
விந்தையையுந்தம்பியுடனோதிமேலும்
விழியிழந்தோனுனளன்சொற்கேளாமைந்தர்
நைந்ததமாப்போகவந்ததேபொல்லாத
நாளென்றான்விதுராநீகேளென்றானே.

ருக. தரு-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

விதுராநீகேளென்றானே-வஞ்சகத்திருதராட்-டிரனென்னுங்கோமானே

அநுபல்லவி.

மதியிலாஎன்மைந்தர்கள் வனஞ்சேரைவரும்உற்ற
வருத்தத்தினைப்பார்க்கிலும் வருத்தங்கொள்வார்சீர்பெற்ற
விதுரா

சரணங்கள்.

க. மகிழ்ந்துகுடிக்கச்சல-மில்லாதகாட்டைத்தாண்டி
வருந்தியழகியகை லாச-நெடு
மலையைச்சார்ந்தமர்வெல்ல-ஈசன்பாசுபதாஸ்த்திரம்
வகையாய்பெற்றுவிண்சேர்ந்து லாச
மிகும்நிவாதகவசர்-காலகேயரைமாய்த்து
விஜயன்புகழ்கொண்டதை நேச-மொடு

வீணைநாரதர்சொல்ல-என்வயிற்றினிலிடி
வீழ்ந்ததென்செய்குவேன்வி லாச
விதுரா

௨. மந்தாரமலர்க்காகத்-துணிவுடன்போனவீமன்
வழியிலனுமான்தன்சி னேகம்-கொண்டு
மதத்தராட்சதரைக்கொன்-றளகேசன்சேனையையும்
மாய்த்திட்டபின்னுந்திரி லோகம்
சந்ததந்துதித்திடுங்-குபேரனுறவுங்கொண்டு
தருமந்தாரமலர நேகம்-பெற்ற
சமர்த்தென்மார்பைவாளாசப்-பிளக்குதெப்படியதைச்
சகிப்பேன்நடுக்குதென்றன் தேகம்
விதுரா

௩. மேலுந்தேவேந்த்ரன்தேவ-ரிருடிகள்முனிவர்கள்
மிகவுந்தௌத்தியங்கள் செய்ய-நல்ல
விற்பனமுஞ்சர்க்குணமும்-பெற்றூரவரிங்கு
மீண்டுவந்தாலென்சொல்லைப் பையக்
காலில்மிதித்துநடக்-கிட்டஎன்மைந்தர்களைக்
கைகழுவிப்போடவோர் நொய்ய-சிறு
கணையினுல்நாசஞ்செய்வா-ரெனநித்திரையில்லாமற்
கள்ளன்போல்விழிக்கிறேன் துய்ய
விதுரா

---

## சுயோதனன் குருடனுக்குத் தன்பலத்தைக்குறித்துப் போதித்துத் தேற்றல்.

விருத்தம் ௬௰.

விழியில்லானீதுரைத்துவிதுராநீமுன்
விளம்பியநன்மொழிகள்சத்யமெனவேசோர்ந்தான்
பழுதுறுமச்சேதியைச்சுயோதனன்பாற்
பார்த்தோர்கள்போயுரைத்தாரன்னோன்கேட்டு
அழிவுறுபொல்லாச்சகுனிகன்னன்துச்சா
தனனருமைத்தம்பியர்கள்சூழவந்தே
இழிவுறுதன்மொழியினைக்கண்ணில்லான்காதில்
ஏற்றுவானவன்துயரைமாற்றுவானே.

௬௨. தரு-இராகம்-பியாகடை-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயாசஞ்சலமேதுக்கென்னைவெல்ல-பாரில்-ஆராலேமுடியும்நல்ல

அநுபல்லவி.

ஐயாசிங்கம்பானைக் கிடையாதொன்னலரை
அஞ்சாமல் மோதுவேன்
பஞ்சாக ஊதுவேன்
ஐயா

சரணங்கள்.

க. அசுவத்தாமனென்ன ஒருவீஷ்டுமனென்ன
அருட்கன்னனென்ன சிலைக்குருவென்ன
இசையும்ராஜரென்ன மதத்தநால்வகைச்சேனை
என்னயென்தம்பியர் மற்றவரென்ன
சஜங்களொத்தபல வந்தர்களவர்கள்வீரங்
கண்டால்நமன்கூட அண்டானெதிர்நாட
ஐயா

உ. அவரிருக்கும்பொழு தென்னையிப்பிறப்பில்
ஆரெதிர்த்திடக்கொள்வார் திடச்சித்தம்
புவியிற்சாகேன்தேவர் வரம்பெற்றேனுன்கோபம்
பொருந்திச்செய்திடிற்றண்டா யுதயுத்தம்
எவர்தப்பிப்பிழைப்பார்கள் பிரம்மதேவனென்னினும்
ஓடுங்கானேதான்கண்டு நடுங்கானேஉயிர்விண்டு
ஐயா

௩. தினந்துதிபெறுமீசன் அருளும்பாசுபதாஸ்த்திர
வலியதனுலும் மிகுநல்ல
கனங்கொண்டிடுதேவர்கள் அன்புடனுதவிய
கணையின்வலியினுலும் நமைவெல்ல
மனங்கொண்டிடுபஞ்சைப் பாண்டவரையென்கையில்
மாய்க்கிறேன்கொசுப்போலே தேய்க்கிறேனொருக்காலே
ஐயா

---

## துரியன்சொல்லால்குருடன்மகிழப் பின்புசோலையிற்சென்று யோசித்தல்.

விருத்தம் ௬௪.

இந்தவகைசுயோதனன்பிதற்றக்கேட்ட
இருவிழியிலாப்பேயன்றனதுபுத்ரன்
அந்தஐவர்தம்மைவென்றுப்போற்சந்தோஷம்
அடைந்தெவரும்அரண்மனைக்குச்செலவுத்தாரந்
தந்தனனேர்சோலையிலன்னேர்போய்க்கொக்கின்
றலையில்வெண்ணெய்வைத்ததனைப்பிடிக்களண்ணுஞ்
சிந்தையுறுமூடரைப்போல்யோசனைக்குட்
செல்லுவாரவரவர்கள்சொல்லுவாரே.

௩௩. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

சோலையில்யோசனை-செய்திடுமுடிமன்னர்-சொன்னதந்திரங்கூறுவேன்

அநுபல்லவி.

நாலுபேர்நகைத்திட வரும்விதிக்கொருக்காலே
காலில்விழுந்துவரம் பெற்றுக்கொண்டதுபோலே
சோலையில்

சரணங்கள்.

க. துரியோதனனங்கு-கன்னன்சகுனிமாமன்
துச்சாதனனிவரை நோக்கி-வில்வி
துரனென்தந்தையுடனே-ஊமைப்பாண்டவர்சேல்போற்
றுள்ளிநமதுயிரை நீக்கித்
தாணியாள்வாரெனவே-பொய்யைமெய்போல்போதித்துச்
சஞ்சலவெள்ளத்தினிற் றேக்கி-விடுஞ்
சமர்த்தழிந்திட இங்கே-என்றனக்கொருசூது
தனைநீங்கள்நன்றாகச்சீர் தூக்கி
உரைத்திடவேணுமென்றான் அந்தக்கண்மூடிதுள்ள
கரைத்தாகாசத்தில்வழி காட்டத்தாமும்நாண்கொள்ளச்
சோலையில்

உ. கன்னன்சுயோதனனைப்-பார்த்துத்தருமன்புயங்
களிலிருந்தலட்சுமி நீங்கி-புன்
கருணையுடனேசேர்ந்தாள்-சமஸ்த்தராஜருமுன்னைக்
கண்டுபணியவொன்று ரேங்கி
மன்னும்வனம்போய்ச்சேரச்-செய்தநின்கீர்த்தியுன்
வளநகர்தனிலோங்கினாற் போல
வறட்டுப்பாண்டவர்முன்-ஓங்கவுன்ஸ்த்ரீகளொடு
மகிழ்ந்துநீசென்றுற்றுயர் தாங்கி
வன்னமயில்திரௌபதி வாடவேமுகங்கூசி
அன்னோர்தைதவனம்விட் டகல்வாரென்றான்கைவீசிச்
சோலையில்

௩. அதைக்கேட்டஅரவகே-தனனுனினைத்தபடி
அப்பாநீசொன்னாய்நெஞ்சில் ஆய்ந்து-நல்ல
அறிவில்மிகுமென்பிதா-விடைபெற்றேகுமுபாயம்
அதைசொல்லென்றான்சகுனி வாய்ந்து
பதிதனும்ஓரிடையன்-தனையுன்தந்தையிடத்தில்
பரிந்துகூட்டிப்போய்காட்டில் மேய்ந்து-வாழ்நம்
பசுக்குலத்தினைம்ருகந்-துன்பஞ்செய்வதைக்காதில்
படித்துத்தாரம்பெற்றன்பு தோய்ந்து
சதிராச்செல்லலாமென இசைந்தவரவர்வாழும்
புதுமனைசேர்ந்தார்சூரிய னும்மறைந்தான்கார்சூழும்
சோலையில்

குருடன் முன்னிடையனைக் கொண்டேகுதல்.

கொச்சகம் ௩.

மூறுநாள்சர்ப்பக்கொடியோன் மற்றோருங்கூடியொன்றும்
அறியாதவோரிடையன் தன்னையவர்தம்மோடு
முறையாகவேயழைத்துக் கொண்டேகிஅந்தகன்முன்
துறையாகவேவிடுத்தார் சுயோதனனுஞ்சொல்வானே.

---

குருடனுக்குப் பசுக்களை மிருகங்கள் நாசப்படுத்துதென்றல்.

கொச்சகம் ௪.

தந்தையேகேள்நமது சாதிப்பசுக்குலங்கள்
நைந்திடம்ருகங்கள்நிதம் நாசப்படுத்துதென்றே
இந்தவிடையன்புகன்று னென்னச்சகுனியுன்றன்
மைந்தர்கள்போய்வல்விலங்கை மாய்க்கில்நலமென்றானே.

---

சகுனிமொழியால் குருடன் கோரக்ஷணைசெய்ய புத்திரர்களை ஏவுதலும், துரியன்முதலானோர் காட்டுக்குச்சென்று கந்தருவனால் அபசெயப்பட்டதும்.

விருத்தம் ௬௨.

சகுனியீதுரைத்தான்கண்ணிலான்கேட்டுத்-தகுந்தநம்பசுவினநாளுந்
தழைத்துவாழ்ந்ததைதவனத்தினிலேவர்-சம்பிரமமாகவேயிருப்பார்
சதியறியாவென்மைந்தர்செல்லுதலுத்-தமமலப்பாசுபதாஸ்த்ரந்
தன்னையேவாங்கிவந்திருக்கின்றார்-சமர்க்கவர்நேர்ந்திடில்நமக்கே
அகமதிற்றுயரம்விளையுமென்றென்ற-னஸ்தியிலேசுரமிருக்கும்
ஆகையாலோர்மன்னவன்றனையனுப்பி-ஆக்களைக்காத்திடச்செய்ய
லாமெனவுரைத்தானவன்குடிக்கனர்த்த-அஷ்டமச்சனியெனவாய்த்த
அரியஅச்சகுனிதிருதராட்டிரனை-யதிவிரைவாகவேநோக்கிச்
செகம்புகழ்நினதுபுத்திரர்காட்டிற்-றிரிந்திடுமைவர்முன்செல்லார்
சென்றபோதிலுமன்னோர்களுஞ்சபையிற்-செப்பியநிலைமையைத்தப்பிச்
சிலையெடுத்துப்போர்புரிந்திடமாட்டார்-தீமையைவிளைத்திடுமிருகத்
திரளினைக்கொன்றுபசுக்களைக்காத்தல்-செய்திடல்மன்னவருக்குத்
தகுந்திடுநீதியென்பதைக்குறித்துன்-றவத்தினால்வந்தபாலகரை
க்ஷணத்தினிலேவுவாயெனஅற்பர்-தம்மொழிக்குளமிகமகிழ்ந்து
தயிரினிலழகுபார்த்திடும்வேந்தன்-சகலரும்போய்த்துறையாகத்
தன்னிடம்வந்துசேரவுத்தாரந்-தந்தனனவர்களேகினரே.

௩௪. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

அவசரத்துடன்போன-அன்னோர்க்குநடந்திட்ட-அதிசயந்தனைக்கேளு.

அநுபல்லவி.

நவிலுமவரவர்கள் ஸ்த்ரீகள்யானைமீதிலும்
ராஜர்கள்திவ்யநெடுந் தேர்களின்மீதிலும்
புவியிற்கடல்போற்சூழச் சுயோதனன்தைதவனம்
போய்ப்பசுக்குலங்களைப் பார்த்துமகிழ்ந்தான்மனம்

அவசரத்

சரணங்கள்.

க. நற்பசுக்களைமேய்க்கு-மிடையர்க்குவெகுமதி
நல்கிஅன்றுராத்திரி யிருந்து-மறு
நாள்ம்ருகவேட்டையாடிக்-கொண்டந்தமூலமாக
நயகுணஸைவர்நெஞ்சந் திருந்து
அற்புதஇடஞ்சேர்ந்தா-னவரொன்றுமறியார்போல்
அரியஎக்யவேலையிற் பொருந்து-நெறி
அதிலிருந்தாரோர்சோலை-கண்டதுரியோதனன்
அமுதச்செவ்வாயினூறல் விருந்து
பொற்பாகத்தருணஸ்த்ரீக ளுடன்ஜலக்கிரீடையங்கு
புனிதமாச்செய்யஎண்ணிக் காவலாகவேதங்கு
விற்பனக்கந்தருவரைப் போக்கவேயொருக்காலே
மேவுந்தன்னேவலாளர் தமைவிட்டான்சூதினாலே

அவசரத்

உ. அன்னவர்போய்ச்சிலகந்-தர்வரிருப்பதுகண்டு
அதட்டிப்புவியைக்கொடி கட்டி-என்றும்
ஆள்சுயோதனராஜன்-வந்திருக்கின்றானீங்கள்
அகலுமென்றாரவர்கை தட்டி
சின்னமனிதர்நீரெம்-முன்வரலாமோவென்று
சிரித்தார்ச்சேதிதனை மட்டி-வேந்தன்
செவியில்நுழைத்தார்பின்னும்-பலரையேவினனந்தத்
தீர்க்கமுழுமூடர்போய்க் கிட்டி
உன்னதவ்வலாளர் முன்னுங்களுக்குப்பைய
உரைத்தமன்னன்மங்கைய ருடன்ஜலக்கிரீடைசெய்ய
தன்கருத்தினிற்கொண்டா னீங்களேகுங்கோளென்று
சமர்த்தாச்சொன்னதற்கவ ருரைத்ததைச்சொல்வேனன்று

அவசரத்

ந. துரியோதனன்தூதரைக்கந்-தருவர்கள்நோக்கியுங்கள்
சுயபுத்தியைத்தாரைவார்த் தீரோ-எங்கள்
துரைசித்ரசேனன்மாத-ருடன்ஜலக்கிரீடைசெய்யுந்
துறையிதல்லவென்றுபார்த் தீரோ

அரியதன்பலமுந்தன்-னெதிரிபலமுஞ்சற்றும்
அறியாவறிவைமேற்போர்த் தீரோ-சிறு
அணுமலையைச்செயிக்கக்-கனவுகண்டதையுங்கள்
ஆலோசனையிற்கோத் தீரோ
விரைவிற்போய்விடுங்களி தெங்கள்மன்னன்காதினில்
விழுந்தாலுங்கட்கிங்கேயோர் அரைநொடிப்போதினில்
வரும்நாசகாலமென்றார் இச்சேதியினையந்த
வஞ்சகப்பாவியுடன் தூதர்போய்ச்சொன்னார்முந்த
அவசரத்

ச. அதைக்கேட்டஅரவகே-தனன்வீணைபாடுவோர்
ஆயுதபாணிகளா நேர்ந்து-நம்மோ
டமர்செய்பவரெனவே-சீறித்துச்சாதனனுக்
கறிவிக்காமலுலகம் பேர்ந்து
சிதறப்போர்செயமற்றத்-தம்பியர்க்குக்கண்காட்டியக்
கந்தர்வரிருக்குமிடஞ் சார்ந்து-நெஞ்சந்
திடுக்கிட்டவர்களோட-அடுத்துத்துரத்தியங்கு
திகழ்தடாகத்தைநீங்கள் சேர்ந்து
பதனமாகவளைத்துக் கொள்ளுங்கோளென்றுநயம்
பாடுமப்பஞ்சைகட்குத் தேவேந்திரனபயஞ்
சதிராத்தந்துபோர்செய்தா லுஞ்சொற்பவாளிவிட்டு
சூதணத்தில்வெல்லுவேனென்றுங் குதித்திட்டான்மதிகெட்டு
அவசரத்

ரு. சூதுபுரியும்அண்ணன்-சாடையறிந்ததம்பியர்
சுந்தரமேருங்குலுங்க வில்லை-வந்தித்
துடித்துக்குணத்தொனிசெய்-தெதிர்ந்தார்கந்தர்வர்பார்த்துத்
துணிவதைக்கொண்டுகருங் கல்லை
மோதினாற்குணமுண்டோ-இத்தடாகத்தினோரம்
முளைக்கும்புல்லைமிதித்தால் தொல்லை-வினை
மூள்வதுபோலுமக்குத்-துயர்வரும்நீர்போமென்று
மொழிந்தாரவர்கள்சொன்ன சொல்லை
காதகச்சுயோதனன்தம் பியர்கள்கேளாமற்சித்தங்
கனல்போற்கொதித்துச்சரம் விடஇவர்மெய்யில்ரத்தஞ்
சிதக்கடல்போற்பாயப் போய்ச்சேனாதிபரோடு
செப்பினார்குளிக்கப்போய்ச் சேற்றைப்பூசிக்காடு
அவசரத்

## கந்தருவசேனாதிபதிக்கும், துரியோதனாதிகளுக்கும் யுத்தம்.

விருத்தம் கூஙு.

அம்படியுண்டிடுகாவலாளரேகி
அரியதஞ்சேனாபதிக்குச்சுயோதனன்றன்

தம்பியர்தங்கொடுமைசொல்லஅன்னோர்கேட்டுத்
தருந்திடுவில்லாளிகளையுடனேபார்த்து
வம்புசெயுமிராஜர்களைநாசமாக்கி
வாருமெனஅவர்தளத்திற்கடிதில்வந்து
செம்பிரமன்னவர்மேற்சகியாக்கோபங்
கிளைக்கின்றார்கரேவெம்போர்விளைக்கின்றாரே.

௩௫. தரு-இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

மூண்டுகொண்டதேசண்டை-வெகுபேருடல்
மாண்டுகொண்டதேசண்டை.

அநுபல்லவி.

நீண்டபுகழ்ச்சுயோதனன் தம்பியர்சேனைகளும்
நிகரில்கந்தர்வசேனு திப்ரேவுசேனைகளும்
ஆண்டுராவணன்விட்ட மூலபலம்போற்கூடி
அருவடவார்க்கினியுங் கலங்கக்கோபத்தைநாடி
அலைகடலடைபட-வுயர்பலநெடுவரை பேர்த்துத்-துலங்கக்கட்ட
அருள்புரிரவிகுல-பதியெனவ்ளர்புகழ் போர்த்து-வருமிராமன்
திறமொடுகாமதி-லணிதருதிணிசிலை பார்த்து-மிகவுநாணித்
திகில்கொளஅவரவர்-கையிலொளிர்தனுசது சேர்த்துச்-சூழிருளோட்டுஞ்
செங்கதிர்தங்கிய விண்டலமுந்திசை
எங்கும்நடுங்கிட வெங்கனல்கொண்டொளி
செறியுமஸ்திரம்விட் டனன்புவிபதறிட
அறையுமஷ்டவெற் புகள்கடல்கதறிட
மூண்டு

சரணங்கள்.

௧. தரும்ஆதிசேடன்தனை யொத்த-பலஞ்
தனைக்கொள்கந்தர்வரிற்பிர சித்த
புகழ்ச்சேனுதிபர்நிய மித்த-விற்போர்
புரியும்வீரரும்பகை வைத்த
அகவஞ்சகச்சுயோதனன் தம்பியருக்குமுந்த
அணியணியாகநின்ற் ஸைனியமுமொன்னார்பிந்தச்
சிகரத்தேர்மீதும்யானை மீதுஞ்சென்றசூரருஞ்
செயப்பரிமீதிற்போன பேரும்படைவீரரும்
இகல்பொழுதினி-லரசர்கள்படைமுழுவது மழியக்-கந்தர்வர்வில்லின்
இன்முகிலெனை-அதிசினமொடுசரமழை பொழிய-அதனுல்நெடுங்
ககனமுமுலகமு-மறைபடநொடியினில் வழியப்-பெருகும்ரத்தக்
கடலினில்முழுகிவல்-லிரதமுட்வகைவகை யழியச்-சண்களிலுலே

கண்டகடுஞ்சின  அந்தகன்மைந்தர்கள்
சென்றரவின்கொடி  கொண்டவன்முன்புமு
கங்கறுத்துவிள்ளச்சின  மீறவே
தங்கள்நற்றமையன்ரத  மேறவே
மூண்டு

உ. அண்டும்பிரசண்டமன  வேக-மென்ன
அரவகேதனன்தேரில்  போகக்
கண்டகன்னனவன்பின்  னுகத்-தன்தேர்
கடிதிற்செலுத்திக்கொண்ட  மோக
தண்டின்முனையிற்சேர்ந்தான்  துச்சாதனனுந்துஷ்டத்
தம்பியர்சகுனியும்போய்ச்  சேர்ந்தாரெதிர்ப்பட்ட
மண்டலிகருஞ்சுயோ  தனன்தளங்களுமேத்த
வல்லசகந்தர்வரும்போர்  விளைத்ததைப்பார்த்த
மிண்டனெனுங்கன்ன-னண்டர்களு்பயந்  தேங்கத்-துடிதுடித்து
விஞ்சையர்செஞ்சிலை-யுங்கவசங்களும்  நீங்க-வில்லிற்சரங்கள்
கொண்டுசொரிந்திட-மங்களசந்தர்வர்  தாங்க-மாட்டாமலுடல்
குன்றியிலங்கிய-துங்கவுளம்பிரமை  தேங்க-ஓடிப்போய்நெடுங்
குன்றுகளஞ்சி  விலங்கவளர்ந்தொளி
துன்றுசௌந்த்ர  புயம்பெறுமிங்கித
குணமிகுந்ததங்  கொற்றவனோடுசொல்ல
அணைகடந்துமுந்  துக்கிரமவன்புல்ல
மூண்டு

௩. சித்திரசேனன்கண்ணிற்றீப்  பொங்க-தேரிற்
செல்லநமன்மனங  டுங்க
வெற்றிக்கொடித்தேர்க்காரர்  சிங்க-மென
விரைவிற்சூழ்ந்துவந்தார்கள்  துங்க
முற்றகந்தர்வராஜன்  படையிற்சிலபேரிட்டி
உலக்கைவேலம்பாற்சுயோ  தனன்தளங்களைவாட்டித்
தத்தளித்திடமாய்த்தார்  துச்சாதனனுஞ்சர்ப்பத்
தனிக்கொடியோனுஞ்சகு  னியுங்கன்னனும்நல்விற்ப
னத்தினிலுயர்பல-வாசருமொருமுனை  சார்ந்து-கொலுமோர்கோடி
யஸ்திரம்விடாத-பதியொடுரதபதி  நேர்ந்து-போராடவினை
யிற்றிறமுடையவ-ரடுமெதிரிகள்பல  மோர்ந்து-கொளும்படிக்குத்
தைத்திடுகணைமழை-பொழிதலில்மனவலி  சார்ந்து-சுயோதனனுடன்
தங்கிநெருங்கு  தளங்கள்முறிந்திட
அங்கதுகண்ட  கன்னன்படர்விஞ்சையர்
தமதுகரத்தில்நீ  ளம்புகள்தைத்திட
விமலசித்ரசே  னன்சினமுற்றிட
மூண்டு

௪. வெங்குருதிதரையில் — பாய-மக
மேருவுந்தலைசிழாய்ச் — சாயச்
செங்கனலிருகண்ணில் — தோயச்-சித்ர
சேனனுங்கன்னனும்வின் — தீய
பொங்கிச்சரம்விடுத்தார் — சித்ரசேனன்தேர்பொடிப்
பொடியாகக்கன்னன்கோடி — வாளியேவினனிடி
யுங்கலங்கச்சித்ரசேனன் — வேறுதேரில்மேவி
யுகாந்தகாலருத்ரன்தனைப் — போற்கோபாக்கினிதாவி
வெங்கள்மிசையமர்-புரிவதைரவிமகன் — கண்டு-தேவாஸ்திரங்கள்
புங்கமுடன்விட-நொடியினிலவனும்வெ — குண்டு-தெய்வவாளிபெய்
தெங்கள்நல்லறுமுக-னடிகணை நிகர்கணை — கொண்டு-விடுத்துக்கன்னன்
பங்கமெய்திட-அவ-னணிசிலைகவசமும் — விண்டு-விழச்செய்தியானை
பம்பரமென்று — சுழன்றுசுழன்றிரு
கொம்புமழிந்து — மடிந்துருளும்படி
பன்னும்நீள்கணை — பின்னும்விடுத்திடக்
கன்னன்வேறுவில் — தன்னையெடுத்திட
மூண்டு

ரு. திறற்கன்னன்வாளிவிட்டுத் — துள்ளிச்-சித்ர
சேனனெற்றியிற்சோதி — யள்ளிச்
சொரியும்வீரபட்டத்தைத் — தள்ளி-மேலுங்
தொகையிலாச்சரங்கொண்டு — கொள்ளி
யெரிவதுபோற்கண்சிவந் — தவன்சாரதியைக்கொன்று
இசைவீணைக்கொடியையு — மறுத்திட்டான்வீரந்துன்று
அருஞ்சித்திரசேனன்றன் — னம்பைக்கன்னன்தேர்மேற்றூக்கி
அழித்தானவனோடிப்போய்விட்டான்கந்தர்வர்நோக்கிப்
பொருதியஅரசரி-லெதிர்படும்வரதுய — ருண்க-கந்தர்வராஜன்
புனிதஇரதமுறு-பிரதமைகளும்நகை — பூண்க-கட்டஅப்போது
பிரமைகொள்பொருள்கவர்-திருடர்களௌனமுகம் — நாண-அதுவல்லாமற்
பினுமரைநொடியள-வினிலமரர்கள்திரள் — காணச்-சுயோதனனையும்
பின்வருதம்பியர் — தங்களையுஞ்சுக
மன்னியமங்கையர் — தங்களையுந்துதி
பெற்றசித்திர — சேனனத்தேரில்கட்ட
உற்றபுட்பம்வா — ரித்தேவர்கள்கொட்ட
மூண்டு

---

## துரியோதனாதிகளைச் சித்திரசேனன் பந்தித்தேகும்போது அவன்சேனை தருமரிடம்வந்து பிரலாபித்தல்.

விருத்தம் ௬௪.

சித்திரசேனன்துரியோதனனைத்தம்பியர்
ஸ்த்ரீகளையுந்தாம்பணையிலெருதையுஞ்சீ

ருற்றபாசுக்களையுமொன்ருக்கட்டினற்போ
னுபர்தேரிற்கட்டிவிண்ணிற்போகும்போது
புத்தியிலாச்சுயோதனனேடமரில்நேர்ந்து
பொன்முடியுயானமும்போய்விட்டமன்னர்
சத்வகுணத்தன்மனிடஞ்சென்றுசெய்தி
சாற்றுவாரிவனைமிகப்போற்றுவாரே.

---

## துரியன்சேனை தருமனைச் சிறைநீக்கவேண்டலும், தருமனுக்கும் வீமனுக்கும் தர்க்கம்.

விருத்தம் ௬௫.

தன்மாகேளபகாரஞ்செய்தோருக்குத்
தகுமுதவிசெயிலவரைக்கொன்றதொக்கும்
உன்பொறுமைநாங்கள்சொல்லவசமோஐயா
உறுதுரியோதனன்முதலோர்களைமின்னுரைத்
தன்ரதத்திற்சிறைசெய்சித்ரசேனன்போகின்
ருனரியசிறைநீக்கென்ருர்கள்கேட்கு
முன்னமுதிட்டிரனிரங்கித்தனதுகையை
மோதுவான்வீமனெதிரோதுவானே.

௩௬. தரு-இராகம்-சௌராஷ்ட்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

தருமராஜனும்வீம-சேனனுஞ்சிலநேரந்-தர்க்கம் புரிந்தாரே.

அநுபல்லவி.

திருட்டுச்சுயோதனனுந்தம் பியரும்ஸ்த்ரிகளுந்தேரில்
இருட்டுவீட்டிற்குருட்டுக் கொக்கானதற்குப்பாரில்
தருமராஜ

சரணங்கள்.

௧. தன்மன்வீமனைப்பார்த்துத்-துரியோதனராஜனைத்
தம்பியரைஸ்த்ரீகளை மென்மேலே
மன்னுஞ்சித்ரசேனன்தன்-தேரினிலிப்போது
மடலொடியக்கட்டியே யொருக்காலே
சின்னபின்னப்படவே-கொண்டுவிண்மார்க்கமாகச்
செல்கின்ருனிந்தப்பங்கத் தினைப்போலே
துன்னுமெக்கதையிலு-முண்டோஅன்னோர்சிறையைத்
தொலைத்தால்நன்றெனச்சொன்னுன் அதனலே
தருமராஜனும்

௨. முரசக்கொடியோன்சொன்ன-வார்த்தைகளைமாருதி
முழுதுங்கேட்டவுடனே நீடு

தரணியிற்செய்யாத-காரியஞ்செய்துஷ்டர்க்குச்
சந்தேகமில்லாமலே சேடு
வருமென்றுமேலோர்சொன்ன-வசனம்பொய்த்திடாதென்றும்
மதத்தைக்கொண்டுதுள்ளிய மாடு
அரியபொதிசுமக்குஞ்-சித்திரசேனனோநாம்தான்
அண்ணுகேளென்முன்கோபத் தோடு
தருமராஜனும்

௩. தம்பிசொன்னதைக்கேட்ட-தருமன்பகைவர்வந்து
சரணடைந்திட்டால்புவி மீது
நம்பும்வேதஞ்சொன்ன-படிகாக்கவேணுமென்ன
நகைத்தேஅவ்வீமன்சேட்ட போது
பம்பகமாநீரிற்-றள்ளிவிஷத்தையூட்டிப்
பகர்வீட்டைக்கொளுத்தித்திரௌபதி மாது
வெம்பமானபங்கஞ்செய்-தோரைக்காக்களந்த
வேதமுரைத்துதென்முன்நல மோது
தருமராஜனும்

௪. வீமனிப்படிஞாயந்-தடுத்துச்சொன்னதற்கு
மிகவுஞ்சிரித்துதிட்ரன் அன்று
நேமமுடையராஜ-சபையினிலிருகண்ணும்
நெருப்புதிரும்படிக்கெதிர் நின்று
தாமசஞ்செய்யாம-லவரைக்கொல்வேனென்முய்
தருமன்கந்தர்வர்தமைக் கொன்று
பூமியிற்புகழ்பெற்று-னுன்றன்பிரதிக்கினை
போம்வழியேதென்முன்நயந் துன்று
தருமராஜனும்

---

## தன்மனுடன்வாதாடும் வீமனைத் தனஞ்சயன் தடுத்தலுஞ் சுயோதனன் சிறைமீட்டலும்.

விருத்தம் ௬௬.

தன்மனுடன்வாதாடும்வீமன்றன்னைத்
தனஞ்சயனும்வணங்கிநமதண்ணன்சொல்லே
இன்னமுதமதைமறுக்கலாமோவென்று
இணையில்சர்ப்பக்கொடியோனைவிடுவித்திட்டால்
நன்மையென்றுஞ்சொன்னளவில்வீமன்கிரீடி
நகுலன்சாதேவனிவருளமிசைந்தே
அந்திமிஷம்படைகளொடுமன்னர்தேர்மேல்
ஆகின்முர்அதிவிரைவிற்போகின்முரே.

௬௭. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

அந்தநால்வருஞ்சென்றதும்-நடந்தகாரியமும்-அன்பினுற்சொல்லுவேனே

அநுபல்லவி.

அந்தநால்வரும்ரத மீதில்நெருங்கக்கண்ட
அரியவிஞ்சையர்களிற் சிறந்தபேர்கள்ப்ரசண்ட
சுந்தரவில்லேவளைத் துச்சரங்களைத்தொட்டுச்
சோணைமேகம்போற்பொழிந் தாரமருக்குட்பட்டு
அந்த

சரணங்கள்.

௧. நலமிகுங்குந்திமைந்தர்-களும்வில்வளைத்துக்கொண்டு
நண்ணுங்கந்தருவரை நோக்கி-எங்கள்
நயகுணத்தன்மராஜ-னனுப்பவந்தோமொன்னுரை
நாளுஞ்சண்டையிலுயிர் போக்கி
உலகாளுமெங்கள்குல-மன்னர்களைஸ்த்ரீகளை
ஒருதுரும்பாமதித்துத் தூக்கித்-தேரில்
உறக்கட்டிப்போவதுமக்-கழகாஆகையினுலே
உடனேஅவர்சிறையை நீக்கி
நிலமிசைவிடும்விடா விட்டாலுங்களையிந்த
நிமிஷம்எங்கள்கைவாளிக் கிரையாக்கிமேலுமந்த
வலியசிறைகொண்டேகு வோமென்றாரவர்கேட்டு
வல்லிரும்புண்டசலந் திரும்பாதென்றூர்சீர்காட்டு
அந்த

௨. அந்தமொழியைக்கேட்ட-இவர்விஞ்சையர்கள்மதம்
அடங்கக்கைகால்கள்மார்புங் கிழிந்து-ரத்த
மாயோடச்சரம்பெய்து-மேலுமன்னோர்மறைந்திடா
மற்கண்களிற்செந்தீ பொழிந்து
சிந்திக்கொணுதசரக்-கூடுகட்டினூர்சித்ர
சேனன்மனவலியும் அழிந்து-வழி
தெரியாமலிப்பாணங்கள்-தனஞ்சயன்தன்னதென்று
தெரிந்துதேர்விட்டுக்குதித் திழிந்து
வந்துகிரீடியைக்கட்டிக் கொண்டனனன்புதாங்கி
மதவீமனுந்தம்பியரும் அப்போதேகோபம்நீங்கி
விந்தைகொள்ளதங்கள்விட் டிறங்கிப்பரிவாற்கண்டு
மிகமகிழ்ந்தாரொருவர்க் கொருவர்தழுவிக்கொண்டு
அந்த

௩. அத்தருணத்திற்சித்ர-சேனன்குந்திமைந்தர்மீ
தருளுற்றுங்களைக்காட்டில் ஓட்டி-மேலும்
ஆணவங்கொண்டுங்கள்பால்-வந்தோரைஎன்றன்தேரில்
அரும்பிணையல்மாட்டைபோல் பூட்டித்
தத்தளிக்கநான்கொண்டு-போம்போதுநீர்மறிக்கத்
தகுமோஇன்றைக்கவரை வாட்டி-யுன்
தந்தையிந்திரன்சொன்ன-படிசிறைசெய்தேனீங்கள்
தடுக்கலாமோகோபத்தை நாட்டி
முற்றுமுங்களைச்செய்த தீமையைமறந்தாலும்
மூடர்பாஞ்சாலியைச்செய் பங்கத்தையெக்காலும்
உத்தமரேமறக்க லாமோநீர்சேனையோடும்
உறையுமிடம்போய்ச்சேருங் கோளென்றான்க்ருபைநாடும்
அந்த

௪. அதைக்கேட்டகிரீடிநகைத்-துச்சித்ரசேனனைப்பார்த்
தையாஎன்னண்ணனருள் பதித்துச்-சொன்ன
ஆக்கினையினைத்தள்ள-லாமோஎன்னுடன்கூட
அச்சுயோதனன்சேனையுங் கதித்து
இதமாவரநீயும்வந்-துதிட்ரனுக்குச்சொல்லென்றான்
எழிற்சித்ரசேனனுஞ்சம் மதித்து-தன்
இணையிலாச்சேனையுடன்-தன்மனிருக்குமிடம்
எய்தினனவன்துள்ளிக் குதித்துத்
துதிசேர்கந்தர்வராஜன் தனைத்தழுவியந்நேரம்
துய்யஆசனமீதி லிருத்தியேவுபசாரம்
சதிருடன்சொன்னான்சித்ர சேனனதைக்கேட்டங்கு
தன்சேதிதனைச்சொல்லத் தொடங்கினான்செயந்தங்கு
அந்த

௫. தன்மனைச்சித்ரசேனன்-பார்த்துங்கள்பகைவரைத்
தருமிந்த்ரன்சொற்படிக்கே யின்று-என்
றன்தேரிற்சிறைசெய்தே-னிடையில்விட்டுவிடுவுத்
தமமாவொருகாலிலே நின்று
அன்றுமைச்செய்ததீமை-மறந்தாலுந்தந்தைவாக்யம்
அதைக்கடந்திடலாமோ என்று-கனி
வாய்ச்சொன்னனதைக்கேட்ட-தன்மன்றந்தைவாக்கியம்
அதிமுக்யமதிலுஞ்சீர் துன்று
உன்வாக்கியமுமுக்யஞ் சுயோதனன்சிறையான
உடன்தேசராஜர்சொன்ன ரதைக்கேட்டுப்பிராணனுன
என்தம்பியர்சிறைமீட்கு முன்தாகசாந்திசெய்ய
இசையேனெனச்சத்தியங் கூறினேனென்றான்துய்ய
அந்த

சு. தருமன்சித்ரசேனனுடன்-பின்னுமென்றம்பியர்
சத்தியத்தைக்காத்திட யுத்தம்-நலஞ்
சாருமுன்னுடன்செய்திட்-டார்களென்றுவிரதந்
தனக்கிடர்வாராமலுன் சித்தம்
இரங்கிரட்சித்திட்டா-லுந்தள்ளிவிட்டாலும்
என்பாக்கியமென்றுமுழுப் பித்தம்-கொண்
டெதிரிட்டுச்சமர்செய்து-முனைகெட்டச்சுயோதனன்மீ
தினிலிருக்கின்றபெருங் குற்றம்
விரைவில்மறந்துசிறை நீக்கென்றான்புகழ்பெற்ற
விஞ்சையராஜன்தன்மன் றனைப்பார்த்துவலியுற்ற
தாணியையாள்வாயென வாழ்த்தியச்சிறைதீரத்
தயவுசெய்தவனகர் தனக்குச்சென்றான்மாவீர
அந்த

---

## சிறைநீங்கி உயிர்விடப்போனச் சுயோதனனைக் கன்னன் தடுத்துத் தைரியங்கூறல்.

விருத்தம் சுஎ.

சித்திரசேனன்விஞ்சையருடனே-சென்றனன்ஸ்த்ரீமுதலோர்தஞ்
சிறைவிடுத்திட்டதருமபூபதியத்-தீயனுஞ்சுயோதனன்றன்னை
முற்றுமன்பாகநோக்கிமூடர்க்குள்-மூடருஞ்செய்திடாவேலை
முறையெனஎண்ணிச்செய்யயேன்துணிந்தாய்-முதிர்சினப்புலியெதிர்நிற்
உற்றவன்பிழைத்துவந்திடுவானோ-வுனதருஞ்சேனையோடேகி [க
உத்தமனகடந்துகொளென்று-னெப்பிலாச்சோலையிலவன்போய்
இத்தரணிக்குளென்னுயிர்தரியே-னெனத்துயர்கொண்டனன்போரில்
இரதமதழிந்தகன்னனும்பாவி-யிடத்தினிற்சென்றுபேசினனே.

௩அ. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

கன்னராஜனுந்துரி-யோதனனுஞ்சோலையிற்-கனிவாகப்பேசினரே

அநுபல்லவி.

முன்னம்அமரினிற்றேர் முறிந்தேஓட்டம்பிடித்த
பின்னடந்தகாரியத்தின் பேச்சைக்கேட்டுத்துடித்த
கன்னராஜ

சரணங்கள்.

க. துரியோதனனைக்கன்ன-னோக்கித்தான்சமர்வெல்லச்
சுகுணவிகர்னன்றேரை விட்டுக்-கொண்டு
பாபாப்புடன்போம்போ-தருவிபாயுஞ்சலத்திற்
பகருமிரதம்புதை பட்டு
புரவியும்உதவாமற்-போய்வாடித்தண்ணீர்வற்றிப்
போனபின்வந்தேனீபோ ரிட்டுக்-கந்

தருவரையெப்படி-செயித்தாயென்றனனந்தத்
தீயன்சினமவர்கள் தொட்டு
அரும்வெற்றிக்கொண்டுடன்தே ரதிற்கட்டிச்சென்றுரென்றுன்
தருமன்சொற்படியன்னேன் தம்பியர்கள்மீட்டாரேன்றுன்
கன்னராஜ

உ. அந்தமொழியைக்கேட்ட-கன்னன்சகுனிதம்பிய
ரனைவருமலர்முகம் வாடித்-தங்கள்
சிந்தைவருந்தினர்க-ளவர்க்குத்துஷ்டன்தைரியஞ்
செப்பிக்கன்னனைதிர் நாடிக்
குந்தலாம்பாண்டவர்கள்-பழிக்கநாடாள்வதிலுங்
காட்டிலிறக்களண்ணங் கூடி-விட்டேன்
சுந்தரத்துச்சாதன-னுலகாளஅன்னேனுக்குச்
சூட்டிநீசொலஎண்ணந் தேடி
எந்தவேலையுஞ்செய்வித் தென்றன்றந்தைமற்றேருஞ்
சந்தோஷிக்கும்நடக்கை தனைக்கொள்ளென்றுன்நேருங்
கன்னராஜ

௩. அப்போதுசுயோதனன்-றன்னைக்கன்னராஜன்பார்த்
தப்பாநீயுயிர்மாய்த்தா லாரு-நீண்ட
இப்புவிதனையாள்வோர்-நீபோனபின்புநா
னிருந்திடிற்கொளும்நம ஞரும்
ஒப்புவானேதண்ணீ-ரற்றபினுந்தாமரை
யுண்டோஅதனையெண்ணிப் பாரு-கைப்
புண்ணினுக்குக்கண்ணுடி-யையெடுத்துப்பார்ப்பதேன்
கந்தருவர்கள்தங்கள் பேரு
எப்போதுமில்லாமலே யிச்சேனையுடன்தாவி
அற்பமாக்கொல்வேனுன்சொல் லழகல்லவென்றுன்மேவி
கன்னராஜ

---

## கன்னன்தேற்றியுங்கேளாமல் உயிர்விடச்சென்ற சுயோதனனைப் பாதலம்வாழ்நிருதர் சத்தியென்னுந்தேவதையால் வருவித்துத் தங்கள்வரலாற்றைக் கூறித்தடுத்தல்.

விருத்தம் ௬௮.

கன்னனிவைசொல்லியுமப்பாவிவாடிக்
கடிதிறக்கத்துணிவுகொண்டானெவருந்துன்பந்
தன்னையுற்றூர்பாதலம்வாழ்நிருதரந்தச்
சங்கடந்தெரிந்தொருதேவதையையேவி
அந்நிமிஷமிவனைவருவித்துக்கொண்டங்
ககமகிழ்ந்தெல்லாரகசியங்களையுமிக்க
நன்மையொடுசொல்லநெஞ்சிலின்பந்தன்னை
நாட்டுவாரவன்துயரையோட்டுவாரே.

௰எ. திபதை-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

## கண்ணிகள்.

க. துரியோதனராஜனை-நிருதர்பார்த்துனேயிங்கே
நேசமுடன்வருவித்திடு காரியம்-தன்னைப்
பரிவாகக்கேள்நாங்க-ளிந்த்ரனுடன்சமர்
பண்ணும்பொழுததனிலதி வீர்யம்

உ. பெற்றஎங்கள்மன்னன்-மடிந்துவிட்டனனுங்கள்
பெரிதுந்துயர்வெள்ளமதில் வாடி-நெடுங்
கற்றையஞ்சடையீசனே-டெங்கள்குறைசொல்லிக்
கனத்தினையெப்போதுமிக நாடி

௩. அகமகிழொருவேந்தன்-தன்னையெங்கட்காக
ஐயாவுற்பவஞ்செய்யென்றோம் அந்த-முக்கட்
பகவன்கேட்டுங்கள்-குலத்துராஜனெழில்
படைத்தமுருள்தேகந்தலை சிந்த

ச. மடிந்துசுயோதன-னென்றிட-அரசனுய்
மண்ணிற்செனித்திட்டானலங் தங்கு-தேவர்
கொடுந்துயர்விளைத்திடு-நிருதரிவர்கள்பூமி
கொள்ளாதவகையாகஅங் கங்கு

௫. பிறந்திருக்கின்றார்க-ளென்றுமவருனக்குப்
பிரியமாயிருந்திடுவா ரென்றும்-இன்பஞ்
சிறந்திடுதேவரம்சத்தாற்-சிலராஜர்கள்செனித்
திட்டார்களென்றுநலந் துன்றும்

௬. தேவேந்த்ரனம்சத்தாற்-பாண்டுசுதராம்ஐவர்
செனித்தாரென்றுநீங்களொருக் காலே-உங்கள்
கோவானவனிடஞ்-சுற்றத்தினுடுசேருங்
கோளெனச்சொன்னுனைகை யாலே

எ. தருந்தளங்களுக்கெப்-போதும்நீயேவேந்தன்
சைத்ரதன்கன்னன்விண்பகை மூட்டு-தந்திர
சகுனிசோமதத்தன்-பகதத்தனிவர்நிருதர்
குலத்தினிற்பிரபல நாட்டும்

அ. செய்கையோர்வீட்டுமன்-துரோணனஸ்வத்தாமன்
தேவர்அம்சத்தைக்கொண் டேகி-நெடும்
வையகத்தினில்வந்தார்-வந்தாலும்போர்க்கவர்
மகிழ்வுடனமக்கருந்துணை யாகி

சூ. எல்லாவுதவிகளுஞ்-செய்வார்பாண்டவர்க்
கினியதேவாம்சையினைத் தாங்கி-வந்த
வல்லமன்னவர்துணை-யாகுவார்சிலநாளில்
வரவரமுதிர்ந்திடுபகை யோங்கி

௰. அவர்தமக்குநமக்கும்-யுத்தம்நடந்திடும்போ
தவர்களையுமவர்க் கான-ராஜர்
எவரையுஞ்சிதைப்போமத்-தேவேந்த்ரன்மாயையால்
எழிற்கன்னன்தேர்சேற்றிலே மானம்

௰க. அழியப்புதைந்துகந்-தருவர்செயங்கொண்டார்
அச்சூதுநடந்திடாமல் விட்டால்-தியாகம்
பொழியுங்கன்னராஜனன்-னவருயிர்நீங்கிப்போகக்
கொல்வான்விஞ்சையரெதிர்ப் பட்டால்

௰உ. தப்புவாரோஅவன்-கவசகுண்டலங்களைத்
தந்தைதேவேந்த்ரனதைக் கொண்டு-போவான்
இப்படிபலசூது-நடந்தாலுமுனைவெல்ல
எவராலாகுந்தேவர்களுங் கண்டு

௰௩. அஞ்சவொன்னலரைவென்-றுலகத்தையுன்வசம்
ஆக்குவோம்பிராணன்தனைப் போக்க-முற்றும்
நெஞ்சில்நீகொண்டதை-யறிந்தொருசத்தியால்
நிமிஷத்திலுன்னுயிர்தனைக் காக்க

௰௪. இங்கழைப்பித்தோம்-தேவதைநீமுனம்
இருந்திட்டசோலையினிற் சேர-கிருபை
தங்கிச்சேர்க்குமுன்றன்-றம்பியர்மற்றவரோடுந்
தகுமுன்னூர்போய்க்கு பேர

௰௫. சம்பத்தாவாழென்று-தேற்றியபின்சத்தி
தனைநிருதர்கள்மிகத்துதி செய்து-நானும்
வம்புசெய்மூடனைச்-சோலையிலேசேர்த்து
வாவென்றுரைச்சத்தியருள் பெய்து

௰௬. அவ்வண்ணமேகொண்டு-போய்ச்சேர்த்துவிட்டதவ்
அரவகேதனன்மகிழ்வது துன்ன-மிகு
செவ்வையாஅசுரர்சொல்-லியரகசியத்தினைச்
சித்தத்தில்மூலமந்திர மென்ன

௰௭. பதித்துத்தம்பியர்படை-களுஞ்சூழத்தன்னரும்
பதிக்கொருக்ஷணத்தினிலே மேவி-யன்பு
கதிக்கின்றதந்தைமற்றோ-ரையும்வணங்கிசிங்கா
சனமதிலுற்றுன்மகிழ் தாவி

## சுயோதனன் நகர்சேர்ந்து சிங்காதனத்திலிருக்கும்போது பீஷ்மர் அவனை ஏசுதல்.

விருத்தம் ௬௯.

முகபவுஷ்யங்கெட்டதுஷ்டளங்கேகண்ணை
மூடிக்கொண்டேபூனையுலகிற்பாலை
மிகவுரிசையாக்குடிக்கும்போதுதன்னை
வேறொருவர்பார்க்கவில்லையெனநினைக்கும்
வகையெனத்தன்சேதியெவரறிவாரென்று
மனத்தினிற்கொண்டரியசிங்காசனமேல்மிக்க
பிருவுடனிருந்தசுயோதனனைப்பீஷ்மர்
பேசுவாராஜர்முன்னேயேசுவாரே.

௩௯. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

துரியோதனனுவுன்கெர்வத்-தினையெங்கேதாரைவார்த்தாய்
துள்ளலையெங்கே தோற்றாய்

அநுபல்லவி.

அரைக்காசுக்குப்போம்வெட்கம் ஆயிரங்கொடுத்தாலும்
வருமோபிராணனைக்கட்டி வைத்திருக்கின்றாய்மட்டித்
துரியோ

சரணங்கள்.

௧. இடிப்பொடிந்திட்டகோழிக்-குரற்குழிகைலாச
மென்பதுபோலுன் வீட்டில்-நீ
சடுத்தம்பேசவழக்கிற்-கிழக்குமேற்களந்திடத்
தகும்புலிவாழுங் காட்டில்
அடிக்குமழையாற்சாகும்-ஆடுங்குதித்துப்போக
லாமோஇம்மாத்திரம் யுத்தி
அறிந்திட்டாய்த்துர்ப் புத்தி
துரியோ

௨. ஊமைக்குத்தெத்துவாயன்-உற்பாதபிண்டமென
ஒருகன்னனைச்சங் கார-ருத்திர
சாமியெனக்கனவு-கண்டாயேஅவன்வென்னீர்
தனில்விட்டிடுசிங் கார
ஆமையுயிர்க்குவரு-மருந்தத்துவந்துபட்ட
அவஸ்த்தையைக்கேட்டால் முட்ட
அகம்நடுக்குதே துட்டத்
துரியோ

௩. பசுபகலில்நிற்பது-தெரியாதமாலைக்கண்ணன்
பகரொருமையைப் பாதி-ராவில்
நிசமாக்கண்டுபிடிப்பே-னென்றாற்போல்விஞ்சையர்முன்
னேர்ந்துவீம்புக ளோதி

அசைவறக்கட்டுண்டதற்-கர்ச்சுனனில்லாவிட்டால்
ஐயோஉன்னூரைப் பார்க்க
அணுகுவாயோதுன் மார்க்கத்
துரியோ

## துரியோதனன்வயினவயாகஞ்செய்தல்.

விருத்தம் எ௰.

வீட்டுமன்கொதித்தேசியுமறிவில்லா
வேந்துதுச்சாதனன்கன்னன்
வினையனுஞ்சகுனிவெட்கமற்றிருந்த
விதந்தனையறிந்தகன்றிட்டான்
விதிப்படிசிலநாள்போனபின்பாவி
விரைவொடுகன்னனைப்பார்த்து
மேதினிதன்னில்ராஜசூயத்தை
மெச்சவேஐவர்செய்ததுபோல்
நாட்டில்நாஞ்செயஎத்திக்குநீவிஜயம்
நண்ணெனஅவனிசைந்திட்டான்
நாகவெங்கொடியோன்பீஷ்மர்மற்றோர்க்கும்
நவின்றனனவரும்வேதியரும்
ராஜசூயத்தைப்பார்க்கிலுமினிய
நன்மைசேர்வயினவயாகம்
நடத்தலாமென்றேஎக்கியசாலை
நல்லநாட்கொண்டமைத்திட்டுச்
சூட்டியமுடிமன்னவர்களையுடனே
தூதர்களால்வருவித்துத்
துரோணன்வீட்டுமனுதியர்சடங்குரைக்கச்
சுயோதனன்மகஞ்செயத்தொடுத்தான்
துரிதமாஐவர்க்குரைக்கவேதியனைத்
தூதுபோம்படிவிடுத்திட்டார்
தூயவந்தணன்போய்த்தருமனுக்குரைத்தான்
சுகுணவான்கேட்டெவர்துயரும்
வாட்டுமேலோர்கள்சொன்னநாள்கழித்து
வருதல்நன்றென்றனனந்த
மறையவனோடுவீமனூற்றுவரை
வதைக்கும்யாகஞ்செயநான்முன்
வருகுவேனென்றனந்தணனேகி
மதியிலாஅரவகேதனன்பால்
வகையுடனுரைத்தானவனுலக்ஷயமா
மதித்துயர்மகம்புரிந்தனனே.

## தருமர்கனவுகண்டு காமிகவனத்துக்குச் சகோதரர் பாஞ்சாலி இவருடன் ஏகல்.

விருத்தம் ௭௧.

வயினவயாகத்தையாங்கேதுஷ்டன்செய்து
மகிழ்வடைந்தானிங்குத்தைதவனமதுற்ற
நயகுணத்தன்மன்கனவிற்றிரளர்க்கூடி
நண்ணுமிருகங்கள்வந்தேதங்குலத்தை
இயனுறுவேட்டையில்மடித்தீர்நீங்களின்ன
மிருக்கும்விலங்குகளுயிரைமாய்த்திடாமற்
பயனுறும்வேறிடமதிற்போமென்றுசொல்லும்
படிகண்டான்கிருபைநெஞ்சிற்குடிகொண்டானே.

ம.அ. திபதை-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

### கண்ணிகள்.

க. இந்தவகைகனவு-கண்டதருமராசன்
எழிற்றம்பியர்திரௌபதி வல்லி-கேட்கச்
சிந்தையிரக்கத்தோடு-நாம்காமிகவனத்தைச்
சேர்வதுநலமென்று சொல்லி

௨. யாவருடனேயும்-போயந்தவனந்தனில்
எய்தினன்மதவீமன் அங்கு-சீர்
மேவுபன்னசாலை-யமைத்தானதிலெல்லோரும்
விருப்பமாஅதிபுண்யந் தங்கு

௩. முக்யவேமாதிகள்செய்-திருந்தார்பதினோராண்டும்
முறையாகக்கழித்துரு மாறி-நெஞ்சில்
மிக்கவருத்தத்தினை-யடைந்தார்தையறிந்த
வேதவியாசான்பு மீறி

௪. காமிகவனம்வந்தா-ரவரைஐவர்வணங்கிக்
களித்துப்பூசித்தாசனம் ஈந்து-நின்றார்
நேமமுடையமுனி-யவரைமகிழ்வால்நோக்கி
நீங்கள்சஞ்சலந்தனில் தோய்ந்து

௫. வெம்பினலுய்நற்காரி-யத்தைச்செய்துகுலத்தை
மிகவுந்திருத்துதற்கு வந்த-நீங்கள்
சம்பிரமமாகத்தவஞ்-செய்திருமென்றுசொன்னார்
தருமராஜன்கேட்டுநான் மூந்த

சு. இந்திரப்பிரஸ்தமதில்-இருக்கும்போதுவேதியர்க்
கினியபோசனஞ்செய்வித் தின்பந்-தன்னை
சிந்தையிற்கொண்டேன்தவந்-தானமிங்கெந்தவிதஞ்
செய்வேன்மனத்திலருந் துன்பம்

எ. கொண்டுகிழங்குகனி-காய்களையுண்கின்றநான்
குறிப்போர்ந்தேழைகள்தமை நோக்கி-வினை
விண்டிடஅவர்பசி-தனைத்தணித்திட்டவரும்
விதமுமில்லாயானன்பு தேக்கி

அ. வாடினற்பலனுண்டோ-நானிங்கேதவந்தானம்
மகிழ்வாற்செய்திடும்படி தேடிக்கொள்ளக்
கூடுமோவென்றனதைக்-கேட்டமுனிதன்மனுக்
குத்திடஞ்சொல்வானருள் நாடி

---

## வியாசர் தருமனுக்கு மவுர்க்கல்யர்கதை யுரைத்தல்.

விருத்தம் எஉ.

தருமாநல்விடயமல்லாவிடயத்திற்பொன்
சம்பாதித்தேதருமந்தன்னைநாளும்
பரிவாகச்செய்வதிலுமிங்கேதன்மம்
பண்ணுவதிற்கோடிபங்குபலனுண்டாகும்
விரைவோடுநீயறிந்துகொள்ளும்வண்ணம்
மிகுவிருப்பால்நானெடுத்துச்சொல்லநாடும்
அரிதாமோர்கதைநீகேட்டாலானந்தம்
ஆமென்றன்உனதுகுறைபோமென்றனே.

சய. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

அக்கதையினைத்தானே-தன்மாஉனக்கு-முக்கியமாஓதுவேனே

அநுபல்லவி.

திக்கெட்டும்புகழுமவுர்க் கல்யமுனியென்போனவம்
செறிவினைதீர்வனஞ்சேர்ந்து செய்திட்டான்தவம்
அக்கதை

சரணங்கள்.

க. பகருமுனிவன்பதி-னைந்துநாளைக்கோர்தரம்
பருவகாலத்திலமு துண்ணச்-சீர்
படுபிரதமைமுதல்-சதுர்த்தசிமட்டும்ஊநெல்
பண்பினலேபொறுக்கி வண்ண
மிகுநல்லரிசியாக்கி-யன்னஞ்சமைத்துநலம்
விறும்நாலுபங்காக நண்ணச்-செய்து

விளங்குமக்னிபிதிர்க்க-ளதிதியிவர்கள்நாளும்
விருப்புடனேபோசனம் பண்ண
மகிழ்வுடனீந்தோர்பங்கைத் தானுண்ணும்நாளிற்றேய்ந்த
மகத்வமுற்றதூர்வாசன் மவுர்க்கல்யனிடம்வந்த
அக்கதை

உ. வந்ததூர்வாசர்சொள்ள-மவுர்க்கல்யமுனியுண்ண
வைத்திருந்தஅன்னத்தை யீந்து-தன்னை
வருத்தும்பசிக்குச்சல-பானஞ்செய்திட்டான்புகழ்
மருவுந்தூர்வாசன்கிருபை தோய்ந்து
தொந்தமாஆறுதரம்-அன்னோனிடத்தில்வந்தார்
துய்யதவத்தோனன்பு வாய்ந்து-மிகத்
துதித்துத்தானுண்ணுமமு-தளித்துநீரால்தன்பசி
தொலைக்குந்திடத்தைநெஞ்சில் ஆய்ந்து
மதித்துத்தூர்வாசன்விர தத்தோனைவாழ்த்திச்சொர்க்க
மன்னும்விமானமெய்து வாயென்றுசென்றான்தக்க
அக்கதை

ங. தூர்வாசன்போனபின்பு-மவுர்க்கல்யனுக்குத்தேர்
தூதர்விமானங்கொண்டு சார்ந்து-கிருபை
தொடுத்தழைத்தாரவரை-முனிநோக்கிநீங்கள்வாழுஞ்
சொர்க்கத்தின்சிறப்பையான் தேர்ந்து
சீர்தருமகிழ்வெய்தச்-சொல்லென்றாரவர்கோடி
செஞ்சூரியப்பிரகாசம் ஆர்ந்து-மின்னும்
தேவர்முனிவர்களும்-வாழ்வார்பூமியிற்புண்யஞ்
செய்தோரங்கேமகிழ்வு கூர்ந்து
பேர்மேவுசுகமனு பவித்துப்பூமியிற்பின்னும்
பிறக்கவேண்டுமெனவும் உரைத்தார்பெருமைமன்னும்
அக்கதை

ச. அதைக்கேட்டமவுர்க்கல்யர்-தேவதூதரைப்பார்த்தே
அப்புவியிற்சனிக்காப் பதத்தை-நான்
அடையும்வகைதேடுவே-னீங்களேகுங்களென்றார்
அவருடன்போய்விட்டாரந் தரத்தை
விதியாத்தருந்தவத்தைப்-புரிந்துபாபதவி
மேவினார்நீயுந்துரா கதத்தை-நீக்கி
விடுந்தவத்தினைச்செய்யிற்-சஞ்சலந்தீர்ந்துநாளும்
மிருசுகமுண்டாமென்னும் விதத்தை
சதிருடன்நீயுந்தேடிக் கொள்ளவுமேன்மேலே
சந்தோஷமுற்றிடவும் இப்போதிங்கொருக்காலே
அக்கதை

## ஐவர் வேட்டைக்குச்சென்றிருக்கும்போது அவ்வழியாகக் கவுடதேசத்தரசன் குமாரத்தி கல்யாணத்திற்குப் போகின்றவரசர்களுடன் சயித்திரதன் தேர்மீதிற்செல்லல்.

விருத்தம் ௭௩.

அக்கதைவியாசர்சொல்லியுடனேசென்றார்
ஐவருஞ்சேர்ந்தேவேட்டையாடப்போனார்
தக்கதௌமியருந்திரௌபதியும்பன்ன
சாலையினிலேயிருந்தாரந்தவேளை
முக்யமுளகவுடமன்னன்பெண்கல்யாண
முடிக்கஐந்துதேசமன்னர்வாத்தியவோசை
அக்கடல்போலொலிக்கசயித்திரதன்தேர்மேல்
ஆகின்றான்சேனையொடும்போகின்றானே.

---

## தேர்மீதிற்சென்ற சயித்திரதன் திரௌபதியைக்கண்டு மோகித்துவலிதிற்கொண்டேகல்.

விருத்தம் ௭௪.

மானமிகுதிரௌபதியச்சம்ப்ரமத்தை
மரத்தினருங்கிளைபிடித்துப்பார்த்துநின்றாள்
ஈனமதிச்சயித்திரதன்கண்டுமோக
மெய்தியிவள்மேனகையோவெனமயங்கித்
தானொருதூதனையனுப்பியிவள்தன்சேதி
தனையறிந்துகொண்டதுவுந்தானும்வந்து
தேனொழுகப்பேசியதும்யோசனைக்குட்
செல்லுவேன்நடந்ததையுஞ்சொல்லுவேனே.

௪௧. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

நடந்தசேதியைக்கேளும்-யாவர்களும்-நடந்தசேதியைக்கேளும்

அநுபல்லவி.

திடங்கொள்கற்புடைத்திரௌ பதியிடத்திற்சிந்து
தேசாதிபதிமகன் சயித்ரதன்தூதன்வந்து
நடந்த

சரணங்கள்.

௧. அந்தத்தூதுவனீயார்-ஸ்த்ரீயென்றான்பாஞ்சாலியவ
வரசராரென்றானவன் கேட்டு-திகழ்
அத்தேபோன்றிகர்த்த-னிவனையோத்திககராள்
அழகியமன்னன்பதி பூட்டு

இந்தத்தேரோன்காசி-ராஜனுன்னைப்பார்க்கின்றவன்
எழிற்கலிங்கதேசன்சீர் நாட்டு-மத
யானைதனைநிறுத்தி-யெனையனுப்பினேன்சயித்
திரதன்கலிங்கனிஷ்டம் நாட்டு
மைந்தனுக்குவிவாகஞ் செய்யப்போகின்றாரென்றான்
மன்னன்சயித்ரதனுன்மேல் மோகங்கொண்டானென்றான்
நடந்த

உ. பின்னுந்தூதனீயென்ன-குலத்தினானுன்னுடைய
பேரென்னநான்போய்ச்சொல்ல வேணும்-என்றான்
பேடைமயிற்பாஞ்சாலி-கேட்டுத்தான்கையினாலே
பிடித்தகிளையைவிட்டேர் பூணும்
அன்னவன்றனைநோக்கித்-தான்தனித்திருப்பதை
யறிந்துமெனதுமுகங் கோணும்-படி
அடுக்காதவார்த்தைசொன்னாய்-நான்பாஞ்சாலன்றன்புத்ரி
அருஞ்சுயோதனனாற்கேளுங் காணும்
துன்மையடைந்தோம்நானை வர்க்குந்தேவிசீர்தங்கு
[illegible]திதன்பேரென்றும் மொழிந்துபோய்விட்டாளிங்கு
நடந்த

ந. தூதுவன்போய்நடந்ததைச்-சொன்னான்சயித்திரதன்
ஸ்தூலமதயானையைவிட் டிழிந்து-நற்
றிரௌபதியிடம்வந்தான்-சுயோதனன்தங்கைக்குயிர்த்
துணைநாயகனென்றன்பு மொழிந்து
மாதிவ்யஆசனந்தந்-தைவர்வேட்டைக்குப்போனார்
வருவார்களிங்குண்டிளைப் பொழிந்து-பாண்ட
வர்களுடன்பேசிப்போக-லாமென்றாளவன்மாரன்
வாளியாற்புத்திகெட்டே யழிந்து
கோதையேநீபருவ காலத்தையையோபோக்கிக்
கூழைப்புருஷரோடு வாழ்தல்வீணென்றானோக்கி
நடந்த

ச. அவன்மேலும்பாஞ்சாலியைப்-பார்த்துப்பாண்டவர்பூமி
யாளார்காடுறைவார்மண் மீது-பெண்
ணாய்ப்பிறந்தோர்தகுந்த-புருஷனைச்சேர்ந்துசுக
மனுபவிக்கவேணுமிப் போது
கவலைகொள்ளாமலெனை-நீசேர்தல்சுகமென்றான்
கனலினிலேபிறந்த மாது-தன்
காதைமூடிக்கொண்டுகோ-விந்தாகோவிந்தாவென்று
கலங்கிக்கல்லைக்கையினால் மோது
பவர்க்குண்டோபலனெங்கள் சங்கவதியுன்தேவி
பாவிநீகளுன்தங்கைநா னென்றாள்குணசஞ்சீவி
நடந்த

௫. கற்புடையாள்சொன்னதை-பாதகன்கேட்டுராஜர்
கட்டுகேதுமுறையென்று மெள்ள-நெடுங்
கடலாழ்ட்நரிவாலாற்-பார்க்கவந்தான்பாஞ்சாலி
கடிதினிற்ருன்தப்பித்துக் கொள்ள
நற்றௌமியர்பன்ன-சாலைக்குப்போம்பொழுது
நண்ணுந்தேர்மீதில்வைத்துக் கள்ள-நாய்போல்
ராசரிருந்தஇடங்-தனிற்சேர்ந்தோதத்தினை
நடத்தினுன்பாஞ்சாலிகண் வெள்ளம்
ஒப்பில்கடற்போற்பாயக் கதறிப்பாண்டவர்பேரை
உரக்கக்கூவக்கேட்டதௌ மியர்கண்டார்துஷ்டன்தேரை
நடந்த

---

## சயித்திரதன்பாஞ்சாலியைத் தன்தேரில் வலிதிற்கொண்டேகும்போது தௌமியர்தடுத்துங் கேளாததால் பீமார்ச்சுனுள் போர்செய்து சயித்திரதனைமொட்டையிட்டுப் பாண்டவதாசனென்று பேர்கொடுத்தலும், தருமர் விடுத்தலும், அவன்தவஞ்செய்தலும்.

விருத்தம் ௭௫.

அந்நெடுமிரதம்போம்வழிதௌமி-யுருந்தொடர்ந்தைவர்கள்தேவி
யலறநீகொண்டுபோகுதல்நல மா-அரும்பழிபாவமென்றிதனை
முன்னவர்சொல்லக்கேட்டதுமிலையோ-மோசநாசம்முழுத்தேங்காய்
மூடநாய்தனக்குச்செரித்திடாதென்றும்-மொய்குழற்றிரௌபதியாலே
பன்னும்வீரர்களாம்பாண்டவர்தங்கள்-பகையினையடைந்தநீயன்னோர்
பாரியைவிட்டேகாவிடிலுன்றன்-படைகளுமழியுமென்றுரைத்தார்
கின்னரிக்காரன்கிழவனார்பேச்சைக்-கேட்டிடானென்பதுபோல
கேடுகாலன்தேரினிற்றௌமியர்சொற்-கேலியாஎண்ணியேகினனே.

௰௬. திபதை-இராகம்-அடாணு-சாப்புதாளம்.

**கண்ணிகள்.**

௧. தேர்போம்போதினிற்றிரௌ-பதிஐவரெதிர்வரத்
தெய்வத்தைத்துதிசெய்து செல்லும்-போது
சீர்மேவுவேட்டைக்குச்-சென்றபாண்டவர்களுஞ்
சிறப்பாகஎங்கெங்குஞ் சொல்லும்

௨. தர்மிருப்பிடஞ்சேர்ந்து-தௌமியர்த்ரௌபதி
தனைப்பன்னசாலையில் தேடிக்-காணு
வெம்மைகொள்துயராலார்-கொண்டேகினுரென்று
மிகவும்யோசனைதன்னை நாடி

௩. தேடும்போதுதேர்போன-நல்லடையாளந்
தெரிந்தொன்னார்கொடுபோனு ரென்று-கோபம்
நாடிமனோவேகமும்-பின்னிடச்சென்று
நற்றௌமியரைப்பார்த்து நின்று

௪. காரியமறிந்துகொண்-டவரைத்துதித்துக்
கனிந்திடும்மரு ளாலே-எங்கள்
பாரியைக்கொண்டுவரு-கிறோம்பன்னசாலையிற்
பரிந்துசேருமென்றன் பாலே

௫. வணங்கியனுப்பிவிட்டுப்-போகுஞ்சேனையை
வளைந்துசயித்திரதன் எங்கே-என்று
தணிந்திடாக்கோபத்தாலே-தேடிக்கண்டார்பாஞ்
சாலிநாயகரைப்பார்த் தங்கே

௬. சந்துஷ்டியடைந்தனள்-சயித்ரதனவளிஷ்டந்
தன்மேற்கொண்டாற்போல் எண்ணித்-திவ்ய
சுந்தரிதனைநோக்கி-யெனக்குன்றன்புருஷரைச்
சுட்டிக்காட்டினுல்வதை பண்ணி

௭. விடுமென்றன்கணையினுற்-செயிப்பேனென்றுன்மாதுன்
வீரம்அழகாயுசு சிறப்பு-முற்றும்
கெடஎன்னைநீதொட்டா-யப்போதேசண்டாளா
கெட்டாயேனிவ்வாசைப் பறப்பு

௮. சுட்டமண்பச்சைமண்ணோ-டொட்டாதென்றனள்
துஷ்டன்பதைத்துள்ளம் முறிந்து-நின்றுன்
இஷ்டதேசாதிபர்-அறிந்துசேனைகள்சூழ
எரிந்தொருமுகமாகச் செறிந்து

௯. பாணப்பிரயோகமை-வர்கள்மீதினிற்செய்தார்
பாண்டவர்கையில்விற் பிடித்தார்-அம்பை
வேண்டுமட்டுமெடுத்-தேமன்னர்கரங்கால்கள்
மெலியும்படிமிக அடித்தார்

௰. அதைகண்டசயித்ரதன்-சிலராசருடன்வந்தே
அம்பின்மழைமிகப் பெய்தான்-கிரீடி
உதட்டினைபிடித்துவா-ளியில்மன்னருடலினி
லுதிரம்பெருகிடச் செய்தான்

௰௧. அப்போதுபடைகளு-மழிந்ததுதிரிகர்த்தன்
அறிந்துகோபநகை புரிந்து-நின்றுன்
ஒப்பிலாச்சயித்ரதன்-அதைப்பார்த்துவடவையும்
ஒளிக்கக்கண்களிலக்னி யெரிந்து

௰௨. வீறஅர்ச்சுனராஜன்-மீதிலும்நால்வர்கள்
மீதிலுஞ்சரங்களைத் தொடுத்துக்-காய்ந்தான்
கூறுமோர்பாணத்தா-லவன்தேகத்தினில்ரத்தங்
குதிகொள்ளஅர்ச்சுனன் விடுத்து

௰௩. நின்றவீரங்கண்டு-நடுங்கியப்பாஞ்சாலியை
நிலத்தில்விட்டுத்தேரை யோட்டிக்-கொண்டு
துன்றும்வாயுவேக-மெனவோடினனவர்
திரௌபதியென்றுஞ்சீ மாட்டி

௰௪. தனைவந்துசூழ்ந்திட்டா-ரிவளைவர்களைநோக்கிச்
சயித்திரதன்கொடும் பாவி-பூமி
யினிலவன்தனைவிடக்-கூடாதென்றுள்வீமன்
எழிற்கிரீடியிவர்கோபம் மேவி

௰௫. அவன்பிராணனைவாங்கத்-தொடர்குறிப்பைத்தன்மன்
அறிந்தன்னேன்றனைநீங்கள் கொல்ல-வேண்டாம்
கவலைநாம்படவேணும்-நம்மருந்தங்கைசங்க
வதிவிதவையாவாள் நல்ல

௰௬. குணமுற்றநாம்கொன்று-லழகல்லவுயிருடன்
கொண்டுவந்தென்முன்னே சேரும்-என்று
கணைவிழிப்பாஞ்சாலி-நகுலன்சாதேவனொடு
கடிதினிற்சென்றிணை யாரும்

௰௭. மொழியக்கூடாப்பன்ன-சாலையினிற்சேர்ந்தார்
முதிர்சினப்புலிவீமன் கிரீடி-நீதி
வழிதப்புஞ்சயித்ரதன்-றனைத்தேடிக்கண்டார்துன்
மார்க்கன்தேரினைவிட்டே யோடி

௰௮. ஈசம்புதரிலொளித்-தன்னவன்சிகையினை
யெழில்வீமன்பிடித்திழுத் திடித்து-நற்சு
வாசமடங்கிட-வுதைத்திட்டான்குத்தினன்
மட்டியப்போதுயிர் துடித்து

௰௯. மூர்ச்சையுற்றனவன்-தனைக்கொண்டுவரச்சொன்ன
முக்யதன்மன்மொழி தன்னை-திசழ்
நாற்றிசைபுகழ்கிரீடி-வீமனுக்குரைத்திட்டான்
நல்வீமன்றனக்கண்ணன் முன்னை

உ௰. சொன்னதினைவுவக்-துதைப்பதைநிறுத்தினன்
துஷ்டனுக்குறுமூர்ச்சை நீங்கி-ராவில்
கன்னமிடுங்கள்ளன்-போல்முழித்தானவன்
கழுத்தினைத்திருகிமுள் ளாங்கி

உக. போல்முறிக்காமலே-மொட்டையிட்டெவர்களும்
புதுமையாகப்பார்த்துப் பழிக்க-எலி
வாலினைப்போலந்து-குடுமிவிட்டன்றேன்சென்
மத்தினைவையாமல் ஒழிக்க

உஉ. பங்கமுரைத்துப்பேர்-பாண்டவதாசனெனப்
பரிந்துசொன்னலவன் உயிரை-யிங்கே
தங்கச்செய்வேனில்லா-விட்டாற்கொல்வேனென்றான்
தருமத்தாற்சுழல்கின்ற தயிரை

உ௩. நிகரொத்துச்சுழல்கின்ற-பயங்கொண்டவஞ்சக
நெஞ்சத்தனதற்குச்சம் மதித்துக்-கொண்டான்
தருவீமனுங்கிரீடி-யுங்காதகனையக்
கணத்தினிலேமனங் கொதித்து

உ௪. மடலொடியத்தேரில்-கட்டிக்கொண்டண்ணன்முன்
வந்துவிடுத்திந்த நீசன்-பேரை
அடைவுடனேகேட்கச்-சொன்னார்தன்மன்பார்த்தான்
அவனென்பேர்பாண்டவ தாசன்

உ௫. எனமொழிந்தான்திரௌ-பதிநகைத்தாள்தன்மன்
இரக்கமுந்துயரமும் அடைந்து-பாவி
தனையவிழ்த்தனுப்பச்சொன்-னான்தேரிற்கட்டுண்டு
தவித்திடவிறட்டோனன் குடைந்து

உ௬. நையும்பொய்யனைத்தம்பிய-ரவிழ்த்திட்டார்கபடஸ்தன்
நங்கப்பட்டதைநெஞ்சில் எண்ணி-நெடு
வையகமதிக்குஞ்சே-னையிற்செல்லாமலேயொரு
மாமுனியாசிரமம் நண்ணி

உ௭. அருந்தவஞ்சிவன்தனை-நோக்கிச்செய்தானந்த
ஆண்டவனவனெதிர் நேர்ந்து-எங்கும்
பரந்தபுகழ்த்தனஞ்-சயனொருவனையன்றிப்
பகர்நால்வரைப்போரில் சார்ந்து

உ௮. நீவெல்லுவாயென-வரந்தந்துகயிலையை
நினைந்துசென்றான்விரை வுற்றுக்-கொடும்
பாவியும்போய்விட்ட-சீவன்வந்ததுபோலே
பதிபோய்ச்சேர்ந்தான்மகிழ் பெற்று

---

## பாஞ்சாலிவரலாற்றை மார்க்கண்டருக்குக்கூற அவர் இழி வில்லையென்று சீதைகதையும் சாவித்திரிகதையும் உரைத்தல்.

விருத்தம் எசு.

மேலுரைத்தபாண்டவர்முன்மார்க்கண்டேயர்
விருப்புடன்வந்தாரவராசனமளித்துச்
சிலமுடனேவணங்கிச்சயித்ரதன்றன்
தேவிதிரௌபதியினையன்றெடுத்துப்போன
கோலமதையேயுரைத்தார்முனிநற்சூர்ய
குலராமன்மனையாளைராவணன்முன்
மாலொடுகொண்டேகினன்பாஞ்சாலியக்னி
மலையென்றார்உமக்கொரிழிவிலையென்றுரே.

---

## ஐவர்வேண்ட மார்க்கண்டர் இராயர்கதையுரைத்தல்.

விருத்தம் எஎ.

யாதொருதாழ்வுமிலையெனுமார்க்கண்-டேயரைஐவர்கள்நோக்கி
யிராமனற்கதையைச்சொல்லுமென்றுரைத்தா - ரெழில்முனிதசாதபுத்ர
னன்வருமிராமன்தாடகையாவி-யினைமடித்தேவிசுவாமித் [ன்
திரன்மகமுடித்துப்பதத்தினாற்கல்லா-இருந்திடுமகலியையெழுப்பி
மாதுசீதையினைவில்லினையொடித்து-மணஞ்செய்துபரசிராமன்றன்
மமதையையடக்கிப்பிதாவுரைகடவா-மற்படிவனத்தினிலேகி
வல்லசூர்ப்பனகிமூக்கரிந்தேதன்-மனைவியையிழந்தனுமந்தன்
வந்தனைபெற்றுச்சுக்கிரீவன்றன்-வங்கணங்கொண்டொருகணையால்
மீதுயரேழுமாமரமெய்து-வீரவாலியினுயிர்சிதைத்து
விரிகடலடைத்துராவணாதிகளை-வெரொடுமாய்த்திலங்கையினை
விபீஷணர்க்களித்துச்சீதையினுடனே-விரைவினிலயோத்திமாநகரம்
மேவிநல்வசிஷ்டமுனிவனால்மகுடம்-விருப்புடன்தரித்திடவாழ்ந்தான்
ஆதலாலென்றுங்கற்புளஸ்த்ரீக-ளானவர்க்கோரிழிவில்லை [தார்
அவர்களைத்தேவியாகவேபடைத்தோ-ரரும்புகழ்பெறுவரென்றுரைத்
அப்பொழுதைவர்சாவித்ரிபெருமை-யதனைநீர்சொலுமெனக்கேட்க
அதற்குயர்மார்க்கண்டேயர்பாண்டவர்க-ளறியஇக்கதைபுகன்றனரே.

சஉ. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

தன்மகுணத்தோரேயெந்நாளும்இன்பக்-தருமிச்சரித்திரம்யான்சொல்லக்
[கேளும்

அநுபல்லவி.

தன்மகுணத்தோரேமா ளவிவல்லியுயிர்நேசன்
ஜகத்தினையாளச்சுவ பதியெனுமொருராஜன்
முன்வினையாற்புத்ரன் இல்லாததுயராலே
முக்கியவாணியைநோக்கித் தவத்தினையொருக்காலே
நன்னெறியுடன்செய்தான் சாஸ்வதியெதிர்வந்தாள்
நற்புத்ரியுண்டாகும் படிவரத்தினைத்தந்தாள்
தன்ம

சரணங்கள்.

க. அந்தமன்னனப்போது-வாணியைநோக்கிலோகம்
ஆள்வதற்குப்புத்ரியா யோக்கியம்-என்
அருந்துன்பமதிற்போமோ-உலகாளப்புத்ரன்வரம்
அருளென்றனீவேண்டிய பாக்கியம்
இந்தவுலகிலுனக்-கப்பெண்ணுமுண்டாகும்
என்றேசரஸ்வதியொரு வாக்கியம்-சொல்லி
யேகிவிட்டாளச்சுவ-பதிமகராஜன்தனக்
கென்றும்புகழினிற்சி லாக்கியம்
வந்தடையச்சாவித்திரி பிறந்துபருவம்நண்ணி
வாழும்நாளினிலந்தப் பெண்ணைக்கல்யாணம்பண்ணி
விந்தையுடன்கொடுக்கத் தகுபுருஷனில்லாத
விதனமுற்றனப்பொழு தெவருமிணைசொல்லாத
சுந்தரநாரதன்வந்தா னவனுக்காசனமீந்து
சுடர்முடிமன்னவனும் வணங்கினனன்புவாய்ந்து
தன்ம

உ. பிரபலமுனியைமன்-னவனந்தப்புரத்துக்குப்
பின்னுங்கொண்டேகினனப் போது-ராஜன்
பெண்முதலோர்வணங்கினர்-முனிக்குமன்னனென்
பெண்சாவித்திரிக்குமண் மீது
அரியபுருஷன்கிடை-பாத்துயர்கொண்டேனென்றான்
அதற்குமுனிவனிந்த மாது-தன்னை
அவள்விரும்பும்புருஷ-னுக்குக்கல்யாணஞ்செய்தால்
அழகென்றனச்சொல்பிச காது
பரிவாகக்கேட்டவுடன் மத்திரதேசாதிபதி
பகரச்சுவபதிசாவித் திரியென்னும்புண்யவதி
திருமுகத்தினைநோக்கி யுனக்குச்சம்மதியான
சீலபுருஷனைச்சொல் வாயென்றனபிமான
மருவுமங்கைசாலுவன் புத்திரனைசத்திய
வானைக்கல்யாணஞ்செய்து கொளவேணுமென்றாள்நித்திய
தன்ம

௩. அதைக்கேட்டிடுநாரத-னச்சுவபதியைநோக்கி
யரசேஅச்சத்தியவான் இன்று-முத
லாயுசோர்வருஷந்தா-னுண்டாஇருப்பானென்றான்
அச்சுவபதிகேட்டொளி துன்று
மதிமுகமுள்ளபுத்ரி-சாவித்திரியைப்பார்த்து
மாமுனிசொல்லென்னெஞ்சில் நின்று-மிக
வருத்துஞ்சத்யவான்தந்தை-கண்ணில்லாதான்ராச்சிய
மருவலாலிழந்து சென்று
வதைக்குந்துயராற்பெண்டு பிள்ளையினுடன்வன
வாசஞ்செய்கின்றானதை யெண்ணவிட்டாலுங்கன
மதிலுயர்நாரத னச்சத்யவான்றனக்கு
ஆயுசோர்வருஷமென் றதைக்கேட்டாலென்றனக்குப்
பதைபதைக்குதுமனம் ஆகையால்நீவேறு
பார்மன்னனைக்கல்யாணஞ் செய்துகோளென்றான்விறு
தன்ம

௪. தகப்பன்சொன்னதைக்கேட்ட-சாவித்திரிசிரித்தன்னோன்
றனைநோக்கியென்றனக்கு நேச-முற்ற
தையலர்சிலர்சத்திய-வானைக்குறித்துச்சொல்லுஞ்
சங்கதிகேட்டுவிசு வாச
மிகவுமனதிற்கொண்டே-னவன்றனக்காயுளிலா
விடினுமென்னெஞ்சினிலு லாச-மொடு
விவாகமன்னோன்றனையே-பண்ணிக்கொள்ளுவேனென்றாள்
வேந்தன்கேட்டவுடன்கி லேச
முகமாய்நாரதன்தனைப் பார்த்தான்முனியுமந்த
முடிமன்னன்றனைப்பார்த்துச் சத்தியவானுக்கிந்த
ஜகத்திலாயுசில்லாவிட் டாலுமுன்தவபுத்ரி
சகலலக்ஷணங்களு மமைந்திட்டசாவித்திரி
மகிழ்சத்தியவான்றனக்கே அவளைக்கல்யாணஞ்செய்ய
மனத்திடங்கொள்வாயென வுரைத்தேகிவிட்டான்துய்ய
தன்ம

ரு. நாரதமுனிபோன-பின்னச்சுவபதியென்போன்
நண்ணுந்தன்தேவிபுத்ரி யோடு-கீர்த்தி
நாட்டியசாலுவராச-னிருக்குங்காட்டுக்கு
நயந்தேகினான்திசைகொண் டாடு
சிரிலுயர்சாலுவ-னெதிர்வந்தானிருவருஞ்
சித்தத்திலடங்காமல் நீடு-மின்பஞ்
செறிந்திட்டத்தழுவியச்-சுவபதிசாலுவன்
திருமுகம்நோக்கியன்னப் பேடு

தாரணியினிற்கண்டு நாணும்நடையாளென்றன்
தவகுமாரிசாவித்ரி யென்பவளிங்கேயுன்றன்
தீரகுமாரன்சத்திய வான்றன்னைத்திருமணஞ்
செய்துகொள்ளஇச்சித்திட் டாளென்றுனயகுணம்
பாரிலுற்றசாலுவன்கேட் டதேபாக்கியம்வல்ல
பகைவரால்நாடிழந்து காடுற்றேனென்றானல்ல
தன்ம

சு. அச்சுவபதிசாலுவன்-சொன்னதைக்கேட்டவுடன்
அனைவர்க்குமின்பதுன்பம் உண்டு-அத
ஞலொருகுறைவில்லை-யென்றான்சத்தியவானுக்கச்
சாவித்திரிக்குநன்னாட் கொண்டு
இச்செகமறிந்திடக்-கல்யாணமுடித்தபின்
பெவர்களுங்கண்களினாற் கண்டு-வாழ்த்த
எல்லாவரிசைகளும்-பெண்ணுக்கச்சுவபதி
யீந்துதன்னகர்சேர்ந்தான் வண்டு
மெச்சுங்குழலாள்சாவித் திரிவனத்தினிலாண்டு
மேவிமாமன்மாமிக்குப் பணிவிடைசெய்யப்பூண்டு
உச்சிதமாவாழ்நாளில் நாயகனுக்குமுன்னம்
உயர்முனிசொன்னவரு ஷத்தினிலாயுசின்னம்
மிச்சமானாலுநாள்தான் இருக்குதென்றன்புகூடி
மேலோர்சொல்லுங்கௌரி விரதத்தைக்கொண்டாள்நாடி
தன்ம

எ. பேதமில்லாள்போசனம்-நித்ரையற்றெவரோடும்
பேசும்வழக்கத்தையும் விட்டு-அந்தப்
பிரபலவிரதத்தை-மூன்றுநாளாராதித்த
பின்புநெஞ்சினிலன்பு தொட்டு
மாதிவ்யசுந்தரசத்திய-வானுடனேகனிகாய்
வர்க்கத்துக்குசீபுறப் பட்டுச்-சன்
மானமாப்போம்போதுன்-னுடன்வனத்துக்குநானும்
வருகிறேனென்றாள்திடுக் கிட்டு
கோதைசாவித்திரியைச்சத் தியவான்பார்த்துமானே
குளிர்சலபானம்பண்ணு மற்படிச்செந்தேனே
நீதமுடன்மூன்றுநாள் விரதமிருந்தாயிங்கே
நீபாரணஞ்செய்யுன்னை நாளைக்கென்னுடனங்கு
சாதிமயிலேஅழைத் தேகிறேனென்றானருந்
தையல்சொன்னதைச்சொல்வேன் சந்திரகுலத்தில்வருந்
தன்ம

௯. அஸ்தமானமாகாமற்-போசனஞ்செய்யமாட்டேன்
அரும்பகற்பொழுதினைப் போக்க-எண்ண
மதையுற்றேனென்றுமெனக்-கொருதுன்பமும்வழியி
லணுகாதெனவுமிரு தீர்க்கச்
சித்தத்துடனுரைத்தா-ளவனழைத்தேகச்சம்ம
தித்தபின்புகழ்வித்தி யாக்க-வந்த
சீலங்கொள்சாவித்திரி-மாமன்மாமியிவர்கள்
சிலவுபெற்றன்பில்மனந் தூக்க
உத்தமநாயகன்பின் சென்றாளவன்காய்கனி
யுறுசமித்துத்தருப்பை கொய்யும்போதினிலினி
துற்றவோர்மரத்தின்கீழ்கை கால்நடுக்குதுகண்ணுஞ்
சுழலுதென்றனன்கேட்ட அச்சாவித்திரிப்பெண்
பத்தியாற்சத்தியவானை மடிமேற்கிடத்திக்கொண்டாள்
பாசந்தண்டுடன்வந்த எமனையுமெதிர்கண்டாள்
தன்ம

௰. அவள்கண்டஎமன்தனக்-குயிர்நாயகனுடைய
அரியபிராணனைமெள்ள வாங்கிக்-கொண்
டகலும்போதுநாயகன்-தனைத்தரையிற்கிடத்தி
யவன்பின்தொடர்ந்துதுதித் தோங்கி
எவரும்புகழென்புரு-டன்னுயிரைவாங்கிக்கொண்
டேகும்நீயாரென்றாள்சீர் தேங்கி-வாழும்
எமனன்னவளைப்பார்த்துன்-புருஷன்தனக்குக்கால
மில்லாததாலுஞ்சத்யந் தாங்கிப்
புவியில்வாழ்ந்தசத்யவா னாதலாலும்புண்ணியப்
பூங்குயிலேநானேவந் தவனுடலில்நண்ணிய
பவமிலாதவுயிரை வாங்கினேனென்றன்றேடம்
பார்த்தாய்நீயேகற்புடை யவளென்பின்வந்தாலாபம்
குவிமுலையாளேயுண்டோ இறந்தபேரும்பிழைக்குங்
கோலங்கண்டாயோநீபோ வென்றான்கிர்பைதழைக்குந்
தன்ம

௰௧. வில்லிகூற்றன்சொல்லிய-துண்மையெனத்தெரிந்தும்
மணவாளன்மீதிலன்பு சொரிந்து-ஓர்
மனதாகவாழ்ந்தநானுன்-னுடன்கூடவரக்கிருபை
வையென்றாள்தேகம்விட்டுப் பிரிந்து
செல்லும்புருஷன்பிராண-னுக்குச்சரீரத்தோடு
சிந்தைகொதிகொதித்தே யெரிந்து-ஸ்த்ரீகள்
செகத்தில்வாழ்வதுண்டோ-அவன்பிராணனைத்தவிரச்
சித்தத்தில்மற்றோர்வரம், பரிந்து

கல்லுமுருகும்படி முழு
கருணைசெய்குவேனென்று
மெல்லிதன்மாமனார்க்குக்
விரைவிற்கொடுப்பாயென்றாள்
புல்லிப்போம்போதிவளுந்
பொன்னேநீகாட்டில்வரு
குடையாளேகேட்டாளியக்
னதைக்கேட்டிடுமுபாய
கண்தெரிந்திடவரம்
அவன்கொடுத்தவசரம்
தொடர்ந்ததைக்கண்டுநின்றான்
வதுநலமல்லவென்றான்
தன்ம

௰க. அப்போதுசாவித்திரி-நமனைப்பார்த்துமங்கில்யம்
அதையிழந்துயிருடன் இருக்கும்-ஸ்த்ரீகள்
அலங்கோலப்பிணமாகை-யாலேநான்போகேனென்றாள்
அடாதகாரியமனை வருக்கும்
ஒப்பாதுன்புருஷன்-பிழைக்கும்வரமல்லாமல்
உத்தமியேயுன்னெஞ்சை யுருக்கும்-மற்றோர்
உயர்வரங்கேட்டாற்றரு-வேனென்றான்ராச்சியபாரம்
உற்றென்மாமனார்முன்போற் செருக்கும்
பொற்புடையவரந்தா
போம்போதிவள்தொடர்ந்தா
கற்பினளேதலையி
கடுவளவுந்தப்பாமல்
இப்புவியினிலொன்றும்
என்றன்பின்னீவரவேண்
வென்றாளவனளித்துப்
ளவன்முகத்தைச்சுளித்துக்
லயன்முன்போட்டிடுபுள்ளி
நடக்குமதனைத்தள்ளி
நடக்காதெனப்புகன்றான்
டாமெனவேயகன்றான்
தன்ம

௰உ. மின்னாளதனைக்கேட்டு-லோகஞ்சிஷ்டிப்போன்பிரமன்
விஷ்ணுரட்சிப்போன்துடை தட்டி-நாளும்
விளையுமுயிர்த்திரளைக்-கொல்வோனீயாகையால்நான்
வேண்டும்வரமருள அட்டி
யிந்நிலத்தினிலுண்டோ-வென்றாள்கூற்றன்கேட்டுப்பெண்
ணேநான்பாசத்தினாலே கட்டிக்-கொண்
டேகுமுன்நாயகன்-பிழைக்கும்வரமல்லாம
லேவேறுவாத்தைநீ கிட்டி
என்னைக்கேட்டாற்றருவன்
என்றானவள்தந்தைக்குப்
உன்னருளாலேநீங்கி
உண்டாகச்செய்வாயென்றாள்
தன்னைப்போல்மொழியாளே
தன்னுருவினைமறைத்
அதற்குச்சந்தேகமில்லை
புத்ரனில்லாததொல்லை
யவன்றனக்கோர்நூறுபிள்ளை
அன்னவன்கேட்டுக்கிள்ளை
தந்தேனீபோவென்றோதித்
துச்சென்றானுயர்நீதித்
தன்ம

௰௩. இப்மனுருவமறைந்-தேகும்போதுஞ்சாவித்ரி
யிருதயத்தினிற்றுயர் சார்ந்து-அன்னேன்
வகுந்திசையைநோக்கிச்-சென்றுளவனநிந்தே
யிணையில்தன்ரூபத்துடன் நேர்ந்து
நபகுணவதியேநீ-வேண்டும்வரம்நான்தந்தும்
நாளும்மிருகத்திரள் சேர்ந்து-வாழ்வை
நண்ணுமிக்காட்டில்வர-லாமோவென்றனதற்கு
நங்கைநீதியைநெஞ்சில் ஓர்ந்து
பயனிலாச்சபத்துக்கா பரணம்வஸ்த்திரஞ்சூடிப்
பார்ப்பதுபோலெனக்குப் புறம்பாம்வரத்தைநாடி
தயவாயளித்தாயெனக் கதிலுண்டாச்சுதோநன்மை
சத்தியவானைவிட்டுநான் வாழ்வதிலுந்துன்மை
வியனுலகத்திலுண்டோ அவன்வரும்போக்காணும்
விதங்கொண்டுநானும்வரு கிறேனென்றுளின்பம்பூணுந்
தன்ம

௰௪. மடமங்கைவிதனத்தா-லனல்மெழுகாவுருகி
வசனித்ததைக்கூற்றுவன் ஆய்ந்து-வண்ண
மதனரதியேயுன்றன்-புருஷன்பிழைக்கும்படி
வரமும்நான்தந்தேனன்பு தோய்ந்து
இடைவிடாமலேசுகம்-எய்திப்பிள்ளைகளைப்பெற்
றிருமெனவாழ்த்தியொளி பாய்ந்து-பின்னும்
எழில்கொள்தன்றிசைசேர்ந்தான்-மாதும்புருடனைவைத்
திருந்தஇடம்போய்ப்பக்தி வாய்ந்து
கடிதிலவனைமடி மேல்வைத்தாள்வைத்துப்பார்த்த
கண்களித்திடக்கணத் தினில்மடநங்கைசேர்த்த
தொடைமேற்றூங்கியெழுந்தோன் போலெழுந்துசிங்காரச்
சுகுணச்சாவித்திரியை நோக்கினன்வெகுநேரப்
பட்டத்தூங்கினேனெனவுந் தன்னைக்கனவிற்கொடும்
பார்வையோன்கொண்டேகினன் எனவுமுரைத்தானெடுந்
தன்ம

௰௫. தனையவன்கொண்டேகும்போ-தினிலொருஸ்த்ரீவந்து
தடுத்தாளெனவுஞ்சொன்ன னந்த-மங்கை
சத்தியவானுடனது-கனவல்லநடந்திட்ட
சங்கதிமெய்தானதைக் கிந்தக்
கனமிகுமாச்சரியத்தைச்-சொல்லுவேனென்றுளவன்
கண்ணேபொழுதுபோச்சு வெந்த-புண்
களிற்கோலிட்டாற்போலென்றன்-தாய்தந்தைதுயர்கொள்வார்
கடிதிலவர்கவலை சிந்த

அனமேபோய்ச்சேரவேணும் என்றுனெஞ்சொருமித்து
அப்படியேபோய்ப்பன்ன சாலேயிற்சேர்ந்தன்புற்று
இனியசத்தியவானேச் சாவித்திரியைச்சிந்தை
யிற்களிப்புடனேக்கி யிங்கோஞ்செல்லவிந்தை
வனத்தினிலென்னகண்டீ ரென்றுன்மகன்தன்சித்தம்
மகிழ்ந்துன்மருமகள்சொல் வாளென்றுன்பரிசுத்த

தன்ம

ஸ்சு. அவள்மாமனுரைப்பார்த்-துச்சத்தியவானுயிரை
யருகமன்பிடித்ததி வேக-மாக
அகன்றதுமவன்பின்தான்-தொடர்ந்துதன்புருஷனுக்
காவிமறுபடியுண் டாகத்
தவறில்லாதவரத்தைக்-கேட்டதுமூன்றுவரந்
தந்தவன்சென்றதுந்திரி லோக-மெல்லாஞ்
சந்தோஷிக்கச்சத்யவான்-பிழைத்ததுஞ்சொன்னுளந்தச்
சாலுவன்தனக்குற்ற யோகம்
எவர்க்குண்டெனப்பாரணஞ் செய்வித்தான்மருமகள்
இளைப்பற்றுள்சாலுவன்சத் துருமாண்டான்திருமகள்
புவியைச்சாலுவனுளக் கிருபைசெய்திட்டாள்பின்னும்
புத்திரனுண்டான்மனங் தன்னிற்கவலேமன்னும்
இவள்தந்தைநூறுபிள்ளை களைப்பெற்றதிசௌக்கியம்
எய்தினனெப்பாக்கியமும் இவளுமடைந்தாள்முக்கிய

தன்ம



---

## தூர்வாசமுனிவரவு.

விருத்தம் எஅ.

கருணைகொள்மார்க்கண்டேயரைவர்க்கிந்தக்
கதையுரைத்துக்கற்புடையஸ்திரீகளாலே
புருடர்களுக்குச்சகலநலமும்வந்து
பொருந்துமுமக்கும்பாஞ்சாலியினுல்நன்மை
தாணியிலுண்டாமெனவேஅன்பால்வாழ்த்தித்
தன்னிடம்போய்ச்சேர்ந்தனன்தூர்வாசன்தன்மன்
மருவியகாட்டிற்சிலநாள்போனபின்பு
வருகின்றுரைவர்துதிகருகின்றுரே.

ருஉ

## தூர்வாசருக்குப் போசனமளிக்க வகைதேர்ந்து கிருஷ்ணனை நினைத்தல்.

விருத்தம் எகூ.

துதிபுரிந்துதாழ்ந்தவரைமுனிவர்சூழத்
துன்னுபகற்போதில்வந்தஅத்தூர்வாசன்
இதமுடனேவாழ்த்தியபின்முனியைத்தன்மன்
யாங்களுண்ணவுணவுசெய்யவேண்டுமென்றான்
அதிவிரைவிலவனிசைந்துமுனிவரோடும்
அருநீராடுதற்ககன்றான்தருமன்தம்பியர்
விதரணபாஞ்சாலிதன்யோசனையைக்கேட்கும்
விதஞ்சொல்வேனவர்சொலுமிங்கிதஞ்சொல்வேனே.

சங. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

தன்மன்கேட்டவுடனந்த-ஐவருஞ்சொன்ன-சங்கதிகளைக்கேளும்

அநுபல்லவி.

தன்மன்வீமனைப்பார்த்துத் தக்கதூர்வாசனுண்ண
என்னவுணவுநாமிங் கியலாமென்றான்வண்ணத்
தன்மன்

சரணங்கள்.

க. மாருதிகேட்டேவொன்னு ரேவ-முனி
வந்தாலன்னோர்துயர் மேவத்
தீரமாநாம்போய்க்கொன்று திரும்பவந்திங்கேபின்று
சாருந்தூர்வாசன்சாபந் தனைக்கொள்வோமென்றுனின்று
தன்மன்

உ. அதற்குப்பார்த்தன்முனிக்கு விருந்து-சொல்லி
யானபின்நெஞ்சில்வஞ்சம் பொருந்து
மதியிலாச்சுயோதனனு தியர்மேல்நாஞ்சென்றுகொல்ல
இதுதகியல்லவென்றே பிதவாகச்சொன்னான்வல்ல
தன்மன்

ந. நற்கிரீடிசொன்னமொழி கேட்ட-எழில்
நகுலனிக்கவலையை யோட்ட
உற்றமருதம்விழ உதைத்திட்டகிருஷ்ணன்வரச்
சற்றேநினைத்திடுவுத் தமமென்றான்சுபகர
தன்மன்

ச. சாதேவன்கேட்டுநெடு மாலைச்-சிந்
தனைசெய்தால்நம்முடைய வேலை
யாதுந்தடையில்லாமல் வந்துமுடிப்பானென்றான்
காதலாவேண்டுங்காரியங் களையும்படிப்பானென்றான்
தன்மன்

## கிருஷ்ணன்மாயையால் துர்வாசர் பசிதணிந்து தருமனை ஆசீர்வதித்தலும், தான் வந்தவரலாற்றைக்கூறலும்.

விருத்தம் அ௰.

ஐவரெண்ணத்தைவிளம்பினர்தரும-னரியமால்வரும்படிநினைத்தான்
அச்சுதன்சென்றான்பாண்டவர்மிகவு-மன்பொடுவணங்கினர்நெடுமால்
துய்யபஞ்சவரைத்தேற்றியபின்பு-சூரியனளித்தபாத்திரத்தில்
துலங்குமோரன்னமிருக்குதாவென்றான்-திரௌபதிகண்டெடுத்தீந்தாள்
வையகமுண்டோனுதட்டின்மேல்வைத்தான்-மன்னுநீராடவேகியதுர்
வாசன்மாமுனிவரமுதமுண்டதுபோல் - வண்பசிதணிந்தனர்கிருஷ்ணன்
செய்திடுமாயையென்றுதுர்வாசன்-தெரிந்துதன்மனுக்கொருதுன்பஞ்
சேர்ந்திடாதென்னஅவனிடம்வந்திச்- செய்தியைப்புகன்றுபோயினனே.

௪௪. தரு-இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

தன்மாகேள்நானே-இதை-யுந்தனுக்குரைப்பேனே

அநுபல்லவி.

பன்னுமதிசய மிகவுமுற்ற
படிக்குநற்கீர்த்தி யதனைப்பெற்ற
தன்மா

சரணங்கள்.

௧. யானும்நல்லருள் கூறும்-தவத்தினில்
இனியமாமுனி வோரும்
வானமுதத்தினைக் கனிந்தேயுண்டோம்
மால்பதந்தன்னையு மிங்கெதிர்கண்டோம்
தன்மா

௨. உன்னைச்சமரில் வெல்வார்-உலகினில்
உண்டென்றெடுத்தெவர் சொல்வார்
மன்னன்சுயோதனன் வாழுமுரிய
மனைக்குநேற்றுப்போ யிருந்தோமரிய
தன்மா

௩. தேவரிச்சித்துமூச் செறியும்-மதுர
தீங்கனிபால்பொறிக் கறியும்
ஆவல்நெஞ்சிற்கொண்டே யெங்களுக்களித்தான்
ஆனந்தபாஷ்பவெள் ளத்தினிற்குளித்தான்
தன்மா

௪. வேதியரோடன்பு புரிந்து-பந்தியில்
விருந்துண்டபோது பரிந்து
மாதுஷ்டனுக்கிஷ்டம் விரைந்துமுளும்
வரங்கேளென்றுசொன் னேனுலகாளும்
தன்மா

ரு. அதனைக்கேட்டொருக் காலே-சுயோதனன்
அவன்விட்டிலுண்டது போலே
எதிர்விருந்துங்க ளிடத்தினிலுண்ண
என்வரம்வாங்கிக்கொண்டா னுயர்வண்ண
தன்மா

சு. மூடனுக்கவ்வர மீந்த-பேதக
முறைமையால்நன்மை வாய்ந்த
ஈடில்லாதோனே என்பதம்நோக
இனியவிருந்துக்கு வந்தேன்விவேகத்
தன்மா

## தூர்வாசர்சென்றபின் கண்ணன் துவாரகைக்குச்செல்லல்.

விருத்தம் அக.

இவையுரைத்ததூர்வாசன்தன்மனைப்பார்த்
திங்குனக்குவேண்டும்வரங்கேட்பாயென்றான்
அவனெமதுபகைவர்சொற்கேட்டெம்மையொன்றும்
அடுத்துக்கேளாததுவேவரமாமென்றான்
தவமுனிவனுடனகன்றான்துவாரகைக்குத்
தக்கநெடுமாயவனுஞ்சென்றானவர்
சிவனடியார்தங்களைப்போற்சன்மார்க்கத்திற்
செழிக்கின்றார்வனத்தினில்காட்கழிக்கின்றாரே.

## கண்ணனிந்திரனுடன் கன்னன் கவசகுண்டலங்களைக் கவர உரைத்தல்.

கலித்துறை க.

இவர்வனத்திற் சிலநாள்கழித்திட் டனராருமை
யெய்துந்துவாரகை வாழ்கிருஷ்ணன்கன்ன னெழிற்கவசந்
துய்யபொற்குண்டலம் வாங்கஇந்திரன்றனைத் தூயநெஞ்சிற்
பையநினைக்கவந்தான் மாயன்தந்த்ரம் பகர்ந்தனனே.

சரு. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

தேவேந்திராவுனக்குநான் சொல்லுங்காரியத்தைநீ
தெரிந்துகொள்வதே சூட்சி

அநுபல்லவி.

தேவேந்திரா கன்னன் அர்ச்சுனராஜன்மீது
தீர்க்கபகைவைத்திருக் கின்றானதுபொல்லாது
தேவேந்

சரணங்கள்.

க. காண்டவவனங்கிரீடி-யழித்தபோதச்சுவசேனன்
கடிதிலுயிர்தப்பித்துக் கொண்டு-நெஞ்சில்
கடும்பகைகொண்டுகன்னன்-இடத்திற்போய்ச்சேர்ந்திட்டசங்
கதியாரறியார்கன்னன் வெகுண்டு
நீண்டபுகழ்ப்பார்த்தனைக் கொன்றுற்சுயோதனன்ராச்சியம்
நிமிஷத்திலாள்வானெல்லா ருயிர்க்கும்வருந்தியாச்சியம்
தேவேந்

உ. ஐவர்முன்சொன்னசப-தத்தைமுடித்திடாவிட்
டாலுனக்குண்டாமப கீர்த்தி-கன்னன்
அருங்கவசகுண்டலந்-தரித்திருப்பானேயாகில்
அவனுடனேருத்ர மூர்த்தி
வெய்யயுத்தங்கற்பாந்த காலஞ்செய்தாலுந்தொல்லை
விளையுமல்லாமலன்னோன் சாகான்சந்தேகமில்லை
தேவேந்

ங. பந்துக்கள்கதறச்ச-கோதரர்துடித்திடப்
பார்த்தன்படப்போந்துயர் நீங்க-இங்கு
படிக்கின்றேனீபிரா-மணன்போற்கன்னனிடத்திற்
பகர்கவசகுண்டலம் வாங்கச்
சிந்தைமகிழ்ந்துசென்று கேட்டாற்றருவானல்ல
ஜீவனையுங்கேட்டிடில் மறுக்காமலீவான்வல்ல
தேவேந்

ச. கவசகுண்டலத்தைநீ-கவர்ந்தாலர்ச்சுனன்மாளான்
கதிரோன்மகன்மாளச்சந் தேகம்-இல்லை
கன்னன்கேட்டாற்றருவான்-வெள்ளம்வருமுன்னணை
கட்டிக்கொள்வதேநல்வி வேகம்
புவியிலாலஸியமமு தம்விஷமாகிப்போகும்
பூராயத்தாலெவ்வே லையுஞ்சாதிக்கலாகும்
தேவேந்

## இந்திரன் கன்னனைவஞ்சித்துக் கவசகுண்டலத்தைப் பெறப்போகிறதை யறிந்து சூரியன் கன்னனைக் கொடுக்கவேண்டாமென்று தடுத்தல்.

விருத்தம் அஉ.

திருமாலையிந்திரனப்போதுநோக்கித்
தியாகங்கேட்பதுபோற்கன்னனைவஞ்சித்தே
அரிதானகவசகுண்டலங்கைக்கொள்வே
னர்ச்சுனனைக்காப்பதுன்றன்பாரமென்றே

விரைவாத்தன்பதிசேர்ந்தானதையறிந்த
வெங்கதிர்ச்சூரியன்பதைத்துக்கன்னன்தன்பால்
உரமாமந்திரமறையோன்போலேயேகி
யுரைக்கின்றானவன்மனதைக்கரைக்கின்றானே.

சசு. தரு-இராகம்-தோடி-சாப்புதாளம்.

பல்லவி.

பிரபலகீர்த்தியிற்சம்பன்னா-என்பேச்சைத்-தள்ளாதேநீகன்னா

அநுபல்லவி.

பெருகுசீர்க்கிரீடி பிழைக்கவேதியன்போலே
பேதகங்கொண்டே இந்த்ரன்- வருவானிங்கொருக்காலே
பிரபல

சரணங்கள்.

க. மனந்திரௌபதி யேங்க-வொண்ணுமலே
மங்கல்யந்தழைத் தோங்க
கனபார்த்தன்ஜெயந் தாங்க-உன்னுடைய
கவசகுண்டலம் வாங்க
இனந்தேடிவருமத்தே வேந்திரன்றன்சூது
என்னுற்சொல்லக்கூடு மோளடுத்திப்போது
பிரபல

உ. அவனியோர்கொண் டாடும்-உன்னுடல்விட்
டகலாமலொளி நீடுங்
கவசகுண்டலம் நாடு-கின்றஇந்திரன்
கைக்கொண்டாற்பகை சாடும்
நவகிரீடிதன்கணையால் உன்னுயிர்க்குநாசம்
நண்ணுமாகையால்நீபோ காதேமதிமோசம்
பிரபல

௩. உயிரோடிருந்து தானம்-பூமிதன்னில்
உதவுதல்சன் மானம்
பயன்கொள்வோர்க்கில்லை ஈனம்-எதையுங்கேட்கப்
பதறுவார்மது பானம்
மயக்காதென்றுசொல்லு வாருண்டதைத்தள்ளு
வருங்காரியஞ்சொன்னேன்முன்யோ சனைநீபண்ணிக்கொள்ளு
பிரபல

## சூரியன்சொல்லைக் கன்னன் கேளாதுமறுத்தல்.

விருத்தம் ௮௩.

இவையுரைத்தவேதியனைக்கன்னன்பார்த்திங்
 கெய்தியநீமறையோனோதேவன்றானோ
நவில்வாயென்றனவனுஞ்சிரித்துச்சூர்ய
 னுனைகையாலிதனையுரைக்கவந்தேன்
புவியதனிற்சிலநாளிலறிவாயென்று
 புகன்றுபின்னுங்கலைத்ததுவும்பிதாவைக்கன்னன்
விவரமொடர்ச்சித்துரைத்தசேதியுர்நான்
 விள்ளுவேனுனந்தங்கொள்ளுவேனே.

௭௭. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

கன்னனுக்குஞ்சூரியனுக்கும்-நடந்திட்டசங்-கதியைத்தெரிவிப்பேனே

அநுபல்லவி.

வன்கவசகுண்டல மீந்துதன்னுயிரைச்சிந்த
மதிமயங்காதேயென்றே னைப்பிதாவென்றறிந்த
கன்னனுக்குஞ்

சரணங்கள்.

௧. வந்திடுமாயவேதிய-னைத்தந்தையென்றுணர்ந்த
 மாத்திரத்திலன்பு மேவி-நாளும்
எந்தவுலகும்புகழ்-சொர்ன்னமலரைச்சூரியன்
 இருபதத்திலும்வாரித் தூவி
சுந்தரப்பொற்சிங்காசனத் தின்மீதினிற்சேர்த்தான்
தொழுதுதன்தேகத்தினை மறக்குமானந்தம்போர்த்தான்
கன்னனுக்குஞ்

௨. இரவியைக்கன்னன்பின்னும்-பார்த்துன்பாதசாட்சியா
 யிரப்போர்க்களிக்கச் சற்றும்-ஓர்
திருகுரைத்திடமாட்டேன்-தேவர்மனிதரென்றன்
 ஜீவனைக்கேளாவிடில் முற்றும்
மருவலரைச்சாடிச்சுயோ தனனுக்குப்பூமிதந்து
மகிழ்வோடுன்பதஞ்சேர்வேன் - இனமுங்கேளென்றான்முந்து
கன்னனுக்குஞ்

௩. அவன்சொல்லிக்கேட்டபானு-கவசகுண்டலங்களை
 யளித்துவிடில்மாள்வாய் துடித்து-விதி
எவரையும்விடாதுன்னை-வெறுக்கவேண்டுவதில்லை
 யிந்திரன்தந்திரம் படித்துக்

கவசகுண்டலங்கேட்க வரும்போதவன்பாலோங்குங்
கனவேல்வாங்கிக்கொள்ளென்றான் மகனிசைந்தான்சீர்தாங்குங்
கன்னனுக்குஞ்

௪. இணையிலாத்தேவேந்திரன்-கவசகுண்டலங்களை
யிரந்தாற்கொடுக்கத்தடை யில்லை-என்றும்
பிணிமூப்புச்சாக்காட்டுக்கென்-றெடுத்தவுடலின்மீது
பிரியம்வைத்திடுவது கல்லை
துணையாந்தன்மத்தையான்செய் திறந்தாலும்புவிமீது
தூயபுகழ்நிற்குமென் றுறுதிகொண்டிடவோது
கன்னனுக்குஞ்

---

## சூரியன்சென்றபின்பு இந்திரன்வர காவலாளர். சமயமின்றெனல்.

விருத்தம் அச.

இதமிகுகன்னனிந்த்ரன்வேல்வாங்க-இசைந்தனன்சூரியன்வாழ்த்தி
யேகினனங்கர்கோன்மகபதிவந்-திடயெதிர்பார்த்திடுநாளில்
மதியொடுதுறந்தோருக்கும்வானவர்க்கும்-வந்துகேட்போர்கள்கேளாத
வருக்குமெர்ப்போர்க்குஞ்சமயவாதிகட்கும்-வல்லபூசுரர்க்குமீள்தான
மதிதயவாகக்கன்னனீந்தனன்பின்-பருநரைதிரையுமூப்புள்ள
அந்தணன்போலஇந்திரன்வந்தா-னவன்றனைச்சேவகர்கண்டுன்
னதமிகுகன்னனேர்பதினைந்து-நாழிகைவரைக்குநற்றானம்
நல்கியேதனதுமனையடைந்தானீ-நாளைவாவெனவுரைத்தனரே.

---

## இந்திரன்கன்னனிடத்தில் கவசகுண்டலம் வாங்கிக்கொண்டு கடோர்க்கஜனைக்கொல்ல வேலுமீந்தேகல்.

விருத்தம் அரு.

இந்தவண்ணஞ்சொன்னோர்கள்மேலுங்கன்ன
னிடத்திலுரைத்தாசவனன்னோர்களாலே
அந்தணனைவருவித்தன்னோன்றாள்வீழ்ந்தே
ஆசனமீந்துபசரித்தென்பாக்கியத்தாலே
வந்தவுன்காரியஞ்சொல்லென்றானென்றள்ளா
மையினாற்பிறபகலில்வந்தேனென்றதும்பின்
விந்தையங்குநடந்ததையுநெஞ்சிலன்பு
வீறுவேன்யாவருக்குங்கூறுவேனே.

உ௰. திபதை-இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

## கண்ணிகள்.

க. கன்னராஜன்வந்த-வேதியன்சொற்கேட்டுக்
கனிந்துவெண்ணகை புரிந்து-நீ
யென்னஎன்னைக்கேட்கி-லுந்தடையில்லாமல்
யானீவேனென்னுள்ளம் பரிந்து

உ. ஆதலால்நீவேண்டும்-பொருளைக்கேட்பாயென்றான்
அங்கர்கோன்றனையன்பி னாலே-கிழ
வேதியன்பார்த்துக்கற்-பகமுமடிப்போருக்கு
வேணதளிக்கவொருக் காலே

௩. அரிதென்றுநீயெந்தப்-படியிச்சித்தபொருள்
அளிக்காயென்றுகேட்டான் அதற்குக்-கன்னன்
பிரியமுற்றஎன-துயிரைவந்துகேட்கும்
பேருக்குடனேயுத வுதற்குக்

ச. காத்திருக்கிறேனந்த-நிலைதப்பேனீவேண்டும்
கனபொருளீயாவிடில் போரில்-ஓடுங்
தூர்த்தர்போம்பாவத்தில்-நானும்போவேனென்று
சொன்னதனைக்கேட்டுச் சீரில்

ரு. மிருமறையோன்கன்னன்-கவசகுண்டலங்கேட்டான்
விரைந்தவனதுகளை வாங்கித்-தன்
அகமகிழ்ந்தளித்திடப்-போந்தருணத்தினில்
அசரீரியருளினில் ஓங்கி

சா. அப்பாகொடுக்கவேண்டாம்-என்றுங்கிருஷ்ணன்தங்
திரத்தாலிந்த்ரனையுன்றன் இடத்தில்-விட்டான்
எப்போதுமுயிரிலுந்-தன்மம்பெரிதல்லவென்
றெடுத்துச்சொல்லியுமனத் திடத்தில்

எ. வீறுங்கன்னனீந்தா-னந்தரதுந்துமி
விண்ணோர்முழக்கிப்புட்ப மாரி-பெய்தார்
தேறுமறையோன்போலே-வந்தஅவ்விந்திரன்
சிறந்திட்டஆனந்த வாரி

அ. தனில்மூழ்கித்தன்னிச-வுருவெடுத்திட்டனன்
சகலரும்புகழ்கன்னன் கண்டு-நெஞ்
சினில்லின்பமெய்தினு-னவனைத்தேவேந்திரன்பார்த்
தெவர்களும்மிகப்பயங் கொண்டு

௯. நடுங்கிடுஞ்சமரினில்-செயிக்கும்வேல்தருகிறே
னவமார்நிகர்பார்த்தன் மீது-நீ
விடவேண்டுவதில்லை-யென்றுஞ்சிங்கமென்ன
வெகுண்டுசித்தங்கலங் காது

௰. போர்செய்யவருங்கடோர்க்-கஜனுவியினையது
போக்கவுதவுமென்று மந்த்ரஞ்-சொல்லி
பேர்கொள்கன்னனுக்கிந்து-வாழ்த்தியவன்றன்விடை
பெற்றுத்துவாரகையில் தந்த்ரஞ்

௰க. சொல்லியனுப்பிய-கிருஷ்ணனிடத்திற்போய்
சுகுணஅங்கர்கோன்பால் ஏகி-யன்றேன்
வல்லபொற்கவசகுண்-டலங்கைக்கொண்டேனென்றான்
மால்கேட்டுப்பரவச மாகி

௰உ. இருந்தான்தேவேந்திரன்-மாயனிடத்தினி
லேவிடையதுதனைப் பெற்றுப்-பஞ்ச
தருவளர்தன்பதி-தன்னைநாடிஅந்த
க்ஷணம்போய்ச்சேர்ந்தான்மகிழ் உற்று

---

## நெல்லிக்கனியை மரத்தில்பொருத்த மாயனை நினைத்தல்.

விருத்தம் அ௬.

இந்திரன்போய்விட்டபின்பென்னையன்மால்வந்
திருந்திடுங்காரியமுடிக்கவெண்ணங்கொண்டான்
அந்தஐவருநடந்தசேதியைக்கேட்
டரியவலத்தோள்துடிக்கவுளமகிழ்ந்தார்
சுந்தரச்சுயோதனன்முதலோரிதையறிந்து
துங்கஇடத்தோள்துடிக்கவாட்டமுற்றார்
தொந்தமுடன்காமீகவனத்திலன்பிற்
சூழ்கின்றார்பாண்டவரும்வாழ்கின்றாரே.

௬அ. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐவரங்கேசிலநாள்-கழிக்கும்போதில்நடந்த-அதிசயத்தினைக்கேளும்

அநுபல்லவி.

மைவிழியாள்திரௌபதி யும்பார்த்தனுமமித்ர
மாமுனிவனத்தின்பக் கத்திற்சென்றார்விசித்ர

ஐவரங்கே

சரணங்கள்.

க. கனிவாற்பாஞ்சாலியந்த-வனத்திலோர்நெல்லிக்கனி
கண்டதைக்கொய்துதரச்    சொல்லிக்-கேட்டாள்
தநுகிரீடியம்பால்விழச்-செய்தவள்கேட்குமுன்னந்
தந்தானப்போதிலங்கு    புல்லி
மனமகிழ்வுடன்வாழும்-முனிவோர்கள்பார்த்துநெடும்
வண்ணஅஸ்த்திரந்தொட்டு    நெல்லிக்-கனி
யினைக்கொய்தோனென்னபாடு-படுவானோவென்றார்பார்த்தன்
இதைக்கேட்டேயெல்லாஞ்சொல்லிப்    பல்லி
தனிக்காடிப்பானைதனில்    வீழ்ந்தாற்போலாச்சுதென்னும்
தப்பிதமீதென்றெண்ணித்    தயங்கினான்புகழ்மன்னும்
ஐவரங்கே

உ. அதிபுஜபலபார்த்தன்-தியங்கிக்கொய்தகனியை
யரியதன்மனிடத்தில்    வைத்துச்-சற்றும்
மதியில்லாமற்பாஞ்சாலி-பேச்சைக்கேட்டுக்கனியை
மதியாமற்கொய்தேனென்றான்    கைத்துச்
சதிர்பெறுதன்மன்விஜ-யனைநோக்கிவனவாசந்
தனிற்காய்கிழங்குகள்பு    சித்து-வெகு
விதனமாகப்பலநாள்-கழிக்குநமக்குப்பின்னும்
வெந்துயர்நெஞ்சில்முள்போற்    றைத்து
வதைக்குதெனப்பார்த்தனுக்    குரைத்தான்வீமனுபாய
வார்த்தையிவ்வண்ணமங்கு    படித்திட்டான்மிகுதூய
ஐவரங்கே

ங. அண்ணனைவீமன்பார்த்திச்-சேதிமுனிநம்மால்வந்
தறிந்துகொண்டாற்றெடுப்பான்    கோபம்-ஈ
துண்மையாகையினாலே-யவர்க்குநல்லவசனம்
ஓதிப்பணிந்தால்நம்மைச்    சாபம்
எண்ணமற்கொடுக்காரென்-றான்தன்மனுடன்கிரீடி
யிதைப்பேசுவதினாலே    லாபம்-உண்டோ
வண்ணஅமித்திரர்வரு-ஷத்துக்கோர்தரமுண்டு
மகிழ்கனியினைமனஸ்த்    தாபம்
நண்ணக்கொய்தஎன்றனைச்    சபிப்பாரெனவுரைத்தான்
நடுக்கம்நீர்கொள்ளவேண்டாம்    எனவேமிகக்கரைத்தான்
ஐவரங்கே

ச. சுந்தரப்பார்த்தன்சொன்ன-வார்த்தைதனைநன்றாகச்
சுகுணதன்மன்நெஞ்சிற்பா    ராட்டி-நீ
சுந்தமலர்க்குழலாள்-பாஞ்சாலிக்காகநெல்லிக்
கனியறுத்திடவண்ணம்    நாட்டி

விந்தைமிகுமம்பினை-விடுத்தவுனக்குத்துயர்
விளைந்தாலெங்கள்தலையைக் காட்டிக்-கொண்
டிந்தவுலகில்வாழோ-மைந்துதலைநாகங்க
ளிரையஞ்சுவாயினுலுங் கூட்டித்
தொந்தமாவோருடல்காப் பதையறியாயோவென்றான்
துடித்திதுதெரியாமல் போச்சோவெனப்புகன்றான்
ஐவரங்கே

ரு. தகுநகுலனப்போது-தருமராஜனைநோக்கித்
தவஞ்செய்தூர்வாசர்நம்பால் நேர்ந்து-வண்ண
மிகுவிருந்துண்ணவந்தே-னெனச்சொன்னபொல்லாப்பினை
விடஅமித்திரான்பு கூர்ந்து
சுகமுறப்புசித்திடும்-நெல்லிக்கனியைக்கொய்யத்
துணிந்ததுதீதெனவே ஓர்ந்து-சொல்லி
முகில்வண்ணன்றனைநினைத்-திடுவதேநலமந்த
மூர்த்திவந்தாலித்துயர் பேர்ந்து
அகலுமென்றான்சாதேவன் உதிட்டிரன்றனைநோக்கி
யகங்குழைந்துசொன்னதை யுஞ்சொல்லுவேன்சீர்தூக்கி
ஐவரங்கே

சு. தருமனுடைக்கனியை-யமித்ரரிடத்தில்வைத்துத்
தாழ்ந்தாற்கோபிக்காரென்றும் பரிந்து-கூறி
இருந்தான்திரௌபதிகேட்டுப்-பெரியோர்கள்பெண்கள்மொழி
யினைக்கேட்கலாகாதெனத் தெரிந்து
உரைத்திட்டவார்த்தைபொய்யோ-முன்னும்நீரென்னுற்றுன்பம்
உற்றீரெனவேகண்ணீர் சொரிந்து-தன்மன்
அரியதம்பியர்சொன்ன-துந்திரௌபதிசொன்ன
அதையுமாய்ந்தேயோசனை புரிந்து
உரியநகுலன்சொல்லே நலமென்றுளத்திற்கண்டான்
உயர்மாயன்வந்துசேரச் சிந்தனைசெய்துகொண்டான்
ஐவரங்கே

---

## அமித்திரமுனிபுசிக்கு நெல்லிக்கனியைப்பின்னுமரத்திற் பொருத்தத் தங்கள்தங்கள் கருத்தை வினவிய கிருஷ்ணனுக் கறிவித்தல்.

விருத்தம் அஎ.

தன்மனகுலன்சொல்வண்ணமாலைச்சிந்தித்
தானவன்வந்திவர்துயரஞ்சொல்லக்கேட்டு
மன்னியநீரைவருந்திரௌபதியுநெஞ்சில்
மதித்திருக்குமுண்மையினைச்சொல்வீராகில்

கன்மவினையாலறுத்தமதுரநெல்லிக்
கனிமரத்திலொட்டுமென்னஆறுபேரும்
பொன்னடியிற்பணிந்துகிருஷ்ணனுடனேஅன்பு
புல்லுவாரவரவர்கள்சொல்லுவாரே.

சகூ. தரு-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

பஞ்சவர்களுந்திரௌபதியுமொளியாமலிப்- படியுண்மையைச்சொன்னாரே

அநுபல்லவி.

செஞ்சடைஅமித்ரமா முனிவன்புசிக்கநாடுந்
திவ்யநெல்லிக்கனியை அறுத்தாற்புகழ்நீடும்
பஞ்சவர்

சரணங்கள்.

க. தருமன்கிருஷ்ணனைநோக்கிப்-புண்யமுஞ்சத்தியமுஞ்
சர்க்கீர்த்தியும்நீயுமெப் போதுஞ்-செயந்
தாங்கவேண்டுமெனவுங்-கோபமொடுபாபம்
சத்யமும்ராக்ஷதர்க்கென் றோதும்
அருங்குலச்செய்கையென்றும் அவைநீங்கவேண்டுமென்றும்
அல்லும்பகலுமென்னெஞ் சினிற்கொண்டேனென்றான்துன்றும்
பஞ்சவர்

உ. பின்னும்வீமன்மாலுடன்-பிறர்தாரந்தாய்மாரென்றும்
பிறர்பொருள்எட்டியென்றும் பிறரைக்-குற்றம்
பேசுவதுபெருமை-யல்லவெனவும்பிறர்
பெறுமின்பந்தன்னதென்றும் பிறரை
மன்னுந்துன்பந்தன்துன்பம் ஆமென்றுமெந்நாளும்
மனத்திற்கொண்டிருக்கிறேன் என்றுசொன்னான்பாராளும்
பஞ்சவர்

ந. மாதவனைக்கிரீடி-பார்த்தேஊன்உடலில்வாழ்
மன்னுயிரனைத்தையுந் துறந்து-மிகும்
மானத்தைக்காப்பாற்றினு-லேக்ரமமும்வீரமும்
மாபுமறையாமலே சிறந்து
பூதலத்தில்நிலையா மெனவேயுறுதிகொள்ளும்
பொருத்தமென்சாதகத்தின் பொருத்தமாமென்றான்விள்ளும்
பஞ்சவர்

ச. நகுலன்மாயனைக்கிட்டி-நற்குலத்தோரானாலும்
நன்மையுடையோர்களா னாலும்-செல்வச்

சுகமுடையோர்கிருபை-யுடையோராணுலுஞானந்
துலங்காதபேர்களையெக் காணும்
ஜெகத்தில்மணமில்லாத முருக்கம்பூப்போல்மதிக்குஞ்
செய்கையென்செய்கையென்றான் உண்மைநெஞ்சிற்பதிக்கும்
பஞ்சவர்

௫. சாதேவன்சத்தியந்தா-யென்றும்ஞானந்தகப்பன்
தானென்றுங்க்ருபைதோழன் என்றும்-உயர்
தருமஞ்சோதரனென்றுஞ்-சாந்தம்மனையாளென்றும்
தகுபொறுமையேபுத்ரன் என்றும்
மாதவனேடிவரை யல்லாமல்வேறுபந்து
வர்க்கத்தோரெனக்கில்லை யென்றுரைத்தானுவந்து
பஞ்சவர்

௬. ஐயனெடுபாஞ்சாலி-தனக்கைம்புலன்களைப்போல்
ஐவர்புருடராக இருந்தும்-இன்னம்
அம்புவியிலொருவன்-கணவனாகவேஅன்புண்
டாவதினாலும்நற்சீர் திருந்து
துய்யகணவரிருந் தாலும்ஸ்த்ரீகளைநம்பும்
துணிவர்காதென்றுசொன்னாள் வனத்திற்றுயரால்வெம்பும்
பஞ்சவர்

---

காளமாமுனிக்கு ஐவரைக்கொல்லும்படி துரியோதனன் யாகஞ்செய்யபோதித்து, அதற்குவேண்டும் பொருளுதவல்.

விருத்தம் அஅ.

அறுவருமுண்மையையுரைத்தார்கிருஷ்ணன்கேட்டான்
அமித்திரமுனியுண்ணுநெல்லிக்கனிமரத்திற்
செறியுமருங்கிளையினிற்சேர்ந்திட்டதைவர்
திகிலொழிந்துமாலைவணங்கித்துதித்தார்
உறுபுகழ்துவாரகைக்கவன்போய்விட்டானைவர்
உரைத்தஅக்காமிகவனத்திற்சிலநாள்வாழ்ந்த
பிறகுவிண்டுசிந்துமுனிவனத்திலன்பைப்
பெருக்கின்றார்சிலநாளங்கிருக்கின்றாரே.

௩௰. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

விண்டுசிந்துமுனிவன் வனத்திலைவர்வாழ்நாளில்
விளைந்தசேதியை விள்ளுவேன்

அநுபல்லவி.

அண்டுபனிச்சலத்தை ஆனைகுடித்துத்தாகம்
அடங்குமெனயோசிக்குஞ் சுயோதனன்துர்வ்விவேகம்
கொண்டசகுனிதுச்சா தனன்கன்னனிவர்குந்தி
குமாரரைக்கொல்லவேணு மெனஎண்ணங்கொண்டார்முந்தி
விண்டு

சரணங்கள்.

க. ஐவரிருந்தாற்புவி-தனக்காளக்கிட்டாதென
ஆலோசித்தசுயோதனப் பாவி-நீ
றணியுந்தூளமாமுனி-போய்க்காளமாமுனியை
யழைக்கும்படிவிரைவில் ஏவித்
துய்யமாமுனிவனை-வருவித்தெந்தமுனிக்குஞ்
சொல்லாதவுபசாரம் நாவில்-ஓதித்
தொழுதுன்தவத்தினாலே-லோகம்விர்த்தியாவதாற்
றுரிதமாநீகிருபை மேவி
வையகத்தையென்வச மாக்குவாயென்றக்காள
மாமுனியைப்பணிந்தான் தீயன்பஞ்சவர்மாள
எய்துங்கெடுநினைப்பை முனிஞானத்தினாலோர்ந்து
எனையழைத்தகார்யத்தை விளம்பென்றான்வகைதேர்ந்து
விண்டு

உ. அப்பொழுதுவஞ்சகன்-சகுனிமுகத்தைப்பார்த்தான்
அவனக்காளமாமுனியை நோக்கிக்-காட்டில்
அலையும்பாண்டவர்களை-மாய்த்தால்நன்றென்றான்வீணில்
அங்கர்கோனுமதியைப் போக்கி
எப்புவியும்புகழு-முனியோடன்னோருயிரோ
டிருந்தாற்செகங்கைவசம் ஆக்கிக்-கொள்ள
இச்சிப்பாராகையாலே-நீயாகத்தினைச்செய்தே
யிக்கணமவருயிர் நீக்கிச்
செப்பப்பூலோகமெல்லாஞ் சுயோதனன்தன்செங்கோலே
செலுத்தக்கிருபைசெய்யென்றான்-முனிவன்கேட்டொருக்காலே
ஒப்பில்லாத்துஷ்டத்துரி யோதனனைப்பார்த்தெந்த
உலகிலுன்கீர்த்தியில்லா இடமெங்கேயென்றானந்த
விண்டு

ரு. பின்னுங்காதகனோடு-தவத்தோனீயெண்ணுங்கார்யம்
பெரிதுமநீதிக்கொவ் வாது-என்ன
பிழையக்கண்டைவரைமாய்ப்-பதுநான்யாகஞ்செய்தாலும்
பெருமைசேரன்னோரைக்கொல் லாது

மன்னுஞ்சூஸ்த்திரதாரி-யாகியமாயன்பாண்டு
மைந்தர்தமக்குப்புவி மீது-துன்பம்
வாராதவகைதுணைப்-பட்டிருக்கின்றனென்றன்
மகத்தினல்நானேசாக எது
தன்னைத்தரும்நீபூமி கைக்கொள்வதில்லையென்றுந்
தடுத்துச்சொன்னன்சொல்லியு மந்நால்வர்களுந்துன்றும்
அன்னீதயாகஞ்செய்ய முனியைக்கலைத்துமெல்ல
அதற்குவேண்டும்பொருள்தந் தரண்மனைசேர்ந்தார்வல்ல
விண்டு

---

## காளமாமுனியாகத்தில் பூதந்தோன்றல்.

விருத்தம் அகூ.

காளமாமுனியுமூழ்வினையாலே-கள்ளிசேர்கான்வழிநுழைந்து
கழுகுகள்பூதம்வாழ்மலைச்சாரல்-கடிதினிற்சேர்ந்துவிண்ணேரெங்
நாளிலுங்காணுஅதிசயமென்ன-நடுங்கிடவெகுபலிகொடுத்து
நவில்தருமண்டகோளமுமளாவ-நற்கனலெழுந்திடத்தக்க
நீளருமோமகுண்டமுண்டாக்கி-நிகரிலாக்கொடூரவெஞ்சமித்து [கள்
நிறைத்துடன்கொடியமந்திரஞ்செபித்து - நெய்யினைச்சொரிந்தனன்திசை
தூளெழும்படிக்குக்கண்களிலக்னி-துலங்கஅம்மகத்தினிற்பூதந்
தோன்றியததனைக்கண்டமாதவத்தோன்-சொல்லொணுநடுக்கமுற்றனனே

---

## எமன் நச்சுப்பொய்கையாகவும், ஆலமரமாகவும் விளங்கியதை யுரைத்தல்.

விருத்தம் கூம.

முனியாக்த்தாற்பூதம்வந்தவாறு
மொழிந்தேனெப்பில்லாததன்மமூர்த்தி
யெனமேவுகர்த்தனச்சுயோதனன்கொளெண்ணம்
யாவுமறிந்துடனழிக்கநெஞ்சிற்கொண்டான்
மனவேதைகொண்டஐவர்சேதியோடு
மதிக்கும்நற்ப்ராமணப்பிள்ளைபூணுநூலோ
டினிதாகத்தரிக்கஇச்சையுறுமான்தோல்போம்
இனஞ்சொல்வேன்எமன்றனருங்கனஞ்சொல்வேனே.

ருக. தரு-இராகம்-பியாகடை-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தக்கதையைத்தானே-யாவருங்கேட்டிட-யானிங்குரைப்பேனே

அநுபல்லவி.

அந்தஅந்தணப்பிள்ளைமான் தோலையோரமாமெள்ள
அடுத்தேயெடுத்துப்போன சேதிகேளுஞ்சிருள்ள
இந்தக்கதை

சரணங்கள்.

க. மான்தோலைக்கவ்விக்கொண்ட-மானவர்வாழுங்காட்டில்
மதியாமலேயேகி நுழைந்து-மோதும்
வாயுவேகமென்ன-ஓடும்பொழுதிற்பிரா
மணப்பிள்ளைமிகநெஞ்சங் குழைந்து
தான்பூண்டதுயரைப்பஞ் சவர்க்குச்சென்றுபடித்தான்
தயங்கியொன்அந்தோணுமற் புலம்பிக்கண்ணீர்வடித்தான்
இந்தக்கதை

உ. அதைக்கேட்டதருமா-ஜனுந்தம்பியரும்வில்லில்
அம்பினையுடன்பூட்டிக் கொண்டார்-மான்
எதிரில்நிற்பதுபோலும்-அருகிற்போம்பொழுதி
லேயோடுவதுபோலுங் கண்டார்
விதிபாலதன்பின்காடு மலையுஞ்சென்றுவளைத்தார்
விந்தைமான்சிக்காதென்றே அசந்துமனமிளைத்தார்
இந்தக்கதை

ங. கலைகிட்டாதென்றறிந்தா-சையைவிட்டஐவரந்தக்
காணத்தொடுநெஞ்சமுங் கலங்கித்-தா
கத்தினற்சலபானம்-பண்ணும்படிக்குத்தடா
கந்தேடிப்புஜபலம் விலங்க
அலைவாரெனவேகச்சப் பொய்கையாகவுந்துன்னும்
ஆலமரமாகவும் எமன்விளங்கினன்மன்னும்
இந்தக்கதை

---

## தருமன் மூர்ச்சையடைதலும், மற்றநால்வரும் நச்சுப் பொய்கையில் ஜலமுண்டு, மரணமடைதலும்.

விருத்தம் ௩௯க.

நமனிருந்தவிதமுரைத்தேன்மான்பின்னேடி
நாவுலர்ந்துதாகவிடாய்கொண்டுவாடிக்
குமையுமைவர்தங்களுக்குள்தருமராஜன்
குணவான்சாதேவனைப்பார்த்தப்பாதண்ணீர்
நிமிஷமதிற்கொண்டுவருவாயென்றான்தண்
ணீர்க்கவன்போயுறுசெய்தியோடுதாகத்
தமிபெருகுநால்வர்கள்சேதியையும்நெஞ்சிற்
றரிக்கின்றேன்துணிவுடனேவிரிக்கின்றேனே.

௫உ. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

பஞ்சவர்க்குறுபொல்லாச் - சஞ்சலஞ்சொலஎன்றன் - நெஞ்சதுதுணிவேனே

அநுபல்லவி.

செஞ்சொற்றருமன்தாகந் தீர்க்கச்சாதேவனெங்கும்
திரிந்துஞ்சலங்காணுமல் தியங்கினுன்புகழ்தங்கும்
பஞ்ச

சரணங்கள்.

௧. மயங்கிஅவனேக்காட்டில் தூறி-ஓர்
மலையினேக்கண்டதன்மேல் ஏறித்
தயங்கிடுந்தாகவிடாய் ஆறிப்-போகத்
தரும்பொய்கைகண்டின்பம் வீறி
முயங்குமப்பொய்கையிடம் அம்பெனவேபறந்தான்
முதிர்சோபத்திறுற்சல பானம்பண்ணியிறந்தான்
பஞ்ச

௨. நடந்தசேதியையறி யாத-தன்ம
ராஜனகுலனுக்கு நீத
விடையீந்தேவினுனடங் காத-தாக
வெறியினுலவனும்பொல் லாத
இடர்செய்யுமத்தடாகத் தினில்நீருண்ணஅடுத்தான்
எய்துஞ்சலத்தைக்குடித் துயிரைப்பறிகொடுத்தான்
பஞ்ச

௩. மிண்டன்பார்த்தனேத்தன்மன் அண்டுஞ்-சோர்வால்
விடுத்தான்கொடியஎமன் தண்டுங்
கண்டோடுங்கோபாக்கினி மண்டுங்-கண்
களிற்சோதரர்மாண்டதைக் கண்டுங்
கொண்டிடுதாகத்தாலங் நீருண்ணமனம்பூண்டான்
கொல்லுஞ்சலத்தைக்குடித் துடன்கிரீடியுமாண்டான்
பஞ்ச

௪. தண்ணீர்கொண்டுபோகவே வந்த-மூன்று
தம்பியரைக்காணுதால் வெந்த
புண்ணினிற்கோலிட்டாற்போல் நொந்த-தன்மன்
புலம்பிச்சோபத்தையுற்றுன் அந்த
அண்ணனேத்தேற்றிவீமன் அருந்தாகத்துயர்போர்த்தான்
அருங்காட்டிற்றேடிஅன்னோர் மடிந்திருப்பதுபார்த்தான்
பஞ்ச

௫. தம்பியர்க்காகக்கண்ணீர் வடித்து-விஷச்
சலமிதென்னஅவ்வீமன் துடித்து

வெம்புந்தன்மனுமின்னீர் குடித்து-மாண்டு
விடுவானெனவுந்திகில் பிடித்து
நம்பிக்கைஅண்ணன்கொள்ள மணலைப்பரப்பிஇது
நச்சுப்பொய்கையென்றே யெழுதினனதன்மீது
பஞ்ச

ரு. அவனுமதிதாகத்தி னாலே-நீ
ருந்திமாய்ந்திட்டானொருக் காலே
நவலைப்பிள்ளையதனைப் போலே-தன்மன்
தன்தேகமெலிந்துமென் மேலே
கவலையினாலேமதி மயங்கிமிகவுங்கினன்
காட்டிலொருவனாகிக் கலங்கிமூர்ச்சைதாங்கினன்
பஞ்ச

---

## காளமாமுனிவன் ஏவியபூதம் ஐவர்களுங் களைகொண்டிருப் பதைப்பார்த்துக் காளமாமுனியைக்கொல்லல்.

விருத்தம் ௬௨.

பஞ்சவர்சேதியிப்படியிருக்கப்
பார்மிசைக்காளமாமுனிமுன்
பண்ணியமகத்தால்வந்திடுபூதம்
பரிவுடனவன்றனைப்பார்த்துச்
செஞ்சடையோனேயான்செயும்வேலை
செப்புவாயெனமுனிநோக்கிச்
சிறந்தபாண்டவரைக்கொன்றுவாவென்றான்
ஜெகமிசையவர்களென்கண்ணில்
நெஞ்சட்யான்மகிழநேர்படாவிட்டால்
நினைக்கொல்வேனெனச்சொலித்தொழுது
நீண்டிடுமேகமலையெனருபம்
நிகரறக்கொண்டுவிண்ணோர்கண்
டஞ்சிடும்படிக்குமரந்துகள்படப்போ
யரியதன்மன்முதலோரை
யண்டவுடன்கண்டசெயலுமேல்விளைந்த
அதிசயமும்புகல்வேனே.

ருரு. தரு-இராகம்-அசாவந்தி-ஆதிதாளம்

பல்லவி.

அதிசயஞ்சொல்லக்கேளும்-எவருமிந்த-அதிசயஞ்சொல்லக்கேளும்

அநுபல்லவி.

குதிகுதித்துக்காட்டினி லைவருயிரைச்சிந்தக்
கொடுமையுடனேவந்த பூதத்தினால்நடந்த
அதிசயஞ்

சரணங்கள்.

க. வருபூதம்புவி மீது-களைகொண்டதன்
மனைப்பார்த்துடனப் போது
அருமுனிமனம் ஓது-ராஜரில்மூத்தோன்
ஆமென்றறிந்து தீது
புரிவதெப்படியென்றும் இறந்துபோனவனென்றும்
பொருந்திடாயோசனையின் மயக்கத்தைநெஞ்சிற்றுன்றும்
அதிசயஞ்

உ. தியக்கங்கொள்பூதம் பேர்ந்துநச்சுப்பொய்கை
திகழ்கின்றஇடஞ் சேர்ந்து
நயக்குமுடலஞ் சோர்ந்து-மடிந்திருக்கும்
நால்வர்தங்களைச் சார்ந்து
கயக்கங்கொள்ளிந்நீருண்டு மடிந்தார்பகையாற்சற்றும்
கனவான்கள்மாளவில்லை யெனவறிந்ததுமுற்றும்
அதிசயஞ்

ஈ. அந்நீதஞ்செய்யக் கூறி-முனிவன்றன்னை
அனுப்பினனென்று தேறி
பன்னுமவன்மேற் சீறி-போய்முக்காலும்
பகரும்நீணிலை மாறி
மன்னும்விஷநீருண்டு மடிந்தோர்பின்னென்கையாலும்
மாள்வாரெனவோஎன்னை விடுத்தாயென்றதுமேலும்
அதிசயஞ்

ச. முனிவனைப்பூதங் கிட்டி-மதியில்லாத
மூடனீயென்று திட்டி
தனிலக்கினியைக் கொட்டி-யென் கண்ணின்முன்
சார்ந்தவுனைநான் அட்டி
பினைச்செய்யேன்கொல்வேனென்றுஞ் சூலங்கைக்கொள்ளலாச்சு
எமன்போற்கொன்றேமகுண்டடந் தனிலேமறைந்துபோச்சு
அதிசயஞ்

---

எக்ஷப்பிரசினை.

விருத்தம் கூ௫.

அடல்கொள்பூதத்தாற்காளமாமுனிவன்
ஆவிமாண்டனன்முனமூர்ச்சை
யானஅத்தருமபூபதிதென்றற்
காற்றினலருங்களை நீங்கி

அடுத்திடுதாகவேதனையுடனே
அழகியசோதரர்முன்னம்
அயர்வொடுபோனகால்டிபிடித்தே
அந்தநச்சுப்பொய்கைசேர்ந்தே
இடருருத்தம்பியரங்குயிரிழந்தே
யிருப்பதைநோக்கியிந்நீரை
யிவர்களுண்டிறந்தாரெனநினைக்கும்போ
தினில்மணல்மீதினில்வீமன்
எழுதியதைப்பார்த்திதுவிஷநீரா
மென்றுநிச்சயித்ததுமலாமல்
ஈனனுந்துரியோதனன்செய்தசூதென்
றேதெரிந்துஞ்சலம்வேண்டிப்
படுமவஸ்தையினுல்நெடுங்குளத்தருகிற்
பரிவுடனேகியந்நீரைப்
பட்சமாத்தனதுகையினுலள்ளிப்
பருகிடப்போகுமப்போது
பகாசரீரியிதுகொலும்விஷநீர்
பாக்யவானேயிதைப்பானம்
பண்ணவேண்டாமிங்கிறந்தநால்வர்களும்
படருமூழ்வினையினுல்நானன்
பொடுமொழிந்திட்டவார்த்தைகேளாதா
லுயிரிழந்தார்களிப்போதிங்
குந்தமாவுன்னைக்கேட்பதற்குத்ர
முரைத்துநீருண்ணுவாயென்ன
உயரசரீரிரூபமாய்நமனங்
கோதியமொழியினைக்கேட்ட
உதிட்டிரனெனைநீகேட்பதைக்கேள்யா
னுவந்துரைசெய்வனென்றனனே.

உக. திப்தை-இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

## கண்ணிகள்.

க. உலகம்யார்மாயையால்-சூழ்ந்திருக்குதுசொல்லாய்
உத்தமனேதன்ம ராசனே-நாளுஞ்
சொலவரிதாகிய-லோகம்விஷ்ணுமாயை
சூழ்ந்திருக்கின்றதச ரீரியே

உ. மனிதருக்குமுக்ய-மானசெய்கையெது
மதித்துச்சொல்லாய்தன்ம ராசனே-லோகந்
தனில்மனிதர்க்குமுக்-கியமாகியசெய்கை
தவமேயாகுமச ரீரியே

௩. இரவிலும்பகலிலும்-கண்களைமூடாத
தெதுநீசொல்லாய்தன்ம ராசனே-ராத்
திரிபகலிலுங்கண்-களைமூடாதது
செனிக்குமச்சம்அச ரீரியே

௪. செனித்துமுயிரில்லாத-சீவனெதுநீநன்றாத்
தெளிந்துசொல்வாய்தன்ம ராசனே-நெஞ்சம்
இனித்துவாழ்புவியில்-செனித்துமுயிரில்லாத
சீவன்முட்டைஅச ரீரியே

௫. உண்டுகெர்ப்பமாவ-தெதுநீவிவரமாக
உவந்துசொல்லாய்தன்ம ராசனே-இந்த
மண்டலந்தனிலுண்டு-கெர்ப்பமாவதும்மயில்
மகிழொடுகேளச ரீரியே

௬. பார்க்கும்போதினிலுதித்-திடுவதெதுநீயிங்கு
பரிந்துசொல்லாய்தன்ம ராசனே-அன்பு
போர்த்திட்டதன்முட்டை-களைமச்சம்பார்த்திடும்
போதுதித்திடும்அச ரீரியே

௭. சிந்தையில்நினைத்திடும்-போதுசெனிப்பதெது
திறமாச்சொல்வாய்தன்ம ராசனே-ஆமை
சந்துஷ்டியுடனிட்ட-முட்டையைநெஞ்சில்நினைத்
தாற்செனித்திடும்அச ரீரியே

௮. மலர்களிலுயர்ந்திட்ட-தெதுநீயதனையிங்கு
வகையாச்சொல்வாய்தன்ம ராசனே-நெடு
நிலமிசைமலர்களி-லுயர்ந்ததுசாதிமலர்
நீகேட்டிடுவாயச ரீரியே

௯. வேதியர்க்குமுக்ய-மானதர்மமெது
விளங்கச்சொல்லுவாய்தன்ம ராசனே-நீள்
மேதினிதனில்வண்ண-வேதியருக்குத்தன்மம்
வீறியசெபம்அச ரீரியே

௰. மன்னவருக்குத்தன்ம-மெதுநீஅதையெனக்கு
வழுவறச்சொல்வாய்தன்ம ராசனே-புகழ்
துன்னுமன்னவர்தமக்-கேழைகளைரட்சிக்குந்
தொழிலேதன்மம்அச ரீரியே

௰௧. பகர்வைசியர்க்குத்தன்ம-மெதுநீஅதனையிங்கு
பண்பாச்சொல்வாய்தன்ம ராசனே-எங்கும்
நிகழும்வைசியர்பயி-ரிடுதலும்வர்த்தகஞ்செய்
தலும்நற்றருமம்அச ரீரியே

௰௨. சூத்திரர்க்குத்தன்ம-மெதுநீஅதையெனக்குச்
சூட்சியாச்சொல்தன்ம ராசனே-அணு
மாத்ரநெறிதப்பாமல்-சூத்திருத்தமரை
வணங்கில்தன்மம் அச ரீரியே

௰௩. பூமியிலேஸ்த்ரீ-களுக்குத்தன்மமெது
பொருந்தச்சொல்வாய்தன்ம ராசனே-அயன்
நேமமாப்படைத்தபூ-மியில்ஸ்த்ரீகட்குக்கற்பு
நிகரில்தன்மம்அச ரீரியே

௰௪. தோஷமில்லாதநற்-புருஷனாரதையாய்ந்து
துரிதமாச்சொல்தன்ம ராசனே-ஆதி
சேஷன்மதிக்கெட்டாத-தோஷமில்லாப்புருஷன்
தூயநற்சிவன்அச ரீரியே

௰௫. புண்ணியதீர்த்தங்களிற்-சிறந்ததெதுநீயிங்கு
புலப்படச்சொல்தன்ம ராசனே-இன்பம்
நண்ணும்புண்ணியதீர்த்தங்-களிற்சிறந்திட்டது
நற்கங்கையாம்அச ரீரியே

௰௬. பார்மீதிலேயிறந்தும்-இருக்கின்றோனாதை
பட்சமாச்சொல்தன்ம ராசனே-மிகு
சீர்மேவுபார்மீதிலே-யிறந்துமிருக்கின்றவன்
திகழ்தன்மவான்அச ரீரியே

௰௭. தாரணிமீதிருந்தும்-இறந்தபேராரிந்த
க்ஷணத்தில்சொல்வாய்தன்ம ராசனே-களி
கூருந்தாரணிமீதில்-இருந்துமிறந்தபேர்கள்
கொடியலோபிகள்அச ரீரியே

௰௮. எப்போதும்பார்மீதில்-நிலையாநிற்கும்பொருள்
எதுநீசொல்வாய்தன்ம ராசனே-கூறும்
இப்பார்மேலெப்போதும்-நிலையாநிற்கும்பொருள்
இணையில்லாப்புகழ்அச ரீரியே

௰௯. ஈனத்திலீனமான-தெதுநீயோசனைசெய்திங்
கெனக்குச்சொல்வாய்தன்ம ராசனே-உயர்
மானத்துக்கழிவான-ஈனத்திலீனமொரு
வரையேர்ப்பதாம்அச ரீரியே

உ௰. தூயமோக்ஷத்திநுக்-காதாரம்யாதுநீ
துலங்கச்சொல்வாய்தன்ம ராசனே-மேலோர்
ஆயுந்தூயமோக்ஷந்-தனக்காதாரமென்றும்
அரியமெய்ஞ்ஞானம்அச ரீரியே

## எமனைத் தருமர்கண்டு வணங்குதலும், மரணமடைந்த நால்வருமுயிர்பெற மந்திரோபதேசமுரைத்தலும்.

விருத்தம் கூச.

இந்தவகைசொல்லியநற்றருமன்காண
எமனுருவத்தொடுவந்துதழுவிக்கொண்டு
சிந்தைமகிழ்வால்நடந்தசேதியெல்லாந்
தெரியவுரைத்ததுவுநல்லுதிட்ரன்கேட்டுத்
தந்தைதனைவணங்கியதுமாண்டுபோன
தம்பியர்கள்பிழைத்ததுமிவ்விருவர்பேசும்
விந்தையையுமெனதுநெஞ்சிற்கொண்டேஅன்பில்
விறுவேன்யாவருக்குங்கூறுவேனே.

ருச. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

எமனுக்குந்தருமரா-ஜனுக்கும்நடந்தசேதி-எவர்களுங்கேட்பீரே

அநுபல்லவி.

எமன்தருமனைநோக்கி யிறந்ததம்பியர்பின்னும்
எழுந்திருந்திடமந்த்ரம் இருக்குதென்றனன்மன்னும்
எமனுக்குந்

சரணங்கள்.

க. இன்னருளொடுஎமன்-தருமன்முகத்தைநோக்கி
யான்சொல்லும்ஓர்மந்த்ரம் அதனாலே-உயிர்
இழந்தத்தம்பியர்களில்-ஒருவனையெழுப்பென்றான்
இதைக்கேட்டதருமனும் ஒருக்காலே
தன்னருந்தந்தைசொன்ன-அரியமந்திரத்தையுச்
சரித்தான்மன்மதராஜன் தனைப்போலே-அந்த
க்ஷணத்தில்நகுலனெழுந்-தனன்எமன்தருமரா
சனைப்பார்த்ததிசயித்து மென்மேலே
என்னஏதுவால்வீமன் கிரீடிஇவரைவிட்டு
இந்நகுலனையெழுப் பியதென்றான்புதொட்டு
எமனுக்குந்

உ. சிறந்திடுதந்தைமொழி-கேட்டதருமன்குந்தி
தேவிக்குநானொருபுத் திரனாக-இந்தச்
செகமீதினில்வாழ்ந்திடக்-கருணைசெய்தாய்மத்ரா
தேவிமைந்தரெனது மனம்வேக
இறந்ததால்நகுலனை-யெழுப்பினேனென்றான்கேட்ட,
எமனுடலம்பூரித் துப்போகத்-தன்மன்

இடத்திற்கிருபைகூர்ந்தே-பகையைவெல்லஸ்திரசஸ்திரம்
ஈயத்துரியோதனன் இவர்சாகத்
துறந்தமுனியால்யாகஞ் செய்வித்ததையுங்கொல்லத்
துஷ்டபூதத்தைமுனி விடுத்துச்சொன்னுன்வல்ல
எமனுக்குந்

௯. மேலும்எமன்தரும-னுக்குவிஷநீருண்டு
மெலிந்துநால்வர்களிறந் ததும்வந்த-பூதம்
வேகமாகப்போய்க்காள-மாமுனியைக்கொன்றதும்
விஷமானபின்தொடர்ந்து மிகநொந்த
கோலமும்நச்சுப்பொய்கை-யுண்டானதையுஞ்சொல்லிக்
குறித்தபன்னிரண்டாண்டு மதிதொந்தம்-ஆகக்
கொற்றவரேவனத்தில்-கழித்தோர்வருஷமாத்ரம்
கூறுமக்கியாதவாசத் தையுமெந்தக்
காலத்திலுமொருவர் கண்ணிற்படாமல்வாழுங்
காரியமுற்றின்பம்பெறு வீரென்றுன்யாருந்தாழும்
எமனுக்குந்

---

## பீஷ்மர் துரோணர் விதுரன் அசுவத்தாமன் இவர்கள் தருமனிடம் வரல்.

விருத்தம் ௬௫.

இப்படியுரைத்தஇயமனைப்பிழைத்த-இளையவருதிட்ரனெழுந்தே
இணையடிபணிந்தாரவனுடன்வாழ்த்தி-யேகினுனவர்கள்முன்னிருந்த
ஒப்பறுவிண்டுசிந்துமாமுனிவ-னுறுவனஞ்சேர்ந்தனர்தனக்கிவ் [யால்
வுலகில்யார்நிகரென்றேகொர்வமதத்தா - லுயர்சுயோதனன்செய்போதனை
இப்புவிமதிக்குமுனிவனுற்பூத-மிவர்தமைக்கொல்லவந்ததுவும்
எமனிரட்சித்தசேதியும்லோக-மெங்கணும்பாவியபடியால்
வெப்புலிஅஸ்வத்தாமன்வில்விதுரன்-வீட்டுமன்துரோணனன்புள்ளோ...
விறபஞ்சவர்கள்வாழுமவ்வனத்தில்-விரைவொடுவந்துசேர்ந்தனரே.

---

## துருபதன்முதலாகிய அரசர்கள்வந்து ஐவர்க்ஷேமத்தை வினவல்.

விருத்தம் ௬௬.

துருபதனும்பலவேந்தருடனங்குற்றுன்
துரோணன்விதுரன்பீஷ்மாஸ்வத்தாமன்
அரியபதத்தினிற்பணிந்தவந்தராச
ரனைவரையுந்தழுவியுபசாரஞ்செய்து

திருவகலாவிண்டுசிந்துமுனிவனத்திற்
சிறந்திருந்தபஞ்சவர்கள்தம்மிற்பீஷ்மர்
விரிபுகழ்கொள்தருமனுடனவர்மெய்யன்பை
வீசுவாரவர்வனத்திற்பேசுவாரே.

ருரு. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

தன்மாஉனதுபுண்யம்-சாந்தகுணத்
தன்மாஉனதுபுண்யம்.

அநுபல்லவி.

மன்னுங்கிரீடிவில்லால் ஈசனையடித்ததும்
வையகத்தோர்சொலக் கேட்டுநானடித்ததுந்
தன்மா

சரணங்கள்.

க. காலகேயர்நி வாத-கவசர்கள்
கலங்கிடப்பொல் லாத
கோலஅம்பால் நீதம்-உடனேபார்த்தன்
கொன்றுநற்பிரக்கி யாத
சீலஇந்திரனுக்குச் சுகத்தினையளித்ததும்
சிறந்தோர்கேட்டானந்த வாரியிற்குளித்ததுந்
தன்மா

உ. வீமனுபர்கு பேர-வனத்தில்
மேவியேவெகு சூர
ராமெட்சரைத் தீர-மாய்த்துமிக
அருமையாமந் தார
மாமலர்களைக்கொண்டு வந்தசல்லாபமும்
மணிமாலன்தனையும்பின் மாய்த்தபிரதாபமுந்
தன்மா

ங. காளமாமுனி யாலே-விடுபூதத்தின்
கையால்நீரொருக் காலே
மாளுவதைமண் மேலே-நீக்சஅன்பை
வைக்குந்தாயைப் போலே
வாளுறுநமனச்சுப் பொய்கையாநேர்ந்ததும்
மாண்டநால்வர்பிழைத் தேகளிகூர்ந்ததுந்
தன்மா

வீட்டுமன்முதலானோர் ஐவர்க்ஷேமத்தை வினவிவாழ்த்தி
ஊர்க்கேகல்.

விருத்தம் ௬௭.

வீட்டுமன்தன்மனோநோக்கிஉங்கள்சேதி
விசாரிக்கநாங்கள்வந்தோமெனவேவாழ்த்தி
கூட்டமொடுதன்பதிபோய்ச்சேர்ந்தான்மற்றக்
கொற்றவரும்போனார்கள்பின்புதன்மன்
காட்டினிலேபன்னிரண்டுவருஷம்நன்றாக்
கழித்துவிட்டோமோராண்டக்கியாதவாசம்
நாட்டினிலேநாம்கழிப்போமெனவேஎண்ணம்
நாடுவான்வனத்திலுரையூடுவானே.

ஆரணியபர்வம்-முற்றிற்று.

---

ஆரணியபர்வத்தில்-விருத்தம்-௬௭. தருக்கள்-௫௫. திபதைகள்-௨௧.
வெண்பா-௧. கலித்துறை-௩. கொச்சகம்-௪.

———:( * ):———

பாயிரம் ௧-இ-ம், பர்வம் ௩-இ-ம், கூடிய வெண்பா ௩. கலித்துறை ௩.
கொச்சகம்-௪. விருத்தம் ௱அ௭. தருக்கள்-௱௰௩.
திபதைகள் ௩௨. ஆ ௩௪௨.

---

இப்பர்வமூன்றும்
வேலூர்,
ம-௱-௱-ஸ்ரீ, சுப்பராயமுதலியாரவர்களுக்குப்
பொருளுதவிசெய்து, பாடிவிக்கப்பட்டது.

---

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

நான்காவது

# விராடபர்வம்.



## கண்ணன் துதி.

சந்த-முடுகுவிருத்தம் க.

ஏலமுற்றகுழ லாயர்பொற்கொடிக ளேசமுற்கடுகி வுான்மீதில்
ஏறிவைத்தநவ நீதமட்டுலவு பேடுறைத்ததயிர் இனிதான
பாலினைக்கவரு மாயனைப்பெரிய பாறையைப்பதும நிகரான
பாதம்வைத்தொருபெ ணுயமைத்தசிறு பாலநற்கருணை முகிலான
கோலமெய்ப்படிவ ராமனைக்கமல கோதையைப்புணரும் வீரகோனே
கோசலைக்கிருக ணுயுதித்தமறை கூறுபக்தஜன இதையோனே
ஆலினிற்றுயிலு நாதனைக்கரியை யாதரித்ததனி முதலோனே
ஆவலுற்றுபய பாதபத்மமலர் ஆதியிற்றெழுது புகல்வோமே.

---

## தருமன் தம்பிமாரோடு ஆரணியத்தைக்கடந்து மச்சநாட் டெல்லையைச் சார்ந்தபோது தௌமியர் தருமனைப்பார்த்து இனிஒருவருடம் அடங்கியிருக்க வேண்டுமெனல்.

விருத்தம் உ.

களம்பெறுதருமனிளைஞரைப்பார்த்துக்
காட்டினிற்பன்னிரண்டாண்டு
கழித்தனமினியோர்வருஷநாமறைந்து
கழிப்பதற்கிடமெதுவென்னத்
தனஞ்சயன்விராடர்கோனுயர்பதியே
தங்குதற்காமிடமென்றான்
தராதிபன்மகிழ்ந்துவேந்தர்க்குமறையோர்
தமக்குமக்கணம்விடைகொடுத்து
மனங்குழைமாதுமிளைஞரும்பின்னே
வரமுனிதவுமியரோடு
மலைகளுங்காடுங்கடந்துவல்விருளில்
மச்சநாட்டெல்லையைச்சார்ந்து
சினந்தவிர்மனத்தோயாங்களிங்கினிமேற்
செயும்வகையின்னதென்றுணர்ந்து
செப்புமென்றுரைக்கவம்முனியிவர்கள்
திறப்படுஞ்செயல்கள்செப்புவனே.

க. தரு-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

அடங்கியொருவருஷ-மாத்ரமிருக்கவேணும்
அப்பாற்சொல்லுவோங் காணும்

அநுபல்லவி.

துடங்கும்பகைவர்வந்துங் களைக்காணத்தலைமேலே
சொட்டுப்போட்டாலும்நீங்கள் பெட்டிப்பாம்புகள்போலே
அடங்கி

சரணங்கள்.

க. கஷ்டதிசையாற்பன்னி-ரண்டுவருஷம்நீங்கள்
காட்டிற்றிரிந்தீரே அதனாலே-ஒரு
காசுக்கும்பலனில்லை-இந்தநாளைமாத்திரங்
கழித்தாற்பெறுவீர்செல்வம் ஒருக்காலே
துஷ்டப்புலியுங்கார்யத்-தாலொடுங்கிப்பசுவின்
தோலைப்போர்த்துக்கொண்டு புவிமேலே-பரி
சுத்தமாகவேதன்-செயலைமறைத்துவெல்லுஞ்
சூக்ஷமென்னருத்தி ராக்ஷப்பூனையைப்போலே
அடங்கி

உ. பட்டுக்கத்தரித்தாற்போல்-வேலைசெய்தாலும்அன்னம்
படைப்போரொருவேளைச்சு டாமல்-சுடும்
படிக்கொன்றுசொல்லுவார்-அதற்காய்நீங்களும்வீணாய்ப்
பாடஞ்செய்யவாயெ டாமல்
தட்டுந்திருடரைத்தேள்-கொட்டிடிலென்னசெய்வார்
தண்மைபூண்டுகைவி டாமல்-என்றுந்
தலையாலுங்கள்குடியைத்-தாங்கப்பிறந்தமா
தவன்தேடிவந்தாலும்-அவன்கண்ணிலும்படாமல்
அடங்கி

ங. பார்முழுமையுங்கொள்ளத்-துரியன்செய்ததையெண்ணிப்
பார்க்கிலையோயென் கும்பி-மிகப்
பற்றியெரியுதென்ன-செய்குவேனானாலும்
பதறவேண்டாமிந்தத் தம்பி
மார்களுக்குந்திரௌ-பதிக்குமுறுதிசொல்லி
வரவேணுநீதானே வெம்பி-மனம்
வாடுவதழகல்ல-கூடிவருங்காலம்
வந்துவிட்டுதிப்போ-தென்றனற்சொல்லைநம்பி
அடங்கி

## தம்பியர் தருமனைப்பார்த்து, எம்மைப்போல அயலரசர்களிடத்து எவ்வாறுபணிசெய்து காலங்கழிப்பீரென அவர்தேற்றித் தம்பியர்கருத்தையறிதல்.

விருத்தம் ௩.

மதிமுநிவன்சொலத்தருமனுவக்கத்தம்பி
மார்மயங்கியம்முநியைப்பார்த்துப்பார்மேல்
முதிர்புகழ்கொண்டிடுநீயேமகுமுடித்து
முடிமன்னர்வணங்கமணிமுடிமேற்கொண்டாய்
பதியில்வருமெங்களைப்போலொருவர்பாற்போய்
பணிசெய்வதெந்தவிதம்பகருமென்னச்
சதுர்பெறுதம்பியர்கள்மனமகிழவன்பாய்ச்
சாற்றுவான்பெருங்கவலைமாற்றுவானே.

௧. திபதை-இராகம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்.

### கண்ணிகள்.

௧. வீறுந்தம்பிமாரே-யெனக்காய்நீங்கள்யோசிக்க
வேண்டாமித்தனை தூரம்-மிக்கவின்னம்
தாறுமாறாய்க்காலம்-போனாலும்போமோயென்
தன்மத்தின்கெம் பீரம்

௨. தருமதேவன்தந்த-வரத்தினால்பிராமணச்
சந்நாசித்திருக் கோலம்-கொண்டு
நிருபருமெனைத்தொழ-ஆசிகூறிநல்ல
நெறியாய்க்கழிப்பேன் காலம்

௩. ஐயோநீங்களென்ன-செய்வீர்களென்றுரைத்
தடங்காத்துயரம் ஏற்றுக்-கண்ணீர்சோரக்
கையிற்கெதையுடனே-நிற்குங்கனப்ப்ரளய
காலபீமனைப் பார்த்து

௪. அன்றரக்குமாளிகையில்-எரிந்துவதைபடாமல்
ஆவியிடறைத் தீர்த்தாய்-மதத்தால்நம்மைக்
கொன்றுதின்னவந்த-இடும்பன்ஆவியைத்தென்
கூற்றனுலகில் சேர்த்தாய்

௫. தனம்போய்ப்பாண்டவரென்னுங்-கனம்போய்நாடுநகரஞ்
சகலமும்போய்நாம் கும்பிக்-கொவ்வொருவேளை
அனமுங்கிடைத்திடாமல்-வனமுமலையுஞ்சுற்றி
அலையும்போது தம்பி

௬. இழிவில்லாதகுபேரன்-பதியிற்புகுந்தங்கே
எதிர்த்தோரைச்சிந்து சிந்தாய்க்-கிழித்தெறிந்து
அழிவில்லாதபைம்பொன்-மலர்கொண்டுவந்திப்பெண்
ணரசிதனக்குத் தந்தாய்

௭. ஏகசக்ரபுரத்தில்-அந்தணர்க்கடிசள்
ஈடேறப்பகனைக் கொன்றாய்-திரௌபதியை
வேகமாகயெடுத்துப்-போனகிம்மீரனை
விண்பாய்ந்தடித்து வென்றாய்

௮. இன்னங்காட்டில்-அநேகவிதநன்மைகள்
புரிந்தாயன்பு பிரியாதே-மெய்தானெல்லாம்
மன்னவர்க்கிதஞ்சொல்லி-பிழைத்திடவுனக்கொரு
மார்க்கமுந் தெரியாதே

௯. என்செய்வேனென்றனன்-சமையற்செய்திவ்வேந்துக்
கிட்டிந்தவாழ் நாளை-இடரில்லாமல்
தென்பாய்க்கழிப்பேனென்றுந்-திறங்கொள்விக்ரமவீம
சேனனெனுங் காளை

௰. பார்த்தீபனும்வந்துபின்-பார்த்தனருள்முகத்தைப்
பார்த்துக்காண்டவ வனத்தை-அக்கினிதேவன்
சேர்த்தெரிக்கும்போது-கெடுத்தாய்எடுத்துச்சண்டை
செய்தவிந்திரன் சனத்தை

௰௧. உத்திரகுலமக-மேருவுக்கப்பாலும்
உனதுவெற்றிக் கொடியை-நாட்டிமன்னர்
வைத்ததிரைகொணர்ந்து-வைத்தெனக்குச்சூட்டி
வைத்தாய்செம்பொன் முடியை

௰௨. மாலும்வேதனுமறை-நாலினுலுங்காணு
வள்ளலைநீ கண்டாய்-அவர்தரும்வி
சாலப்படையுடனே-தேவர்கள்வலுவினில்
தந்தபடைகள் கொண்டாய்

௰௩. காலகேயநிவாத-கவசர்கள்பூண்டறக்
கருவறுத்திந் த்ராணி-அமிர்தமூட்ட
பாலசூரியன்போல-சிங்காதனத்திருந்தாய்
மகிழவச்சிர பாணி

௰௪. நீயெப்படிக்கொருவர்க்-கூழியஞ்செய்குவாய்
நின்னிலையறி யேனே-என்றும்பல
தேயவேந்தர்க்கொரு-நாயகனுந்தர்ம
சீலனுஞ்சொன் னனே

௰ரு. உருப்பசிசாபம்ஒன்-றுண்டதனுற்பேடி
யுருக்கொண்டிசைக ளாலே-வேந்தனுளம்
விருப்பங்கொளச்செய்தவ-னாங்கிலிருந்திந்நாளே
விலக்குவன்புலி போலே

௰சு. என்றனனகுலனைப்-பார்த்துநீசெல்வமா
இட்டவமுதை யருந்தி-வெயில்படாமல்
நின்றதல்லாலொன்றுஞ்-செய்தவனல்லவே
நின்பொன்னுடலம் வருந்தி

௰எ. அப்பாநீயென்செய்வா-யென்றண்ணன்கேட்கநான்
அசுவலக்ஷணன் ஆக-வேஷங்கொண்டு
இப்பார்புகழ்பரிக்-குலங்காத்திருப்பேனென
எழிற்றன்மன்மகிழ் வாசப்

௰அ. பின்னுமரியசா-தேவனையழைத்துன்னைப்
பெற்றவள்கர மீதும்-உரியதந்தை
யுன்னதமார்மீதும்-எனதுதோளின்மீதும்
ஓயாமலெப் போதும்

௰கூ. மருவியநின்றாள்கள்-சிவக்கக்கல்லுமுள்ளும்
வனத்திலே மிதித்து-நடந்தலையக்
கருவினிற்றானேயுன்-தலையிலெழுதினனே
கமலத்தோன்சம் மதித்து

உ௰. கொடும்பாவியாகுமென்-னுடன்கூடப்பிறந்திந்த
கூத்தாயினிப் பொழிப்பாச்-சொல்கிறேன்கேள்
நெடுங்காலங்கழித்தது-பெரிதன்றிந்நாளையெந்
நெறியில்நின்று கழிப்பாய்

உக. பகரென்றானேனோர்கோ-பாலனாகியங்கே
பசுக்கள்மேய்ப்பவர்க் கிறையா-இருந்துமச்ச
மகராஜன்மகிழ்ந்திடக்-கழிப்பேனிந்தநாளை
வஞ்சகர்க்கெதிர் முறையா

உஉ. என்பதுகேட்டிது-வேநல்லயோசனை
என்றுமனது நைவாய்-திரௌபதி
அன்புறுமுகத்தைப்பார்த்-திக்காலங்கழித்திட
அனமேநீயென் செய்வாய்

உ௩. சொலவேண்டுமெனவண்ண-மகளாய்விராடன்தேவிச்
சுதக்கணைக்கலங் காரஞ்-செய்துகொண்டு
மெலிவுறுதிருப்பேன்-சாமிதேவரீருக்கு
வேண்டாமென்றன்வி சாரம்

௨௪. தைரியங்கொளுமென்றாள்-வயிரிகள்தமைவெல்லத்
தடையில்லைஜெக தீசன்-அருள்நமக்கு
நயமாக்கிடைத்ததென்று-மனமகிழ்ந்தான்செங்கோல்
நடத்துந்தரும ராஜன்

---

## ஐவரும் வன்னிமரத்தில் ஆயுதங்களைவைத்து, வேறுருக் கொண்டு, விராடராஜனிடத்துச்சென்று ஒவ்வொரு தொழில் பெற்றிருத்தல்.

விருத்தம் ௪.

முதிர்புகழ்கொள்ஐவர்மனதறிந்துவேத
முனிக்குளிடைகொடுத்துவன்னிமரத்தைநாடி
அதின்மிசையாயுதங்களெல்லாம்வைத்திடச்செய்
தருச்சுனர்க்குந்தனக்குமல்லாலவைமற்றோர்க்குக்
கதிர்மணிசேர்பாம்புருவாயிருக்கவென்று
கண்ணனடிவணங்கியமெய்த்தருமவேந்துஞ்
சதுர்பெறுநல்லிளைஞர்களுமாதுமான
தருக்கண்டாரறுவரும்வேற்றுருக்கொண்டாரே.

௨. திபதை-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧. அஞ்யாதவாசஞ்செய்ய-அறுவரும்வேறுரு
வாகியேசமைந் தாரே-மேலோர்
சுஞ்யானதிஷ்டியினல்-கண்டுசொல்வோமென்றாலுந்
தோற்றுமலமைந் தாரே

௨. மேவுந்தருமனும்வி-ராடன்சபைக்குமுனி
வேஷத்துடனேசென் றானே-அந்தக்
கோவுஞ்சுவாமிசளாரோ-அருள்செய்யவேணுமென்று
கும்பிட்டெதிரேநின் றானே

௩. கங்குபட்டனென்பெயர்-தருமனுக்குயிர்த்தோழன்
கானகமவர் செல்லவே-நானும்
இங்கேசிலநாள்வாசஞ்-செய்திருக்கமனதில்
எண்ணினேனென்று சொல்லவே

௪. உங்கள்வீடுங்கள்வாசல்-உங்கள்நாடடியேனும்
ஊழியஞ்செய்கு வேனே-ஒரு
சங்கையில்லாதிருக்க-லாமென்றனதுசேட்டுச்
சந்தோஷமாகி னானே

ரு. அடல்வீமசேனன்மடைப்-பள்ளிக்கெசமான்பலா
யனனென்றடுத் தானே-அந்தச்
சுடர்முடிமன்னவனு-மனமகிழ்ந்தவனுக்கத்
தொழிலையேகொடுத் தானே

சு. அன்றலியாய்ப்பாகண்-டளையென்பெயரர்ச்சுனன்
அரங்கிற்றலைமை வாத்தி-நானே
யென்றவிஜயனைத்-தன்மகட்காட்டங்கள்
எல்லாஞ்சொல்லென்றான் போற்றிச்

எ. சவுக்கேந்திநகுலனற்-பரிக்காரர்க்கெசமானென்
றன்பெயர்தர்மக்கி ரந்தி-என்றே
யுவக்குநகுலனையும்-அப்படியிங்கிருவென்ன
உற்றானத்தொழில் முந்தி

அ. இடைக்கோலங்கொண்டுசா-தேவன்கோபாலருக்
கெசமானன்தந்த்ர பாலன்-என்னத்
தொடர்சாதேவனையும்-அவ்வண்ணமாகக்கொண்டான்
தூயநன்னர பாலன்

கூ. காரணத்தாலேவண்ண-மகளாய்ப்பாஞ்சாலிக்கலங்
காரஞ்செய்மாதென் னாமம்-விரத
சாரணியெனக்கைந்து-பெயர்கந்தருவர்கொண்ட
தலைவரென்மேற் காமம்

ய. எவருங்கொள்ளவொண்ணு-தம்மாஉங்கள்கற்பத்தில்
இருக்கவந்தேனிங் நேரம்-என்ற
சுவைமொழிபாஞ்சாலிசொற்-கேட்டசுதக்கணையுஞ்
சொன்னளேயுப சாரம்

யக. இவ்வகையாகவாறு-பேருமாறுவிதமா
யிருப்பதால்விசு வாசங்-கொண்டு
கொவ்வைவாய்ச்செந்திருவுங்-குடிகொண்டாளருஞ்செல்வங்
கொழித்ததேமச்ச தேசம்

---

## வீமன் விராடபுரத்து மல்லர்களைச்செயித்த உக்கிரவாசவன் என்னு மல்லனை வதைத்தல்.

விருத்தம் ரு.

பாண்டவரிப்படியிருந்தார்விராடன்முன்னே
படைகொடுக்குமல்லனயிரம்பேரோடு

நீண்டவுக்ரவாசவன்வந்தங்கிருந்து
நேர்ந்தமல்லர்தமைவென்றான்கங்குபட்டன்
ஈண்டிவனைவெல்லபலாயனனையோடி
யிட்டுவரச்சொல்லுமெனவவனும்வந்தான்
தாண்டுமிவனுயிர்கொள்வாயெனவேதோளைத்
தட்டினான்சண்டைசெய்யக்கிட்டினானே.

உ. தரு-இராகம்-தோடி-சாப்புதாளம்.

பல்லவி.

வந்தமல்லனுக்கும்-பலாயனனுக்கும்-வாய்த்ததேமல்லயுத்தம்

அநுபல்லவி.

எந்தமல்லரையும்வென் றேவிருதுகள்சட்டும்
இணையிலாப்பலவந்தன் எழில்கொள்திசைகளெட்டும்
சந்ததம்புகழும்வி ராடன்சபையைக்கண்டு
தாழ்ந்துதன்தோள்தட்டிக் கொக்கரித்துக்கொண்டு

வந்த

சரணங்கள்.

க. வீரமிகுத்திடு-சிங்கமுஞ்சிங்கமும்
வேகமாநேர்ந்தது போலே-இந்தத்
தீரரிருவரும்-நேர்ந்துகொண்டுசண்டை
செய்யும்போதுவீமன் மேலே-ஊழிப்
பேரிடிவீழ்ந்தது-போலிடித்தான்மல்லன்
பின்புவீமன்கையி னாலே-சேர்த்து
வாரிச்சுழற்றி-யெறிந்தான்நக்ஷத்திர
மண்டலத்திற்குமப் பாலே-பெருந்
தாரணிமங்கை முதுகைநெளிக்கவே
தத்திவீழ்ந்துமல்லன் ரத்தங்கொப்பளிக்கவே
யாரங்கேசேர்வார்வில் வீரருமொளிக்கவே
அம்புவியோரெல்லாம் வெம்பித்தத்தளிக்கவே

வந்த

உ. பட்டமரம்போலே-வீழ்ந்தமல்லன்பின்னும்
பாய்ந்தகோரப்பல்லைக் கடித்து-முன்னே
கிட்டிநிற்கும்வீமன்-ரத்தங்கொப்பளித்திடக்
கெற்சித்துமார்பினில் இடித்துக்-கையால்
கட்டிப்பிடித்தான்-பலாயனனவனைக்
காலினாலேதூக்கி அடித்துத்-துடை

தட்டிநின்றானந்த-மல்லனந்நேரஞ்
சபம்போலுருண்டானே துடித்துப்-பின்னும்
எட்டிமல்லனெழுந் தானவ்டநாகம்
என்னச்சிறியடித் தான்வீமனேக
ஒட்டிவீமனிடித் தானவன்சாக
ஒப்புடனேயாம லிப்படியாக

வந்த

௬, வந்தமல்லன்காலங்-குறுகிக்கொண்டதினாலே
மதியுமயங்கியந்தப் பாவி-நிற்கும்
இந்தவீமனைமண்-மீதிற்றள்ளிக்கொல்ல
எண்ணங்கொண்டு மேவி-காலின்
சந்தில்நுழைந்தோனை-யிருத்திக்காலருத்திர
சாமிபோல்வீமன் தாவி-ரத்தஞ்
சிந்தவவன்றலையைப்-பனங்காய்போற்றிருகித்
தேவருங்காணக்க டாவி-மற்றும்
அந்தக்கோபந்தணி யாமலேயெதிருற்ற
ஆயிரம்பேரையு மடிப்பேனென்றுசுற்றத்
தந்தமையனுரையாற் சாந்தநிலைமைமெள்ளச்
சாருமுன்னமேசோர்க் கத்தினிற்குடிகொள்ள

வந்த

---

## வீமன் மல்லனைவதைத்து, வெகுமதிபெற்றுப்போனபின்பு கீசகன் திரௌபதியைப் பூஞ்சோலையிற்கண்டு விரகப்படுதல்.

விருத்தம் கூ.

படைகொடுத்தமல்லனையேமாய்த்தவீமன்
பார்த்திவனுக்கெதிர்வந்தானவனுமெச்சி
உடைகள்முதலீய்ந்தனுப்பச்சென்றான்பின்ன
ருத்தமிபாஞ்சாலியொருநாள்வனத்திற்
சுடிமலர்கள்கொய்திடக்கண்டங்குநாச
காலகீசகனனுகிமயல்கொண்டிம்மின்
னிடைமயிலாரெனவெண்ணிமதனவேச
மேறுவான்பலவகையாக்கூறுவானே.

௬. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

இங்கெதிராகநிற்கும்மங்கையர்க்கரசி-யாரோ-யென்ன-பேரோ

அநுபல்லவி.

கொங்கலருஞ்சோ லையிலேயொருக்காலே
கும்பிடப்போனதெய்வங் குறுக்கேவந்ததுபோலே
இங்கெதி

சரணங்கள்.

க. சந்திரபிம்பமுகவொளி மின்னப்-பசுந்
தங்கமிவள்மெய்யதிசய மென்னக்
கந்தமலர்வாளிய நங்கனும்வந்துசுற்றக்
கண்களிப்பாகத்தெய்வப் பெண்களுங்கண்டுநத்த
இங்கெதி

உ. அமிர்தகுடங்களென்று கூறப்-பெற்ற
அருந்தனங்கள்கச்சை மீற
விமலரத்நப்பணிகள் விளங்கஅதிவைபோக
விபவசாம்பிராச்சியநித்திய சுபவலங்கிரதமாக
இங்கெதி

ந. சோதிமின்னிடைக்கொடி யலங்கச்-சித்திரத்
தோகைமாமயிலிய விலங்க
காதளவாகவோடிக் கலகமிடுமிரண்டு
காவிவிழிகளாலென் னுவியைக்கொள்ளைகொண்டு
இங்கெதி

---

## கீசகன் திரௌபதிகாலில் விழுந்துவேண்ட, அவள் அவனுக்கு நீதிவசனஞ்சொல்லல்.

விருத்தம் எ.

காதகக்கீசகனிவ்வாறெண்ணித்தோழி
களைநோக்கியிம்மயிலாரென்றுகேட்க
மாதர்மகிழ்வண்ணமகளென்றார்துன்ப
மயல்மிகுத்தப்பொற்கொடிதன்பதத்தில்வீழ்ந்தென்
வேதனைதீர்த்துயிர்ப்பிச்சையிட்டாளென்றாள்
விடுவதிலையுன்னடிமையென்றான்கேட்டுத்
தோதகாவென்னசொன்னாயென்றுநெஞ்சந்
துடிக்கின்றாள்நீதிசொல்லியிடிக்கின்றாளே.

ச. தரு-இராகம்-பைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

இந்தநினைப்புநினையாதே-ஐயோ-ஈதுன்னிலைக்குத்தகாதே

அநுபல்லவி.

நிந்தைக்குடலெடுத்த கீசகா இந்நாடு
நிலைகெடவுனக்கொரு நிமிஷத்தில்வருங்கேடு
இந்த

சரணங்கள்.

க. அதிகவல்லமைபெற்றிவ்-வவனிக்குள்தமக்கெதி
ரற்றவிக்கிரமபுய ஜெயவீரர்-நிறை
அந்தரத்திலுலவுங்-கந்தருவர்களைவர்
அன்பரென்றனையாளும் அதிகாரர்
இதையறிந்தாலுனையும் உன்குலத்தோரையும்
இன்னமுன்னுடன்கூடி யிருக்கும்பலபேரையும்
சிதையத்துண்டுதுண்டாக வெட்டிக்காகம்பருந்து
தின்னும்படிக்கிடுவார் சீராச்சிறுவிருந்து
இந்த

உ. பரஸ்த்ரீகள்கவனஞ்செப்-பனத்துமில்லாதிருப்
பதுவேமன்னவர்க்குச் சீலம்-அந்தப்
படிநடவாதவர்-நரகவேதையையனு
பவிப்பாரையோநெடுங் காலம்
திரமாஇதையுனது சிந்தையிற்பாராட்டிச்
செகத்தினிலுன்குடிச் சீரைநிலைக்குநாட்டிப்
பெரியநெருப்பென்றென்னை யெண்ணிக்கொள்ளுனதாவி
பிழைக்கக்கொடுத்தேனேடிப் பிழைத்துப்போடாபாவி
இந்த

ந. நிலவரந்தெரியாமல்-கெட்டலைந்துபாவ
நெறியைத்தேடிக்கொள்ளுங் குடிகேடா-நான்
நினைத்தாலிந்நேரம்நீ-நீறுவாய்த்தருமத்தை
நெடுந்தூரம்யோசித்தேன் அடமூடா
உலகிலினியாகிலும் உத்தமப்பேரொடு
உனக்குத்தகாதபடி பிடிக்குமதியைவிடு
சொலியுங்கேளாவிட்டால் துயாத்துக்குள்ளாவாய்
துள்ளுரூ ஆடிமாடும்போற் சுழுக்கிலழிந்துபோவாய்
இந்த

## திரௌபதி சுதக்கணையினிடத்துவந்து இச்செய்தியைச் சொல்ல அவள் அவ்விடத்துவந்த கீசகனைப் பார்த்துக் கோபித்தல்.

விருத்தம் அ.

சுந்தரி திரௌபதியிவ்வாறுரைத்துப்போய்ச்
 சுதக்கணைக்குச்சொலவவள்நல்வார்த்தைசொல்லிச்
சிந்தைதனைத்தேற்றிடும்போதவனுமங்கே
 சேர்ந்தனனப்பதிதனைப்பார்த்தையோஇந்த
நிந்தனைக்கோவுடலெடுத்தாய்சூர்யவம்ச
 நெறிகெடுத்தாய்நிர்மூடாநீயெங்நாளும்
இந்தவழிவரவேண்டாம்போடாவென்றே
 யேசினாள்கண்டிதமாய்ப்பேசினாளே.

ரு. தரு-இராகம்-அசாவேரி-சாப்புதாளம்.

பல்லவி.

கீசகா இனி-யிந்தவழிவராதே-கேடுவருந்தப்பாதே

அநுபல்லவி.

பேசுமன்னவ ரெவர்களுங்கிலி
பிடித்துநடுங்கிட அமர்செயும்புலி
வாசமச்சநாட் டினிலொன்றுண்டென்று
மதிக்கும்பெரும்புகழ் மறைந்துபோச்சுதின்று
கீசகா

சரணங்கள்.

க. சீலமனுவிக்கியான நூலின்வழிதப்பாது
செங்கோல்மன்னர்நடந்தால் தீதிலைப்புவிமீது
வேலிபயிரைமேயும் விதமாகக்கொடுந்தீது
வேந்தரேசெய்திடில் வேறொருகதியேது
நாலுபேர்களும் பழிக்கலாச்சுது
நம்புமெங்கள்மனத் தெண்ணம்போச்சுது
கேலியாமிந்தப் பழிப்பெங்கேபோகும்
கெட்டபால்நல்ல பாலெப்படியாகும்
கீசகா

உ. பெய்யெனமழைபெய்யுஞ் சற்பின்மங்கையர்மனம்
பேதித்தொன்றுசொன்னால் நிற்குமோதுரைத்தனம்
மையலானுன்னைப்போல் மதியங்கிக்கனம்
மாறிக்கெட்டோரிந்த வமிசத்திலிலைமுனம்
ஐயோஇந்த்ரனிவ் வெண்ணத்தால்மறு
வடைந்தொடுங்கின தறிந்துநீசிறு
மையற்சேஷ்டையால் செய்தாய்வெகுநேத்தி
பார்த்திவன்றனக் கிதுவேஅபகீர்த்தி
கீசகா

ங. கொட்டங்குலைந்திட நீ கற்புடையாள்மேலே
கொண்டவள்வாய்வசை கொண்டாயதுமண்மேலே
வட்டுவத்தின்மீதில் சொட்டுபோட்டாற்போலே
வம்சந்தனக்கெல்லாம் வந்ததேயொருக்காலே
கொட்டுந்தேளைப்பிள்ளைப் பூச்சியென்றெண்ணும்
கொடியரைத்தெய்வந்தெண் டனையேபண்ணும்
தொட்டநோய்க்குண்டு மருந்துகொடும்விதி
தொலையமருந்தே திதுவோவுன்கதி
கீசகா

---

## கீசகன் விரகத்தாற் றுன்பமடைதல்.

விருத்தம் கூ.

தையல்சுதக்கணையிந்தவகைசொல்லிவைதிடக்கீசகனுங்காமப்
பையல்பின்னேதுரத்தவரண்மனைக்கேகிமலரணைமேற்படுத்துவானிற்
றுய்யமதிமெய்ம்முழுதுந்தகிக்குமனலால்வெதும்பித்தொலைக்கவொண்ணு
மையலினாற்றன்சீர்த்திமாற்றுவான்மதன்படையைத்தூற்றுவானே.

சு. தரு-இராகம்-காபி-சாப்புதாளம்.

பல்லவி.

எப்படிசெயிப்பேன்-இந்தவருத்தம்-எப்படிசகிப்பேன்

அநுபல்லவி.

அப்புமாரியைப்போலே அம்புமாரிபெய்தனை
ஆவியழிக்கவந்த பாவிமன்மதனை
எப்படி

சரணங்கள்.

க. செந்தீயெனஎழுந்து தேடிமிகச்சதியைச்
செய்யவென்னெதிர்வந்த வெய்யவிண்ணின்மதியை
எப்படி

உ. காக்கையுஞ்சகியாவி காரவிசையோயிலைக்
காட்டிவீண்சண்டைகள் மூட்டுமிந்தக்குயிலை
எப்படி

ங. விரகத்தழலைமூட்டி வெதுப்பப்பொதியமலை
மீதிலிருந்துவரும் பாதகத்தென்றலை
எப்படி

ச. காயம்வெந்துபொறி கலங்குமென்நாத்தைக்
கண்டுபார்ப்பரிக்கும் அகன்றசமுத்திரத்தை
எப்படி

## சுதக்கணை திரௌபதியை கீசகனிடத்து மலர்கொண்டு போகும்படி வேண்டல்.

விருத்தம் ௰.

இந்தவகைகீசகன்றுன்படைந்தம்மாதை
யென்கண்ணாற்கண்டாலும்பிழைப்பேனென்றான்
அந்தமொழிசகிகள்சுதக்கணைக்குச்சொன்னா
ரவள்கேட்டப்பாவிதனக்கனர்த்தகாலம்
வந்ததெனநினைத்தழுதுவாடிநெஞ்சம்
வருத்தமுற்றுக்கற்பினிலோங்கியபாஞ்சாலி
விந்தைமலரடிதனில்வீழ்ந்தஞ்சிவாயை
மெல்லுவாள்மனங்கரையச்சொல்லுவாளே.

எ. தரு-இராகம்-தன்னியாசி-சாப்புதாளம்.

பல்லவி.

இந்தவேளையென்றன்சொல்லை-நீமறுக்காதே-என்னுயிராம்வண்ணமாதே

அநுபல்லவி.

புந்தியிலென்றம்பிக்குப் பூமாலைநீகொண்டு
போய்த்தந்தாற்றானெமக்கிப் புவிமிசைவாழ்வுண்டு
இந்த

சரணங்கள்.

க. கடைக்கண்ணருளினாலே காமாக்கினியால்வேகும்
காளையைநீபார்த்தால் கருத்தின்மையலேகும்
தடைசொன்னாலவனுயிர் தரியாதழிந்துபோகும்
சற்றேநகைத்தோர்க்கெல்லாம் மெத்தநகைப்புண்டாகும்
இந்த

௨. தீமையாலவன்மாண்டால் செகத்திலெங்கள்சீருஞ்
செல்வமுஞ்செங்கோலும் திகந்தமுலவும்பேரும்
போமப்பாலெம்மையோர் பொருட்டாமதியார்யாரும்
பூவிற்றக்கடைதனில் புல்விற்கவந்துநேரும்
இந்த

௩. அவனியிலுன்றெய்வக் கற்பேயுனக்குவேலி
யாயிருக்குததற்கே தழிவுபுண்ணியசாலி
இவனாலிவ்வூரிலிந்த மட்டும்பகைவர்சோலி
இல்லாதாலென்கழுத்தில் லிருக்குதிந்தத்தாலி
இந்த

## திரௌபதி கீசகனிடத்திற்போய் மலர்கொடுத்துத் திரும்பும் போது அவன் துரத்திவர அதை விராடன் சபையில் அவள் முறையிடுதல்.

விருத்தம் ɓக.

மாதரசியிவ்வாறுசொல்லித்தந்த
    மலர்மாலைதனைவாங்கிக்கொண்டப்பாலே
ஆதவனைத்துதிசெய்துசென்றன்னோனுக்
    கதையீந்தாளவன்பார்த்தங்கடங்காக்காம
வேதனையாற்றுரத்திவந்துகைதீண்டாமுன்
    வெங்கதிர்ச்சூரியன்விடுகிங்கரன்காற்றுயப்
பாதகனைத்தள்ளவிவளரசன்முன்போய்ப்
    பதறுவாள்நீதிசொல்லிக்கதறுவாளே.

அ. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

என்னென்றுகேட்கவொருதிக்கில்லையா - விராட
மன்னனேபிதுசெங்கோல் நிலையா.

அநுபல்லவி.

மன்னுமென்கற்பதனை பின்னஞ்செய்யநேரிலே
வந்தோனையரிகரி யிந்தப்பாழுமூரிலே
என்

சரணங்கள்

க. விதிவிலக்குகள் போச்சுதா - வெள்ளரிக்காய்
விற்றப்பட்டண மாச்சுதா - ஐயோவிந்த
சதிகாரப்பாவிபர தாரமெனும்பேதத்தைச்
சற்றுநினையாமல்மதத் தாற்செய்யநீதத்தை
என்

உ. மன்னுவுன்கர்ப்ப வாசந் - தனிலிருக்க
வந்ததறிந்து மோசம் - நினைந்துபாவி
இந்நாரினியார்களென் றெண்ணுமலேவந்தும்
என்னைத்துரத்திவந்த இத்தனைபேர்பார்த்திருந்தும்
என்

ங. காமமேலிட்டால் தாயைப் - புணரயார்தான்
கருதுவார்கொடும் பேயை - நிகர்த்ததுரோகி
ஓமவமுதையிச்சித் தோடுநாயைப்போல்மட்டி
யுற்றுனேசிச்சியங்கே சுற்றேறநில்லென்றதட்டி
என்

## திரௌபதி வீமனிடஞ்சென்று கீசகன்செய் கொடுமையைச் சொல்ல அவன் கொதித்துத் திரௌபதியைத் தேற்றல்.

விருத்தம் ௰௨.

மங்கையிதுசொலிச்சென்றாள்கீசகன்றன்
மணிமுடியைப்பிளக்கமரம்பார்த்தவீமன்
கங்கன்மொழியாற்சமையல்வீட்டிற்சென்றான்
காவலனுமனங்கலங்கிமனைக்குட்சென்றான்
தங்கிருளில்வீமனிடஞ்சென்றேயன்னை
தனித்துரைத்தமொழிதனைக்கேட்டவனும்பொங்கி
இங்கிதுகேள்கற்பின்மடமயிலேயென்ன
இனஞ்சொல்வான்றன்மனத்தின்சினஞ்சொல்வானே.

௯. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

அழவேண்டாமடமயிலே-புட்கார்ந்-தல்லோபடுக்கவேணும்

அநுபல்லவி

பழிவருமென்றஞ்சாத பாவிதுடித்துச்சாகும்
படிச்குச்சம்பாத்தாள்போல்வாரி யடிக்கவென்றனாலேயாகும்

அழ

சரணங்கள்.

௧. எழுங்கனல்போல்சீறியப்-போதேயவனைக்கொல்வே
னெனைக்கண்டோர்கள்யாரிந்த நிர்வாகி - வீம
னேயென்றுரைப்பாரப்பா-லொன்றுபோயொன்றாய்ப்பட்ட
தெல்லாமாற்றிற்கரைத்த புளியாகிப் - பின்னும்
பழங்குருடிக்கதைபோ லாமென்றந்நேரந்தாங்கிப்
பார்த்தேனினிக்கொல்கிறேனெம் மாத்ரமவனோர்சுண்டாங்கி

அழ

௨. கருதுங்குசவருக்குப்-பலநாள்வேலைகைத்தடி
காரர்க்கொருநாள்வேலை யெனல்போலே - வீமன்
காரியத்தைக்கெடுத்தா-னென்பாரெனவடங்கிக்
காலம்பார்த்திருக்கிறே னொருக்காலே - யினிப்
பொருவில்மாதரைச்சேரத் திரியுமப்பேயன்சள்ளை
பொட்டெனவடக்கிக்கொல்லா - விட்டால்நானென்னவாண்பிள்ளை

அழ

௩. மயல்கொண்டவனுனைக்கும்-வருவானீயொருகாரிய
மாத்ரஞ்செய்யாதிரிக்குநீ தனியாகச் - சூத

வனத்திற்குவாவுன்றுசை-தனைத்தீர்ப்பேனென்றால்வரு
வானவனையிடித்துன் துயர்போக - அவன்
உயிரையுண்ணுமற்றண்ணீ ருண்டாலுங்கோரத்தத்தை
யுண்டவனுனுன்கண்ணினுற் கண்டபின்சொல்லென்சமர்த்தை

அழ

---

## கீசகன்வதை.

விருத்தம் ௰௬.

வீமன்மொழியாற்றெளிந்தமாதுசென்றவ்
விதமாகச்சொலவதனைமெய்யாநம்பும்
பாமாகீசகன்வருமுன்வீமனந்தப்
பாவையுருக்கொண்டவளையோர்பால்வைத்தே
மாமரச்சோலையிலிருந்தான்காலனூர்க்கு
வழிதேடிவருவதுபோலவனும்வந்து
காமநயம்பேசியடிதொட்டவும்நெஞ்சங்
கடுத்திட்டான்வீமனமர்தொடுத்திட்டானே.

௰. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-சாப்புதாளம்.

பல்லவி.

வீமசேனனுக்கும்-கீசகனுக்கும்-விளைந்ததேசண்டை

அநுபல்லவி.

சாமிமுகுந்தனையுந் தலைகீழாக்கிவென்ற
தந்த்ரவிக்ரமசரா சந்தனையுங்கொன்ற
வீமசேன

சரணங்கள்.

க. ஒருவரையொருவர் பிடித்தார் - கையால்
ஒருவரையொருவர் அடித்தார் - தோளால்
ஒருவரையொருவர் இடித்தார் - பல்லால்
ஒருவரையொருவர் கடித்தார் - பின்னும்
இருவரைகளெனவே யெதிரெதிராமேவி
இடிகுமுறுவதுபோ விடர்படவேகூவி
இணைவிழிகளனலா யெழுபொறியேதூவி
எழுமலையுமடியோ டிடிபடவேதாவி
எதிர்த்தார்முழுமூடனுங் கதித்தானுயர்வீமனும்
இரைத்தேசத்தசிந்தெங்கும் பரக்குங்கற்பகாலம்பா
ரிடத்தேயுற்றதென்றஞ்சும் படிக்கங்குக்ரகோபஞ்சேர்ந்
திணைத்தோள்தட்டியெங்கெங்கும்-நடுக்குற்றிடவேநேர்ந்தார்
இவர்களிருவரி - லரியமாருதி - எவருமகிழ்வுற - மும்பர்தம்பதி
எரியமுதிர்சின - மடரவேயெதிர் - கறுவிவருமவ-னுயிரதோகதி

யினிலழுந்திட - விருளகலமுன - மிணையிலவன்கொலை - புரிவதழகென
எண்ணமுற்றெதிர் - நண்ணி யற்பனை
திண்ணமுற்றொரு - கண்ணிமைக்குமுன்
எற்றினானுரம் நைந்துவிரியவே
பற்றினான்தலை மண்டைநெரியவே
சுற்றினான்குடல் தொந்திசரியவே
குத்தினானுதி ரங்கள்சொரியவே
இந்தவகையடித் தவனியதிரவே
நின்றவனைமனக் கபடனெதிரவே
முந்துமவனுளத் திகலுமுதிரவே
விந்தைமிகுமுடித் திரளுமுதிரவே
எவரும்வாடவே - சமனுமோடவே - யவனியாடவே - கவலைநீடவே
இருக்குமவன்காலைக் கறுவிநின்றுபற்றி
உருக்குலையமோதி விறுவிறென்றுசுற்றி
இந்தலோகமும் - அந்தலோகமும் - எந்தலோகமு - நொந்துவேகவே
இகலுமவனுயி ரகலவாட்டிடும்
மிகவுமுலகினி லிசையைநாட்டிடும்
வீமசேன

---

## கீசகனிறந்தபின்பு அவன் தம்பிமார்கள்வர அவர்களையுங் கொன்று இருவரும் வீடுவந்து சேர்தல்.

விருத்தம் ௰௪.

வதைந்தகீசகன்கோரதேகந்தன்னை
வந்தவன்தம்பியர்நூற்றுமூவர்கண்டிவ்
விதந்தனிலேதேவர்களால்மாள்வதற்கு
மெல்லிவண்ணமாதேகாரணமென்றுன்னி
சுதக்கணைக்குமோதியிவன்தன்னைக்கொண்டு
சுடவேகவவள்கதறக்கண்டவீமன்
எதிர்ந்தமரங்களைப்பிடுங்கிஅவ்வரைமாய்த்தே
இடன்வந்தான்வண்ணமாதுடன்வந்தானே.

விருத்தம் ௰௫.

வீமனிறந்திடுகீசகன்தேகத்தை
வீறுகைக்குள்ளேமடக்கியோர்பால்நின்ற
மாமயிலாந்திரௌபதிதன்விதனம்நீங்க
மாமரத்தைவேரினுடனேபிடுங்கி
நேமமுறுமக்கினியுண்டாக்கியந்த
நெருப்பின்சுவாலையினிற்காட்டியபின்றானும்
க்ஷேமமுளமாதும்போயிருப்பிடத்திற்
சேர்ந்திட்டார்களிப்பைநெஞ்சிற்சார்ந்திட்டாரே.

## கீசகனும், அவன் தம்பிமார் நூற்றுமூவரும், காந்தருவரால் இறந்தாரெனக்கேட்ட துரியோதனன் காந்தருவ ரென்பது பாண்டவாளென்று உறுதியாகச் சொல்லல்.

விருத்தம் ௰௬.

தொந்தகீசகனுமவன்தம்பிமார்நூற்
றொருமூவர்மடிந்தவகைதூதர்சொல்ல
மந்திரஞ்சேர்புஜாசலவைபோகயோக
மன்னனுஞ்சர்ப்பகேதனன்றான்கேட்டு
அந்தக்கீசகன்றன்னைக்கொல்வோரிந்த
அவனிதனில்வேறில்லைஐவர்தம்மில்
பந்தமுளவீமனன்றிக்கந்தருவரில்லை
பார்ப்பீர்தாமென்சொலைநீர்ஏர்ப்பீர்தாமே.

௰௧. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

கெந்தர்வரென்போரே-பாண்டவர்வேறில்லை-கெட்டியாய்நம்புமென்சொல்லை

அநுபல்லவி.

கொந்தார்முடிமன்னரே யென்சொல்விரண்டோ
குட்டிச்சுவரில்முட்டிக் கொள்ளவெள்ளெழுத்துண்டோ
கெந்

சரணங்கள்.

௧. எனக்குநல்லகாலம் இருக்கும்போதவர்சிந்தை
யிவ்வண்ணமாகாம லேன்போஞ்சிறுகுழந்தை
தனக்குந்தெரியுமிது சந்திக்குமுச்சந்தை
தன்னிலடித்ததற்குச் சாக்ஷியேன்வெகுவிந்தை
கெந்

௨. சணப்பன்வீட்டுக்கோழி தனக்குத்தானேயோடி
தனைமாட்டிக்கொண்டாப்போல் தருமேவினையைத்தேடி
மனக்கவலையுறவிம் மச்சதேசத்தைநாடி
வந்தார்கைப்புண்ணுக்கேன் மன்னரேகண்ணாடி
கெந்

௩. பெருவாசற்படிதலை பிளந்திடவேயிடித்த
பின்னுங்குனிந்திடாத பேர்போல்மதம்பிடித்த
தருமன்தேவானபேர் தம்முன்யான்படித்த
சபதமுடிந்திடக்கி சசன்றனையேமடித்த
கெந்

## துரியோதனன் கீசகனைக்கொன்றது காந்தருவரல்ல வீமனே யென அதையறியத் திரிகர்த்தன் விராடதேசம்வநது அவன் மாடுகளைவளைக்க, விராடன் அவனோடு சண்டைசெயல்.

விருத்தம் ௰எ.

கள்ளகயோதனனிதனைச்சொல்லக்கேட்ட
காளைதிரிகர்த்தமகாராஜனோங்கித்
துள்ளியெழுந்திருந்தெனக்குவிடைகொடுத்தாற்
சொல்லுமிந்தக்கணத்திலுன்சத்துருவினுட்டை
கொள்ளையிட்டுப்பசுக்களையுங்கொணர்வனைவர்
கூடியவணிருந்திடிலிப்போர்க்குநேரே
யுள்ளபடிவந்திடுவார்பின்னுங்காட்டி
லோட்டலாஞ்சபதமிலைநாட்டலாமே.

விருத்தம் ௰அ.

மன்னவனுந்திரிகர்த்தன்சேனையோடு
வந்துதெக்ஷணகிரிவாழ்பசுக்குலத்தைப்
பின்னலுறவேமடக்கிக்கொடுசெல்கின்றான்
பிசகில்லைவிராடபூபதியேயென்ன
வன்னவன்கேட்டதிகோபமாகிச்சேனை
யாவையுஞ்சேர்த்துடனேகியவனைக்கண்டு
தன்னரியவில்வளைத்துக்கோக்குலத்தைத்
தடுத்திட்டான்சண்டைசெய்யத்தொடுத்திட்டானே.

௰உ. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

விராடராஜனுக்கும்-திரிகர்த்தராஜனுக்கும்-விளைந்ததேசண்டை

அநுபல்லவி.

தராதலங்களெல்லாந் தலைகிழாகவண்ட
தகடுபடபடென்னத் தாவிவருமுத்தண்ட
விராட

சரணங்கள்.

க. விருதுகள்பலபேசி-வந்ததிரிகர்த்தராஜன்
விக்கிரமவில்லைக்கையில் தாங்கி - மகா
விசையாகவேநாணிட்டு-கொர்ச்சிக்கவேவிராடன்
வீரசிங்கம்போல்தேரில் ஓங்கி
வரையொத்தவொருபெருஞ்-சிலையைப்ப்ரபலஆர
வாரஞ்செய்துகையினில் வாங்கி - ரண
மண்டலத்திலுள்ளோரும்-விண்டலத்திலுள்ளோரும்
வாயொடுவாய்பேசாமல் ஏங்கி

வெருவிடவேபல அம்புகளைத்தொடுத்தான்
வெய்யதிரிகர்த்தனதை ஒருகணையாற்றடுத்தான்
இருகணைவிட்டவன்தேர் சாரதியைப்படுத்தான்
எமனுக்கிரையாஅவன் இவன்சேனையைக்கொடுத்தான்
இருவருமுகிலெனச் சரமழைபொழிய
இருவர்தங்கொடிகளுங் கொடைகளுங்கிழிய
இருவர்தங்கரிபரி தேர்களுமழிய
இகல்யுகமுடிவென எவர்களுமொழிய

விராட

௨. பின்னுந்திரிகர்த்தனொரு-மணித்தேர்மீதினிற்சீறிப்
பிரளயகாலருத்ரனைப்போல் சீறிக் - கணை
பெய்யவிராடனவன்-சாரதிதலைதன்னைப்
பிறைமுகவாளியொன்றால் நூறி
அன்னவன்மணிமார்பு-சல்லடைக்கண்களாக
ஆயிரங்கணைகளைத் தூறிக் - களை
யாக்கினனவன்தேரில்-சாய்ந்தக்கணத்தினிற்றன்
ஆயாசத்தினையங்கு மாறித்
தன்னிகரில்லாதசர்ப் பத்தைப்போலமறித்தான்
தகைசேர்விராடன்செங்கைத் தனுவைரண்டாய்முறித்தான்
மின்னுமிவனவன்மேல் வெற்றிவேலைத்தெறித்தான்
மேவிவரும்வேல்ரண்டாய் விழத்ரிகர்த்தன்தறித்தான்
விதவிதமிருவருங் கணைமனம்வேக
விடுபொழுதலைகட லினிலுமமோக
ரதகெஜமொடுவரு படைகளுஞ்சாக
ரணகளமுழுவதும் பிணமலையாக

விராட

௩. வந்ததிரிகர்த்தன்-விராடன்சேனையோடு
மாளஒருகணை எய்தான் - அதை
மச்சநாட்டரசன்கண்-டோங்காரஞ்செய்தொரு
வாளியினாற்பொடி செய்தான்
செந்தீயெனத்திரிகர்த்தன்-கண்சிவந்துமூன்று
திவ்யாஸ்திரமிவன்மேல் பெய்தான் - துணி
செய்ததனைவிராடன்-இந்தமன்னனையொரு
த்ரணமாகவேமதித்து வைதான்
சிந்தைகொதித்தவனன் னூறுகணைசொரிந்து
சிந்துசிந்தாயிவன் சேனைகளையரிந்து
முந்தினன்விராடனதைக் கண்டனல்போலெரிந்து
முத்தலைச்சூலமெய்தா னந்தைபவன்தெரிந்து

முறித்திடவிராடனோர் சுடுகணைசாட
முடுகினனமரரு மிகுதிகில்கூட
குறித்திடுசரமழை படைகளைச்சாட
குருதிகளிரையலே கடலெனவோட
விராட

திரிகர்த்தன் தோல்வியடைந்து அத்தினபுரஞ்செல்ல துரியோதனன் ஏழக்குரோணிசேனையோடு மச்சநாட்டையடைந்து உத்தரகிரியிலுள்ள பசுக்களை மடக்க அச்செய்திகேட்டுச் சுதக்கணை துக்கிக்க உத்தரகுமாரன் தன் வல்லமையைத் தாய்க்குரைத்தல்.

விருத்தம் ௰௬.

சண்டைசெய்விராடனைத்த்ரிகர்த்தன்தன்றேர்
தனிற்பிணித்துச்செல்லவதைத்தருமராஜன்
கண்டிளையவீமனைக்கண்காட்டப்பாய்ந்தக்
காவலனைவிடுத்தவனைப்பிணித்துவந்தான்
அண்டுகங்கன்விடுவித்தான்சுயோதனன்பின்
அணிகொள்மச்சநாட்டின்வடபாலில்வந்து
தண்டிறங்கிப்பசுக்குலத்தைமறிக்கக்கேட்டுத்
தாய்சொலஉத்தரனும்வெகுவாய்ச்சொல்வானே.

௰௩. தரு-இராகம்-கல்யாணி-சாப்புதாளம்.

பல்லவி.

இந்தப்படையைவெல்வ - தெனக்குப்பெரிதோசும்மா
இதற்கஞ்சவேண்டாம் அம்மா

அநுபல்லவி.

செந்தழற்கண்ணனையுஞ் செயித்த-விஜயன்நல்ல
சித்திரசேனனு லன்றுமுனைசிந்தச்
சிதறித்திசைகெட்டுக் கதறியோடிவந்த
இந்தப்

சரணங்கள்.

௧. பலமில்லாத்திரிகர்த்தன் பதறிநேற்றையத்தினம்
பட்டபாட்டையெண்ணிப் பாராமலேனின்னம்
கலகமென்றனைப்பதங் காணவந்தாரோபனங்
காட்டுநரியுஞ்சல சலப்புக்கஞ்சுமோமனம்
கடல்போலவரிருங் தாலுமென்னகாணும்
கருக்கப்பருத்திக்கு நெருப்பெத்தனைவேணும்
இந்தப்

௨. இடும்புபேசிவந்த இம்மன்னர்தம்வலி
யென்வலிதெரியலாம் இக்கணமெனச்சொலிக்
கொடும்பாம்பொன்றுசீறினல் கோடானகோடியெலிக்
கூட்டம்நடுநடுங்கிக் கொள்ளாதோபெருங்கிலி
குலவுபெருமலை களையுந்துண்டுதுண்டாக்
கொத்திப்பிளப்பதுவுஞ் சிற்றுளியேகண்டாய்
இந்தப்

௩. சிங்கக்குட்டியைப்போலச் சேனைகளில்திரிந்து
சிலைவீரரையுமோடச் செய்தென்கணைசொரிந்து
செங்குருதிகளோடச் சிரஞ்சிரமாயரிந்து
சின்னப்பேய்விருந்தின்று செய்வேனிதைத்தெரிந்து
சித்திரமணித்தேர் விடுக்குநற்குணஞ்
சிறந்தசாரதி யிருந்தாலொருத்க்ஷணம்
இந்தப்

---

## விரதசாரணி உத்திரனுக்குப் பேடியின் ரதசாரத்திய வல்லமை யுரைத்தல்.

விருத்தம் ௨௰.

உத்தரன்சொற்கேட்டிடுபாஞ்சாலிகிரீடிக்
குரைசெய்ய அவனெனைத்தேர்ப்பாகனுக
இத்ததியிற்செய்வையெனில்நன்மையுண்டா
மெனவவளுமுத்தரையுமிவன்பால்வந்து
சத்துருக்களழிந்திடத்தேர்விடுக்கும்பாகன்
தரையிலிந்தப்பேடிநிகரிலையெனக்கேட்
டெத்திநீயெனப்பழிக்கவண்ணமாதன்
பேற்றுவாள்விஜயனிசைசாற்றுவாளே.

௰௪. இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

பல்லவி.

இந்தப்பேடிபுக - ழெடுத்துரைக்கமெய்யா
யெந்தனுலேயாகா தையா

அநுபல்லவி.

சந்ததமுன்தங்கைதனக் கிசைநடஞ்சொல்லும்
சகமுற்றிலுநிறைந்த புகழ்பெற்றினிமைபுல்லும்
இந்த

சரணங்கள்.

௧. காண்டவவனத்தைச்செங் கனலுக்கிரைகொடுத்த
காலத்திலும்நிவாத கவசர்களைப்படுத்த

ஆண்டுங்காலகேயர்மே லரியசமர்தொடுத்த
அன்றும்விஜயனுக்கு நன்றாய்ரதம்விடுத்த
இந்த

௨. இசைவீணைகோணலா யிருந்தாலுமதனுதம்
என்னகோணுமோசிவ்டிப் பெத்தனையோபேதம்
வசையிலிவனைத்தேரில் வைத்தேறிலோர்சேதம்
வாராதுபாகர்க்குள் யாரினுமுதற்பாதம்
இந்த

௩. எட்டிச்சத்துருக்கள்வந் தெதிரிட்டிருக்கும்வேளை
இந்தயோசனைவேண்டாம் இவனுடனிருதோளை
தட்டியெழுந்துசெல்லச் சமரிலவர்கொள்கோளைத்
தரைக்குள்யார்க்குநீயே யுரைக்கப்போகிறாய்நாளை
இந்த

---

## உத்தரகுமாரன் தேரேறிப் போர்க்குச்சென்று சேனைகளைக் கண்டு பயந்து முதுகிட்டோட, பேடிசென்று அவனுக்குப் புத்திசொல்லல்.

விருத்தம் உக.

தையல்திரௌபதியுரைக்கக்கேட்டுப்பேடி
 தனையிரதமலங்கரிக்கச்சொல்வித்தானும்
வெய்யபோர்க்கோலமொடுதாயைப்போற்றி
 விடைகொண்டானுத்தரையென்பொற்பாவைக்குக்
கொய்யுமன்னர்கொடிமுடிகளாடையாவுங்
 கொண்டுவாவெனச்சொன்னாள்படையைக்கண்டான்
உய்வதாரிவர்கண்முனமெனப்பின்பாய்ந்தே
 யோடினான்விஜயனுரையாடினனே.

௫௫. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

என்னகாரியஞ்செய்தாய் - உத்தராநீதா-னென்னகாரியஞ்செய்தாய்

அநுபல்லவி.

தன்னையறியாமலே சன்னதங்கொண்டங்கேபேசி
இன்னம்நிமிஷமில்லை யிதற்குள்மறந்துசீசீ
என்ன

சரணங்கள்.

௧. பத்தினிற்பதினொன்று-நீயுமிராமல்வீம்பு
 படித்தவர்கள்தலையைக் கிள்ளி - யெறிந்து
பசுக்குலங்களைமீட்டு-வருகிறேனென்றுகெண்டை
 புதைக்கிறாப்போற்பதைத்துத் துள்ளிச்

சுத்தவீரன்போல்வந்து சோர்வதுனக்குச்சீரோ
துணைநானிருக்கஇச்சத் துருக்களுனக்குநேரோ
பித்தன்போல்முதுகிட்ட பின்வீரனென்றுபேரோ
பெண்டுகள்கூடவுன்னைக் கண்டால்நகைத்திடாரோ
என்ன

௨. உலகிலாறிலுஞ்சாவு-நூறிலுஞ்சாவிந்த
உடல்நிலையல்லநீயேன்மிக வெம்பிப் - படைக்
கோடுகிருய்வீரர்தம்-உயிரைத்துரும்பாஎண்ணி
யொன்னாரைவெல்லவேணுமட தம்பி
சொலக்கேளின்னஞ்சத் துருக்கள்தலையைத்துண்டு
துண்டாக்கிஜெயமாலை சூடினுமதைவிண்டு
புலிபோல்பாய்ந்துபின்னிட்டுப் போகாமல்திடங்கொண்டு
போர்முகத்தினில்செத்துப் போனாலும்புகழுண்டு
என்ன

௩. தேரையாகிலுமையா-செலுத்திவாநான்சண்டை
செய்துன்பகைவரையென் அம்பு - தன்னால்
சிதைத்துப்பசுக்களுடன்-உனையுமூர்க்கிக்கணத்தில்
சேர்க்கிறேனென்சொல்லை நம்பு
வீரர்க்குரைத்தமனு விக்யானமுமறந்து
விட்டொளித்தாலுன்புகழ் விளங்கிடுமோசிறந்து
சாரதியாயினும்யான் சாற்றுகிறேன்திறந்து
தபனன்குலத்துக்கினம் வந்துதேநீபிறந்து
என்ன

---

## பேடி சொல்லியதற் கிசையாமல் உத்தரன் பேடியை வேண்டல்.

விருத்தம் ௨௨.

வாகுடன்பேடிசொன்ன-மதியவன்தெளிந்திடாமற்
சோகமேவிட்டுக்கைகால்-சோர்ந்தையோஎன்றன்பங்குக்
காகுலந்தரும்பொல்லாத-அஷ்டமச்சனியேபோதும்
ஏகடியூருக்கென்றே-யேசுவான்பேசுவானே.

௫௬. தரு-இராகம்-பேகடை-சாப்புதாளம்.

பல்லவி.

நானென்னசண்டைக்கு-வருவதென்னஎச்சு-நடவாதினியுன்பேச்சு

அநுபல்லவி.

ஆனாலும்படையாநீ டாழிபோற்றுலங்குது
அப்பாதிரும்பிப்பார்த்தால் கெர்ப்பமுங்கலங்குது
நானென்ன

சரணங்கள்.

௧. நாடுமெனதுபோன-மாடுமெனதுவந்த
நஷ்டமுமெனதாச்சே உனக்கென்ன
பாடிப்படைமேற்செல்ல-நீயேதோயெனைமோசம்
பண்ணவழைக்கிருய்வே றில்லையுன்ன
நாடகத்தொழில்செய்யும் பேடியுனக்கேனோ
ராஜகாரியநீதி பேசவும்நீதானோ
மூடுமிவர்க்கெதிரே நாடிச்செல்வதுநானோ
முப்புரத்தையுமெரித்த தற்பரனும்வருவானோ
நானென்ன

௨. வருமெதிரிபலமுந்-தன்பலமுங்கால
பலமுந்தெரிந்திடாமல் போர்முந்தக்
கருதினல்பிள்ளையார்-பிடிக்கக்குரங்கான
கதையாமென்றறியாயோ கேளந்த
நரபாலர்சேனைக்குள் நானகப்பட்டாலெள்ளை
நசுக்கிருப்போல்நசுக்கி நகையாரோயீதென்னகொள்ளை
ஒருதனஞ்சயனென்றால் உற்றிடாதொருசள்ளை
உண்டைவில்கையிற்பிடித்துக் கொண்டுவிளையாடும்பிள்ளை
நானென்ன

௩. பதிகொடுக்கிறேனின்சொற்-படிநடக்கிறேனின்னட்
பையுமறவேனிப்போ ஒருகோடி
நிதிகொடுக்கிறேன்கரி-பரிகொடுக்கிறேனென்னை
நீவிட்டுவிடவேணும் அடிபேடி
எதுஎப்படிகெட்டாலும் எனக்கென்னநீயோது
என்வாய்க்கொழுப்பேஎனக் கிவ்வினைதரற்கேது
ததியிதுமகராசி தயவுசெய்தென்மீது
தாயாரிடத்திற்சேர்த்தால் நீயேதெய்வமிப்போது
நானென்ன

---

## உத்தரகுமாரனைச் சாரதியாக விசைவித்துத் தான் தேரேறி வன்னிமரத்துக்கு நேரேபோகும்போது பகைவர் படையிலுள்ளோர்க்குத் துரோணச்சாரியர் வருகிறவன் விஜயனெனச்சொல்லல்.

விருத்தம் ௨௩.

இன்னவகைஉத்தரன்சொற்கேட்டகிரீடி
யிரதமாகிலும்விடுவாயெனவிசைந்தான்
வன்னியருகோட்டென்றுன்விடுத்தானங்கே
வந்திருந்தசேனைதனில்விளைந்தபொல்லாத்

துன்னிமித்தங்களினுலுமொற்றைத்தோய்த்
தொடர்ந்துவருவதினுலுஞ்சூழநின்ற
மன்னவரும்பெரியோருங்கேட்கத்துரோணர்
மதிக்கின்ருர்விஜயனெனத்துதிக்கின்ருரே.

யஎ. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

வருகின்றவன்தனஞ்சயன் - சந்தேகமில்லை
வருகின்றவன்தனஞ்சயன்.

அநுபல்லவி.

பெருமையாநாம்பிழைத்த பிழைப்பெல்லாம்வீணுச்சே
பேசாமல் வையுங்கைவில்லை
யோசனை யினிவேறில்லை
வருகின்ற

சரணங்கள்.

க. வகையாப்பன்னிரண் டாண்டு - கழித்தக்யாத
வாசமுங்கழித்து மீண்டு
குகைக்குளிருந்தசிங்கங் குஞ்சரங்களைத்தேடிக்
கொண்டுவரு கிறுப்போலே
யின்றுவெகு பகையாலே
வருகின்ற

உ. தரணியையொத்த உரமும் - அணிகொள்முழங்
தாளைக்கடந்த கரமும்
அருள்நிறைந்தபிரு விழியுமதிநய
அபிநய முந்துலங்கத்
த்ரிபுவன முங்கலங்க
வருகின்ற

ங. திரிகர்த்தனுடன் சண்டை - செய்யவிராடன்
சென்ருனுத்தரனம் அண்டை
வரயிவனைப்பாகனு-வைத்தவன்தேரோட்டஅவன்
மருளோட வேயுரைத்து
திரையாழி போலிரைத்து
வருகின்ற

துரோணாச்சாரியர் சொல்லக்கேட்ட பலரும் பலவாறு சொல்ல அருச்சுனனும் உத்தரனும் வன்னிமரத்தினடியிற்போய் உத்தரனுக்குப் பாண்டவரிருக்கும் வேடத்தையும் இடத்தையுஞ் சொல்லித் தன் வேடங்கொண்டு தேரேறுதல்.

விருத்தம் ௨௪.

சிலையாசாரிதுசொலஅங்குள்ளோர்தம்மில்
சிலர்நயந்தார்சிலர்பயந்தார்திறல்சேர்கன்னன்
கொலைவாளியொன்றினில்வென்றிடுவேனென்றான்
கொற்றவனுஞ்சிலமொழிந்தானிங்கேபார்த்தன்
மலிவன்னிமரத்தைச்சார்ந்தையாமேலே
வன்படைகளிருக்குதெடுவென்றானேறித்
தொலையாதமலைப்பாம்பிங்கேதுபேடி
சொல்லென்றானதுவிஜயன்வில்லென்றானே.

௩. திபதை-இராகம்-முகாரி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧. நாற்றிசைகளுந்துதிசெய்-பார்த்தன்காண்டீபமுமற்ற
நால்வராயுதமுமிதைத் தேடி - வைத்த
ஞாயமுமவைகளிப்பாம்-பாயதுமவரிருக்கும்
நாட்டையுந்தெரியச்சொல்வாய் பேடி

௨. மாற்றலாரலேபதியைத்-தோற்றுவனத்திலீராறு
வருடங்கழித்தக்யாத வாசஞ் - செய்ய
வரும்போதிதில்வைத்தொரு-வருந்தொடாமற்பாம்பா
மந்திரித்தேகினர்பர தேசம்

௩. பேடியெவர்களுமெச்சுங்-கிரீடியுடன்மற்றநாலு
பேரும்பின்னோரரசர் பதியே - சேர்ந்து
பெட்டிப்பாம்பாகியொருவ-ரிட்டிடுமூழியஞ்செய்து
பிழைக்கநேர்ந்ததோதலை விதியே

௪. நாடகச்சிவனைக்கூட-வோடெடுக்கச்செய்தவிதி
நரரைவிடுவதுண்டோ காணும் - எந்த
நாளிலெதனையனுப-விக்கவேணுமோஅதை
நன்றாஅனுபவிக்க வேணும்

௫. சந்திரகுலந்தழைக்க-வந்தவைவர்களிப்போதெத்
தலத்திலென்னவுருவந் தாங்கி - நாளைத்
தள்ளுகின்றார்களதனை-யெள்ளளவுமொளியாமல்
சாற்றினாலென்துயர்போமே நீங்கி

௬. இந்தவகைசொன்னஉத்-தான்றனக்கவர்களெங்கும்
ஏகவில்லையுங்கள்வீட்டைத் தானே - கெதி
என்றுமன்னனுக்கிதவு-சொல்லுகின்றகங்குபட்ட
னேதருமனென்னும்பெரி யோனே

௭. மேயமடைப்பள்ளிசேர்ப-லாயனனென்போனுத்தண்ட
வீமனென்றேதுமகானு பாவன் - மிக
விந்தைபரியேறுதாமக்-கிரந்தியேநகுலனிடை
வேஷதந்த்ரபாலன்சகா தேவன்

௮. தூயவண்ணமாதென்றன்றன்-தாயிடத்தினிலிருக்குந்
தோகையேதிரௌபதியன்பை நாடி - நீங்கள்
சொன்னபடியேயுத்தரைக்-கின்னிசைசொல்லிநட்டுவத்
தொழில்செய்துவந்தநான்தான்கி ரீடி

௯. என்னுமவனைநீயேயம்-மன்னவனுனலவனுக்
கெத்தனைபேர்சொல்லென்றிவன் சொல்லச் - சொல்வேன்
என்றுத்ரிபுவனத்தையும்-வென்றதனுலவரவர்
இட்டருமையாஅழைக்கும் நல்ல

௰. தன்னிசைப்பேர்பன்னென்றும்-அன்னவைவந்தஏதுவுஞ்
சாற்றியேபேடியுருவை மாற்றி - முகில்
தனில்மறைந்துதயஞ்செய்-தினகரன்போலொளி
தாங்குமுன்னுருவாகத் தோற்றி

௰௧. நின்றவனைக்கண்டுநெஞ்சு-முன்றிடத்திப்பிரமைகொண்டு
நிலத்திற்குதித்தவன்பொற் றளைப் - பற்றி
நின்னருமையறியாம-லென்னமோபிதற்றிவிட்டேன்
நீபொறுத்தாளவேணுமிவ் வேளை

௰௨. என்றுசொல்லுத்தரன்றன்னை-வென்றிகொள்விஜயன்கையால்
எடுத்தணைத்துமார்பினில் சேர்த்து - ஐயா
இத்தலத்திலுன்றனைப்போ-லுத்தமன்யாரிந்தவார்த்தை
யேனென்றவன்முகத்தைப் பார்த்து

௰௩. இனிமேலட்டிசெய்யாமல்-முனைசேரணமுகத்துக்
கேகவேணுமந்த வில்லை - வெளுத்
திருக்குந்தேவதத்தத்தைப்-பருத்ததுணியையிப்போ
தெடுவென்றுரைத்தவன் சொல்லை

௰௪. மனமகிழ்வுடன்கொண்டத்-தனுமுதல்யாவையும்
வரிசையாவுத்தரன் கொடுத்தான் - அனு
மந்தக்கொடிதரித்த-சுந்தரத்தேர்வலம்
வந்துதனஞ்சயனும் அடித்தான்

## அர்ச்சுனன் தேரேறி சுயோதனன் சேனைமேற் சென்று துரோணாச்சாரியர் முதலானவர்களோடு சண்டைசெயல்.

முடுகுவிருத்தம் ௨௫.

மருவியவிண்டலமொடுபுவியெண்டிசை-மறுகநெடுந்திரையெண்
வாரிதியேழுமதோகதியாயிட-மாகனகாசலமோ
டரியபெருங்குலகிரிகளதிர்ந்திட-அதிகமதங்கள்பொழிந்
தாசைகள்மேவியநாலிருயானைக-ளாவெனவீறிடவே
குருகுலசுந்தரன்மிகுபகைதங்கிய-குரிசில்கள்கண்டுமுகங்
கூசிடவாசவனாசிகள்பேசிட-கோடிகலாமதிநேர்
திருமுகமண்டலமெரிகதிரென்றெளி-செயவிஜயன்பரவுஞ்
சீர்பெருமாருதிநீள்கொடியாடிய-தேரினிலேறினனே.

விருத்தம் ௨௬.

தேரேறிக்காண்டீபந்தனைவளைத்தான்
தேவதத்தத்தினைக்குறித்துச்சிங்கநாதம்
ஈரேழுபுவிகலங்கச்செய்துகோடை
யிடியெனச்சென்றான்மன்னர்கூட்டம்விட்டுப்
பாராளுந்துரியன்பசுக்குலங்களோடு
பதிக்கேகுநிலையறிந்துமறித்தானங்கே
போராடவருகன்னன்முதலோர்தம்மைப்
புடைத்திட்டான்ரணக்களத்தைத்துடைத்திட்டானே.

௰அ. தரு-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

சண்டையின்பெருமைகேளுமே - அர்ச்சுனன்செய்த
சண்டையின்பெருமைகேளுமே.

அநுபல்லவி.

சண்டையின்பெருமைகேளும் மண்டலமதனையாளும்
தாமதச்சுயோதனன்விடு மாமதப்படையில்நெடுஞ்
சத்திரஞ்சிலர்பிடிக்கக் குத்திரஞ்சிலர்படிக்கச்
சாய்மறைசிலர்கள்வீச வாய்மறைசிலர்கள்பேசத்
தாரைபூரிவிரசின்னம் ஆரவாரபேரிமின்னம்
தக்கபுடுக்கைகள் தவுண்டமல்லரி
மிக்கஇடக்கைக ளுவந்தசல்லரி

தாளமத்தளமொலிக்க மேளமொத்தொடுகலிக்கத்
தம்பியர்பறந்துவர அம்புவிமிகுந்ததிர
தார்வேந்தரும்மருவ ஓர்பாந்தளும்வெருவத்
தத்துபரிகள்குதிக்க மத்தகரிகள்கதிக்கச்
சங்கநாதஞ்சிலர்செய்யச் சிங்கநாதஞ்சிலர்செய்யச்
சதுரங்கதளகர்த்தன் முதுகங்கைதருபுத்ரன்
தநுகுருவஸ்வத்தாமன் முனிகிருபனென்னுஞ்சோமன்
சதுரன்துன்முகன்கன்னன் மதிகொள்விகர்னமன்னன்
சயிந்தவனதிவீரன் நயந்தருபுஜதீரன்
சகுனிசங்கிராமசித்து மிருஅகங்காரமபெற்று
க்ஷணநேரந்தனில்முந்து ரணபூமிதனில்வந்து
சண்டமாருதம்போல் நேர்ந்து - வளைந்தாரதை
கண்டுகோபமதைச் சார்ந்து - கணப்பொழுதில்
சதவாளியேற்றித் துட்ட-மதியாளர்போற்றி வெட்ட
மதமாகச்சாய்த்துப்பட்ட-பதருகத்தூற்றி விட்ட
சண்டையின்

சரணங்கள்.

க. சூலமநந்தம்பிண்டி பாலமநந்தம்பெருந்
தோமரமநந்தமெறி மாமழுவனந்தங்கொத்துந்
தோட்டிகளநந்தங்குத்தும் ஈட்டிகளனந்தம்வெள்ளித்
துப்பார்வளையனந்தம் பொற்பார்கவணனந்தம்
சூரியனந்தஞ்சேர்க டாரியனந்தங்கூர்மு
சுண்டிகளனந்தஞ்சாடுந் தண்டுகளனந்தம்போடுஞ்
சோதிவேலனந்தந்தனு வாதிகோலனந்தமுனை
தொடுக்குஞ்சக்ரமநந்தம் விடுக்குங்கட்கமனந்தஞ்
சூரர்களனந்தங்கோடி பேர்களங்கையினிற்கொண்டு
சுற்றவேஅனந்தங் கரிகள் - அந்தரத்தினுந்
தத்தவேஅனந்தம் பரிகள் - கணக்கில்லாத
துரைகளதிரதங்கள்-மருவச்சுயோதனன்செல்லுஞ்
சூதினைத்தனஞ்சயன் கண்டு - நில்லடாவென்றப்
பேதைதனைவளைத்துக்கொண்டு - முன்னேயவன்
தூரத்தும்பசுக்குலத்தை-மறித்தொருசாக்கூடந்
தொடுத்துவிராடனூரிலே - சேரும்படிக்கு
விடுத்தமராட நேரிலே - சென்றிடும்போது

சொர்க்கதலமும்புவியும்-உக்ரஅரவின்பதியுஞ்
சுழன்றிடக்கெற்சனை யிட்டு - அண்டாண்டங்கள்
உழன்றிடநற்சிலை தொட்டு - அளவில்லாத
சுத்தவீரரானமன்னர்-சித்திரத்தேர்சூழக்கன்னன்
தொடர்ந்தங்கேகடு கடுத்தான் - தன்படையினில்
திடங்கொண்டவரைவிடுத்தான் - அவர்கள்தம்மில்
துற்செயன்வன்குரூரமுற்று-மற்செயுஞ்சங்கிராமசித்து
துன்முகனுத்தம ஞானன் - விகர்னனோடு
புன்மைகொள் சித்திரசேனன் - சித்ராங்கதன்
சுண்டெலிகளாவினைக்-கண்டெதிரிலணுகிய
சூட்சியாயிவர்கள் கூடி - வில்லைவளைத்து
மாட்சிசேர்கணைகள் கோடி - சொரியக்கண்டு
துட்டத்துரியோதனனை-விட்டனலதாயவரைத்
துணிசெய்யவேதோற்றி - உக்ராண்டபந்
தனிலுடனு ணேற்றி - அவர்சிரத்தைச்
சுறுக்காயிருசரத்தா-லறுத்தேயொருசரத்தால்
துன்னும்விகர்னனையோட்டி - யெதிரதனில்
மன்னுமக்கன்னனை வாட்டி - கொடுஞ்சரங்கள்
சொரியஅவன்கடுத்தே-அரியகணைதொடுத்தே
துகளாகச்செல்லப்பொடித்து - இருகண்ணினும்
புகைதாவப்பல்லைக் கடித்து - நிற்குமவனைச்
சுந்தரவிஜயன்கண்டு-அந்தரமதிலுஞ்சென்று
சுட்டெரிக்குமிருசரத்தை - விடுத்துக்கன்னன்
திட்டமுற்றமணியுரத்தைப்-பிளந்துமிகத்
துலங்குந்தேரினிலுறு-பலங்கொள்சாரதிதலை
தூளியிட்டுச்சீறி விழித்துப் - பின்னையுமொரு
வாளிவிட்டுத்தேரை யழித்து - அவனுடலைச்
சொல்லவுமடங்கிடாத-சல்லடையின்கண்களாகத்
துளைத்திடவாட்டங்கொடுத்தான் - கன்னனுமிகக்
களைத்துடனோட்ட மெடுத்தான் - இவ்விதமாகச்
சூரியகுமாரன்தோற்று-வீரியசுபாவம்நீத்துத்
துலைந்திடக் கண்டாரே - பலருமா
குலந்தனைக்கொண்டாரே - அவ்வேளையில்
துரோணர்புகழ்ந்துசிலை-நாணைவரிந்துமலை
சூழ்ந்ததெனவேதோன்றினர் - மனதில்மிக
ஆழ்ந்தமகிழ்வை யூன்றினர் - அப்பேர்துபார்த்தன்

சுத்தஆசானென்றெண்ணி-நிற்கத்தேசோனும்நண்ணி
தொண்ணூறுகணைதொடுத்தான் - விஜயனுங்கண்
டெண்ணூறுகணை விடுத்தான் - விடுத்தும்பின்னுந்
தூணிகவசம்வரி-நாணிதுவசம்பரி
துதிக்குந்தேர்ப்பாகனழியக் - கணையெடுத்து
மதிக்கும்நேர்ப்பாகப்பொழிய - அவைகள்தம்மைச்
சூரணமாக்கநினைந்தே-ஆரணயோக்யன்முனைந்தே
சுடுகணைதனை யேவி - கதிக்கப்பார்த்தன்
இடியெனமுனைதாவிக் - குருவென்றேகூஞ்
சொல்லும்பறக்கப்பெரும்-வில்லும்பறக்கசெந்
துகளும்பறக்கக் கடுத்தான் - இரண்டுகணை
ஜெகமும்ப்ரமிக்க விடுத்தான் - ஆசாரியன்
சோர்வாற்போர்நாட்டம் விண்டே
தேர்போய்க்காலோட்டங் கொண்டே
துண்ணெனப்போயுயிர்காத்தான் - புவிநிறைந்து
விண்மிசைத்தோய்புகழ் நீத்தான் - இப்படிக்கொத்த
துங்கமருவு வீர-சிங்கமனைய தீரர்
அங்கமிறுதி சேர-எங்குமதிர கோர

சண்டையின்

௨. அரவமெட்டுமொடுங்கக் கரிகளெட்டும்நடுங்க
அலைகடலேழுங்கலங்க குலகிரியெட்டுங்குலுங்க
ஆசைகளெட்டுஞ்சுழலச் சேஷனுஞ்சித்தமழல
ஆமையுமொதுங்கிவாட எமனும்பதுங்கியோட
அண்டகோளமும்வெடிக்க மண்டுதேவருந்துடிக்க
அயிராவதம்பெதற உயர்தாரகையுதிர
ஆதவன்கதியும்மோயப் பூதலமுழுதுஞ்சாய
ஆலகாலம்போலசிறிக் காளமேகம்போல்மீறி
அக்னியைப்போல் கொதித்து
விக்கிரமத்தேர்மே லுதித்து
அர்ச்சுனனென்றேசொல்மித்ரனும் - துரோணனளித்த
மற்புலியென்றேது புத்ரனும் - எதிர்ந்துகொண்டு
ஆயிரங்கணைகளிவன்-ஆயிரங்கணைகளவன்
அணியணியாகத்தொடுத்தார் - தொடுத்துப்பின்னும்
கனமழைபோலே விடுத்தார் - விடுத்தவரில்

ஆசான்மகன்சினந்து-தேசோமயமிருந்து
ஐந்துபாணந்தெறித்தான் - அர்ச்சுனன்வில்லி
னுந்துநாணை யறுத்தான் - பார்த்தனப்போ
தாரவலக்கைநீட்டி-நாரிசிலைக்குப்பூட்டி
ஐந்நூறுகணை சிந்தினன் - அவைகட்கவன்
முந்நூறுகணையுந்தினன் - இப்படியாக
அரும்போரிருவர்களும்-தரும்போதமரர்களும்
அஞ்சிமுகில்தனில் நுழைந்தார் - ரணக்களத்தில்
நெஞ்சமெவர்களுங் குழைந்தார் - குருகுமாரன்
அணிகொள்தூணியின்மேவும்-திணிகொள்வாளிகளியாவும்
அதமாய்ப்பறந்து இளைத்தான் - கிருபனுமிக
மதமொடெழுந்துமுளைத்தான் - முளைத்தவனும்
அந்தச்சுந்தரன்மகனும்-இந்தஇந்திரன்சுதனும்
அரவமெனவேயிரைத்தார் - அம்புகள்பெய்து
தரணிமுழுதும்நிரைத்தார் - ஆயிரத்தெட்
டண்டமுங்கம்பிதமாக-எண்டிசையும்புவிவேக
அமராடும்வேளைகிரீடி - குருவின்மீது
எமனனவாளி கோடி - தொடுக்கவன்னேன்
அங்கநிலைமறந்து-செங்கைத்தநுமுறிந்து
ஆடிக்காற்றின் சருகாய் - பறந்தான்பின்னும்
நாடிப்பார்த்தன்அருகாய் - நின்றிடுமன்னர்
அங்கதங்களையழித்துப்-பொங்குரங்களைக்கிழித்து
அருஞ்சிரங்களைத்தறித்தான் - தேவதத்தமே
வருங்கலங்கிடக் குறித்தான் - அப்போதுபீஷ்மன்
அடுத்துப்புரிபோரினை-யெடுத்துச்சொலப்பாரினில்
ஆதிசேஷனுக்கே வேணும் - வெகுநாளென்றால்
ஓதவேறெவர்க்கேதோணும் - இப்படிக்கொத்த
அதுலனுமுதுகிட்டான்-விதுரனுஞ்சிலைதொட்டான்
அதனைப்பார்த்தன்கண்டான் - கண்களிற்செந்தீ
யுதிரச்சீற்றங் கொண்டான் - கொண்டுபிஞ்சகன்
அம்புமாரிகொழித்தான்-பம்புதேரையழித்தான்
அக்கணம்வீட்டுமன்தேரைச் - சாரதியொரு
திக்கினிற்சேர்த்திடு சீரைப் - பார்த்தமன்னர்
யாருஞ்சுற்றிடுஞ்செஞ்சா-மாருதத்தினிற்பஞ்சா

அகன்றூர்கள்பின்னும்வாளி - கொண்டுபடையிற்
புகுந்தேமுழுதுந் தூளி - செய்திடமண்மேல்
அடித்தான்சிலரைநீறு-முடித்தான்சிலரைக்கூறு
அறுத்தான்சிலர்சிரங்களைத் - துண்டுதுண்டாகத்
தறித்தான்சிலர் கரங்களை - இப்படியாக
அச்சேனைகளையழித்தே-மெய்ச்சோபமதையொழித்தே
அண்டும்விடும னீங்க - மற்றவர்மூர்ச்சை
கொண்டுதேரினிலேங்க - அம்மோகன
அத்திரந்தனைப்போக்கி-யுத்தரன்தனைநோக்கி
அய்யனேநின்தங்கை சொன்ன - சொல்லின்படியே
வெய்யசோகங்கொண்ட மன்ன - ரணிசிரத்தின்
ஆடைகளைத்தனைப்பறித்தே-வாவெனமுனங்குதித்தே
அவன்போய்ப்பறித்துமீண்டான் - செயமாலிகை
புவிநேருரத்திற் பூண்டான் - கபடனைப்பார்த்
தைவர்களையின்றுநாசம்-செய்திடுவேனென்றுபேசும்
அசகாதசூரனெங்கே - அன்றுசூதாடிப்
பிசகாதவீரனெங்கே - துகிலையுரிந்
தவனெங்கேசதியெங்கே-புவிகொண்டமதியெங்கே
அரும்படையெங்கேசீசீ - சொல்லடாவென்று
துரும்பெனவங்கே ஏசி - முடியைத்தள்ளி
அருள்மேவுமுமை காத்த - தரைமாதுமுடிசாய்த்த
திரையாழியென வாய்த்த - குருசேனைகளைமாய்த்த

சண்டையின்

௩. மண்டைகள்திறந்தோர் சிலர் - தொண்டைகளறுந்தோர்சிலர்
வரைத்தோளழிந்தோர் சிலர் - திருத்தா ளொழிந்தோர்சிலர்
வயறுகள்சரிந்தோர் சிலர் - எயிறுகள் கரிந்தோர்சிலர்
மணிக்குடலிற்றோர் சிலர் - துணித்துணி பட்டோர்சிலர்
மந்திபோலிளிப்போர் சிலர் - சந்துபோய் நெளிப்போர்சிலர்
மரம்போற்சாய்ந்தோர் சிலர் - சிரம்போய் மாய்ந்தோர்சிலர்
வருத்தமுற்றுத்தாழ்ந்தோர்சிலர் - இரத்தங்கக்கி வீழ்ந்தோர்சிலர்
வளைதேர்குலைந்தோர் சிலர் - களையா லலைந்தோர்சிலர்
மறுகிவிழுந்தோர் சிலபேர் - சுரணைகெட்டு
மொறுகிவிழுந்தோர்சிலபேர் - தண்ணீர்க்களையால்
வாயாவெனத்திறந்தே - ஆபாசமுற்றிறந்தே

மண்ணைக்கவ்வி வீழ்வோர்சிலபேர் - அம்புகள்வதை
பண்ணத்துள்ளிவீழ்வோர்சிலபேர் - விசைகொண்டெதிர்
வருபாணங்கள்படாமற்-றரைமேற்பெருகுரத்த
மடுவிலொளிப்போர் சிலபேர் - காயங்களாலே
உடல்தத்தளிப்போர்சிலபேர் - பொறிகலங்கி
வாகழிந்துயிர்பிரிந்து-போகும்போதழுதழுது
மக்களைநினைப்போர் சிலபேர் - ரத்தங்குடித்தன்
னக்களைதணிப்போர்சிலபேர் - யானைகள்மாண்டு
வழியுமாத்தக்கடலி-விழிவிண்ணின்முகிலென்ன
மன்னிவிழுஞ்சிலயானைகள் - துதிக்கைகளைப்
பின்னியழுஞ்சிலயானைகள் - அன்றுமுதலை
மடியவதைத்தோனாலு-முடியாதிந்தவாளியை
மறுக்கவென்னுஞ் சிலயானைகள் - நமக்குண்டாச்சு
நெருக்கமென்னுஞ் சிலயானைகள் - சிரத்துடனே
வாலற்றுக்காலற்று-வேரற்றமரம்போலே
மடிந்துருளும்சிலயானைகள் - துண்டுதுண்டாக
படிந்துருளும்சிலயானைகள் - திகழும்நவ
மணிச்சிகரமொடிந்து-துணிக்கொடிகள்கிழிந்து
மறிந்தன சிலதேர்கள் - நெக்குநெக்காக
முறிந்தனசிலதேர்கள் - கப்பல்கள்காற்றால்
வாரிக்குள்ளழுந்தினாற்போல்-சோரிவெள்ளத்திலழுந்தி
மறைந்தனசிலதேர்கள் - இலவம்பஞ்சாய்ப்
பறந்தன சிலதேர்கள் - குதிரைப்பிண
மண்டலத்தும்விண்டலத்தும்-எண்டிசையினுந்தெறித்து
மலைமலையாவிழுந்துதே - யெடுக்கப்பார்த்து
நிலைநிலையாஅழிந்துதே - நெடுங்குடலை
வாளரவமென்றுவந்து-தாளினாலெடுத்துப்பனை
மரஞ்சேர்க்குஞ்சிலகருடன் - குவிந்தசையத்
தரம்பார்க்கும் சிலகருடன் - செத்துக்கிடக்கும்
வாரணத்தசைகளுண்டு-சீரணப்படாமலிங்கு
மருந்துகல்லுஞ் சிலபருந்துகள் - சுற்றங்கட்கெல்லாம்
விருந்துசொல்லுஞ் சிலபருந்துகள் - அர்ச்சுனன்கையால்
மாண்டபிணங்களின்கண்ணைத்-தோண்டித்தோண்டிமூக்கினாலே
வளையாக்குஞ்சிலகழுக்கள் - குஞ்சுகட்கிந்து
களைநீக்குஞ் சிலகழுக்கள் - பனங்காய்கள்போல்
மண்மீதுருள்தலைகள் எண்ணிப்பங்குபோட்டுக்கொண்டு

வலித்திடுஞ்சிலநாய்கள் - ரத்தக்கவுலால்
சலித்திடுஞ்சிலநாய்கள் - தின்றுமிகுந்த
மாமிசங்களைக்கொடுபோய்த்-தாமிருக்குமிடங்களில்
வைக்குஞ்சிலதுநரிகள் - எலும்படைத்து
முக்குஞ்சிலது நரிகள் - வீட்டைவிட்டு
வரும்போதானசகுனம்-பெரும்விருந்துண்ணத்தானே
வாருமென்னுஞ் சிலபேய்கள் - சதைசதையாய்ப்
பேருமென்னுஞ்சிலபேய்கள் - அநேகந்தரம்
மகராஜனுப்பையுண்டோமென்-றகமகிழ்ந்தர்ச்சுனன்றன்னை
வந்திக்குஞ்சிலதுபேய்கள் - மெய்தானென்று
சிந்திக்குஞ்சிலதுபேய்கள் - பாண்டவர்மேல்
வயிரங்கொண்டதுரியன்-உயிருள்ளமட்டுஞ்சண்டை
மாளாதென்னுஞ்சிலபேய்கள் - நமதுபாக்கியங்
கேளாதென்னுஞ்சிலபேய்கள் - இப்படிக்குத்தன்
வாளிக்குங்கூளிக்குமவ்வூர்-காளிக்குமிரைகொடுத்து
வற்சமலர்த்தொடைபுரிந்தான் - பிரதாபவீர
லட்சுமியை மணம்புரிந்தான் - இந்திரன்முதல்
வானவரற்புதமொடு-தேனுறுகற்பகமலர்
மாரிசொரிந்துடன்துதித்தார் - முனிவரெல்லாம்
ஆர்வமிகுந்திட மதித்தார் - சுயோதனன்செய்
வசைநினைந்தங்கைமுறித்த-விசையுடன்சென்றுகுறித்த
திசையடங்கலுந் தெறித்த-பசுவினங்களை மறித்த
சண்டையின்

---

## விராடன் உத்தரனைச் சண்டைசெய்திகேட்க, அவன் பேடி சண்டைசெய்து வெற்றிகொண்டதும், பாண்டவர் தம்மிடத்திலிருக்கும் விதத்தையுஞ் சொல்லல்.

விருத்தம் உ௯.

செருக்களந்தன்னில்அபசெயமாகிச்
சென்றனர்குருகுலமன்னர்
ஜெயம்பெறுகிரீடிவன்னியையடுத்துச்
சிலைமுதற்படையெலாம்வைத்து
விருப்புறுபேடியுருவொடுந்தேரை
விடுத்தனன்மகன்வருஞ்செய்தி
விராடனுங்கேட்டுமனமகிழ்ந்தவ்வூர்
வீதிகளலங்கரித்தருகில்

இருக்குமக்கங்கனோடுசூதாட
விசைந்துனையென்மகன்வென்ற
தெனவெல்வேனெனவக்கங்கனும்பேடி
யெனவுனைவெல்லுவேனென்னப்
பருத்தபாச்சிகையால்நெற்றியின்மோதி
பார்த்திபரோடுவருசுதனைப்
பார்த்துநீசெய்தசண்டையின்விதத்தைப்
பகரெனவவன்பகருவனே.

௰௬. தரு-இராகம்-மோகனம்-சாப்புதாளம்.

பல்லவி.

சண்டைக்குமெனக்குமெத்தனைதூரம் - என்னயோ
சனைசெய்தீர்வெகு சாரம்.

அநுபல்லவி.

சுண்டெலியரவினைத் துணித்ததென்றுவீண்பேச்சுச்
சொல்வோர்சொன்னாலுங்கேட் போர்மதியெங்கேபோச்சு
சண்டைக்கு

சரணங்கள்.

௧. மற்புலியெனுமஸ்வத்-தாமன்தனிலுமிஞ்சி
வந்தவீரர்கொஞ்சம் பேரோ - அந்த
முப்புவனமும்பூசை-கொண்டசாமிகட்கு
முனைவீரனென்றென்னைநினைத் தீரோ - தூதர்
கொர்ப்பங்கலங்கச்சொன்ன அப்போதியான்புரச்சை
கேட்டுப்பெண்டுகள்மெச்சக் கட்டினேன்வீண்கச்சை
அப்புரம்நடந்தசேதி செப்பவுண்டனந்தம்லச்சை
ஐயாஇந்தப்பேடிதந்தான் மெய்யாஎன்றன்உயிர்பிச்சை
சண்டைக்கு

௨. வனம்நீங்கிப்பாண்டவர்-மறுவேஷங்கொண்டொரு
வருஷமாச்சுநமதக மேவி - அந்தப்
புனிதரையறியாமல்-ஸ்வதேவல்கொண்டோமே
போயென்னஇருந்தென்னநம தாவி - நன்மை
தனையுற்றோன்தன்மன்பாலா யனன்வீமனிசைபேடி
நண்ணுங்கிரீடிதாமக் கிரந்திநகுலன்சேடி
இனியதிரௌபதிதந்த்ர பாலன்சாதேவனுடி
என்னையும்மைக்காத்தோரிந்த மன்னரேசொல்வதென்கோடி
சண்டைக்கு

௬. விக்ரமஞ்சேர்திரி-கர்த்தனைவென்றுனை
விடுவித்துக்கடல்போலே வந்த - ஒன்ப
தக்குரோணிசேனையை-மாய்த்துமச்சநாட்டை
யாளநமக்குச்செங்கோல் தந்த - மகா
சக்ரபதிகளாச்சே யவர்நற்சிந்தையெரியும்
சதிசெய்தீர்வேந்தர்க்குச் சாந்தநலம்புரியும்
இக்கிரீடியில்லாவிட்டா லிப்படையுமிப்பரியும்
என்னபாடுபட்டிடும் இந்நேரமல்லோதெரியும்
சண்டைக்கு

---

## தருமராஜன் நெற்றியில் வடுக்கண்டு திரௌபதியா லதுவந்த காரணந்தெரிந்து அர்ச்சுனனும் வீமனுங் கோபிக்க தருமராஜன் அக்கோபத்தைத் தணித்தல்.

விருத்தம் உஅ.

மைந்தனிந்தவகைசொலவிராடன்கேட்டு
மதிமயங்கினான்மறுநாளுதயமாமுன்
குந்திசுதர்நிசரூபங்கொண்டவ்வேந்தன்
கொலுக்கூடந்தன்னிலிருந்திடுமுன்பார்த்தன்
இந்தவடுவேதெனப்பாஞ்சாலிசொன்னு
னிறைவனெடுமிப்பதியை இமைக்குள்நீறு
வெந்திடச்செய்வேனென்றான்வீமன்ஆர்த்து
வீசினான்தருமனயம்பேசினானே.

உ௯. தரு-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

பதறவேண்டாந்தம்பிமாரே - கோபம்
பாபமென்றுங்குறி யீரே.

அநுபல்லவி

மதியில்லையோவுங்கட் கையோயோசித்துப்பாரும்
வயற்றிலிருப்பதின்னம் அவனுப்புந்தண்ணீரும்
பதற

சரணங்கள்.

க. ஆயிரங்குற்றஞ்செய்தோர் நன்மைசெய்தாலங்கேயம்
அறிஞர்மறவாரதே அவர்கள்சாம்பிரதாயம்
ஞாயமாகக்காத்தோனை நாமாசெய்வதபாயம்
நன்றிமறந்தவர்க்கும் உண்டோதெய்வசகாயம்
பதற

௨. அன்னமிட்டவர்தம்மைக் கன்னமிடவசந்தை
யால்நினைப்போர்களுக் கரிசரிஅந்நிந்தை
யெந்நாளகலும்நோக லாகாதவன்சிந்தை
எண்ணிப்பார்க்கில்நமக்கவ் வண்ணலேதாய்தந்தை

பதற

௩. சிந்திக்கி லுண்மையா அந்தவிராடனேதும்
தெரிந்துசெய்தவனல்ல சீற்றமேனவன்மீதும்
ஐந்துபேர்நாமுமை யையோஇந்தமாதும்
அவனிழலிலிருந்தா ளானேம்போதும்போதும்

பதற

---

தருமன் முதலானோர் தங்களுருவம்பெற்றுச் சபையில் சிங்காதனத்திருக்கும்போது விராடன் காணிக்கை கப்பங்கள் வைத்துக்கண்டு, நான்செய்த குற்றத்தைப் பொறுத்துக்கொளளெனல்.

விருத்தம் ௨௬.

சிந்தையுவந்தண்ணலுரைவாசகத்தாற்
சீறியெழுமரவுதடைக்குள்ளானுப்போல்
வெந்தழலாய்க்கொதித்தெழுந்தோர்அடங்கிப்போனார்
விராடனணிபாடைநிதியாவுங்கொண்டு
மைந்தரொடுவந்துமுன்காணிக்கையாக
வைத்தரசுவீற்றிருக்குந்தருமராஜன்
கந்தமலரடிபணிந்தென்கோவேயென்று
கனஞ்செய்வான்அவன்மகிழ்வந்தனஞ்செய்வானே.

௨௧. தரு-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

சரணந்தரும ராஜனே - யெளியோர்மீதில்
கருணைசெய்விசுவாசனே.

சரணங்கள்

௧. வரும்வினையறியாமல் மதத்தினாற்செய்தேன்வாடி
வந்துன்றனடைக்கலம்பு குந்தனனுயிரங்கோடி

சரணம்

௨. மத்தர்போலினிப்பறப்பி தற்றினன்செய்தகொடுமை
அத்தனையும்பொறுத்தாள்வாய் முற்றிலுமுன்கொத்தடிமை

சரணம்

௩. மாற்றலர்கள்பார்த்திடாமல் வேற்றுருவுமேற்றுநீறு
பூத்தநெருப்பாயிருந்து காத்தீரென்செய்வேன்கைம்மாறு

சரணம்

## அபிமன்னுவுக்கு உத்தரையை மணஞ்செய்யும்பொருட்டுச் சகலவரசர்களுக்குந் தருமன் மணவோலையனுப்ப அதைக்கண்டு அரசர்கள்வந்து தருமனைக் கண்டு உபசரித்தல்.

விருத்தம் ௩௰.

துதிசெய்விராடனையணைத்தெங்களுக்குனைப்போற்
சுற்றமெவர்நீதுணையாயெம்பாற்சேர்ந்தால்
எதிரிகளைவெல்வனெனுந்தருமனைப்பார்த்
தென்றங்கைதனைக்கிரீடிக்கிவேனென்று
மதிகொளுத்தரன்சொலப்பார்த்தன்பிள்ளைக்கம்
மங்கைதருந்தவளெனவிவாகவோலை
சதுர்பெறுவேந்தர்க்கனுப்பவவர்கண்டந்த
க்ஷணமுவந்தோர்விராடனற்பட்டணம்வந்தாரே.

ச. திபதை-இராகம்-ஆநந்தபைரவி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧. மாசிலாத்துவாரகையாளுங்-கேசவன்சாத்தகியபி
மன்பலராமனற்சு — வேதன் - அனந்தம்
பூசுரர்யாதவபுத்ர-ராஜர்களுடனேவரும்
போதுவிராடனெனும் — நீதன்

௨. பாண்டவர்தம்மொடுஞ்சென்றென்-ணுண்டவனைக்கொலுமண்ட
பத்தினிலன்பாயழைத்து — வந்தான் - அன்பு
பூண்டபாஞ்சாலன்மக-னீன்றசுதரொடும்வீரம்
பொருந்துந்தளத்தொடுவேந்து — வந்தான்

௩. சிலைகொள்பாஞ்சாலர்போஜ-குலமன்னவருமாக
தேசாதிபரும்வந்து — மேவினர் - சத்திய
நிலைகொள்பாண்டியன்சோழ-னிகரில்சேரன்கடல்போல்
நெருங்குஞ்சேனைகளுடன் — தாவினர்

௪. மற்றுஞ்சிலவரசர்-புத்திரர்மித்திரர்சூழ
வந்தனர்மகிழ்கொண்டவ் — வேளை - இந்தக்
கொற்றவர்யாவருஞ்-சத்ரபதிதருமன்
குளிர்ந்தசெந்தாமரைத் — தாளை

௫. இறைஞ்சிக்காட்டினிலையோ-திரிந்துவருந்தினீரே
யென்றவர்துயரொடும் — பன்னப் - புகழ்
சிறந்தவிராடனுட்டைச்-சேர்ந்தவன்றேவனத்தில்
திரிந்தவிளைப்புத்திர்ந்தோமினி — யென்ன

சு. எண்ணஞ்சுயோதனனெங்கள்-மண்முதலெவையுங்கொண் டிப்படியாக்கினனித் தொல்லை - தீர்த்துக்
கண்ணிமைபோல்காக்க-நண்ணினீரெங்கட்குக் கனவிலுமினிபய மில்லை

எ. என்னும்வேந்தனுக்கம்-மன்னவரெழுந்திப்போ தேசெல்கிறோமுங்கள் பங்கைக் - கேட்கு
முன்னேதராவிட்டா-லன்னவன்குலத்தைச்ச மூலமழிப்போமுண்டோ சங்கை

அ. என்றுவிருதுசொல்லி-நின்றபலவரசர் எதிரில்விராடராஜன் சென்றான் - மெத்த
நன்றுமத்தியில்மனு-வொன்றுண்டென்மகள்கல்யா ணங்கழித்தபின்செல்வோம் என்றான்

கூ. அந்தப்படியாகுதென்-றிந்தச்சக்ராதிபர்கள் அனைவருமனதன்பை யூன்றினார் - அங்கே
கந்தமலரோன்போல-னந்தம்பேர்சூழ்ந்திடத்ரீ காலமுணர்தவுமியர் தோன்றினார்

௰. மாதவர்தாளிற்றே-சாதிபருடன்சென்று வணங்குமைவரைப்பார்த் தொன்னார்-சொலக்கி
யாதவாசமும்வெகு-சூதால்கழித்தீர்நன்மை யடைவீர்களினியென்று சொன்னார்

௰க. சூழ்கடல்போலுங்கள்-கருணையாலுமிந்தத் துரைகள்சகாயத்தி னாலும் - ஒரு
தாழ்வில்லையென்றன்பைச்-சூழ்தருமன்சொல்லத் தவுமியர்களிகொண்டார்மென் மேலும்

௰உ. களிகொள்தவுமியர்பச்சைக்-கிளிமொழியுத்தரைக் கலியாணநாளாய்ந்து விரித்தார் - வந்த
தளகர்த்தரனைவரும்-தெளிவுற்றந்தந்தநாளே சரிசரியென்றன்பு கதித்தார்

---

## பாண்டவர் முதலிய அரசர்களை உபலாப்பியமென்னு நகரிலிருக்கச்செய்து, நகரமலங்கரித்துப் பின்பு அபிமன்னுவுக்கும் உத்தரைக்குங் கல்யாணஞ் செய்தல்.

விருத்தம் ௩க.

கதித்தமன்னரொடுமைவர்தம்மைநோக்கிக்
காம்பீர்யமச்சநாட்டாசன்வீரர்

மதிக்குமபிமன்சுபமங்களமுகூர்த்தவரைக்கு
முபலாப்பியத்திலிருமென்றுனப்
பதிக்கிவர்களனைவருஞ்சென்றார்கள்பின்விற்
பனவமைச்சர்தமையழைத்தன்பாகவவல்
விதித்தந்தவும்பருங்கண்டதிசயிக்கும்
விதஞ்செய்தானகரையலங்கிரதஞ்செய்தானே.

ரு. திபதை-இராகம்-கலியாணி-சாப்புதாளம்.

**கண்ணிகள்.**

க. கலியாணமென்றசொல்-கேட்டவுடனேயங்கங்
கவரவர்கள் நடித்தார் - அலங்
கரித்திடப்பட்டண-வீதிகளெங்குமங்
களகரபேரிகை அடித்தார்

உ. மலியுஞ்சுபமுகூர்த்தப்-பந்தலமைத்துநெட்டி
மலர்கள்விநோதமா யோட்டினார் - மேல்
வட்டமெங்குஞ்சொர்னக்-கலசம்பதித்துப்பஞ்ச
வர்ன்னக்கொடிகள்மின்னக் காட்டினார்

ங. பாளைக்கமுகுவாழை-நாட்டியிடைக்கிடை
பச்சையிளநீர்க்குலை நாற்றினார் - வரும்
பார்த்திபர்மேல்பன்-னீர்தூற்றச்சூத்திரப்
பதுமைகளங்கங்கே ஏற்றினார்

ச. சூரியசந்திரர்மெச்ச-விளங்கும்நிலைக்கண்ணாடி
துறைக்குத்துறைஒவ்வொன்று தூக்கினார் - மிகு
சுந்தரமானவித-ரணங்களுங்கட்டியச்
சொர்க்கத்தழகையும் நீக்கினார்

ரு. தோரணிசெய்தாற்போற்-சந்த்ரகாந்தப்பட்டுச்
சிலையாற்பக்கங்கள் மறைத்தார் - மிருங்
திவ்வியசுகந்த-பரிமளமாலையால்
சிங்காரஞ்செய்தெங்கும் நிறைத்தார்

சு. நவரத்னவேதிகை-யமைத்துப்பவளத்தூண்கள்
நாட்டிப்பொற்போதிகை தொடுத்தார் - பக்கம்
நாலுக்கும்பச்சையி-னால்விட்டமிட்டிந்து
நாணமுத்துமாலை விடுத்தார்

எ. உவமிக்கொணுதமா-ணிக்கவிமானமொன்
றுண்டாக்கிக்கும்பங்கள் கவித்தார் - இந்த
உச்சிதத்தைக்கண்டோர்-மெச்சியிதேயிந்த்ர
னாரென்றிருகாமுங் குவித்தார்

அ. விஞ்சுஞ்சந்தனத்தி-னாலேதரைதனை
மெழுகியலங்காரங் காட்டினார் - நல்ல
விந்தைமிகுந்திடுங்-குங்குமத்தாலே
விதத்துக்கொருகோலந் தீட்டினார்

கூ. காசினியெல்லாம்-விளக்குமாணிக்கப்ப்ர
காசவிளக்குகள் வைத்தார் - யாருங்
களிக்கநவதானியங்-கலந்துமுளைத்திடக்
கனிவாகப்பாலிகை யமைத்தார்

௰. கிளைவிளக்குமன்னன்-வாசலிலாயிரங்
கிளைவிளக்குமேற்றி வைத்தார் - சங்
கீதமேளத்தொடு-பொற்குடத்தினிற்கங்கை
திகழக்கொண்டுவந்து மொய்த்தார்

௰க. ஒளியுபலாப்பியத்-திருந்தமன்னரனை
வோருமங்கேவந்து சேர்ந்தார் - மகா
உல்லாசமாக-விராடனவ்வேந்தருக்
குபசரிக்கக்களி கூர்ந்தார்

௰உ. ஆரவாரபேரி-பூரிமிருதங்கவி
ராணந்தவுண்டைகள் சல்லரி - எங்கும்
அதிசயித்திடச்செயும்-நாகசுரம்துத்தி
அருங்கர்னாவொடுசங்கஞ் சல்லரி

௰ந. சாரமிகும்வீணை-தம்புருவேணுகைத்
தாளவாத்தியங்கள் செய்தார் - அந்
தணர்முனிவோராசி-கூறிப்பசும்பொன்னட்
சதைமழைபோலவே பெய்தார்

௰ச. கர்னாடபோணி-செக்கணிதேசிகங்
காரிகையாரங்கே யாடினார் - கருங்
கல்லுமுருகிட-மெல்லியர்கள்சிலர்
கனிந்துசங்கிதங்கள் பாடினார்

௰ரு. பின்னிடாதஅபி-மன்னுக்கும்பெண்ணுக்கும்
பெட்பாலலங்கரித்து வந்தார் - மாப்
பிள்ளையோடுத்தரை-யென்னும்பசுங்கிளிப்
பிள்ளையையுமிட்டு வந்தார்

௰சு. வந்தவர்வேதிகை-மீதிலுட்கார
வைத்துப்பிர்ம்மானந்தங் கொண்டார் - எங்கள்
மாதவனவர்-விராடனற்பாஞ்சாலன்
மகிழ்ந்துகண்காட்சியாக் கண்டார்.

௰எ. எந்தைதவுயிர்-முகுர்த்தவேளையாச்சு
தென்றேமாக்கினியை வளர்த்தார் - அதில்
இருந்துவலங்கொண்-டெழுந்தக்கினிதேவர்
எதிரேபிரத்தியட்சமா முளைத்தார்

௰அ. தவவிராடனபி-மன்கையிற்பெண்கையைத்
தந்தன்பாகத்தாரை வார்த்தான் - இந்தச்
சகத்திற்றனே-பாக்கியவானெனநெஞ்சந்
தனிலடங்காஇன்பம் போர்த்தான்

௰௯. நவக்கிரகசாந்தி-செபங்தொடுப்போர்முனம்
நல்லசமித்துகள் விரித்தான் - அர்ச்சு
னன்றந்தபுத்ர-சிகாமணிமங்கல
நாணுத்தரைக்குத் தரித்தான்

௨௰. மாயன்முதல்மன்னர்-யாவருமற்றேரும்
வந்துசேஷையள்ளி யிட்டார் - இள
மங்கையருட-னிரு-வோரையுமரசாணி
வலம்வரச்சொல்லியே விட்டார்

௨௧. ஏயுமாதுகை-பிடித்துவலம்வந்தான்
எல்லோருஞ்சேர்ந்தருந் ததியைக் - காட்டி
இன்பமணவறைக்-குள்ளனுப்பினிறை
வேற்றினர்கல்யாண விதியை

——: (*) :——

விராடபர்வம் - முற்றிற்று.

---

விராடபர்வத்தில்-விருத்தம்-௩௧. தருக்கள்-௨௧. திபதைகள்-ரு.

——(*)——

பாயிரம்-௧-க்கும், பர்வம்-௪-க்கும், கூடிய-வெண்பா-௩. கலித்துறை-௩.
கொச்சகம்-௪. விருத்தம்-௨௱௰அ. தருக்கள்-௱௩௰௪.
திபதைகள்-௩௰எ. ஆ ௩௱௩௰௯.

---

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

—(*)—

ஐந்தாவது

# உத்தியோகபர்வம்.

## கண்ணன் துதி.

கட்டளைக்கலிப்பா - க.

அண்டமுண்டு ஆழிபிற்றுயில் மண்டலத்தை மறைகடந்த தண்டுவிற்சங்கு தண்பொருட்டுறை பண்டுபாண்டவர் பார்த்தசாரதி

களித்தசெவ்வாயனை கூருமுபாயனை அளந்தபொற்பாதனை அரும்பொருளுதனைத் சக்கரவாளனைத் மங்கைமணாளனைப் நேயனைத்தாயனைப் மாயனைப்போற்றுவாம்

## உலூகமாமுனிவர்தூது.

—(*)—

அபிமன்னுக்குத் திருமண முடிந்தபின்பு உபலாப்பியத்தில் மாதவன் முதலிய அரசர்கள்கூடி மந்திராலோசனை செய்து உலூகமாமுநிவனை அத்தினபுரத்துக்குத் தூதனுப்பல்.

விருத்தம் க.

திருமணமுடிந்தபின்பு-செங்கண்மால்தேயவேந்தர்
தருமனற்றம்பிமார்கள்-தகையபிமன்னேடெல்ல
வருமுபலாப்பியத்தில்-வந்திருந்தொருநாளிந்த
நிருபர்கள்சபையிற்கூடி-நேயமாயோசித்தாரே.

க. திபதை-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

**கண்ணிகள்.**

க. ஆதியில்சூதாடித்தோற்ற-மேதினியையவ்வகைச்சூ
தாடிக்கொள்ளுவதே நியாயம் - வா
தாடல்நீதியல்லதூதால்-அவர்மனமறிதலே
அடுத்ததென்றான்மாயன் உபாயம்

௨. ஒப்பச்சூதால்கொண்டநாட்டை-எப்படிப்போராடிக்கொள்வ
துத்தமமல்லவென்றுனே மாமன் - என்னும்
உரிமையாற்சுயோதனன்-பெறுஞ்செல்வமேநிலைக்க
உபாயத்தைத்தேடும்பல ராமன்

௩. தேடியண்ணாநீயுரைத்த-நீதியெவர்சகித்தாலுஞ்
சிறுபையல்யான் சகியேனே - உன்றன்
தேகம்வெண்மைபுத்தியும்வி-சேஷவெண்மையென்றுசொல்லிச்
சிரமசைத்தான்சாத் தகியே

௪. பயன்போலெண்ணிச்சொல்லு-முங்களாலேயொருலா
பமுமிலையைவர்க்குத் தானே - என்று
ஞாயமாகவேயுரைத்தான்-தாயகம்போலுலகெல்லாம்
நாளும்விளங்குமென்றன் கோனே

௫. பாலுக்குங்காவலாகிப்-பூனைக்குந்தோழனாகும்
பண்பதேபலராம சீலன் - சொன்ன
பக்குவமினியிந்த-ராச்யத்தைவெறுப்பதே
பாந்தமென்றுனேபாஞ் சாலன்

௬. பார்வேண்டாம்பதிவேண்டாம்-பாண்டவர்சபதமுடிப்
பதுநன்மையந்நிர் மூடன் - மேலே
படையெடாமுன்னோர்தூது-விடுவதேநீதியென்று
பகர்ந்தானேநல்வி ராடன்

௭. பாஞ்சாலன்பின்னுமாயனைப்-பார்த்தென்கோனேதேவர்சொன்ன
படிக்குப்பாண்டவர்க்காயிப் போது - என்
பாலிருக்கும்புரோகிதரை-யனுப்பலாமென்றுனந்தப்
பாவியிடத்திற்குத் தூது

௮. தருமனைப்பார்த்தெங்கண்மாலுன்-னருஞ்சமர்த்துணைக்காய்த்தூது
தனைமன்னர்க்கனுப்ப வேணும் - பொய்யன்
சந்திவிடுமுன்னேபுரோகி-தன்றனையனுப்புநானூர்
தனக்குப்போய்வருவேன் காணும்

௯. என்றுரைத்துப்போனபின்பு-குன்றினுமுயர்புயசக்
கிரேசன்தருமன் வீறி - அங்கே
இருந்தோரைப்பார்த்துநீங்கள்-பெருந்துணையாற்றுரியனை
ஈடழியவெல்வேனென்றான் சீறி

௰. தருமராஜனேபுரோகி-தன்சொற்படிக்கந்தத்துர்ச்
சனன்சம்மதிப்படாத பின்னர் - நின்
சமுகத்தைக்காத்திருக்கும்-எமக்கோர்நிருபம்விட்டால்
தக்ஷணம்வருவோமென்றார் மன்னர்

௰க. மற்றவரசர்க்குநிரு-பத்தைவிட்டுஹூகிதரை
வந்தனஞ்செய்துபெரி யோரே - என்று
மச்சமன்னன்பாஞ்சாலன்-உச்சிதத்தருமன்தம்பி
மார்தம்மனக்குறையுரைத் தாரே

௰உ. அரியஹூகமுனிவரே-யத்தினபுரிக்குச்சென்றென்
ஐயனுங்கௌரவகு லேசன் - றனக்
கடிமைகள்வந்தனஞ்சொல்லிப்-படிவரும்படிக்குரைத்தப்
பால்வாருமென்றான்தர்ம ராஜன்

௰௩. வாஞ்சையாஹூகரைப்பார்த்துப்-பாஞ்சாலனங்குள்ளமேலோர்
மனமறிந்தோதுமென் றானே - அந்த
வார்த்தையைக்கேட்டம்முனி-வனுமகிழ்வாயாசீர்
வதித்துத்தூதாகச்சென் றானே

---

## அத்தினபுரத்தில் துரோணர் முதலானோர் துரியோதனனை முன்னர் மாதவனிடத்துக்கனுப்பி, பின்னர் அரசர்கள் தங்களுக்குப் படைத்துணை வரும்படி திருமுகமனுப்பல்.

விருத்தம் உ.

இன்னவகை ஹூகரங்கு செலுமுன்ன ரைவர்செய்தி
யெல்லாமோர்ந்து
கன்னன் சகுனிக்குரைக்கத் துரோணர் முதலோரறிந்து
கண்ணில்லாத
மன்னவனுக் கறிவித்துத் துரியன் மாதவனிடம்போய்
வருவதென்ன
முன்னர் நிச்சயித்தரசர் படைத்துணையாய் வாநற்றிரு
முகம்விட்டாரே.

க. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

திருமுகம் விடுத்தனரே - அப்போதேமன்னர்
திரள்படையெடுத்தனரே.

அநுபல்லவி.

தரைமுழுதுமிசைகொள் பாண்டவர்கள்குடிக்குச்
சனியாவருந்துரியோ தனராஜன்சொற்படிக்குத்
திருமுகம்

சரணங்கள்.

க. தகைகொள்சல்லிய ராசன் - விந்தானுவிந்தர்
தக்கமகத தேசன்

குருமன்குந்தி போசன் - வங்கந்தன்
கொங்கணதேச வாசன் - பார்த்தவுடன்
திகழ்தளகர்த்தரோடு சேனைகள்சூழவீரச்
சிங்கங்கள்தமைப்போலத் திருபுரம்வந்துசேரத்
திருமுகம்

௨. மதியிலுயர்பிர சித்தன் - எனவுரைக்கு
மாளவன்பக தத்தன்
கதிர்முடிசோம தத்தன் - சேரன்சோழன்
கவுண்டவன்திரி கர்த்தன் - எனுமிகுத்த
இதங்கொளிவர்க்குமின்னம் இருக்குந்தேசத்தாருக்கும்
எதிரில்சஞ்சத்தாறு பதினாயிரம்பேருக்கும்
திருமுகம்

௩. இதைக்கண்டபோதே வாரும் - படைகளுட
னேநீங்களனை வோரும்
ததியிலெங்களைச் சாரும் - யாங்கள்கொள்ளும்
சவுக்கியமுங்கட்குச் சேரும் - என்றிலகும்
மதிகுலந்தன்னில்வந்த மண்டலேஸ்வரன்யார்க்கும்
வணங்காமுடிமன்னவன் வகுத்தபடியெல்லார்க்கும்
திருமுகம்

---

## துரியோதனனும் அர்ச்சுனனும் துவாரகைக்குப்போய் கிருஷ்ணனைத் தங்களுக்குப் படைத்துணையாக வழைக்கப் போனபோது அவர்கண்டு உபசாரத்தை சொல்லல்.

விருத்தம் ௩.

குருடன்மகன்வரவறிந்தமாயன்கிரீடிக்
குத்தூதேவிச்சேவகர்க்கவ்வேந்தன்
வரவெதுவுஞ்சொலவேண்டாமென்றுசெங்கண்
வளர்போதிலவன்சிரத்தின்பக்கமுற்றான்
திருவடிக்கண்ணின்றவிஜயனைமுன்பார்த்துத்
திறலரவத்துவசனைப்பின்பார்த்துநீங்கள்
இருவருமென்றனைத்தேடியீங்குவந்த
தேனென்றான்வேதமுடிமேனின்றானே.

௨. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

வந்தகாரியமேது - என்சிறு - மனைக்கன்பாகஇப்போது

அநுபல்லவி.

அந்தமிகுந்துரியோ தனராஜனேமென்மேலே
அருச்சுனனுடனேநீ அத்திபூத்ததுபோலே
வந்த

சரணங்கள்.

௧. மேவுமுடியரசர் விளங்கும்பஞ்சாசத்கோடி
மேதினியைப்புரக்கும் வீரருளத்தில்நாடி
நீவரவேணுமென்றோர் நிருபம்விட்டாலுமோடி
நிமிஷத்தில்வருவேனே நீங்களேயென்றனைத்தேடி
வந்த

௨. அவையிற்செய்ராஜகாரி யங்கள்விட்டக்கிரகண்ணி
யர்களானநீங்களொன்று யாண்சிங்கங்கள்போல்நண்ணி
எவையுங்கற்றோரைத்தள்ளி யேதோமனதிலெண்ணி
யித்தனைதூரம்ஓகோ யென்னையோர்லக்ஷயம்பண்ணி
வந்த

௩. இகல்கொண்டநேகர்வந்திங் கெம்முறைப்படிநில்லும்
என்றெனைக்கலைத்தாலும் இணங்கிடாமலேயல்லும்
பகலுமென்மனமுங்கள் பக்ஷத்திலேசெல்லும்
படிக்கொளியாமலுள்ள படிக்கென்னுடனேசொல்லும்
வந்த

---

## துவாரகையில்அர்ச்சுனனுந் துரியோதனனும்கிருஷ்ணனைக் கண்டு தங்களுக்குப் படைத்துணையாக வரும்படி கேட்ட போது, நான் தருமராஜனுக்கு முன்னே சொல்லி விட்டேன். அன்றியும், போரில் நான் ஆயுத மெடுக்கேனென, அர்ச்சுனன் சாரதியாக வேண்டல்.

விருத்தம் ௪.

வரதனிதுசொலஇவர்நீபடைத்துணைக்கு
வரவேண்டுமெனமால்சுயோதனனைநோக்கி
தருமனுக்குமுன்னுரைத்தேன்வேந்தேயென்றன்
தமயன்மைந்தர்படையுமொருவன்பக்கம்யா
னொருவனொருவன்பக்கம்படைக்கைக்கொள்ளேன்
உங்கள்கருத்தென்னவெனவலவனுகக்
கருணைசெயில்விஜயனெனச்சொலும்விரத்தைக்
காட்டுவேன்பகைவர்களைவாட்டுவேனே.

௩. தரு-இராகம்-கலியாணி-ஆதிதாளம்.

பல்லவி.

நீர்மாத்திரம்வாரும் - போதுமெனக்கு - நிகரில்லையினியாரும்

அநுபல்லவி.

போர்செய்யவேண்டாஞ்சொன்னேன் - சொன்னேனுணையிட்டுப்
பொருபடையெல்லாமிந்தப் புண்ணியசாலிக்கேவிட்டு
நீர்மாத்

சரணங்கள்.

க. காண்டீபத்தைவளைத்தென் கையினிற்பிடிக்கிறேன்
காவலரெங்குந்தலை காட்டாமலடிக்கிறேன்
தாண்டவமாடுமொன்னார் தமைவெட்டிமடிக்கிறேன்
சபையிலாதியிற்சொன்ன சபதத்தைமுடிக்கிறேன்
தடைசெய்யாமலிக் கோலமுடனேநண்ணி
அடிமைமீதிலிப் போதுதயவுபண்ணி
நீர்மாத்

உ. அக்ரமிகுஞ்சிங்கத்தை யானைவந்துமிரட்டும்
அதைப்போலிவர்கள்பொரப் போரெவருந்தரட்டும்
பாக்யவிண்ணோர்திரிநேத்ரன் பகையாய்நம்மைப்புரட்டும்
படிக்கிவர்க்காகவங்கே படைத்துணையாவரட்டும்
பார்க்குளவர்களையும் பம்பரம்போலாட்டுகிறேன்
ஏற்குமெனதுபெய செங்கும்நிலைநாட்டுகிறேன்
நீர்மாத்

௩. அடைபலர்பூண்டெங்குமில் லாமலேயொடுக்கிறேன்
அப்பாலுலகங்கள்கொண் டாடப்பேரெடுக்கிறேன்
இடையிலென்னென்னயிவ ரியற்றினுந்தடுக்கிறேன்
என்னண்ணனுக்குச்செங்கோ லிப்போதேகொடுக்கிறேன்
ஏர்வளர்மின்னற்குலம் போலவர்போகவே
தேர்விடயெனக்கொரு சாரதியாகவே
நீர்மாத்

---

## சல்லியராஜன் தருமராஜனுக்குப் படைத்துணையாகவர துரியோதனன் அவ்வரசனை வழியில் மறித்து விருந்திடல்.

விருத்தம் ரு.

பார்த்தனிதுசொலமால்சுயோதனனைப்பார்த்திப்
பாண்டுமைந்தன்தேர்விடுவேன்படையெடேன்சீர்
பேர்த்தஎன்சேனைபைக்கொடுபோவென்றுரைத்தான்
புத்தியில்லானதைப்பலராமற்குரைத்தே

ஆர்த்தபதிசேர்ந்தான்சல்லியனைவர்க்கே
யமர்த்துணையாய்வரலறிந்தன்பினரைநோக்கி
ஏற்றவழிதனினீங்களவனைப்போய்ச்சேர்ந்
திடுமென்றான்நல்லவிருந்திடுமென்றானே.

௪. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

விருந்தமுதிடுங்காணும் - அவனிதய - மிகமகிழ்ந்திடவேணும்

அநுபல்லவி.

பரிந்திடுபாண்டவர்க்குப் படைத்துணையாகச்சேரப்
பாசத்தால்வருஞ்சல்லிய ராஜனுயாசந்தீர

விருந்தமு

சரணங்கள்.

௧. மண்டபமொன்றை விதித்து - நிலைக்கண்ணாடி
வகைவகையாகப் பதித்து
விண்டலமட்டுங் கதித்து - விளங்கப்பந்தல்
விரைவாகவே யமைத்துப்
பண்டெவர்செய்விருந்தும் பறக்கவன்புசெழித்துப்
பணமென்றுபாராமற்றி ரணமாச்செலவழித்து

விருந்தமு

௨. அதுலாநீயொன்றுங் கூசி - டாமல்வர
லாமென்றன்புகள் பேசி
புதிய பனிநீர் வீசி - மேனிவெம்மை
போகச்சந்தனம் பூசி
எதிரில்லாவமுதிது வென்றுளத்திற்பிரதான
இச்சைகொண்டும்பரும்வந்து பிச்சைகேட்கும்படியான

விருந்தமு

௩. அகமதிலொன்று நாடி - கேட்கும்முன்னம்
அளிக்கவேணுமுன் னோடி
இகல்படையொரு கோடி - வரிலதற்கும்
இனிமைசெய்யுமுண் ணுடி
திகழ்சல்லியனிப்படி செய்தோராரென்றுதேடத்
தீர்க்கவைராக்கியசத்திரா திகளுமிதைக்கொண்டாட

விருந்தமு

## துரியோதனன் சல்லியனுக்கு விருந்துசெய்விக்க அவன் சந்தோஷித்து, அவ்விருந்தைப்புகழ்ந்து, செய்வித்தவனைத்தேடல்.

விருத்தம் ௬.

அரசனிதுசொல்லிச்சோலையிலொளித்தா
 னவன்விடுத்தோர்காணநற்சல்லியனும்வந்தான்
மருவுசுபதாம்பூலந்தந்துநல்ல
 மலர்மாலைசூட்டிச்சந்தனமும் பூசி
விரவுபனிநீர்தெளித்துமேனிவெம்மை
 விடாய்தீரவமுதளித்தாருண்டபின்னர்
அரிகரியிப்படிசெய்தோராரென்றேகொண்
 டாடினன்மெய்ம்மறந்துதேடினனே.

௫. தரு-இராகம்-புன்னுகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தப்புண்ணியவானெங்கே சொல்லவேணும்நீங்கள்
யார்சொனுஞ்சொல்லுங் காணும்

அநுபல்லவி.

அந்தவிண்ணோர்க்குங்கிட்டல் அரிதரிதெனச்சட்ட
மாகவுபசாரஞ்செய்து பாகமானஅமுதிட்ட
இந்த

சரணங்கள்.

௧. அகமிடமெதுநானே யங்கேபோயடுக்கிறேன்
 அடுத்துமனேபீஷ்டத்தை யறிந்தன்புதொடுக்கிறேன்
திகழென்னரசையிவன் செங்கோற்குள்விடுக்கிறேன்
 தேகந்தனைக்கேட்டாலுஞ் சேதித்துக்கொடுக்கிறேன்
இந்த

௨. இடர்தருங்குறையென்ன யிருந்தாலுந்தீர்க்கிறேன்
 எதையுமென்காரியமா எண்ணிநான்பார்க்கிறேன்
அடல்மன்னர்பகையையும் அஞ்சாமலேர்க்கிறேன்
 அவனியெல்லாமிவன்சக் ராக்கினைக்குட்சேர்க்கிறேன்
இந்த

௩. உலகினுத்தமவான்கள் உறவையும்பாராட்டேன்
 ஒன்றேசொல்வினிநெஞ்சில் ஒருவரன்பையும்நாட்டேன்
சிலர்சொல்விமறப்பாரென் செய்கையிப்போதுகாட்டேன்
 தெரியும்பின்னலேயிந்தச் சிநேகமறக்கமாட்டேன்
இந்த

## சல்லியனெதிரில் துரியோதனன்வந்து எனக்குப் படைத் துணையாக வேண்டுமென்று சொல்ல, அதற்கு நான் பாண்டவர்களைக்கண்டு அவ்வாறு வருவே னென்றுபோய் பாண்டவர்களைக்கண்டு இச்செய்தியை யவர்க்குச்சொல்ல, தருமராஜன் அவ்வாறு செயுமெனல்.

விருத்தம் எ.

சல்லியனெஞ்சறிந்தெதிர்வந்திவைசெய்தோன்யான்
சமர்க்கெனக்குத்துணையாகவேணுமென்று
நல்லியலாலரசனுரைசெய்தானுள்ளம்
நயந்தவனும்பாண்டவரைப்பார்த்துநின்பால்
சொல்லியதைப்பிசகேன்வந்திடுவேனென்று
துலங்குமுபலாப்பியஞ்சேர்ந்திச்சூதெல்லாம்
வெல்லருமைவர்க்குரைக்கத்தருமனன்பு
வீசினன்நீதிநெறிபேசினனே.

௬. தரு-இராகம்-காபி-சாப்புதாளம்.

பல்லவி.

எங்கிருந்தாலுமென்ன இஷ்டந்தானேபிரதானம்
என்சொல்வேனுன்னி தானம்

அநுபல்லவி.

பொங்குஞ்சல்லியமக ராஜனேபுவிமேலே
புண்டரீகத்தை யலர்த்துந்தினகரன்
விண்டலத்தினி லிருக்கும்நிலைபோலே
எங்கிருந்

சரணங்கள்.

௧. அதிகமாவுபசரித் தையோவன்னமும்பாலும்
அளித்தோனைவஞ்சிக்க லாகாதேயொருக்காலும்
விதியாச்சகாயஞ்செய்ய வேண்டுஞ்சிங்கத்தைப்போலும்
வீரநீயெங்க ளிடத்திலிருந்தாலும்
ஆவலாலவ னிடத்திலிருந்தாலும்
எங்கிருந்

௨. மிகுவஞ்சகாயினு மேவினோரைகூடு
வினிற்கைவிட்டிடார்சுத்த வீரப்பேரொடு
தகுபடையுடன்போஅஞ் சாமற்சண்டையிடு

தளங்கொள்பகைவர்வஞ் சனைக்குத்தப்பியிவர்
களுமிருக்கிறார் களென்றநினைவொடு
எங்கிருந்

௩. இக்கன்னன்தேர்விட இசையவேணுஞ்சித்த
மென்றனைக்கேட்பார்க ளிசைந்துநீமிருத்த
பக்குவமாவிடு பார்த்தன்மேற்கண்வைத்திப்
படிக்குளேகன்ன னெதிர்த்துப்போர்செயு
முடிக்கிலுன்தய விருக்கவேணுமெத்த
எங்கிருந்

சல்லியன்துரியோதனனிடத்திற்போனபின்பு அர்ச்சுனனும் மாதவனும் தருமனிடம்வந்து நடந்தசெய்தியைச் சொல்ல, உலூகமுநிவன் அஸ்திநபுரத்துக்குப் போய் பாண்டவர்க்காகத் தூதுபேசல்.

விருத்தம் அ.

தருமன்மொழிக்கிசைந்திடுசல்லியனுமிந்த்ரன்
சரிதைசொல்லிச்சுயோதனன்பாற்சேர்ந்தான்கிரீடி
அருள்மாலுந்துவாரகைவிட்டுதிட்டிரன்பா
லங்குநடந்ததையுரைத்தார்சல்யன்செய்தி
பொருவில்தன்மனும்புகன்றனுலூகாஸ்திந
புரஞ்சேர்ந்துபெரியோர்க்கன்புரைத்தார்வேந்தன்
விரிபுகழுலூகரைவந்திடுங்கார்யஞ்சொல்
வீரெனஅம்மாமுனிசொல்வேனென்றாரே.

எ. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

நான்சொல்வதென்னயிங்கே நீங்களேயனைவோரும்
நன்றாயோசித்துப் பாரும்

அநுபல்லவி.

மேன்மைபெருகும்பீஷ்ம னென்னும்பிரகாசனே
மினும்புகழ்கொள்துரியோ தனமகராசனே
நான்

சரணங்கள்.

௧. வனத்திற்பன்னிரண்டாண்டு-மறைந்தோராண்டுகழித்து
வந்தாற்சூதாற்கெலித்த நாட்டை - நாங்கள்

மறுபடியுந்தருவே-மென்றுரைத்திடுஞ்சொல்லே
மறந்தேன்படுகிறீரிப் பாட்டை
தனிச்சூதாடவந்தாலும்-வாரும்வந்தாலுங்கள்
சாம்பிராச்யம்நீங்களாளுங் கோட்டை-தனக்கோர்
தாழ்வும்வாராதையோ-சமர்செய்வோமென்றால்நீங்கள்
தானேதேடிக்கொள்வீர்கள் கேட்டை - பழைய
அனுபோகமறிந் திருவருமொருபாட்டை
யாவதழகில்லா விடிலதுசேட்டை
கனைதநினைக்கவேணுங் கம்பளிமூட்டை
காடியானகதைபோல் வருமனவேட்டை

நான்

௨. சதியார்க்குமாகாது-நீங்கள்சொன்னபடிக்குத்
தருமனுண்டிருந்தநன் ஞடு - நகர்
தனைவிட்டுவிடுங்கள்அப்-பாலுங்கள்பேச்சையுச்
சரிப்போர்நாவினிற்போடுஞ் சூடு
எதுவுந்தரோமுங்களா-லானதைப்பாரும்பாரும்
என்றாலுங்கள்குடும்பத் தோடு - நீங்கள்
எல்லாரும்போய்ச்சேர்வீ-ரர்ச்சுனன்பாணத்தாலே
ஜெட்டுநாளைக்குட்சுடு காடு - மெத்த
பிதப்பைகளென்றவரை நினைத்திருக்கின்றீராடு
பின்னுக்கிடைதல்பாச் சனுக்கிடந்துள்ளுமாடு
பொதிசுமக்குமுங்கள்மட்டும் போவதோயிப்பாடு
புவனமுழுவதுக்கும் வந்திருக்கின்றதுகேடு

நான்

௩. அரகரவென்னலாம்-ஆண்டிகளுக்கிடும்போ
தல்லோவருத்தம்நீங்கள் ஓதும் - இந்த
அலங்காரப்பேச்செல்லாரும்-பேசுவார்சண்டைதனக்
கையோநீரெதிர்த்திடும் போது
தெரியவரும்நேற்றொரு-ரதக்காரன்வந்துசெய்த
செய்கைமறந்தீருங்கள் மீது - வீம
சேனனுந்தம்பியரும்-திரும்புவாராகிலென்ன
செய்திடுவாரோதெரி யாது - நீங்கள்
விருதினலேநீங்கள் செய்யப்போகின்றவாது
வினையாமுடிந்துங்கட்கே வேர்ப்புழுகாந்தப்பாது
துரும்புமலையாமானல் மலையெப்படியாகாது
சுண்டெலிபாம்பைக்கடித்துத் - துணிப்பதற்குண்டோவது

நான்

உலூகமாமுநிவன் சொல்லைக்கேட்டு துரியோதனன் தன் வீரத்தைச்சொல்லி, அதற்கு விதுரன் முதலிய பெரியவரெல்லா நீ சொல்வது தகாதென்றுசொல்ல, அதற்குத் துரியோதனன் அவரையிகழ்ந்து உலூகமாமுனிவருக்குக்கண்டிப்பாபாண்டவர்க்குக் காடுதான் எனக்கு நாடுதான் சொந்தமென்றுசொல்ல, அதைக் கேட்டதிருதராட்டிரன் அவனை யடக்கி உலூகருக்குச் சமாதானஞ் சொல்லல்.

விருத்தம் க.

மதிகொண்மாமுனிவன்சொன்ன-வன்மைகேட்டரசன்பொங்கி
எதிரெதிர்தாக்குஞ்சண்டை-யினிலவர்திறனுமென்றன்
அதிர்படைத்திறனுங்காண-லாகுமென்றுரைத்தான்கேட்டு
விதுரனுமற்றுளோரும்-விதிசொல்வார்மதிசொல்வாரே.

உ. திபதை-இராகம்-சௌராஷ்டகம்-சாப்புதாளம்.

கண்ணிகள்.

க. நற்றவலூகிதர்-சொற்படிக்கவாண்ட
நாட்டைக்கொடுக்க வேணும் - கொடாமலிச்
சிற்றறிவினர்சொல்லும்-புத்தியைக்கேட்பது
சிறந்ததல்லவே காணும்

உ. தனமும்போம்நீகொண்ட-கனமும்போம்செல்வமும்
தாண்டிநம்மைவிட் டோடும் - சண்டையென்ற
நினைவுகொண்டாலுமர்ச்-சுனன்பாணமெவரையும்
நிலத்தில்வையாமற் சாடும்

ங. கரும்புருசியென்றுவே-ருடனேபிடுங்கலா
காதென்றுனே முதிரன் - ஐவர்மீதில்
அரும்புவியினிற்கொண்டு-பெரும்பான்மையுடன்வாழும்
அண்ணலான விதுரன்

ச. உரமாமவன்சொல்விட்டிப்-பரிசனத்தைநம்பிநீ
யுத்தஞ்செய்வது மோசம் - ஐயோமண்கு
திரையைநம்பியாற்றில்-கரையேறவேணுமென்ற
செயல்போல்வந்திடும் நாசம்

௫. சொப்பனத்திலுமுன்றன்-தப்படிமுடியாதர்ச்
சுனன்பொழிசர மாரி - நம்மையெல்லாம்
இப்போதேகொலுமென்றான்-முப்புவியினும்வில்லின்
இசைகொள்துரோண சாரி

௬. சொன்னதுரோணரைப்பார்த்-தென்னபூசிமந்திரம்
சொல்லவந்தீ ரடியேன் - கைத்திறலும்
ஒன்னலர்கைத்திறலும்-பின்னேதெரியலாமென்
றுரைத்தானரவக் கொடியோன்

௭. கோலதிருதராட்ரபூ-பாலனீயுமிந்தக்
குரூரந்தனைவி டாமலே - ஐவராமுன்
பாலரையழைத்தனு-கூலமாயவர்கள்
பங்கையுங்கொ டாமலே

௮. முதிர்பகைச்சண்டைக்கே-பதறுவாயெனிலிங்கே
மூலைவிட்டி லாடுமென் - னவர்களிற்
சிதைகளத்தில்பார்த்தன்-எதிரில்வில்லெடுப்போரார்
செப்பென்றானே வீடுமன்

௯. என்றபீஷ்மரைப்பார்த்-துண்டவீட்டைத்தானே
இகழ்ச்சிசெய்துபழிக் கிறாய் - சண்டையென்றால்
குன்றித்தலையிற்பற்று-நன்றாப்போட்டுக்கொண்டிக்
கும்பில்நாள்கழிக் கிறாய்

௰. நகமிழந்தபுலிபோ-லகமெலியப்பரசி
ராமனைநீ யடித்து - வென்றதல்லாமல்
செகமதிலென்னசே-வகஞ்செய்தாயெனக்கன்னன்
செப்பினான்துடி துடித்து

௰௧. ஆமாங்கன்னனானோர்-சாமான்னியனென்னாலிங்
காவதென்ன சாரம் - வெற்றிகொண்ட
கோமானீகுணவானீ-குலவானீபுவிக்குள்தக்
கோனீயுன்னதே வீரம்

௰௨. சொல்லுங்கல்யாணத்தில்-நல்லபாஞ்சாலனத்
திரௌபதிகண் காண - மன்னர்தங்கள்
மல்லறிந்திடவைத்த-வில்லைநீயல்லவா
வளைத்தாயவர்கள் நாண

௰௩. கனமிகுந்திரௌபதி-தனைக்கொண்டுபோம்போதிக்
காவலர்கள் படித்தது - நிறைவுபெற
உனதமிர்ந்தவர்ச்-சுனனைநீயல்லவா
ஓடவிட் டடித்தது

௰௪. வனமதனிற்றுரியோ-தனனைக்கந்தருவர்கள்
வலித்துக்கொடுபோம் போது -சண்டை
யினைநீக்கிநீயல்லோ-சினமாயச்சிறைமீட்க
எதிர்த்திட்டாய்புவி மீது

௰௫. ஓட்டைரதத்தில்நேற்று-மாட்டைமடக்கவந்த
ஒருவனைத்தளஞ் செறிய - வெற்றிபேசி
மேட்டியாவந்துகி-ரீட்டியைநீயல்லவா
வென்றாயுலகம் அறிய

௰௬. ஆதலால்மாதவன்-விடுந்தேரிலினிவரும்
அருச்சுனன்முன் பல்லை - இளித்திடாமல்
மேதினிதனிலுனைப்-போர்சண்டைசெய்திட
வீரனொருவன் இல்லை

௰௭. இல்லைமெய்தானென்றே-யெல்லையில்லாப்புகழ்
எடுத்துமேரு மலையை-நிகர்தோள்பீஷ்மர்
சொல்லக்கன்னன்கேட்டுப்-புல்லறிவால்வெட்கம்
தோன்றுதசைத்தான் தலையை

௰௮. துரியோதனனப்போது-பரிவாற்கன்னனையொரு
சொல்லாலமர்த்தி நீதி - லூகரைப்பார்த்
தரியகாடவர்க்கேயிப்-பெரியநாடெனக்கேயென்
றறுத்துச்சொன்னான் சேதி

௰௯. அதனைக்கேட்டுமிகத்-திருதராட்டிரன்கோபித்
தச்சுயோதனனை யடக்கி - அந்தலூகர்
வதனம்பார்த்துநானெவ்-விதமாகயிவர்களை
வைத்திருப்பேன் மடக்கி

௨௰. சண்டைக்கிருவரும்-தண்டெடுப்பாரானால்
தரைமேற்றப்பி யாரும் - பிழைத்திடார்
பண்டிதரானநீர்-கண்டித்துயான்சொன்ன
பண்பையோசித்துப் பாரும்

௨௧. மானபரரைவ-ராகையால்நீரந்த
மன்னரிடமே சேர்ந்து - அவர்கள்நி
தானமறிந்திக்கோபம்-ஏனிதைவிடுமென்று
சாற்றிடுங்களி கூர்ந்து

௨௨. உடனேநானோர்தூது-விடுகிறேனிருவர்க்கும்
ஒருமையாகத் தானே - என்றுரைத்தவ்
அடல்முனிக்கணிமுதல்-உடைகளுந்தந்தங்கே
அனுப்பினானக் கோனே

## சஞ்சயன் தூது.

---

### திருதராட்டிரன் சஞ்சயனைப் பாண்டவரிடத்துத் தூதனுப்பி அவர்களைத் தவஞ்செய்யும்படி செய்யெனல்.

விருத்தம் ம.

அரியவுலூகிதமுனிவன்ஐவர்பாற்சேர்ந்
தனைத்துமுரைசெயக்கேட்டின்னமுநடக்குங்
கிரியைகளையறிவமெனயிருந்தாரங்கே
கிலிகொள்த்ருதராட்டிரன்சஞ்சயனைக்கூவி
எரியுதுளமென்செய்வே [illegible] ற்கேட்போர்
யாருமிலைநீபோய் [illegible] வர்க்குநன்றாத்
தெரியவுரைத்தவர்க [illegible] மேசெய்யச்
செய்யென்று [illegible] ன்வலக்கையென்றானே.

அ. த [illegible] -முகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

தவஞ்செய்யச்செ [illegible] ஞ்-சஞ்சயாவுன்புத்தி-சாதுரியத்தினாலே

அநுபல்லவி

பவநெ [illegible] ப் பாண்டவர்களிகூர்ந்து
பாரை [illegible] மறு படியுங்காட்டினிற்சேர்ந்து
தவஞ்

சரணங்கள்.

௧. அக [illegible] வன்னை யலைக்குமிவர்கள்சல்லி
யத் [illegible] ட்டேனீ யவர்களிடமேடல்லி
சக [illegible] திக்காடி தனில்வீழ்ந்திடும்பல்லி
த [illegible] நீயாகாமல் சாத்திரக்கருத்தைச்சொல்லி
தவஞ்

௨. அ [illegible] இவருங்கொ டாதகெண்டரப்புண்ணி
ய [illegible] டாதகெண்டர் ஆதலாலிம்மண்ணில்
[illegible] ழித்துவாழும் படியுன்மனத்திலெண்ணி
[illegible] ற்றானேசதுர் விதவுபாயங்கள்பண்ணி
தவஞ்

௩. [illegible] த்தினில்வந்த கொற்றவருஞ்சொல்லேற்றுக்
[illegible] ாரைவரைமாத்ரங் கூடுஞ்சமயம்பார்த்துத்
[illegible] றிகளென்னுஞ் சர்க்கரைக்கஞ்சிவார்த்துச்
[illegible] ப்வோமென்றவர் தாவுங்கோபத்தைத்தீர்த்துத்
தவஞ்

## சஞ்சயன் பாண்டவரைக்கண்டு திருதராட்டிரன் சொல்லியபடி சொல்லல்.

விருத்தம் ௰௧.

தெருளூறுசஞ்சயனிதைக்கேட்டுபலாப்பியத்தைச்
சேர்ந்துபாண்டவர்கள்தமைப்பணிந்துநின்றான்
தருமனுபசரித்துமுனம்விதுரர்பீஷ்மா
சாரிமுதலோர்சுபத்தையறிந்துகொண்டு
மருவலர்செய்தியுமறிந்தபின்பிங்கேநீ
வந்ததேதென்னஉங்கள்தந்[illegible]தயான
நரபதிசொன்னதையுமக்குச்[illegible]வந்தேன்
நானென்றானவைக[illegible]வனென்றானே.

௬. தரு-இராகம்-[illegible]திதாளம்.

பல்[illegible]

தவஞ்செய்யச்சொன்னார்மெய்ய[illegible]ர்பெரிய
தந்தையன்புடன் [illegible] ஐயா.

அநுபல்லவி

நவமதனனதர்ம [illegible]னங்களை
நாசப்படுத்தாமல்விசு [illegible]ங்களைத்
தவஞ்செய்

சரணங்கள்.

௧. இனியமானுடசென்மம்-எடுப்பதருமையதை
யெடுத்தாலுமேன்மையாம்வி [illegible] - பெற்
றிருப்பதருமையவ்வா-றிருக்கினுமிப்பிரபஞ்[illegible]
திந்த்ரசாலமாதர்கள்
தனைநீக்குவதருமை-நீக்கினும்நல்விரதந்
தனைமேவிப்புண்ணிய [illegible] அதைச்
சாரப்பெறலருமை-பாதலாலிவையெல்லாஞ்
சார்ந்தீர்களென்றுங்களைத் [illegible]
இனியெடாதபடி [illegible] புன்[illegible] ரிலெட்டும்
ஈனநெஞ்சின்தலைமீ [illegible] தினிமேலே[illegible]சொட்டுப்
புனிதமோட்சவனு [illegible] போகா[illegible]துகெட்டுப்
போகச்செய்யுமுலகைப் [illegible] பொய்யெ[illegible]ளிவிட்டுத்
தவஞ்செய்

௨. தாமரைமாமலரும்-அல்லியுமொன்றாஒரு
தடத்தினிற்பிறந்தது [illegible] பரா
சாரிஷிதலத்தினில்-இருதரத்தோருமொன்றச்[illegible]
சனித்ததாலென்னவினை [illegible]

பாமரராயிவரோர்-பயன்படாமலுலகப்
பழிப்புக்காளானொருக் காலே - நல்ல
பயன்பெற்றுநாட்டைப்போல்-காட்டையுமாளத்தக்க
பண்புற்றீரென்றுங்களைமென் மேலே
நேமமாத்துதிசெய்து வினைகளைவாட்டி
நின்றுழலுடலைப்பொய் யென்றுபாராட்டிக்
காமவெகுளிமயக் கங்களையோட்டிக்
கண்ணனடியைமனக் கமலத்தில்நாட்டித்
தவஞ்செய்

௩. வினைப்பயனாற்பொல்லாங்கை-விளைத்தபலமாமுடி
வேந்தரநேகம்பேர் காயம் - மாள
வெய்யநரகையனு-பவித்துப்பின்னுங்கரு
வேதைக்குள்ளானார்வா லாயம்
நினைக்கருங்குணங்களும்-நன்னெறியுஞ்சீலமும்
நிறைந்ததல்லாலின்னமோர் ஞாயம் - உண்டு
நிகழ்த்துவதென்னவோகோ-வலுவிலேயவர்கட்கு
நேரிட்டதேதெய்வச காயம்
எனவுரைத்துங்களை யிலைகனிகளையுண்டு
ராஜபதத்தில்வைத்த இச்சைதன்னைவிண்டு
சினம்கலச்சுகர்போல் அதீதப்பொருளைக்கண்டு
சீவன்முக்தர்களாகத் திடச்சித்தமேகொண்டு
தவஞ்செய்

---

## தருமராஜன் சஞ்சயனுக்கு முன்னர் போர்செய்து பின்னர் தவஞ்செய்வோமெனல்.

விருத்தம் ௰௨.

வந்தசஞ்சயனிவ்வாறு-மன்னவன்சொன்னவெல்லாந்
தந்திரமாகச்சொன்னான்-றருமனுங்கேட்டுக்கோப
முந்துறநகைத்துமுன்னே-முதிர்சமர்செய்துபின்னே
இந்தநற்றவத்தைச்செய்வோ-மென்னவேபன்னுவானே.

௰. தரு-இராகம்-கல்யாணி-சாப்புதாளம்.

பல்லவி.

பின்பவர்சொற்படியே-தவஞ்செய்யப்-பெறுவோஞ்செஞ்சடைமுடியே

அநுபல்லவி.

இன்புறுசஞ்சயா இலகுபொன்முடிபூண்டு
இரண்டுநாழிகையாவ தெங்கள்நாட்டையாண்டு
பின்பவர்

சரணங்கள்

க. எமைத்திரணமாஎண்ணி — பழிவுசெய்திடும்வீரர்
எவர்களுங்கலங்கவே — ரணமுகத்தினில்கோர
அமர்செய்தழித்தவர்கள் — ஆவியந்தாஞ்சேர
அனுப்பிவிட்டுநாங்கள் — அந்தப்பாவந்தீர
பின்பவர்

உ. கொக்குப்பிடிக்குமந்த்ரஞ் — சொல்லுகிறாயதைக்கட்டுக்
குழந்தைகளோவெமக்குங் — கொஞ்சந்தெரியுமெட்டுத்
திக்குப்பகைவர்தலை — திண்டாடவேயிட்டு
செங்குருதிப்பிரவாகஞ் — செகமெங்குமோடவிட்டுப்
பின்பவர்

௩. பசியாமருந்திடுவேன் — பழஞ்சோறுதாவென்று
பகர்ந்தாப்போலாச்சுதுநீ — படித்தகதைகளின்று
பிசகில்லையெம்மாலே — பெருஞ்சபைதனிலன்று
பேசியபடிநூறு — பிள்ளைகளேயுங்கொன்று
பின்பவர்

---

சஞ்சயன் தருமனைப்பார்த்து
நீங்கள் போர்செய்யத் துணிவீர்களானால்
விதுரன் முதலிய பெரியவாளெல்லா மிறந்துபடுவார்கள்
அது தங்களறிவுடைமைக்குத் தகாதெனல்.

விருத்தம் ௰௩.

தருமனிவ்வாறுசொல்லச்-சஞ்சயன்கேட்டெந்நூலும்
விரகுடன்கற்றநல்ல-விவேகிகளானநீங்கள்
உரைசெயத்தகுமோபோருக்-குடன்படுவதனாற்றுன்பம்
இருதரத்தோர்க்குமென்றே-எத்துவான்சாற்றுவானே.

௰௧. தரு-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

எல்லாமுங்களுக்குத்தெரியும்-நான்சொல்வதில்-என்னகாரியமையா

அநுபல்லவி.

வல்லார்க்குஞ்சமரினில் — மயங்கிப்போங்குரங்கு
மரப்பிளப்பின்முளையை — வாங்குங்கதையறிங்கு
எல்லா

சரணங்கள்.

க. இந்தவுலகிலுங்கட்　　　　கெதிரேயில்லையாரும்
என்றுலுந்திருதராட்ட　　　　ணிடத்திற்றுணையாநேரும்
அந்தவிதுரர்பீஷ்ம　　　　ரரசன்முதலானோரும்
அமரில்மாண்டபின்னல்லோ　　　　அவனியுங்களைச்சேரும்
எல்லா

உ. இடரில்நன்மைக்கேயுடல்　　　　எடுத்தபெரியோர்நல்லோர்
இளைஞர்மூத்தவர்புத்ரர்　　　　இன்னமிருக்கும்பல்லோர்
அடையலர்விழச்சென்னி　　　　யறுப்பேனென்றசொல்லோர்
அழகோதவஞ்செய்வதே　　　　யரிதென்றுரைத்தார்வல்லோர்
எல்லா

ந. கண்ணில்லாதஅரசன்　　　　களித்திடவேவில்லைக்
கையிற்றொடாவிட்டால்　　　　கனமுங்கட்கென்சொல்லை
எண்ணிப்பாருஞ்சண்டைக்　　　　கெதிரிட்டால்வெகுதொல்லை
இருதாத்தோருந்தலை　　　　யெடுக்கப்போகிறதில்லை
எல்லா

---

## சஞ்சயனை வீமன் பார்த்துக் கோபமாகி போர்க்களமாகிய காட்டில் தவஞ்செய்வோமெனல்.

விருத்தம் ௰ச.

குணமிலாமொழிசொல்சஞ்சயனைப்பார்த்தொன்னார்
　　குலகாலனாகியவுத்தண்டவீமன்
துணைவனெதிர்வகைவகையாத்தனக்குண்டான
　　தோள்வலியைக்கூறுதற்குத்தொடுத்தேகண்ணில்
தணலுதிரவிருபுருவநெளியவுக்ர
　　தண்டமொடுகரந்துடிக்கத்தாணியேங்க
இணையிலாதெழுமேகக்குலம்போலோங்கி
　　யிரைக்கின்றான்மனவலியையுரைக்கின்றானே.

௰உ. தரு-இராகம்-கல்யாணி-ஜம்பைதாளம்.

பல்லவி.

சஞ்சயாஇதுசத்தியம்-இதைஎங்கள்-தந்தைக்குரைசெய்அகத்தியம்

அநுபல்லவி.

நெஞ்சறியநீவந்த　　　　தல்லாமலிப்போது
நெல்லுக்குளரிசியென　　　　யார்க்குத்தான்தெரியாது
வெஞ்சமரிலாருயிரை　　　　விண்ணேற்றிவிடுகிறேன்
வெய்யருடல்நாய்நரிக்கு　　　　விருந்தாகஇடுகிறேன்
சஞ்சயா

சரணங்கள்.

க. அந்தவூகருடன் சொன்ன - மொழிதப்பி
அவர்கள்மறுபடியீ தென்ன
தந்த்ரநினைத்துனைவிடுத் தனர்கள்யாம்பண்டு
தலைமொட்டையாய்விடவே தனித்தனியாக்குட்டுண்டு
இந்தமொழிசேட்போமோ யினிகதையைப்பிடிக்கிறேன்
ஈசன்றுணைகொண்டவர்கள் எதிர்த்தாலுமடிக்கிறேன்
சஞ்சயா

உ. வீரர்தலைகளை யறுத்து - வருமிரத்த
வெள்ளத்தினிற் குளித்து
கோரரணபூமிமிசைக் குவிந்தபிணமலையிடத்துங்
குரளிகள்விசாரமற்றுக் கூடியிருக்குந்தடத்துஞ்
சாரவுடல்வேறுகவே தழைந்தகவந்தக்காடு
தனிலும்போய்த்தவம்புரிந்து சார்வோம்விண்ணவர்நாடு
சஞ்சயா

௩. யுத்தகளம்யாக சாலை - யதனில்நிறை
யுதிரமேயக்கினிச்சு வாலை
இத்தரைக்கோர்சுமை யெனப்புகன்றிடவந்த
இகல்கபடன்முதலான யிளைஞராகியஅந்த
மத்தராம்பசுநூறு மாளச்சிதைக்கிறேன்
மன்னுதன்மனுற்போர்க்கள மகமுஞ்செய்விக்கிறேன்
சஞ்சயா

---

## தருமராஜன் பாண்டவர்களை அமர்த்திச் சஞ்சயனைப் பார்த்துப் பேசும்போது கிருஷ்ணன் சஞ்சயனோடு துரியோதனனாதியரை யிகழ்தல்.

விருத்தம் ௫௫.

இந்தவகைவீமனுரைத்திட்டான்தன்ம
னிருபதறவேண்டாமென்றிருத்தித்தூது
வந்தவனைப்பார்த்தரசர்செய்கையென்று
மாறுபடோம்அறம்வழுவோமெங்கள்மீது
தந்தையருள்பொய்த்திடினும்பொதுவாந்தெய்வந்
தன்னருளும்பொய்த்திடுமோவென்றனப்போ
தந்தநற்சஞ்சயன்பேச்சைத்தன்சொல்லாலே
யமுத்துவான்மாயவனும்வமுத்துவானே.

ய௩. தரு-இராகம்-அடாணு-ஆதிதாளம்.

பல்லவி. [சஞ்சயா

யாரிப்படிக்குச்செய்வார்-ஞானமோதவந்தாயே-இதற்குத்தாஞ்சொல்லுவாய்

அநுபல்லவி.

தாரணிமெச்சும்பிள்ளை தங்கட்குவந்தபாரி
தனையடைந்தாற்கோபிக்கத் தகுமாஅந்தக்காந்தாரி
யாரிப்படிக்

சரணங்கள்.

௧ பாரைச்சூதினாலே பறித்துக்கொண்டோரோட்டுப்
பற்றில்லாமலிவரைப் பஞ்சைகளாக்கிவிட்டுச்
சாரமில்லாத்துச்சா தனனையிம்மாதைத்தொட்டுச்
சபையிலிழுக்கச்சொன்னால் தன்மமாமதிகெட்டு
யாரிப்படிக்

௨. தோஷமென்றுபாராமல் தோகைமீதினிற்றூறி
துடைமீதிலுட்காரச் சொன்னானேபகைவீறி
ஈஷத்தும்நினைத்தானு இப்படிநெறிமாறி
எந்தஈனர்செய்வாரி தேற்குமாசபையேறி
யாரிப்படிக்

௩. ஐவர்மீதிலும்வெகு ஆசைபோலந்தாங்கம்
ஆகவழைத்துப்போய்ச்சூ தாடினதேவில்லங்கம்
தெய்வத்திரௌபதிதுகில் தீண்டியேமானபங்கஞ்
செய்தபோதுமாமன்பார்த் திருப்பதுதானோஅங்கம்
யாரிப்படிக்

---

சஞ்சயன் உபலாப்பியத்தைவிட்டு அஸ்தனாபுரத்துக்குச்
சென்று, திருதராட்டிரனோடு நடந்தவைகளைச்
சுருக்கமாச்சொல்ல, அவன் வருத்தமடைந்து விதுரனை
யழைத்துப் போர்வராமல் காப்பாயென
அவன் தமயனை யிடித்துச் சொல்லல்.

விருத்தம் யசுா.

அரியுமவையுரைத்திடச்சஞ்சயனைத்தன்ம
னன்பினுடனேபார்த்துநாங்கள்வாழப்
பெரியபிதாவெதைத்தரினுங்கொள்வோம்வேறு
பேச்சில்லையெனவவன்றன்னகரைச்சேர்ந்து
நிருபனடுங்கிடச்சிலசொற்சொலிப்போனானந்
நிமிஷம்விதுரனையழைத்திப்போர்வராமற்
பிரியமோடுசெய்யெனவம்மன்னனெஞ்சைப்
பேதிப்பான்கல்லமதிபோதிப்பானே.

௰௪. தரு-இராகம்-பந்துவராளி-சாப்புதாளம்.

பல்லவி.

இந்தமட்டும்வஞ்சகத்தைவிட்டுவிடு-யெல்லாருஞ்சுகப்படலாம்

அநுபல்லவி.

வந்தனம்அண்ணாவின் யோசனைபண்ணாதே
மலடிப்பிள்ளைபெறு வாளெனஎண்ணாதே
இந்த

சரணங்கள்.

௧. இளைத்துவந்தபிள்ளை-களையழைத்தணைத்தே
இதவுகள்தரும்நல்ல சொல்லைச் - சொல்லி
இந்திரப்பிரஸ்தந்தனை-கொடுப்பதழகுவம்புக்
கிழுத்தாலவர்பொறார்கள் வில்லை
வளைத்தெதிர்ப்பாரெதிர்ப்-பாரெனில்யாவரும்
மந்திபோலிளிப்போம் பல்லை - அது
மாத்திரமல்லக்கத்த-வீரர்களானோரும்
மனதிலுயிர்மேலாசை
வைக்கவேண்டுவ தில்லை
இந்த

௨. முற்றும்உப்புமூட்டை-நனைந்தோனுடனேதேங்காய்
மூட்டைநனைந்தவனும் நஷ்டம் - ஆனேன்
மோசம்வந்ததென்செய்-வேனென்பதுபோனீயும்
மொழிந்தாயப்பாலுன்றன் இஷ்டம்
நற்றிறற்பாண்டவர்-பொறுத்திருந்ததுமுன்னே
நமதுமேலோர்செய்ய திஷ்டம் - இனி
நம்முடனேபோவ-தல்லநம்மைநம்பும்
ராஜாதிராஜர்க்கும்
வந்துநேருங் கஷ்டம்
இந்த

௩. அரிகரியுன்பிள்ளை-அரசர்கள்முன்பந்த
அரிவையைப்படுத்தின பாடு - சொல்ல
லாமோவதையும்பொறுத்-தார்கள்மற்றொருத்தரா
னாலென்னுமிந்நேரமிந் நாடு
இருமனதில்லாமல்-அவர்கள்பங்கைக்கொடுத்தால்
இன்னஞ்சிலநாளினத் தோடு - கூடி
இருந்துவாழலாமில்லா-விட்டாற்சகலருக்கும்
எப்போதோவெனவேண்டாம்
இப்போதேவருங் கேடு
இந்த

விதுரன் திருதராட்டிரனுக்குச்சொல்ல, அவன் அதற்கிசைந்து மறுநாள் சஞ்சயனைக்கண்டு, நடந்தகாரியங்களைச் சொல்லென அவன் சொல்லல்.

விருத்தம் ௰௭.

விதுரனுரைத்திடக்குருடனுளமிசைந்து
மெய்யாகநீயுரைத்தபடியேசெய்வேன்
இதையெவர்கள்கலைத்திடினுங்கேளேனென்றே
யிளையவனையனுப்பிவிட்டுவிடிந்தபின்பு
சதுர்கொள்சபைதனிலுற்றேயங்குவந்த
சஞ்சயனையழைத்தென்னசெய்தியென்றான்
கொதிகொளவருரைத்தபடியுரைக்கவன்பு
கொள்ளுவான்வகைவகையாய்விள்ளுவானே.

௩. திபதை-இராகம்-காம்போதி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧. உச்சிதமாமுப-லாப்பியந்தன்னைச்சேர்ந்
துளமகிழ்ச்சி கொண்டேன் - அங்கேயொரு
வச்சிரமாளிகையின்-மாயனும்பார்த்தனும்
வாய்ந்தகாட்சி கண்டேன்

௨. கண்டுபணிந்திட்டேன்-அவர்களிருக்கின்ற
கனமிகுந்திடு நேசம் - விடாமலே
சண்டைக்கெதிர்த்திடில்-மூன்றுலோகத்தையுந்
தான்செய்வார்கள் நாசம்

௩. என்றுநான்யோசிக்கும்-போதுமாயனெனைநீ
இங்குவந்த தேது - சொல்வாயென
நன்றாகச்சிலசொற்கள்-மணிகோத்ததுபோலங்கே
நான்சொன்னேனப் போது

௪. மாயனதைக்கேளாமல்-அமரினிலவரை
வலியால்வெல்ல வேணும் - இல்லாவிடில்
தூய்மையாமவர்பங்கைக்-கொடுக்கவேணுங்கதை
சொல்லாதேபோங் காணும்

௫. இந்தவிரண்டிலொன்றுஞ்-செய்யாமற்றவஞ்செய்யும்
என்றசொல்லற் காது - அண்டமட்டும்
வெந்தெரிந்திடுங்காட்டுத்-தீயையவிக்கக்காற்றை
விட்டதாம்புவி மீது

சு. என்றன்னோனுரைத்தனன்-எனத்திருதராட்டிரன்
இருக்கட்டுமெவ்வி ஜயன் - என்னுந்தீரன்
ஒன்றுஞ்சொல்லவில்லை-யாவென்றுனவன்சொன்ன
துரைக்கின்றுனேசஞ் சயன்

எ. கிள்ளப்பழுக்குநா-டலகரலபிச்சை
கேட்டிடுமோ ரூரா - கிலுந்தாமல்
தள்ளிவிட்டெங்களை-யெங்கள்பிதாவுமா
தவஞ்செய்யச்சொன் ஞராம்

அ. நல்லததுவுஞ்சம்-மதந்தானுதியிலே
நாங்கள்செய்தபிரதிக் கினை - முடிந்தபின்
அல்லல்நீங்கச்சந்த்ர-குலம்விளங்கிடச்செய்வோம்
அரியமாதவத் தினை

கூ. இனமொன்றுகேள்பீஷ்மர்-விதுரர்ஆசாரியர்
ஏதேனுஞ்சொல் வாரே - என்றவொரு
நினைவிருந்தவர்கள்-ஒன்றுஞ்சொல்லாமையால்
நேரிடுங்கொடும் போரே

௰. எழுகடலுடனெட்டாய்-எண்ணரத்தக்கடலோன்
திருக்கச்செய்திப் பாரில் - ஒன்னலர்குலம்
முழுதுங்கொல்வேனென்று-னெனச்சஞ்சயன்சொல்ல
மொழிவான்பீஷ்மா சாரி

௰க. ஆதிநரநாராய-ணர்களேகிருஷ்ணர்ச்சுனர்
ஆகவந்தவ தாரஞ் - செய்தாரெனுஞ்
சேதிகேட்டிலாயோ-அவ்விருவர்க்குமுன்
செல்லாதொருவர் வீரம்

௰உ. அந்தக்காரணத்தி-னாலுஞ்சிவன்றந்த
அஸ்திரபலத் தாலும் - தானவரோ
டவரிடத்திலும்போய்ப்போர்-செய்துபெற்றான்புகழ்
அண்டங்கட்கப் பாலும்

௰ங. இந்த்ராணியமுதூட்ட-உண்டுபிரபலச்செல்வம்
இசைமகானு பாவனை - யெவர்கட்கொப்பு
விந்தையாகச்சொல்வேன்-ஒப்புசொன்னாற்சொல்ல
வேணுமுக்கண் தேவனை

௰ச. அவனையெளிதாயெண்ணி-யெதிரிடாதேயொன்னார்க்
கந்தக்கனவான் வில்லை - வளைத்திடில்
எவரையுஞ்சொல்லால்வெல்-கன்னனுவெல்வானவ்
வீசனாலும் இல்லை

௰௫. ஆதலாற்சுமைதாங்கி-யாயந்தீர்க்காதெங்கட்
கல்லோவந்து நேரும் - பழிப்பிந்தப்
பாதகரைத்தள்ளி-விட்டெங்கள்சொற்கேட்டால்
பதியுனக்கே சேரும்

௰௬. அன்றியும்பாண்டவர்-பகைதீருமிப்போர்வ
ராமலிருக்கு மேது - வுங்கிடைக்கும்
இன்றுமுதலாக-எங்கள்பேச்சின்படி
யிருவென்றனப் போது

௰௭. விசயன்மேலுமக்கிச்சை-யிருந்தாலவனைத்தலை
மேல்வைத்துக்கூத் தாடுஞ் - சமர்தனக்கே
துசங்கட்டும்வீரரை-யிகழ்ந்துநீசெப்படித்
துரும்பாப்பேசக் கூடும்

௰௮. தடுக்குத்தள்ளும்விதமாத்-தள்ளவேணுமிது
தக்கதோபெரி யோர்க்கு - இவைகளாற்றுன்
முடுக்குயர்ந்துபோச்சுத்-தடவித்திரிந்துகால்
முறிபட்டவொன் னுர்க்கு

௰௯. அனமிட்டோர்காலிற்பட்-டதுதன்கண்ணிற்பட்ட
தாகவெண்ணிச் செழிப்பார் - அல்லோநானே
துனும்ரணமுகத்தினில்-சண்டைசெய்துசெஞ்
சோற்றுக்கடனைக் கழிப்பார்

௨௰. நச்சுப்பல்லிபோல-அவசகுனமேசொல்லும்
நயங்கற்றீர்போ தாதா - மாவிடிக்கக்
கச்சுக்கட்டிவருங்-குண்டனுக்கொருகொழுக்
கட்டைதான்தெரி யாதா

௨௧. இனிப்பேசவேண்டாமச்-சத்துருக்களையொரு
இமைப்பொழுதினில் வாட்டு - வேனெனவே
சினத்துக்கன்னன்சொன்னன் - அந்தப்பழங்கதையைத்
தெளிந்தபீஷ்மர் கேட்டுத்

௨௨. திருதராட்டிரனைப்பார்த்-திக்கன்னன்றனல்லோ
திரிபுரதகன மூர்த்தி - தனைவில்லாலே
சதுராஅடித்துப்பெற்றன்-சொர்க்கமத்தியபா
தாளமுழுதுங் கீர்த்தி

௨௩. செக்கென்றுசிவலிங்க-மென்றறியாதவித்
தியாலுன் குடிக்கு - நாசம்வரும்
கொக்குப்போலிருக்குமவ்-வைவர்துரையாவார்செங்
கோலுடன்மணி முடிக்கு

௨௪. ஆதலால்விபரீதம்-வந்துநேர்ந்திடுமுன்பென்
அறிவினைக்கே ளிப்பார் - முழுதும்நீயே
சாதனத்துடனுளச்-செய்வேனென்றார்துரோணா
சாரியர்சிலவு ரைப்பார்

௨௫. எனக்கோவுனக்கோவென்-றிருக்கும்வேளையிலேயோ
இவர்கள்சொல்லும் வம்பு - தனைநம்பாமல்
அனைக்குநிகராம்பீஷ்மர்-சொலையுன்தெய்வஞ்சொன்ன
தாகமனதில் நம்பு

௨௬. எனவேநெஞ்சுமிருண்ட-மன்னன்சஞ்சயனைப்பார்த்
தென்னேரமிவ்வெ ரண்டை - செயுமவர்க்குச்
சினமாகவரும்படைத்-துணையார்அவரெப்படிச்
செய்திடுவார் சண்டை

௨௭. என்னச்சஞ்சயனையோ-வகைவகையாஅவர்க்
கிருக்கும்பலங்க ளனைத்தும் - உரைத்திருக்க
இன்னங்கேட்கிறானே-யிப்பாவிக்கப்பாவி
யேமெலென்று நினைத்து

௨௮. தாமஇடும்பன்பகன்-கிம்மீரனெடுசரா
சந்தன்முத லானோர் - உயிரையுண்ட
வீமனெனும்பிரளய-காலருத்ரனிருக்க
வேறுதுணையு மேனோ

௨௯. அத்திரவலுமைகொண்ட-காலகேயரென்னும்
அசுரருடனே வாதா - எதிர்த்தழித்தே
உத்தரகுருகண்ட-மட்டுஞ்சயங்கொள்கிரீடி
யொருத்தனும்போ தாதா

௩௰. ஆபிரத்தெட்டண்டம்-ஆண்டவிரணியனை
யழிக்கத்தூணிற் றோனும் - ஜெயமுகுந்தன்
தாயகமாஅவர்க்-கிருக்கவின்னமணி
தர்கள்துணையேன் வேணும்

௩௧. புனிதத்தருமன்றம்பி-மார்களிருவர்செய்யப்
போகின்றதொரு போரோ - எனமனதில்
நினைக்கவேண்டாமவர்க-ளுடனேமூவர்களும்
நேரில்நின்றெதிர்ப் பாரே

௩௨. இவர்களிருக்கட்டும்-அரவான்கடோர்க்கசன்
இளம்பஞ்சபாண் டவர்கள் - ஜெயசாத்தகி
தவதிஷ்டத்தூய்மன்பாஞ்-சாலன்சிகண்டியொடு
தருமன்புதூண் டவர்கள்

௩௩. இனஞ்சொல்வேன்திறலுத்த-மோசாவுதாரமன்பண்
பிசைந்தமச்ச தேசன் - சிசுபாலன்
தநயனனதுஷ்ட-கேதுபாண்டியனுத்
தண்டசோழ ராஜன்

௩௪. அடல்கொள்சராசந்தன்-மைந்தனிவர்களுடன்
ஆர்ப்பரித்து வானை - மண்டலத்தை
இடர்செய்யும்படிக்குச்-சேர்ந்திருக்குதிப்போ
தேழக்குரோணி சேனை

௩௫. எனவேதிருதராட்டிரன்-பயந்துவீமன்கதை
யெடுத்துக்கொண்டு நின்றான் - எனிலிவர்கள்
இனத்துடன்மாள்வதே-சத்தியம்அதற்கையம்
இல்லையில்லை யென்றான்

௩௬. துரியோதனன்கோபித்துப்-பீஷ்மர்துரோணர்கிருபர்
தூயவஸ்வத் தாமா - எடுத்தவில்
இரவுக்கூன்றுகோலோ-நமதுபடையைவெல்ல
எவர்களாலும் ஆமா

௩௭. மேலுநாகபாசங்-கொண்டதன்னன்சிந்து
வேந்தன்சோம தத்தன் - பூரிச்சிரவன்
சாலுங்காந்தாரன்சல்-லியன்கிருதவர்மன்சஞ்
சத்தவர்பக தத்தன்

௩௮. பலராமர்கோபாலர்-நானென்தம்பிமார்கள்
பதினோக் ரோணி - தளங்கள்சூழ்ந்
துலையனல்போலிருக்குதென்-மந்திரத்தாலும்வெல்ல
உண்டெனக்குத்தி ராணி

௩௯. ஜெயநமதெனவப்பா-இன்னம்நீயிப்படி
செப்புவதழ கல்லவே - அவர்கள்பங்கை
நயமாக்கொடுத்துவிட்டேன்-பங்கைநீயாளென்று
நியாயந்தந்த சொல்லவே

௪0. எழுத்தின்படிநடக்கும்-அல்லாமல்வேறொன்றும்
இல்லைமன மொப்பிநான் - அவர்கட்குச்
செழித்தபூமியிலொரு-துரும்பளவுங்கொடேன்
திறமிதுவெனச் செப்பினன்

௪௧. அதைக்கேட்டுக்கன்னன்தீ-யினில்நெய்விட்டதுபோற்றன்
அடலைச்சொல்லி வீறினன் - பெரியமன்னன்
இதுபோதும்நேற்றுமாட்-டைமடக்கும்போதுநீ
இலையோசொல்லெனக் கூறினன்

௪௨. இதைச்சகித்திடாமலே-கன்னன்போனனிவர்க்குள்
ளெவனையெவன் வெல்லுவான் - தெரிந்தமட்டும்
சதுராகச்சொல்லென்று-மன்னவன்கேட்கச்சஞ்
சயனெடுத்துச் சொல்லுவான்

௪௩. அரியவீட்டுமரைச்சி-கண்டியுந்தனுவாசாரி
யரைத்துஷ்டத்தூய் மனும் - சல்லியனைத்
தருமராஜனுமுன்றன்-நூறுபிள்ளைகளைப்பிர
சண்டகதைகொள்வீ மனுங்

௪௪. கன்னனைச்சயிந்தவ-னையசுவத்தாமனைக்
காண்டீபவர்ச்சு னனும் - சௌபலனைப்
பொன்முடியிருவரும்-இன்னமிருக்குமராஜ
புத்திரரையபி மனும்

௪௫. திறக்கிருதவர்மனைச்-சாத்தகியுமரசர்
திரளைமச்சநாட்ட ரசனும் - பாஞ்சாலனும்
அரியதுரயரையர-வானும்ராட்சதரைப்பொல்
லாதகடோர்க் கசனும்

௪௬. வென்றிடுவோமென்று-பகிர்ந்துகொண்டாரென்றான்
வேந்தன்வாயடங்கி னான் - அந்தவேளை
நன்றிபிலாவவன்-கேட்கச்சிலவிதுர
ராஜன்சொலத்தொடங்கி னான்

௪௭. அவர்களையழைத்துன்னு-லானதைக்கொடுசெல்யம்
அறுமென்றனங் தகனும் - ஒத்துக்கொண்டு
எவரும்வேண்டாம்நீயே-யழைத்துவாவெனநல்ல
தென்றுனேசஞ் சயனும்

௪௮. சர்ப்பகேதனன்சஞ்ச-யனைப்பார்த்தரசனுலே
தரப்போமோஓ ரூரும் - தரக்கூடாதே
இப்படிச்செய்நீயும்-உனைச்சார்ந்தோருமவர்கள்
இடத்தினிற்போய்ச் சேரும்

௪௯. என்பதைக்கேட்டந்த-பீஷ்மர்முதலோர்தம்
மிருக்கையைப்போய்ச் சேர்ந்தார் - அங்கிருந்த
வன்படைவேந்தரெல்-லாருமுயிர்மேலாசை
வையாமலே சோர்ந்தார்

௫௰. இராஜரெல்லார்களும்-போனபின்புதிருத
ராட்டிரன்தனக்குத் தானே - மனதுநொந்து
மாசில்சஞ்சயனோடுஞ்-சுயோதனனோடுமர
மனைக்குள்ளேசென் றனே

## திருதராட்டிரன் முதலோர் சொல்லும் புத்தியைத் துரியோதனன் கேளாமையால் தாயாகிய காந்தாரியைக் கொண்டு புத்திசொல்லல்.

விருத்தம் ௰அ.

கோதறுசஞ்சயனையுமைந்தனையுங்கூட்டிக்
கொண்டரசன்மனைவியிடஞ்சென்றவ்வைவர்
மீதுவஞ்சத்தாலுரைக்குங்கன்னன்பேச்சை
மெய்யாகநம்பியுன்றன்பிள்ளைநெஞ்சம்
பேதகமாயென்சொல்லுமின்னமுள்ள
பெரியோர்சொல்லுங்கேளானினிநீயேனும்
ஓதுவாயென்றுரைத்தானவளுமோத
வொப்பினுள்புத்தியினைச்செப்பினளே.

௰௫. தரு-இராகம்-மோகனம்-சாப்புதாளம்.

பல்லவி.

நான்சொன்னபுத்தியைக்கேள்-துரியோதனா - நல்லபேரெடுத்துக்கொள்வாய்

அநுபல்லவி.

வானும்புகழரசன் வையவுடலெடாதே
வருத்தப்பட்டுப்பெற்ற வயிற்றில்நெருப்பிடாதே
நான்

சரணங்கள்.

௧. அனத்தந்தெரியாமற்கூத் தாடுகிறாயாரும்
உனைச்சொல்லாரெங்களை யுரைப்பார்பழிப்புநேரும்
நான்

௨. கொலநேர்சமர்க்கெதிர்த்துக் கொண்டுநீவிழிக்காதே
தலையாமிந்தச்சமஸ் தானத்தையழிக்காதே
நான்

௩. உருக்கமுள்ளோரன்பை யுன்னெதிர்காட்டார்கள்
சிரிக்கச்சொல்வோரெல்லாந் தீப்பாயமாட்டார்கள்
நான்

---

## காந்தாரியைத் துரியோதனன் தேற்றல்.

விருத்தம் ௰௯.

சீராகக்காந்தாரியுரைத்தவார்த்தை
செவியிலுறுமுனந்துரியோதனன்தாயேகேள்
பேராண்மைகொண்டகன்னனையுமன்பான
பின்னவர்களையுமெனையுமற்றுமுள்ள

வீராதிவீரரையும்பலகிரீட
வேந்தரையும்படைகளையுமோரோவெண்ணிப்
பாராமல்நீசொல்லும்பேச்செல்லாமம்
பலமென்றான்விடுவிடுசஞ்சலமென்றானே.

மசு. தரு-இராகம்-சௌராஷ்டகம்-சாப்புதாளம்.

பல்லவி.

இந்தப்புத்திசொல்லவேண்டாம்-எனதுதாயே-எல்லாம்நீயறிவாயே

அநுபல்லவி.

எந்தவிதத்திலுமவ் வைவரெனக்குநேரோ
ராட்டணம்வருகுதென்று ரதத்தைத்திருப்புவாரோ
இந்த

சரணங்கள்.

க. பாங்காகச்சூதாடிப் பாரைத்தோற்றுவிழிக்கும்
பாண்டவருடன்சண்டை பண்ணுதெந்தவழிக்கும்
நாங்கள்வரோம்வந்தால் நவகண்டமுஞ்செழிக்கும்
ராஜர்பழிப்பதல்லால் ஞாலமெங்கும்பழிக்கும்
இந்த

உ. அரசைத்தோற்றவர்போனார் அந்தக்காலம்போச்சே
ஐயோஇவரேன்சும்மா விடுகிறார்பெருமூச்சே
ஒருபிள்ளைபெற்றோரும் உரையாரிந்தப்பேச்சே
உள்ளபடிநீநூறு பிள்ளைபெற்றவளாச்சே
இந்த

ங. திருட்டிடையனொருத்தன் சேர்ந்ததனப்பிரசங்கஞ்
செய்கிறானவனையுஞ் செருமுகத்தினிற்பங்கம்
அரைநொடியினிற்செய்வேன் ஐயோவென்களங்கம்
ஆடுகடிக்குமென்ன அகமெலியுமோசிங்கம்
இந்த

---

திருதராட்டிரன் சஞ்சயனைப் பார்த்து இப்போர் மூளுமெனில், யார்கெலிப்பாரென்ன, அவன் எனக்குத் தெரியாது வியாசரைக்கேட்டால் தெரியலாமென வியாசரைக்கேட்க அவர் சொல்லுதல்.

விருத்தம் உம.

முரடனிதுசொலச்சஞ்சயனைப்பார்த்திப்போர்
மூளுமெனிலெவர்கெலிப்பாரென்க்குருட்டு
நரபதிகேட்டிடவெனக்குத்தெரியாதிந்த
நியாயம்வியாசரைக்கேட்டாற்றெரியுமென்றான்

புரிசடையான்றனைநினைக்கவந்தானந்தப்
புண்ணியனைவணங்கியிப்பாரதயுத்தத்தில்
அரியவெற்றியெவர்பெறுவாருரைத்தேயென்னை
யாளென்றானதற்குமுனிகேளென்றானே.

ஸஎ. தரு-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

பல்லவி.

திருதராட்டிரனென்னும்பிரக்கியாதா - நான்
செப்புவதேன் தெரியாதா

அநுபல்லவி.

சதுராமோர்க்குவந்துமொங் தையையொளியார்யாருந்
தர்மமுள்ளவிடத்தில் தானேஜெயமுஞ்சேரும்
திருத

சரணங்கள்.

க. மதிமிகவே் நோகும் - அவர்க்கிப்போது
மண்ணுந்தங்க மாகும்
பொதுநான்எனக்கிரண்டு புறத்துமில்லையளுக்கு
பொன்னெடுத்தாலுமண்ணுய்ப் போமுன்பிள்ளைகளுக்கு
திருத

உ. இந்தப்பிள்ளைகள் - தோற்பார் - பாண்டவர்குறை
இல்லாநலனை யேற்பார்
சிந்தையில்நன்றாயோ சித்துப்பார்நீதானே
ஜெகதீசனேயவர்க்குத் தேர்ப்பாகனுனே
திருத

௩. மூடர்தமக்கு மிந்தக்-காரியத்தின்
மூலந்தெரியு மந்த
நாடகதாரியாஞ்ச னுர்த்தனனெனைத்தாங்கும்
நாகரிபாதத்தை நம்பினோர்க்கில்லைதீங்கு
திருத

---

விருத்தம் உக.

மாமுனிசொற்கேட்டகண்ணில்லாதான்மாலை
வணங்குதல்நன்றென்றான்சுயோதனன்கோபித்துத்
தாமரைவேதனையீன்றோனெனினும்பார்த்தன்
றனக்காளாமவனையுலகினிலென்னாவி
போமளவும்பணியேனென்றானழிந்து
போவாய்நீயென்றாசன்புகலவியாசன்
ஆமரியைநீவணங்கியினிமேற்றீமைக்
கஞ்சென்றுபுகன்றாசீர்மஞ்சென்றானே.

## கிருஷ்ணன் தூது.

---

### தருமராஜன் கிருஷ்ணனைத் தூதுபோகச்சொல்லல்.

விருத்தம் ௨௨.

வியாசமுனிபோனதற்பின்கண்ணில்லாத
வேந்தனவர்சொற்படியேயிருந்தானங்கே
தயாபரனாகியதருமனரசர்க்குள்ள
சதுர்விதவுபாயமினம்புரிதல்நல்ல
நியாயமெனக்கிருஷ்ணனைப்பார்த்திதுவரைக்கும்
நேர்ந்தபலனொன்றுமில்லையாதலாலே
சுயோதனன்பால்நீதானேசெல்லவேணுந்
தூதென்றுன்கிருபைசெய்திப்போதென்றானே.

௰௮. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயாநீபோகவேணுந் தூது - இந்த
ஐவர்மேற்கிருபைசெய்திப் போது

அநுபல்லவி

பையஅவர்செய்யுங்க படவஞ்சனைகளுக்குப்
பயப்படலாகுமோ
நான்சொல்லுஞ் சொல்லை
நயப்படஅவர்க்குரைப்
போரொருவரு மில்லை
ஐயாநீ

சரணங்கள்.

௧. சாடையாகப்பதுங்கி நமக்கேனென்றொருமூலை
தன்னிலிருக்கலாமோ எல்லாமுமதுவேலை
ஓடித்தாயும்பிள்ளையுந் தேடியுமரைச்சேலை
யொன்றெனல்போலமுன்பு
நாம்விடு தூது
சென்றும்அவர்விடுத்தும்
ஆம்பய னேது
ஐயாநீ

௨. ஆடுநனையுதென்று கோனாய்க்கென்னதுக்கம்
அதுபோலவர்கட்கெங்கள் மீதிலென்னவிரக்கம்
பாடுபடநீயெமக் கிருக்கவொருகலக்கம்

பங்கமுறவருமோ
அதிகஜெயமுண் டாகும்
சங்கமுங்கூழுஞ்சம்மா
விருக்கத்தடித்துப் போகும்
ஐயாநீ

௩. சாமபேததான தண்டமென்றுரைக்குஞ்
சதுர்விதங்களும்பேசி அவர்கள்மனங்கரைக்குஞ்
சீமானொருவனேற்பட் டானோவிதுவரைக்குந்
திடத்துடன்இலையாத
லாலேயெங்கட் குரிய
இடத்தைத்தருவார்களோ
இலையோவது தெரிய
ஐயாநீ

---

## கருஷ்ணன் தருமனைப்பார்த்து 'உங்களுக்காக நான் தூது போகின்றேன் உங்கள் கருத்தைச் சொல்லென, தருமன் சொல்லுதல்.

விருத்தம் ௨௩.

நீண்டபுகழ்த்தருமன்சொற்கேட்டமாய
னெடுந்தூதுசெல்கின்றேனுங்களுக்கு
மீண்டும்வனஞ்செலநினைவோசமர்செய்துங்கள்
மேதினியைப்பெறநினைவோஅவைகள்சொல்ல
வேண்டுமெனக்கொவ்வொருவராகவென்றான்
மிக்கபுகழ்த்தருமனெங்கள்மீதிலன்பு
பூண்டவனேயெவ்விதத்துமொருமையாகப்
பொருத்தென்றான்சொல்வேனென்கருத்தென்றானே.

௰௩. தரு-இராகம்-தோடி-சாப்புதாளம்.

பல்லவி.

என்கருத்திதுவே-நம்பிலெங்கள்-எல்லார்க்கும்பொதுவே

அநுபல்லவி.

தன்மமாத்தண்ணீருமுப் பிழைபொறுக்குதேகாணுந்
தட்டாதினியோர்தூது விட்டுப்பார்க்கவேணும்
என்கருத்

சரணங்கள்.

௧. குருமுத லோரை - மடித்துச்செங்கோல்
கொண்டிந்தப் பாரை - ஆள்வதிலும்
அருளாற்றந்தைசொன்ன அருந்தவத்தினைப்பூர்த்தி
ஆகச்செய்வோமெங்கட் கதைவிடஇல்லைகீர்த்தி
என்கருத்

௨. உயர்பங்கைக் கேளும் - மறுத்திடிலேந்
தாரேனுங் கேளும் - அதைமறுத்தால்
அயர்விலாதிருக்க ஐந்துவீடுகேளும்
அதையுமறுக்கிற்போருக் காகவலக்கைகேளும்
என்கருத்

௩. சுவாமிநீ தூது - சென்றும்அவன்
தடைசொல்லி வாது - செயநினைத்தால்
பூமியிலவனொடும் புரவலர்தலைமண்டைப்
புல்லுக்கொன்றாய்ப்புரளப் போடலாமேசண்டை
என்கருத்

---

## தருமன் கிருஷ்ணனோடு சொன்னவற்றைக்கேட்டு வீமன் சொல்லல்.

விருத்தம் ௨௪.

மேம்படுசீர்தருமனிதுசொல்லக்கேட்ட
வீமன்முகுந்தனைநோக்கியெங்களண்ணன்
சாம்பிராச்சியபட்டாபிஷேகங்கொண்டான்
தம்பிமார்சொற்சபதந்தனைமுடித்தான்
தேம்புமிவள்குழல்முடித்தானின்னமென்ன
செய்திடுவானெனநகைத்துச்செப்பிப்பின்னுங்
காம்பீர்யமுறுதருமன்றனைப்பார்த்தீதோ
கனமென்றானிம்மதியேனினமென்றானே.

௨௯. தரு-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

ஏனின்னமிப்படிபேசுகிறீரண்ணா-இதுபோதும்போதும்போதும்

அநுபல்லவி.

ஈனமாகவுரைத்தா லெந்நேரம்பொறுக்கலாம்
இதைவிடஎங்கள்கழுத் தினையாவதறுக்கலாம்
ஏனின்ன

சரணங்கள்.

௧. ஒன்னாரையன்றேயந்தச்-சபையிலடித்தவர்க
ளுயிரையுலகில் நிறுத்தோம் - அப்போதுநீர்
பன்னிப்பன்னிப்படித்த-பஞ்சாங்கந்தனையெண்ணிப்
பார்த்துக்கோபத்தைப் பொறுத்தோம்
இன்னமப்படிசொன்னால் எனக்கென்னவழியீங்கு
இவளுக்கென்னவழி இயம்புமிதுவோபாங்கு
தன்மமில்லாத்துரியோ தனன்முற்றுஞ்செயுந்தீங்கு
தனிலும்நீர்சொல்லும்நன்மை தானெனக்குப்பொல்லாங்கு
ஏனின்ன

௨. படியளந்திடுமாயன்-அடிவருந்திட-அந்தப்
பாவியிடத்தில் தூது - செல்லவேண்டாம்
அடியேனைவிடும்நான்போய்-சீராளன்வேலைகள்
யாவும்பார்த்துக்கொண்டுதப் பாது
முடியுமக்குத்தருவேன் ஐயையோஇந்தநச்சை
மூட்டைகட்டுந்தொழிலோ முழுதுமுன்றனிச்சை
கெடிகொள்நமதுநாட்டை யவனிடத்தினிற்பிச்சை
கேட்பதினும்உயிரை மாய்ப்பதிலில்லைலச்சை
ஏனின்ன

௩. ககனநாட்டினிற்சென்று-காலகேயநிவாத
கவசருயிர்கள் பிரிந்து - போடச்சண்டை
தகையாச்செய்துவந்த-தனஞ்சயனென்னுமொரு
தம்பிவலிமை தெரிந்தும்
சகலருமஞ்சுமென்கைத் தண்டையும்போரில்மிண்டும்
சமத்தையுஞ்சுகந்தப்பைந் தாருங்கறுத்தவண்டும்
திகழமுடிக்குமிவள் குழலையும்நிலையண்டும்
திருமால்நமக்காச்செய்யுஞ் சேவகத்தையுங்கண்டும்
ஏனின்ன

---

## தருமனைப்பார்த்து அருச்சுனன் சொல்லல்.

விருத்தம் ௨௫.

மாருதியிவ்வாறுரைக்கத்தருமனிந்த
மண்ணுக்காஉறவினத்தைமாய்த்தாலப்பேர்
பாரிலென்றுமழியாதுவிரலேகண்ணிற்
படிலென்னசெய்வதென்றுனிவ்வாறோது
வாருமுண்டோவெனப்பின்னுமறுத்தான்வீமன்
மாலவனைப்பார்த்துமுன்னோர்நீதிசொன்னால்
ஆரெனினுந்தடுப்பாரோவென்றுனன்னேன்
அடங்கினன்கிரீடிசொலத்தொடங்கினனே.

௨௧. தரு-இராகம்-பந்துவராளி-சாப்புதாளம்.

பல்லவி.

இன்னமிந்தயோசனைதானு - அண்ணையினி
எள்ளளவும்பொறுப்பேனு.

அநுபல்லவி.

மன்னவர்சபையிலன்று மானந்தனைக்கெடுத்தும்
மந்தவெளிக்கல்லாளம்மை மதிக்கும்படிவிடுத்தும்
இன்ன

சாணங்கள்.

க. அண்டரேவந்தெதிர்த் தாலும் - அவர்களன்றி
எண்டிசையோர்கதித் தாலும் - அவர்களையுங்
கண்டதுண்டமாக்கிஓன்னர் கள்குலத்தையொருமிக்கக்
கருவறுத்திடுமுக்கிரகாண் டபமென்கையிலிருக்க
இன்ன

உ. மாலேபோய்ச்சொன் ஞலும் - அவன்தரச்சம்
மதித்திடானுருக் காலும் - ஐயோஇது
வேலையில்லாவேலையிதை விட்டமர்க்குமுனையாமல்
வீரர்முன்அன்றுநாம்சொன்ன விதங்களைநினையாமல்
இன்ன

௩. சூதாடினபின் குதித்து - நம்மைச்செத்த
பிரேதங்களா மதித்து - அந்தச்சபையில்
வாதிட்டிவளைவீர மாதாவென்றுபார்க்காமல்
மானபங்கஞ்செய்தோரை வானுலகிற்சேர்க்காமல்
இன்ன

---

## நகுலன் தருமனைப்பார்த்துச் சொல்ல, பின்பு கிருஷ்ணன் சகாதேவனை நின்கருத்தைச் சொல்லென அவன் சொல்லல்.

விருத்தம் உசு.

திறல்விஜயன்சொலநகுலன்வானரம்பா
ஸ்த்ரீகளுக்காயவுணர்களைவாட்டியன்னோர்
சிறைமீட்டானமதுகுலப்புரூரவேந்தன்
தேவிதனைமானபங்கஞ்செய்தோனுவி
மறலிவசமாக்காமலவன்குடைக்கீழ்
வாழநாம்நினைப்பதுவோவென்றனப்பால்
நிறைசகாதேவனைமால்புகல்வாயுன்றன்
நிலையென்றான்அவன்கேளென்சொலையென்றனே.

சு. திபதை-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. ஆண்டவனேயுன்றனு-லோசனையெல்லாமெனக்
கன்றுமுதலாத் தெரியும் - நீரேனென்னைத்
தூண்டிக்கேட்கிறீரும-தெண்ணத்தின்படியேசந்
தோஷமாகப் புரியும்

௨. எனச்சகாதேவன்சொல-இவன்பழந்திருடனென்
றெண்ணிக்கொண்டப் பாலே - அவனுடனே
தனித்துப்போயிப்போர்நட-வாதிருக்கவோரேது
சாற்றென்றுனெடு மாலே

௩. எனக்குத்தெரிந்ததென்ன-என்னிற்கன்னனைப்பூமி
எல்லாமாளச் செய்து - எந்நேரமுங்
கனத்தசண்டைக்கேகச்சு-கட்டிவருஞ்சுவேதவா
கனன்தலைதனைக் கொய்து

௪. அரிவையைமொட்டையிட்டு-விலங்குமிட்டுப்பிரபஞ்ச
மதனில்மாயப்ப கட்டினல் - மூவிதமாகும்
பெரியதொழில்நடத்தும்-உன்னைக்கைப்பிடியாகப்
பிடித்திறுக்கிக் கட்டினல்

௫. சண்டையுமில்லையொரு-சள்ளையுமில்லைப்புவி
ஜனங்கட்குஞ்சேத மில்லை - இல்லாவிட்டால்
அண்டினவர்க்குமுற-வினத்துக்கும்பெரியோர்க்கும்
அனைவர்க்கும்வருந் தொல்லை

௬. என்றுசகாதேவ-னுரைக்கமற்றவைகளை
யெவ்விதத்திலு முடிப்பாய் - அதுபோகட்டும்
ஒன்றினுமொட்டாவென்னை-யெப்படிநீயிறுக்கி
யுறமாக்கட்டிப் பிடிப்பாய்

௭. அதைத்தான்பார்க்கவேணுங்-கட்டென்றங்கேபதின
ருயிரமுரு வெடுத்துக் - கதித்துநின்றான்
சிதைவிலாவுருவங்கள்-அனைத்தையும்பார்த்துச்சகா
தேவன்மருளை விடுத்து

௮. தனக்குள்ளிருக்குஞ்சாட்சாத்-காரத்தைமனப்பாசந்
தன்னாற்பிணித்தி றைஞ்சினன் - அப்போதென்கோன்
மனக்களிப்புடன்மச்சின-மெச்சினேனென்னை
மாத்ரம்விடென்று கெஞ்சினன்

௯. கெஞ்சிநிசவுருவங்-காட்டத்தேகப்புளகாங்
கிதமுமன்பும் புல்லவே - சகாதேவன்
அஞ்சலித்தெங்களைக்-காக்கிறேனென்றப
யாஸ்தந்தாவெனச் சொல்லவே

௰. அபயஸ்தந்தந்திந்த-ரகசியமாரேனும்
அறிந்தாற்கெடுதி நேரும் - என்றனப்பால்
சபையிலிருக்குந்தர்ம-ராஜனிடத்தினில்
சார்ந்தார்களிரு வோரும்

## கிருஷ்ணன் திரௌபதியை யுன்கருத்தென்னென, அவள் சொல்லல்.

விருத்தம் உஎ.

சபையில்வந்தவெனதையன்மயங்கிநிற்குந்
தையல்திரௌபதிமுகத்தைப்பார்த்தெங்காளுஞ்
சுபகரமேயுறநினைக்குந்தருமராஜன்
சொன்னபடியேயிவனுஞ்சொன்னானிந்த
உபயத்திராள்நினைவையும்யானறிந்தேன்தங்காய்
உன்னிஷ்டந்தனையுநன்றாஎன்றனக்கு
விவரமதாச்சொல்லென்றானவளுந்தேம்பி
விள்ளுவாள்குறைகள்சொல்லிக்கொள்ளுவாளே.

உஉ. தரு-இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

அரிகரிபரந்தாமா - எனதுவிரதம் - அவமாகிப்போகலாமா

அநுபல்லவி.

உரமாகவந்தசபை யோர்கேட்கவேவாக்கினால்
உரைத்தவெல்லாம்ஆற்றினிற் கரைத்தபுளியாக்கினார்
அரிகரி

சரணங்கள்.

க. முடித்தகுழலைத்தீண்டி அன்று - வலித்த
மூர்க்கன்றுடிக்கக்கொல்வோம் என்று
படித்ததெல்லாம்பாழாக்கிப் பதிக்கிச்சைப்பட்டுநேரே
பசிக்குப்பனம்பழத்தை பொசிக்கமனங்கொண்டாரே
அரிகரி

உ. காணச்சுயோதனன்றுடை நெரியக் - கதையாற்
கலங்கஅடிப்பேனென்று பெரிய
ஆணையிட்டுமறக்க லாமோஅதுவேதோஷம்
அதுதான்போனாலுமணு வளவுமிலையோரோஷம்
அரிகரி

௩. அன்றேயில்லைவீரமீ ஷத்தும் - இப்போ
தாவீரமுண்டாகிப்போய்க் குத்தும்
கன்றுள்ளபோதேயொரு காண்டிப்பாற்கறவாது
கைமூலத்திற்கலப்பால் கேறக்குமோபுவிமீது
அரிகரி

௪. கதையுங்காண்டீபமும்போ னாலும் - இவர்
கற்றவித்தைகளழிந் தாலும்
மிதமிஞ்சியுலகமே மேல்கீழாயமைந்தாலும்
வெய்யர்க்குத்துணைமுக்கண் விமலனேவந்தாலும்
அரிகரி

௫. புனையுங்கோட்டையிற்பிறந் தாலும் - போட்ட
புள்ளிபோகாதேயொருக் காலும்
எனச்சொல்லுவார்களேயோ யெனக்கேநேர்ந்ததவ்வழி
என்செய்வேன்முன்னிப்படி யாரைச்செய்தேனோபழி
அரிகரி

௬. மானுர்க்குள்ளென்னைப்போல் மானங் - கெட்ட
மாபாவியார்சொல்லோர்நி தானம்
ஆனாலுமிப்படி யாமோநான்செய்தபூசை
அணுவளவுமில்லையா ஐவர்முகத்தில்மீசை
அரிகரி

---

## கிருஷ்ணன் திரௌபதியைத்தேற்றி அத்தினபுரத்தில் விதுரன் வீட்டில் வந்தபோது அவன் புகழ்தல்.

விருத்தம் ௨௮.

கோதையிவைசொல்லஅரியபிமன்வேந்தர்
குலத்தையுமுன்கூந்தலையுமுடிப்பானென்றே
ஓதிமன்னரொடுந்தம்பியொடும்போம்போதி
லுறுமூன்றுமுனிக்குரைத்தந்நகர்பாற்சேர்ந்தான்
தூதர்சொலக்கேட்டரவக்கொடியோனின்றித்
துரோணர்முதற்பலவேந்தரெதிரேவந்து
நாதனையூர்சேர்த்தார்மால்விதுரன்வீட்டை
நாடினன்மகிழ்ந்தவன்கொண்டாடினனே.

௨௯- தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

என்னமாதவஞ்செய்தேனோ-என்சன்மமீடேறுநாளிதுதானோ

அநுபல்லவி.

உன்னைத்தேடித்தொழு வோரைவிட்டென்னைப்பரி
வுடனீதேடிவந்தாயே உலகில்நான்அரிகரி
என்ன

சரணங்கள்.

க. அலைகடலைப்பெரும்பாம் பணையைமறையைத்தக்க
ஆலிலையைத்துறந்தே அன்பரெல்லாமதிக்கப்
புலையனுமிச்சிறியேன் புன்மனைதனின்மிக்க
போதந்தனைத்தருமுன் பாதமலரைவைக்க
என்ன

உ. தாணிதனிற்றெய்வம்நீ தானென்றுறுதிகூறும்
சற்புத்திரனுனபிரக லாதனன்மேற்சீறும்
இரணியனைக்கொல்லஅங் கிருந்ததூணிலும்வீறும்
எந்தாயுனைக்காணநான் எடுத்தசெனனந்தோறும்
என்ன

௩. ஆருமறியஆயர் அகந்தோறுங்குட்டங்குட்டம்
ஆகத்தயிர்பாலுண்டும் ஆற்றுமலேயித்தடப்
பாருடனண்டகோளப் படலமும்பசிகெடப்
பக்ஷணைசெய்தவுன்றன் குக்ஷியிலன்னமிட
என்ன

## விதுரன் கிருஷ்ணனைத் தன்வீட்டில்அமுதுசெய்யச்சொல்ல அவர் அமுதுசெய்தல்.

விருத்தம் உ௩.

சீலவிதுரன்பரவசமாய்த்-தேகம்புளகாங்கிதமெய்தி
ஞாலமிசைவீழ்ந்திறைஞ்சி-யிந்தநாயேனுய்யவமுதுகொள்ளுங்
காலமிதுவேயெனத்தொழுதான்-ககனத்தவருக்கமுதளித்த
கோலமாயோன்மிகவுமன்பு-கொண்டானமுதையுண்டானே.

உச. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

அமுதுண்டானேமாயன்-நினைக்கும்அன்பர்க்-கருளுமாபத்சகாயன்

அநுபல்லவி.

நமதுசொந்தவைகுந்த நாட்டிலுமிந்தச்சட்டம்
நடவாதென்றுவிதுர ராஜன்அன்புடன்இட்ட
அமுது

சரணங்கள்.

க. வர்க்கப்பலகிழங்கு-காய்களினுற்செய்த
மதுரமாகியபொரிக் கறிகளும் - அந்த

சொர்க்கத்தமரருக்கும்-நாவில்நீரூறமணஞ்
சுற்றவமைத்தபச் சடிகளும்
கற்கண்டினும்இனிமை கலந்தமாங்கனிகளும்
கதலிக்கனிகளுந்தேன் கமழ்பலாக்கனிகளும்
அக்கரையாய்ப்படைத்தவ் வரசன்விசாரிக்க
அன்பதுலட்சம்பேரோ டகமுடல்பூரிக்க

அமுது

௨. நரைதிரைமூப்புச்சாக்கா-டகன்றிடவேயந்தவிண்
ணுட்டமார்கள்பெற்றதண் ணமுதும் - கைக்கத்
தருபஞ்சதாரைதேன்-பால்கனிரசத்தினுல்
சமைத்துவைத்ததிருக்கண் ணமுதும்
பரிவாமப்பங்களும் பலகனிசாரமும்
பஞ்சகச்சாயமும் பகர்பணியாரமும்
வரிசையாஇடஎப்பு வனத்தையுங்கொள்ளுமிந்த
வயிறும்போதாதென்றுதன் மனதிலெண்ணிக்கொண்டந்த

அமுது

௩. அந்தரத்தினில்வாழும்-இந்திரன்முதலான
அமரர்கள்மலர்மழை பெய்ய - நல்ல
கந்தருவர்சித்தர்கள்-பாவலர்மாதவர்
களுமன்புடனேதுதி செய்ய
இந்தவிதுரன்பெற்ற தெவர்பெற்ருரென்றுள்ளம்
இனிதாகியமேலோர்க ளெவரும்பேசிக்கொள்ளத்
தந்தையொடுதுரியோ தனனும்வயிறெரியச்
சங்கார்க்குமிப்புவி தனிலேகிடைக்கரிய

அமுது

---

## கிருஷ்ணன் மறுநாள் சபையில்வர துரியோதனன் கண்டு தன் சபையிலுள்ளவரை அவருக்கு வணக்கஞ் செய்யாதீரெனல்.

விருத்தம் ௩௰.

பொங்கமுடனுண்டபின்புவிதுரன்மாலைப்
போற்றிநீர்வந்ததேதென்னவவர்
பங்கத்தைக்கேட்டிடவந்தேனென்றுனப்
பாவிகொடானெனமாலென்மொழிகேளாமல்

வங்கையுற்றனெனிற்போரேவிளையுமென்றான்
மறுநாள்தன்சபையாரைத்துரியனோக்கி
உங்களுக்கியான்சொல்வதைக்கேட்பீர்களன்பி
னோடென்றான்மறுக்கில்வருங்கேடென்றானே.

௨௫. தரு-இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

திருட்டுக்கிருஷ்ணன்வதனம் - பார்த்தாரேனும்வந்தனம்
செய்யப்போகிறீர் பதனம்.

அநுபல்லவி.

நரிக்குளிப்பாட்டியவ னென்னமோபேசஇந்த
ராஜசபைக்குவரு கின்றானும்ஓகோஅந்த
திருட்டுக்

சரணங்கள்.

௧. நாசந்தெரியாமற்பாண் டவர்க்குநகரும்நாடும்
நம்மைக்கேட்கவந்தானும் இவனுக்கோகைகூடும்
மோசம்எவர்க்குஞ்செய்வான் கள்ளாசாரத்தினோடும்
மொட்டந்தலைக்குமுழங் காலுக்குமுடிபோடும்
திருட்டுக்

௨. அணியாச்சஞ்சயன்சொற்பேச் சாலவராட்டும்பாட்டும்
அழிந்தவரையின்னம் அரசாநிலைநாட்டும்
துணிவுகொண்டுவந்தானுஞ் சூதும்வாதுங்காட்டும்
துரோகிபிள்ளையுங்கிள்ளித் தொட்டிலதனையும்ஆட்டும்
திருட்டுக்

௩. இப்போதிதைமறுக்கும் ராஜர்திசையோரெட்டும்
எதிர்த்திடினுங்கொல்லுவேன் இதயத்திலிருக்கட்டும்
வெப்பிடைச்சிகள்வீடு தோறுமத்தடிபட்டும்
வெட்கமில்லாமற்பின்னும் வெண்ணெய்ச்சட்டியுருட்டும்
திருட்டுக்

---

## துரியோதனன் கிருஷ்ணனைக்கண்டு நேற்றுவந்தவர் என்வீட்டுக்கு ஏன்வரவில்லையென, அவர் சமாதானஞ்சொல்லல்.

விருத்தம் ௩௧.

இந்தவகைபாவிசொன்னான்தம்பியோடெம்
மிறைவன்வந்தான்குருவிதுரனஸ்வத்தாமன்
அந்தகன்வீடுமன்றெழுதார்சகுனிமாமன்
அகத்துள்நினைத்தனன்கன்னன்தலைவனைத்தான்

முந்துசமதக்கினிகண்ணுவன்மாவிணை
முனியும்வந்தார்சுயோதனன்மாலினைநேற்றேநீ
வந்துமென்வீட்டினிற்குவராதென்னசொல்லு
வாயென்றனதற்கவன்கேள்நீயென்றனே.

உசு. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

தூதுவந்தவர்களுண்-டுறவாகமாட்டார்-துரியோதனராஜனே

அநுபல்லவி.

வேதசாஸ்திரங்கற்றவி வேகத்தைப்பாழிலே
வியர்த்தமாக்கித்தொய்யாமல் கர்த்தத்துரோகஞ்செய்யாமல்
தூது

சரணங்கள்.

க. எல்லாமுன்வீடுதான் இதிலென்னபேதகம்
இவ்விதுரன்பின்சென்றேன் எனக்குண்டோசூதகம்
அல்லாமலும்நான்ராஜ காரியமாகவந்துன்
அனத்தையுண்டுகோதகம் நினைத்தால்மஹாபாதகம்
தூது

உ. பெரியோர்சொற்கேளாத பேதைகளும்அன்பாலே
பிறர்செய்நன்றிமறந்த பேர்களும்ஒருக்காலே
விருப்பாலன்னமிட்டோரைக் கன்னமிடுவோர்களும்
மெய்யாஇப்புவிமேலே உய்யாராகையினாலே
தூது

௩. தருந்தகாதென்றுபலவி தத்தையெண்ணிப்பாராமல்
தன்முசலுக்கிரண்டே காலென்பதிற்றோமல்
முகஞ்சுளித்தெதிரிகள் மூர்க்கமாகப்பேசும்
முரண்டில்மனஞ்சோராமல் இரண்டிலொன்றுதீராமல்
தூது

---

## துரியோதனன் கிருஷ்ணனைப்பார்த்து நீர்வந்தகாரியஞ் சொல்லென, பாண்டவர்கள் பங்குகேட்கவந்தே னென, அதுதானில்லையெனல்.

விருத்தம் ௩உ.

உலகளந்தோனிவையுரைத்தான்துரோகிகேட்டே
யுயர்மாலேநீதூதுவந்தவாறு
சொலுவையென்றான்சொன்னபடிபதின்மூன்றுண்டுந்
தொலைத்துவந்தவுன்றுணைவர்க்குரியபங்கை

நலமொடுநான்கேட்கவந்தேனென்முன்கேட்டு
நகைத்தவனும்அரிதனைப்பார்த்தவர்களாசை
மலையதிலும்பெரிததற்காயுனக்கேனிக்க
வலையென்முன்யாங்கொடுப்பதிலையென்முனே.

உஎ. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னமேதுக்கவர்-மனப்பால்குடித்துக்கொண் -டிருக்கிமுர்கள்சொல்லுவாய்

அநுபல்லவி

முன்னமேயவர்ஒட்டும் உறவும்விட்டுப்போச்சுதே
மூன்றடியுமடித்துப் போர்மேற்போட்டாச்சுதே
இன்ன

சரணங்கள்.

க. தாராளமாகச்சூதால்-தோற்றநாடுநகரந்
தன்மேல்வைத்தஆசையை விண்டு - வனந்
தன்னிற்றிரிந்துகாய்-கனிகளைப்பொசித்துமா
தவஞ்செய்தாலுங்குணம் உண்டு
நோாஅப்படிக்குச்செய் யாமல்மிகக்கபடும்
நெஞ்சுறுதியுங்கொண்டு நிதமெங்களுடன்கொடும்
போரேசெய்யநினைத்தால் பொய்யல்லவாய்த்தவடும்
போயடுப்புநெருப்பும் போனகதையாய்விடும்
இன்ன

உ. வினையமாகப்பேசத்-தூதின்னம்வெகுபேரை
விட்டாலும்என்பகை போகுமோ - இதை
விட்டுவிட்டுச்சண்டைக்-கெதிர்ந்தாலுமென்றனை
வெல்லஅவர்களாலே ஆகுமோ
கனவிலும்ஆகாது ஐயையோகருங்கல்லைக்
கடிக்கின்முர்களென்ன காரியம்வீண்தொல்லை
குனிந்துபுல்லைக்கடித்துக் கொண்டிளித்தாலும்பல்லைக்
கொசுகிருக்கஇடம்யான் கொடுக்கப்போகிறதில்லை
இன்ன

௩. காச்சினஇரும்புண்ட-நீர்பின்னுங்கிட்டினுமென்
கையிற்சிக்கினபொருள் கிட்டுமோ - இன்னங்
கால்மேல்தலைகீழாக-நட்டுக்கொண்டாலும்ராசாங்
கத்தின்பலன்அவருக் கொட்டுமோ

பூச்சிக்காட்டிக்கொண்டு திரிகின்றார்களொன்று
போயொன்றுநேருமோஎப் போதுநோதன்று
மாச்சரியங்கொண்டாரே எங்கேபோச்சுதின்று
வந்தமட்டுக்கும்லாபம் வருவித்துக்கொள்வோமென்று
இன்ன

---

## துரியோதனன் பாண்டவர்களுக்கு நாடுகொடேனெனக் கிருஷ்ணன் திரிதராட்டிரனைப்பார்த் துன்கருத் தென்னவெனல்.

விருத்தம் ௩௩.

விடவரவக்கொடியோனிதுரைக்கமாயன்
வேந்தரைப்பார்த்திவ்வார்த்தைநியாயந்தானு
படபடெனச்சொல்லுமென்றனவர்பேசாமற்
படியிருந்தார்திரிதராட்டிரன்றன்னைநோக்கி
அடல்மன்னுநீயரசாயிருக்கவிண்வம்
பாளர்கள்பேச்சென்னவெல்லாந்தெரிந்தநீயே
நடுநிலையாச்சொல்வாயென்றுரைத்தென்கோமான்
நயஞ்சொல்வான்பலவிதகாரியஞ்சொல்வானே.

உஅ. தரு-இராகம்-சாரங்கம்-ஆதிதாளம்.

பல்லவி.

நீயென்னசொல்கிறாய் - திரிதராட்டிரனேஅதை - நிசமாகச்சொல்லிவிடு

அநுபல்லவி.

பாயும்புலிக்குத்தன்கா டென்றும்புறக்காடென்றும்
பகுப்பில்லாததுபோலே மிகுத்தமதத்தாலின்றும்
பாமரன்போல்வம்பு பேசியிதென்னகொள்ளை
நாமமெல்லார்க்குமொன்றாப் போடுகிறான்உன்பிள்ளை
நீயென்ன

சரணங்கள்.

க. ஆதரவாம்உன்றம்பி-யிறந்தபின்பைவரையும்
ஆசையாயழைத்து வந்து - தருமனையிம்
மேதினியாளத்தகுந்-தவனென்றிளஅரசா
விதித்துமிகவும்ப ரிந்து
பாதிநாடும்பதியும்-பரிவாரமுஞ்சகல
பாக்கியங்களுந் தந்து - மனதொத்துப்
பேதமறவிருந்த-நீயுன்மைந்தன்கலைப்பாற்
பேதமனதில்நி னைந்து

சூதடிக்குநீயுமுள் ளாகியவர்கள்நாட்டைத்
துணிவாயபகரித்துக் கொண்டுசொல்லருங்காட்டை
ஒதும்பன்னிரண்டாண் டாண்டோராண்டுபின்னர்
ஒருவர்காணுதிருக்கச் சொன்னீர்நீங்கள்சொன்ன
உரைப்படிசெலுத்திவந் தோர்க்கின்னந்தொல்லையா
சரிப்படஅவர்பங்கைத் தருவையாஇல்லையா

நீயென்ன

௨. விடமிட்டுவீமனைக்-கட்டிக்கங்காநதி
வெள்ளத்திலே விடுத்தான் - அதற்குமுன்னம்
நெடியவசியைநட்டு-அதனிற்பாய்ச்சிக் கொல்ல
நெஞ்சினிற்கடு கடுத்தான்
குடும்பத்துடனெரிக்க-அரக்குமாளியிற்சேர்த்துக்
கொள்ளியிடவே அடுத்தான் - அவரிராச்சியம்
அடங்கலுந்தன்வசம்-ஆக்கிக்கொள்ளவேகூ
தாடவுபாயம் எடுத்தான்
மடந்தையைத்துடைமீதில் வரச்சொல்லிக்கூவினன்
வனத்திலன்னங்கேட்கதூர் வாசர்தமையேவினன்
சடுதியிற்கொல்லவோர்பூ தத்தைவிடுத்தானிந்தச்
சதிக்கெல்லாந்தப்பிவனந் தனிலுந்திரிந்துவந்த
தநயர்களையின்னம்வே தனைசெய்துதள்ளாதே
கனிவாஞ்சாதுமிரண்டால் காடீட்டங்கொள்ளாதே

நீயென்ன

௩. சதுராய்சபையிற்சொன்ன-படியேயவர்கள்பங்கைத்
தந்தாலுன்பழி ஏகும் - இல்லாவிட்டாற்
கொதிகொள்வீமார்ச்சுனர்-எதிர்த்தாற்பேரில்லாதுன்
குலமேயழிந்து போகும்
அதுமாத்திரமல்ல-திரிபுவனங்களுமொன்
றுகப்பற்றி வேகும்-ஐயோபின்னும்
பதினுலுலகுக்கும்-மிகவனத்தகாலஞ்சம்
பவித்துமேல்கி ழாகும்
இதையறிந்திருந்துநாம் சொல்லாதிருந்தால்தோஷம்
என்றுமனதிலெண்ணி யிசைத்தேனிந்தவிசேஷம்
பதறுமல்யோசித்துப் பாருனக்கேதோணும்
பானைசோற்றுக்கோர்சோறே பதம்பார்த்திடவேணும்
பசுக்களுக்காப்பட்ட பாட்டைமறந்தும்வாயா
விஜயனொருத்தன்செய்த விக்கிரமமறியாயா

நீயென்ன.

௪. புண்ணியராசசூபஞ்-செய்தபலனுனக்கும்
பொருந்தச்செய்திப் புவிக்கும்- வானாட்டுக்கும்
கண்யவாசனுகச்-செய்தமகாஉத்தமர்
களுமையோமிகத்த விக்கும்
வண்ணமறிந்துவந்து-நான்சொல்லுஞ்சொல்லுன்பிள்ளை
வன்செவிக்குமுன்செ விக்கும் - ஏறஇல்லை
அண்ணலேயிந்தப்பழி-பாவமுன்னையல்லாமல்
யார்க்குத்தான்சம்ப விக்கும்
எண்ணிப்பார்த்துன்மனதுக்-கிசைந்ததேதேனுங்கொடு
இல்லாவிடிற்புத்ரர்மே விருக்குமாசையைவிடு
நண்ணநனேந்துசுமக் கின்றபுத்தியாமா
நமதுவிளக்கெனவே முத்தமிடவும்போமா
நியாயக்குறைவில்லாமல் நடந்தவர்களுங்கேட்டார்
சாயாவிடிலினிமேல் க்ஷணமும்பொறுக்கமாட்டார்
நீயென்ன

---

## திரிதராட்டிரன் கிருஷ்ணனைநோக்கி சுயோதனன் விருத்த ஞகிய என்பேச்சைக் கேளானெனல்.

விருத்தம் ௩௪.

திடங்கொளுமுகுந்தன்சொல்லத்-திரிதராட்டிரன்பெற்றோருக்
கடங்காததுஷ்டர்க்கெல்லாம்-அவனியோர்புத்திசொல்லத்
தொடங்கிடிலடங்குவாரிச்-சுயோதனனென்சொற்கேட்டு
நடந்துகொண்டதுதானெந்த-நாளென்றான்கேளென்றானே.

௨௧. தரு-இராகம்-முகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

என்வார்த்தைகேட்பானு-எல்லாம்நீயறிவாயே-என்னநான்சொல்வதையா

அநுபல்லவி.

துன்மார்க்கன்மனம்நல்லோர் சொற்குத்தானிசையுமா
துறட்டுக்கசையாப்பழந் திருப்பாட்டுக்கசையுமா
என்

சரணங்கள்.

௧. பேதிக்குமேலோர்கள் பேச்சுத்தனக்கேமறு
பேச்சுப்பேசும்அதனப் ப்ரசங்கிபவனையொறு
வாதுக்காடுந்தொம்பரவன் வயதசென்றற்கயிறு
வலிக்கவுமாகானென்ற வகைபோலமெலிவுறு
என்

உ. எள்ளுக்குளெண்ணெயா யிருக்கின்றநெடுமாலே
எதிரில்லாமலெனக் கெங்கெங்குமுன்னாலே
கிள்ளாக்குஞ்சென்றது கிஞ்சத்தும்இனிமேலே
கிழப்பாட்டுக்கின்னரிக் கேற்குமோஅதுபோலே
என்

ந. மேவுமிக்குலமோங்க வேண்டிலென்சொற்கடக்கும்
வீணாவீணனையெவ் விதத்திலேனுமடக்கும்
மூவுலகும்உனது மொழிப்படியேநடக்கும்
மூலைக்குமுட்டாக முடங்கிக்கொண்டுகிடக்கும்
என்

---

## கிருஷ்ணன் சுயோதனனைப்பார்த்து அர்ச்சுனன் வல்லமையை நீ யறிந்திருந்தும், நீ யிப்படி செய்வதழகல்ல என திரிதராட்டிரன் மகனுக்குப் புத்திசொல்லல்.

விருத்தம் ௩௫.

அந்தகனீ துரைக்கவரிதுரியனும்வஞ்
சகன்முகத்தைநோக்கியாருமெச்சுஞ்
சுந்தரஞ்சேரர்ச்சுனன்றோள்வலியும்வீமன்
தோள்வலியுநீநன்றாயறிந்திருந்தும்
இந்தவகைசெய்வதழகலவெனும்போ
தெதிரிருக்குமாசன்மகன்றனைப்பார்த்தப்பா
பந்தமுடனிவர்கள்சொல்லும்புத்தியைக்கேட்
பாயென்பானென்கண்மணியேயென்பானே.

௩ய. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

இவர்சொல்லும்புத்தியைக் - கேள்துரியோதனா - என்கண்மணியேபிழைப் [பாய்

அநுபல்லவி.

குவலயந்தன்னையோ ரடியாஅளந்துகீர்த்தி
கொண்டுநமக்கருளைக் கொடுக்கவந்தமூர்த்தி
இவர்

சரணங்கள்.

௧. என்னிலுந்தர்மனுன்மே-லிச்சைகொண்டிருக்கஅவ்
விறைவனைப்பகைப்பது நீதியா - ஐயோ
அந்நியர்கள்நமது-ராச்சியசாம்ப்ராச்சியமெல்லாம்
அனுபவிப்பதுமரி யாதையா

உன்னிலும்அவர்க்குள்ள உரிமைவிட்டுப்போமா
உட்சுவரிருக்கப்புறச் சுவரைமெழுகலாமா
பின்னுமுன்னுந்தெரியாப் பேய்க்குணத்தைநாட்டாதே
பெற்றதாயுடனே நீ கற்றவித்தைகாட்டாதே

இவர்

௨. சவம்போற்பிறவிக்குரு-டாய்க்கிடந்தனக்கென்
தம்பிபாண்டுமுடி சூட்டினன் - அனந்த
நவமணிமுடிவேந்தர்-தம்மைவென்றுபதின
நாலுலகத்தும்என்பேர் நாட்டினன்
அவன்பிள்ளைகளைப்பறக் கடித்தால்நம்மைஞாலம்
அடிதாங்காதின்றைக்கேயுண் டாகும்விநாசகாலம்
குவியும்வேளையில்மூர்க்கங் கொண்டுநீதுடிக்காதே
கொடியரைப்போற்குரங்குப் பிடியின்னம்பிடிக்காதே

இவர்

௩. பொன்னின்கலமானாலும்-நண்ணும்அறையிணிற்றன்
பொருந்தவேணுமது போலே - நமக்
கென்னசெல்வமிருந்த-போதினுமிவர்துணை
யிருக்கவேணும்ஆகை யாலே
நன்னயமாகப்பாண்ட வர்களையழைத்துப்பாதி
நாட்டைக்கொடுத்துவிட்டால் நண்ணிடலாம்பிரக்கியாதி
சின்னபுத்தியாற்சண்டை செய்யப்படையெடாதே
சிறுபிள்ளைகட்டியசிற் றுடையாக்கிவிடாதே

இவர்

---

## வீஷ்ட்டுமோசாரி சுயோதனனுக்குப் புத்திசொல்லல்.

விருத்தம் ௩௯.

மண்டலத்தரசனிந்த-வாறுரைசெய்யபீஷ்மன்
அண்டிசுயோதனனைப்பார்த்தே-அரிசொலைத்தடுப்பாயாகில்
எண்டிசைநகைக்கத்துன்பம்-எய்துவாயுண்மையென்றக்
கண்டகனெஞ்சந்தன்னைக்-கரைக்கின்றானுரைக்கின்றானே.

௩௪. தரு-இராகம்-அசாவேரி-சாப்புதாளம்.

பல்லவி.

வீண்யோசனைபண்ணாதே - துரியோதனாபிரபல - விசயஉரககேதனா

அநுபல்லவி.

சாண்தான்வயிறுமுழம் அல்லவதனையெண்ணு
தாரதம்யமறிந்து தூரயோசனைபண்ணு

வீண்

சரணங்கள்.

க. விரியும்ஆண்பனைக்குநீர் விட்டாலுங்காயாது
மித்ரபேதிகள்வார்த்தை வெற்றியையீயாது
பெரியோர்சொற்கேளாத பேர்க்கொன்றுஞ்சாயாது
பிர்மிக்கிறாய்நீசும்மா சமத்திற்குண்டுபாயாது
வீண்

உ. காதகக்கன்னனால் கரையேறநீநாடுங்
கருத்தைவிட்டுவிடு காண்டீபன்சினத்தோடும்
மாதவன்தேர்விட வருவானென்செயக்கூடும்
வல்லவனுடும்பும் பரமனலினுமாடும்
வீண்

௩. கொண்டபுவியைப்பின்னுங் கொடுத்திடிலவமானங்
கொள்வோமென்கிறாயீதோ கொற்றவர்கள்நிதானஞ்
சண்டைசெய்பகைஞர்க்குத் தந்தாலதுதானீனந்
தமயன்மேலவ்வாறு சலங்கொள்வதஞ்ஞானம்
வீண்

---

பின்பு துரோணாச்சாரி சுயோதனனுக்குப் புத்திசொல்லல்.

விருத்தம் ௩௭.

கல்வினும்வலியநெஞ்சக்-கர்த்தனுங்கசடனுக்கு
மல்லினிலுயர்ந்தவீடு-மன்மதியுரைத்தபின்பு
சொல்லினும்வேதநீதித்-துறையினுந்திக்கும்வெற்றி
வில்லினுமுயராசானல்-விதஞ்சொல்வான்இதஞ்சொல்வானே.

௩௨. தரு-இராகம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்வீம்புகள்பண்ணாதே-எங்கள்சொல்லை-எளிதமாயெண்ணாதே

அநுபல்லவி.

தன்னிகராந்துரியோ தனா-தென்னமுரண்டு
சர்க்கரையுமணலுஞ் சமமென்றெண்ணிக்கொண்டு

சரணங்கள்.

க. இந்தத்துர்ச்சனர்பேச்சா-லுனதுசாம்பிராச்சியமெல்லாம்
இழப்பாயென்றுள் ளேக்கம் - உடனேஐயோ
பந்துத்துவம்பாராட்டித்-தன்வருத்தத்தையும்
பாராமலுனைக் காக்க

அந்தத்தேவர்க்குமின்னம் ஆர்க்குமாதியாய்முந்தும்
ஆண்டவனேயுன்றனை வேண்டித்தூதாகவந்தும்
இன்னம்.

௨. தந்தைசொற்படிக்கவர்-பங்கைக்கொடுக்கவொரு
தடைசொன்னாற்புவி மீது - விளங்கிநிற்கும்
சந்த்ரகுலமும்உன்னைச்-சார்ந்தோர்களுமழிய
சமர்நேரும்அப் போது
இந்தக்கூழைப்படைகள் எதிர்த்துவெற்றிகாட்டாது
ஏற்றகூழுக்குமாங்காய் தோற்றுப்போகமாட்டாது
இன்னம்

௩. இணங்கியிருக்கும்நாங்கள்-மகிழ்ந்திடவேநீங்கள்
எல்லோர்களும்ஒரு மனை - தனிலமர்ந்து
குணங்குறையாமலே-யொருமையாயிருந்து
கொண்டுநீதரு மனை
வணங்கமற்றதம்பி மார்களுனையடுத்து
வணங்கவாழுகின்ற வாழ்வுதனைவிடுத்து
இன்னம்

---

## துரியோதனன் கிருஷ்ணனைப்பார்த்து என்சொல்லுக்கிரண்டில்லையெனல்.

விருத்தம் ௩அ.

படிமீதும்வான்மீதுமுள்ளவெற்றிப்
படைவீரர்தங்களிலுற்பாதமான
கெடிகொள்சிலைக்குருதுரோணாசாரிசொல்லக்
கேட்டுடலம்பதைக்கநகைசெய்துநெஞ்சந்
துடிதுடித்துக்கண்களிற்றீப்பொறிகள்சிந்தத்
துரிதமுடனேயரவக்கொடியோனென்னும்
முடிவேந்தன்முகுந்தனைப்பார்த்தின்னமென்ன
முரண்டென்றானுரையேனிரண்டென்றானே.

௩௩. தரு-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

நானுரைத்திடுஞ்சொல்லுக் - கிரண்டில்லைநீசொல்லும்-நியாயமெல்லாம்வீண் [கல்லை

அநுபல்லவி.

பூனைபால்குடிக்கு மாறுபோல்நீசூது
புரியவருகிறாய்போ போயார்க்குத்தெரியாது
போனபாண்டுவேவந்திப் போதென்றனுளந்தேற
போதிக்கினுமனது பேதிக்கேன்வாயாற
நானுரைத்

சரணங்கள்.

க. மூவுலகமுமென்னைத்-துதித்திடவேவணங்கா
முடிமன்னனென்றுபேர் கொண்டு - இருக்க
முறையில்லாப்பாண்டவர்-தம்மைவணங்கினு
முறிபோற்செய்குவது தொண்டு
மாவருத்தத்துடனே-காடுதிரிந்தோர்சும்மா
வாய்மூடிக்கொண்டிராமல் நண்டு - கொழுத்தால்
வளையிலிராதெனல்போல்-வருகிறாரெதிர்த்தாற்போ
வார்களடியுடனு றுண்டு
யாவர்பகையாயினும் எனக்கென்னபுவிமீது
எள்ளத்தனையிடமும் இனிநான்கொடுப்பதேது
வாய்வார்த்தைதானென்று மனதிலெண்ணக்கூடாது
மழைக்காலிருட்டானுலும் மந்திதப்பிப்பாயாது
நானுரைத்

உ. என்றும்இதார்த்தவாதி-வெகுஜனவிரோதி
யென்பார்களதற்கனு போகம் - நானே
என்னத்தெரிந்துகொள்ளு-விறுதாயோசனைசெய்ய
இன்னமுனக்கென்னசந் தேகம்
குன்றியிருக்குமவர்க்-கின்னமுங்கூருசீவிக்
கொடுத்தென்னைக்கொல்லநிர் வாகம் - இருந்தால்
கூட்டிவரச்சண்டைக்குக்-கசகுசமந்திரங்
கூறுவதோநல்லவி வேகம்
அன்றியுஞ்சொல்கிறேன்கேள் அளந்தத்தையேமுக்காலும்
அளக்குநீயல்லவுன்போ லாயிரம்பேர்வந்தாலும்
மன்றல்பூங்கொன்றைமான் மழுவொடுபுலித்தோலும்
மாக்ஷியாஅணியும்பா லாக்ஷன்வந்துசொன்னாலும்
நானுரைத்

௩. வெறுப்பில்லாமலென்வீட்டில்-விருந்துண்டுளத்திலொரு
விகற்பமுமில்லாமல்தேன் சொரிய - பேசி
வீற்றிருந்தார்கள்அந்த-வேளைபொழுதுபோக
வேண்டுமெனநினைத்துப் பெரிய
அறத்தின்மைந்தன்சூதாட-அழைத்தானதற்குநானுள்
ளாகிப்பந்தயமெனக் குரிய - பங்கை
ஆசையுடனேவைத்தேன்-அவர்களும்வைத்தாராட்டம்
ஆடியேயெல்லாருக்குந் தெரிய
பறித்தபங்குக்காய்ப்பஞ்சம் பாடிப்பஞ்சாங்கஞ்சொலும்
பாய்சுருட்டியிலேயிப் பாரினுனைப்பார்க்கினும்
கறுத்ததைநீரென்றெண்ணும் என்முன்னல்லும்பகலும்
கண்ணுநீயின்னங்குட்டிக் காணம்போட்டபோதிலும்
நானுரைத்

துரியோதன னிவ்வாறுசொல்ல அதைக்கேட்ட நாரதர், கண்ணுவர், சமதக்கினி, இம்மூவரும் சிலகதைக ளைச்சொல்லி நீ சொல்வது நன்றன்றென, அவனவர்களைப் பார்த்து உங்களை இங்கு அழைத்தவர் ஆரெனல்.



விருத்தம் ௩௯.

நந்துசுயோதனனிவ்வாறுரைக்கக்கேட்ட
நாரதன்கண்ணுவன்சமதக்கினியுமங்கே
விந்தையொடுதனித்தனியேகதைகள்சொல்லி
மேலோர்சொற்கேளார்க்கிவ்விதமாந்துன்பஞ்
சந்ததமும்வருமெனவேசொன்னாரந்தத்
தவத்தோரைப்பார்த்தரிதான்சந்திபேச
வந்தனனுங்களையாரிங்கழைத்தாரென்று
மதத்தினாற்பித்தரைப்போற்பிதற்றினானே.

௩௪. தரு-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

உங்களையாரழைத்தார்-நீங்களேன்வந்தீர்கள்-ஓதும்ஓதுங்காணும்

அநுபல்லவி.

எங்கள்வழக்குத்தீர்க்க இருப்போர்கள்தம்மைவிட்டு
இருப்பிடந்தேடிஉங்கள் கரத்தில்தாம்பூலமிட்டு
உங்களை

சரணங்கள்.

௧. வஞ்சமனதுபோன வழிபோகாமற்றடுத்து
மாயஉலகைப்பொய்யாய் மதித்துக்கடுகெடுத்துச்
சஞ்சலத்தைப்போக்கிமா சற்றேநெறியடுத்து
சாக்ஷாத்காரத்தைநம்பித் தவஞ்செய்வதைவிடுத்து
உங்களை

௨. குன்றும்பாண்டவரைப்போற் குவலயத்தில்நல்ல
குணவான்களில்லைநீங்கள் கொடியர்உத்தமரல்ல
என்றெங்களைத்தூஷித்தே எவர்களும்வாயைமெல்ல
இந்தவீண்கதைகளை இப்போதெடுத்துச்சொல்ல
உங்களை

௩. சூதடிதெரியாமல் சுடுகெண்டைக்காகமீனே
தூண்டிலில்வீழ்க்கிருப்போல் சொலுந்தன்மனென்போனே
வாதுசெய்யுமுன்னென்றன் வளநகர்தன்னைத்தானே
வாங்கிக்கொடுக்கவந்த மாயன்தானேற்பட்டானே
உங்களை

## துரியோதனன் முநிவர்களைப்பார்த்து இவ்வாறுசொல்ல, அதைக்கேட்ட வீட்டுமன் அவர் சபிப்பாரென்றஞ்சி அவர்களுக்குச் சமாதானஞ் சொல்லல்.

விருத்தம் ௪௰.

மதங்கொள்சுயோதனனங்கந்த-மாதவருள்ளம்நோகப்
பதறியேகுறைவாச்சொன்ன-பண்பினைக்கேட்டேயெந்த
விதஞ்சபிப்பாரோவென்று-வீடுமன்பயந்தன்னோர்கள்
பதந்தொழுதிறைஞ்சியன்பு-பதிக்கின்றான்துதிக்கின்றானே.

௩௫. தரு-இராகம்-எமுனுகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தக்குற்றத்தைமாத் - திரம்பொறுத்துக்கொள்ளும்-ஏதுக்கித்தனையாத்தி [ரம்

அநுபல்லவி.

வந்தனம்முனிவோரே யெந்தநன்மையுங்கிட்டான்
வாய்மடிப்பாகயேதோ பேய்போற்பிதற்றிவிட்டான்
இந்தக்

சரணங்கள்.

௧. எங்களுக்கும்ஐயோஎப் போதுமிந்தச்சள்ளைதான்
என்செயலாமிவன் எல்லார்க்கும்பிள்ளைதான்
இந்தக்

௨. கனலில்விழுநாகத்தைக் காப்பாற்றுவார்கள்நையக்
கடிப்பதுபோலுங்களைக் கடிந்தஇப்பாவியுய்ய
இந்தக்

௩. அடிமைக்கேதெரியாதே அந்தணரேஎளியும்
அனலாமுங்கள்மகிமை அவனுக்கென்னதெரியும்
இந்தக்

---

## அந்தச்சமயத்தில் கிருஷ்ணன் அச்சபையில் துரியோதனனைப்பார்த்து பூமிபிக்ஷைகேட்டல்.

விருத்தம் ௪௧.

பாந்தமாபீஷ்மர்சொல்லிப்-பணிந்திடமுனிவரெல்லாஞ்
சாந்தமானார்களந்தத்-தருணத்திலெழுந்தென்னையன்
வேந்தனுக்கெதிரேநின்று-வினயமாய்ப்பேசிக்கைகள்
ஏந்தியிப்பூமிபிச்சை-யிடுவென்றான்கொடுவென்றானே.

௩௬. தரு-இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

கையேந்திக்கொண்டுநின்றானே-கபடநா-டகசூத்திரதாரியென்போனே

அநுபல்லவி.

பையத்துரியன்மனே பாவங்காணமுன்னாலே
பக்ஷமாப்பலியையமண் பிக்ஷகேட்டதுபோலே
கையேந்

சரணங்கள்.

௧. முந்தஅவர்கள்பங்கை முழுதுங்கொடுத்தால்நன்று
முடிந்திடாதென்னிலிந்த மோசநினைவகன்று
ஐந்தூராகிலுங்கொடு அதையுந்தடுத்தாலின்று
ஐந்துவீடாகிலும் அருள்செய்யவேணுமென்று
கையேந்

௨. துதிகொள்சந்த்ரகுலத்தைத் தொலைத்திடவேவந்த
துரியோதனனைப்பார்த்தியான் சொன்னவிதத்திலெந்த
விதமாகிலுமொன்றுசெய் வீணுக்காதேயென்றந்த
விண்ணவர்களமுதம் உண்ணும்படிக்குத்தந்த
கையேந்

௩. மாதவரோடங்குள்ள மன்னவர்களும்பார்க்க
மண்ணைத்தோற்றபாண்டவர் கள்மனத்துயர்தீர்க்க
மேதினிக்கோர்சுமையா மேவுமகாதுன்மார்க்க
வேந்தனைக்குலத்துடன் வீரசொர்க்கத்திற்சேர்க்கக்
கையேந்

---

துரியோதனன் அவர்களுக்கு நாடுகொடேனென அங்குள்ள பெரியோரெல்லாம் உன் துன்மார்க்கப்படிச் செய்யென அப்பொழுது துச்சாதனன் அண்ணனைப்பார்த்து யாவரும் மாயனைச்சேர்ந்தார் இனிஇங்கிருக் கத்தகாது எழுந்திருவெனல்.

விருத்தம் சஉ.

வேயெடுப்போன்கையேந்தத்துரோகிசொர்க்க
வீடல்லால்மற்றதவர்க்கருளேனென்றான்
தூயவீடுமன்முதலோரவனைப்பார்த்துன்
துன்மார்க்கப்படிதானேசெய்யுமென்றார்
ஆயுமறிவில்லாமற்றுகிலுரிந்தோன்
அண்ணனைப்பார்த்திங்கிருக்கவேண்டாம்யாரும்
மாயனைச்சேர்ந்தார்வேந்துமயங்கஏது
வருமென்றானிருக்கிலிடர்தருமென்றானே.

௩எ. தரு-இராகம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

இனியண்ணுஒருக்ஷணமுமிங்கே - இருக்கவொண்ணுதெழுந்திரு

அநுபல்லவி.

உனக்கிருஷ்ணன்கையிற்றந்தை ஒப்பிப்பான்போற்றேணுது
ஓகோஇவரெல்லாரும் ஒருமையாய்க்காணுது
இனி

சரணங்கள்.

௧. ஆனைக்குமடி சறுக்கும் - ஆகையாலுன்மேல்
அரசனிப்போது வெறுக்கும் - எளிமையால்மோர்ப்
பானைக்குருட்டுங்கோ பாலனுடனேயாரும்
பாவிகளொன்றாய்ச்சேர்ந்து பதைக்கின்றார்மோசம்வாரும்
இனி

௨. அரவக்கூட்டத்தில் தேரை - அகப்பட்டாற்போல்
அகப்பட்டுக்கொண்டா யாரை - நம்புவது
சரிவாக்குழிமாறும் சதிகாரர்செய்வார்சூது
தப்போஎன்சொல்லுனக்கச் சதிசெய்யத்தெரியாது
இனி

௩. தலையிலிடிக்கு முன்னே - குனியவேணும்
சமயமறிந்து சொன்னேன் - அரைக்காசுக்குக்
குலையும்வெட்கமாயிரங் கொடுத்தாலும்வாராது
குவலயத்திலிவ்வேச்சு கொஞ்சத்திற்றீராது
இனி

---

துரியோதனன் சபையினின்று நீங்கத் திருமால் குருடனைப் பார்த்து என்மாமனை நானே கொன்றசெய்தியை நீ யாலோசித்துப்பாரென அவன் மகனை யழைக்க அவனைப்பார்த்து நீ ஐவருடனே சண்டை செய்வதுறுதியானல், கைபோடென அவன் கோபித்து அங்கிருந்த தூணிலறைந்து சொல்லுதல்.

விருத்தம் சுக.

வெகுண்டுதுச்சாதனனுரைக்கப்பாவிசென்றான்
விழியில்லானெடுமால்என்மாமன்றன்னைத்
தகப்பனிசைந்திடநானேகொன்றசேதி
தன்னையோசியெனமகனைவருவித்திட்டான்

திகழ்மாயனவனைஐவருடனேசண்டை
　　செயநினைக்கில்லவல்கையறையென்றுன்தீயன்
முகம்வேகதிரிருக்குந்தூணிலோங்கி
　　மோதினன்மாலொடிவைவயோதினனே.

௩அ. தரு-இராகம்-பேகடா-ஆதிதாளம்.

பல்லவி.

என்னைக்கைப்போடச்சொன்னாய்-இதுவல்லோநேத்தியிங்கே-இருப்போரை [யும்பாராமலே

அநுபல்லவி.

பன்னருமென்சபையைப் பார்த்தோரும்வாயடைத்துப்
பஞ்சாங்கம்படிப்பாரே அஞ்சாநெஞ்சுபடைத்து
என்

சரணங்கள்.

௧. படைவீரரெவரையும் பாண்டவரையுமாட்டிப்
படைக்குஞ்சக்ரேசனென்ற பயங்கரந்தனையோட்டி
இடையர்வீட்டிற்கட்டுண்ட ஏழைபுத்தியைக்காட்டி
எத்திமாடோட்டுங்கோலை எடுக்குங்கையைநீட்டி
என்

௨. குடைமன்னருடன்பள்ளிக் கூடத்தில்வாசித்துக்
கொண்டாற்றெரியுங்காடே குடியாப்பிரவேசித்துக்
கிடையாட்டுமாட்டுடன்வா லாயமும்நேசித்துக்
கிடந்தோனுகையாற்கிள்ளுக் கீரையாகயோசித்து
என்

௩. அனையொருத்திதந்தை யர்களைந்துபேர்கள்மண்ணி
லமைந்ததன்றியோர்பெண்ணை ஆசையுடனேநண்ணி
மனைவியாச்சேரும்பாண் டவர்கள்சத்தியம்பண்ணி
மாறிப்போவாரந்தத்துன் மார்க்கர்தமைப்போலெண்ணி
என்

---

## துரியோதனன் இவ்வாறு அற்பமாகப்பேச அதைக் கேட்ட மாதவன் நகைத்து விதுரன் வீட்டிற்குச் செல்லப் பின்பு சுயோதனன் சபையில் விதுரனைத் தூஷித்தல்.

விருத்தம் ௪௪.

புலமிலாக்கசடனிந்தப்-புன்மொழியுரைக்கமாயன்
கலகலவெனநகைத்தக்-கணம்விதுரன்வீடுற்றான்
சலமொடுபினுங்கண்ணில்லான்-தன்மகன்விதுரன்றன்னைப்
பலபலவிதங்களாச்சம்-பாஷிப்பான்தூஷிப்பானே.

௩௧. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னைச்சிற்றப்பனெனத்தகுமா-அந்தமுறை-உனக்குத்தகாதுபோபோ

அநுபல்லவி.

தன்னிகரில்லாத்தங்கச் செருப்பாயினுமண்மேலே
தாளுக்காகுமல்லாமல் தலைக்சேருதுபோலே
உன்னைச்

சரணங்கள்.

௧. குற்றமறவேகாக்கை குளித்துமுழ்கினும்வெள்ளைக்
கொக்காமோநீபெருமை கொள்வையோயென்னகொள்ளை
அத்திப்பழத்தைப்புட்டால் அத்தனையுஞ்சொள்ளை
அதிசயமென்னநீஊர் அறிந்தவேசியின்பிள்ளை
உன்னைச்

௨. எனைக்கெடுத்திடவேணும் என்றிந்தப்புவிமீதி
லெப்போதும்நினைக்குமவ் விடையனுக்கிதமோதி
அனமிட்டாயாதிமுதல் அறிவேனுன்றன்சேதி
அவனிக்குளுனைவிட யாரெனக்குச்சத்ராதி
உன்னைச்

௩. மெல்லப்பலநாளைய திருடனோர்காளிற்கையும்
மெய்யுமாஅகப்படும் விதமாஇழிவும்பொய்யும்
சொல்லும்நீயகப்பட்டாய் தோஷிபாலும்நெய்யும்
சோறுமிட்டோர்க்கேகர்த்தத் துரோகமென்றுஞ்செய்யும்
உன்னைச்

---

துரியோதனன் விதுரனை நிந்திக்க அதைக்கேட்ட வவன் கோபித்துத் தன் வில்லை அச்சபையி லொடித்துவிட்டுப் போக வீட்டுமரதனைக்கண்டு இனி விஜயனேடெதி ர்ப்பா ரில்லையென துரியோதனன் அநேக ரிருக்கிறார்களெனல்.

விருத்தம் ௪௫.

சதியரசன்சொலவிதுரன்கேட்டுநாக்கைத்
தறித்துன்னைமாய்த்திடுவேனொருவனிந்த
மதிகுலத்திற்பிள்ளைதனைமாய்த்தானென்ற
வசைநீங்காதெனவில்லைத்துணித்துப்போனான்

அதிரதனும்விஜயனெதிர்நிற்பதெவ்வில்
லாளியென்றுபீஷ்மர்சொன்னாரவ்வேந்திந்த
விதுரன்போனான்பலம்போச்சென்னுஞ்சொல்லை
விடுமென்றான்என்சொலைக்கேட்டிடுமென்றானே.

௬௰. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

விதுரன்போனான்முழுகிப்- போச்சென்கிறீரிந்த-வீண்யோசனையேனையா

அநுபல்லவி

நதியளித்தபீஷ்மரே இதுவும்ஓர்பேச்சா
நாட்டிற்பஞ்சாங்கம்போனால் நக்ஷத்திரமும்போச்சா
விதுரன்

சரணங்கள்.

௧. சண்டையில்விஜயனை-யெதிர்ப்பதாரென்கிறீரென்
தன்சிவனுக்குச் சிவன் - போலிருந்து
எண்டிசையோர்வரினுஞ்-செயங்கொளவிந்தக்கன்னன்
என்னும்மகானு பாவன்
அண்டையிலிருக்கிறான் அதுவென்னதிஷ்டமோ
ஆதிஷ்டமோபஞ்சை யைக்கொல்வதுகஷ்டமோ
பண்டேதெரியுமந்தப் பாவிஎனக்கிஷ்டமோ
பத்துமாட்டினிலொன்று தைத்துக்கொண்டால்நஷ்டமோ
விதுரன்

௨. முனைகொள்பரசிராமன்-தனையும்வென்றெவருக்கும்
முக்கியமான வீரன் - என்றநீர்
தனுசாஸ்திரநிலை-முழுதுமறிந்ததுரோணா
சாரியவர்கு மாரன்
அனைவர்க்கும்வில்வித்தைமுன் ஆரம்பஞ்செய்தகுரு
அல்லாமலும்இன்னமும் அடுத்தமன்னவரும்
எனதுபக்கமிருக்கிறா ருண்டோசத்துரு
எதுக்குமுதவாத காதகனானஒரு
விதுரன்

௩. எதினியவ்வில்லைப்போல்-இல்லையெனுஞ்சொல்லுகள்
ஏற்றிடுஞ்சொல் லுகளோ - மற்றவீரர்
கோதில்லாவில்லுகள்-ஐயையோபஞ்சு
கொட்டியவில் லுகளோ
காதகன்காலமெல்லாங் காலினாலேயுழுது
கழித்தானிவனாலென்ன கண்டேன்அழுதழுது
மீதில்மயிலுக்கோர்கண் விண்டாலுண்டோபழுது
வீட்டிற்கோழிகூவாமல் விடிந்திடாதோபொழுது
விதுரன்

## கன்னன் பீஷ்மரைப்பார்த்து அர்ச்சுனனைக்கொல்வதருமை என்கிறீர் நானிருக்கின்றேனெனல்.

விருத்தம் சசு.

சயபுத்தியதுபோனாலும்-சொற்புத்தியேனுங்கேளாக்
சயவனஞ்சர்ப்பகேது-கடிந்திவைசொன்னனப்பால்
பயனுறுபீஷ்மர்தம்மைப்-பார்த்தெதிர்கன்னனின்று
புயலெனச்சொல்லின்மாரி-பொழிகின்றான்மொழிகின்றனே.

சக. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

அருச்சுனனைக்கொல்லுவ-தாரென்கிறீரிந்த-அனியாயமுண்டோபீஷ்மரே

அநுபல்லவி.

தருக்குமவனுயிருக் குலைவைத்துக்கொண்டுநான்
தானொருத்தனிருக்க மாநிலத்தோர்பிர்மிக்க
அருச்

சரணங்கள்.

௧. மாமதமொடுதேரை மாயன்விடமெண்மேலும்
வரினும்அவனைவிட மாட்டேனொருக்காலும்
ராமுழுதுமிராமா யணங்கேட்டும்அப்பாலும்
ராமர்க்குச்சீதையென்ன வேண்டுமென்பதுபோலும்
அருச்

௨. அசையாநாகபாசம் அமருக்கெதிர்நில்லாதா
அதைவிடில்மாயனோ டவனையுங்கொல்லாதா
நிசமானகாரியத்தை நீர்சொன்னாற்பொல்லாதா
நீர்சொல்லாவிட்டாலும்ஊ ராகிலுஞ்சொல்லாதா
அருச்

௩. தோன்றுமலெதிர்க்கின்ற சூரர்களைக்கொன்று
சோற்றெடுவிழுங்குவா னென்கிறீரிதுநன்று
மூன்றுங்கட்டவிழ்த்திடும் போதுதெரியுமென்று
மொழிவதுபோற்சண்டை முகத்திற்றெரியுமென்று
அருச்

---

## கிருஷ்ணன் விதுரனைத்தேற்றிக் குந்தியம்மாளிடத்திற் சென்று, கன்னன் உன்பிள்ளையெனல்.

விருத்தம் சஎ.

கன்னனீதுரைக்கப்பீஷ்மர்கேட்டுப்போர்க்
களத்தினிலுன்சமர்த்தெவருங்
காணுவாரென்னப்புகன்றகன்றிட்டார்
காதகஅரவகேதனனும்

பன்னருஞ்சபையைக்கலைத்தகஞ்சேர்ந்தான்
பகர்சமதக்கினிமுதலோர்
பருத்தவில்விதுரனொடித்தசேதியினைப்
பழியில்மாலுடன்சொலிப்போனார்
என்னையாளையன்விதுரனைத்தேற்றி
இணையிலாக்குந்திபாலுற்றான்
ஏந்திழைஐவர்செய்தியைக்கேட்டா
ளியாவையுஞ்சொலிச்சுயோதனன்போர்
தன்னைநிச்சயித்தசங்கதியதனைத்
தனதுடனுரைத்துப்பின்னியானுன்
றனக்கொருகார்யஞ்சொல்லவந்தேன்கேள்
ததியிதுவெனப்படித்தனனே.

சஉ. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

உள்ளசேதியைக்கேளம்மா-குந்தியம்மா-உள்ளசேதியைக்கேளம்மா

அநுபல்லவி.

எள்ளளவன்பில்லாத் துரியோதனன்றன்மித்ரன்
என்றுசொல்கன்னனீ யீன்றஜேஷ்டபுத்ரன்
உள்ள

சரணங்கள்.

க. தொந்தமாநீகற்றமந் திரத்தைச்சோதிக்கும்போது
சூரியன்றந்தவந்தச் சுதனைக்கங்கையின்மீது
அந்தக்ஷணமேவிட்டா யதுபொய்யோநீயோது
அவனுன்றன்பிள்ளையென் றுருக்குந்தெரியாது
உள்ள

உ. தண்ணீரில்வரும்பிள்ளை தனைத்தேர்த்தொழில்புரியும்
சாரதியெடுத்துப்போய்ச் சந்ததமும்பரியும்
கண்ணுவளர்த்தானுக்குத் தெரியும்சுடர்விரியும்
கதிரோனுக்கும்எனக்குங் காரியங்கள்தெரியும்
உள்ள

௩. அமரிலவனுக்கொப்பா யாரைத்தானுரைப்பது
அதுநிச்சயமாகி மூண்டுக்கொண்டிருக்குது
தமயனென்றவர்களூந் தாமறியார்தனது
தம்பிமாரென்றவனுஞ் சாரான்காரியமிது
உள்ள

## குந்தியம்மாள் கிருஷ்ணனைப் பார்த்து யாதுசெய்வே னென வியசனப்படல்.

விருத்தம் ௪௮.

காரியமீதெனஉரைத்தையன்கிரீடி
காண்டவத்தையழித்தஅந்நாள்தப்பிப்போன
வீரஅரவத்தினையம்பாகக்கொண்ட
விறற்கன்னன்றனையழைநீமறுத்தாற்போரில்
தீரமறுகணைவிஜயன்மேல்விடாத
திறல்வரங்கேளெனவுரைத்தான்குந்திசூத்ர
தாரியேயிவையெல்லாமுன்றன்மாயைத்
தானென்றுளினியென்செய்வேனென்றாளே.

௪௩. தரு-இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

இனியென்னசெய்குவேனே-மாயனேயுன்றன்-நினைவினையறியேனே

அநுபல்லவி.

தனிமையாய்முன்பேசொல்லொண் ணாதோவர்மந்தன்னால்
சண்டைக்குக்கையறைந்து கொண்டபின்வந்துசொன்னால்
இனி

சரணங்கள்.

௧. அடியிலறிந்தேனானல் ஆறுபேரையுமொன்றாய்
அமைத்துக்கன்னனைப்புவி ஆளச்செய்வேனேநன்றாய்
விடியற்காலங்கல்யாணம் பிடியடாதாம்பூலம்
மெய்யாமென்பதுபோலே செய்தாயேயிந்தச்சாலம்
இனி

௨. சூழவேமறுகணை தொடுத்தாற்பார்த்தன்சாவானே
தொடுக்காவிட்டால்முன்பெற்ற சுதன்மாண்டுபோவானே
வாழையாடியும்வாழைக் கேசேதமுள்ளாடியும்
வாழைக்கேசேதமென்ற வகையாகவேமுடியும்
இனி

௩. வெற்றிநாகபாசத்தை விஜயன்மேல்மறுதிரம்
விடுக்காமல்நால்வர்சண்டை விளைக்கில்கொல்லாமல்வரம்
பெற்றிடென்கிறாயுண்டோ பிள்ளைகளில்வித்யாசம்
பேயாகிலும்பெற்ற தாயார்செய்வாளோமோசம்
இனி

## துரியோதனன் அன்றிரவில் பெரியோர்களொழிய மற்றவர்களோடுகூடி மந்திராலோசனைசெய்ய துச்சாதனன் தமயனைப் பார்த்துச் சொல்லல்.

விருத்தம் ௪௯.

குந்திதனைத்தேற்றியரிசென்றான்மன்னன்
குரவரல்லால்மற்றவரையிரவிற்சேர்த்துத்
தந்திரமாயனையென்னசெய்வதென்றான்
தம்பியர்கள்கொல்வதென்றார்கன்னன்போரில்
தொந்தமாய்வெல்வேனென்றான்விகர்னன்
தூதரைக்கொல்வதுபாவமென்றானப்பால்
அந்தஅண்ணன்றனைவணங்கித்துகிலுரிந்தோன்
ஆளென்றானென்வார்த்தைகேளென்றானே.

௪௪. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

எனதுவார்த்தையைக்கேளாய் - அண்ணாசொல்வேன்
எனதுவார்த்தையைக்கேளாய்.

அநுபல்லவி.

தனதால்நான்சொல்லும்யோ சனைதப்பாதெப்போதைக்கும்
சரியாக்கல்லுந்தேங்காயுஞ் சந்தித்தாற்போலிருக்கும்
எனது

சரணங்கள்.

௧. மோதிநொடிக்குட்கன்னன்-கிருஷ்ணனைக்கொல்வேனென்று
மொழிகின்றானிப் போது - சரியேயது
தூதனைச்சண்டைசெய்து-கொன்றாரென்றவசை
தொலையாதுபுவி மீது
ஆதலால்யாருமறி யாமல்விதுரனெடும்
அகத்தில்நெருப்பையிட்டோம் ஆனாலதுவெந்திடும்
ஓதுமவனுமாலும் உருளுவார்அடியோடும்
உற்றகுளிருங்காய்ச்சலுங் கூண்டோடேபோய்விடும்
எனது

௨. போனிற்றானேபுகுந்த-புலிபோல்நமதூருக்குள்
புகுங்கிருஷ்ணனையுமி ரோடும் - போகவிட்டோம்
ஆனால்நகத்தினால்-கிள்ளுவதைக்கோடாலி
யால்வெட்டவந்துநே ரிடும்
எனினியோசனை யெப்போதும்அடம்பூணும்
இவனைக்கொல்லும்உபாயம் எவர்க்கிதைவிடத்தோணும்

பானுதோன்றுமுன்சரிப் படுத்தலேநலங்காணும்
பார்த்துக்காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேணும்
எனது

௩. மண்டையுள்ளமட்டுஞ்-சளியுநீங்காதிந்த
மாயவனுள்ள மட்டும் - பாண்டவருடன்
சண்டையும்நீங்காதாகை-யாலேநான்சொன்னபத்
தனமேயினிநடக் கட்டும்
கண்டிப்பாமென்சொற்படி நடந்தாலடிக்கடிக்குக்
கலகநடவாதுண்டாங் கனம்நமதுகுடிக்கு
மிண்டராமைவரென்று விளைந்திருக்குஞ்செடிக்கு
வேரைக்கிண்டிவெந்நீர்விட் டதாமுள்ளபடிக்கு
எனது

---

## துச்சாதனன் சொன்னபின்பு சகுனிசொன்ன யுத்திக்கு அவனைத் துரியோதனன் புகழ்தல்.

விருத்தம் ௫௰.

சாமான்னியனானதுச்சாதனனீதோதச்
சகுனிஐயோதூதுவந்தவனையுங்கொல்ல
லாமோவோர்படுகுழிமேலாசனத்தை
யமைத்தவனையழைத்திருக்கச்செய்யில்வீழ்வான்
ஏமாறிவீழ்ந்தவனுக்கழுவிலங்கை
யிட்டிடிவிச்சல்லியம்போமென்றான்கேட்டு
மாமாநீசொன்னதுவேசரியென்றுள்ளம்
மகிழுவானவனைமிகப்புகழுவானே.

௪௫. தரு-இராகம்-கௌளிபந்து-சாப்புதாளம்.

பல்லவி.

மாமாநீசொன்னதேசூசனை-மற்றபேர்சொன்னதெல்லாம்வீண்யோசனை

அநுபல்லவி.

ஏமாற்றிநமக்கும் அவர்க்குஞ்சண்டைமூட்ட
இருக்கும்கிருஷ்ணனுக்கிப்போ திருப்புவிலங்குமாட்ட
மாமாநீ

சரணங்கள்.

௧. ஏழைக்குறும்பனுமவ் விடையன்பகல்காண்பித்த
எத்துகளெல்லாமிதற் கிணையாகுமோமிகுத்த
வாழ்வைத்தெய்வங்கொடுக்கும் வாயிலூட்டுமோஇன்று
வகைதப்பியிங்குவந்த வனைவிடலாகாதென்று
மாமாநீ

௨. கள்ளனிவனைஇவர் கர்த்தவ்வியந்தனைப்போலே
கருதிக்குதித்துக்காலங் கழிக்கிறார்ஆகையாலே
கொள்ளியைவாங்கிவிட்டால் கொதிப்பும்போமென்றுகெட்ட
குடிகேடனுக்குப்படு குழிசபையினில்வெட்ட
மாமாநீ

௩. எட்டிக்குப்போட்டியா இசைத்தென்மீதினில்வங்கை
எப்போதும்வைத்திருக்கும் இவன்காலினில்விலங்கை
மாட்டிவிட்டாற்பாண்டவ ருக்கிவனுலுண்டாகும்
மதமெல்லாங்கொட்டின வாயிலடங்கிப்போகும்
மாமாநீ

---

## துரியோதனன் கபடமாகச்செய்த நிலவறைச்சிங்காதனத்தில் கிருஷ்ணன்ஏற அதுமுறிய ஆண்டவன் கோபித்து விஸ்வரூபங்கொண்டு நிலவறையிலிருந்தோரையெல்லாம் மடித்தல்.

விருத்தம் ௫௧.

துடைகாலனிவ்வாறுசொல்விமாமன்
சொற்படியேபடுகுழியொன்றமைத்ததற்குள்
படைவீரர்தமைநிறுத்தியதன்மேன்மூங்கிற்
பரப்பியாசனமமைத்துமறுநாளந்த
நெடியோனைவருவித்துப்பின்வந்தோரை
நிறுத்தியொண்டியாப்வாச்செய்வித்தான்வந்தான்
கொடியோனவ்வணையிலிருவென்றன்பாகக்
கூறினான்ஐயனதிலேறினானே.

---

சந்தவிருத்தம்-௫௨.

துரியனுரைத்திட-அவையினைகைத்தெதிர்-துனுமணையிற்கடிதே
தூயவனற்புட-னேறியநிலவறை-சூழவமைத்திடுவேய்
பரவுபரப்புகள்-நெறநெறெனப்பொடி-படவசைவுற்றிமையோர்
பாதலமுற்றவ-ராதியர்வெருவ-வபாயமெனத்திசைசேர்
வரைகள்பிளப்புற-வுததிகொதிப்பெழ-மதகரியுட்கிடவே
மாமறையுச்சியி-லேதொழுமடியவர்-வாழநடித்திடுதாள்
உரகர்பதிக்குரு-முருவமுடித்தலை-யுயர்ககனத்துறவே
ஓர்திருவிக்ரம-மாமெனவிசுவசொ-ரூபமெடுத்தனனே.

சசு. தரு-இராகம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

விஸ்வசொரூபம்எடுத்தான்-காணரிய-விஸ்வசொரூபம்எடுத்தான்.

அநுபல்லவி.

திசைமுற்றிலும் உவந்து
சிந்தித்த அருள்தந்து
திகழ்நெடுஞ் சங்குசக்ர
திருமா லதிகவுக்ர
விஸ்வ

சரணங்கள்.

க. திருவடிபாதலத்தை யெட்ட - மணிமுடிகொள்
சென்னிபிரமாண்டத்தை முட்ட - நீண்டுவளர்ந்த
காங்களெண்டிசையினுங் கிட்டப் - பற்றியெரியுங்
கண்கள்தீப்பொறிகளைக் கொட்ட - அநேகமள்ளர்
கட்டுடனொருமித்து வெட்டியகன்றபெரும்பள்ளம்-அதிலும்வெகு
திட்டமுடனமைத்து வித்தவிடங்கடோறுங்கள்ளர்-எனப்பதுங்கிக்
கொட்டமோடுதனைப்பிணித்துமிகுந்த செயங்கொள்ள-இருந்தமகா
துட்டர்நடுநடுக்க முற்றுமெலிந்துயிரும்விள்ளப்-பின்னுமங்கே
கைப்படைதெறித்துறக்க-முற்றிறக்கவே சிலபேரை-வ்ாயாலுதிரங்
கொப்பளித்திளித்துமுக்கி-மெய்க்கிடாடுக்கச் சிலபேரை-உயிர்பிரியக்
குப்புறப்படுத்துயிர்ப்பு-விட்டாற்றவே சிலபேரை-குடல்சரிந்து
முப்புரிபடப்பதைத்து-மெத்தவுந்தவிக்கச் சிலபேரை-உலகளந்த
காலினாலரைத்து விக்கிரமதுங்க
கனகனையொழித்திட வருநரசிங்க
கோலமதிலுமதி கோரமேபொங்கக்
கூற்றனுமிதுதனைப் பார்த்துளங்கலங்க
விஸ்வ

உ. மேதினியெல்லாந்தத் தளிக்க - உம்பர்பிழைக்கும்
விதமேதென்றுகண்ணீர் துளிக்கத் - திசையிலுற்ற
மாதிவ்யமத்தகஜம் ஒளிக்க - சேஷனுந்தலை
மாற்றிமாற்றியுடல் நெளிக்க - கடலினீரை
வடித்திறைத்திடப்பகை யடுக்குமேசிலசிலகரங்கள்-வரைகளையும்
இடித்தரைத்திடப்பதை பதைக்குமேசிலசிலகரங்கள்-கற்பகக்காவை
மடித்தொடித்திடக்கடு கடுக்குமேசிலசிலகரங்கள்-சத்ராதிகளைப்
பிடித்தடித்திடத்துடி துடிக்குமேசிலசிலகரங்கள்-நகைப்பதினால்
மண்டும்அண்டாண்டமுந்-ததும்பவெண்டிசாதிபரும்ஓட-வரும்சுவாசத்தால்

விண்டலக்தொடுஞ்சிரங்கள்-ஒன்றுமம்பொன்மேருமலேயாட - சங்கத்தொனி [யால்
அண்டருங்கலங்கநெஞ்-சயர்ந்துபொங்கைராவதமும் வாட - ஆரவாரத்தால்
முண்டகம்பொருந்து-மந்தணன்பயந்துகாதுகளே மூட - கோபாக்கினி [யால்
மருவுசந்த்ராதித்தர் கதிமாறித்திரிய
மண்ணுங்காடும்மலேகளும் பற்றிக்கொண்டெரிய
சருகுகள்போற்சத்த மேகங்களுங்கரியத்
தன்மகிமைபுவிக்குள் சகலர்க்குந்தெரிய
விஸ்வ

௩. அகிலந்தனேயளந்த மாயன் - எள்ளெண்ணெயும்போல்
அங்கங்கிருந்தருள்செய் தூயன் - ஆவினமெல்லாம்
மகிழவேயூதியசெவ் வாயன் - பிரகலாதனன்
வருந்தவருமாபத்ச காயன் - கோவர்த்தன
மலேயெடுத்தாவின மலேயாதருள்புரியுநாதன் - காளிங்கன்றன்
தலேயிற்றித்தாவென வலுவாகநடமிடுபாதன் - பெரும்பூதகி
முலேகுடித்தாவிய கலவேயிடர்தருவினேதன் - நம்பும்பாண்டவர்
சொலேமறுக்காதுபு கலவாசையொடுவருதூதன் - வருந்திக்கூவு
மத்தகக்கரிக்குவப்-பளித்தவஸ்துவானவெர்ரு மூலன் - தீயிலுதித்த
பத்தினிக்கிரக்கமுற்று-வஸ்திரத்தையீயுமனு கூலன் - தயித்தியர்கு
லத்தைமுற்றுநிக்கிரகித்த-விக்கிரமபிரதாபஜெயகாலன் - பாவைகள்போல
மைத்துயிர்த்திரளேமிக்-கசைக்குமுக்கியமாயசகஜாலன் - யாருந்துதிக்கும்
வரதனந்தயா தவகுலசோமன்
மகிழ்தருகருடவா கனசங்கிராமன்
பரமன்திகழ்பஞ்சா யுதபரந்தாமன்
பாயிரமறைசொலு மாயிரநாமன்
விஸ்வ

---

## வீஷ்ட்டுமர்முதலானவர் கிருஷ்ணனேத்துதிக்கக் கோபநீங்கி கிருஷ்ணன் துரியோதனனே இகழ்தல்.

விருத்தம் ருக.

ஐயனுற்றிடுநீள்விசுவரூபத்தை
யகன்றிடவீடுமன்குருடன்
அங்கர்கோனங்குசபையினிலிருந்த
அரசர்களாண்டவாகோபஞ்

செய்யவேண்டாமெம்பிழைபொறுத்தருள்நீ
செய்யெனஎழுந்துகைகுவித்தார்
தேவரிந்திரனும்பிரமனுந்துதித்தார்
செங்கண்மாயவனுளமிரங்கித்
துய்யவானளவும்வளர் திருவுருவைச்
சுருக்கினுன்கெடுமதியுள்ள
சுயோதனன்ஒருவன்மாத்திரஞ்சற்றுந்
துதித்திடாமற்படியங்கு
வையகமதனில்நட்டகல்லைப்போல்
மதத்துடனிருந்தனனத்துன்
மார்க்கனைமால்பார்த்துனைக்கொல்வேன்பொறுத்தேன்
மட்டிகேளெனவுரைத்தனனே.

சஎ. தரு-இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

உனதுகுற்றத்தைப்பொறுத்தேன் - இந்தவேளை
உனதுகுற்றத்தைப்பொறுத்தேன்.

அநுபல்லவி.

அனியாயமாக்கோடாலிக் காம்பைப்போலிக்குலத்தை
அழிக்கவந்திடுங்கோளா பழிக்கஞ்சாதசண்டாளா
உனது

சரணங்கள்.

௧. குத்திரஞ்செய்யுனையும்-மற்றஇளைஞரையும்
பற்றிப்பிடித்துத்தலை தத்திவிழஇந்நேரம்
சித்திரவதைசெய்துகா-கத்துக்கிரையாய்த்திசை
முற்றிலும்விழ எறிவேன்
அத்தினத்துவாரகையில்-சித்தமுவந்துன்னுடன்
இத்தினமுதலுன்கு லத்தினர்மீதினில்
வெற்றிதரும்படை-எடுத்துச்சமர்புரியேன்
சத்தியமிதுவென்று ரைத்தமொழியையெண்ணி
உனது

௨. அண்டமுன்குலத்தைவேர்-கிண்டி-நூற்றுவர்கள்தம்
மண்டைகள்களத்திலு ருண்டிறக்கவெள்ளந்
திரண்டிடக்ஷணத்தினிற்-கண்டகண்டதுண்ட
துண்டமாக்குவோ மென்று
திண்டிறற்றருமன்பிர-சண்டசெயவீமன்மு
தண்டமுங்கலங்கிடச் சண்டைசெய்யும்விஜயன்

மீண்டராம்இருவரும்-பண்டுபெருஞ்சபையில்
விண்டிடுஞ்சபதம்பு ரண்டிடுமெனஉன்னி
உனது

௩. நோக்குமுன்னென்னுயிரை-போக்கப்படுகுழியுண்
டாக்கிவைத்தாயேதுன் மார்க்கப்புத்தியினுலே
தீக்குள்ளுண்டாம்புழுவை-வாய்க்குஞ்சூர்யகிரணம்
தாக்கிக்கொல்லுவ துண்டோ
சேர்க்கையால்வருமிந்தப்-பேய்க்குணங்களினுலே
ஏற்கும்பாவமேயுன்னை சீக்கிரத்திலழுத்தும்
நாய்க்கும்நரிக்கும்பசி-நீக்குமென்றுங்கொடிய
மூர்க்கப்பயலேயிந்த யோக்கியர்களைப்பார்த்தும்
உனது

---

## கிருஷ்ணன் சபையைவிட்டு வரும்போது கன்னனும் அஸ்வத்தாமனும் பின்றொடர்ந்துவர கன்னனைப் பார்த்துக் கிருஷ்ணன் பிறப்பின் வரலாற்றைச் சொல்லுதல்.

விருத்தம் ௫௪.

எந்தையிவ்வாறுரைத்தகன்றான்துரியனல்லா
லெல்லவரும்பின்தொடர்ந்தார்அவர்கள்தம்மை
வந்தனையோடனுப்பிவிட்டானங்கர்கோனஸ்
வத்தாமனுந்தொடர்ந்தார்சிலதூரம்போய்
முந்தவந்தக்கன்னனொடுதனித்துமாயன்
முகமலர்ந்துகரம்பிடித்துத்தெரிந்திலாயோ
இந்தமதிகுலந்தனக்குக்கன்னுநீயே
யிறைஎன்றானறிவேனம்முறையென்றானே.

௪௮. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

நானறிவேன்கன்னு-சந்த்ரகுலத்தின்-நாதனீயேவிற்பன்னு

அநுபல்லவி.

தானுண்ணுமல்வினைப் பழிசுமந்திடுந்தேரை
தனைப்போல்பழிசுமந்தாய் தாணிக்குள்ளுன்சீரை
நானறி

சரணங்கள்.

௧. சீராய்க்குந்திதேவி-மந்திரபரிக்ஷை
செய்திடமலர் தூவிச்

சூரியனைத்தாவி-சேவிக்கஅவன்
தொல்லுலகினில் மேவி
காரியமாயுனையங் களித்தானிதுவேஆகி
காலத்தில்நடந்தா கசியமாகியசேதி
நானறி

உ. அரிதாமுன்கொடி-கட்டும்அங்கதேசம்
அல்லாமல்புவியோ ரட்டும்
துரியோதனன்த-ரட்டும்இன்னமுனக்குத்
தொலையாச்செல்வம் வாட்டும்
பெருமையுனக்கதுவோ மூவுலகுஞ்சிறப்பைப்
பேசிநிதங்கொண்டாடும் பிரபலமாயுன்பிறப்பை
நானறி

௩. ஐயமற்றமாட்சி-யுடையதம்பி
யரைச்சேர்வதே காட்சி
வையம்நீஅர-சாட்சிசெய்யிலொரு
வருக்குமில்லை தாழ்ச்சி
மெய்யாயதையறி யாமலுன்தனதை
வீணர்க்குக்காட்டிநீ விழலுக்கிறைப்பதை
நானறி

---

## கிருஷ்ணன் அஸ்வத்தாமனைப்பார்த்து நீ துரியோதனனுக்குச் சேனாதிபதி யாகேலெனல்.

விருத்தம் ௫௫.

மாயனிதுசொலக்கன்னனெனதுதம்பி
மாரிடத்தில்நான்போயிப்போதுசேர்ந்தால்
நீயறியஉலகமெனையென்னசொல்லும்
நிந்தனைக்காளாவேனேயென்னயிந்தத்
தூயவன்பால்விடைகொண்டுபோனனப்பால்
துரோணன்மகனைப்பார்த்துநீகேளந்தத்
தீயனுக்குச்சேனாதிபதியாகாதே
ஸ்திரமென்றான்சொல்வேன்விபரமென்றானே.

௪௯. தரு-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

உனக்குநான்சொல்ல-வேண்டுவதில்லைவெகு - தூரம்ஓகோ அஸ்வத்தாமனே

அநுபல்லவி.

அனைத்துந்தெரிந்தநல்லோர்க் கன்புதானேமுதிரும்
அளியக்கொம்பிற்பழுத்த பழந்தானேயுதிரும்
உனக்கு

சரணங்கள்.

௧. ஏகமனதாயவன் எதிரில்நின்றென்னிருகை
ஏந்தியுமவர்க்களிப் பேனென்றுன்வானுலகை
ஆகையாலிப்படி அவமானஞ்செய்தபகை
யாளிக்குடியையுற வாடிக்கெடுக்கும்பகை
உனக்கு

௨. ஏதுசொல்லியுமெனை யேசெய்தானுகாத்தியம்
எனக்கிடோஐவர்களென் றிசைக்கின்றுன்சாமார்த்தியம்
ஓதும்அவரைக்காக்க உனக்கில்லையாபாத்தியம்
உனக்கில்லாவிட்டாலவர் உயிர்நிற்பதேஅசாத்தியம்
உனக்கு

௩. வையமீதில்நல்லோர் மனதுக்கெல்லாமாயாசம்
வரச்செய்தேயிந்தத்துன் மார்க்கனேயாவானுசம்
தெய்வபலமுள்ளோர்க்குச் சோராதொருகிலேசம்
சேனுதிபதிநீயே யானுல்வந்திடுமோசம்
உனக்கு

---

## குந்தியம்மாள் கன்னனிடத்திற்போய் அவன் கொடுத்த வஸ்த்ரத்தை யுடுத்து அவனைப் பாண்டவர் களைச் சேரெனல்.

விருத்தம் ௫௬.

அரிசொலியாழியைத்தரையில்விடவேதுரோணன்
அளித்தமைந்தன்குனிந்தெடுக்கப்பரிவேடஞ்சூழ்
பரிதிதனைக்காட்டிவிடைகொடுத்தானத்தைப்
பார்த்தவனைத்துரியனம்பாதுற்றுனப்பால்
திருவங்கர்கோனிடங்குந்தியைச்செல்லென்றுன்
சென்றன்னேனருள்கலையைத்தரித்துச்சாட்சி
சரிகண்டாயடமகனேநான்தானுந்தன்
தாயென்றுள்ஜேஷ்டபுத்ரனீயென்றுளே.

௫௯. தரு-ஸ்ரீராகம்-ஆதிதாளம்.

பல்லவி. [டா

மகனேஎன்சொல்லைக்கேளடா - என்னிருகண் - மணியேஎன் சொல்லைக்கேள

அநுபல்லவி.

மகனேயென்சொல்லைக்கேளாய் மந்திரத்தாற்சூரிய
பகவானருளவிப் பாவிக்குண்டாகிய
மகனே

சரணங்கள்.

க. குழந்தைப்பருவத்திலுன் குதலைமொழிகொள்ளாமல்
இழந்திடுந்தோஷியாம் என்றென்னைத்தள்ளாமல்
மகனே

உ. தப்பாதின்றுவந்தது சாமிக்கென்மேல்கடாட்சம்
அப்பாஉன்னாலேநான் அடையவேணுமோட்சம்
மகனே

௩. வையத்திலிவனறி வானாஉன்னருமை
ஐவரும்பணியநீ அமைவதல்லோபெருமை
மகனே

௪. சொற்பனந்தனிலுந்தாய் சொற்கெதிர்படிக்காதே
நற்பசுவாலைவிட்டு நாய்வாலைப்பிடிக்காதே
மகனே

௫. வானுடும்பட்சிகளும் வந்தினத்திற்கூடுமே
தானுடாவிட்டாலும் தன்சதையாடுமே
மகனே

௬. இங்குள்ளமட்டுமுனக் கேகாதிவ்வுருச்சூடு
பொங்கமாரைவருடன் பொன்போலேவந்துகூடு
மகனே

௭. உத்தமருன்தம்பியர் உலகறியும்சூக்ஷி
சித்தப்படிக்குநீயே செய்யலாம்அரசாக்ஷி
மகனே

௮. ஆறுபிள்ளைகள்குந்தி யம்மைக்கென்றுகூற
வீறுமுங்களாலேநான் மெய்யாகக்கடைத்தேற
மகனே

௯. கோகிலமுட்டையைக்காக்கை கூண்டினிலிட்டதுபோல்
ஆருமையோதுரியன் அறிந்தானானுலினிமேல்
மகனே

௰. திடுக்கிட்டுப்பகைஞர்கள் சிந்தைமிகவேநாணும்
படிக்குநீஅரசாளும் பண்பைநான்பார்க்கவேணும்
மகனே

## குந்தியம்மனைப்பார்த்துக் கன்னன் நானுன்சொற்படி இத்தருணந் தம்பிமாரைச்சேருதல், தருமமல்லவெனல்.

விருத்தம் ருள.

சிலமுடனன்னையிவ்வாறுரைத்ததெல்லாஞ்
செவிதனிற்கொண்டவளடியைப்போற்றிக்கன்னன்
கோலமுறுமெனதருமைத்தம்பிமாரைக்
கூடிநானிருப்பதெந்தவிதமோஆதி
கால்முதற்பாலமுதமளித்தோன்றன்னைக்
கைவிடேனீதிதப்பேன்மேலுமிந்த
ஞாலமெனைத்தூஷிக்கும்படிக்குள்ளாகேன்
நானென்றுன்மோசமுஞ்செய்யேனென்றனே.

ருக. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

நான்மோசஞ்செய்யலாமா-அப்படிசெய்தால்-ஞாலத்தில்வசைபோமா.

அநுபல்லவி

வான்செறிசூரியனே வந்துசொன்னனுலும்
மறலிகையிலிப்போதென் வல்லுயிர்போனலும்
நான்

சரணங்கள்.

க. பழுதல்லாநான்பிறந்த-போதேயுன்றன்முலைப்
பாலுண்ணுப்பாவி யானேன் - என்பிறப்பின்
வழியறியாததேர்ப்-பாகன்கண்டெடுத்து
வைத்தென்னைவளர்த் தானே
இழிவாயின்னுனினியான் என்றறியாதவெனை
இட்டுக்கொண்டுபோயன்பா யிந்தான்வெகுவாழ்வினை
புழுவைக்குளவிகொண்டு போயதன்பின்புதனைப்
போற்செய்தவண்ணஞ்செங் கோலுமருள்மன்னனை
நான்

உ. அரியஅவன்மனைவி-யாரும்நானும்ஒருநாள்
அமைந்துசூதாடு மனையை - நாடிவந்தான்
வரவேயெழுந்தாள்நடு-வினிற்போவதேர்வென்று
வலித்தேனவள்முந் தானையை

தாளங்களுதிர்ந்தது தரையிலதைதனக்குத்
தானேயெடுத்துச்சேர்த்துத் தண்மைசொன்னனெனக்கு
ஒருவிகற்பமுமில்லா துண்மையாயிப்படிக்கு
உயிரொன்றுடலமிரண் டாயிருப்பவனுக்கு
நான்

௩. உருக்கமாவளர்த்தமா-தாபிதாகுருதெய்வம்
உறவினமும் நல்ல - வாழ்வும்நான்
ஒருத்தனென்றேநம்பி-யிருக்கின்றனேதன்
னுறுபகையென்னல் வெல்ல
இருப்போனுக்கென்னநல மாச்சுதென்னையிட்டு
இப்போநான்வரலாமா என்னுயிர்க்கிச்சைப்பட்டு
செருக்களத்தினில்நின்று திவ்யாஸ்திரங்கள்தொட்டு
செஞ்சோற்றின்கடனை தீர்ப்பதைவிட்டுவிட்டு
நான்

---

## குந்தியம்மாள் கன்னன் சொல்லைக்கேட்டு மாதவனிடத்து வந்துசொல்ல, அம்மாயன் தருமனிடத்தில்வந்து நடந்தசெய்திகளைச்சொல்லல்.

விருத்தம் ருஅ.

கொடையாளிசொலக்கேட்டக்குந்திமாயன்
குறித்தவரங்கொண்டாள்பின்னன்னேனென்ற
னுடையதம்பியர்க்குரையாமலும்நான்போரில்
உயிர்விடுக்கினுன்மகனென்றறியச்செய்யும்
படியுமிருவரங்கொடென்றனளித்துவந்து
பகவனுக்குவிடைகொடுத்தாள்தருமன்பாலுற்
றடல்கன்னன்பேச்சையல்லால்மற்றதெல்லாம்
அறைந்திட்டான்எங்கெங்குநிறைந்திட்டானே.

---

## படையெழுச்சி.

—(*)—

விருத்தம் ருகூ.

நவந்திகழ்மறையினுச்சி-நடுவினில்நடனஞ்செய்துன்
தவஞ்செறிபாண்டவர்க்காச்-சகலருங்காணநாளும்
பவம்புரிகொடுங்கோல்வேந்தன்-பாலினிற்றூதுசென்றுஞ்
சிவந்திடுங்கமலத்தாளைச்-சிரங்கொள்வாம்உரங்கொள்வாமே.

## பின்னும் மாயன் தூதுபோனவிடத்து அவரவர்கள் சொன்ன சங்கதியைச் சொல்லல்.

விருத்தம் கூயி.

கனத்தமுகில்வண்ணன்மறுபடியுமைவர்
களைநோக்கிஅத்துரியனெனுந்தீயோனும்
மனத்திலொன்றும்வாக்கிலொன்றும்வைத்தேயென்றும்
வசனிக்குந்திரிதராட்டிரனென்போனும்
அனைத்துமறிவிதுரனும்உங்களையன்பாக
அளித்தவளுந்தங்கள்தங்கள்கருத்தையெல்லாந்
தனித்தனியென்னோடுசொன்னதின்னதென்று
சாற்றுவான்எண்ணம்நிறைவேற்றுவானே.

ருஉ. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

அப்பாவுங்கள்சித்தம்-பாண்டவரேநீங்கள்-அறிவீரிதுபிரசித்தம்.

அநுபல்லவி.

தப்பாதமேலோர்சொல்லுந் தந்தைசொல்லுமோராமல்
சபையில்நானேகையேந்துந் தன்மையையும்பாராமல்
ஒப்பாநமன்கைக்கொண்ட உயிர்மீளாதென்னபயன்
உலகஞ்சண்டைசெய்துவென் றோருக்கென்றான்துரியன்
அப்பா

சரணங்கள்.

க. அலக்கழியுந்துரிய னல்வெகுபேரைக்கொல்ல
லாகாதென்றெண்ணலாமோ அப்புவிவசைசொல்ல
வலிக்குள்மிகுத்தபுவி மன்னவரென்றஎல்ல
வருக்குமீதழ கல்ல
மலக்கிப்பிடித்திழுத்து வலியாமலேகமது
வாயாற்கேட்டாலிறகை மயிலேதுதருவது
விலக்கரும்பாவியாவி விடுமுன்பாகவுமது
மேதினிவாராதென்று விதுரன்சொன்னானுள்ளது
அப்பா

உ. ஓதும்நீதிதப்புவோர்க் குண்டுள்த்திலகந்தை
உரிமைபாராட்டுவோருக் கொருக்காலுமில்லைநிந்தை
எதிலும்பலமதுவே அதுவேயென்சிந்தை
என்றான்பெரிய தந்தை
சூதன்சண்டைக்கிடைந்தாற் றுலையாப்பழியேசேரும்
தொடர்சண்டையில்மாண்டாலும் சொர்க்கப்பதவிநேரும்

ஆதலாற்பகைஞர்கள் ஆண்மையும்பேரும்ஊரும்
அழித்துக்கூர்கதிகொள்ளச் சொன்னுளுங்கள்தாயாரும்
அப்பா

௩. ஊரில்யாரும்நகைக்க உங்களைச்செய்தசதி
ஒழியுங்கனம்வேண்டினும் உண்மையாயுங்கள்பதி
சார்வுவேண்டினுமிங்கு சாற்றவேறில்லைகதி
சண்டைசெய்வதே தகுதி
பாரிற்சண்டைக்குநீங்கள் பயந்தாலிவ்வீனவத்தைப்
படுவானேன்காட்டிற்சேர்ந்து பண்ணும்அருந்தவத்தை
சீராகயோசித்தெது சிறப்போசெய்வீர்கனத்தை
திரும்பிப்பேசவறியேன் செப்பினேனென்கருத்தை
அப்பா

---

## தருமராஜன் அரசர்களுக்குத் திருமுகமனுப்ப அவர்களெல்லாம் உபலாவியத்தில் வந்துசேர்தல்.

விருத்தம் சுச.

தானினைத்தபடிமுடிக்குமாயோன்சொல்லத்
தருமனதைக்கேட்டுவெகுகோபமாகி
ஆனதிருமுகமகிலவேந்தர்க்கெல்லாம்
அக்கணமேயெழுதிவிட்டாரதனைக்கண்டோர்
ஏனினந்தாமதமென்றுதங்கள்தங்கள்
இடத்திலுள்ளசதுரங்கசேனையோடும்
வானதிரப்புவியதிரவொன்றாய்ச்சேர்ந்து
வந்திட்டார்உபலாப்பியம்வந்திட்டாரே.

ருங. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

ராஜரெல்லோர்களும்-திருமுகங்கண்டுதன்ம-ராஜன்சபைக்குவந்தாரே

அநுபல்லவி.

மாசுகொண்டகௌரவர் வாணளைக்கொள்ளைகொள்ள
மறிகடல்சூழ்கின்ற மண்டலந்தனிலுள்ள
ராஜ

சரணங்கள்

க. துஷ்டகேதுசிகண்டி-உத்தமோசாவுதார்மன்
துஷ்டத்தூய்ம னெனும் - காலனும்எட்டுத்
திசையுங்கலங்கசது-ரங்கசேனையுடன் ,,
தீரகெம்பீரபாஞ்சா லனும்

இஷ்டவராககேது-சுதனிகனுயர்சுவேதன்
என்னும்ஒன்னலர்கார்க்கோட கனும் - மகா
ரணரங்கதீரனுன-உத்தானுந்தனேச்சேர்ந்
திருக்கும்படையொடுவிரா டனும்
துஷ்டநிக்கிரகஞ்செய்பிர தாபசெயசேனனும்
சோழனும்பாண்டியனெனச் சொல்லும்ரணவீரனும்
சிஷ்டபரிபாலனஞ் செய்திடுங்கேகய
தேசரும்அடல்குந்தி போஜருமாகிய

ராஜ

உ. சமரிற்கோரவிக்கிரம-தைத்தியகுலத்திலவ
தரித்தகடோர்க் கஜனும் - மகா
தனுசாஸ்திரநிலேதேர்ந்த-அபிமனெனுமொருவுத்
தண்டமந்தர புஜனும்
எமலோகமட்டுஞ்சா-தித்தும்வலிமையைப்பெற்
றிருக்கின்றஅர வானும் - ருத்திர
னென்னுஞ்செபசனனும்-விந்தனும்விர்கீர்த்தி
யெனும்உயருர வோனும்
அமையும்விருதுகொள்புண் டலனெனும்நாமனும்
அக்கினியைப்போல்கொதித் தமர்செயுஞ்சோமனும்
நிமைக்குளுலகையெல்லாம் நெருக்கும்படைகள்முந்த
நீண்டசீரிளம்பஞ்ச பாண்டவரோடனந்த

ராஜ

ங. பந்திபந்தியாவரும்-ரதங்களினேசையாற்
பாரும்விண்ணும் கலங்க - உற்
பாதபாடியெனவே-மதவாரணங்களாற்
பரிக்கநாகமும் விலங்க
விந்தைப்பரிக்கூட்டங்கள்-காலினெழுஞ்செந்துகள்
விரியந்தாத்தை மூடச் - சுத்த
வீரங்காட்டுமேழக்-குரோணிசேனேகள்வரும்
வேகத்தால்நமன் வாட
தொந்தசீனர்சாவகர் மத்திரர்கள்தெலுங்கர்
துருக்கர்மாளவர்சோ னகர்கன்னடர்கலிங்கர்
அந்தக்குச்சரரொட்டர் மகதர்முதல்விலாச
அம்புவிநிறைந்திட ஐம்பத்தாறுதேச

ராஜ

## தருமராஜன் அரசர்களுக்கு உபசாரஞ் சொல்லல்.

விருத்தம் சூஉ.

வந்தமன்னவரைத்தருமன்பார்த்தவர்க்கிவ்
வாறுமரியாதைசெய்யவேண்டுமென்ன
அந்தமொடுபுரிந்திடும்போதேழக்குரோணி
யரும்படைசூழ்ந்திடநிற்குமரசரெல்லாஞ்
சந்திரனைச்சூழ்ந்தநட்சத்திரங்களென்னத்
தனைச்சூழ்ந்துநிற்பதைக்கண்டின்றேநாட்டை
விந்தையுடன்பெற்றதெனமகிழ்ந்துவேண
விதஞ்சொல்வான்அதுகளினல்விதஞ்சொல்வானே.

ருச. தரு-இராகம்-மோகனம்-சாப்புதாளம்.

பல்லவி.

வந்தமன்னவரேஎல்-லோருங்கண்பாரும்-வையமெனக்குச்சேரும்

அநுபல்லவி.

அந்தமாக்ச்செழிக்கும் இந்தஉலகத்தாலே
அணுவும்பிரயோசனம் அடையாமேகம்போலே
வந்த

சரணங்கள்.

க. சண்டைக்குத்தோள் தட்டுஞ் - சர்ப்பகேதுக்காய்
மண்டலந்திசை யெட்டுங் - தாங்குகின்ற
மிண்டர்களே வரட்டும் - அன்றியும்விட
முண்டவன்துணைசெய் யட்டும் - பகைவர்கள்வெ
ருண்டிடக்கணைபெய் யட்டும் - உங்கள்கிர்பை
கொண்டபினிக் கட்டும் - பயமுமுண்டோ
தண்டுகளெங்குங் கிட்டும் - படிக்கென்னாலே
கண்டுபெண்டுபிள்ளை
களைவிட்டிந்த மட்டும்
வந்த

உ. அன்றுசபையிற் சின்ன - மாக்கிவனஞ்
சென்றுவந்தாற் பின்ன - மிலாதவுங்கள்
வென்றிபதியினை முன்னம் - அளிப்போமென்ற
தொன்றுந்தராம லின்னம் - இன்னஞ்சண்டைக்கு
நின்றெதிர்த்திடச் சொன்ன - துஷ்டகுணங்
துன்றுமுரட்டு மன்ன - வனையேநாங்கள்
வென்றிசெய்யப்பிர சன்ன - மாஅன்போடு
கன்றுகூவப்பசு
கதறிவருவ தென்ன
வந்த

௯. ஆதியிலே ஓது - லூகரென்ற
வேதியனே தேது - சொல்லியுமவன்
காதினிலப் போது - கொள்ளாததால்
மாதவனே தூது - சென்றுவேண்டியும்
பாதகன்வெகு சூது - பண்ணியிந்த
மேதினியின் மீது - சண்டையில்வென்றோர்க்
கேதகுந்தப் பாது - மெய்யாமென்று
பேதகமேசெய்தால்
நீதமாஇப் போது
வந்த

---

## தருமராஜன் தனக்குப் படைத்துணையாகவந்த அரசரைப் பார்த்து உபசாரவார்த்தைசொல்ல, அவர்கள் தருமனைப் புகழ்தல்.

விருத்தம் ௬௯.

இகலினைவெல்லவேண்டி-இவ்விதந்தருமராஜன்
புகலஅவ்வேந்தர்கேட்டுப்-புனிதனைநோக்கியெங்கள்
நிகரிலாப்பிராணனோடும்-நீள்படையுமதேயென்று
சகமதித்திடவேநின்றுத்-தாஞ்சொன்னார்திரஞ்சொன்னாரே.

௫௫. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

எங்களாலென்னகாரியம்-ஒன்றுமில்லை-எங்கள்இறையேதன்மராஜனே.

அநுபல்லவி.

நங்குசொல்லொன்னலரை நாசமாக்கிச்செருக்க
நாரணன்கிருபைபரி பூரணமாயிருக்க
எங்களால்

சரணங்கள்.

௧. ஒருவர்நிகரில்லையென் றுரைக்கும்வீரர்கள்தாமே
உனையெதிர்த்தாலவர்கள் உயிர்களழிந்துபோமே
பரியும்உலகும்பஸ்மீகர படலமாகவேமே
பாங்காய்நாங்கள்கோபுரந் தாங்கும்பொம்மைகளாமே
எங்களால்

௨. மதவிமன்தென்றிசை மறலிபோலேயுறைய
வளர்நகுலன்சகதேவ னும்புலிபோலிரைய
எதிரில்முச்சகத்தையும் இமைப்பில்வெல்லும்விஜயன்
என்னுஞ்சூர்யனிருக்க மின்மினியாகிய
எங்களால்

ங. தும்பும்போதோயிரும்பும் போதோபோமிச்சரீரஞ்
சும்மாய்ப்போகும்உன்படைத் துணையாகிறோம்இந்நேரம்
அன்புறும்உனக்காய்மாண் டாலும்உண்டாகுஞ்சாரம்
அப்பால்ஊழியங்கொண்டே ஆள்வதுனதுபாரம்
எங்களால்

---

## துரியோதனன் தனக்குப் படைத்துணையாகவரும் அரசர்களுக்கு திருமுகமனுப்ப அவர்கள்வருதல்.

விருத்தம் சுச.

தீங்கில்மன்னர்சொலத்தருமன்சிவேதன்றன்னைச்
சேனாதிபதியாக்கிச்செயங்கொள்பேரி
பாங்குடனேயறைவித்தானாவானந்தப்
பகைஞரைஓர்பகலில்வெல்வேனென்றனப்பால்
ஆங்குசுயோதனன்விடுத்தஓலைகண்ட
அவனிபரெல்லாம்பயந்துவிரைவாத்தங்கட்
கோங்கியசேனைகள்சூழஅநேகந்தேரை
யூர்ந்திட்டார்அவன்பதியைச்சேர்ந்திட்டாரே.

ருசு. தரு-இராகம்-ஆபி-ஆதிதாளம்.

பல்லவி.

வந்துசேர்ந்தார்களரிய-மண்ணும்விண்ணும்-மருண்டிடப்போர்புரிய

அநுபல்லவி.

சந்த்ரகுலதுரியோ தனன்வராதபேர்க்குற்ற
தண்டனைவரும்வரும் என்றுளம்வெருண்டு
கண்டிதமாயெழு துந்திருமுகங்கண்டு
வந்து

சரணங்கள்.

க. சகுனிசல்லியன்மா கததேசாதிபனும்
தாவும்மந்த்ரபுத்தர் விந்தானுவிந்தனும்
சிகிமதிசுதனுமெய்த் திறல்கொளலாம்புதனும்
திகழ்வருணன்மக னும்மனத்திடங்கொள்
சஞ்சத்தகாரு பதினாயிரவரும்
வந்து

உ. காலிங்கதேசனுங்கௌ சிகனும்பகதத்தனும்
காம்பிலிராஜனும் கனசோமதத்தனும்
தெலுங்குராஜனும்போ ஜனும்திரிகர்த்தனும்
சிதையாகேகய தேசவிசித்திரரும்
பதினாறாயிரம் யாதவபுத்திரரும்
வந்து

அ. கவுண்டராஜனும்பூரி கவுரிமன்னவனும்
கனகமேருவென்ன கதிக்குமாளவனும்
நவின்றவிகர்த்தனும் நரபாலசேனனும்
நாணமுடனேயெம தூதரும்பயந்திடும்
திராணிகொள்பதினோக் குரோணிசேனைகளொடும்
வந்து

## வீஷ்ட்டுமருக்குச் சேனாதிபத்தியங் கொடுத்தல்.

விருத்தம் அடு.

மோதும்மர்க்கேவருமிம்மன்னருக்கும்
முக்யகுருவாந்துரோணர்முதலாயுள்ள
மேதகுவீரர்க்கும்ராட்சதர்க்குமற்ற
விறற்படையாகியபதினோக்ரோணிக்கும்
ஆதியாம்நீர்தலைவராகவிப்போ
தருள்செய்யுமென்றசுயோதனன்களிக்க
மாதராசையைநீத்தபீஷ்மருஞ்சம்
மதியானர்சேனாதிபதியானாரே.

ருஎ. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

சேனாதிபத்தியங்கொண்டாரே - முச்சகத்தோரும்
சிந்தைமகிழ்ந்து கண்டாரே.

அநுபல்லவி.

மானபரணக்கங்கை வரத்தில்வந்தசீரியர்
மமதைய்யையம்புவி வாஞ்சையைநாரியர்
பிரமையைவிண்டுவளர் பீஷ்மராம்வீரியர்
சேனாதி

சரணங்கள்.

க. தந்தைமனக்குறியை ஓர்ந்து - அந்த
க்ஷணந்தாசனிடமதிற் சேர்ந்து - என்றன்
தாயிவளெனக்கில்லை யாரும் - இவள்
தன்பிள்ளைகட்கேபட்டஞ் சேரும் - மேலும்
விந்தையாமென்மக்கட்கும் இந்தராச்சியாதிபத்தியம்
வேண்டாநான்மூவாசையும் வெறுத்திட்டேனிதுசத்தியம்
வேறுநினைக்கவேண்டாம் மென்றுபலபகர்ந்து
மினும்பரிமளகந்தி தனையழைத்துவந்த

வேந்தனெனும்சந்தனு கனமதிக்கமறைவிதி
பாந்தமுடன்விளங்க மணமுடித்தகுணநிதி

சேனதி

௨. மன்னர்முடிகள்கொய்து பெய்யும் - ரத்த
மடுவிற்றிலதற்பணம் செய்யும் - படை
மழுக்கொள்பாசிராம னென்ற - சூரன்
மதமொடுங்கிப்பின்னிட வென்ற - மகா
உன்னதபுஜமேரு ஓங்குமாக்கிரக்கண்ணியர்
உரகேந்த்ரனுமிசை ஓதவொண்ணுப்புண்ணியர்
ஒருவருமிநிகரில்லா உக்ரவிக்ரமதுங்கர்
உட்காயமன்கையிலும் சிக்காதவகளங்கர்
உச்சிதமாங்ககனத் துறைந்திருக்கின்றதேவர்
மெச்சும்நலமேயென்று மிகுந்தமகானுபாவர்

சேனதி

௩. மன்னுமாசர்பலர் மருவ - பாண்ட
வர்களுங்கிருஷ்ணனுமனம்வெருவ - மகா
வஞ்சச்சுயோதனனுளந் தேற - சொர்க்க
வாசவமரர்ஆசி கூறப் - புவி
தன்னிலுயர்துரோணர் கிருபரஸ்வத்தாமன்
சயிந்தவன்கன்னன்துச்சா தனனச்சகுனிமாமன்
சல்லியன்முதலாம்யா தவகுலசுதருக்கும்
சஞ்சத்தாறுபதா யிரம்ராட்சதருக்கும்
சதிராமித்தலத்திற் சமர்க்கேமிகக்களிக்கும்
பதினேரக்ரோணிக்கும் படைத்தலைவர்களுக்கும்

சேனதி

---

## வீஷ்ட்டுமர் கன்னனை அர்த்தரதனுக்கினதால் அவன் வீஷ்ட்டுமனைக் கோபித்தல்.

விருத்தம் ௬௬.

பதினோக்ரோணிக்குந்தானேசேனா
பதியானபீஷ்மரந்தவீரர்தம்மை
அதிரதர்மகாரதர்சமரதரர்த்த
ரதரென்வேநால்வகையாஅமைக்குமந்தத்
ததியினிற்கன்னனையர்த்தரதத்தோனகச்
சமைத்ததுகேட்டவன்வாளையுருவிக்கொண்டு
நதியளித்தோன்தலைதன்னைத்துணிப்பேனின்று
நானென்றான்இனிவிட்டிடேனென்றானே.

ரு ... ராகம்-பருசு-ஆதிதாளம்.

பல்லவி.

விடுவேனேவிடுவேனே - சும்மாவிடுவேனே

அநுபல்லவி.

விடுவேனேசுத்த வீரர்மதிக்குமெனை
வினையுடனர்த்தரத னெனுமந்தவீடுமனை-விடுவே

சரணங்கள்.

க. மட்டிலாப்புகழ்கொள்திசை யெட்டிலுமிருந்துவந்த
பட்டவர்த்தனர்முதலாய் கிட்டுமரசர்மனமுங்
கெட்டிடச்சொன்னஅவனை - வெட்டுகிறேன்தேள்கொட்டாமல்
விட்டிடிற்பிள்ளைபூச்சியாச் சுட்டுவாராகையினலே
விடுவேனே

உ. இக்கிழவனெந்நாளும் கக்கிஷமாளனையு
ரைத்தபோதேகொல்லாமல் மிக்கமனம்பொறுத்தேன்
அக்குறைபாலோடுவோ னைக்கண்டாற்றுரத்துவோ
னுக்கிளக்காரமென் றிசைக்குங்கதையாச்சினி
விடுவேனே

ங. தாரதம்மியம்பாராக் குரூரனவன்தலையை
யோரிமைப்பிற்றுணித்திப் பாரினிற்றள்ளாவிடில்
ஊரிலிளஸ்திபிள்ளையார் கோயிலாண்டியென்ற
காரியம்போலெனையினி யாருஞ்செய்வாரேளிதம்
விடுவேனே

---

கன்னன் உடைவாளை யுருவிக்கொண்டு வீஷ்ட்டுமரை
எதிர்த்தபோது அவரும் தன்வாளை யெடுத்துக்
கொண்டு கன்னனோ டெதிர்க்க துரியோதனன்
இடையில்வந்து தடுத்து இருவரது
கோபத்தையுந் தணித்தல்.

விருத்தம் சுள.

கன்னனுரைத்திவ்வாறுபீஷ்மன்மீது
கதிர்வாளையெடுத்தாக்ரமித்துச்சென்றான்
பன்னரியவீடுமனுங்கோபங்கொண்டு
பகருமுடைவாளேந்தியெதிரில்நேர்ந்தான்
என்னவனர்த்தங்கள்விளைவாமோவென்றே
யெவருமஞ்சினர்துரியோதனனடுங்கி
அன்னவர்கள்நடுவினிற்சென்றவர்கள்கோபம்
ஆற்றுவான்இருவரையும்போற்றுவானே.

௫௧. தரு-இராகம்-காபிரி-ஆதிதாளம்.

பல்லவி.

நீங்களேபகைத்தொரு-வருக்கொருவர்வெட்டுக்கு-நிற்பதுவெகுநேத்தி

அநுபல்லவி.

காங்கேயாகன்னுவந்தால் வாங்குவோந்தலையையென்று
கறுவுவோரைவிடுத்துக் கத்திகளையெடுத்து
நீங்களே

சரணங்கள்.

க. இழியும்போதேநீச்சானல் ஏறுவதெப்படி
எங்கெங்குநகைப்பதற் கிடமாகஇப்படி
முழுதுங்காற்றுமழையு மூண்டாற்போல்மென்மேலே
முதலிற்றிப்பட்டைக்காரன் முடிந்தகதையைப்போலே
நீங்களே

உ. முதலிற்கோணலாச்சினி முட்டவுங்கோணுதோ
முடுக்கரைக்கொன்றெனக்கு முடிசூட்டுவதுமீதோ
மதியில்மதித்துங்களை வணங்கிவந்தனஞ்செய்யும்
மன்னரேபழிப்பார்கை வாளைவையும்வையும்
நீங்களே

ங. மானமாயுங்கள்கண்போல் வளர்த்தீரெந்தனைநிசம்
மாற்றலரைக்கண்டுளம் மருண்டவர்கள்கைவசம்
கானிற்பச்சோந்தியைக் கண்டமயில்சீர்கெடக்
கண்ணையொப்பிப்பதுபோல் என்னையொப்பித்துவிட
நீங்களே

---

## அவர்கள் கோபந்தணிந்தபின்பு தருமராஜனைப்போல, துரியோதனனும் குருக்ஷேத்திரம்போய்ச்சேர பலராமர் தருமனிடத்திற்போய் இனி அரசாக்ஷி யுன்னதெனல்

விருத்தம் ௬௮.

பிரியமொடுபாவிசொலத்தணிந்தார்கன்னன்
பீஷ்மனிறந்திடுமுனமர்செய்யேனென்றான்
தருமன்குருக்ஷேத்திரஞ்சேர்ந்தாப்போற்றானுந்
தாய்தந்தையர்களிடத்தில்விடைகொண்டந்தத்
துரிதமொடுதுர்ச்சகுனந்தோன்றச்சென்று
துலங்குகுருக்ஷேத்திரம்போய்ச்சேர்ந்தானப்பால்
வருபலராமன்தருமனிடம்போய்ப்பாருன்
வசமென்றான்என்வார்த்தைநிசமென்றானே.

சுயி. தரு-இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்.

பல்லவி.

நிஜமிது தன்மராஜனே-உன்பெருமையே-நிலைத்திடுந்தன்மராஜனே.

அநுபல்லவி.

அசையாவரசரெல்லாம் அடுத்துன்பதமேகதி
யாகநம்புவார்நீயே யேகசக்கிராதிபதி
நிஜமிது

சரணங்கள்.

க. சுகிர்தகுணபொறுமை-சாலியென்றெவர்களுந்
துதித்திடப்பெய ரெடுத்தாய் - மேலும்
சகலதேவருமுனி-வோருஞ்செய்யும்ஆசீர்வா
தத்தின்பலனை யடுத்தாய்
அகிலத்திலேதெய்வ அருளுள்ளோர்க்கேதுப்பயம்
ஆதலாற்சொல்லுகிறேனெப் போதுந்தன்மமேஜெயம்
நிஜமிது

உ. கொடுங்கோல்மன்னனெனச்-சுயோதனன்மூவுலகுங்
குறிக்கப்பெயரெடுத் திட்டான் - பின்னும்
தடங்கலேதொன்றுமின்றித்-துஷ்டர்சொல்லுமந்திராலோ
சனைகளுக்குடன் பட்டான்
அடங்காத்தீயர்க்குஜெய மாகுவதுபிரயாசம்
அப்பாலவர்செய்தீமை தப்பாதுமோசநாசம்
நிஜமிது

ங. இப்புவியினிற்பங்கைக்-கொடுக்கேன்பாண்டவருடன்
எதிர்த்துச்செத்தாலுஞ் சாகிறேன் - எனஅப்பாவி
செப்பிவந்துமாய்வதைப்-பார்க்கமாட்டேன்தீர்த்தயாத்
திரையிதோநான் போகிறேன்
எப்படியும்அவனே இறந்தும்அடைவானிந்தை
என்றுஞ்செயிப்பாய்வெள்ளைக் கில்லைக்கள்ளச்சிந்தை
நிஜமிது

---

தருமராஜனிடத்து உத்திரவு பெற்றுக்கொண்டு பலராமர் விதுரனோடு தீர்த்தயாத்திரைக்குச்செல்ல, உருக்குமி யென்போன் அருச்சுனனைப்பார்த்து நானொருவனே துரியோதனனுடைய சேனைகளை நாசஞ்செய்து தருமராஜனுக்குப் பட்டந்தரிப்பேனெனல்.

விருத்தம் சுசு.

விடைகொண்டுபலராமன்தீர்த்தயாத்ரை
விதுரனொடுசென்றான்பின்துரியன்தன்ம

னிடமொருதூதனைவிடுத்தானவன்போய்வீர
மெடுத்துரைத்தான்கிருஷ்ணனதைக்கேட்டுவந்தோ
னுடுசெண்டைநாளையெனப்போகவிட்டான்
உருக்குமியென்போன்அர்ச்சுனனைப்பார்த்தந்தக்
கொடியவெதிரிகள்தம்மையோர்நொடிக்குள்
கொல்லுவான்போல்வெகுவாச்சொல்லுவானே.

சுக. தரு-இராகம்-கல்யாணி-சாப்புதாளம்.

பல்லவி.

எப்படியவரைச்செயிப்ப-தென்றெண்ணினல்-என்னுடன்சொல்லர்ச்சுனா.

அநுபல்லவி.

முப்புரந்தன்னைநெ ருப்புக்கிரைகொடுத்த
தர்ப்பரனையெனைத் தடுப்பனெவனவந்தாலும்
திப்பிரமையாகிப்ப றக்கப்புடைத்துனக்
கிப்பொழுதேஜெயம் தப்பாதளிக்கிறேன்
எப்படி

சரணங்கள்.

௧. இடமெங்குமில்லாமல்-கடகரிதேர்பரி
யுடனேகாலாளெனும்
படைகளதோ பெருங்
கடலெனவேயிரு-புடையுமருவவருங்
கெடிவீரர்தமைக் கண்டு
நடுநடுங்கிடவேண்டாம்படையுடனொரு
நொடியினிலேசென்று
துடிதுடித்திடக் கொன்று
வடமேருமீதிலுன்-கொடிநட்டுன்னண்ணனுக்குத்
திடமாகவேமணி
முடிசூட்டுகிறே னின்று
எப்படி

௨. பார்த்திபர்களதிக-க்ஷாத்திரமொடுதனு
சாத்திரமுறைப்படிதிவ்வி
யாஸ்திரங்க ளெடுத்துக்
கோத்துவிடும்போதுகண்-பூத்துமதிமயங்கித்
தோற்றுப்போய்விடுவோ மென்று
வாய்த்தநீயஞ்சினல்-நேத்தியாப்பாரென்சா
மார்த்தியத்தைவந்தோ
ராத்தியந்தமுங் கொடிய
கூற்றுவன்கைக்கொள்ளச்-சேர்த்துவிட்டுன்னைமும்
மூர்த்திகளுங்கொண்டாடக்
கீர்த்திவரச்செய் கின்றேன்
எப்படி.

௩. ஆயுமிப்படைகள்-காயமென்றசாம்பிர
தாயமன்னவரிங்கேதேனீள்
ஈயெனமொய்ப்ப தென்னத்
தீயினுமதிகமாய்ப்-பாயுமஸ்த்ரங்களென்ன
மாயன்தேரைவிடுவ தென்ன
தூயனேமகிழ்வுட-னீயிருஇப்பொழுது
சாயுமுன்னேயிதோ
போயெவரையுங் கொன்று
நாயும்நரியுங்கொடும்-பேயும்பூதமுந்தின்ன
வேயமர்செய்கிறேன்
வாயாலிங்குரைத் தென்ன
எப்படி

---

உருக்குமியென்பவனை அருச்சுனன்பார்த்து, துரியோதனன் இப்படிப்பட்ட பலவானைத்தேடுகிறான் அவனிடத்துச் செல்லென, அவன் தன்தேசமேபோய்விட திருதராட்டிரன் வியாசரை நினைக்க, அவர்வந்து அவனுக்குக் கண்கொடுக்க, பின்பு அவன் கண் வேண்டாமெனல்.

விருத்தம் எ௰.

பெருமைசொலுமுருக்குமியைப்பார்த்தன்பார்த்துப்
பேய்த்துரியோதனன்பலவான்தன்னைத்தேடித்
திரிகின்றானவனிடம்போவென்றானன்னோன்
தேசமேபோய்விட்டான்திரிதராட்ரன்
கருதிடவேவியாசர்வந்துவிசனந்தீரக்
கண்கொடுத்தார்அவன்சகலமும்பார்த்தையா
அரியவிழியின்றியிருப்பதுவேநன்மை
யாமென்றான்இவ்விழிவேண்டாமென்றானே.

௬உ. தரு-இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏன்விணைக்கண்கொடுத்திர்இன்று - முன்போல்
இருக்கச்செய்தால் அதுவேநன்று

அநுபல்லவி

வானும்புகழ்வியாசரே வன்குருடாய்மண்மீது
வாலிபங்கெட்டுச்சாக வழிபார்த்திருக்கும்போது
ஏன்

சரணங்கள்.

க. இமைக்கும்விழியிச்சையை யினிமேல்நான்பாராட்டேன்
எத்தனைபேர்சொல்லியும் ஏற்காமல்தள்ளிப்போட்டேன்
உமைப்போல்நல்லோர்வாயால் உறுதிகள்மிகக்கேட்டேன்
உள்ளதைப்பிள்ளைக்கோதி ஒருக்காலும்வெல்லமாட்டேன்
ஏன்

உ. நின்சொல்லும்ஏறுமல் நித்தம்வசனுவிக்கு
நிகர்த்தோர்சொல்லேசரியாய் நின்றுகொண்டகோபிக்கு
என்செய்வேன்தானேதீங்கைத் தேடினன்தன்னுவிக்கு
என்றுஞ்சுகமில்லாத இந்தக்கொடும்பாவிக்கு
ஏன்

ங. பாரிலிதுவரைக்கும் பலவிதம்பாவத்தைப்
பாராமலேகழித்தேன் பக்குவமாய்க்காலத்தை
நேரிலென்பிள்ளைக்கு நேர்ந்திருக்கின்றதத்தை
நினைக்கும்பொழுதில்முற்றும் வருத்துதென்றன்உள்ளத்தை
ஏன்

---

வியாசர் திருதராட்டிரனுக்கு முன்போல கண்ணில்லாமற்
செய்து சஞ்சயனை திருதராட்டிரனுக்கு போரில்நடக்
குங்காரியங்களை யறிந்துசொல்ல வரங்கொடுத்து
அவரகன்றபின்பு அருச்சுனன் தேரேறி யுத்த
களத்தில்வந்து இவர்களைக் கொல்லுதல்
பாவமென்று கையிலிருந்தவில்லை
நழுகவிட அதனை மாயன்
கண்டு அருச்சுனு
பயந்தாயோ
வெனல்.

விருத்தம் ஏக.

விழியைமுன்போற்செய்துமுனிவேந்தனுக்கு
வெம்போரின்செயலினைச்சஞ்சயன்கண்டோத
அழிவில்வரங்கொடுத்தகன்றன்குருக்ஷேத்ரத்தின்
அளவினைச்சஞ்சயனுரைத்தாங்குறுதல்சொல்ல
பழுதறநோக்கிடும்போதுநடுப்படைக்குட்
பார்த்தனின்றிவரைக்கொல்லல்பாவமென்று
நழுவவில்லைவிடுத்தயர்ந்தான்மால்பார்த்தர்ச்சு
னுவென்றன்ஏன்பயந்தாயோவென்றனே.

சஅங. தரு-இராகம்-பைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

பயந்தாயோஅர்ச்சுனு - ஓகோநீயேன்
பயந்தாயோஅர்ச்சுனு

அநுபல்லவி.

பயந்தாயோகன்னன்நாக பாசங்கொள்வானென்று
பாம்பென்ருற்படையும் நடுங்குமாகையினுலே
பயந்தாயோ

சரணங்கள்.

க. ககனத்திலிருக்கும் அந்த - இந்திரனுங்
களித்திடவாழ்வு தந்த - உன்தனக்குப்
பகையாளியா அமைந்த - தூரியனுக்குப்
படைத்துணையா வந்த - வீரருக்குள்
சகசமாப்பாதலந் தனிலிருந்தமருக்குத்
தாட்டியாவந்தசஞ் சத்தராட்சதருக்கும்
பயந்தாயோ

உ. மன்னவனைச் சாரும் - துணையாக
வந்தபாட்ட ருரும் - வில்லின்வித்தை
சொன்னகுருக்கள் மாரும் - பின்னும்இங்கு
தோன்றியஎல் லோரும் - கறுவுதற்கும்
உன்னோடுபோரிட்ட உயர்சாம்பசிவனுக்கே
உகந்தபத்தனுய்வாம் உறுஞ்சயிந்தவனுக்கும்
பயந்தாயோ

ந. அண்டொணச்சபை கூடி - இருக்குமள
வற்றகோடானு கோடி - வேந்தர்களும்
கண்டிடமிக வாடி - நீங்கள்நிற்கக்
கபடமார்க்கு தாடி - வென்றவரைச்
சண்டையில்வெல்வேனென்று சபதஞ்செய்தமருக்குச்
சந்தோஷமாயிப்போது வந்தநீஉயிருக்குப்
பயந்தாயோ

---

## கிருஷ்ணனைப்பார்த்து அருச்சுனன் பீஷ்மர்முதலிய பெரிய வாளைக் கொல்லல் பாவமென்றஞ்சினேனெனல்.

விருத்தம் எஉ.

அற்புதமாகச்சொல்லும்-அரிசொல்லைப்பார்த்தன்கேட்டுச்
சொற்பிசகாமற்பீஷ்மர்-துரோணாதியர்அங்குள்ள
விற்படைஞரையிம்மண்ணின்-மேலாசையாலேகொல்ல
நிற்பதுபவமென்றெண்ணி-னேனென்ருன்நானென்றுனே.

கூச. தரு-இராகம்-சௌராஷ்டகம்-சாப்புதாளம்.

பல்லவி.

நாமேன்இத்தனைபேரைக் - கொல்லத்துணிந்தோமென்று-நான்மனஞ்சோர்ந் [தேனையா

அநுபல்லவி.

போமேநம்முயிரென்ற பயமில்லையதைவிட்டுப்
போடும்இந்தப்பாழும் பூமிக்காசைப்பட்டு
நாமே

சரணங்கள்.

க. அனித்தியமாம்உலகில்-க்ஷணபங்கமானகா
யத்தினில்லையைத் தெரிந்து - மன்ன
ரானோர்தவம்விரதம் - அரியயாகம்முத
லாஞ்சற்கிர்த்தியம் புரிந்து
கனத்தவறிவினால்துஷ் கர்மங்கள்தனைப்பரி
கரிப்பார்கள்அதைவிட்டுக் காலன்போலரிகரி
நாமே

உ. இந்தமண்ணுக்காகச்-சண்டைசெய்தால்மாள்வா
ரிவ்விருதாத் தோரும் - அப்பால்
என்னுயிரிருக்குமோ - யிருந்தாலும்பழிபாவம்
என்றென்றைக்கும் நேரும்
அந்தப்பாவமான வஞ்ஞானத்தால்மதி
அழிந்துபோயடைவோமே ஐயோவதோகதி
நாமே

௩. கந்தமூலத்தைக்காயைக்-கனியைச்சருகுகளைக்
காற்றையினிதாப் பொசித்து - மயக்
கத்தைநீக்கித்திடச்-சித்தனாகியருங்
காட்டினிற்போய் வசித்து
நந்தகோபாலாச ஞர்த்தனவெனத்துதி
நாளுஞ்செய்தோமானாலும் ஆளலாம்பரகதி
நாமே

---

உத்தியோகபர்வம் - முற்றிற்று.

—(*)—

உத்தியோகபர்வத்தில்-விருத்தம்-எஉ. தருக்கள்-கூச. திபதைகள்-ச.
கட்டளைக்கலிப்பா-க. ஆ ாசயிக.

---

பாயிரம்-க-க்கும், பர்வம்-ரு-க்கும், கூடிய-வெண்பா-௩. கலித்துறை-௩.
கொச்சகம்-ச. கட்டளைக்கலிப்பா-க. விருத்தம்-உாகூ௰.
தருக்கள்-ாகூ௰அ. திபதைகள்-ச௰க. ஆ ருாச௰.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஆறுவது

# வீஷ்டுமபர்வம்.



## கண்ணன் துதி.

சந்தவிருத்தம்-க.

அரவணையொன்றுங் கருமுகிலென்று மறிவாளர்
உரைசெயவென்றுஞ் சுருதிவழங்கும் ஒளியான
திருமகடங்கும் படிவமிலங்கும் ஜயவீமன்
பரவியசந்தங் குலவுசரண்கண் பணிவோமே.

(*)

## கிருஷ்ணன் அருச்சுனனைத் தழுவிக்கொண்டு அவனுக்கு வேதகீதையை போதித்தல்.

விருத்தம் உ.

முனைமுகத்திற்பார்த்தனிவைசொல்லக்கேட்டு
மூவருங்காணருநமதுபெரியமாயை
தனையிவனேவறிபவனென்றுளத்திலெண்ணித்
தனஞ்சயனைத்தானிறுகத்தழுவிக்கொண்டு
தினையளவுமஞ்சாதேயானன்பாகச்
செப்புமொழிதனைக்கேளென்றந்தவீரன்
மனதிருளைவேதகீதத்தையோதி
மாற்றுவான்உலகினையீடேற்றுவானே.

# பகவத்கீதை.

க. தரு-இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

தெரிந்துகொள்ளர்ச்சுனா-இதுமகாரகசியம்-சிந்தையில்வனினம்பயம்.

அநுபல்லவி.

வரும்பகைவருமில்லை
மக்களுமில்லைமுன்னே
விறலாண்மைகுறைந்துசா
வெல்வாருமில்லைமேலாச்

மித்துருக்களுமில்லை
வந்தோர்களுமில்லை
வாருமில்லைவிதியை
சொல்வாரிச்சங்கதியை

தெரிந்து

சரணங்கள்

க. பொருளுக்கெல்லாம்பழைய-பொருளைநித்தியத்துவத்தைப்
பொருந்தியெங்குமிருப் பதைப் - பரி
பூரணத்தையொப்பற்ற-தன்மையுடையதையைம்
புலனாலறிவரி யதை
அருவுருவானதை-அந்தமின்றிநிற்பதை
அறியாமலேயுத்தத் திலே - நிலை
அழிந்துபோகுமென-யெப்படிநினைத்தாய்சொல்
லாயுனதுமன திலே
கருதுமதுவடவைக் கனலாலும்வேகாது
கடலாலும்புரளாது காற்றாலுஞ்சாகாது
எரியிடிக்குமஞ்சாதிவ் வியல்புள்ளதுவாடுமோ
எப்படியதைப்படையால் வெட்டிக்கொல்லக்கூடுமோ
தெரிந்து

உ. ஒருவன்பழங்கந்தையை-யொழித்துப்புதுக்கலையை
யுடுப்பதுபோல்மண் மீது - இந்த
உடல்போனால்மற்றொருட-லினிற்சேருமல்லாலுண்மைக்
கொருக்காலுமழி வேது
அருவினைப்பயனுற்ற-வுடலுக்கல்லாமலாத்மா
அடையுமோவொரு தூறும் - அந்த
ஆத்மாக்கடங்கள்தோறும்-தங்குங்கதிர்போல்நிற்கும்
ஆகுமுடலந் தோறும்
வெருவித்தன்செயலற்றால் வினையணுகாதென்பதம்
மேவுவார்யாரும்புவி மீதிலெல்லாங்கற்பிதம்
பரமொன்றேநித்திய மென்றுணர்ந்தாலப்போது
பாவபுண்ணியமென்ற வாவுங்குற்றந்தோன்றாது
தெரிந்து

ந. அரியமுக்குணத்தோடும்-அறுவகைப்பயன்களை
அடைந்துதுயிலும் போது - மறை
வாகிவிழித்தபோது-தோன்றும்அறிவையறிந்
தவரறிஞர்மண் மீது
உரமாயின்னமுஞ்சொல்வே-னுயிர்தோறும்பாலில்நெய்போல்
உறைந்திருக்கின்றோ னொருத்தன் - அவன்
ஒருவன்செயலலாமல்-வேறொருசெயலில்லை
உலகுக்கவனே கருத்தன்
திரமானும்போர்செய்கின்றோ மென்பதைத்தள்ளிப்போட்டுச்
சிந்தைமகிழ்ந்திரெல்லாம் அவன்திருவிளையாட்டு

வரத்தக்கதையொருவ ராலுந்தள்ளக்கூடாது
வாராத்தைவருந்தினு லும்வந்துநாடாது
தெரிந்து

ச. காலம்இடங்கருவி-யுடல்பூமியிவைகர்த்தன்
கட்டளைப்படி யேற்கும் - வேறே
கனவிலும்அவையெல்லாந் - தலைகீழாகநின்று
கதறினும் யார்க்கும்
மேலாஞ்சமர்முகத்தில்-ஒருவன்தன்பலத்தினல்
வெற்றிகொள்ள லாகுமோ - நீ
வீணய்மயங்காதேயோர்-சிறுமசகமுந்தலை
விதிகிழியாமற் சாகுமோ
சீலமாஅன்றுநீங்கள் செப்பியபடியுத்தம்
செய்யாவிடில்நரகத் தீயில்மெலிவீர்சித்தம்
மூலமறிந்துசண்டை செய்தாலிந்தராச்சியம்
முழுதும்பெற்றுப்பெறுவீ ரழிவில்மோட்சசாம்பிராச்சியம்
தெரிந்து

ரு. விதியாகஇன்னமுஞ்-சொல்லுகிறேன்பிரம்மாவும்
விஷ்ணுவெனுஞ்சுந் திரனும் - அயில்
வேலாயுதனுந்தேவேந்-திரனும்உயிர்கள்தோறும்
வீற்றிருக்கின்ற பரனும்
இதங்கொள்முனிவர்களும்-எண்டிசைப்பாலர்களும்
இயல்மதிகதி ரோனும் - பின்னும்
எத்தகையோரெத்தகை-எனினுமெத்தகையவ
ரெதிராகியருள் வோனும்
முதிர்முத்தொழிலொடுமுக் குணத்தையுங்கடந்திடும்
மூலப்பொருளாமறை முடிவினில்நடமிடும்
அதுல்சாக்ஷாத்கார பிரமமும்நானென்சித்தை
அறிந்தோராருனக்குநான் அறிவித்தேனிந்நிசத்தை
தெரிந்து

---

கிருஷ்ணனைப்பார்த்து அருச்சுனன் எல்லா நீயாயிருக்குங் கோலத்தைக் காட்டென, அவன் அவனுக்குமாத்திரந் தோன்றக்காட்டிப் பின்பு நீ கண்டதைச் சொல்லென, அவன் சொல்லல்.

விருத்தம் ரு.

பகவனிதுசொலக்கிரீடியெல்லாம்நீயாய்
பதிந்திருக்குந்திருக்கோலமடியேன்காண

வகையுடன்காட்டெனவன்னேன்மாத்ரங்கண்டு
மகிழவிஸ்வரூபமெடுத்துலகிலுள்ள
சகலமுங்காண்பித்துமுன்போலாயன்னுன்வ
தனம்நோக்கிநீகண்டதெனச்சொல்லென்ன
அகங்குழையப்பணிந்தெதிர்நின்றுநந்தக்கூத்
தாடினன்அன்னவன்கொண்டாடினனே.

௨. தரு-இராகம்-சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

ஆண்டவனேயுன்மகிமை யைச்சொலவும்பாத்திரம்
ஆதிசேஷனுமலவென்றுலிந்த-வடிமையெம்மாத்திரம்

அநுபல்லவி.

வேண்டிக்குஞ்சர மிகவேயார்த்து
விள்ளுங்குறையைச் செவியிலேற்று
மேனி கசங்க
வானும் அசங்க
வேகத் துடனேவந்த
நாகத் துயிரைத்தந்த
ஆண்டவனே

சரணங்கள்.

௧. முந்துநின்திரு-வுருவிலோர்புறம் முனிவர்மேவவும் - இந்த
மூவுலகருள் பிரமனோர்புற முயன்றுதாவவும்
இந்திரையுடன் மாலோர்புறத் தினிதுலாவவும் - அந்த
இமையவரொரு புரத்தில்மலர்க ளெடுத்துத்தூவவும்
சந்திரசேகர னடியருன்னவும்
சக்த்தியீசனோர் புறத்திற்றுன்னவும்
தங்க பார
சங்கை தீர
தனித்தனி விழியிற்கண்டேன்
மனத்துய சொழியக்கொண்டேன்
ஆண்டவனே

௨. திகழ்சரவண பவனுடன்தேவேந் திரனையுங்கண்டேன் - தயித்
தியர்களும்சரா சரப்பொருள்களும் -திருந்திடக்கண்டேன்
சகலசாஸ்திரம் வேதமுபனிட தத்தையுங்கண்டேன் - முறை
தவறுமுக்குணமுத்தொழில்நடத்துஞ்சாக்ஷியைக்கண்டேன்
அகங்கொண்டோன்படைத் துணையானேரையும்
அடுத்தெம்முடனே வந்தபேரையும்
அந்த மிகுந்த
தொந்தி பொருந்த

அருந்திட நன்றாகக்கண்டேன்
பெருந்துய ரின்றேவிண்டேன்
ஆண்டவனே

ரு. மகுடகுண்டலத்துடன் அனந்த வதனங்களிலங்க - ரத்தின
மயகேயூரக்கரங்கள் அனந்தம் வரிசையாயிலங்க
பகர்கண்ணனந்தம்விளங்க முச்சகம் பயங்கொண்டுகலங்க-அண்டப்
படலங்கிழித் தப்புறத்துமோங்கும் படிவமுந்துலங்க
தருமனந்தஞ்செயல் பரிமளிக்கத்
தான்கண்டேனென்றன் இருகண்களிக்கச்
சவலம் போச்சுச்
சுபமுண் டாச்சுத்
தாண்டவ பதயுகநாளும்
பாண்டவர் நலமுறஆளும்
ஆண்டவனே

---

## அருச்சுனன் தான் கண்டதைச் சொல்ல, இதை வெளிவிடா தேயென்று சொல்லி, நீயுநானும் யுகந்தோறும் வந்த விவரங்களைச் சொல்லல்.

விருத்தம் ச.

விஜயனிவ்வாறுகண்ட-விதமெலாஞ்சொலக்கேட்டன்பால்
அசைவில்தன்கிருபைபூண்டிவ்-வவனிமேலாசர்நீதி
பிசகவேண்டாமென்றோதிப்-பெருஞ்சமர்புரியவன்னோன்
இசையவேகருடன்மீதில்-ஏறுவான்கூறுவானே.

ரு. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

இனிமேலாகிலுந்திடச்-சித்தங்கொள்ளர்ச்சுனா-இனியபாண்டுநந்தனா

அநுபல்லவி.

மனதில்வைநீகண்டதை வெளிவிடாதேமண்மேலே
வாரணங்களைக்கொல்லும் வீரசிங்கத்தைப்போலே
இனிமே

சரணங்கள்

க. பேதமற்றநீங்க-ளைந்துபேர்மாத்ரந்தான்
பிழைப்பீர்களில்லை பயம் - மற்றப்
பேரெல்லாம்பேரூற்று-அடியுடனேசெத்துப்
போவார்களிதுநிச் சயம்

ரு.ச

ஆதலாலிதையெண்ண வேண்டாமனந்துடிக்க
ஆதிசேஷன்றன்னாலும் ஆகாதகைப்படிக்க
ஓதும்பூபாரம்நீங்கிச் சாதுக்களோநடிக்க
ஊரமாநாம்வந்தகார்யம் குறைவில்லாமல்முடிக்க
இனிமே

உ. ஆசையற்றுனைப்பிரி-யேன்பிரிந்துநாரா
ராயணர்களாகப் பிறந்தோம் - பின்பு
அனந்தநாள்கழித்து-ராமலட்சுமணராகி
அவதரித்ததை மறந்தோம்
மாசிலிப்பிறப்பில்கிருஷ் ணார்ச்சுனராேனமிதை
வரிசையாய்ச்சொல்வோமென்றால் வளரும்பெரியகதை
காசிக்குப்போய்க்காவடி கொணர்ந்ததேகாரியமதைக்
கருத்திலெண்ணியுனக்குச் சுருக்கிச்சொன்னேனுள்ளதை
இனிமே

ஙு. பெரியமறைமுடிவின்-வித்தாகியெங்கெங்கும்
பிரிவற்றிருக்கும் ஆகி - பரப்
பிரமம்நான்தானென்று-விபரமாகஉனக்கென்
பெருமையனைத்தும் ஓதி
அரியவென்ரூபத்தையுங் காட்டிநானேபிரிய
மாயுன்னருகினிற்கின் றேனேயார்க்குந்தெரிய
திருகென்னமூன்றுலோகத் தினிலுமுன்சீர்விரிய
செருமுகத்தினிலேநின் றரியசமர்புரிய
இனிமே

---

தருமராஜன் போர்க்களத்தில் வீஷ்ட்டுமர்முதலிய பெரியோரைக்கண்டு நாயரசாளும்பொருட்டு இவர்களை எவ்வாறு வெல்லுதலெனல்.

விருத்தம் ரு.

அரிசொலக்கேட்டர்ச்சுனனுன்மயக்கநீங்கி
அமர்செயச்சம்மதித்தானப்புறத்திருந்த
தருமன்முற்றிலும்நெருங்கியிருக்குஞ்சேனை
தனையும்வேந்தர்கள்கூட்டந்தனையும்பார்த்துப்
பெருமலைபோல்தன்னெதிர்வில்லேந்திநிற்கும்
பீஷ்மர்முதற்பெரியோரைப்பார்த்தையோயிக்
குரவர்களையெந்தவிதங்கொல்வோமென்று
குழைகினானுண்ணடுங்கிமறுகினானே.

ச. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

என்னயோசனைசெய்தோம் - அரிகரிநாம்
என்னயோசனைசெய்தோம்

அநுபல்லவி.

பின்னமில்லாதநல்லோர் பெரியோர்மனம்எரிய
பிள்ளைவிளையாட்டாகப் பேசிச்சமர்புரிய
என்ன

சரணங்கள்.

க. நினைவேகொள்ளக்கூடாது பீஷ்மர்தம்மைக்கொல்ல
நினைத்தாலும்யாராலே யாரும்அவரைவெல்ல
அனல்கொள்பாலநேத்திர னாலுமாமோஆகாதே
அப்பால்யார் புவிமீது
சனிபிடித்தநமது குலத்தைநாமேஒடுக்கச்
சார்ந்தோரையெல்லாமவர் சாத்துக்கிரைகொடுக்க
இனியில்லாத்துன்பங்கள் எல்லாம்வந்தடுக்க
எவருங்கடுகடுக்க வெகுகுடியைக்கெடுக்க
என்ன

உ. அகிலகுருவைவெல்வோம் என்றார்கட்டுவார்கச்சை
அனைவர்க்கும்வில்வித்தை யவர்பார்த்திட்டபிச்சை
பகைவர்பாலவர்சேர்ந் திருக்கநாம்துரைத்தனம்
பண்ணுவதினி சொர்ப்பனம்
மகுடஅஸ்வத்தாமன் வலியுந்தள்ளிப்போட்டு
வந்தோம்அவன்முன்செல்லு மாதம்பிமார்நீட்டு
இகல்கொண்டவனெதிர்த்தால் எமபுரத்துக்குச்சீட்டு
எவர்க்குந்தருவான்கூட்டும் இவர்கள்பேச்சைக்கேட்டு
என்ன

ங. மடிப்பணம்போய்த்தெருச் சண்டையிழுக்கவது
வாய்ந்ததுபோலாச்சு மாயன்போனதூது
முடக்கைவிட்டுமூலையில் இருந்தாலொருபட்ட
மும்மில்லைஇலை நஷ்டம்
தடிக்குமிஞ்சினமொட்டா வென்னுந்தம்பிமாரைச்
சார்ந்தால்கெடுத்தார்கள் தருமனென்னும்பேரைக்
கொடியவனத்திற்கேகி னுங்கூழைத்தண்ணீரைக்
குடித்துக்காணலாஞ்சீரைக் கொண்டமாதவத்தோரை
என்ன

தருமராஜன் தேரைவிட்டிறங்கிக் கிருஷ்ணபகவானிடம் வந்து பாட்டனூர் ஆசாரியர்முதலிய பெரியோரை எவ்வாறு வெல்லத்துணிவதென அவர் அவரையிட்டுக்கொண்டு வீஷ்ட்டுமரிடத்திற் சென்று இவர் கருத்தைச் சொல்ல, அதற்கவர் நியாயஞ்சொல்லல்.

விருத்தம் சு.

அரசனிவையெண்ணித்தேரிறங்கித்தம்பி
யர்களுடன்மாலிடஞ்சேர்ந்துதன்னினைப்பை
உரைசெயக்கேட்டிதற்கவர்களேவுபாய
முரைப்பரவரிடஞ்செல்வோம்வாருமென்று
வரிசையுடன்கூட்டிப்போயிதனைச்சொன்ன
வாதனைப்பார்த்தடல்பீஷ்மன்வையமெல்லாம்
சாசகுணத்தருமனுள்வானென்சொல்நிச்
சயமென்றுனைவருக்கேஜெயமென்றனே.

ரு. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

தருமாராஜனுக்குச்-செயம்வரயென்னசம்-சயமிதுவோவதிசயம்

அநுபல்லவி.

குருவென்னநானென்ன இருவரும்ஓர்கிரணங்
கொடியோரைக்கொல்லக்கட்டிக் கொண்டுவீரகங்கணம்
நிருமித்தகாரியத்தை நிறைவேற்றப்புவிமீது
நிஜமாகஐயனே நீபாடுபடும்போது

தரும

சரணங்கள்.

க. கோனேயாயிரம்புற்றுக்-கிடுவையேமருந்தென்னைக்
கொல்லத்தெரியாதோஉ பாயம் - அந்தக்
குற்றம்நமக்கேனவன்-கையைக்கொண்டவன்கண்ணைக்
குத்தலாமென்றுசெய்தாய் மாயம்
ஆனாற்சொல்கிறேன்பத்தா-நாள்சிகண்டியையென்னே
ராய்க்காட்டினுலுண்டோர்நி யாயம் - கையில்
ஆயுதங்களைத்தொடேன்-அப்போதர்ச்சுனன்விடும்
அம்பால்விழுமேயென்றன் காயம்
ஊனமாயென்னுடலும் ஒருகுருவின்சள்ளை
யும்போனாலப்பாலிவ ரோங்கியிட்டதேகொள்ளை
ஏனென்றுகேட்பாரில்லை யேதோசூரியன்பிள்ளை
எதிர்த்தாலடக்கப்பார்த்தன் இருக்கிறானவன்துள்ளை

தரும

௨. உவகையால்நான்சொன்னதுங்-குருசொன்னதும்போகட்டும்
உயர்வாம்நீசொல்லியுந் திணை - அள
வும்மனதிலெண்ணும்ல்-உனையேகுழியிற்பாச்ச
ஓகோசெய்துசற் பனை
எவ்வளவுந்தன்னிலையை-யெண்ணுமற்றுள்ளுங்கன்னன்
இசைக்கின்றவஞ்சனை தனைக் - கூத்துக்
கேற்றப்பந்தம்பிடிக்குஞ்-சகுனிபோதனைதனை
யேநம்பும்பாத கனை
அவன்தம்பிகளையவர்க் காகவருமன்பதை
அனைத்தினையுமுயிர்போம் அளவும்செய்துவதை
கவலையற்றுக்கூளிகா கழுங்குத்திக்குத்திச்சதை
களையுண்ணும்படியூட்டக் காக்குதேவிமன்கதை
தரும

௩. அலக்கழித்துச்சத்துருக்-களைக்கொல்வோமென்றதம்பி
யரைப்பார்த்திதென்னஆ வேசம் - எளி
யாரைவலியாரடித்-தால்வலியாரைத்தெய்வம்
அடிக்கும்நாம்செய்வானேன் நாசம்
கலப்பால்கறக்கலாங்-துளிப்பாலேற்றலாமோ
கவிழ்த்துப்போடுவதாபிர யாசம் - அது
காரியமல்லஇன்னம்-பொறுப்பதேகார்யமொருக்
காலுந்தர்ம்மத்துக்கில்லை மோசம்
சலத்தைவிட்டுவிடுங்கோ ளென்றையோர்தன்மானத்
தாழ்ச்சியையும்பாராமல் சாற்றியுனதுஞான
மலர்ப்பதத்தையெந்நாளும் மனதிற்கொண்டுபிரதான
வானுந்துதிசெயும கானுபாவனுன
தரும

---

## பின்பு திருமால் துரோணச்சாரியரிடத்தி லிவரையிட்டுக் கொண்டுபோக அவர் சொல்லுதல்.

விருத்தம் எ.

தவமிருந்தபீஷ்மனிவைசொல்லவன்னேன்
றுள்வணங்கிநின்றிடுபாண்டவர்கள்தம்மைப்
புவனகுருதன்னிடத்திற்கழைத்துப்போயிப்
போர்முகத்தில்நீரேவில்லேந்திநின்றால்
சிவனெதிர்க்கவுந்தாமோஇவர்தமக்குச்
செயம்வரச்செய்வதுநினதுகடமையென்றான்
அவனியுண்டோன்றனைநோக்கித்துரோணரன்பை
அடுக்கின்றுருண்மைசொல்லத்தொடுக்கின்றுரே.

சு. தரு-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

எல்லாமுனதுசெயல்-வேறொருசெயலேது-எம்பிரானேமண்மீது

அநுபல்லவி.

கொல்லவோர்வகையறி யாதவன்போலேமாற்றி
குள்ளனைக்கொண்டாழம்பார்க்க மெள்ளவந்தாயேநேத்தி
எல்லா

சரணங்கள்.

க. இந்தத்தருமனெனக்-கெதிரில்நின்றுன்பிள்ளை
யிறந்தானென்றுரைத்தால்மண் மேலே - வில்லை
எறிந்துப்போட்டிப்பிரபஞ்-சத்தையெல்லாமறந்
திருப்பேனுன்மாம் போலே
அந்தவேளைதிஷ்டத் துய்மன்பெற்றிடுவாம்
அதனாலெமன்போலெதிர் அடுத்துக்கொண்டேயுரம்
சுந்தரமானநெடும் வில்லைவளைத்துச்சாந்
தொடுப்பானச்சரத்தினால் துணிபடுமென்சிரம்
எல்லா

உ. இரண்டுமூன்றுபேர்நாங்களிங்கேதலையாட்டிக்கொண்
டிருந்தோமெங்கள் வேலையும் - நிறை
வேற்றிப்போட்டாயினியெல்லோர்க்குமெமபுரத்
திருந்தின்றேவரும் ஓலையும்
முரண்டுசெய்யுந்துஷ்டர்க் கினிமேலடங்குங்கொட்டம்
முச்சகத்திலும்எவர் இவர்பார்த்திட்டதேசட்டம்
அரண்டபாண்டவர்கள் அனுபவித்தகட்டம்
அனைத்தும்போய்த்தருமனே யாளப்போகிறான்பட்டம்
எல்லா

ரு. கருங்கல்லுக்குள்ளிருக்குந்-தேரைக்குங்கருப்பைக்குள்
காணுமுட்டைக்குமென் மேலே - தனு
கரணபுவனபோ-கத்தினோடெச்செயலுங்
கலந்துவந்ததா ராலே
விரிந்தமறைகளாலுஞ் சொல்லொணாமலர்ப்பாதா
வேறில்லாமல்எங்கும் விளங்கும்பஞ்சபூதா
திருந்துநான்முகப்பிரம்ம தேவனைத்தந்தநாதா
செங்கமலத்தில்வாழும் எங்கள்லட்சுமிசமேதா
எல்லா

## முதல்நாள்.
## இருவர் படையுங் கலந்து போர்செயல்.

விருத்தம் அ.

குருவிவ்வாறுரைத்துவிடைகொடுக்கவெற்றி
கொளுந்தம்பிமாருடன்றன்படையிற்சேர்ந்த
தருமனுரையாலுஞ்சுயோதனன்சொலாலுந்
தங்கியதோரிருபடையுங்குருக்ஷேத்ரத்தில்
ஒருவரெதிரொருவராயுதங்கள்வீசி
யுக்ரமொடுவளைந்துகொண்டார்தேர்மேல்நின்ற
நிருபருமவ்வாறுவில்லைவளைத்துக்கொண்டு
நேரிட்டார்புவிநடுங்கப்போரிட்டாரே.

எ. தரு-இராகம்-புன்னுகவாளி-ஆதிதாளம்.

பல்லவி.

மூண்டுகொண்டதேசண்டை - முதல்நாளிலே
மூண்டுகொண்டதேசண்டை

அநுபல்லவி.

பாண்டுபுத்ரனும்பாம்பின் கொடியோனுந்தங்கள்தாசிப்
படைகளையுக்ரமுடன் பார்த்துக்கைகளைவீசிப்
பண்ணுவீர்யுத்தமென் றூர்சொன்னவுடனூர்ப்
பரித்தெவர்களுஞ்சென் றூர்சமுத்திரமிரு
பங்காப்பிரிந்துமறு படியுமொன்றானைப்போலே
பலரும்நெருங்கியேகை கலந்திடமென்மேலே
மூண்டு

சரணங்கள்.

க. இரதக்கார ருடனே யிரதக்காரர்களும்
யானைக்கார ருடனே யானைக்காரர்களும்
புரவிக்கார ருடனே புரவிக்காரர்களும்
போர்ச்சேவகருடனே போர்ச்சேவகர்களும்
பரவவாள்பிடித்தோ ருடன் வாள்பிடித்தோரும்
பற்பலவாயுதத்தா ருடன் ஆயுதத்தாரும்
வரிசைப்பட்டவர்த்தனருடன் பட்டவர்த்தனரும்
மகுடவர்த்தன ருடன் மகுடவர்த்தனரும்
மாமண்டலீக ருடன் மாமண்டலீகரும்
மறித்துக்கொண்டார்கள்பால் மருண்டிடவெவர்களும்
அருச்சுனனும் பீஷ்மனும் - உயர்ந்தவில்
லாளிகளானநிருவிருவோர்களும்
ஆளிகளாமென வேயமர் வாய்ந்தார்

அடல்வீமன் சுயோதனனும் - மத
யானைகளாமென வேலெநெடுதோள்வளர்
நீள்பகையால்முனி வாலெதிர் பாய்ந்தார்

அறத்தின்மகனுஞ் சல்லியனும் - சொல்லும்
அந்தரமுந்தரை யுந்திசையுந்துயர்
முந்தநெருங்கி முனைந்தெதிர் காய்ந்தார்

அரும்பரியூர் நகுலனும் - முன்னே
அந்தமழிந்த சயிந்தவனுந்தண
னுந்தணனுந்தொ டருந்தகை தோய்ந்தார்

தருக்குஞ் சகாதேவனும் - வெகு
சாதனையேபுரி சூதுடையோனென
மேதினியோர்புகல் சூரனும் நேர்ந்தார்

தவசுநிறை சிவேதனும்-யாதொரு
தடையறவுபர்சபை யினினுடையுரிதரு
கொடியனுமிகுசின முடனிகல் சார்ந்தார்

சமர்த்தனுந் திட்டத்துய்மனும் - வில்லைச்
சார்குருவும்பகர் மேருவெனும்படி
பார்வெருவும்படி தேர்களை யூர்ந்தார்

தளர்ந்திடா விலக்கணனும் - அபிமனும்
தாரணிமிசையிரு சூரியரெனவதி
கோரவமர்புரிய வீறுடு சேர்ந்தார்

பொருதுவிராடனும் பூரியென்பவன்தானும்
புஜபலசாத்தகியும் பூரிசிராவென்போனும்
சரதசந்தனுவுமாச் சரிபவுக்ரவேகனும்
தனுகுந்திபோஜனும்பிர சண்டவஸ்வத்தாமனும்
ஒருவர்க்கொருவரெதிர்த் தார்கள்படைகள்நாலும்
ஒங்கிநெருப்புங்காற்றும் ஒன்றாய்ச்சேர்ந்ததுபோலும்

முண்டு

உ. கெடிகொள்கடோர்க்கஜ னுடனேபகதத்தன்
கிளைத்தபாஞ்சால னுடனேகலிங்கத்தன்
கிருதபன்ம னுடனே கேகயனும்பிரசித்தன்
கிருபனுடனேவுத் தரனெனும்பரிசுத்தன்
துடிக்குமரவா னுடனேஅலம்புதன்
சோமதத்த ருடனே காம்போதிவேந்தன்
துருவதேசத்தாருடனே துன்மார்க்கன்
சோழசேர ருடனே மாகதன்
திடங்கொள்பாண்டியனுடுகத் திரதேவனெனுமன்னன்

சிகதனென்போ னுடன் சிகண்டியெனும்விற்பன்னன்
திறல்உத்தமோதாவுடன் திவ்வியகுணவிகர்ன்னன்
செப்புதார்மனுடன்விட சேனனெனுஞ்சம்பன்னன்

அடைவுடனெதிர்த்துக் கொண்டார் - அன்றியும்
அங்கவங்கக லிங்கதேசாதிபர்
அங்குமிங்கு மிருந்து ளோர்களில்

அடுத்தொருவருக் கொருவர் - வளைந்துகொண்
டருமமர்புரிபொழு திருபடையினுமெழில்
வரைகளெனிகரென வருமுயர் தேர்களில்

அடிபட்டதுக ளெத்தனை - மாண்டிடும்
ஆனைகளெத்தனை வாசிகளெத்தனை
சேனைகளெத்தனை யோவிளை போர்களில்

அருச்சுனனுடன் சண்டைசெய் - பீஷ்மருக்
கக்கணமாமனை மத்திரதேசனை
யுக்கிரமான தனக்கினை யோர்களில்

கடிதிற்சிலரைச் சென்று - துணையா
கச்சொலியத்துரி யோதனனவரை
மெச்சிவிருப்புட னேவிடை கொடுத்தான்

கனவீமனை யபிமனைச் - சிலபேரைக்
காண்டபனுக்கழ குறுமுரசக்கொடி
யாண்டகையப்பொழு தேசெல விடுத்தான்

காங்கேயன்கொடிமேல் விஜயன் - பனிரண்டு
கணைவிட்டுமுன்பணி கவசத்திலொன்பது
கணைவிட்டயர்ந்தவன் புறங்கொள வடித்தான்

காளையபிமன் பீஷ்மன் - தேரினிற்
சட்டியவற்புத மார்புரவிகளறு
பட்டுவிழக்கணை யேவி மடித்தான்

இடர்செய்சுயோதனன்தம் பியரைச்சகுனியைச்சிங்க
மெனுஞ்சல்லியனையும்பீம னெதிர்த்தான்பின்னிட்டொதுங்க
கடோர்க்கஜனடித்தான் வலம்புதனும்பதுங்கக்
கன்னன்சேயையரவான் காய்ந்தான்மதிமயங்கத்
தொடர்ந்திந்தவாறுசண்டை நடந்திடவந்தரத்தில்
துலங்குந்தேவருமனங் கலங்கிடவெங்களத்தில்

மூண்டு

௩. சத்தியநிலைகொண்ட உத்திரன்கடுகடுத்துச்
சல்லியன்யுத்தமுனை தன்னிற்போயடுத்துத்

தனுவைவளைத்துத்திவ்விய சக்கோவைதொடுத்துச்
சகலருங்கண்டதி சயித்திடப்போர்கொடுத்துச்
சித்திரமேருமலை யுஞ்சரியோவெனச்
செப்புமவன்கைச்சிலை யும்புரவிகளுந்
தியங்குஞ்சாரதி தலையும்பருத்ததேருஞ்
சின்னபின்னமாக குலையும்படிக்கநேக
அஸ்த்திரங்களையெடுத் தவன்மயங்கிடத்தூவி
ஆர்த்தான்சல்லியன்பார்த் தடடாஇந்தப்பாவி
அடங்கிடானெனவெண்ணி யாக்கிரமித்துக்கோபித்
தக்கணமொருவேலை யபிமந்திரித்தேவி

உத்திரன்றனை மடித்தான் - அங்கேதுரி
யோதனனேவிய பேர்களுவந்தார்
மோதெமனுகிய வீமன் அறிந்தான்

உறுக்கிய விழிகளிலே - தீப்பொறி
யுதிர்அரியபகை முதிரநடந்தே
எதிரிலேவருமன மதிர்தா வந்தான்

உக்கிரமாய்வந் ததைக்கண்டு - சிலர்பயந்
தோடினர்சேனைகள் யாவுமெலிந்தே
வாடிடவோர்கதை யோடு முனைந்தான்

உரககேதன னெதிர்த்தான் - அவனே
டோர்விதமோபல போர்செய்துபின்பார்
தோதுதூளெழ வாரி யெறிந்தான்

முற்றுமத்தேர் புவியிற் - பொடியாக
முறிந்ததக்கதைவீம னப்பொழுதுசரம்
நிறைந்தருத்திரன்போல் நிற்பது கண்டு

முனைந்தரசர் வெகுவாகக் - கும்புகூடி
மொய்த்தனர்நோக்கிய மைத்துனரென்ற
கொற்றவர்தாக்கினர் சுற்றி வெகுண்டு

முந்தியவீம னப்போது காற்றினல்
முனமகமேருவின் முடிகளுருண்ட
தெனவெகுராஜர்கள் தலைக ளுருண்டு

மூளைகள்சித றிடவும் - கதையினல்
மோதினனுத்தா னுவிபிரிந்தஅந்தச்
சேதியைவிக்கிரம சிவேதனறிந்து கொண்டு

சுத்தவனலெனப்பொங்கித் தும்பைம்மாமலர்த்தாரைச்
சூடிச்சல்யனைத்தேடித் தொடரும்போதெதிர்த்தோரை

மெத்தவதைசெய்தந்த வெய்யன்முன்றன்றேரை
விடுக்கக்கண்டுகபடன் விடுமாறுதம்பிமாரை
அத்ததியினிலோடி யார்ப்பரிக்கப்பெரிய
அவனிமுழுதுங்கன லாகப்பற்றியெரிய
மூண்டு

---

## வீஷ்ட்டுமனும் சிவேதனுமாகிய இரண்டு சேனதிபதிகளும் எதிர்த்துப் போர்செய்தல்.

விருத்தம் கூ.

இனித்தசிவன்கொடுத்தவில்லேக்காத்திலேந்தி
யிளையஉத்ரானிறந்திடுசஞ்சலத்தினலே
சினத்துவந்துகுருசேனையென்னுங்காட்டைச்
சிவேதனெனுந்தணலெழும்பியழிக்கக்கண்டு
மனத்துயர்கொள்சுயோதனன்பீஷ்மருக்குமிக்க
வந்தனைசெய்தித்தருணம்நமதுசல்யன்
தனைப்புரப்பீரெனவவர்போய்ச்சிவேதன்றன்னைத்
தடுத்திட்டாரிருவரும்போர்தொடுத்திட்டாரே.

அ. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

சேனதிபதிகள்-இருவர்களும் எதிர்த்துச்-செய்தாரேசண்டை

அநுபல்லவி.

மாஞராசையை மறுத்தவீட்டுமனும்
மறுவில்சிவனல்வாம் பெற்றசிவேதனெனுஞ்
சேனதி

சரணங்கள்.

க. நடுப்போரில்சல்லியனை-விடுத்துப்பீஷ்மனுக்கெதிர்
நரசிங்கம்போற் குதித்துச் - சிலபாா
ணங்களைவிடுத்தவன்-கைவில்லினைச்சிவேதன்
நறுக்கெனவே முறித்து
விடப்பீஷ்டுமன்கண்டு-சிவேதன்கைப்பாணத்தின்
வேகத்தில்மனந் திகைத்துக் - கையில்
வேறொருவில்லெடுத்து-வளைத்துச்சிவேதன்கிரீடம்
விழவொருகணை தொடுத்துக்
கடுத்திடும்பீஷ்மனுக் கடுத்திடும்பனைக்கொடி
கடிதினிற்றள்ளிமறு படியும்அவன்கைப்பிடித்
திடும்வில்லையுமிரண்டா இற்றுவிழவோர்நொடி
யினிலம்புகள்சிவேதன் எய்திடஇப்படி
சேனதி

உ. திண்டிறல்சேரிவனைச்-செயிப்பதெவ்வாறென்று
திகைத்துவீடுமனி ளைந்து - நிற்குஞ்
செயலறிந்துதுரியோ-தனனனுப்பிட வெகு
தேசாதிபர் வந்து
மண்டுநீடுபனி-சூரியன்றனைமூடும்
வகைசிவேதனைவ ளைந்து - வெகு
வாளிகளைத்தொடுத்தார் - அதுகளெல்லாமறுத்த
வர்களுடல்களைப் பிளந்து
கொண்டுபோகக்கணைகள் கோத்தான்தப்பிப்பிழைக்கக்
குலைந்தோடிவிட்டதந்தக் கும்பைந்துபேர்மிக்க
மிண்டரைவிட்டானவர் வில்லுஞ்சிரமுமொக்க
வெட்டினுன்கண்டுபீஷ்மன் வேறொருவில்லெடுக்கச்
சேனுதி

ரு. பவானியருளிய-வீஷ்மனைச்சிவேதன்
பார்த்துடனே நகைத்து - மறு
படியும்அவன்கைவில்லோர்-பாணத்திலற்றுவிழும்
படிசெய்தானதி சயித்து
சபாசெனத்தேவர்கள்-மெச்சினர்சிவேதன்
றன்னையேமிக மதித்துப் - பீஷ்மர்
தானேயிவ்விதமானல்-இவனைவெல்லளவர்
தரமெனவே பிரம்மித்து
விவேகியாமிவனை யதிசூதினல்வெல்ல
வேண்டுமென்றசரீரி விளம்பவீடுமன்மெல்ல
சிவேதாவிற்சண்டையன்றித் தெரியாதோவென்றுசொல்லத்
தேரைவிட்டவர்மீது சிவேதன்வாளொடுசெல்லச்
சேனுதி

---

வீஷ்ட்டுமன் சிவேதனை வாட்போருக்கழைத்து அவனைக் கொல்ல, பொழுதுபோய் இருபடையும் பாடிவீடு பாசறையிற் சேர்ந்தவுடனே தருமராஜன் விராடனுக்குபசாரஞ்சொல்லி, அவன் புத்திரசோபத்தை நீக்குதல்.

விருத்தம் ய.

உருவியவாளோடுவருஞ்சிவேதன்கையை
பொருபாணத்தாற்பீஷ்மனறுத்திட்டான்மற்
றொருகையில்வாளெடுத்தந்தவீஷ்மனைக்காய்ந்
தொறுக்கவருமவனுயிரைக்கணையாற்கொண்டான்

குருசேனைகளித்தது சூரியன்மறைந்தான்
குந்திசுதர்படையொடும்பாசறையிற்சேர்ந்தார்
தருமன்விராடன்துயர்தீர்ந்திடவேபல்வி
தஞ்சொல்வான்வெருவுபசாரஞ்சொல்வானே.

கூ. தரு-இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

உனதுதவிக்குவேறே-செய்யஉண்டோ இவ்-வுலகினிற்கைம்மாறே

அநுபல்லவி.

கனிவாக வெங்கள்மேலே
கர்த்தவியந் தனைப்போலே
கருதும்புவியில்வாய்த்த
கல்லிற்றேரையைக்காக்குங்
காட்சியாகவே - காத்த
உனது

சரணங்கள்.

க. வனத்தினிற்பனிரண்டு-வருஷங்காய்கனிதின்று
மலையுங்குகையும் அலைந்து - ரூபம்
மாறித்திரௌபதியொடு-நாங்களைவருமுன்றன்
மச்சநாட்டினில் வந்து
கனத்துடனிருக்கும்போ-தென்காலிற்பட்டதுன்றன்
கண்ணிற்பட்டதா நினைந்து - மனல்
கரித்திஷ்டானனம்பகர்ந்து-புரந்தகடன்தீர்ப்பதெக்
காலத்தில்நான் பிறந்து
பனுமிதல்லாம லென்றன்
பகைஞரைவெல்ல வுன்றன்
பாலருடனேயெந்தப்
பழுதுமின்றியெங்களை
முழுதுமளிக்கவந்த
உனது

உ. தீனராமெங்களைப்-பெற்றுவளர்த்தகுந்தா
தேவியாகிய தாயினை - விடச்
சித்தமுவந்துநீ-செய்தநல்லுதவிக்குச்
செப்பவேறில்லை ஒப்பனை
ஊனமிலாதெந்நாளும்-ஒருவர்க்குச்செய்திடும்
உதவியால்வரும் பலனை - மேலா
யுன்னியுன்பிள்ளைகளின்-உயிர்தரும்பேருதவிக்
குவமையுண்டோஎள் ளத்தனை

யானெய்தென் கெம்பீரம்
என்சொல்வோ முபசாரம்
இனியெந்தக்காலத்திலும்
எங்களா-லொருக்காலும்
எவ்வள - வாகிலும்
உனது

க. வீடுமன்போலொத்த-வீராதிவீரனே
விரண்டோடும்படி யோங்கினன் - மற்ற
வீரருந்தலைகாட்ட-வொட்டாதடித்துவெகு
வேந்தருயிரை வாங்கினன்
தேடியெண்டிசையோர்கள்-வரினும்எதிர்க்கவொண்ணச்
சிவனருள்வில்லைத் தாங்கினன் - அந்தத்
திறமறிந்தவர்செய்த-சூதாலல்லோஉன்மகன்
சிவேதனுமுயிர் நீங்கினன்
ஈடிலா மதியூகி
யென்னுஞ் சஞ்சீவியாகி
இலகுமுன்றன் - சன்மான
மிங்கிலத் - தினர்காண
என்னுயிர்க் - குயிரான
உனது

---

## விராடராஜன் தருமனைப்பார்த்து, என்னை வேருக எண்ணி உபசாரஞ் சொல்லவேண்டிய தென்னெனல்.

விருத்தம் ய௧.

அறஞ்செறிவேந்திவ்வாறுசொன்னன்மற்ற
அரிமுதலானோரும்விராடனைப்பார்த்தையா
நிறைந்தபுகழ்ச்சிவேதன்வெகுராஜர்தம்மை
நிர்த்தூளிசெய்துயர்வீடுமனைக்கூடப்
புறங்கண்டவீரனவனிறந்ததெண்ணிப்
புலம்பிடலாகாதெனத்தன்மனைவிராடன்
இறைஞ்சியெழுந்திருந்தெனக்குமிதவுசொல்வ
தேனென்பான்நானும்அடியேனென்பானே.

ய. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

என்றனைவேருஎண்ணி-இவ்வளவுபசாரம்-ஏனையாதர்மபூபதி

அநுபல்லவி.

அன்பர்மைந்தரும்நானும் யாவருமன்னிய
ரல்லவேகுடும்பத்தோ டடைக்கலமாகிய
என்றனை

சரணங்கள்.

க. தாணியிலேயிந்தக்ஷத் திரியசாதியருக்குஞ்
சமர்க்குந்தொந்தமென்பது சரியாமேயெவருக்குந்
திரமானஅன்னைபோற் றினமும்அன்புபெருக்குந்
தேவரீரிட்டவேலை செய்திடக்காத்திருக்கும்
என்றனை

உ. உல்லாசமாகீரும துயிர்போலும்வளர்த்திட்ட
உத்திரனுஞ்சிவேதனும் உயிர்கொடுத்தாரேமுட்ட
எல்லோர்களினுமிக ஏழையாச்சொல்லப்பட்ட
என்னுயிரும்மதே யென்னவொப்பித்துவிட்ட
என்றனை

ந. சகலராஜருமைந்தர் சமர்த்துக்கதிசயிக்கத்
தண்மலர்தூவிவானோர் தாமுமிகத்துதிக்கப்
பகாரம்பையரெதிர் பாவிடவீரசொர்க்கப்
பதியடைந்தோர்க்குத்துயர் படுவதேனெருமிக்க
என்றனை

---

## இரண்டாநாள்.

### திஷ்டத்தூய்மன் சேனதிபதியாகி துரோணச்சாரியரோ டெதிர்த்துப்பின்னிட, அதைக்கண்டவீமன் அவர்க்குத் துணையாக வந்தவரையெல்லாம் பின்னிட்டோடும் படிசெய்ய, கலிங்கராஜன் தன் யானைப் படை யோடு வந்தெதிர்க்க, யானைப்படைகளை யெல்லாங் கொல்லல்.

விருத்தம் ௰உ.

பத்தியொடுவிராடனுரைத்திட்டானன்று
பாடியுற்றரிரண்டாநாள்திஷ்டத்தூய்மன்
வெற்றிகொள்சேனதிபதியாய்த்துரோணர்
மேற்போர்செய்தோடினன்வீமன்கண்டு
அத்துரோணருடனேவந்தோரையெல்லாம்
அடித்தனனங்கதைப்பார்த்துக்கலிங்கமன்னன்
சத்தியானைப்படையோடெதிர்த்தான்வீமன்
தாக்கினன்கரிப்பிணங்களாக்கினனே.

௰க. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

மதயானைகளையுங்-கலிங்காதிபனையும்-மடித்தானேபீமன்

அநுபல்லவி

அதிசயமாகவிந்த அஷ்டதிக்குஞ்சுமக்கும்
யானைகளும்பயந்தே யலறியினிநமக்கும்
கதியேதோவென்றுமனங் கலங்கவெக்காலமுங்
கரிகளைக்கொல்லுஞ்சிங் கந்தனைப்போலமும்

மதயானை

சரணங்கள்.

க. கருங்கிரிகள்போலவே-வருங்கரிகள்திரளைக்
காலாலேநசுக்கிக் கொன்றான் - ஒரு
கணக்கிலாயானைகளைத்-துணுக்கெனத்தூக்கியிரு
கையாலேகசக்கிக் கொன்றான் - வளர்
பருங்கொம்புகளைச்சிறு-துரும்பினைநிகரெனப்
பற்றிநின்றசைக்கிக் கொன்றான் - பின்
பல்பலயானைகளை-யெலுமிச்சம்பழப்
பத்தைகள்போற்பிசுக்கிக் கொன்றான்
நெருங்கிச்சிலயானை களைப்பந்துபோலாடினான்
நிலத்தினிற்சிலயானை களைவாரிச்சாடினான்
மருண்டிடப்பகைஞர்முன் வாய்ந்தெதிரினிற்கண்ட
வரைக்கொல்லக்கைகளில் இருப்புலக்கைகள்கொண்ட

மதயானை

உ. சிறிவரும்யானையை-நூறுநூறாய்ப்பல
திக்கில்விழமோதி மாய்த்தான் - பெருந்
தேருகளுடனீடு-பாரமாயானைகள்
சிதறத்தேர்மேல்வீசி மாய்த்தான் - மிகக்
கூறுங்கைவீச்சடியால்-வீரிட்டலறிச்சோகங்
கொள்ளச்சிலயானைகளை மாய்த்தான் - திகழ்
கோட்டானைகளைத்தலை-காட்டவொட்டாமல்மிக்க
கொக்கரித்தடித்தடித்து மாய்த்தான்
மாறுபடயானைகள் வாயைப்பற்றிக்கிழித்தான்
மற்றும்வெகுயானைகள் வதைந்திடவேயழித்தான்
தாறுமாறாகச்சிறித் தனக்கெதிர்சோபிக்குந்
தன்னிழலினைப்பார்த்துத் தனக்குத்தானேகோபிக்கும்

மதயானை

ங. உணர்ந்தின்னம்பிழைத்தவா-ரணங்களைக்குத்திச்சீர்
ஓங்கும்யமபுரத்தினுக் கொப்பித்தான் - எங்கும்
ஓடுதிரவெள்ளத்தின்-ஓடுபலபிணங்களை
யுற்றஏழுகடலுக் கொப்பித்தான் - அதி

கணங்கொளும்யானைகளி-னிணங்களைப்பூதப்பிரேத
காக்கைமுதற்பறவைகளுக் கொப்பித்தான் - வந்த
கலிங்கராஜனையும்-அவன்பெறுமைந்தரையுங்
காலப்படர்கள்கையினில் ஒப்பித்தான்
துணையாம்பீஷ்மன்மேல்வீமன் தேரேறிவேலைப்போடத்
தோமரத்தாலறுத்தவன் வீமன்தேரினைச்சாடித்
திரணமாப்பீஷ்மன்சாரதி தலையைக்கதையினாலே
தெறித்திடமோதிப்பின்னும் வெறுத்திடாதொருக்காலே
மதயானை

வீமன் கலிங்கராஜனையும் அவன் பிள்ளைகளையுங்கொன்று வீஷ்ட்டுமனோடெதிர்த்து அவன் சாரதி தலையை யறுத்துச் சேனைகளைச் சின்னபின்னஞ்செய்ய, வீஷ்ட்டுமன் வேறுதேரேறி வீமனுடன் எதிர்த்துப் போர் செய்யும்போது அபிமன்வந்து அவர்க்குத் துணை யாக வந்தவர்களை யழித்தல்.

விருத்தம் ௰௬.

கலிங்கமன்னவன்மைந்தருடனேயானை
களைமாய்த்துவீடுமன்சாரதியைவாட்டி
இலங்குபேரிடிநடுச்சேனையில்வீழ்ந்தாப்போ
விரைச்சலெழமதவீமனடிக்கபீஷ்மன்
பலம்பெறுதேர்மற்றொன்றிலேறிவந்து
பாழாக்கும்பீமனுடனேர்ந்துகொண்டான்
சலங்கொண்டுபீஷ்மனுக்குத்துணைவந்தோரைத்
தடுத்திட்டான்அபிமனமர்க்கடுத்திட்டானே.

௰௨. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

வீடுமனுக்குத்துணை-கூடிவந்தவரைச்-சாடினனேயபிமன்

அநுபல்லவி.

ஈடுறும்வீமனுடன் எதிர்த்தம்புமழைபெய்யும்
இணையிலாக்காளமேகம்-என்னவேயமர்செய்யும்
வீடும

சரணங்கள்.

க. கண்ணிமைகள்கொட்டுமுன் கணக்கில்லாஅம்புபூட்டி
கௌரவப்படையைரத்தக் கடலினிற்குளிப்பாட்டி
விண்ணுலகுற்றோர்போக மீந்தவர்களையோட்டி
விட்டுப்பின்னும்வந் தோளைவிழமாட்டிப்

புண்ணுறச்செய்துமிகப் போர்புரிவீமனண்டை
போகவொட்டாமல்மேலும் புரவலர்வந்துசண்டை
பண்ணஅவர்நெற்றியிற்றப் பாதொவ்வோர்கணைதைப்பித்து
பக்பக்கெனத்திரிபுர தகனன்போலேநகைத்து
வீடும

௨. தெறிபட்டுமுறிபட்டுஞ் சிதறுங்கோடானுகோடி
சேனைகளும்பீஷ்மனுங் தியங்கிடமனம்வாடி
குறுகூழிகாலக்கடற் குவலயந்தனைமூடிக்
கொண்டாற்போலவீம ஞேடிவனுங்கூடிப்
பிறகிடஎல்லாரையும் பின்னஞ்செய்வதைக்கண்டு
பெருமூச்சோடுசுயோதனன் பின்னையும்வெருதண்டு
திறமுடனங்கேகாய்ந்து செல்லக்கிணற்றுநீரே
சீறிப்பொங்கினாற்போற்கோப மீறிச்செப்பினனேரே
வீடும

௩. சோராவீமன்அபிமற்குத் துணையாய்வாளிகள்பெய்து
தொடர்ந்தர்ச்சுனன்வெகுபேர் சுடர்முடிகளைக்கொய்து
ஸ்ரீராமன்கடல்வற்றச் செய்தாற்போலம்புபெய்து
சேனைக்கடலைச் சுவறிடச்செய்து
போராடவீமன்பெரும் புலிபோலேயொருபக்கம்
போராடச்சிங்கம்போலே புகுந்துவேறொருபக்கம்
தீரனெனும்அர்ச்சுனன் செய்தவப்பலத்தினாலே
சிறுதுப்பாக்கிவயிற்றில் செனித்தபீரங்கிபோலே
வீடும

---

## மூன்றுநாள்.

வீஷ்ட்டுமன் தன்சேனையைக் காருடயூகமாக வகுக்க, திஷ்ட்டத்தூய்மன் தன்சேனையைச் சத்திரயூகமாக வகுத்துப் போர்செய்யும்போது துரியோதனன் மூர்ச்சையாக அவனைவீட்டுமன் கொடுபோய் மூர்ச்சைதெளிவித்துப் பின்பு எதிரிகள் படையை நாசஞ்செய்யும்போது கிருஷ்ணன் தேரைவிட்டுக் குதித்துச் சக்ராயுதத்தைக் கையிலெடுத்து வீட்டுமனைக் கொல்லுவேனெனச் செல்லுதல்.

முடுகுவிருத்தம் மிசர்

வல்லபிமனுமத வீமனுமர்ச்சுன னுந்திரிமூர்த்தியென
வளர்சினமுற்றுக் கௌரவசேனையை மாய்த்தனரன்றுபகற்
செல்லவுமூன்று நாள்பீஷ்மன்கா ருடயூகஞ்செய்தான்
திஷ்டத்தூய்மன் சத்திரயூகஞ் செய்தனனிருபடையும்

மல்லிடுதற்கெதிர் நேர்ந்ததுதுட்ட மன்னவன்மூர்ச்சையுற
வாய்ந்தகடோர்க்கஜன் மாட்டினன்வீடுமன் வந்தாசைக்கொடுபோய்
அல்லலகற்றிப் பின்பெதிரிகள்படை யழியச்செய்திடுபோ
தாழியெடுத்திகல் வீடுமனைக்கொல ஐயனடந்தனனே.

௰௩. தரு-இராகம்-பந்துவாளி-ஆதிதாளம்.

பல்லவி.

வீடுமனைக்கொல்லச்சென்றானே - திரு
விக்ரமமாய்நின்ற எங்கோனே.

அநுபல்லவி.

ஓடுமணித்தேரினை விட்டுக்கீழேகுதித்து
உக்ராவேசத்துடனே சக்ராயுதம்எடுத்து
வீடுமனைக்

சரணங்கள்

௧. சேனைக்கடலைக் கடையும் - மந்த்ரகிரிபோல்
திரிந்துநமது படையும் - வீசரும்வாடி
ஈனத்தையடைந் திடையும் - படிக்குப்பீஷ்மன்
எதிரிட்டுவெற்றி யடையும் - பொழுதர்ச்சுன
மானத்தைநினைத்திலை வசிவில்லும்எடுத்திலை
வாளியுந்தொடுத்திலை மயங்கினைகேளென்சொலை
ஆனதெல்லாமெனக் காகட்டுமென்றுபெரும்
பாலும்வடவாக்கினி போலேகொதித்துவரும்
வீடுமனைக்

௨. நீடுமிப்பெரும் போரோ - எனக்கோர்பொருள்
நீரென்சொலைக்கே ளீரோ - உமக்கும்இந்த
வீடுமனென்ன நேரோ - இத்தனைகோபம்
விறுதாவில்கொள்ளல் சீரோ - என்றருச்சுனன்
ஓடிவந்தழகுள வுபயபதத்தைப்பற்றி
உபசாரவார்த்தையன்பா லுரைத்துங்கேளாதகற்றிச்
சாடியபெருவெள்ளந் தன்னைமணலினாலே
தடுக்கநில்லாமலது தாவிச்செல்லுதல்போலே
வீடுமனைக்

௩. விஜயன்தானே இரண்டு - பதந்தொழுது
வேண்டியுமிக வெகுண்டு - திடமாளன்றும்
பிசகறஎதிர் கண்டு - பெரும்புலிபோற்
போராழியெடுத்துக் கொண்டு - பாய்ந்ததாலே

நிசமாய்நமக்குநாசம் நிலைத்திடும் படிக்கின்றே
நேரிட்டதெனநெஞ்சில் நினைத்துவலியகன்றே
அசைவிலாதமனமும் அயர்ந்ததிபயத்தோடும்
அடங்கியென்செய்வதென்று நடுநடுநடுங்கிடும்
வீடுமனைக்

---

## கிருஷ்ணன் சக்ராயுதத்தோடு வருவதைக்கண்டு வீட்டுமன் தேரைவிட்டுக்குதித்து ஐயனைத்துதிக்க, அர்ச்சுனன் சுவாமியைவணங்கித் தேரின்மேலேறச் சொல்லல்.

விருத்தம் ௰௫.

மெய்யனுக்ரசக்ரமொடுவருதல்கண்டு
வீடுமன்தேர்விட்டிறங்கிப்பயந்திவ்வேழைக்
கையமிலாதுயர்பரமபதஞ்சாதிக்க
ஆழிதொட்டாயென்றுரைத்துமிகவுந்தோத்ரஞ்
செய்யவையன்மகிழ்ந்துநின்றான்பார்த்தன்பார்த்துத்
திருவடியில்வணங்கியெழுந்திருந்தென்வார்த்தை
பொய்யலநீர்பாரும்நான்செய்யப்போகும்
போரென்பான்தேரில்வருவீரென்பானே.

௰ச. தரு-இராகம்-உசேனு-ஆதிதாளம்.

பல்லவி.

தேரினில்வாரும்-அப்பாலென்றன்-சேவகத்தைப்பாரும்

அநுபல்லவி.

தாரணிதுதிசாமி முன்போலே
சாரதியாகத்தயை-செய்தென்மேலே
தேரினில்

சரணங்கள்.

௧. சிதைத்திடாதின்றுவிடு வதுமேதோ - என்னுடையகார்யந்
தேவரீர்திருச்சித்தம் அறியாதோ
குதித்தெனைவிட்டுச்செல்வ திப்போதோ-காண்டீபத்துக்கெதிர்
குறுகியென்மேற்போர்கொடுக்கும்படையீதோ
எதைக்கண்டுசாமிக் கிப்பிரயாசை
எவர்க்குங்கொடுக்கிறேன் நல்லபூசை
கொதிப்பொடுசாது மிரண்டாற்காடிடங்
கொள்ளாதுபோலாநீர் வள்ளலேஇத்தடந்
தேரினில்

உ. ஒன்னலரின்னம்அதி — யுக்ரவேக - முடன்வந்தபோதும்
உரைத்ததாரும்மைச்சண்டைக் — குப்போக
துன்னியென்றனைவந்தேவெரு — நிர்வாக - சாலிகள்தடுக்கினும்
சுயோதனன்படையின்றே — அதமாக
இந்நேரமேயள — வில்லாச்சகஸ்திரம்
எனத்தொடுக்கிறேன் — எனதுகையஸ்திரம்
என்னகட்டளை — யிட்டிடினுந்தடாத
ஏழைநானிருக்க — என்றுங்கெடாத
தேரினில்

ௐ. பூமியும்பாதாளமும் — விண்ணும் - நிதமரிகரியென்று
புகன்றுதேவரீர்பதம் — நண்ணும்
ஆமிந்தஅடியேனிரு — கண்ணுங் - கருத்துமான
ஐயனேயினிமேற்கிருபை — பண்ணும்
தாமதமேனினஞ் — சமரிற்றுக்கிறேன்
சர்வத்திராளையுந் — தாறுமாறுக்கிறேன்
சாமிஇப்பொழு — தத்தத்திலெடுத்த
சக்கிரத்தைவைத்துவிட் — டக்கினிகொடுத்த
தேரினில்

---

## அர்ச்சுனன் தோத்திரத்துக்குத் திருமாலிரங்கித் தேரிலேறி முன்போல் நடத்த, விஜயன் வில்லைவளைத்து அனை வரும் பிரம்மிக்க, தேவாஸ்திரங்களை மழைபோற் பொழிதல்.

விருத்தம் ௫௬.

விஜயனுரைகேட்டுமகிழ்ந்தெனையாளுங்கோ
விந்தனுமுன்போற்றேரைவிடுத்தானென்றும்
வசையடையாக்காண்டீபந்தனைவளைத்து
வல்லிடிபோற்குணத்தொனிசெய்துடனேயட்ட
திசைகளையும்வென்றுவந்தபார்த்தன்திவ்ய
தேவாஸ்திரங்களெடுத்தெவர்களுந்தம்
புஜவலிமைகுறித்தேபிரம்மிக்கவில்லிற்
பூட்டினன்சேனைகளைமாட்டினனே.

௰௫. தரு-இராகம்-அடாணு-ஆதிதாளம்.

பல்லவி.

சேனைவெருவாய்மாண்டதே - கண்டெனதையன்
சிந்தைமகிழ்ச்சி பூண்டதே.

அநுபல்லவி.

சேனைமேகமேயருச் சுனன்காண்டிபமாஒரு
சொருபங்கொண்டுபொழி தரும்அம்பெனும்பெரு
வருஷமதிற்கரை புரண்டுகொண்டுவரு
சேனை

சரணங்கள்.

௧. எதிர்த்துவாசாமகோ-சரமாகக்கணைகள்
எடுத்தொவ்வொருவற்கா யிரம்
கொதித்தேவிக்கைகால்-சிரந்துணிக்கரத்தங்
குடமாச்சொரியஉக் கிரம்
கதித்தகிரீடியாற்பயங் காஞ்சேர்மன்னனுடைய
கவலைக்கடல்முழுதுஞ் சுவறிடவேசெயக்
கனஞ்சேரும்வீடுமன் மனமகிழ்ந்தனுப்பிய
சேனை

௨. அரவகேதனன்-நாட்டமெனுந்தம்பியர்
அனைவருங்கொள்ள ஓட்டம்
விருதுபேசினோர்-கூட்டங்கூட்டமாயோடி
விடத்தப்பினோர்கள் வாட்டம்
மருவிடப்பார்த்தன்முந்த வன்கணைகளைச்சிந்த
வாய்த்ததால்மிகுந்த சீற்றவேழம்அந்த
வண்பரிரதமோடு கண்சிவக்கவந்த
சேனை

௩. தருக்கும்அரசர்-அழிந்துபோம்படிசெய்த
தனஞ்சயன்வலிதெ ரிந்து
பருத்ததேருங்குலைந்து-மார்பில்வாளிகள்
படுவதில்மிக நொந்து
வருத்தமடைவோமென வல்லரவக்கொடியின்
வஞ்சன்சென்றுன்பிர பஞ்சமெலாங்கொல
மிஞ்சுநமன்கூட அஞ்சிடவருபல
சேனை

நாலாநாள்.

மூன்றுநாள் அர்ச்சுனனால் அளவற்றசேனைகளழிய அரிம
கிழ்ந்து பாடிவீடு பாசறைபோய்ச் சேர்ந்து மறுநாள்
வகுத்தயூகத்தோடு இருவர்படையும் நெருங்க,
வீமன் யானைகளை எடுத்தெறிந்துகொல்ல, அதைக்கண்டு
துரியோதனன்வந்து வீமனோடெதிர்த்து
யுத்தத்தில் களைத்து மூர்ச்சையடைய
அதனைக்கண்டு அவன்தம்பிமார்
கள் வந்தெதிர்த்தல்.

விருத்தம் ௰எ.

அருச்சுனனால்வெகுசேனையிறக்கக்கண்ட
அரிமகிழ்ந்தானவரவர்பாசறைபோய்ச்சேர்ந்தார்
வெருக்கொளநாலாநாளுமுன்னாட்செய்த
விதமாகவேயூகம்வகுத்தெதிர்த்தார்
பருத்தமதயானைகளைவீமன்தூளி
படச்சடைபோலேயெடுத்துவாரிமோதி
வருத்திபழித்தான்துரியோதனன்பார்த்துப்போய்
வளைத்திட்டான்அவனாலேகளைத்திட்டானே.

௰சு. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

மாச்சரியத்துடன்வீமன்-துரியோதனனை-மூர்ச்சையடையச்செய்தான்

அநுபல்லவி.

ஆச்சரியப்படுமிரண் டரியசிங்கம்போலெதி
ராகநின்றுசம ராடும்போதிலதி
மாச்சரி

சரணங்கள்.

க. அரவக்கொடியினை-யாறுகணைகளாலே
அறுந்துவிழ்ந்திடத் தாக்கிப் - பின்னும்
அரைநொடியினிலொரு-நூறுகணைகளெடுத்
தவன்மார்புருவப் போக்கி
வெருவச்செய அவனும்-வீமன்தேர்கொடிவிழ
வேறுகணைகள் தாக்கி - மேலும்

மேலும்பலகணைக-ளாலவன்மெய்யுருவ
விடுத்தானதனை நோக்கி
சிரித்துருத்ரன்போலேகர்ச் சித்துத்தோள்களைத்தட்டிச்
சினத்தவீமனைவெகு தேசாதிபர்கிட்டி
நெருக்கஅவுண்படையில் இருப்போரவரைமுட்டி
நீளயுத்தஞ்செய்தாரவ் வேளைமிகஅதட்டி
மாச்சரி

உ. சண்டைசெய்திடஇவர்-இருவர்க்குமாதிமுத
லாயுள்ளச்சச் சரவும் - வீரமுஞ்
சரிவரக்காட்டும்போது வீமன்கைமிஞ்சிமன்னன்
தாங்கியவில் லறவும்
அண்டியதேரொடு-கட்டியபுரவிகள்
அதமாச்சிதைவை யுறவும் - பின்னும்
அளவில்லாதகொடுங்-கணைகளையேவிக்
காய்ந்தான்அவன்மார் பறவும்
கண்டவர்நேற்றையோகடோர்க் கஜனடித்திட்டான்இன்று
கதைவீமன்பிளந்திட்டான் கனத்தவுரத்தையென்று
விண்டுபலபலதேச வேந்தரும்பிரம்மித்துநின்று
மெய்நடுநடுங்கிடவே வீரபாவைபுகன்று
மாச்சரி

ங. திடுக்கிட்டேஎவர்களும்-பயந்தையோவென்று
சிந்தினர்கணை மாரி - இந்தச்
செகமுற்றும்ஏகச்சத்தி-ராதிபதியாய்ச்செங்கோற்
செலுத்தியவதி காரி
அடுத்துவீமனுடனே-சண்டைசெய்தஇந்நா
லாணையப் போரில் - இவ்வா
றவஸ்தைநேர்ந்துதெனச்-சகுனிசல்லியன்முதல்
ஆனோர்தழுவி வாரி
எடுக்கவும்அதைக்கண்ட இளைஞர்விசனத்தோடும்
இசைக்கவொண்ணுக்கோபங்கொண் டெங்களையெதிர்த்திடும்
படைக்காரர்ஆரென்று பகைஞர்செவிடுபடும்
படிக்குநாணொலிசெய்யப் பறைத்திடவேநெடும்
மாச்சரி

## துரியோதனன் மூர்ச்சித்ததைத் தம்பிமார்கண்டு எதிர்க்க அவரோடு தருமராஜன்படையிலுள்ளோரெதிர்க்க, நடுவில் வீமன்வந்து அவர்கள் என்னைத்தேடிவந் தவர்கள் நீங்களிருங்களென்று சொல்லி, அவரோடெதிர்த்து ஐந்துபேரையுங் கொல்லல்.

விருத்தம் ௰அ.

இன்னவகைமன்னன்மெலிவானதாலே
இளைஞர்வலிகூறிவரத்தருமற்கான
மன்னரதைக்கேட்டுவில்லையெடுத்தார்வீமன்
வந்தவருக்குங்கள்நினைப்பில்லைஇங்கே
என்னினைப்பேகொண்டுவந்தார்நீங்கள்சும்மா
இருங்களெனத்தன்கரத்தில்வில்லைவாங்கி
அன்னவர்சாரதிதேர்வில்லானதெல்லாம்
அழித்திட்டான்அவருயிரையொழித்திட்டானே.

௰எ. தரு-இராகம்-சௌராஷ்டகம்-சாப்புதாளம்.

பல்லவி.

ஐந்துபேர்கள்துரி-யோதனன்தம்பியர்-களைமாருதிகொன்றுன்

அநுபல்லவி.

பொந்திப்பாகச்சபையில் புகன்றமொழிபுரண்டு
போகாமல்நல்லநா ளாகமுகுர்த்தங்கொண்டு
ஐந்து

சரணங்கள்.

௧. கதித்திடுங்கோபத்தால் - இரண்டுகண்களிலுங்
கனலுதிர்ந்திட விழித்து - வந்தோர்
கணைகளைநடுவது-பாதியிற்றுனே
அகன்றிடும்படி யொழித்துத்
திடுகெனச்சாரதிரு திரைகளையுங்கழித்துச்
சீக்கிரத்தில்அவர்கள் தேர்களையும்அழித்து
ஐந்து

௨. தமயன்மூர்ச்சையான-தெவ்வளவும்மனந்
தாளாமற்புறப் பட்டுத் - தங்கள்
தனுவுகளைவளைத்துப்-பாணங்களுள்ளதைத்
தப்பாமலே தொட்டுச்
சமர்செய்திடத்துரியோ தனன்மார்பினிற்புகட்டுஞ்
சரத்தைப்போலொவ்வொருவர்க் கொவ்வோர்கணைவிட்டு
ஐந்து

௩. பனிமதிக்குலத்தினி-லுதித்ததருமனரும்
பாரினிலவன் செங்கோல் - செல்லும்
பாங்கைப்பார்க்கமாட்டாமல்-சூதாற்பறித்துக்கொண்ட
பங்கைக்கொடுப்ப தினிமேல்
கனவிலும்இல்லையென்று கடிந்தைவரையுமுன்னால்
கானனுளவிட்டவரை வானுளவிட்டதுபோல்
ஐந்து

௪. தசுசுதக்கணன்பிங்கல-சன்விப்வாகுசலா
சந்தன்சேனு விருந்து - மாளவே
தம்பிதமயன்முத-லாகஎல்லோர்களுந்
தத்தளித்தார் மெலிந்து
புகலுஞ்சுயோதனன்பஞ்ச பூதங்களும்பறந்து
போவதிவ்வாறெனல் போலுமிகமுனைந்து
ஐந்து

---

வீமன்இவ்வாறுசெய்ய விஜயன்முதலானவர் பகைவர்சேனை களை யதஞ்செய்யக்கண்ட பகதத்தன் அளவற்றசேனை யோடும் வந்தெதிர்க்க, அதைக்கடோர்க்கஜன் மாயை யால் அளவற்றசேனையோடும் வந்தெதிர்த்துப் பகதத்தனை முதுகிடவடித்தான். சூரியன் மறைந்தனன். யாவரும் பாசறை போய்ச் சேர்ந்தார்கள்.

விருத்தம் ௰௯.

மாருதிபிவ்வாறடித்தனன்விஜயன்-மற்றவர்வருபகைவர்களை
மாட்டினார்பதினாயிரமதயானை-மருவியதன்றியுநீடு
பாரினிலடங்காச்சேனையினோடு-பகர்பகதத்தன்வெம்போர்க்குப்
படர்வதைக்கண்டகடோர்க்கஜனொடிக்குட்-பாரவில்லம்புகாலாள்கள்
வீரநூறாயிரங்கஜம்போலு-மிகுத்தனன்மாயையினாலே [தான்
விளங்குருக்கொண்டுசமர்புரிந்தன்னோன் - வெம்பியங்கோடவேயடித்
சாருமக்கடோர்க்கஜன்படைத்துணைவர்-தகுபகதத்தன்வெம்படையைச்
சணத்தினில்மாய்த்தார்கதிர்மறைந்தான்பா - சறையில்யாவருமடைந்த [னரே.

துரியோதனன் தம்பிமார் ஐவர் இறந்ததால் துக்கிக்க அவனைக் கன்னன் முதலியோர் சூழ்ந்து அவன் துயர் நீங்கவுபசரிக்க அப்பொழுது சூரியகுமாரன் வீடுமனைச் சேனாதிபதி யாக்கினதால், வந்த குற்றமெனல்.

விருத்தம் உ௰.

பாசறையில்யாவரும்போய்ச்சேர்ந்தபின்பு
பகர்சூர்யன்றனைமேகஞ்சூழ்தல்போலே
மாசுறுசுயோதனனிடத்திற்பலபேர்மன்னர்
வந்துமிகச்சூழ்ந்திருந்தாரந்தப்பாவி
தேசுறுதம்பியரைவர்வீமனாலே
சிரமுருண்டதுயரடைந்தமெலிவுகண்டு
காசினிமெச்சுங்கன்னன்சினந்துபல்லைக்
கடிக்கின்றானிந்தவகைபடிக்கின்றானே.

௰அ. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

வீடுமனைச்சேனா-பதியாக்கியபலன்-வேந்தனேயடைந்தாயோ

அநுபல்லவி

சாடியபகைஞரை சாதிக்கநீகள்ளத்
தனமாகஎன்றும்பஞ் சவர்மீதில்அன்புள்ள
வீடுமனைச்

சரணங்கள்.

க. எதிர்த்தசத்துருக்கள் எவரையுமொருக்காலே
எமலோகம்அனுப்பிட எப்போதுமென்மேலே
கதித்தகன்னனனிருக் கையிலேகன்மத்தினாலே
கரும்பிருக்கவேம்பைக் கருதுஞ்செய்கைபோலே
வீடுமனைச்

உ. போகாதவழிபோனால் வாராதபழிவரும்
பூர்த்தியாமனமில்லார் போரென்னஜெயந்தரும்
ஓகோஎருதினிற்பால் உண்டாகுமோஉயரும்
உனக்கரும்பகைவரை உசிதமாகப்பகரும்
வீடுமனைச்

௩. சினமுடனேஉன்னைச் செயித்திடஎந்தலோகா
திபர்வரினுங்கிட்டித் திருஷ்டித்துப்பார்க்கலாகா
உனதுதம்பியரைவர் ஒழிந்தாரொருவர்சாகா
உதவியாமென்னைவிட் டொன்றுங்கையிலாகா
வீடுமனைச்

கன்னன் சொல்லைக்கேட்ட துரியோதனன் தம்பியிறந்த விசனத்தால், வீரர்களைப்பார்த்து நாளைப்போரில், அருச்சுனனைக் கொன்றவர்க்கு என்வாழ் வெல்லாங் கொடுப்பேனெனல்.

விருத்தம் உக.

செறிந்தகன்னன்சொலக்கேட்டுச்-சிறிதும்பேசாதிருந்துபின்பு
நிறைந்துநிற்குமரசர்களை-நேராநோக்கித்தம்பியர்கள்
இறந்தவிசனத்தால்வெதும்பி-ஏங்கித்திகைத்துவீரமெல்லாம்
எறிந்தமனத்தோன்துயர்க்கடலி-லிழிவான்எளிமைமொழிவானே.

௰சுஃ. தரு-இராகம்-மணிரங்கு-சாப்புதாளம்.

பல்லவி.

என்னவீரம்என்னகெம்பீரம் - இனிமேல்நமக்
கென்னசாரம்என்னசிங்காரம்.

அநுபல்லவி.

முன்னமூக்குமுனைபோனல் என்னமாமறைப்பதையோ
சின்னபாண்டவரைத்தாக்க மன்னரில்லையதுபொய்யோ
என்ன

சரணங்கள்.

க. பஞ்சுபஞ்சாய்மன்னர் பறந்தார் - பின்னும்அநேக
படைமன்னர்ஆவி துறந்தார்
அஞ்சுபேர்தம்பியர் இறந்தார் - என்றுஞ்சண்டையில்
அந்தப்பாண்டவரே சிறந்தார்
பிஞ்சுகனிகாய்க்கலைந்த பஞ்சைகளெதிர்க்கலாச்சே
மிஞ்சியகர்ப்பூரமுமுப் புஞ்சரியாகிப்போச்சே
என்ன

௨. குண்டுணிமால்விடுதேர் மீது - சண்டைக்குவருங்
கொடியஅர்ச்சுனனைவி டாது
மண்டமரில்நாளைப் போது - போமுன்கொன்றோர்க்கென்
வாழ்வெல்லாங்கொடுப்பேன்தப்பாது
கண்டிதமீதேயாரெனுங் தண்டிலவனைநேரிடில்
அண்டியடித்துமுடுக்கிச் சண்டைசெய்துகொல்லாவிடில்
என்ன

ங. நம்மிலுள்ளவீரரா ரேரை - கண்ணிற்கண்டிடில்
நமனுங்குடியான்தண் ணீரை
இம்மட்டிலைந்துதம்பி மாரை - இழந்திட்டேனே
இவ்வுலகென்சொல்லும்என் பேரை
எம்மன்னரானாலும்ஐவர் தம்பியுயர்ந்தவிஜயன்
பொன்முடியைக்கொய்தாலல்லோ உண்மையாநமக்குப்பயன்
என்ன

துரியோதனன்சொல்லைக்கேட்ட வீஷ்ட்டுமர் விஜயனோடு எதிர்த்துப் போர்செய்யத்தக்க வீரர்களும் உண்டோ, இல்லை நீ துன்பமில்லா திருக்கவேண்டு மெனில், முன்போல ஐவரோடுசேர்ந்து வாழ்ந் திருவெனல்.

விருத்தம் ௨௨.

தளர்ந்திடுசுயோதனன்சொல்-சற்பனைகேட்டுப்பீஷ்மன்
களங்கமில்விஜயன்போரிற்-கதிர்த்தெதிர்ப்பவாரென்று
விளங்குமச்சபையில்நிற்கும்-வேந்தர்களெவருநெஞ்சிற்
றெளிந்திடும்படிநன்றாகத்-தெரிவிப்பான்விரிவிப்பானே.

௨௰. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

பார்த்தனையெதிர்ப்பார்உண்டோ - உண்டோகிட்டிப்
பார்ப்பவர்களும் உண்டோ.

அநுபல்லவி.

சீர்த்திபெறும்அரிய திவ்யகுணனும்பல
திக்கும்விஜயம்பெற்ற தீரனெனும்பிரபல
பார்த்

சரணங்கள்.

௧. சந்தமாணிக்கக்கல்லு தனக்குவேறொருகல்லைத்
தகுமென்றுசொல்வோரிந்தத் தாரணிமீதில்இல்லை
இந்தமட்டும்அவனை யார்வென்றார்வெல்கிறேன்
என்பவருண்டோஅன்றேஇசைத்தேன்இன்றுஞ்சொல்கிறேன்
பார்த்

௨. அவன்போருக்கவன்போரே அவன்வில்லுக்கவன்வில்லே
அவனுக்கவனேஇணை யல்லால்வேறென்னசொல்லே
கவலைகொண்டிடவேண்டாங் காண்டீபனுக்கிடு
காசினியிலுண்டென்ற கனவைநீவிட்டுப்போடு
பார்த்

௩. மிஞ்சுசிந்துக்கடலில் வீழ்ந்தலைந்தினிமேலே
மெலியாதிருக்கவென்றால் விருப்பமாமுன்போலே
அஞ்சுபேரொடும்நீங்கள் அனைவர்களும்ஒருமை
ஆகவாழ்வீரேஉங்கட் களவிறந்தபெருமை
பார்த்

வீஷ்ட்டுமர் அருச்சுனனைவெல்ல ஒருவராலும் ஆகாதெனக் கன்னன் நானேவெல்வேனென, அதற்கவர் நீ வெல்வாயானல் என் பட்டத்தை யுனக்கு இன்றேகொடுப்பேனென, துரோணர் நீயுஞ் சகுனியுந்தான் இக்கலகத்துக்குக் காரணமெனல்.

விருத்தம் உரு.

வீடுமனிவ்வாறுரைக்கக்கன்னன்கேட்டு
விஜயனைநானேவெல்வேனெனவப்பீஷ்மன்
நீடுபுகழ்விஜயனைநீவெல்வாயாகில்
நினக்கெனதுபட்டமின்றேதருவேனென்றான்
மாடுபிடித்ததைவிடுத்தும்வாயால்வெல்ல
வாய்த்தாயென்றேஅசுவத்தாமன்சொன்னான்
ஈடில்புகழ்துரோணர்கன்னுவுனக்கிவ்வீரம்
ஏனென்றார்கலகமுன்னாற்றானென்றாரே.

உக. தரு-இராகம்-சௌராஷ்டகம்-சாப்புதாளம்.

பல்லவி.

நீயுஞ்சகுனியுஞ்-சத்ராதிகளாய்-நேரிட்டீர்கள்இங்கே

அநுபல்லவி.

ஓய்வில்லாதிரவும் பகலுமென்மேலே
ஊமைக்குத்தெத்துவாயன் உற்பாதபிண்டம்போலே
நியாயமில்லாநியாயங் காட்டியிறப்பதற்கு
நாளிட்டுக்கொண்டுபா ராளுமன்னனுக்கு
நீயுஞ்

சரணங்கள்.

க. பரவுமதிகுலத்தை-மிகமதித்திடும்படி
பாண்டுசுதாய் வந்து - தெய்வ
பத்தியும்புத்தியும்-பொறுமையும்யோக்கியமும்
படைத்துப்புகழிற் சிறந்து
மருவும்ரிஷிகளாலும் வாழ்த்தப்படும்நல்ல
வர்களானஐவரை மனந்துணிந்துவல்ல
அரவக்கொடியோனுடன் சத்துருவெனச்சொல்ல
லாகுமோஅரிகரி அழிந்துபோகமெல்ல
நீயுஞ்

உ. திடமார்சித்திரசேனன்-சினத்தமர்செய்யும்போது
திகைத்துவெட்கங் கெட்டும் - மாட்டைத்
திருப்பிக்கொண்டுபோகும்-போதுமுதுகிட்டுச்
சின்னுபின்னப் பட்டும்

நெடுவானிற்கிரணசூ ரியனுஞ்செந்தாமரையும்
நேசித்தாற்போற்செய்விக் காமல்மிகளரியும்
கடுங்கொள்ளிபோல்மன்னன் கனங்கொள்மனங்கரையும்
கதைசொல்லுன்வீரம்பார்த்தன்கணையால்நாளைத்தெரியும்
நீயுஞ்

ந. வீசுபுகழ்கொண்ட-குருகுலமெந்நாளும்
விளங்கக்கிருபை பொழியும் - வேத
வியாசர்மொழியும்இன்னம்-வெகுபேர்முனிவர்கள்
வேண்டிச்சொன்ன மொழியும்
பேசுமிவ்வுலகுண்டோன் மொழியும்பரிசுத்த
பீஷ்மருரைத்திடு மொழியுமல்லால்மிகுத்த
ஆசையொடுபெற்றெடுத் தருமையாகவளர்த்த
அன்னைதந்தைமொழியுங் கொள்ளாவகைசெய்வித்த
நீயுஞ்

---

## துரோணர் சொல்லைக்கேட்ட கன்னன் கோபித்து என்னைக் குறைசொல்வோரைக் கொல்வேனென, தன்வாளையுருவ அதைக்கண்டு அஸ்வத்தாமன் தன் வாளையுருவிக் கொண்டெதிர்க்க, துரியோதனன் அதைக் கண்டு நடுங்கி நடுவில்வந்து இருவரையுந் தடுத்தல்.

விருத்தம் உச.

குருசொலக்கன்னனென்னைக்-குறைசொல்வோர்தமைக்கொல்வேனென்
றுருவினன்வாளையோர்வா-ளுருவியேஅஸ்வத்தாமன்
விரைவுடனேர்ந்தான்மன்னன்-மிகப்பயந்தெழுந்திருந்தே
அரியகாரியஞ்செய்தீரென்-றடுத்திட்டான்தடுத்திட்டானே.

உஉ. தரு-இராகம்-பைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

நான்கேட்டுக்கொண்டதற்கு-நீங்கள்செய்வதிப்போது-நன்றுச்சுநன்றுச்சு

அநுபல்லவி.

வான்றருப்போல்கொடுக்குங் கன்னனெனுந்தாதாவே
மயிலேறுஞ்சுவாமியைப்போல் வரும்அஸ்வத்தாமாவே
நான்

சரணங்கள்.

க. அரிதாகியஇந்த-உலகத்தனிலேவீரர்
ஆனோரிலுங்கள்நிர் வாகம் - எல்லாம்
அறிந்துபானுகண்டதா-மரைபோலென்னகமலர்ந்
தடைபலரெல்லாநாசமாப் போக

சருதிச்சண்டைச்குத்தலைப்-பட்டென்றன்தம்பியர்
களிலைந்துபேர்வீமனாற் சாகக் - கண்ணாற்
கண்டபடியாலந்தக் கவலையினாலெல்லோர்
களையும்பார்த்தினியந்தப் பழிதீரும்படியாக
நான்

௨. உரமாஉப்பிலூறு-மாங்கொட்டைமரமாகி
உற்றகாய்கனிதருமுறை போலே - நம்மால்
ஓடிப்போய்காட்டில்வெட்கம்-இல்லாதலைந்தவரும்
யுத்தத்துக்குவந்தாரேஒருக் காலே
எரியும்வர்த்திக்குத்தயி-லத்தைநிறுத்திப்போட்டால்
இருளாகிவிடுமல்லோஅத லாலே - பார்த்தன்
என்பவனைமாத்திரங் கொன்றோர்க்கென்வாழ்வெல்லாம்
ஈந்திடுவேனென்ன இதவாகமென்மேலே
நான்

௩. வீறெதிரிகள்மீது-படையெடாமல்நீங்களே
வெட்டுக்குநின்றீரவசரத் தோடும் - நல்ல
வேலைசெய்தீர்களிது-போதும்போதுங்கோபத்தை
விட்டுவாள்களையுறையில் போடும்
தாறுமாறுகப்பேசியோர்-படையிலுள்ளோரே
சண்டைசெய்வதோவந்துபோ ராடும் - ஒன்னார்
தம்மைவெல்வதெவ்வித மென்றெவரையுமாலோ
சனைசொல்லச்சொன்னதற்குத் தாவில்லாமல்வாடும்
நான்

---

துரியோதனன் இருவருக்குஞ்சொல்ல, அவர்களடங்கினார்கள். அப்போது வீஷ்ட்டுமர் திரிமூர்த்திகளாயினும் அருச்சுனனை வெல்வோமென எதிர்நிற்பார்களோவென்று சொல்லித் தன்னிருப்பிடம்போய்ச் சேர்ந்தார்.

சஞ்சயன் தம்பிமார்களைவர் இறந்தசங்கதி திருதராட்டிரனுக்குச் சொல்ல, இதைக் காந்தாரி கேட்டுப் புலம்பல்.

விருத்தம் உரு.

தலம்புரக்குஞ்சுயோதனன்சொல்லக்கன்னன்
தாமனும்நின்றார்பீஷ்மர்கிரீடிதன்னைப்
பலங்கொடுவெல்வோமெனமும்மூர்த்திமுன்னிற்
பாரோவென்றுரைத்திருப்பிடம்போயுற்றார்
அலங்கலணிவேந்தரும்பாசறையிற்சேர்ந்தார்
அச்செய்திசஞ்சயன்போய்ச்சொல்லவேந்தன்
புலம்பினான்காந்தாரியழஆரம்பம்
பொருந்தியொப்பனைசொல்லிவருந்தினாளே.

க. திபதை-இராகம்-மத்தியமாவதி-சாப்புதாளம்.

## கண்ணிகள்.

க. அருமையாகப்பெற்ற-மைந்தரேயெனக்குமுன்
அடைந்திரோ சொர்க்கம் - எமன்
ஆவியுள்ளளவும்-பூமியிலேயெனக்
காறுமோஇந்தத் துக்கம்

உ. பரவுமுலகெல்லாமா-ளுந்திருதராட்டிரபூ
பாலனுக்குத் தேவி - யாகிப்
பாங்காயிருந்த திக்-கோலத்தைப்பார்த்திடும்
படிக்கோயிக்கொடும் பாவி

ங. தாட்டிகமுளநல்ல-நூறுபிள்ளைகளைப்பெற்
றவளெனவிருந் தேனே - அந்தத்
தகைமைக்குமோர்குறை-வந்ததனுலேயென்
தன்னுயிர்பொருந் தேனே

ச. காட்சியாகமுத்தோன்-நாளையேசத்துருக்
களையதஞ்செய் வானே - அப்பால்
கனத்தசிம்மாசனத்-திருக்கும்போதுங்களைக்
காணுமல்நை வானே

ரு. உங்களண்ணனுயி-ருடனேயிருக்கும்போ
துங்களையெம பாசந் - தீண்டி
உயிரைக்கொண்டுபோன-தையையோவென்ன
மோசாலவித்தி யாசம்

சு. சங்கையில்லாமல்-இருந்தயெனக்குமித்
தாழ்வினைவைத் திரே - துன்பச்
சமுத்திரத்திலீன்றோரை-யாழ்ந்திடச்செய்யுமைந்
தர்களாச்செனித் திரே

எ. பேருலகினிலொரு-வரையுமதித்திடாத.
பிரசண்டசேனு விந்து - என்ற
பேர்கொண்டமகனே-நீயும்போனுயோ
பீமனுலேஇ றந்து

அ. வாரிசூழ்புவி-தன்னிற்சத்துருக்கள்
மயங்கிமதிம ருண்டு - சாக
மாட்டுஞ்சுதக்கனு-நீயும்போனாயோ
மாருதியாலு ருண்டு

கூ. கனவிலும்அண்ணனை-மறவாமலவன்கோடு
கடவாமற்கீழ்ப் படிந்து - வந்த
கண்மணிப்பிங்கல-சாநீயும்போனாயோ
கதைவீமனால் மடிந்து

ய. மனஞ்சற்றுங்கலங்காமல்-யானைக்கூட்டத்தைக்கண்ட
வரிச்சிங்கம்போற் பாய்ந்து - பகை
வாட்டுஞ்சலாசந்தா-நீயும்போனாயோ
மதவீமனால் மாய்ந்து

யக. குவலயத்துன்னண்ணனுக்குச்சத்துருவென்ற
கூட்டமெல்லாம் அழிந்து - போகக்
கோபஞ்செய்வீமவாகு-வேநீயும்போனாயோ
கொடும்வீமனால் ஒழிந்து

யஉ. தவறிலாமல்நீங்க-ளெவருமொருமுகூர்த்
தந்தனிற்பர கதியே - சேர
தாபிதமாயெழுதி-னானேபிரமன்முன்பு
தானேஇத்தலை விதியே

யங. இந்தயுத்தம்நேராமல்-பெற்றோர்சமாதானம்
ஏதெனுஞ்செய் தாரோ - இல்லை
ஏயவர்கள்முகத்திற்-போய்விழித்திடலாகா
தென்றையோஇறந் தீரோ

யச. குந்திமைந்தரிலைந்து-பேரிலொருவரேனுங்
குறையாதிருக்கும் போது - நான்
தந்தமைந்தரிலைந்து-பேர்நீங்கள்மாண்டபா
தகமேதோதெரி யாது

———

## ஐந்தாநாள்.

### இருவர்படைகளும் எதிர்த்து யுத்தஞ் செய்யும்போது அருச்சுனனும் வீடுமனும் எதிர்த்துப் போர்செய்து அநேகரைக் கொல்லுங்கால், வீமனெதிர்த்து அநேகரைமாய்க்க, அவனோடு துச்சாதனன் எதிர்க்க, அவனை வீமன் முதுகிடச்செய்ய அதைத் துரியோதனன்கண்டு வந்தெதிர்க்க, அவனை மூர்ச்சையாக்கி சேனைகளில் இருபத்தையாயிரம் பேரைக் கொல்லல்.

விருத்தம் உசு.

சித்தமிந்தப்படிகலங்கிக்குருடன்தேவி
திகைத்தழும்வேளையினிலெழிற்பூமிதேவி
தத்தைமொழிதிரௌபதியைவேந்தர்சூழ்ந்த
சபைக்கிழுத்தஅந்நாளில்வாயிலுள்ள
முத்துதிருமென்னுசும்மாஇருந்ததீமை
மூண்டதெனவேநகைத்திட்டாளைந்தாநாள்
உத்தமசூரியனுதித்தான்எவருங்கோபம்
ஊன்றினர்சண்டைசெய்யத்தோன்றினரே.

உரு. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

நடந்ததேசண்டை - ஐந்தாநாளில்
நடந்ததேசண்டை.

அநுபல்லவி.

தொடுங்கனபேரி நாகசுரமேளம்
துந்துமிசல்லரி சங்கம்எக்காளம்
இடிமொலியாலிந்த எட்டுத்திக்கினுமுள்ள
யாவருமிகப் பயப்பட
தேவருமதி சயப்பட
நடந்ததே

சரணங்கள்

க. அரக்கனுடையதண்டும் ராமனுடையதண்டும்
ஆகயெதிர்த்திட்டே அந்தப்படைஇரண்டும்
வருத்துங்காலருத்ரன்போல் மகத்தானகோபங்கொண்டும்
மாயன்விடுந்தேரின்மேல் வரும்அர்ச்சுனனைக்கண்டும்
இருப்பதோசும்மா என்று - பீஷ்மன்அவனுக்
கெதிராய்த்தடுத்து நின்று - சரக்கோவைகள்

எடுத்தெடுத்தொன்றுக் கொன்று - விட்டுச்சமரில்
இருவருமிகக் கனன்று - நிற்கப்பீஷ்மர்க்குக்
கருத்தொடுதுணைவந்த கலிங்கனுடன்அனந்த
காவலர்கள்வருந்தக் கணைகள்விடுத்துமுந்த
விரட்டிவிட்டைந்துகணை விஜயன்போடப்பீஷ்மர்
வெல்லும்வாளியு முறிந்திட
வில்லின்நாணியுந் தறிந்திட
நடந்ததே

உ. சண்டமாருதவீமன் றன்னைச்சூழ்ந்துகொண்ட
தாணிபரில்வெகுபேர் தலைகைகால்கள்துண்ட
துண்டமாகியுயிர் சோர்ந்துபோவதைக்கண்டு
துச்சாதனன்வெகுண்டு துணைவரொடுந்திரண்ட
மண்டலீகரொடுஞ் சாடும் - வீமனைவந்து
வளைத்துக்கொண்டுபோ ராடும் - போதொருவில்லை
வளைத்துவீமன் போடும் - கணையால்அவர்
வந்தவழியே யோடும் - படிக்குச்செய்து
மிண்டனுகவேயன்று வீரபாவைபுகன்று
வீமனிற்கையிலின்று மெய்யாஇவனைக்கொன்று
விண்டலத்துக்கனுப்பி விடுவேனெனக்கபடன்
விருதுகூறி யரவக்கொடி
இரதமேறி வாஇப்படி
நடந்ததே

ங. வந்தசுயோதனன்பத்து வாளிகளையெடுத்தான்
மதகரியெனும்வீமன் மார்பிற்பாயத்தொடுத்தான்
பந்தயம்பேசிவீமனோர் பாணந்தனைவிடுத்தான்
பாய்ந்ததுதீயன்மேற் படவேபிரம்மையடுத்தான்
அந்தப்பிரம்மையி னாலே - சோர்ந்தான்கண்ட
அரும்பூரிசிராவொருக் காலே - வந்திரண்டம்பை
அடல்வீமன்தன் மேலே - விடுத்தான்சாத்
தகியவனைத்தீப் போலே - நேர்ந்தான்இவர்
சந்ததத்தேர்முதலற்றுத் தாணிமிசைக்குதித்துத்
தாம்வாள்கள்பிடித்துச்-சண்டைசெய்தார்கொதித்து
அந்நாட்சண்டையில் அவ்விருதளத்திலும்
அரசர்க்குள்ளே யறுதியாகவும்
இருபத்தையா யிரவர்சாகவும்
நடந்ததே

## ஆறுநாள்.

திட்டத்தூய்மன் மகரவியூகஞ்செய்ய வீடுமன் கிரவுஞ்சயூகம் வகுக்க, வீமராஜன் குருவினைப்பதாதியாக்கி, சல்லியனைத் தேரோடுமெடுத்தெறிந்து அநேக வரசர்களைக் கொன்று சுயோதனனை வாட்ட, அபிமனனும் விகர்னனோ டெதிர்த்தல்.

விருத்தம் உஎ.

ஆறுநாள்திடத்துய்மன்மகரயூகம்
அமைத்தான்வீடுமன்க்ரவுஞ்சயூகஞ்செய்தான்
மாறுதகுருவினைப்பதாதியாக்கி
வாரித்தேரொடுசல்யன்றனையெறிந்து
வீறுதுசுயோதனனையப்பால்வாட்டி
வேந்தரநேகரைக்கொன்றான்வீமராஜன்
நீறுசச்செயஅபிமன்விகர்னன்மீது
நேரிட்டான்சலியாமற்போரிட்டானே.

உச. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

அபிமன்னன் சாடினனே - விகர்னன்மிக
அகம்நொந்துவாடினனே.

அநுபல்லவி.

கபடமேகுடிகொண்டு கடியுஞ்சுயோதனனைக்கை
காலாடாமலடக்கி கதிக்கும்வீமன்மேற்கோபங்
காட்டிவருமவனை மாட்டும்படிமடக்கி
அபிமன்னன்

சரணங்கள்.

௧. வேகமாயபரி மிதம் - இல்லாக்கணைகள்
விட்டவனுடைய ரதம்
பாகன்குதிரையுன் னதம் - மிகுந்தவில்
பாணமுதல்தர அதம்
ஆகச்செய்ததுமல்லா - லாக்கிரமித்தொருசிங்க - மாமெனச்சீறவே
அருகுறுஞ்சித்ரசேன-னைதம்பித்தேர்மிசை-யவன்குதித்தேறவே
அபிமன்னன்

௨. மீளவுந்தனது தம்பி - மாரோடுஞ்சில
வேந்தர்களோடுந் திரும்பி
வாளிகளாங்க நிரம்பி - விடவிகர்னன்
வந்துதொடுத்தான் வெதும்பி

ஆளிபோற்கணைகளை - யறுத்தெறிந்தெதிர்த்தவ - ராகத்தினுடைய
அம்புமாரிசொரியும்-ஆண்மையைக்கண்டவர்-அகமெலிந்துகுழைய
அபிமன்னன்

௩. விரைவில்அபிமன் வாங்கி - விடுங்கணைகள்
விகர்னனுடலில் ஓங்கி
உருவும்வழியிற் றேங்கி - உதிரவெள்ளம்
ஓடப்பகைவ ரேங்கி
அரசன்தம்பிக்கிவ்விதம்-ஆகிலிவனைவெல்வ-தாரெனஇடையவும்
அவன்தந்தைமார்கள்கண் - டகமதிலேமிக - ஆனந்தமடையவும்
அபிமன்னன்

---

ஏழாநாள்.

கிருஷ்ணன் மாசுணயூகம்வகுக்க, பீஷ்மன் சகடயூகஞ் செய்ய, இருவர்படையுங் கலந்து யுத்தஞ்செய்யும் போது துரோணச்சாரியால், பாண்டியன் முதுகிட கடோர்க்கஜன்கண்டு மாயையால் யானைக்கூட்டங்களை யுண்டுபண்ணிக் கொண்டு யானைமேல் வந்து போர்செயல்.

விருத்தம் உஅ.

ஏழாநாள்மாசுணயூகங்கிருஷ்ணன்செய்
திட்டான்பீஷ்மன்சகடயூகஞ்செய்தான்
தாழாதபாண்டிமன்னன்துரோணன்போரிற்
றயங்கியோட்டம்பிடித்தான்கடோர்க்கஜன்றன்
ஊழாமாயையிற்கஜத்தின்கூட்டமாகி
யுயரானைக்கெல்லாம்பாகனுந்தானுகிச்
சூழானைமேல்வருமன்னவரைக்கண்டு
துடித்திட்டான்கஜப்போரைமுடித்திட்டானே.

---

இவ்வாறுபோர்நடக்கும்போது சாத்தகியைச் சதாயுவென்று முதுகிடச்செய்ய, சருனி சல்லியன் முதலிய அரசர்களை வீமன் புறங்கொடுக்கச்செய்ய, வீஷ்ட்டும னேடு அர்ச்சுனன் எதிர்த்து கணக் கற்ற அரசர்களைக் கொல்லல்.

விருத்தம் உகூ.

இன்னவகைபோர்நடக்கும்போதுமாலுக்
கிளையவனுஞ்சாத்தகியைச்சதாயுவென்போன்

பின்னிடவேயடித்துவெற்றிகொண்டான்மேலும்
பெருங்கடல்தன்னைப்போலேசூழுஞ்சேனை
தன்னுடனேவருசகுனிசல்யன்தம்மைத்
தருவீமன்வென்றுஜெயமாலைபூண்டான்
மின்னுவடவாக்கினிபோல்பீஷ்மன்வந்து
மீறினன்விஜயனெதிர்சீறினனே.

உரு. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

விஜயனுக்கும்அந்த-பீஷ்மராஜனுக்கும்-விளைந்ததேயுத்தம்

அநுபல்லவி.

இசைரகுராமனும் ராவணனும்போலும்
எழில்முருகனுஞ்சூ ரனும்போலுமென்மேலும்
விஜயனுக்கு

சரணங்கள்.

க. ரதத்தோரும்ரதத் தோரும் - யானைக்கா
ரர்களானஅனை வோரும்
முதிர்சினத்தோடு நேரும் - குதிரைக்கூட்ட
முங்காலாளான பேரும்
அதியுக்கிரமாக அமரிடவேயநேக
அணித்தேருங்கரிகளும் அளவில்லாப்பரிகளுஞ்
சிதைவுற்றிடப்பலர் காங்கால்குறையச்
செத்தோரிற்பல பேர்போய்மறைய
இதைப்போலேயுத்த முண்டோவென்ன
எரிவடவாக்கினிபோற் கண்கள்மின்ன
விஜயனுக்கு

உ. மதிக்கும்வீரர்களா ஞேரே - மயங்கச்சர
மாரியாப்பொழிந் தாரே
அதில்மெலியா ராரே - இவ்விருவ
ரால்மாய்ந்தோர்கள் நேரே
உதிரஆற்றிலோட ஊனக்கவந்தமாட
உயிர்களெல்லாம்வாட உயர்நமன்கண்மூட
இதுவூழியெனச்சொல்ல எங்குநிர்த்தூளி
எய்தும்படிசெய்ய இவர்கள்தொடுக்கும்வாளி
எதுவுந்தங்கள்மெய் யினிலேதைக்க
இடங்கொடாமல்நற் சிறப்பில்மிக்க
விஜயனுக்கு

ந. நிறைந்தவண்மை மேவி - யுத்தஞ்செயும்
நிலமெங்குந் தாவி

செறிந்தகணைகள் தூவி - முனிவதாலே
சின்னபின்னமா ஆவி
குறைந்தவர்களைமெல்லக் கூட்டிக்கணக்குச்சொல்லக்
கொஞ்சமோஎன்னுவுங் கூசுதையோயார்க்குச்
சிறந்தவிவ்விரு தறத்தோர்போரில்
செய்தஆறுநாட் போரிலும்பாரில்
இறந்தோர்க்காறுபங் கதிகமாகவே
இந்தச்சண்டையி லிறந்துபோகவே
விஜயனுக்கு

---

எட்டாநாள்.

வீஷ்ட்டுமன் தன்படையைச் சூசிகாயூகமாகவகுக்க, கிருஷ்ணன் சகடயூகஞ்செய்ய, சுயோதனன் தன்தம்பியரோடும் வந்து வீமனோடெதிர்த்து பாணவருஷம்பொழிய, வீமன் அவன் தம்பிமார் எட்டுபேரைக்கொல்ல அதனைக்கண்ட துரியோதனன் பாட்டனோடு முறையிடல்.

விருத்தம் கூய.

இணையிலெட்டாநாள்வீடுமன்சூசி-யெனுமுயர்யூகமேவகுத்தான்
இனியமால்சகடயூகமேசெய்தான்-எழிற்றன்மபூபதிநேற்று [தே
அணிபெறுதனதுபடைஜெயங்கொள்ளா - தான்மிகமனங்கொதிகொதித்
அமரிடைவந்தான்சுயோதனராஜன்-அரியதம்பியரொடும்வந்து
துணிவுகொள்வீமன்றனைவளைத்திட்டான்-சொல்லவனரியதம்பியர்கள்
சுடுகணைவீமன்மேற்பொழிந்திட்டார்-துடிதுடித்தேமதவீமன்
பணிக்கொடியோன்தம்பியர்களெட்டுப்பேர்-படக்கணைவிடுத்தனன்மூத்த
பாவியன்னோர்கள்மடிந்ததைப்பாட்டன்பாற்சொலிமுறையிடுகுவனே.

உசு. தரு-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

பல்லவி.

நீயிருக்கும்போதுமெய்யா-இடர்-நேரலாமோயெனக்குஐயா

அநுபல்லவி.

தாயைப்பார்க்கிலுமதி தயவாயென்னவந்தாலுஞ்
சாதிக்கும்படிபீஷ்ம தகுநெடுமலைபோலும்
நீயிருக்கும்

சரணங்கள்.

க. தந்தைக்காயாசையை விண்டாய் - ராச்சியம்
தம்பியர்க்கருள்கிலே கொண்டாய்
உன்தன்கிருபையெனக் குண்டா - இருந்தும்
என்தம்பியர்மாண்டார் கண்டாய்

சந்த்ரகுலத்தைக்காக்கத் தயவோடுதிரிலோக
சங்காரமூர்த்திபோற் சாட்சாத்காரமாக
நீயிருக்கும்

உ. சதியாலோர்முகூர்த்தத்திற் றுனே - எட்டுத்
தம்பியரைவீமன்கொன் றுனே
அதையென்கண்ணுலேகண் டேனே - கைகால்
ஆடாமலகமெலிந் தேனே
கதையலவேயென்ன கஷ்ட்டம்வந்தாலுநீக்கக்
கண்ணில்எண்ணெய்குத்திக் கொண்டுபாதுகாக்க
நீயிருக்கும்

ங. அன்னைதந்தைகுருதெய்வம் என்றே - நம்பி
அடுத்தேனேயதுபழு தன்றே
சினமாவுனையெதிர்த்து நின்றே - வெல்லுந்
தீரர்களில்லையென்ப தொன்றே
தினமும்எண்ணும்என்னெண்ணஞ் - செழிக்கச்சண்டைக்கடுத்துச்
சேனாதிபதியாய்ச்செங் கோலுங்கையிலெடுத்து
நீயிருக்கும்

---

## துரியோதனன் வியசனத்தை வீஷ்ட்டுமன் அரசர் நீதிசொல்லி மாற்றுதல்.

விருத்தம் ஙக.

கேட்டனையோயிவையென்னஅழுதுதேம்பிக்
கிஞ்சித்துமுணர்வின்றிப்பேயன்போல
வாட்டமுற்றுமுத்துமுத்தாய்கண்ணீர்சிந்தும்
மன்னன்சுயோதனனுடையவதனம்பார்த்துப்
பாட்டனாகியபீஷ்மனையாதுக்கப்
படலாகுமோவெனவுமிகவுமங்கே
தாட்டிகமாமரசர்தங்கள்நீதியெல்லாஞ்
சாற்றுவானவன்மனதைத்தேற்றுவானே.

உஎ. தரு-இராகம்-பைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

விசனப்படாதே - துரியோதனா - விசனப்படாதே

அநுபல்லவி

நிசமாகவேபோர்க்கு நேரிட்டிறந்தபேர்க்கு
விசனப்

சரணங்கள்.

க. அமர்க்களத்தினில் அந்த
அருந்துணைவர் இந்த

அலங்கோலங்கண்டு வந்த
தாலேகண்ணீர் சிந்த
விசனப்

௨. ஆயுதங்கொண்டென்ன சாரம்
அமரில்வெல்வதே வீரம்
அல்லதமரிற்ச ரீரம்
அழிவதுவேகெம் பீரம்
விசனப்

௩. அந்தணர்தவத்துக் கஞ்சார்
அத்தத்தோர்அறத்துக் கஞ்சார்
அகத்தோர்விருந்துக் கஞ்சார்
அரசர்யுத்தத்துக் கஞ்சார்
விசனப்

---

## பின்னும் வீஷ்ட்டுமன் துரியோதனனுக்கு இனி நடக்கப் போகுங் காரியங்களையும், முன்இவன்நடந்ததுஷ்டத் தனத்தையும், எடுத்துச்சொல்லி, இடித்தல்.

விருத்தம் ௩௨.

வாடியமும்பொய்யன்முகத்தைப்பார்த்திந்த
வகையாகத்துடைத்துமறுபடியும்பீஷ்மன்
நாடியவன்முகநோக்கியின்னம்நியாயம்
நவில்வதிலோர்பயனுமிலையென்றறிந்தும்
கூடியமட்டுந்தான்முன்புரைத்தநீதி
குறித்தவன்கேளாதிருந்தமதியையெண்ணச்
சோதனையாயினிநடக்குஞ்செயலீதென்று
துடிக்கின்றான்வார்த்தையினாலிடிக்கின்றானே.

௨அ. தரு-இராகம்-நாட்டை-சாப்புதாளம்.

பல்லவி.

இந்தமட்டும்விட்டது-என்றுநினையாதே-என்வார்த்தைபொய்யாதே

அநுபல்லவி.

முந்தத்துரியோதன முடிதரித்தோரிலே
முறைபிசகியாண்டதார் மொழியிந்தப்பாரிலே
இந்த

சரணங்கள்.

௧. வாழ்வுதனைக்கபட வழியாயபகரிக்க
மாயச்சூதாடிய மாளாக்குற்றம்இருக்க
ஊழைகளென்றைவரை-யொறுத்துமாதுதுயிலை
யுரிந்தாயே ஒருமிக்க

ஆழிசூழுலகிலவ் அருந்ததிநிகரம்மா
தவைபிலழுதகண்ணீ ரையோபோகுமோசும்மா
ஏழையழுதகண்ணீர் கூரியவாளொக்கும்
என்றமொழியுன்றனை யென்றுங்கருவறுக்கும்
இந்த

௨. அற்பனுஞ்சகுனியும் அளவில்லாதநிரூடி
யானதுச்சாதனனும் அகமகிழ்ந்துறவாடிச்
சற்பனைசெயுங்கன்னன்-தருந்தநீயுந்துஷ்டத்
தனமாம்எண்ணத்தைக் கூடி
நற்புத்தியின்றியிங் நாள்வரைக்கும்புரியும்
நியாயங்களெல்லாம்அப்பா நானேயல்லோதெரியும்
உப்பிருந்தபாண்டமும் உளவிருந்தநெஞ்சமும்
உடையுந்தனக்குத்தானே ஓகோஉனைக்கொஞ்சமும்
இந்த

௩. புஜபலவிதுரன்நீ புகன்றிடுங்கொடுஞ்சொல்லைப்
பொறுக்கமாட்டாதொடித்துப்-போட்டுவிட்டான்வில்லை
அசைவிலாக்கன்னனும்-அதிரதனுகாமல்
அமர்க்குவருவ தில்லை
விஜயனும்வீமனும் மேலிட்டுவரும்போது
மெய்யாநீயுநானுமே யல்லால்எவரோது
வசமாகமேலோர்கள் வழுத்தும்நீதியிற்காணும்
வழிதப்பிநடப்போர்கள் வந்ததைத்தாங்கவேணும்
இந்த

௪. மதிக்கும்புவியிலார்க்கும் வாழ்வருள்பெருமானும்
மருந்துக்காகிலுமோர்பொய் வசனியாப்பெரியோனும்
சிதைவிலாமலங்கே-செழித்திருக்கிறரென்று
தெரியுமுனக்கு நானும்
உதவியற்றுச்சமரில் உருள்வதுவேநிச்சயம்
உயரவீசுங்கல்விழா தோஉண்டோசம்சயம்
அதமாகாதைவரால் அடுத்தநமதுபாடை
யத்திலொருவர்தப்பார் அறியப்போகிறாய்நாளை
இந்த

௫. சிந்தையுமெலிந்தையோ தேகமுந்தள்ளாடி
திகைத்துநின்றபலமாய்ச் சிந்திப்பதேன்வாடித்
தொந்தமாகவுனக்குச்-சொல்லுகிறேன்உறுதி
துரைகளெல்லாங் கூடி

அந்தச்சேனையைநோக்கி அடித்துக்கொண்டுபோவோம்
அகப்பட்டவரைக்கொல்வோம் அல்லதங்கேசாவோம்
சந்தேகமில்லையிது சரிசரிகோபத்தோடு
தண்டிலேபோனலி ரண்டிலொன்றும்பிற்பாடு
இந்த

---

துரியோதனனுக்கு வீஷ்ட்டுமர் இவ்விதமாகச்சொல்லி, அவர் போர்க்குச் செல்ல, அரவான் எதிர்த்து துரியோதனன் சேனையைப் பாழாக்குதல்.

விருத்தம் ௬௬.

உரகேதனனுக்கிவ்வாறுரைத்தே
யுடனேபீஷ்மன்தேர்மேற்போர்க்குச்சென்றான்
எரிவிழிக்கடோர்க்கஜன்தாஞெருவனோரா
யிரவடிவமாயொருபாற்சென்றுசீறி
விரவியசேனைக்கடலைக்கலக்கிமிக்க
வேகமொடுசண்டைசெய்தான்விஜயன்மைந்தன்
அரவானோர்பாற்குருசேனைகளைத்துள்ள
அடித்திட்டான்க்ஷணத்தனிலேமடித்திட்டானே.

உகூ. தரு-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

அரவான்செய்தானேயுத்தம் - குருசேனைக்குள்
ஆச்சுதேவெகு அனத்தம்

அநுபல்லவி.

ஒருவனும்பதினாறு யிரவுருவமெடுத்து
அரவான்

சரணங்கள்.

க. பாரவில்லினைத் தூக்கி - அலம்புதன்
படையைமுழுதும் நோக்கிக் - கணக்கில்லாத
பாணமாறுமற் போக்கி - ராட்சதரெல்லாம்
பறக்கும்படியாத் தாக்கி - எதிர்த்துவரு
வோர்பலத்தினிலை நீக்கி - அவர்கணையை
ஒடித்துக்கோபங்கொளவாக்கி-யத்தைவிடாமல்
ஓங்கியேவோர்து பாக்கி - எனப்பிராணனை
ஒருக்ஷணத்திற்பா ழாக்கி - நின்றபொழு
தாரும்உகாந்தகாலம் ஆமெனப்பயந்திட
அமரிற்றலைகாட்டாமல் அலம்புதனோடிவிட
அரவான்

உ. அரியயானைகளை வாட்டிக் - குதிரைகளை
அங்கங்கேவிழ மாட்டி - இரதங்கள்
அழியக்கணைகள் பூட்டி - பதாதிகளை
அஸ்திரத்தாற்குளிப்பாட்டி - முனைந்துவரும்
புரவலர்பேரடும் ஈட்டி - முதற்படைகள்
பொடிப்பொடியாகக்காட்டி - அவருயிரைப்
பொங்கும்அம்புகளுக் கூட்டி - மற்றோர்களைப்
போகும்படியா யோட்டிக் - கடலைப்போல
விரியுஞ்சேனைகள்நடு வினிலொருபேரிடி
வீழ்ந்தாற்போலேயிரைச்சல் மிகுந்திடஅடிக்கடி
அரவான்

ரூ. எவர்களையுஞ் சாடக் - குதிரையுடன்
இறந்தயானையைக் கூட - அடித்துக்கொண்டு
ரத்தவெள்ளங்கள் ஓட - உக்ரகோர
ரணபத்ரகாளி நாடத் - தொந்தோமென்று
கவந்தங்கள்கூத் தாட - பேயும்பூதமும்
களித்துக்கீர்த்திகள் பாட - பற்றிச்சலித்துக்
காலதூதரும் வாட - எல்லோருமிவன்
கம்பீரத்தைக்கொண் டாட - இப்பகற்குள்
செவ்வையாநானொருவனே சேனையெல்லாமொடுங்கச்
செய்கிறேனென்றெட்டுத் திக்கும்நடுநடுங்க
அரவான்

---

## அலம்புதனல், அரவான் மடிய அதைக்கண்டு அபிமன் எதிர்த்து அளவற்ற சேனைகளை மடிக்க, அப்போது பொழுதுபோய் யாவரும் பாசறையைப்போய்ச் சேர்ந்து துரியோதனன் கன்னனைப் பார்த்துப் புகழ்தல்.

விருத்தம் ௬௪.

ஓடிமறைந்தலம்புதனோர்கருடனாக
உருவெடுத்தானரவான்பல்லுருவுமொன்றாய்
வாடிநின்றானவ்வரக்கன்வாளால்மாய்த்து
மகிழ்ந்ததைக்கேட்டபிமன்வெகுபேரைக்கொன்றான்
பீடுறுவீமன்கபடன்தம்பின்னேழு
பேரைமடித்தானிரவிமறைந்தான்யாரும்
பாடிசென்றார்சுயோதனன்கன்னனைப்பார்த்துன்கண்
பாரென்பானுனக்குநிகராரென்பானே.

௬ய. தரு-இராகம்-எமுனுகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

நீயெடுத்திடில்வில்லே-என்றும்-நேர்ந்திடாதொருதொல்லே

அநுபல்லவி.

ஆபிரம்பேரிருந் தாலும்என்னசாரம்
ஐயாகன்னுஎனே யாளஇந்நேரம்
நீயெடுத்

சரணங்கள்.

க. தீர்க்கமாகநீகூஷாத் திரங் - கொண்டு
சென்றுலவர்கள்எம்மாத் திரம்
பார்க்குளெவனுனைப் பார்க்கிலுஞ்சமர்த்தன்
படைக்குமொருத்தன் கொடைக்குமொருத்தன்
நீயெடுத்

உ. தனுவெடுத்தவா சானும் - படைத்
தலைவனும்பெரி யோனும்
இனிவெல்வார்ஜெய மென்றனுக்குமுண்டாம்
என்றுகனவிலும் எண்ணவேண்டாம்
நீயெடுத்

ந. உண்மைத்தம்பிமார் ஐயோ - வீமன்
ஒருவனுல்மாண்டார் பொய்யோ
வெண்ணெயிருக்க நெய்க்கழவென்னவிதி
வீராதிவீரர்கள் மெச்சுங்குணநிதி
நீயெடுத்

---

**துரியோதனனைக் கன்னன் பார்த்து என்னையரசர்கள் முன்பாகப் பாண்டவரைக்கொல்ல,எனக்குவலியில்லையென்று சொன்னவரைப் புல்லைக்கடிக்கச் செய்வாயானல், உன்சத்துருக்களைக்கொன் றுனக்கு முடி சூட்டுவே னெனல்.**

விருத்தம் ௬௫.

வாட்டமுறுமன்னனுரைவினவிக்கன்னன்
மனமெலிந்துபீஷ்மனுரைசெய்ததெல்லாம்
கேட்டதிலேயோவவனுக்குந்தேருண்டு
கிரிபோலும்வில்லுண்டுபாணமுண்டு
கோட்டமிடுபகைவர்களைக்கொன்றிப்பாரைக்
குறையாமலுன்றனக்குத்தருவானந்தப்
பாட்டனேயென்மீதிலேனேசொல்வாய்
பழிஎன்றன்கேட்பாயென்மொழியென்றனே.

விருத்தம் ௩௬.

மன்னகேள்பஞ்சவரைவெல்ல-வலுமையெனக்கிங்கில்லையென்ன
மின்னுஞ்சிலையாசான்மகுட-வேந்தர்முன்னேமொழிந்துநற்புல்
தன்னைக்கடிக்கவிசைந்தா-விச்சணத்திற்ற னேசகமுழுதும்
உன்னையாளச்செய்வேனென்-றுரைப்பான்மனத்தைக்கரைப்பானே.

௩௧. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

இக்கணமிப்புவிமுற்றுமளிப்பேனே - யுனக்குநானே
இக்கணமிப்புவிமுற்றுமளிப்பேனே.

அநுபல்லவி.

பக்கபாதகஞ் சொல்கிறயதுமேலா
பகருந்துரியோ தனபூபாலா
இக்கண

சரணங்கள்.

௧. எண்ணிப்பாராமலே
விளைந்திடவீண் தொல்லை - உன்பாட்டனென்னை
இராஜர்முன்னேசொன்ன
அகந்தையாகிய சொல்லை
எண்ணும்போதுபற்றி எரியுதேதேகம்
இல்லாவிட்டால் என்னசந்தேகம்
இக்கண

௨. பாண்டவர்மீதிப்
போதெடுத்திட வில்லைப் - பீஷ்மன்தனக்குப்
பயமிருந்தாற்கடித்
திடச்சொல்வாய் புல்லை
வேண்டுவதில்லையெனக்-குப்படையுன்முடி
மீதினில்வைத்தெழில் நவரத்தினமுடி
இக்கண

௩. கொடுமைசெய்பகைவர்கள்
எவர்களும்அடி யோடு - மடிந்துப்போதே
குடியேறச்செய்கிறேன்
உயர்விண் ணுடு
நெடுமாலும்படை யினிலேமாளவும்
நீயேராஜர்கள் எவரையும்ஆளவும்
இக்கண .

துரியோதனன் கன்னன் சொன்னதை வீஷ்ட்டுமருக்குச் சொல்ல, துச்சாதனனை யனுப்ப அவன் வார்த்தை யைக் கேட்டு, வீஷ்ட்டுமர் நகைத்து நாளை யவ்வாறே செய்து கொள்வீரெனல்.

விருத்தம் ௬எ.

கன்னனுரைத்ததுபீஷ்மனுடனேசொல்லக்
கடுந்துரியோதனன்துச்சாதனனைவிட்டான்
சின்னமுறுமவன்சொல்லக்கலகலென்னச்
சிரித்தந்தப்பேரனுரைமுழுதுங்கேட்டுப்
பன்னரியபீஷ்மனுங்களுடனேயென்றன்
பராக்கிரமஞ்சொல்லியினியாவதென்ன
மன்னுமுங்கள்வீரமதையார்தான்சொல்லு
வாரென்றுன்நாளைவருஞ்சீரென்றனே.

௬உ. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-சாப்புதாளம்.

பல்லவி.

ஒருநாள்மாத்திரம்பொறுப்பீர்-இதற்-குள்ளேயேன்ஆத்திரம்

அநுபல்லவி.

திரமாச்சத்துருக்களைச் சிதறச்செய்துமுளை
ஜெகமாளஎப்போதுஞ் சிந்திக்குந்துள்ளுகாளை
துரியோதனனெண்ணஞ் சிந்திப்போகும்வேளை
துரிதமாவரும்வெகு தூரமல்லநாளை

ஒருநாள்

சரணங்கள்.

க. ஊரில்விஸ்த் தாரம் - வலுமைபேசு
வோருண்டிங் நேரம்
பேரனே வீரம் - இனிமீதுநான்
பேசிலென் சாரம்
காருடமோஉயர்ந்த கம்பத்திலாடுவோருங்
கடிதிற்கீழேவந்துதான் கையேந்தும்படிநேரும்
மேருபுஜதர்மனை வெல்லுவோரில்லையாரும்
வீமன்கையாலழி வீர்கள்நூறுபேரும்

ஒருநாள்

உ. கூடவே சூதும் - வாதுமுடையீர்
குறையோவென் மீதும்
ஈடேற தேதும் - இனிமேல்நீங்கள்
என்செய்த போதும்

வீடுமன்தடைசொல்வான் என்றுங்கட்குவிதனம்
வேண்டுவதேயில்லை மெய்யாநீங்கள்பதனம்
ஆடம்பரத்துடனெல் லாருமொன்றாய்மனம்
ஆனமட்டும்பொறுத் ததுபொறுத்தீரேயினம்
ஒருநாள்

௩. சத்துருக்கள் வீழச் - செய்துமற்ற
தரணிபர் தாழ
உற்றார்கள் சூழ - நீங்கள்எல்லோரும்
ஒருமித்து வாழ
சித்தமுடையகன்னன் செய்வான்கூடியமட்டுஞ்
சீர்தருநாடுமற்ற தேசமுந்திசையெட்டும்
புத்தியுடனேயாள்வீர் போகமெல்லாங்கிட்டும்
புண்யசாலிகளாவீர் போனதுபோகட்டும்
ஒருநாள்

---

## ஒன்பதாநாள் யுத்தத்தில் வீமனால் அலம்புதன் இறத்தல்.

விருத்தம் ௩அ.

என்றுவிடைதந்துசிறிதுறங்கிப்பீஷ்ம
னெழுந்தொன்பதாநாளின்கடன்கழித்துச்
சென்றொப்பிலாதசயபத்திரயூகஞ்
செய்தான்மாதவன்பத்மராகயூகம்
ஒன்றுசெய்தானலம்புதனென்றுரைக்கும்வல்லோன்
உக்கிரகார்க்கோடகன்போல்வீமன்றன்னை
இன்றுகொல்வேனென்னவெதிர்த்தவனால்ஆவி
இறந்திட்டான்சொன்னமொழிமறந்திட்டானே.

௩௩. தரு-இராகம்-கல்யாணி-சாப்புதாளம்.

பல்லவி.

அலம்புதன்இறந்தானே - வீமனாலே
பலங்களைத்துறந்தானே

அநுபல்லவி.

மலங்கியோட்டம்பிடித்து மறைவாயிருந்துநேற்று
மாயக்கருடனுக வந்தமோசத்தைப்பார்த்துக்
கலங்கியொடுங்கியே காங்கியாகநின்ற
காளையரவான்மீது வாளைவீசிக்கொன்ற
அலம்

சரணங்கள்.

க. அடமாவிருது கூறி - யண்டம்பிளக்க
ஆண்சிங்கம்போற் சீறித்
தொடருநமன்போல் மீறி - வெகுபடைகள்
தொலைந்திடும்படி நூறிச்
சுடுநெருப்பினை யொத்து - முனைந்த
துஷ்டன்மேற்பகை வைத்து
திடமிகுத்திடும்வீம சேனனுடன்வெகுண்டு
சித்திரவில்லினிற் சிறந்தவாளியைக்கொண்டு
படியோடெண்டிசைகளும் பயத்தினைக்கொளமுந்தப்
பாரவில்லொடிபடும் படியழித்தானந்த

அலம்

உ. நறுக்கெனவில்லை முறித்து - விடவேபல்லை
நறநறெனக் கறித்துப்
பருத்தமலையைப் பறித்து - வீமன்மேற்போடுங்
படிக்குமனதிற் குறித்து
வரைக்குளொன்றைப் பேர்த்து - வீசினனந்த
மலைவருவதைப் பார்த்து
சுருக்கினிலேவெகு தொகைசேர்கணைகள்போக்கிச்
சுழன்றுவருமலையைத் தும்சப்படலமாக்கி
உருத்திரனெனவீமன் உறுமினன்பலபல
உயர்மலையசைந்தன உறுராட்சதகுல

அலம்

ங. உடனேமாருதி யெடுத் - திக்குந்நடுங்க
ஒருவேலாயுதந் தொட்டு
விடுத்திட்டானது கிட்டும் - அவன்மேலதி
விரைவினிற்றலைப் பட்டு
குடங்குடமா ரத்தம் - பாயச்செய்
கோரத்தைக்கண்டோர் சித்தம்
அடங்காதஆனந்தம் அதிலேமீறிச்செல்ல
அட்ஸ்மதவீமனுக் கார்நிகரெனச்சொல்லத்
திடமாவேலாயுதந் தினகரனெனவோடித்
திகழுமார்பினிற்றைக்கத் தியங்கிமெலிந்துவாடி

அலம்

## வீஷ்டுமனுல், சதாநீகன் இறத்தல்.

விருத்தம் கூக.

அலம்புதனிவ்வாறழிந்தனன்விஜய
ஞற்பலதேசமேயாண்ட
அரசர்களெழுபதாயிரம்பேர்மாண்
டாரெனத்தொகைசொலமடிந்தார்
அடல்மதவீமன்சுயோதனன்படையி
லணிபெறுமோர்புறஞ்சென்றே
அதஞ்செய்தான்பீஷ்மன்கண்டுபாண்டவர்க
ளழகியசேனைபின்னிடவே
சலந்தனைக்கொண்டுபோர்புரிந்திட்டான்
தருமனவ்வீடுமன்கையிற்
றனுவினையழித்தான்திடத்துய்மன்சிகண்டி
தக்கபாஞ்சாலருந்தருமன்
றன்னொடுகலந்துமுனைந்தனர்துரியோ
தனனருந்தம்பியர்மற்றோர்
தாதிபன்வீடுமற்குபபலமாச்
சார்ந்தமர்செய்தனர்மிக்க
பலம்பெறுபீஷ்மனம்பினுலவர்
படையழிந்திட்டதங்கதனைப்
பார்த்தவோர்சிகண்டிவிடுமன்திகைக்கும்
படிக்குநீள்வாளிகள்பெய்தான்
பாதகத்துச்சாதனன்சிகண்டியின்தேர்
பாரவில்லிரதமும்பொடித்துப்
பதாதியாயோடத்துரத்தினுன்கணக்குப்
பகரொணுச்சேனைகள்திகைத்துக்
கலங்கவேபார்த்தன்முடித்தனன்பீஷ்மன்
கண்டவர்படைகளையொழிக்கக்
கணைமழைசொரிந்தான்விராடனெஞ்சத்திற்
களித்திடும்தம்பிசதாநீ
கன்சதுரங்கத்துடனெழில்கொண்ட
கங்கைமைந்தன்மிசைவடவைக்
கனலெனயுத்தம்விளைத்தவன்கொடிய
கணையினுலுயிரிழந்தனனே.

ருச. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

சதாநீகன்மாண்டான் - பீஷ்மன் - தானேவெற்றிபூண்டான்

அநுபல்லவி.

விதாவிதமாச்சண்டை விளைத்துவெதும்பி
வீரரெல்லாம்மெச்சும் விராடனுக்குத்தம்பி
சதாநீகன்

சரணங்கள்.

க. ஆண்மையாற்கர்ச் சித்து - வந்த
ஆங்காரம்போகத்தி கைத்து
பாணங்களால்மார்பு பத்தலாசப்பதைத்து
பரவைபோலுதிரம் பரவக்கூர்ங்கணைதைத்து
சதாநீகன்

உ. எத்தனையோஆ யிரம் - சேனைகள்
இறந்ததுசொலஆர் தாம்
பத்துத்திக்கினும்புகழ் படைத்தவீடுமன்சரம்
பாய்ந்துகிறுக்கென்றறு பட்டுவீழ்ந்திடச்சிரம்
சதாநீகன்

ங. அத்தினத்தினில் நல்ல - சிவேதனை
அழித்தான்இன்று மெல்ல
மற்றிவனையுங்கொன்றான் மச்சநாட்டரைக்கொல்ல
வரும்பீஷ்மனேயமன் என்றுமன்னர்சொல்ல
சதாநீகன்

---

பத்தாநாள்.

## கிருஷ்ணன் வீஷ்ட்டுமருக்கு இன்று சுவர்க்கங் கொடுக்கிறேனெனல்.

விருத்தம் சயி.

பொருதுவிராடனுக்கிளையோனிறந்தான்பாடி
போயினர்பத்தாநாளுநேற்றமைத்த
அரியபெருயூகம்போற்செய்திட்டார்பின்
படல்பீஷ்மன்சங்காரருத்ரனென்னத்
திரள்படைகள்தாங்கிநின்றான்மாயன்பார்த்துச்
ஜெயகிரீடியோடிவனுக்கமரிலின்று
விரைவினிலேதேவவிமானத்தையீகு
வேனென்றான்அதுபிசகேனென்றனே.

௩ரு. தரு-இராகம்-துசாவந்தி-ஆதிதாளம்.

பல்லவி.

குணநிதியாகிய - வீடுமனுச்சுநான் - கொடுக்கிறேன்வீரசொர்க்கம்

அநுபல்லவி.

துணிவுகொண்டுநின்று சொல்கிறேன்அர்ச்சுனஇன்று
குணநிதி

சரணங்கள்.

க. மாநிலத்தினில் தீர
மன்னரெல்லாஞ் சோர
வானுலகிற்கெம் பீர
வசுக்களுடனே சேர
குணநிதி

உ. மகிழ்ச்சியினைப்பெ ருக்கும்
மதிகுலத்தவ ருக்குஞ்
சகலப்படைக ளுக்கும்
தலைமையாகஇ ருக்கும்
குணநிதி

௩. சிலைத்தொழிலுங் கொற்றச்
சிறப்புமகிமை யுற்ற
கலைக்கியானமுறை கற்ற
கனவான்கங்கை பெற்ற
குணநிதி

---

## அருச்சுனன் கிருஷ்ணனைப்பார்த்துச் சுவாமி உன்சொல்லை யான் கடவேனென்று சொல்லல்.

விருத்தம் சக.

இந்தவிதம்வீடுமனுக்கின்றுவான
மீவேனென்றரிசொன்னன்வானோருக்கு
வந்தவிடுக்கந்தீர்த்ததாலும்பச்சை
வடிவாலும்வனஞ்சென்றுமீண்டதாலும்
அந்தவிராடனுக்குநிகராகத்தோன்றும்
அருச்சுனனிவ்வாறுரைத்தம்மாலைநோக்கி
எந்தையேவுன்சொல்லையான்தடுப்ப
திலையென்றுன்கேட்பாயென்னிலையென்றனே.

௩சு. தரு-இராகம்-ஆரபி-ஆதிதாளம்

பல்லவி.

கண்டிக்கும் படிதானே - தொண்டனாகியநானே
காண்டீபமெடுத்தேனே

அநுபல்லவி.

அண்டர்கள்தேடியும் அறியொணுதமூர்த்தியா
அமைந்தோனேசத்ராதி களைமனப்பூர்த்தியா
கண்டிக்கும்

சரணங்கள்.

க. தத்தும்பரித்தேர்வில்லோ-அக்கினிதந்ததெந்தச் சமரினுமழியாதே
சாரதியோயெனை-யாளுந்தெய்வமானநீ தானுச்சேயென்மீதே
இத்தேசாதிபரல்ல இன்னமுமென்மேலும்
இருக்கும்ராக்ஷதர்தேவர் எவர்கள்வந்தெதிர்த்தாலுங்
கண்டிக்கும்

உ. தம்பின்தமையன்மைத்-துனன்பாட்டன்குரு சார்ந்திடும்பந்துஜனம்
தநயர்முதலானோரேயானபோதும்அடியேன் சாற்றுவேனோர்வசனம்
எம்பெருமானேயிவ ரெல்லாமெனக்கோர்த்ரணம்
இன்னுனைக்கொல்லென்றுநீ யெடுத்துரைக்கில்அக்கணங்
கண்டிக்கும்

ங. வழியாகவேயிந்தத்-தேசாதேசத்து மன்னரெல்லாஞ்சேர்ந்து
வரும்படிநேர்ந்துதீர்க்க-வைராக்கியமாக வாய்ந்ததால்யானோர்ந்து
ஒழியாதகீர்த்தியப கீர்த்தியுற்றபோதிலும்
உடையவனீயாகையால் ஓகோயெவராகினுங்
கண்டிக்கும்

---

விருத்தம் சஉ.

விஜயனிவைசொன்னுனப்போதெல்லோரும்
வீடுமன்மேற்சரம்பொழிந்தார்அவன்மெலிந்தே
நகைசேரத்துர்ச்சகுனங்கண்டயாவும்
நற்சகுனமாகவெண்ணிப்போர்க்குநேர்ந்த
வசையறுகலிங்கர்சிஞ்சர்மச்சநாடர்
மடிந்திரத்தவாரியினிற்சுழலவில்லிற்
கசடறுவாளிகள்விடுக்கஅக்னிபோலே
காய்ந்திட்டானமனெனவேவாய்ந்திட்டானே.

---

## வீஷ்ட்டுமரும் அருச்சுனனும் எதிர்த்து யுத்தஞ்செய்யும் போது வீமன் நடுவில்வந்து வீஷ்ட்டுமருக்குத் துணையாக வந்தவர்களை நாசப்படுத்தல்.

விருத்தம் சங.

வாய்ந்தஅப்பீஷ்மன்வாளிகள்விடுத்து-மாற்றலர்சோரியிற்சுழல
மாய்த்தனன்கிருபன்சல்லியன்சகுனி-வஞ்சகச்சுயோதனன்தீமை [கை
தோய்ந்தஅன்னோன்தம்பியர்பகதத்தன் - துரோணன்மற்றோர்கள்வான்கங்
சுபுத்திரனுக்கங்குதவியாய்நேர்ந்து-துடித்தமர்விஜயன்மேற்புரிந்தார்

காய்ந்துபார்த்தனுமோர் நூறு நூறுகக்-கணைபொழிந்தெழிற்பிதாமகன்றன்
கடுஞ்சரங்களையேவிலக்கியச்சேனைக்-கடலினைக்கலக்கிடும்பொழுதிற்
பாய்ந்திடுபுலிமான் திரளினைக்கண்ட-பண்பெனமாமதவீமன்
பருத்ததண்டுடனேபடையினிற்குதித்துப்பதைத்திடும்படிமடித்தனனே

௩எ. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

கையிலெடுத்தானேதண்டு - மாண்டுவிட்டதே
கௌரவருடைய தண்டு

அநுபல்லவி.

மெய்மையானநிதானன் வீரந்தனக்காதீனன்
நையாமேருசமானன் நமன்போலவீமசேனன்
கையி

சரணங்கள்.

க. இரதத்தைவிட்டுக் குதித்தான் - குதித்துத்திசை
யெட்டுங்கலங்கக் கதித்தான்
நரசிங்கம்போ லுதித்தான் - அண்டங்கலங்கி
நலியத்தணல்போற் கொதித்தான்
கரிகளும்புரவியுங் காலாளும்பரவிய
கடல்கள்பொங்கும்உகாந்த காலம்போலுங்கவிய
பெருமைகொள்சுயோதனன் பிரியமுடனுதவிய
பேர்மூட்டைபோலவிய பிணம்பிணயாக்குவிய
கையி

உ. தோணியினில் தாவினன் - அத்தேர்களெங்குஞ்
சிதறமோதியு லாவினன்
வாரணக்கூட்டத்தில் மேவினன் - ஆகாசமெல்லாம்
மறைந்திடவாரித் தூவினன்
போரிலெதிர்த்தமற்றப் புரவிகளெல்லாஞ்செண்டு
போலானுற்காலாளுகள் போனதார்சொல்வார்கண்டு
வீரருடையவில்வாள் வேல்முதற்சிதைவுண்டு
வீழ்ந்துமண்ணிற்புரண்டு விட்டஉக்கிரங்கொண்டு
கையி

௩. வேந்தருடைய துங்க - முடிகளிற்று
விழுந்துகண்கள் பிதுங்க
மீந்தோர்பிணத்துட் பதுங்கத் - தப்பியோடி
விட்டோர்காணுமல் ஒதுங்க

ஆந்தைபோல்விழித்தசை வற்றுச்சிலபேரோட
ஆண்மைபோய்நீரகன்ற அல்லித்தண்டுபோல்வாட
வாய்ந்தபிணத்தைரத்த வாரியிற்பேய்கள்போட
மாய்ந்தகவந்தமாட வானவர்கள்கொண்டாட

கையி

---

விருத்தம் சச.

வீமனுற்சேனைமாள்வதைக்கண்ட-விறற்றுரியோதனன்வல்ல
விஜயனுக்கிணையாலட்சம்வீரர்களை-விடுக்கவந்தனரவர்தம்மை
தாமதத்தாலேகிரீடிமாய்த்தானச்-சணத்தினிலவரைத்துச்சா
தனனவன்பின்னோரைவர்கள்வெல்லத்-தக்கவீடுமனிடம்நின்றார்
பூமியெங்கெங்குமதிர்ந்திடமற்றோர்-போர்புரிந்தார்கள்பார்த்தனுமப்
புண்ணியபீஷ்மனுஞ்சமர்விளைக்கும்-பொழுதினிலிறந்தபேர்தம்மை
நேமமாச்சொல்லஒர்கணக்கில்லை-நெடியவானிடையெழுவசுக்கள்
நின்றுபார்த்திடஒன்னலர்கள்மேற்பீஷ்மன் - நெருப்பெனக்காய்ந்துசென் [றனனே.

---

## பத்தாநாள்போரில், வீடுமன் பாண்டவர் சேனையைப் பாழாக்குதல்.

முடுகுவிருத்தம் சடு.

தொழவரிதென்றுரை செயுமுயர்புங்கவர் தூயவராகியவோர்
எழுவசுவுந்திக ழணிபெறுவிண்டல மேதுறுமோவெனவே
விழிகொடுகண்டதி சயமுறவெம்பரி மேவியதேர்மிசைபோய்
அழலினுமிஞ்சிய சினமுடனின்றம ராடினன்வீடுமனே.

ҡஅ. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

வீடுமன்போர்மீதில்வாய்த்தானே - தருமராஜன்
விடுபடைதனைமாய்த் தானே

அநுபல்லவி.

நீடுமுப்புரத்தைமுன் னிர்த்தூளிபடவெல்ல
நேரிட்டசிவனுக்கு நிகரெனப்பலர்சொல்ல
ஈடில்லாவில்லைக்கையில் எடுத்தக்கினிபோற்செல்ல
இசையும்வாளியையெங்கும் ஏவிக்கொண்டுவெல்ல

வீடுமன்

சரணங்கள்

க. வெடிக்கமண்டலமும்-வெடிக்கவிண்டலமும்
விடுத்திட்டானேபல சரங்கள் - அதுகளாலே
வீரர்கள்மாண்டுபனங்-காய்கள்தேங்காய்கள்போலே
விண்டனபல சிரங்கள்

பிடித்தஆயுதத்தோடு-மரத்தின்கிளைகள்போலே
பிளந்தனபல காங்கள் - சிலஅம்புகள்
பேசும்படைவீரர்கள்-உடலிற்சென்றுநுழைந்து
பேர்ந்தனசில உரங்கள்
பொறுக்கென்றறுந்தறுந்து புரண்டனபலகுடல்
போர்போராகக்குவிந்து போயினபலவுடல்
புகலிவரொடுபல புரவலர்முடியவே
பொழிதருமதகரி திசைதிசைமடியவே
புரவிகள்குருதியின் அலையொடுபடியவே
புகழ்பெறுரதநிரை துகள்பட்டொடியவே
விடுமன்

உ. அடமேசாதிக்குந்-துருபதேசாதிப
ரஞ்சிடாதம ராடர் - ஓர்போதும்
அமரிற்பின்வாங்காமல்-சாதிக்கும்படிக்குப்போ
ராடியவுக்ர லாடர்
திடமாயெக்காலமுந்-தருமனுக்கேயுதவி
செய்யவந்தவி ராடர்-பகைவர்மேற்
சிங்கங்களைப்போற்பாயுஞ்-சோமகர்வங்களர்
ஜெயங்கொள்சே நாடர்
மடங்கிடாதகுலிங்கர் மண்டலீகர்சகல
மகுடவர்த்தனர்பட்ட வர்த்தனரொடுபல
மணிமுடியரசர்கள் சிலரெதிரேகவே
வசைசொலியதுபிழை யெனச்சிலர்நோகவே
வருகணையினிற்சில ருடல்மிகவேகவே
வரவரச்சிலர்மன நிலைதளர்வாகவே
விடுமன்

௩. கொல்லமுடுகிவருங்-காலாந்தகன்போலுருக்
கொண்டுவந்தலங் கோலம்-காண்பதற்குக்
கூரானபடைகளை-நீருக்கும்பீஷ்மனைக்
குறித்துப்பார்த்திந்த ஞாலம்
எல்லாம்வயிற்றினில்வைத்-தெள்ளுக்குளெண்ணெயைப்போல்
இருந்துயர்ஜக ஜாலம்-செய்யுமென்னையன்
இந்தபீஷ்மனையந்த-உலகுக்கனுப்பிவிட
இதுவேதகுந்த காலம்
அல்லால்வேறில்லையென அருச்சுனனுக்குக்கோபம்
அங்குண்டாக்கும்படிக்கே ஆலோசித்துப்பிரஸ்தாபம்

அதுசெயநினைவினை மனதினிலடுக்கவே
அளவற்றநிருபர்கள் களையொடுபடுக்கவே
பதறியேவெருகணை யணியணிவிடுக்கவே
பணமகுடச்சேடன்மெய் நடுநடுநடுக்கவே
வீடுமன்

---

## திருமால் அருச்சுனனைப்பார்த்து வீஷ்ட்டுமனைக்கொல்ல விதுகாலமென்று தேரை அவனுக்கு நேரே செலுத்தல்.

விருத்தம் சசு.

மோதுமமரிற்பீஷ்மன்சேனை தன்னை
முடிப்பதைக்கண்டிடுதிருமால்கிரீடியைப்பார்த்
தோதுமவன்றனைமடிக்கக்காலமீதென்
றுரைத்திரதத்தினைவிடுத்தான்விஜயன்வில்லைக்
காதளவுமுறவலித்தான்மாயன்விண்ணுங்
கலங்கிடச்சங்கந்தொனித்தான்படையிற்சிங்க
நாதநரபாலருஞ்செய்திடக்கோபத்தை
நாடுவான்விஜயன்வந்துகூடுவானே.

---

## வீஷ்ட்டுமன் சிகண்டியைக்கண்டு வில்லைவைத்துவிட்டு அருச்சுனன் பாணத்தால், தளர்ந்து சரசயனத்திற் சாய்தல்.

விருத்தம் சஎ.

தருவிஜயன்தளத்தினெடுஞ்சிகண்டியோடுஞ்
சமர்க்குவந்தான்வருசிகண்டிபீஷ்மன்மீது
திகழ்கணைகளெய்தனனன்னோன்சிரித்துத்
தேரில்வில்லைவைத்தனன்துச்சாதனன்பார்த்
தகமெரிந்துசிகண்டிரதத்தினையழித்தான்
அருச்சுனனச்சிகண்டியொடுபின்னுநேர்ந்தே
ககனநடுங்கிடக்கணைகளேவிநெஞ்சங்
காய்ந்திட்டான்பீஷ்மனெல்லாமோய்ந்திட்டானே.

கூகூ. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

சகலமும் ஓய்ந்தானே - வீடுமன்சர
சயனத்திற்சாய்ந்தானே.

அநுபல்லவி.

தகையாவானுலவுகு ரியரதமுவிநிலங்
தனில்வீழ்ந்ததெனநற்றேர் தனைவிட்டுவீழ்ந்துபலஞ்
சகலமு

சரணங்கள்.

௧. இகல்பீஷ்மனைவாட்டுஞ் சிகண்டியோடவந்து
எதிர்த்துவென்றான்துச்சா தனன்வீடுமன்வெந்து
மிகவுமாயன்திரு மேனியெங்குஞ்சிவந்து
விடமாட்டியபீஷ்டுமன் பார்த்தன்அம்பால்நொந்து
சகலமு

௨. திறந்தசாளரம்போலே தேகத்தில்அம்புதைத்துச்
செந்நீரோடும்பொழுதுஞ் சித்தத்திடமிருத்து
பிறைறவாளிதன்மார்பிற் புதையவீஷ்டமன்இழுத்து
பிடித்துப்பார்த்தர்ச்சுனன்செய் பெருவாழ்வென்றுமதித்துச்
சகலமு

௩. துணைவந்ததுச்சாதனன் அவன்தம்பியரைப்பார்த்துச்
சுயோதனனொடுநீர்போய்ச் சோர்விலாமுகம்வேர்த்து
அணிபெறுசேனைகளை அமர்முனையினிற்றேற்று
அழியாத்தந்திரஞ்சொல்லி யருங்கணையாற்போர்த்துச்
சகலமு

௪. அடிபட்டர்ச்சுனன்பாண வேகத்தினாற்சத்தி
அடங்கலும்ஒடுங்கிப்போய் விட்டபொழுதும்பத்தி
யுடனேயஷ்டாக்ஷரம் உரைத்ததில்மனந்தொத்தி
யோகசாதனையினால் உயிரைநீங்காதிருத்திச்
சகலமு

---

## வீடுமனைக்கண்டு இருதரத்தாரும் வியசனப்பட அவர் அவர்களுக்குப் புத்திசொல்லல்.

விருத்தம் ௪அ.

மல்லார்வீடுமனையங்கேயிருதரத்து
மன்னருங்கண்ணீரோடநோக்கிஐயா
வில்லாண்மைமுதற்படைகள்வலிமைகல்வி
மேன்மைபொறையழகுநெறிமிக்கஞானம்
எல்லாமுன்னோடின்றேயழிந்ததென்ன
இரைந்தழுவோர்தம்மைமனமுருகிப்பார்த்து
அல்லாருங்குழன்மடவாராசைதன்னை
யகன்றிட்டான்புத்தியினம்புகன்றிட்டானே.

௪ய. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

நான்சொல்லும்வார்த்தையை-இனியாகிலுநம்பினால்-நன்மையேயுண்டாகும்.

அநுபல்லவி.

என்விறுதாவில்நீங்கள் எங்கிமனதுவாடி
இருக்கிறீர்கள்ஐயோ இருதாத்தோருங்கூடி
நான்

சரணங்கள்.

க. நிசமாயென்ஊழ்வினை நேரில்வந்துவாச்சுது
நீங்கள்காணஉங்கள்முன் நிலத்தில்விழலாச்சுது
அசையாதவிதிப்படி அனுபவிப்பதென்பாரம்
அதையெண்ணிப்பாராமல் அழுவதிலென்னசாரம்
நான்

உ. பொங்கியும்பால்புறம் போகாதுபோல்இப்போது
போரைநிறுத்திமுன்னம் போலேயோர்வாதுசூது
பங்கமாய்ப்பொய்க்கபடந் தீராதவைராக்யம்
பலவும்விட்டொருமையாய்ப் பாராளுவதேயோக்யம்
நான்

௩. அபத்தமுரைக்குந்துஷ்டர்க் காயுசுள்ளளவுந்தி
யாச்சியம்போலும்நீங்கள் அமர்செய்திடப்பொருந்தி
விபரீதம்நாளுக்குநாள் விளைந்துவிட்டதல்லாதே
வேறென்னகண்டீர்இனி மேலுமேலும்கூதே
நான்

---

## கன்னன் வீஷ்ட்டுமனைப்பார்த்து நான் தெரியாமற் பேசிய குற்றங்களைப் பொறுத்துக்கொள்ள வேண்டுமெனல்.

விருத்தம் சகூ.

வீடுமன்சொன்னமதிநலமென்று-வேந்தரைவருமிசைந்தார்கள்
விழியிலான்மைந்தனிசைந்திலனந்த-வேளையிலவனெடுபீஷ்மன்
நீடியசமரிற்றன்னுடல்மெலிந்து-நிலத்தினிற்சாய்ந்தவென்முடியை
நிமிர்த்தெனஅவன்பஞ்சணைவருவித்தா-னிகரிலாவீடுமன்பார்த்து
நாடரும்போர்நீர்வெல்லுவீரென்று-நகைத்துயர்கிரீடியைநோக்கி
னனவன்சந்திரவாளியாற்பீஷ்ம-னற்சிரமுயர்ந்திடச்செய்தான்
ஈடிலாத்தருமனம்பினுற்கோயி-லினிதமைத்தனனெழிற்கன்னன்
இன்பொடுபீஷ்மன்றனைப்பணிந்தழுதே- யிவ்வகைபுகன்றுநொந்தனனே.

சுக. தரு-இராகம்-ஆநந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதேதோ பிதற்றிவிட்டேன் - ஐயாபீஷ்மரே
எதிலார்போலுங்கெட்டேன்.

அநுபல்லவி.

வாதாடியும்மைச்சற்றும் மதியாமல்மதத்தாலே
மதியைப்பார்த்துக்குலைத்த மதியில்லாநாய்போலே
ஏதேதோ

சரணங்கள்.

க. மாயையகன்றதவ மாமுனிவோரானோரே
மதித்துமகிழ்ச்சிகொள்ளும் மகானுப்பாவராம்நீரே
தாய்போலும்சொல்லும்நல்வ சனத்தின்வழிசெல்லாத
தீயனுகஜீயோவித் தினம்வரைக்கும்பொல்லாத
பேய்கொண்டவர்கள்போலும் பின்முன்னும்அறியாமல்
பிஞ்சிற்பழுத்துப்போயுன் பெருமையைக்குறியாமல்
ஏதேதோ

உ. துள்ளித்துர்ப்புத்தியாலே சொல்ப்பமாகவேயெண்ணித்
தூஷித்ததெல்லாநல்லத் துதியாகவேயெண்ணிக்
கொள்ளுவதுபெரியோர்க் குத்தூயசாம்பிரதாயம்
உள்ளம்பிசகிப்பழு துரைத்தேன்தெரியேன்நியாயம்
கள்ளமறியேனிந்தக் கசடனைக்கோபத்துடன்
கருதும்நிந்தைசொல்லாமற் காப்பதுமதுகடன்
ஏதேதோ

ரு. தூமந்தோன்றிடத்தில் சோதிதோன்றுங்கோபந்
தோன்றிடத்திற்சந்தோஷந் தோன்றும்அதுசுபாவம்
பாமரன்என்முகம் பார்த்துநெஞ்சொருமித்துச்
சாமிநான்செய்தவப சாரங்களைக்ஷமித்துப்
பூமிவெட்டுவோர்க்கிளைப் புந்தவிப்பும்போகப்
புனல்தருவதுபோலும் புரப்பீருண்மையாக
ஏதேதோ

---

## வீஷ்ட்டுமன் கண்ணனைப் புகழ்தல்.

விருத்தம் ௫௰.

ஆறெனக்கண்ணீர்சிந்த-அகநொந்துதன்னைத்தானே
தூறிநற்கரங்கள்கூப்பித்-தோத்திரஞ்செய்துகொண்டு
வீறுடைக்கண்ணன்நிற்க-வீடுமனிந்தவாறு
கூறியஅவன்மேலன்பு-கொள்ளுவான்விள்ளுவானே.

சஉ. தரு-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

பல்லவி.

அப்பாகண்ணா - உன்னைவெல்ல - ஆராலேயாகும்

அநுபல்லவி.

தப்பலமுன்பு சலிப்பொடுநானேதோ
செப்பினேனென விசனப்படவேண்டாம்
அப்பா

சரணங்கள்.

க. அதிரதனீயாக வேணும்பழுதோஅந்த
விதம்நான்செய்திருந்தாற் குதிகொள்பார்த்தனையென்றன்
எதிர்வரவொட்டாயப்பொ முதுசிகண்டியாலென்வி
ரதபங்கமாமென்றார்த்த ரதனுக்கினேண்டாஅடா
அப்பா
உ. ஏற்கவுன்றனக்குள்ள ஆக்கிரமத்தொடுமன
ஊக்கத்துடனும்மை ராக்கியங்கொண்டமரில்
தாக்குந்தேர்மிசைக்கையிற் றாக்கியவில்லொடும்
போர்க்குச்செல்வையேவிந்தப் பார்க்குள்ளாரெதிர்ப்பவர்
அப்பா
ங. புடவையாகப்பெருங் கடலினையுடுத்தஇப்
படிமுழுமையும்ஒற்றைக் குடைநிழலிலரவக்
கொடிபெறுமன்னனுண் டிடும்படிசெய்வதுன்
னுடையபெருமைக்கொத்த கடமைகடமையட
அப்பா

---

## வீஷ்டுமன் இறந்ததைக்குறித்துத் திருதராட்டிரன் துக்கப்படல்.

விருத்தம் ருக.

கன்னனைத்தேற்றித்துரியோதனனைநோக்கிக்
கடும்பகைவர்க்குச்சிங்கமென்னுங்கன்னன்
தன்னைச்சேனைத்தலைவனுக்கிநாளைச்
சண்டைசெய்யென்றுந்ரோணர்முதல்வீரர்க்கு
மன்னனைக்காப்பீர்களென்றுபீஷ்மன்சொன்னன்
வண்குருடனுக்கிவைசஞ்சயன்போய்ச்சொல்ல
மின்னிலைவேற்காந்தாரிவேந்தன்கேட்டு
வெம்பினன்வெகுவாப்புலம்பினனே.

சங. தரு-இராகம்-பரிசு-சாப்புதாளம்.

பல்லவி.

இப்படியாச்சா - தெய்வந்துணை - இல்லாமற்போச்சா

அநுபல்லவி.

முப்புவியும்வணங்கு முழுக்குருடாம்எனக்கும்
முடிசூட்டிமகிழ்ந்தஎன் னுடையஅப்பாஉனக்கும்
இப்படி

சரணங்கள்.

க. பாசமாயிருந்தோனே படைத்தலைவன்ஆனனே
பயமேதென்றிருந்தேனே பாதவிக்கின்றேன்யானே
ஈசனுரும்பீஷ்மனே இறந்தாயேசவிக்காதே
என்மகனுக்குறுதி இசைப்பதாரினிமீதே
இப்படி

உ. கதையலவேமென்மேலே காரியங்கள்ஒருக்காலே
கண்ணுள்ளவனைப்போலே கண்டறிந்துன்னலே
இதுவரைக்குந்தெரிந் தேனேயெல்லாவழியும்
இன்றல்லோஅழிந்துபோச் சென்றன்இருவிழியும்
இப்படி

ஈ. தரணியிலுயர்ஞானம் சந்த்ரகுலத்தில்மானம்
தக்கோர்தமக்குத்தானம் தனையளிக்கும்நிதானம்
மருவும்உனைப்போல்நல்ல வழியில்நடக்கும்பாட்டை
மகிழ்வாச்சொல்லுவோரார் வளருதேமனவேஷ்டை
இப்படி

---

விருத்தம் ருஉ.

குருடனெடுங்காந்தாரிபீஷ்மன்றன்னைக்
குறித்தழுதாள்சஞ்சயனன்னோரைத்தேற்றி
மருவியபாசறையிலுற்றான்விரதமேன்மை
வாய்ந்தமகனிறந்தசெய் திவருணர்க்கோத
விரைவினிற்சூரியன்மேற்கிற்சார்ந்துபார்த்தன்
விசயமிந்திரனுக்குரைக்கவந்ததென்ன
இருளகலுமுன்கிழக்குத்திக்கிற்றேர்மீ
திலங்குவான்விண்டலத்திற்றுலங்குவானே.

---

## வீஷ்ட்டுமபர்வம் - முற்றிற்று.

---

வீஷ்ட்டுமபர்வத்தில், விருத்தம்-ருஉ. தருக்கள்-சஈ. திபதை-க. ஆ கசரு.

——: (*) :——

பாயிரம்-க-க்கும், பர்வம்-சு-க்கும், கூடிய-வெண்பா-ஈ,
கலித்துறை-ஈ, கொச்சகம்-ச, கட்டளைக்கலிப்பா-க.
விருத்தங்கள்-ஈாசயஉ. தருக்கள்-உாசயக. திபதைகள்-சயஉ. ஆ சுாஈயசு.

---

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

—(*)—

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஏழாவது

# துரோணபர்வம்.

## கண்ணன் துதி.

—(*)—

ஆசிரியவிருத்தம் - க.

பன்னகாதிபன்மீதிலருள்விழிவளர்ந்திடும்-பச்சைமாலைக்கருணையால்
பாண்டவர்தமைப்புரந்திடவந்துசமரிடைப்-பாநுவைமறைத்தமுதலைக்
கன்னனைப்பரமபதநாட்டினிற்சேர்க்கவிரு-கையேந்திநின்றபரனைக்
கண்ணனைக்காயாம்புவண்ணனைப்புவியின்முக்-காலமுமுணர்ந்தகுருவை
மன்னவர்மதித்திடத்திபாண்டனுக்குபய-மலர்விழியளித்தமுதலை
மடுவிற்கராவாலிறந்தகுருபுத்திரனை-வருவித்தளித்ததிறனைக்
கன்னல்வின்மாரனைப்பெற்றவனையுற்றவனை-கபடநாடகசூத்ரனைக்
கமலவேங்கடலட்சுமிகுலவுதடமார்புடைய-கண்ணனடிதொழுவாமரோ.

## பதினோராநாள்.

### பதினோராநாளுதயத்தில் கன்னன் வீஷ்ட்டுமரிடத்துவந்து உம்மை இவ்வாறுசெய்தோரைவெல்ல, உத்தரவுதாருமெனல்.

விருத்தம் உ.

பதினோராநாளுதயந்தனிலேகன்னன்
பருதிபோல்முகம்பொலியக்களத்தில்வந்தான்
எதிரில்வெகுமன்னரவனுடனேயெம்மை
யிருவிழிபோற்காத்தநல்வீடுமரிறந்தார்
கதியினியாருனைவிடஎங்களுக்கென்றேதக்
கன்னனுஞ்சந்தோஷமுற்றுப்பீஷ்மர்பாற்போய்
இதயமதில்மிகவுமன்புதன்னைக்கொண்டாங்
கேத்துவான்கனிவினொடுசொற்றுவானே.

க. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

உத்தரவுமாத்திரந்தாரும்-கன்னன்-ஒருவன்த்ராணியைப்பாரும்

அநுபல்லவி.

உத்தமசசிகுலத் துயர்மணிபோல்வரு
முசிதகுணபீஷ்மரே உமதுவாயினுல்ஒரு
உத்தரவு

சரணங்கள்.

க. இயாவர்களையும் பெற்ற - அன்னையைப்போல்
இதுவரைக்கும்ரட் சித்த
தேவர்க்கேஇந்தவிதந் தீங்குசெய்தையோமெல்லத்
தீட்டினமரத்திற்கூர் பார்த்தவர்களைக்கொல்ல
உத்தரவு

உ. உமையவள்பாக னுலே - முப்புராதியர்
ஓடியழித்தாப் போலே
நிமிஷத்தினில்எல்லாரும் நீறுநீறுய்ப்போக
நிர்த்தூளிசெய்கிறேன் நீர்முழுமனதாக
உத்தரவு

ங. சகலநீதி சாரம் - உணர்ந்திட்டோரே
தயைசெய்திஷ்டப்பிர காரம்
பகைவருயிரையுன்கைப் பாணத்துக்குப்பக்ஷணம்
பண்ணுபோவென்றென்முகம் பார்த்துநீர்இக்ஷணம்
உத்தரவு

---

## வீஷ்ட்டுமர் கன்னனைப்பார்த்துக் காவலரைக் காப்பாற்றுவாயெனல்.

விருத்தம் ங.

வரிசிலைதாங்கிமணிமுடியிலங்க-வடவைபோற்சினந்தலைக்கேறிப்
பரவிநின்றுரைத்தகன்னனையன்பாற்-பார்த்துயர்வீடுமனப்பா
உரகசேதனனிவ்வுலகெலாம்புரக்க-உவந்துநீசெய்திடவேண்டும்
விரைவில்நீபுரியும்வகைதனக்கடுத்த-விதியினையான்புகலுவனே.

உ. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

கன்னுகாவலரைக்-கருத்தினிற்கனிவுண்டாய்க் - காப்பதுன்கடமைகண்டாய்

அநுபல்லவி.

சின்னபின்னமாகத் திசைராஜர்தமைவென்று
சினத்தராஜஜெய சிங்கம்போலேநின்று
கன்னு

சரணங்கள்.

க. பழங்கள்நிறைந்திருக்கும்-விருட்சத்தினிலேபல
பறவையும்வந்து சேரும் - அந்தப்

படியுன்வில்லினிழலிற்-றிரண்டுசேருவார்
பார்த்திபரெல் லோரும்
புழுங்கியதாகவிடாய் போகக்குளிர்ச்சிதரும்
புனலிந்துகாப்பது போலேவெம்பியருந்
தழலாஞ்சண்டையிற் சங்கடமெல்லாந்தீர்த்துச்
சர்வத்திரானையும் சமையாசமையம்பார்த்துக்

கன்ன

உ. சிறுபொறியெழுந்து-பெரியகாட்டையெல்லாந்
தீய்த்துச்சாம்ப லாக்கி - விடுஞ்
செயலாகவேநீயும்-உனதுபாரியவில்லைச்
செங்கையினிலே தூக்கி
சுறுக்கினிலேபகைஞர் சோர்ந்துபோய்விடயுத்தம்
தொடுப்பதேசரிமற்றச் சொற்களெல்லாம்வியர்த்தம்
விரிந்தசட்டிசுடக்கை விட்டேனென்பார்போலும்
விட்டுவிடாமலே விழியிமையின்எக்காலுங்

கன்ன

௩. என்றும்உன்னுலகம்-ஆளச்சுயோதனன்என்னும்
எண்ணத்துக்கொரு பொழுதும் - குறை
வில்லாமற்செய்வதுன்றன்-பொறுப்பாகையாலினி
யிந்தராச்சிய முழுதும்
ஒன்ருங்குடைநிழலில் உதவப்புவிகொண்டாட
உம்பர்களுந்துதிக்க ஒப்பிலாமுடிசூட
நின்றநீயறியாத நிலைமையுமுண்டோசொல்ல
நினைத்தபடிமுடிக்கும் நிர்வாகமுள்ளநல்ல

கன்ன

---

## துரியோதனன் துரோணுச்சாரியரைச் சேனதிபதியாக்கித் தருமராஜனைப்பிடித் தென்னிடத்துக் கொண்டுவர வேண்டுமென, அதற்கு அவர் சொல்லல்.

விருத்தம் ச.

வீடுமன்சொல்லக்கேட்டவக்கன்னன்-வெஞ்சமரித்தினமுடிந்து
விடுமெனும்படிக்குச்சேனைகள்சூழ-மிக்கவுக்கிரத்தொடுதேர்மேல்
வேகமாச்செல்லும்பொழுதினிற்கொடுமை-வீறியசுயோதனன்கண்டு
வெம்பியேகாட்டிற்றிரிந்தபஞ்சவர்கள்-மீதில்நீயெதிர்த்தவர்தம்மைச்
சாடவேகுங்கோபந்தணியென்னத்-தழுவியேசகுனிபாதகத்துச்
சாதனன்கன்னனுடன்வரச்சென்று-தக்கதுரோணனைமனக்கனிவாற்
சார்ந்துநீபீஷ்மர்போலவேயுத்தந்-தனைச்செய்துபகைவரைமடிக்கத்
தயவுசெய்திடுமென்றனன்குருகேட்டுத்-தானுயர்சேனைகளெல்லாம்

நாடும்வீரர்க்குள்வீரனும்பட்டம்-நண்ணுவேனென்னிலொன்னலரை
நாசம்யான்செய்வேனென்றனன்கேட்ட-நாகவெங்கொடியுடைமன்னன்
நயத்துடனந்தப்படிமுடித்திட்டா-னற்குருமகிழ்ந்துபாராளு
நாதனைநோக்கிவேண்டியவரங்கேள்-நான்றருவேனெனமொழிந்தார்
ஈடிலாச்சந்த்ரன்றனிலுறைமுயல்வீழ்ந்-திடும்படியப்பிணையெய்ய
எண்ணமுற்றதுபோல்பாதகன்வெம்போ-ரினிற்றன்மராஜனைப்பிடித்தே
என்னிடமொப்பிப்பாயெனக்கேட்டா-னெழிற்றுரோணன்றருமனைநா
னெவ்வகையாலும்பிடித்திடக்கூடா-தெனவவனொடுபுகன்றனனே.

ங. தரு-இராகம்-பைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

சொல்கிறேன்கேளு - துரியோதனு - சொல்கிறேன்கேளு

அநுபல்லவி.

வல்லதன்மராஜனைப் பிடித்திடக்கேட்ட
வரத்தினைக்குறித்துன்றன் மனத்தைநிலையில்நாட்டச்
சொல்

சரணங்கள்.

க. வேதனவனுடைய வித்தைக்குநிகரல்ல
விளங்கருளினிற்புகழ் வீறுமால்நிகரல்ல
மோதுபோருக்குருத்ர மூர்த்தியுநிகரல்ல
முச்சகமுமிச்செய்தி முழுதுந்தெரியாதல்ல
சொல்

உ. மெய்யன்பினிலவனை விடயாரைப்படிக்கலாம்
மேலுந்தம்பியர்முன்போய் வில்லெவர்பிடிக்கலாம்
செய்யக்கூடாதகார்யஞ் செய்தெவர்முடிக்கலாம்
சினத்தபுலியையெதிர் சென்றெவர்அடிக்கலாம்
சொல்

ங. பேராசைக்காரன்தனக் கிரண்டுகண்கெட்டவதை
பெற்றதைக்கேட்டிலாயோ பின்புசொல்கிறேன்அதை
ஆராமையாகநானே அடியொட்டிஎன்சதை
ஆடக்கர்ணம்போட்டாலும் ஆகாதுநீசொல்கதை
சொல்

---

## தருமனைப் பிடித்துவரும்படி துரியோதனன் துரோணருக்குச் சொன்னசங்கதியை அருச்சுனன் தூதரால் கேட்டு அண்ணனோடு சொல்லல்.

விருத்தம் ரு.

குருவிதுசொல்லித்தருமனைப்பிடித்துக்
கொண்டாலென்செய்வதென்றுன்யான்சூதாடி

எரிகாட்டிற்செலவிடுவேனென்னத்துரோண
னென்பாற்கிரீடிவாராவகையையுராஜர்
புரியிலவனைப்பிடிப்பேனென்றான்றூதர்
போயதைநற்றன்மனுடன்சொல்லும்போதி
லருள்விஜயன்கேட்டுணையண்ணுபிடிப்ப
தாரென்றுனடப்பதைநீபாரென்றுனே.

அ. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

உமைப்பிடித்தாரெடுப்பார்கிர்த்தி-மூவுலகும்புகழுந்தர்மமூர்த்தி

அநுபல்லவி.

இமைக்குமுன்தீபத்தில் ஏற்றுந்திவெட்டிபோலே
இருக்கிறேன்துரோணரை யீடழிக்கமண்மேலே
உமைப்

சரணங்கள்.

க. படுபாழாச்செய்தஇந்தப் பத்துத்தினத்துப்போரில்
பட்டிவர்கொண்டஏச்சைப் படிக்கின்றூர்கள்ஊரில்
தொடுகூறையேறிக்கோழி பிடியாதகுருக்களா
தொடுத்துவானேறிச்சொர்க்கங் கொடுக்கப்போகிறுன்பளா
உமைப்

உ. கருதுங்குருவென்றுற்கால் கணைவணங்கிப்பிடிப்பார்
காரியக்குறைவுசொன்னுல் தாடைமீதில்அடிப்பார்
ஒருஅபிமன்வீரம் உளத்தினிற்றெரியாதோ
உறுமவன்கோபத்தில் தாணியும்எரியாதோ
உமைப்

௩. நீரவர்கையினில் அகப்பட்டுக்கொள்ளும்போது
நிச்சயம்இதுபிரம்ம சிருஷ்டியுந்தானேது
சீர்கொள்குருமுதலோர் சிறந்திடுமச்சேனைச்
சேரச்செய்யாமல்நான் திரும்பிடேன்உன்னுணை
உமைப்

---

## பதினோராநாள் போரில் இருவர்படையுங்கலந்து யுத்தஞ்செயல்.

விருத்தம் சூ.

அருச்சுனனுரைக்கச்சமர்க்களந்தரும
னடைந்தனன்துரோணனுநேர்ந்தே
அழகியசகடயூகமேசெய்தா
னுங்குருற்கிரவுஞ்சயூகம்

விருப்பொடுதிடத்துய்மன்வகுத்திட்டான்
வீறுமவ்விரண்டுசேனைகளும்
வெஞ்சமர்விளைக்கும்பொழுதினிற்றுரோணன்
வெற்றிகொள்ளவர்தம்படையைத்
திரிபுரமெரித்தசிவனெனக்காய்ந்து
திசைதிசைசிதறவேயடித்தான்
தியாககன்னனுமர்ச்சுனனுமோர்பக்கஞ்
செகநடுங்கிடஅமர்விளைத்தார்
விரிபுகழ்ச்சாதேவன்சகுனியின்றேர்
விற்கொடியழித்தவனுடைய
வெம்பரிப்பாகன்றன்னையுங்கொன்று
மேலும்வாளியிற்பிளந்தனனே.

க. திபதை-இராகம்-அடாணா-சாப்புதாளம்.

## கண்ணிகள்.

க. சகுனிபாகனைத்தேரை-குதிரையைக்கொடியினைத்
தாரைவார்த்தபிம — னாலே - மார்பும்
புகலவாளியிற்பிளப்-புண்டுரத்தச்சேற்றிற்
போயொளிக்கின்றவன் — போலே

உ. தண்டாயுதமேந்தி-வந்தான்சாதேவனுந்
தருகதாயுதங்கொண்டு — மாட்டி - தீமை
யுண்டாக்குமவன்றன்னைத்-துர்த்திவிட்டான்மகா
உக்கிரத்தைவடவைபோற் — காட்டி

ங. துரியோதனன்வீமன்-றனையெதிர்த்தான்வாயு
சுபுத்திரன்அவன்வில்லைக் — கொடியைத் - துணித்
தருமையாஅவனுக்குத்-துணைவந்தமன்னரை
யதஞ்செய்தேயக்கினி — யிடியை

ச. போற்கர்ச்சித்தான்துரி-யோதனன்பின்னிட்டுப்
போனதைக்கண்டு — குதித்துச் - சல்யன்
சீற்றவீமனையெதிர்த்-தான்வீமனகுலனைத்
தீயசல்லியன்மேல்நீ — கொதித்துப்

ரு. போர்செய்யென்றான்அந்த-நகுலன்வில்லம்பினைப்
பூட்டிச்சல்லியனெடுந் — தேரை - மிகு
சீர்பெற்றசாரதி-யினைக்கொடியினையதஞ்
செய்தவன்மார்பெங்குந் — தாரை

சா. தாரையாகரத்தம்-ஓடத்துரத்தினன்
சங்காருத்ரன்போற் கோபங் - கொண்டு
வீரவிராடனுங்-கன்னனும்இளையாமல்
வெம்போர்செய்தார்பிர தாபம்

எ. உள்ளதுருபத-னும்யாகசேனனும்
ஒருபகல்முழுதிலுஞ் - சண்டை - பூமி
பள்ளம்விழும்படி-பகதத்தனொடுசெய்தார்
பகருஞ்சிகண்டிதன் மண்டைக்

அ. சேறியகோபத்தாற்-சோமதத்தனுடன்
இணையிலாப்போர்செய்தான் மீறி - நெறி
மாறுஞ்சுயோதனன்-மகனிலக்கணகு
மாரனும்அபிமன்னுந் தூறி

கூ. வல்லசேனைகள்சூழ-அமர்புரிந்தாரபி
மன்சுயோதனன்மைந்தன் ஈடு - நாணி
வில்லையுஞ்சிதைத்தவ-னைப்பிடித்துக்கொண்டு
வெம்புலிபோல்வேகத் தோடு

ய. திரும்பும்போதுசயித்-திரதன்அபிமன்மேற்
சீறியுத்தந்தனைப் புரிந்து - தன்
உரந்துளைபட்டோடி-னன்கன்னன்வெகுமன்னன்
உயரபிமனைமனம் எரிந்து

யக. சூழ்ந்தமர்விளைத்திட்ட-இரத்தமெங்கும்ஓடத்
துரையபிமன்ஜெய சிங்கம் - போலே
ஆழ்ந்தகோபம்பொங்க-அவர்களைமாட்டினன்
அனைவர்களுங்கெர்வ பங்கம்

யஉ. உற்றேறுடினர்கள்-இலக்கணகுமாரனை
யுயர்அபிமன்தேர்மேற் கொண்டு - போரும்
அத்தருணத்திற்சல்-லியனுஞ்சித்திரபானும்
அகம்பதைத்திடும்படி சண்டு

யரு. வந்தெதிர்த்தாரவர்-மார்புதோள்துளைபட
வாளிவிட்டுச்சல்லியன் பாகன் - மீது
மந்த்ரவேலேவினன்-அதைக்கண்டசல்லிய
மன்னனென்னும்வச்சிர தேகன்

யச. தன்னிரதம்விட்டுக்-குதித்தபிமனைவாட்டத்
தண்டாயுதமேந்தி வந்தான் - வீமன்
அந்நிமிஷம்சல்யனைக்-கதையால்மாட்டினன்
அவன்வி.ழ்ந்துளம் நொந்தான்

௰௫. அதைக்கண்ட அபிமன்வீ-மனைப்பார்த்துச்சல்யனை
யமர்செய்துநொடியினில் வெல்ல - வீரஞ்
சதிருளஎனக்கில்லை-யோவென்றுவருந்துமத்
தருணத்திலேயிது நல்ல
௰௬. சமயமென்றிலக்கண-குமரனுந்திருடன்போல்
தப்பித்துக்கொண்டுடன் ஏகி - யெழில்
அமையுந்தன்தேரேறி-யோடிப்போனான்புவி
யதனில்வீழ்ந்தேமூர்ச்சை யாகி
௰௭. தனைமறந்திருந்தசல்-லியனைக்கிருதவன்மன்
தன்தேர்வைத்துப்பாடி சார்ந்தான் - வெகு
கனவீமன்வெகுபேரை-மாய்த்துப்பாசறையினிற்
கனிவாகவேசென்று சேர்ந்தான்

---

## துரியோதனன் துரோணரைப்பார்த்து எவ்விதத்திலுந் தருமராஜனைப்பிடித்துத் தரவேண்டுமெனல்.

விருத்தம் எ.

அனைவரும்பாடியிற்சேர்ந்தார்சுயோதனன்றன்
அரியமைந்தன்றனையபிமன்பங்கஞ்செய்த
கனதுயருக்கியாவருமே-நொந்தார்வேந்தன்
கண்ணுறக்கமில்லாமற்பித்தன்போலே
மனதுமிகநொந்துவில்லாசான்றன்னோடு
மதத்ததருமன்றனைநீபிடியாவிட்டால்
எனதுசினமகல்வதெந்தநாளிலுந்தா
னில்லையென்றான்இச்சொல்லேநிலையென்றானே.

௫. தரு-இராகம்-முகாரி-சாப்புதாளம்.

பல்லவி.

ஐயாதுரோணா நீகேட்பாயே - எனக் - காவியேன்உரைசெய்குவாயே

அநுபல்லவி.

வையமீதென்சீரை மண்ணாக்கிக்கொண்டேனே
மாங்காயடித்தவனை தடிபோலேநின்றேனே
ஐயா

சரணங்கள்.

க. மானம்மாண்புமாட்சி மரியாதையோடருமை
யானபேருங்கெட்டே யழிந்துதேயென்பெருமை
ஐயா

உ. தள்ளுந்தருமனைநாம் பிடிக்கவெண்ணதுபோச்சு
பிள்ளைவரங்கேட்கப்போய் புருஷனிழந்ததாச்சு
ஐயா

௬. தப்பிலாமல்நாம்பிழைக்கத்-தக்கதாசொன்னேன்சூட்சம்
இப்படியிருந்துவிட்ட தேயுமதுகடாட்சம்
ஐயா

---

விருத்தம் அ.

அரசனிதுரைக்கக்கேட்டவத்துரோணர்-அருச்சுனன்மாருதியென்முன்
அணுகிடாவகைசெய்வோர்களுண்டென்னிலமரினிலெழிற்றருமனைநான்
விரைவொடுபிடிப்பேனெனவுந்த்ரிகர்த்தன்-வீறுசஞ்சத்தரிற்சிலபேர்
விஜயனைமதவீமன்றனைமறிக்கா-விடில்வழக்கழிவுசொல்வோரும்
உரியநன்மனையாள்அமளியிலழவே-ருருத்திபாலுறங்குபாதகரும்
உத்தமர்செய்தநன்றியைமறக்க-உடலெடுத்தோர்களும்போகு
நரகினிற்போவோமென்றனரவர்க்கு-நாசகாலன்வெகுமதிகள்
நயத்துடனீந்துகுருவினைவணங்கி-நல்விருப்பிடத்தையுற்றனனே.

---

## பன்னிரண்டாநாள்.

## பன்னிரண்டாநாளுதயத்தில் துரோணர் தருமராஜனைப் பிடிக்க முயற்சிசெய்யும்போது இருவர்படையு நெருங்கிப் போர்செயல்.

விருத்தம் கூ.

பன்னிரண்டாநாள்தன்மனேற்றிரவிற்
பாதகன்செய்தயோசனையைப்
பகாருந்தூதர்தங்களாற்றெரிந்து
பகைவெலத்தும்பைமாலையினை
மன்னவேபுனைந்துசமர்க்களஞ்சேர்ந்து
மண்டலயூகமுன்வகுத்தான்
வலிமிகுதுரோணன்மகரயூகத்தை
வகுத்தனன்த்ரிகர்த்தன்மன்னவர்கள்
பின்னுநாரணகோபாலர்போர்செய்யப்
ப்ரபலவில்விஜயனையெதிர்த்தார்
பிந்திடாப்பார்த்தன்வேந்தரைநோக்கிப்
பிரியமாத்தருமனைக்காப்பீ
ரென்னவேயுரைத்தசமர்க்குடன்சென்று
னிரண்டுவெஞ்சேனையுமகுட
இராஜருநெருங்கியெமனுமெய்நடுங்க
யிணையிலாஅமர்விளைத்தனரே.

௬. தரு-இராகம்-அடாணு-ஆதிதாளம்.

பல்லவி.

விளைந்திட்டாரேசண்டை-ரணபூமியில்-விளைத்திட்டாரேசண்டை

அநுபல்லவி.

கிளைக்குங்கோபத்தாலே கிளர்சூர்யன்கதிவிள்ள
வளைக்குஞ்சேனையோடு மன்னருஞ்செயங்கொள்ள
விளைத்

சரணங்கள்

க. பகர்குருகுண்டலன்சௌ-பலன்முதலோர்முப்
பதினாயிரம்பேர்க ளோடும் - பின்னும்
பலமுள்ளகரிபரி-யிரதங்கள்சேனைகள்
பரவவேதக்கொடி யாடும்
சுகமுள்ளதேரின்மேல்-வந்தனனற்றருமன்
துடித்தவனுடன்சண்டை போடும் - முன்னந்
துதிபெறுதிடத்துய்மன்-பலபதினாயிரஞ்
சுபமன்னரிருபுறங் கூடும்
இகலினால்வலி மிகுதுரோணனை யகம்வந்தெதிர்த்தான்விண் ணதிரவே
திகழுமணிமுடி மகிபர்விடுவீரர் வெகுகடுஞ்சின முதிரவே
புகலும்வெம்படை வகைகளாலமர் முகத்திற்கண்ணிற்றீ யுதிரவே
தருபோர்செய்தனர் சகலதேசரும் புகழ்கொள்சேடனும் பெதிரவே
விளைத்

உ. வருதிடத்துய்மனிச்-சமர்விளைவதைக்கண்டு
மன்னவர்வெகுபேர்மேல் தூறிக் - கொன்று
மல்லிடுகாந்தார்-கவுசலர்கிடதரும்
வாடியோடக்கணை மீறி
துரிதமாவிட்டனன்-வெகுசேனைகுருவின்பால்
துறையாச்சேர்ந்ததுசினம் வீறி - அந்தத்
துரோணனுந்திடத்துய்மன்-வில்லைமுறித்தமர்
தொடுக்குஞ்சிகண்டிமேற் சீறி
விருதுபெறுமவ னிரதமுடைந்திடப் பொருதிப்பினும்புவி சரியவே
பரிநகுலன்கலை தெரிசாதேவனோ டருமுதார்மன்மார் விரியவே
சொரியும்வாளியால் வெருவியோடினார் தருமன்கண்டுளம் எரியவே
குருவைவளைத்தனன் இருவர்சினத்திலுங் கரிகளெட்டுமெய் பொரியவே
விளைத்

ங. தன்மன்துரோணனை-வளைத்தபோதிருவருஞ்
சகமெலாம்நடுங்கக்கொக் கரித்தார் - மேலுஞ்
சண்டனுங்கிலிகொள்ளச்-செயராமன்சிலையஞ்சத்
தங்கள்வில்லைக்கையில் தரித்தார்
பன்னுமுப்புரத்தினை-முன்னாளிலெரித்ததற்
பரனெனக்கோபத்தால் சிரித்தார் - உடன்
பாணமழைபெய்தார்-பாதலம்வாழ்வீரர்
பரியுமங்கையருங்கை நெரித்தார்

மன்னன்சிலைக்குருவின்தேர்பரிபாகன்மாமறைக்கொடிவில்லும் போகவே
யுன்னியைந்தம்பை வன்னிபோறகண்கள் மின்னவொன்னலர் நோகவே
துன்னுகொடுநம னென்னவிட்டந் தணன்பதாதியங் காகவே
சின்னப்படுத்தினன் இன்னவகைராசர் முன்னமிவர்மனம் வேகவே
விளைத்

---

## தருமராஜனல் துரோணர் நிராயுதராய்ப் பின்னும் வேறு தேரேறி அநேகவரசரோடு வந்தெதிர்க்க, திட்டத்துய் மன் அபிமன் முதலானவர்களோ டெதிர்த்துப் போர்செயல்.

விருத்தம் ய.

குருசமர்க்களத்தினிற்பதாதியான
கோலமதைக்கண்டதன்மனன்னேன்பாற்போய்
எரிவாளியுன்னுடைவிற்றைக்கநானிங்
கினிவிடுவதிலைநீரேகென்றுன்கேட்டு
விரைவினிலேமுகங்கூசிப்போனதுரோணன்
வேறுதேளூர்ந்தமர்க்குவருமப்போது
நிருபர்வெகுபேர்பார்த்துக்கோபத்தோடு
நேரிட்டார்புவிகலங்கப்போரிட்டாரே.

எ. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

சண்டைசெய்ததைக்கேளுங் - கோபத்தோடு
சண்டைசெய்ததைக்கேளும்

அநுபல்லவி.

மண்டலங்கலங்கவே மறுதேரிற்புலிபோலே
வந்ததுரோணனும்பல மன்னருமென்மேலே
சண்டை

சரணங்கள்.

க. குருவினையபிமன்-விராடன்திடத்துய்மன்
குந்திபோஜன்இவர்வெ குண்டு - வீரங்
குடிகொண்டவெகுசேனை-யிருபுறம்வரச்சூழ்ந்து
கொண்டாரப்பொழுதினில் கண்டு
துரிதமாக்கலிங்கனுங்-கன்னனுஞ்சகுனியுந்
துடித்துக்கிளம்பிநற் செண்டு - [illegible]
துரோணனுக்குத்துணை-யாகினர்கள்பின்னுந்
துள்ளிக்குதித்தெங்குந்தி ரண்டு

வருமன்னருங்கா லாளும்போரினைச்செய்து
மாண்டார்கள்ளமெங்கும் வெஞ்சரமழைபெய்து

சண்டை

௨. வகுத்திடும்இருபடை-யிலும்வெகுபோாவி
மடிந்ததைக்கண்டபி மன்னும் - பல
வான்கடோர்க்கஜனும்நீள்-சேனையினெடுசென்று
வளைத்தமர்செய்தத்தில் துன்னும்
ஜகமிசைமாய்ந்தோர்கள்-போகமற்றோர்சுயோ
தனனிடஞ்சேர்ந்தார்சீர் மன்னுங் - குரு
தன்னெடுவெகுசேனை - பின்னிட்டதைக்கேட்ட
சர்ப்பகேதனப்பாவி யென்னும்
மகிபன்சேனையினெடும் வந்தமாாடினன்
வந்தசேனையையபி மன்கண்டுசாடினன்

சண்டை

௩. அம்பினாற்பலர்மாண்டார்-தருமனூற்றேர்வில்லும்
அழிந்திடத்துரோணன்சிங் காரத் - தேரில்
அனந்தாதக்காரர்-தமைக்காக்கத்தருமன்றன்
அரும்படையினில்மகா வீர
இபங்குதிரைகளோடும்-வந்துபோர்விளைத்தனன்
இதைக்கண்டஅபிமன்வில் தார - அம்
பினிற்சாடித்துரத்தினன் - பதினாயிரம்யானை
யின்பலமுள்ளகெம் பீர
சுபாராஜன்பகதத்தன் இருபதாயிரம்யானை
சூழச்சமர்க்குவந் திட்டனன்வெகுசேனை

சண்டை

௪. வெள்ளானைமேல்வந்த-பகதத்தனைப்பார்த்து
வெகுண்டசுயோதனப் பாவி - தள
மேலுமிவ்வீரனை-யார்செயிப்பாரென்று
விரைவுற்றாயுதங்களை மேவி
உள்ளமகிழ்ந்து-திரும்பவிட்டதுரியோ
தனனவன்தம்பிய ராவி - போலும்
உரிமைகொள்பலராஜ-ரும்பகதத்தன்பால்
உற்றனர்கொடுஞ்சினந் தாவி
துள்ளிக்கடோர்க்கஜன் அபிமன்னும்சதுரங்கஞ்
சூழச்செய்தபோரை யெவர்செய்வார்பிரசங்கம்

சண்டை

ரு. தன்மன்கடோர்க்கஜன்-அபிமன்னும்இணையில்லாச்
சமர்விளைக்கின்றவப் போது - யானை
தன்மீதுவருபக-தத்தன்மார்தோள்நையச்
சமனெனயெதிர்த்துமண் மீது
மின்னுமலிடியிடித்-திட்டாற்போலோர்கையால்
வீமன்குத்தியடங் காது - வீறும்
வெருகோபத்தாலவன் - யானைநெற்றிப்பட்டம்
விழவுதைத்தேயதி தீது
பின்னமறச்செய்யத் தன்தேரினிலேறிப்
பினும்வில்லைவளைத்தம்பு தொடுத்தனன்மிகமீறி

சண்டை

ச. அந்தமாருதிவிடும்-பாணத்தைப்பகதத்தன்
அரும்நெடுங்கதையினால் அடித்து - தூள்
ஆக்கிப்பின்னும்அம்பு-களைப்பெய்தானவனுக்கிர
ஆனைத்திரளும்துடி துடித்து
எந்தலோகமுமதிர்ந்-திடும்படிக்குச்சண்டை
இனைப்புரிந்துபூமி வெடித்துப் - போக
இணையில்லாப்பகதத்தன்-ஏறும்வெள்ளானையும்
இயமனுமிகக்கிலி பிடித்துச்
சிந்தைநோகச்செய்த போரையிவ்விதமென்று
சேடனுஞ்சொல்லப்போமோ அமர்முனையினில்நின்று

சண்டை

---

## பகதத்தனால் தருமன் வருத்தமடைந்து திருமாலை நினைத்தல்.

விருத்தம் ௰௧.

பகதத்தனுமவன்திரள்சேர்யானை
பண்ணுமமர்தன்னாலுந்தருமன்சேனை
மிகதத்தியிளைத்தலினால்மாலைத்தன்மன்
விரைவொடுதியானித்தான்கிருஷ்ணன்சஞ்சத்தர்
திகர்த்தநாரணகோபாலரைநீயங்கு
செய்தசபதப்படியிங்கவர்மதத்தை
அகங்கொதித்தம்பாலடக்கவேநீயேற்பட்
டாயென்றான்என்சொலைக்கேட்பாயென்றானே.

## பகதத்தனும் அருச்சுனனும் போர்செயல்.

விருத்தம் ாஉ.

விஜயாகேள்நாலாயிரந்தேர்க்காரர்
மிகத்துமிசப்படச்சாடிவிட்டாய்தன்மன்
திசைகலங்கவமர்புரிந்தான்பகதத்தன்போர்
செய்கின்றனவன்றனைமாய்த்திடவாவென்றான்
வசையறுசங்கந்தொனித்துவந்தான்தன்மன்
வல்லசேனையுந்திரும்பிவிட்டதிங்கே
இசைபெறுபார்த்தனும்பகதத்தனுநீள்வில்லை
யெடுக்கின்றாரகோரயுத்தங்கொடுக்கின்றாரே.

அ* தரு-இராகம்-கல்யாணி-ஏகதாளம்.

பல்லவி.

விஜயனும்பகதத்தனும்-ஓர்பக்கம்-வெம்போர்செய்தாரே

அநுபல்லவி.

புஜபலவீமன்றன் னுடனீள்யுத்தம்
புரிந்ததைவிட்டுக்காண் டபன்மேற்சித்தம்
அசைவறப்பக தத்தன்கொதித்ததை
யார்விண்டிட வேகூடும்
பாரெங்கிலுங் கொண்டாடும்

விஜய

சரணங்கள்.

க. பகதத்தன்யானை-தன்னைநடத்தியே
பாரவில்லைக்கையில் சேர்த்துக் - கொடும்
பாணங்களைப்பார்த்தன்-மீதினிலேவினன்
பகர்தேவருடல் வேர்த்து
மிகக்கலங்கிடவே-பகதத்தன்மேல்
விஜயன்கோபத்தைப் போர்த்து - அவன்
வில்லினெடுகவ-சத்தையும்பாழாக்கி
மேலும்வில்லிலம்பைக் கோர்த்து
ககனம்நடுங்க அன்னோன்விடுத்திடு
கணைகளைவிலக்கினன் சுதந்தர
மணிமகுடம் பெறுதந்திர

விஜய

உ. தனஞ்சயன்பக-தத்தன்சரங்களை
க்ஷணத்தில்விலக்கக் கண்ட - அன்னோன்
சதிர்பெற்றஇந்திரன்-தந்தவேலாயுதந்
தனையழகினைக் கொண்ட
கனம்பெறுகிரீடி-மார்புறஏவினன்
கனல்வேலைலோகம் உண்ட - கிருஷ்ணன்

கடிதிற்றுங்கு-முன்னதுமிகுத்திடுங்
கதிரொளிவீசி யண்டர்
அனைவரும்போற்ற ரத்தினமாலையாய்
அருமால்மெய் யுழகைப்பெற
விரைவாவீழ்ந் ததுநற்றிற

விஜய

ரு. அதைக்கண்டபார்த்தன்-மாயனோடவ்வேலை
யழித்துவெற்றிக்கு முந்த - என்ற
லாகாதோவெனச்-சீறும்போதுமால்
ஆயுதபாணியை யந்த
எதிரில்லாதவேல்-கொல்லுமென்றுநா
னேற்றுக்கொண்டேனென்றுந் தொந்த - முட
னேசொலிப்பக-தத்தனைமாய்க்க
இதுததியென்றுந் தந்த
சதிருளஅம்பை அர்ச்சுனன்பக
தத்தன்மார்பினிற் ருக்கினான்
சித்ரக்கவசத்தையும் போக்கினான்

விஜய

---

## அருச்சுனனால் பகதத்தனிறத்தலும் பின்பு காந்தாரமன்னர் முதலானவர்கள் அருச்சுனனோடும் வீமனோடு மெதிர்த்து முதுகிட்டோடலும்.

விருத்தம் யரு.

விஜயனொருவாளியினாற்பகதத்தன்றன்
வெஞ்சேனையொடுமடிந்தான்பார்த்தன்றன்னைத்
திசையிலுள்ளோருந்துதித்தார்நற்காந்தார
தேசமன்னரவனுயிரைவாங்கிறோமென்
றசையும்நெடுமலைபோலேவந்தெதிர்த்தார்
அப்போதுசகுனிமைந்தர்கிரீடியாலே
கொசுவெனமாய்ந்தார்பின்னும்விளைந்தபோரைக்
கூறுவேனின்பமதில்வீறுவேனே.

க. தரு-இராகம்-சௌராஷ்டகம்-சாப்புதாளம்.

பல்லவி.

நடந்தபோரினைச்சொல்லுவேன் - பனிரண்டாநாள்
நடந்தபோரினைச்சொல்லுவேன்

அநுபல்லவி

அடங்கிடாதவிஜய னாலேசகுனிபுத்திரர்
ஆவியிழந்தபடி யாலேமனத்திற்குத்திர

மொடசகுனிபார்த்தன்மேல் உடனேவில்லைத்தொடுத்தான்
உயர்மூதண்டமுநடு நடுங்கக்கணைவிடுத்தான்

நடந்த

சரணங்கள்.

க. அப்பொழுதினிற்பார்த்தன்-சகுனிபாகனைத்தேரை
அரியவில்லினைநாச மாக்கி - ரத்த
அருவியோட அம்பால்-அவன்மார்பைப்பிளந்திட்ட
தால்வெட்கத்தினைச்சற்றும் பாக்கி
வைப்பதேனென்றோடி-னவனைக்கிரீடி
வண்ணநகைசெய்து நோக்கி - போர்க்கு
வந்தேநொந்தாயிது-நீயாடியசூது
மார்க்கமல்லயெதிர் தாக்கி
ஒப்பறுஜெயங்கொள்ளும் போராகையாலோடி
யுன்னுயிர்தப்பித்துக் கொள்ளென்றான்கண்மூடி
இப்படியர்ச்சுனன் சொல்லப்பங்கத்தையுற்றும்
இணையில்லாத்தருமன்மேற் போர்க்குச்சென்றான்முற்றும்

நடந்த

உ. சகுனிமறுதேரேறித்-தளஞ்சூழநற்றருமன்
தன்னுடன்அமர்செய்யும் போது - மூா
சக்கொடியோன்என்னுடன்-சொக்கட்டான்ஆடுஞ்
சாலவித்தையல்ல ஈது
பகரும்போராகை-யாலேயுனதுசிவன்
பதைத்துத்துள்ளஉன்றன் மீது - கொடும்
பாணத்தைவிடுக்கிறேன்-எனவவியவனைப்புண்
படுத்தினன்அவனருஞ் சூது
முகங்கூசவோடினன் அப்பொழுதினிற்கண்ட
முடிமன்னர்தருமனை யெதிர்த்தவன்பிரசண்ட
மிகும்அம்பாலேரத்தம் ஓடச்சிலபேர்மாய்ந்தார்
விரைவிற்சிலபேர்பதி சேரஎண்ணம்வாய்ந்தார்

நடந்த

ங. ஒருபக்கத்தினில்மேலுங்-துரோணனஸ்வத்தாமன்
உயர்கன்னன்சுயோதனன் கேடு - தன்னை
உறவுகொள்ளும்அவன்-தம்பியர்இவரெல்லாம்
ஒருக்காலேவீமன்மேல் நீடு
சரமாரிபொழிந்தார்கள்-அதுகளெல்லாமலை
தனிற்பெய்தமழையென நாடு - வீமன்
தன்பாணங்களையேவி-யத்தனைபேர்களுஞ்
சண்டைக்கிந்தாம ஞேடு

வரலாகாதெனஎண்ணும் படிதேர்சுழலமாட்டி
வஞ்சச்சுயோதனனுக்குப் பினும்பொருமையைமூட்டி
அரியருத்ரன்போலிருந் தான்வீமன்அப்பாவி
அகமகிழ்தம்பியரும் போர்செய்தார்சினமேவி
நடந்த

ச. பாதகன்தம்பியர்-வீமன்மீதினிற்சண்டை
பண்ணும்போதுவிற்கையில் தாங்கி - சமர்
பன்னும்அஸ்வத்தாமனைக்-கன்னன்தனையுமாட்டிப்
பலமன்னர்தங்கள்முன் ஓங்கி
வேதைசெய்தேகொன்றான்-பிழைத்தராஜர்கையில்
வில்லைவளைத்தெழில் தேங்கி - நிற்கும்
வீமனையும்மாவிடம்-வாழருச்சுனனையும்
விறற்றருமனையுங்கண் டேங்கி
ஏதிலார்போற்றிகைத் திளைத்தவர்களைப்பார்த்து
இனிநிற்கலாகாதென் றோடினார்கிலிபோர்த்து
நீதில்லாத்தருமரா ஜனைப்பிடிக்கவந்த
சிலையாசானும்ஓடிப் பாடிசேர்ந்தான்முந்த
நடந்த

---

## பன்னிரண்டாநாளிரவில், யாவரும் பாடிவீடுசேர்ந்து அன்றுநடந்த போரைக்குறித்துப் பேசுதல்.

விருத்தம் ம்ச.

போரினைப்புரிந்தயாவரும்பாடி
போயினர்துயர்கொள்மன்னவன்பாற்
பொருந்தியவரசிறந்தபேர்க்கிரங்கிப்
புகல்பகதத்தன்வீரத்தைப்
புகழ்ந்தனராசன்துரோணரைநோக்கிப்
புவியினிற்சிங்கம்யானைக்கோர்
போதுமஞ்சிடுமோஐவர்மீதென்றும்
பூரணஅன்பைநீவைத்த
காரியத்தாற்றன்மனைப்பிடியாமற்
கபடமேகொண்டுபின்னிட்டுக்
கடிதில்வந்தீரென்றுளமெரிந்துரைத்தான்
கன்னனப்போதிராஜனையுங்
கனங்கொளும்வில்வேதியரையும்நோக்கிக்
கதிர்முடித்தருமனைப்பிடித்துக்
கணத்தில்வருவேனென்றசொற்படியே
கையொடுகுருபிடித்திங்கே

தீரமாவந்தாரென்றும்வேதியர்க்குச்
சிறிதுமோர்வீரமேதென்றுஞ்
சிரித்தனன்துரோணனரும்விழிசிவந்து
தீமைசெய்சுயோதனனுடனே
செகமதிற்றருமராஜனையெதிர்போய்ச்
செயிப்பவன்யானெனச்சொல்லத்
திடமொருவனுக்குண்டாகுமோவென்றுஞ்
சிறந்தவுன்படையில்வில்லுக்கு
வீரன்யானென்றுதுள்ளியேயிங்கு
விளம்புவோன்றன்னைநாளைக்கு
விடைகொடுத்துத்தன்மன்றனைப்பிடிக்க
வேயனுப்பென்றும்விண்பழியென்
மீதுசொல்லாதேயென்றும்ஸ்ரீராமன்
வில்லினைத்தருமராஜன்றன்
விற்கிணைசொலிற்பாவம்வருமென்றும்
விண்டுதன்னிடத்தையண்டினனே.

---

## பதின்மூன்றுநாள்

## துரோணச்சாரியர் தன்சேனையை பத்மயூகம், சூசிகாயூகம், சக்கிரயூகமாகவகுக்க, திட்டத்துய்மன் தன்சேனையை மகரயூகமாகவகுக்க, சஞ்சத்தர் அருச்சுனனோ டெதிர்க்க, திட்டத்துய்மன் துரோணரோ டெதிர்த்துப் பின்னிட்டோடிவரத் தருமன் பார்த்து அவனைத் தேற்றுதல்.

விருத்தம் ௰௫.

பதின்மூன்றுநாளதனிற்குருடன்பெற்ற
பாவிதுரியோதனன்கட்டளையினாலே
அதிசேனைவிஜயன்மிசைநேர்ந்ததங்கே
ஐவர்களானேற்றுமனநொந்ததுரோணன்
முதிர்சீர்தன்பனைச்செயிக்கவெண்ணங்கொண்டான்
முக்யவிலக்கணகுமரன்மன்னன்பின்னோர்
துதிசேருங்கலிங்கர்மற்றோர்கடலைப்போலே
தோன்றினார்பகையைநெஞ்சிலூன்றினாரே.

விருத்தம் ௰௬.

இலக்கமற்றிடவிப்படிவெகுபேர்கள்-எழில்கொள்பேரணியில்நின்றனர்கள்
இணையிலாப்பதுமயூகநற்சூசி-யென்னும்யூகஞ்சக்ரயூகஞ்
சிலைக்குருவகுத்தவ்வணிகளின்முன்னே-சென்றனன்றூசியினிங்கே
திகழ்திடத்துய்மன்மகராமாயூகஞ்-செய்துபோரணிதனில்நின்றுன்
தலத்திடையெவருஞ்சமர்புரிந்தார்சஞ்-சத்தர்க்ரீடியையமர்க்கழைத்துச்
சண்டைசெய்தநேகரிறந்தனர்சிலபேர்-தயங்கியோடினர்தனுக்குருமேற்
சலத்தொடுதிடத்துய்மன்கடிதெதிர்த்துச்-சமர்புரிந்தோடிவந்தனனத்
ததியினிற்றருமன்பார்த்தவன்றன்னைத்-தயவுடனுபசரித்தனனே.

௰· தரு-இராகம்-காபி-சாப்புதாளம்.

பல்லவி.

நீயேதோற்று வந்தையே - அதனையெண்ணில்
நிலைகலங்குதென் சிந்தையே

அநுபல்லவி.

காயும்அக்கினியைப்போற்-கதித்ததிஷ்டத்தூய்மனே
நீயே

சரணங்கள்.

௧. அண்டும்இந்தச்சேனைகள் சண்டைசெய்திடவிதி
கண்டுசொலும்அதிப்பிர சண்டசேனாதிபதி
நீயே

௨. பாரும்விண்ணுங்கலங்கப் போர்செய்வில்லும்விடுத்துச்
சீரினிலுயர்மணித் தேரும்பறிகொடுத்து
நீயே

௩. அவரவர்மானங்காப் பாற்றலேஅரிதின்று
புவனகுருவோடமர் எவர்செய்வார்எதிர்நின்று
நீயே

---

## தருமராஜன் அபிமன்னுவைப்பார்த்து, இன்று பதும யூகத்தையுடைக்க, உனையன்றி ஒருவருமிலை, நீ போகவேண்டு மெனல்.

விருத்தம் ௰எ.

சங்கையறத்திஷ்டத்தூய்மனுக்கிவ்வாறு
தருமபூபதியுபசரித்தையாநீ
யிங்கிளைப்பாறென்றுசொல்லிமிகவும்யோசித்
திருக்கும்போதினிலருகேயுமையாளீன்ற
துங்கவுக்ரவேன்முருகன்றனைப்போல்நிற்குஞ்
சுகிர்தகுணவபிமனைப்பார்த்திந்தயூகம்
பங்கமுறவிப்போதேநீபோயோர்கை
பாரென்றுனைவிடயிங்காரென்றுனே.

௰௧. தரு-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

பல்லவி.

இந்நேரம்யோசித்தேன்-அபிமன்னுநீ-இருக்கிறயேபயமென்று

அநுபல்லவி.

மின்னுந்தங்கள்தங்கள் வீட்டினில்ஒருக்காலே
வெண்ணெயிருக்கநெய் விலைக்குத்தேடுவார்போலே
இந்நேரம்

சரணங்கள்.

௧. எனையின்றுபிடிப்பதா யெண்ணிமிகவும்வீரம்
முனைமுகத்தினில்குரு மொழிந்தார்நேற்றுவிஸ்தாரஞ்
சினமாரும்அவர்முன்னே செல்லாதொருவர்வீரம்
எனமனதில்எண்ணு தெண்ணியேவெகுதூரம்
இந்நேரம்

௨. தப்பறஇன்றுவகுத்த சக்கரயூகத்திற்சென்று
விற்படைவீரரைவெல்ல வேணும்அர்ச்சுனனின்று
இப்படைமன்னவரைக்கொண் டென்செய்குவோம் இன்று
கப்பலேறிப்பட்டகடன் கொட்டைநூற்றறுமோவென்று
இந்நேரம்

௩. மதிக்குந்துரோணர்பெரு மலைபோல்வளைத்தால்வில்லை
எதிர்ப்போர்எவர்பல்லை யிளித்துக்கடிப்பார்புல்லை
உதித்தபேர்களெல்லாம் உயர்வீராவதில்லை
கொதிக்கும்உன்சினத்துக்குக் குருதப்புவதுதொல்லை
இந்நேரம்

---

## அபிமன்னு யுத்தசன்னகனுப் புறப்பட்டுப் போகும்போது சாரதி அபிமன்னுக்குச் சொல்லுதல்.

விருத்தம் ௰அ.

விரைவாகச்சொன்னபெருந்தந்தைதாளில்
வீழ்ந்துவிடைகொளவீமனவனைநீபோய்
அரியசக்ரயூகமுடைநானும்பின்வந்
தடுக்கிறேனெனச்சொலுமுன்காதிற்சோதி
மருவியகுண்டலமசையத்தும்பைசூடி
வண்ணவில்லினெடுசகலபடையுந்தாங்கி
எரிவடவாக்கினியுமிகக்கலங்கத்தேர்மீ
தேறினன்சுமித்திரனுங்கூறினனே.

ம்௨. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தச்சேனையின்மீது - நீதனியாகச்செல்வ - தெவ்வளவுந்தகாது

அநுபல்லவி.

அந்தமிருந்தஅபி　　　மன்னேமிகஉறுக்கும்
ஆனைக்கும்ஒருகா　　　லத்திலடிசறுக்கும்
இந்தச்

சரணங்கள்.

௧. முத்தலமும்வென்றவுன்-தந்தையானலங்கவர்
முன்சென்றேயவன்வச்சிர　　　தேகம் - எல்லாம்
அத்திரங்களுருவி-னுலுமிளைத்துவர
அகத்திற்கொள்ளானெருசந்　　　தேகம்
எத்தனைவீரம்உனக்-கிருந்தாலும்அவர்களை
எதிர்த்துக்கொல்லக்கூடாத　　　யூகம் - வளைத்து
வைத்தனர்வெட்டுகின்ற-கத்திபஞ்சினைவெட்ட
வாய்மழுங்கும்அதுபோற்　　　சாயாதுன்நிர்வாகம்
இந்தச்

௨. ஜெயதனுவேதகுரு-க்ருபர்அஸ்வத்தாமன்கன்னன்
தேசாதிபர்களொருக்　　　காலே - கூடி
புயவலிமைகாட்டுவ-தன்றியுஞ்சேனைநாலு
புறத்தினும்பெருங்கடல்　　　போலே
பயங்கரப்படநிற்கின்-றதுநீசுத்தவீரனென்
பதற்கையமில்லைபுவி　　　மேலே - சிறு
மயிலிறகேயென்றாலும்-வண்டிக்கதிகசுமை
வைத்தாலச்சுமுறிந்தே　　　அற்றிடுமாகையாலே
இந்தச்

௩. மாணிக்காத்தினில்வில்லை-வளைத்துவிக்ரமாண
மண்டலத்தினில்மகா　　　மேரு - வென்ன
குணத்துடன்நிற்குங்குரு-முதலோரைக்கொல்லவுன்னால்
கூடுமோகூடிலுண்டாம்　　　பேரு
துணுக்கென்றவர்விழாமல்-ஜெயமில்லையப்பாலுன்
சொல்லுக்கெதிர்சொல்வோர்கள்　　　யாரு - பகர்
அணுக்களேமிகுந்தெழுந்-தாலுஞ்சூரியமண்
டலத்தைமறைத்திடாதோ-சற்றேயோசித்துப்பாரு
இந்தச்

## அபிமன்னு சாரதியைப்பார்த்துத் தன்சாமர்த்தியத்தைச் சொல்லுதல்.

விருத்தம் ௰௬.

பாகனுஞ்சுமித்திரனிந்தப்-படிசொலவபிமன்கேட்ட
மோகமாச்சிரித்திவ்வண்ட-முழுமையுந்தணல்போற்பற்றி
வேகயான்செயப்போகின்ற-வெஞ்சமர்தனைநீயின்ற
நேகமாக்காண்பாயென்றங்-கிகலுவான்புகலுவானே.

௰௬. தரு-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

என்னவார்த்தைசொன்னாய்-சுமித்திராநீ-என்னவார்த்தைசொன்னாய்

அநுபல்லவி.

முன்னுமிந்தச்சேனைக ளென்னத்ரணங்காணுமோ
மூடுபனியைநீக்கக் கோடிசூர்யர்வேணுமோ
என்ன

சரணங்கள்.

௧. சிதைக்கும்வில்லோசையினால் திக்கானைகளின்காது
செவிடுபடச்செய்தண்டந் திடுக்கிடவேஇப்போது
அதஞ்செய்கிறேனுருவால் ஆவதென்னமண்மீது
அச்சாணியில்லாமலோர்தேர் முச்சாணளவும்ஓடாது
என்ன

௨. திடங்கொள்தேவரேவந்து செறிந்தாலுஞ்சூரணம்
செய்தின்றுசெய்கிறேனென் ஜெயத்தையுத்தாரணம்
அடருமிக்கூட்டத்தாலொன் ருமோயென்னகாரணம்
அங்குசத்திற்குப்பயந்த டங்கவில்லையாவாரணம்
என்ன

௩. அஞ்சாமற்போர்செயும்வில் லாண்மைதனிலேதக்க
வர்களென்றுநீமதித்தோர் யாரோஅவரேமிக்க
நெஞ்சழிந்துமரம்போல் நிலத்தில்வீழ்ந்துபதைக்க
நிமிஷத்திலடிக்கிறேன் நீயேகண்டுநகைக்க
என்ன

---

## அபிமன்னு சக்கரவியூகத்தை யுடைத்து எதிர்த்தவரை யெல்லாம், அழியச்செய்தல்.

சந்தவிருத்தம் ௨௰.

அற்புறுபாக னினித்திடவோத-அருச்சுனன் மாமதலை
அக்கணநீடனு மக்கொடியா-டிரதத்தினி லேகியெழு
மைப்படிவான முகட்டையளாவு-வரைக்குலம் நீறுபட
வட்டவிசால சமுத்திரமேழும்-வனத்தெரி போலெரிய

நிர்ப்பயவாரண முட்கிடநாகர்-நெளித்திட ராலயா
நெற்பொதிமாடென ஒப்புசொல்பாவி-நினைத்துள மேயெரியச்
சற்புருஷாதிப விற்குருதுரோணர்-சமைத்தமகா வணிகொள்
சக்கரயூக மதைச்சினமோடு-தகர்த்தமராடினனே.

யச. தரு-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

அபிமன்செய்தானே சண்டை
அடல்விஜய னுசித
மிகுசுப வரசுத

அநுபல்லவி.

சபையினிற்றன்பெரிய தந்தைசொல்லவெகுண்டு
சங்காரகாலருத்ரன்போல் மிகுத்தபோர்க்கோலங்கொண்டு
ப்ரபலசக்ரயூகத்தைப் பேதித்துட்புகுந்தின்று
பிணக்காடாக்கிறேனரைக் கணத்தினிலென் றுசென்று
அபிமன்

சரணங்கள்.

க.

பார்த்திபர்கள்கலங்கபோர்க்களத்தினில்வந்தார்ப் பரித்துவிளங்குங்கிருஷ்ண
மூர்த்தியுபதேசித்தசூத்திரமந்திரத்தையுச் சரித்து - வில்லைவளைத்து
க்ஷாத்ரமாய்க்கொடியனல்துற்றுபாணங்களைத் தொடுத்துஒவ்வொருபாணம்
எற்றிடுகோடிபேரைச்சேர்த்தறுத்திடக்கடு கடுத்துச் - சக்கரயூகம்
இடருடனுடைபடநொடியினிலடைவுடன் குறித்து - விடுகணைகள்
படைகளினிடைகளைமுடிகளையடிகளைத் தறித்து - இரண்டாம்அணி
முடியினினுறைகுருகிடிகொளநொடியினில் மறித்து - அவரேறிய
கொடியுபரிரதமுமடியுடனொடியவே முறித்து - நாணையறுத்துக்
கொற்றமுந்திடும்வில்லையொடித்துயர்பாகன்றலையைத்தூக்கி - திணிகொள்
[தேக
முற்றிலுந்துளைசெய்யச்சகஸ்திரபாணங்கடிதில்தாக்கி - குருவென்றுதப்
பெற்றிடும்பெயரிழிவையுற்றிடநாணும்படியா நீக்கி-பின்னையும்அந்தச்
சுத்தனும்பிரமைகொளவடித்துடனேடும்படி யாக்கி - நிற்பதைக்கண்டு
முந்தும்அண்டமுங்கலங்கிநின்றிடவெகுண்டுபகை நீட - தன்னையளித்த
தந்தைசண்டைதந்தடைந்தநிந்தையைநினைந்துமனம்வாட-அஸ்வத்தாமனும்
வந்தெதிர்ந்துபொங்கவங்குசென்றபிமனுந்துகணை மூட-மூடுங்கணையால்
நொந்தயர்ந்தடங்கிச்சிந்தைவெந்திடப்பயந்துமிகவோட - விடுத்தப்பாலோர்

நொடிக்குளநேகமன்னர் பொடிப்பொடியாப்பொடிய
நோக்குந்தேவரிவன்வை ராக்கியத்தைக்கண்டிடிய
அடுத்தகடலெனும்பேர் கெடுத்துச்செந்தூள்படிய
அந்தக்கௌரவர்சேனை நொந்துமிகமடிய

அபிமன்

உ.

தாலமிசையனந்தகாலம்பகைகொள்கன்னன் அடுத்தான் - அடுத்தவ்வால
காலநிகரும்பாணசாலங்களமிதமாத் தொடுத்தான் - அதையோர்த்ராணம்
போலிவன்விலக்கிமேன்மேலுமோர்கோடிகணை விடுத்தான் - கன்னன்பார் [த்தினி
மேலிருந்தால்நாமலங்கோலமாவோமென்றோட்டம் எடுத்தான் - அவன் [போனபின்
விருதுபெறுகிர்பனும்கிருதபன்மனு மெதிர்ப்பட்டார் - அபிமன்பார்த்தவ்
விருவர்தனுவுமொடித்தொருகணைபோடவோடிவிட்டார் - சகுனிமைந்தன்
மருவுசகுனிவெகுநிருபர்களும்வந்துபோ ரிட்டார் - இட்டுதீட்சண்ணிய
சரமழையபிமன்மேலொருமிக்கப்பெய்யக்கரந்தொட்டார்-தொட்டகைகளும்
தத்திவருதேர்களும்அற்றுவிழவெகுகணை தூற்றி - வந்தசகுனி
புத்திரனைராஜரைசித்திரவதைசெய்துயிரை மாற்றி - சகுனிபயந்
தத்தருணமோடவெதிர்த்தடல்கொள்கணைகளை யேற்றி - ஓங்காரஞ்செய்து
சத்திபெறுபீகாரருத்ரனைநிகரெனத் தோற்றி - அண்டிடுங்கோபச்
சன்னதமதில்வடவைதன்னிலுமதிகமாகக் கொதித்து - நிற்பவன்முன்னே
துன்முகனெடுகுணவிகர்னனுமுரமுடனே கத்தித்து - எதிர்க்கநீங்கள்
தென்முகநமனுலகமிங்நொடிதனிலேறவோ குதித்து - வந்தீர்களோடி
அன்னையினிடமருவுமென்னவவரைலேசாய் மதித்து - ஓடவிட்டப்பால்

அன்றுயர்தூணிலே வந்திடுநரசிங்கம்
ஆமிவனெனரண பூமியிலேயிலங்க
சென்றுபாதலத்திற் சேடன்முடிகுலுங்கச்
செகதலத்தினிலுள்ளோர் திகைதிகைத்துக்கலங்க

அபிமன்

ங.

சிரமறுபட்டுமண்மேல்மரம்போல்வீழ்ந்தவர்க ளநேகர் - கவசத்துடன்
உரமறுபட்டிருகண்சொருவிமடிந்தோர்க ளநேகர் - வில்லுடனிரு
கரமறுபட்டங்கங்கேவுரமற்றுவீழ்ந்தோர்க ளநேகர் - துண்டுதுண்டாகப்
புரமறுபட்டுநெஞ்சத்துரமழிந்துமாண்டோர்க ளநேகர் - கணையுருவிப்

புடவிமிசைமயக்கத்தொடுபுரள்வோர்க ளநேகர் - பருத்தவிரு
தொடையறுந்துவலியால்முடிசாய்ந்திருப்போர்களநேகர்-நெடியமணிக்
குடல்சரிந்துமறலியிடஞ்செல்லுவோர்க ளநேகர்-கச்சைகட்டிய
இடையொடிந்துபதைத்தேயுடல்தத்தளிப்போர்களநேகர்- அம்புகள்வதைத்
திட்டமிக்கவேசுறணெகெட்டாற்றிமாள்வோர்களநேகர் -இளைப்பால்சுவாசம்
விட்டுரப்பியேயவனைத்திட்டிமுட்டிவீழ்வோர்களநேகர் - உயிர்போகும்போ
தொட்டிக்கெட்டியாயலறித்தட்டுக்கெட்டுச்சாய்வோர்களநேகர்-தீபத்திலகப்
பட்டவிட்டில்போலுருவமற்றுவற்றிமாள்வோர்களநேகர்-இவ்விதமாகப்
பங்கமுறவழிந்தொருதங்கமலையெனவொளி நீடப் - பீரிட்டுவருஞ்
செங்குருதிமிகுத்துலகெங்குமலைகடலென ஓட - யமதூதர்கள்
சங்கையறக்களத்தினிற்றங்குமுயிர்களைமிகத் தேட - தேவர்களெல்லாம்
பொங்கிவனையெதிர்ப்பவரெங்குமிலையெனஇசைபாடத்-தப்பிப்பிழைத்த

புரவலரெல்லாமுட லருவருத்திடமெல்லப்
போயொளித்துநமக்கு மாய்வென்றுவாயைமெல்ல
கருதருமிப்படையை யொருமிக்கக்கொல்லவல்ல
காலனேயிவனென்றிப் பாரிலெவருஞ்சொல்ல

அபிமன்

---

## அபிமன்னுவால், துரியோதனன் சேனைகள் பட்டபாட்டைக் கூறல்.

விருத்தம் உக.

அபிமனிப்படிபோர்செய்திடும்போதங்-கரியவிற்குருகிருபனைப்பார்த்
தரவகேதனன்கேட்டிடஐவர்களும்வந்-தபிமனுக்குத்துணைகூடில்
விபவமுற்றிடுமுப்புவனம்வேமென்றும்-விஜயவில்லிரதமொன்றுடனே
வெஞ்சமர்புரியுமருச்சுனன்மைந்தன்-வெற்றிவேன்முருகனேயென்றும்
சுபகரமாகவுரைத்தனன்வேந்தன்-துடித்தெழிற்கன்னனோடாசர்
துணைச்செவிக்கேறத்துரோணனிப்பையல்-துள்ளலையடக்கமாட்டாமல்
கபடநெஞ்சத்தாற்றுதிப்பதில்மயங்கக்-கார்யமேனென்றதுமபிமன்
கணையினுன்மன்னர்பட்டபாடுசளுங்-கனிவுடன்யான்பகருவனே.

௰ரு. தரு-இராகம்-சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

அபிமனுற்பட்டபாடு-சொல்லில்-அதிருமேவிண்ணோர்நாடு

அநுபல்லவி.

கபடுற்றதுரி யோதனன்வல்ல
காண்டீபன்மகன் றன்னைக்கொல்ல
விபரீதமதி யாலனுப்பிய
வெகுமன்னவ - ருயிர்மாளவே
தருவிண்ணுல - கினையாளவே
அபிம

சரணங்கள்.

௧. சதிகாரன்பின்னும்-விடுமன்னரைத்துச்
சாதனனங்கே பார்த்துத் - தான்
தக்கஅபிமனைக்-கொன்றுல்மால்பார்த்தனுஞ்
சாவானென்றேகர்வம் போர்த்து
பிதற்றியேதனி யாகச்சென்று
பெரிதுங்கண்ணிற்றீ மூளநின்று
சிதைத்திடவிடுங் கணைகளைத்துகள்
செய்வதில்வஞ் - சகனேயவே
மெய்யினிலம் - புகள்பாயவே
அபிம

௨. வேகமாகச்சென்று-தைத்தசரங்களால்
வெய்யனங்கேகளை யான - போது
வீரனவனைப்பார்த்-துச்சபையிற்றன்ம
வேந்தனைமுன்பவ மான
மாகப்பேசியதாகக் கேட்டுமுன்றனை
யடல்வீமசேனன் செய்தபிறிதிக்கினை
லோகத்தில்நிற்கஉன் னுயிர்தந்தேன்கெட்ட
லோபிப்பய - லெனஏசினன்
கோபத்தண - லினைவீசினன்
அபிம

௩. ஏசியபிமனீ-யோடிப்போவென்றனன்
யான்வெல்லுவேனென்ற சொல்லும் - வில்லும்
இமைக்குளிழந்ததுச்-சாதனனைத்தேரில்
இதயத்தில்துயர் புல்லும்

தேசுறுசாரதிகெர்ண் டேகினன்கண்டு
தீயமன்னன்வாடி ஞன்கன்னன்வெகுண்டு
வீசும்புகழபி மனேயெதிர்த்தொரு
வெங்கணைதைத்துத் - தேரினில்
அங்கயர்வுற்றுப் - போரினில்
அபிம

௬. அவனையுஞ்சாரதி-கொண்டுவரப்பார்த்தன்
அரியாரதைதன் மைந்தன் - தன்
அண்ணன்கன்னனுக் காகஅபிமனே
டமர்செய்தபல வந்தன்
புவியிலுண்டான சுயோதனப்பாவி
போர்செய்துசேனே யுடன்துயர்மேவி
எவரும்பார்க்கவோடும் போதுவிற்குரு
ஏனேடுகி - றீரென்னவே
தானேசியே - மகிழ்துன்னவே
அபிம

---

## அபிமன்னுக்குத் துணையாக வீமன் சேனையிற்புகுந்து சேனைகளை அதஞ்செயல்.

விருத்தம் ௨௨.

பாடபிமனுலேமன்னவர்களங்கு
படும்போதுமாருதிதன்மனேவணங்கி
நாடரியவோர்முகமாக்கூடிச்சண்டை
நண்ணுகின்றாணக்களத்திற்பாலன்றன்னே
நீடாதமொன்றிலனுப்பியதும்பாவம்
நீவிடைதாவெனநிமிஷந்தனிலேபெற்றுப்
பீடுறுபோர்க்களம்புகுந்துகதையைக்கையிற்
பிடித்திட்டான்படைமடியஅடித்திட்டானே.

௰௬. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-சாப்புதாளம்.

பல்லவி.

மாருதியடித்தானே-கையிற்கதையாம்-மேருவைப்பிடித்தானே

அநுபல்லவி

மாருதியடித்தானே - தேரினில்நடித்தானே
வடவையொத்ததி வேகமொடுதிட
முடையசக்கா யூகமுடைபட
மாருதி

சரணங்கள்.

க. முடியரசர்கள் — சூழ
நெடியபகைவர் — தாழ
முரசினொலிக — ளோங்க
உரைசெய்புவனம் — வங்க
முண்டகனுல — கதிர
எண்டிசைகளும் — பெதிர
மும்மதத்தந்திக — ளாடத்
தென்முகச்சண்டனும் — ஓட
முனைமுகத்தினில்வந்த - வீமனெதிர்
சினமிகுந்த வனந்த - ராஜர்களும்
மொழிகலிங்கரும் அழல்தெலுங்கரு முடுகியடலமர் தாக்கினார்
முயல்புலிங்கரும் நயகுலிங்கரு முனிவினெடுவிழி நோக்கினார்
திறல்கொள்கொங்கணர் கறுவிவந்தெதிர் செறியவெகுகணை தேக்கினார்
சினவுசிங்களர் துணிவுகொண்டுயர் திகழ்செய்பலபடை போக்கினார்
மறுவிலாரியர் மகதர்சோனகர் மருவுபுயவலி காட்டினார்
மகுடசாவகர் குகுதர்சீனர்கள் வடிவுபெறுதனு கோட்டினார்
குறைவில்பொப்பளர் துளுவர்ஒட்டியர் குறுகிமுனையயி லோட்டினார்
கொடியபப்பார் களமர்பற்பல குடிலமுறுகணை பூட்டினார்-இப்படிச்சண்டை
கொடுக்கும்வீரர்முன்-முடுக்குமபிமன்பின்
அடுத்துவீறுடு — முந்தி - வந்தோர்வளைந்து
கொண்டுமிகவடி-யுண்டுமவர்முடி
பிண்டுவிழக்கணை — யுந்தி - நிற்கவீமனுங்
கொழுந்துவிடுமன-லெழுந்ததெனமன
மழுந்துசினமொடு — மீறி - சக்ரயூகத்தின்
கொட்டமழிபடு-மட்டுமுரமொடு
தொட்டகதைகொடு — நூறி - பின்னுமந்த
கோடியரசர்சாகச் - சேடனுலகும்வேகக்
குமுறுதளமிடர் — நண்ணிவிலங்கிட
பிரமையுறுமுடி — மன்னன்கலங்கிட

மாருதி

உ. சுத்தவீம — னாத்தை
யுத்தஞ்செய்யுந் — திறத்தை
துட்டன்கண்ணாக் — கண்டு
பொட்டெனவே — வெகுண்டு

சூழுமன்னரை யேசி
ஆழியனல்போல் வீசி
துடித்தபிமனே டிந்த
முடுக்கனுங்கூடி லெந்தச்
சூரர்முன் னடுப்பார் - மூவான்றி
யாவர்வந்துதடுப்பார் - ஆகையினலே
சொந்தச்சகுனியும் விந்துபூரியுந் துதிகொள்பூரிசி ராவும்
துங்கமுடியணி யிந்துராஜரும் தொகையில்லாமலே மேவும்
விந்தைரதகஜமென்றபடைகளு மேவஅடலொடு சென்று
விஞ்சுமமரரு மெஞ்சுதனுவொடு வீமனெதிரினில் நின்று
அந்தவபிமனே டிவனெருங்கி யடர்ந்திடாமல் வளைந்து
அஞ்சுநெடியவே லொடுமுசுண்டி யனந்தமாக எறிந்து
முந்தவமர்செயு மோர்புறத்தினில் முனைகொள்தம்பியர் நாட
முன்சொல்பரிமுக னேர்புறத்தினில் முடுகியம்புவி யாடச் - சண்டைசெய்
[தால்
மொய்த்தயிவாது-வெற்றியழிவது
மெத்தவெளிதெனக் கூறி - விடுக்கவந்தோர்
மூரசொலித்திட-வுரமிகுத்துடன்
வருதளத்தொடு வீறி - எதிர்த்துலக
முற்றும்பிரமையோ-டெய்த்துநிலைகெட
அஸ்த்திரமழையெனத் தூறி - வளரனந்த
மோகனக்கணை-வேகமுற்றிணை
யாகவிட்டெதிர் சீறி - வளைந்தவரை
மூர்க்கமுடனேகண்டு - தீர்க்கவைராங்கொண்டு
மூளுமக்கினி போற்கொதித்து
காலனுக்கிணை யாக்குதித்து

மாருதி

௯. சிரத்தில்முடி யிலங்கத்
தரித்தபணி துலங்கத்
தேகமலைபோல் மின்ன
வாகுவலையந் துன்ன
செவியிற்குண்டல மாட
புவியிற்கண்டவ ரோட

சினமாஆர்ப் பரித்து
வினையமாச் சிரித்து
சேனையை வளைத்துக் - கணையாற்றேகந்
தானையைத்துளைத்து - முனையம்பினுல்
சிலைகளொடுகர முறிந்துநிலமிசை திகைக்கவே சிலபேரை
திணிகொள்மணியுரம் பிளந்துவழிநிணந் தெறிக்கவே சிலபேரை
தலைகள்முடியுட னறுந்தங்குயிர்தத் தளிக்கவே சிலபேரை
தகைமைபெறுகுடல் சரிந்துசிந்தைகள் சலிக்கவே சிலபேரை
மலையைநிகர்புய மழிந்துநிலையற மறுகவே சிலபேரை
வயிறுகுலையொடு கிழிந்துதுயரொடு மடியவே சிலபேரை
உலவுதாள்க ளொடிந்துமரமென உருளவே சிலபேரை
ஒளிகொள்தேர்கள் நெரிந்துகவலையி னுலையவே சிலபேரை-வதைத்துப்
[பின்னும்

ஒடுங்கிவருதளம்-நடுங்கிமிகவுளம்
அடங்கிப்ப்ரமையொடு சாய - திசைகள்தொறும்
உற்றகுலகிரி-யொத்தபலகரி
தத்தியர்வொடு தேய - பலவகையா
ஓங்குமணிக்கலங்-தாங்குபரிக்குலம்
யேங்கிநொடிக்குள்ளே மாயப் - பேய்களங்கே
உறைந்துநிர்த்தமிடச்-செறிந்தசத்தமுட
னிறைந்துரத்தநதி பாய - ரணமுகத்தில்
ஒண்டியொழிந்தோரோட - அண்டர்பயந்தேவாட
உரியசேடனவன் சென்னிநெரிய
அரியபாவிதன் னுள்ளமெரிய
மாருதி

---

## துரியோதனன் சயித்திரதனைப்பார்த்து அபிமன்னுவோடு வீமன் சேராதபடி செய்யெனல்.

விருத்தம் உரு.

குன்றநிகர்புயவீமனுன்மெலிந்து
குலவேந்தர்படைகளொடுமோடமுன்னே
சென்றுபழித்திடுவேந்தனருகேவந்த
சிந்துபூபதிதனைப்பார்த்திந்தவேளை
வென்றிபெறும்வீமனபிமனைக்கலக்கா
விதமாகக்கதாயுதங்கொள்வீமன்முன்னி
நின்றுதடுக்காவிடிலிங்கொருவர்க்கில்லை
நிலையென்றான்வேறொருவரிலையென்றானே.

யஎ. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

வீமனைநீதான்-தடுத்தாற்றடுக்கவேணும்-வேறொருவருமில்லைக்காணும்.

அநுபல்லவி.

தீமைசெய்பகைஞர்கள் திடுக்கிடஅடல்கொண்ட
சிந்துமகாராஜனே இந்தவேளைபிரசண்ட
வீமனை

சரணங்கள்.

க. சரசகுணந்தாவஷ்ட்டிகச் சாகசரணவீரத்
தன்மைதளதந்த்ரமுற் சாகத்தொடுகெம்பீர
அரசுரிமைபேராண்மை யறிவனந்தசிங்காரம்
அனைத்துமமைந்தவனீ யாகையினாலகோர
வீமனை

உ. சிந்தைகலங்கவொரு சிறுவனபிமனிந்தச்
சேனைகளையடித்துச் சிதைக்கின்றான்முனைசிந்த
அந்தவபிமனென்னு மனல்பின்னுமூளமுந்த
ஆடிக்காற்றுஞ்சேர்ந்தாப்போ லடுத்துப்போர்செய்யவந்த
வீமனை

ங. இசைப்பார்த்தனில்லாவேளை யினில்நால்வரைமென்மேலே
எதிர்த்தொருபகல்வெல்வா யென்றுரைத்தொருக்காலே
அசையும்பாம்பைச்சந்த்ரனை யணிந்தசம்புமுன்னாலே
அளித்தவரமொன்றுனக் கமைந்திருக்கின்றதாலே
வீமனை

---

## சயித்திரதன் வீமன்முதலானவரோ டெதிர்த்துப் போர் செய்தலும், அபிமனோடு எதிர்த்துப் போர்செய்ய துரியோதனன் சேனைகளை யேவிப் போர்செய்வித்தலும்.

விருத்தம் உச.

இந்தவகைசொன்னசுயோதனனைப்போற்றி
யிகல்வீமனபிமனுடன்கலந்திடாமல்
அந்திபடுமட்டிலும்யான்றடுக்கின்றேனீ
யபிமனைக்கொல்கின்றவிதந்தேடென்றோதிச்
சிந்துபதிவீமனுடனெதிர்த்தான்கேட்டுத்
திறலரசரொடுதருமன்வீமன்முன்னே
வந்தடர்ந்தரன்சயித்திரதனம்பினாலே
வாட்டினான்ஜெயநிலையைநாட்டினானே.

உ. திபதை-இராகம்-அடாணு-ஆதிதாளம்.

## கண்ணிகள்.

க. ஜயங்கொளவந்தசயித்-திரதன்விட்டிடுங்கொடுஞ்
சரத்தாற்பாண்டவர்தளம் நொந்து - மிகப்
பயந்ததபஜெயங்கொள்-ளாதமன்னவர்களும்
பயந்தாரதைக்கண்டுளம் வெந்து

உ. தருமன்சேனைகளோடும்-அவனுடனேசண்டை
தனைச்செய்தான்அவன்கடு கடுத்துக் - கொல்லும்
அரவவாளியையேவி-ரத்தவெள்ளமோட
அடித்தானெவருந்துயர் அடுத்து

ங. மனம்வெருவினார்வீமன்-சயித்திரதன்சேனை
மடியமேவினன்அதை யறிந்து - பாவி
கனல்போற்கண்கள்மின்னத்-தன்மன்தன்னிரதமுங்
காலைமாருதிதேரும் முறிந்து

ச. போகவோட்டினன்கட்டோர்க்-கஜன்தம்பியருமோடிப்
போனார்துருபதன்மீ தைந்து - வாளி
வேகமாவிட்டவன்-மகன்மீதிலுமிரண்டு
வெய்யகணைவிட்டனன் முனிந்து

ரு. வந்தசாத்தகிமார்பில்-புதைந்திடவொருபத்து
வாளியெய்தமருங் கலங்கச் - சேனை
சிந்தியோடவாட்டும்-போதுதருமராஜன்
ஜெயபார்த்தன்தனைவிட்டு விலங்க

சு. நேரிட்டகாலமும்-பீமன்யூகத்துக்குள்
நெருங்கியகோலமும் எண்ணி - மிகப்
போரிட்டதைவிட்டுச்-சேனையோடும்போனான்
புகல்சக்ரயூகத்துள் நண்ணி

எ. அங்கமர்செய்திடும்-அபிமன்மேற்சுயோதனன்
அருஞ்சேனைகளைக்கூட்டிக் கொண்டு - போனான்
துங்கவபிமனச்-சேனைகளின்தேரை
துவசத்தைக்கவசத்தை வெகுண்டு

அ. பொடியாக்கிப்பாணத்தை-யாயுதங்களைவெட்டிப்
பொருபடைவீரர்கள் மாள - நெடுங்
கொடியவாளிகள்பெய்து-வதைத்தான்மத்திரர்தாவிக்
குதிகுதித்துக்கோப மூளக்

கூ. சொல்லவாளியபிமன்மே-லேவினாவரோட்டங்
கொள்ளஅம்புகளெய்தே யோட்டி - நின்றான்
பலவான்கன்னனபி-மனையெதிர்த்தான்ஜெய
பார்த்தன்மைந்தன்கணை பூட்டி

ய0. இரவிமைந்தன்தேரைச்-சாரதியைக்கொடி
யினைப்பரியினைநாசம் ஆக்கி - விட்டான்
துரியோதனன்தம்பிய - ரெதிர்த்தாரவர்களோடச்
சுடுகணைகளைமிகப் போக்கி

யக. சங்காருத்ரன்போலிருந்-தான்துரோணனஸ்வத்
தாமனும்வடவாக்னி போலே - சீறி
பொங்குதீவாளிகள்-சொரிந்தாரிவன்தொட்டுப்
பொழிகின்றவாளிக ளாலே

யஉ. அவ்விருவரும்ஓட்டம்-எடுத்தார்துன்முகன்வந்
தமர்செய்துநொடிக்குள்ளே மாய்ந்தான் - ஓதும்
அவ்வுலகமுநடு-நடுங்கத்தேரின்மிசை
யெழிற்சல்யன்அமர்செய்ய வந்தான்

யரு. அவனோடுவந்தோர்கள்-சிலபோகத்தேர்போக
அடித்துச்சல்லியன்மைந்தன் ஆவி - துள்ளி
யெவரும்புகழவிண்ணிற்-சேரச்சிரங்கொய்தான்
எழிற்சல்யன்துயரினை மேவி

யச. முதுகிட்டான்பலமன்னர்-மாண்டார்சிலரோடினார்
மூர்க்கச்சுயோதனன் பார்த்துப் - பின்னும்
பதினாயிரம்அரசர்-பிள்ளைகளோடுதன்
பரிவுளமைந்தனைச் சேர்த்து

யரு. அடல்வீரன்அபிமன்மேல்-விடுத்திட்டான்அவரெல்லாம்
அருமையாயேவிய பாணம் - முற்றும்
சுடிதினிற்றுகளாகி-யன்னோரையரம்பையர்
கனிந்துவிண்ணுலகிற்கல் யாணஞ்

யசா. செய்யஅனுப்பினான்-பலரோடினாரதைச்
செயஅபிமன்பார்த்துச் சிரித்து - இந்த
வையகமதிக்குந்தன்-சாரதிதனைப்பார்த்து
மன்னரோடியாவி தரித்து

யஎ. வாழஎற்பட்டன-ரென்றானதற்கவன்
மகிழ்ந்தென்மனத்திலுன்னிர் வாகந் - தன்னை
ஏழையோசியாமல்-முன்பேதோவுரைத்திட்டேன்
இங்குன்னாலேபத்ம யூகம்

யஅ. உடைந்ததுசயித்ரத-னுலிங்குவரத்தடை
யுற்றவுன்தந்தையர் பக்கம் - போய்
அடனுடனேசேர்ந்து-சிந்துபதியைமற்ற
அரசர்கள்தமைவீர சொர்க்கஞ்

யகூ. சேர்த்துன்பிதாக்களை-மகிழ்வித்தால்நலமென்று
செப்பித்தேர்திரும்பஉத் தாரம் - தந்தால்
ஏற்றதேர்விடுகிறே-னென்றனன்அபிமன்கேட்
டிசைந்தனனவன்சொற்பிர காரம்

---

## அபிமன்னுவும் இலக்கணகுமாரனும் யுத்தஞ்செய்து அபிமன்னு இலக்கணகுமாரனைக் கொல்லுதல்.

விருத்தம் உரு.

அந்தநற்சாரதிவிடுக்கும்பிபனீள்தே
ரரிபபிணமலையினுச்சிதன்னிலேறி
விந்தைகொளிரத்தவெள்ளந்தனிலேநீந்தி
வெஞ்சரக்காடொடுநிணச்சேறுங்கடந்து
வந்திடுபோதிகல்விடசேனனைமற்றோரை
மாய்த்தரசனையும்பிளந்தானன்னோன்மைந்தன்
சுந்தரலக்கணகுமரன்கொதித்தான்றும்பை
சூடினுரிருவரும்போராடினுரே.

யஅ. தரு-இராகம்-தோடி-சாப்புதாளம்.

பல்லவி.

அபிமனுக்கும்-இலக்கணகுமாரனுக்கும்-அடர்ந்துகொண்டதேசண்டை

அநுபல்லவி.

விபரீதமாங்கோபா வேசமிகவிரிய
வெம்போர்க்களமுழுதுஞ் செந்தணலாயெரிய
அபிமனுக்கு

சரணங்கள்.

க. செருக்களத்திருவரும் அடுத்தார் - பெருந்
தேரொடுதேர்பாய விடுத்தார் - அண்டஞ்
செவிடுபடவேகடு கடுத்தார் - வில்லைச்
சினமுடனேகையில் எடுத்தார் - பின்னும்

இருபுருவம்நெரிய யெதிர்நின்றுர்ப்பரித்தார்
இமையோருலகும்திர் திடுபடவேசிரித்தார்
எதிர்ந்துவீரபாஷை யனேகமுச்சரித்தார்
எழுந்தகோபாக்கினி யெங்குமூளவிரித்தார்
இறைமைபெறுகுல கிரிகளடியுட னெழும்பிவிசையுடன் ஆட
எதிரிமதமொடு குதிகொள்கரிகளு மிரைக்துமனமிக வாட
இலகுமதிகதிர் வெருவியுறுகதி யிரிந்துமறுகதி நாட
இறுதிமுடிவிது சரதமெனவுணி யெதிர்ந்தபலதிரள் ஓட
இரைத்தெழுகடல் கொதித்தனலெழ
யிளைத்தெமனுளம் நசித்தயர்வுற
இடிந்துபூதல மிகதத்தளிக்கவே
நடுங்கிடச்சேடனு முடலைநெளிக்கவே
அபிமனுக்கு

உ. வந்தோனையிவன்கண்டு சீறியே - உன்னை
வதைப்பேன்கணத்திலென்று கூறியே - முந்த
வாகுபூரித்தவன் மீறியே - சில
வார்த்தையுரைத்திவனைத் தூறியே - மிக
சிந்தித்திருவரும்வெஞ் சிலைவளைத்துமுன்னாலே
திகழ்சௌமித்திரியுமிந்த்ர சித்துநேர்ந்ததுபோலே
சேர்ந்துதிரிலோகமுந் திடுக்கிடவொருக்காலே
தீப்பொறிகள்விழியிற் சிதறஇப்புவிமேலே
திறல்மிகுத்துள துரகதத்துடல் சிதைக்கவேசில பாணம்
திகழ்மணிக்குடை விழவறுத்தடல் செழிக்கவேசில பாணம்
திரள்புயத்திடை மழையெனக்கனல் தெறிக்கவேசில பாணம்
செறிவுபெற்றுள விருவர்நெற்றிகள் திறக்கவேசில பாணம்
தேவரந்தர மேவுமெண்டிசை
யாவுமண்டழல் தூவிவென்றிகல்
சேரவேசில பாணமடிக்கடி
கோரமுடன்விடுத் தார்களிப்படி
அபிமனுக்கு

௩. தாவுந்தனுவேதவிஸ்த் தாரன் - துரோணு
சாரியையுமடித்த தீரன் - மாயன்
தனக்குமருகனுங்கெம் பீரன் - வீர
தனஞ்செயனுக்கொருகு மாரன் - சிறிப்

பாவிமகன்தேரோட்டும் பாகன்றனைமடித்துப்
பாய்ந்துநடஞ்செயும்வெம் பரிகள்துடிதுடித்துப்
பதைத்திருதுண்டாகப் படியில்விழமுடித்துப்
பருத்தமணித்தேரும் பலமாகவேயொடித்துப்
பகரவன்கர மொடுசிறந்துயிர் பருகுதனுவற நீக்கி
பணிநிறைந்துள மணியுரந்துளை படவும்அடல்கணை தேக்கிப்
பலமுறுந்தொடை யறவெறிந்திடு பகழிவிசையொடு போக்கிப்
படிகலங்கிட விழியினின்றனல் பரவமுனிவுட னோக்கிப்
பழிப்பற்றிடும் இடிக்கொத்திக
லுரைத்துக்கணை தெறித்துச்சமர்
பண்ணுமவன்களை நண்ணியழிந்திட
வண்ணமணிமுடி மண்ணிலொழிந்திட
அபிமனுக்கு

---

## இலக்கணகுமாரன் இறந்தசங்கதி துரியோதனன்கேட்டு அநந்த வரசர்களை அபிமனைக் கொல்லும்படி யனுப்ப அபிமன்னு அவர்களையெல்லாஞ் சின்னபின்னப் படுத்தல்.

விருத்தம் உசூ.

சுதனிறந்தானெனக்கேட்டுமன்னன்கண்ணீர்
சொரிந்துகுருமுதலோரைப்பார்த்தென்சேயிவ்
விதமாளக்கொன்றவனைக்கொல்லாவிட்டால்
வேண்டிலேனுயிரினிமேலெனவன்னோனை
அதஞ்செய்கிறேன்கணத்திற்செய்திடாவிட்
டாலினிமேல்வில்லெடுப்பதிலையென்றோதித்
துதியரசர்சூழவந்தாரபிமன்கண்டு
துடித்திட்டான்வெகுதளத்தைமடித்திட்டானே.

ய௬௯. தரு-இராகம்-பந்துவராளி-சாப்புதாளம்.

பல்லவி.

மாட்டினனேயபிமன்-தன்வீரத்தைக்-காட்டினனேயவர்முன்

அநுபல்லவி.

மாட்டினனேயபிமன் வாட்டமேவும்அரசன்
மகனிறந்ததையெண்ணி மிகவும்வெஞ்சினம்நண்ணி
வாரிதியோசையுங்கன்ற பேரிடியோசையுங்குன்ற
வாரணம்எட்டும்இடையத் தாரணிகட்டும்உடைய

வஞ்சனுயிர்மாளஇன்று வெஞ்சமரில்முளுமென்று
மறைமுனியொடுநெடுந் திறலரசர்களொடும்
வழுத்த வலக்கைதந்த
செழித்த திடத்தனந்த
மன்னவர் தளமடியப்
பொன்னுலக முமிடிய
மாட்டினனே

சரணங்கள்

க. தந்திகள்மிசையூர்ந்தோர் சந்துகமிசைவாய்ந்தோர்
சார்ந்தவதிரதர்கள் வேந்தர்தருசுதர்கள்
தனுவேதப்பிராணுசரியன் எனுமோர்துரோணுசரியன்
தாக்குபரிமுகன்பெருந் தேர்க்குள்வருமனைவரும்
தருக்கிவில்லைப்பிடித்து நெருக்கிப்பல்லைக்கடித்துச்
சதைப்போமென்றுகூறி கொதிப்பாய்நின்றுசீறிச்
சருவியம்முனை நாடி - வேகமாக
ஒருவனெவ்வொருகோடி - பாணந்தொடுக்கச்
க்ஷாத்திரமொடிவன்கண்டு நேத்திரமாகும்இரண்டு
தலத்திலுங்கன லுதிர - கொர்ச்சனையிட்டுச்
சொலற்கருஞ்சின முதிர - வீரப்பிரசண்ட
தனுவளைத்தவரேவும் அனலுடைக்கணையாவுந்
தவிடாகவே யுதிர்ந்து - போகக்கணை
நவமாகவே சொரிந்து - பின்னுமந்தத்
தானைமிகவழிய சேனைக்கணைபொழியத்
தனைக்கண்ட பலபேரும் - வாடிக்கொடிய
அனர்த்தங்கள்மிகநேரும் - முடிவுகாலந்
தான்கொண்டோம்நாமின்று என்வந்தோம்ஆவென்று
தவித்தங்கே நடுங்கினரே - மற்றோர்கையைக்
குவித்தங்கமொடுங்கினரே - இதனைக்கண்ட
சலத்தினுயர்பலத்தில் நிலைத்தமனுகுலத்தின்
சக்கிரேசனொருவன் வந்து - கடுகடுத்துத்
திக்காடமனது வெந்து - எதிர்க்கஅவன்
தலையறுந்தொருக்காலே நிலைகலங்கிமண்மேலே
தனியாயுருளச் செய்து - வடித்தெடுத்த
முனைசேர்கணைகள்பெய்து - கதிக்கும்போது

சண்டமாருதமென்ன அண்டுகேகயமன்னன்
சாரதிசிரத்தைப்படுத்துச் - சிலபாணங்கள்
தேரையுமழிக்க விடுத்து - அவனுயிரைச்
சாத்துக்கிரைகொடுத்து வருத்தப்படவிடுத்துத்
தத்தித்தாவும்போதுகிளைத்து - கிருபருஞ்சீர்
வெற்றிவில்லைமிக வளைத்து - வரஅவன்கைச்
சாபமும்பறக்கக்கடுங் கோபமும்பிறக்கப்பெருஞ்
சமர்த்துமிறக்கத்தொடுத்துக் - கணையுலகம்
பிரமிக்கும்படிக்குவிடுத்துப் - பின்னுமிருந்த
தனயோகமித்திருங் கனராஜபுத்திருந்
தருந்தமகத தேசரும் - வில்லாண்மையில்
மிகுந்தசாகச ராசரும் - தளங்களுடன்
சமுத்திரமெனப்பொங்கி அமர்க்களமதிற்றங்கித்
தணலெனவே காய்ந்து - வீரம்படித்து
அணிஅணியாய்ப்பாய்ந்து - வந்தாரவர்கள்
தாளறுந்து நெறியத்
தோளறுந்து சரியத்
தலைகள் மண்ணில்விரிய
உலகும் விண்ணும்எரிய
மாட்டினனே

உ. சிரமழியச்சிலரைக் கரமழியச்சிலரைச்
சிலையழியச்சிலரைக் குலையழியச்சிலரைத்
தேரழியச்சிலரைப் போரழியச்சிலரைச்
செல்லத்துடிக்கச்சிலரைப் புல்லைக்கடிக்கச்சிலரைச்
செடியில்மறையச்சிலரை படியிலிறையச்சிலரைத்
தெறிபட்டோடச்சிலரை வெறியுற்றுடச்சிலரைச்
செய்தங்கந்தனைக்குறைத்துப் - பாணமயமா
எய்தண்டந்தனை மறைத்து - வீறும்போது
தீமையுறுசகுனி மாமனட்டமச்சனி
செறிந்துபிடிக்க வந்தான் - இவன்கணையால்
முறிந்துதுடிக்கநொந்தான் - நொந்ததல்லாமல்
சிறுவரேழுபேரை அரியபாணதாரை
சிதைக்கத்தாரை வார்த்து - ஓட்டமெடுத்தான்
பதைத்துநாணம் போர்த்துப் - பின்புமுடுக்காச்

சிறுதுச்சாதனன்வந்து மீறுசைச்சாபம் ஒடிந்து
தேருமழிந்து தம்பி - மார்களுடன்
சோர்வுமிகுந்து வெம்பி - ஓடவோடுந்
திராரையும்வல்லாண சூராரையும்நல்லகுண
சேவகர்தமையுந் தண்டு - முழுதுமோடுந்
தீவரமதையுங் கண்டு - சுயோதனனென்ன
செய்வமென்றுநாவரண்டு மெய்யொடுங்கியேவெருண்டு
சீர்த்திவண்ண வாரணம் - எனுங்கன்னனைப்
பார்த்திதென்ன காரணம் - காலனேயிந்தச்
சிறுபையலாகவந்து குறைசெய்யவேயமைந்து
சிந்தத்தான்நமதுதளத்தை - பார்த்தாற்றெரியும்
சதிப்பேயுலவு களத்தை - ஆகையினாலே
சிங்கமெனநீசென்று பொங்கிவனையேகொன்று
தீர்த்துச்சீரையேற்று காணும் - என்வயிற்றிற்பால்
வார்த்துமானங்காக்கவேணும் - எனச்சொல்லவே
தேடியிவன்குதித்து நாடஅவன்கொதித்துத்
தேரொடுசிலையும் ஒடித்துத் - துரத்தப்பின்னும்
வேறொருசிலையையெடுத்துத் - தேரிலேறிச்
செந்தழலம்பெய்தான்சிறு மைந்தனும்அம்பெய்தேயுறு
திசைகெட்டோடவேபோக்கினான் - நெடுநாளூற்ற
இசைகெட்டாடவே தாக்கினான் - கன்னன்அஞ்சிச்
சீரையணுவும்நண்ணாமல் தூரயோசனைபண்ணாமல்
திறல்சிந்தியோடுவோனென - ஒடியபிமன்
பிறகண்டியிடி லாக்கன - கணைசொரிந்து
சிலையைமுறித்துத்தேசங் தலைமையுரைக்கமோசஞ்
செய்யவரசர்மதத்தைக் - காட்டியழித்தார்
துய்யதுரக ரதத்தை - ரதமொடிந்தும்
செழித்த நேமிமாலே
வழுத்தப் பூமிமேலே
திடத்த ஆளிபோலே
பிடித்த வாளினாலே
மாட்டினனே

ரு. வாளும்பரிசைதாங்கி நீளும்புவியிலோங்கி
வஞ்சரைக்கருதிச்சினம் மிஞ்சிடப்பரவிமுனம்

வரைக்குலமுட்கிநந்தத் திறத்தொடுவெட்டுமந்த
மகவிந்த்ரன்றனைப்போலே நிகரின்றியொருக்காலே
மதயானைகளையெட்டிச் சிதைவாகவிழவெட்டி
மடித்துத்தள்ளுவதையும் நடித்துத்துள்ளுவதையும்
மனிதர்களழி வதையும் - தொழுதனேகர்
வினையொடுமொழிவதையும் - பரிகளொடு
வயவேந்தர்கள்நிணத்தை உயிர்மாண்டிடுபிணத்தை
மண்மீதுநிறைப் பதையும் - பலரழுது
கண்ணீர்களிறைப் பதையும் - பார்த்துமுன்னே
மதிகெட்டுப்பதிகெட்டுக் கதிகெட்டுத்துதிகெட்டு
மானமுங்கெட் டழிந்து - தனுவேதநி
தானமும்விட்டொழிந்து - ஓடிப்போன
மன்னர்மதமோடெதிர்த்துச் சின்னத்ரணமாமதித்து
மறித்தார்கள் மிகக்காய்ந்து - மறித்தவர்கண்
தெறித்தோடவெதிர்பாய்ந்து - வாகுவலயம்
மன்னியெழுந்தோள்சரியச் சென்னியிரண்டாவிரிய
மடித்தான்சிலதுபேரைத் - துண்டுதுண்டாக
ஒடித்தான்சிலதுதேரை - குடங்குடமா
வாயினுதிரங்கக்க நாயைநேர்மொறுகிமுக்க
வதைத்தான்சிலதுபேரை - உருவில்லாமற்
சிதைத்தான்சிலதுபேரைத் - தனுப்பிடித்த
மணிக்கைசிந்தியழிய பணைத்ததொந்திகிழிய
மாட்டினான்சிலபேரை - குத்துயிரிற்கூத்
தாட்டினான்சிலபேரை - இப்படிவாளால்
மடிக்கச்சிலர்வேசாரித் துடிக்கக்குருவும்வாரி
மனம்பொறுமலரிய - கணையிவன்மேல்
அனந்தமாகச்சொரிய - வீரன்அந்த
வாளிகளையொடித்துத் தூளிபடஅடித்து
வாய்ந்தவக்குரு மதத்தை - அழித்தழித்தான்
ஆய்ந்தநற்பெருாதத்தைப் - பின்னுமந்த
மறையோன்வேறுதேரி லறைகள்கூறியேறி
வந்தானில்லாமல் மானம் - அப்போதும்இவன்
தந்தான்பொல்லாதவூனம் - இப்படிதோற்று
வாடியனந்தவிசை யோடிமிருந்தவசை
மருவுங்குருவையேசி - நகைக்கக்குரு
எரியுங்கணைகள் வீசி - வாளையொடித்தான்

மறைந்துதுர்ச்சனபந்தன் எரிந்தவக்கதிர்மைந்தன்
வரிசையாக்கணைகள்தொட்டான் - ரணவீரன்கைப்
பரிசையையறுத்து விட்டான் - பின்புபடையா
வண்டி யுருளைவாங்கிக்
கொண்டு முழுதுமேங்கித்
தண்டு முறியத்தாங்கிச்
சண்டனென முன்னோங்கி
மாட்டினனே

ச. கனநேமிமுகுந்தனை வனதாமசுகந்தனைக்
கமலநேத்ரசீலனை விமலகாத்ரகோலனைக்
கசராஜபாந்தவனை நிசவேதமீந்தவனைக்
கபடநாடகசூத்ரனை பிரபலயாதவகோத்ரனைக்
கௌஸ்த்துவாபரணனைச் சமஸ்த்தசீலகுணனைக்
கருமுகில்வண்ணனைப் பெருகியகண்ணனைக்
கருதிநெஞ்சத்திற் றுதித்து - அவனோதிய
அரியமந்த்ரத்தைசெபித்து - எடுத்ததேர்ச்சக்
காத்தைச்சக்ராயுதநேர் தரித்திளக்காமதஞ்சேர்
கசடர்கள்தன் மேலே - பொழிகணைகள்
விசையொடுமண்மேலே - விழவறுத்துக்
கதிர்வேல்கொண்டோரநேகர் துதிவாள்கொண்டோரநேகர்
கதைகொண்டவரநேகர் - சூலாயுதங்கொள்
அதிகண்டக ரனேகர் - எரியுமுனைக்
கைப்படைகொண்டோரநேகர் நற்படைகொண்டோரநேகர்
கனநற்றேரோடநேகர் - ஊன்றுகோலாகத்
தனுபெற்றவ ரநேகர் - மதம்பொழியுங்
கரிகொண்டவரநேகர் பரிகொண்டவரநேகர்
கண்டங்கண்டமாத் தறிய - கணக்கில்லாத
துண்டந்துண்டமாமுறிய - அறுத்துத்தள்ளிக்
கலந்துநாலுதிசையும் அலர்ந்தபூமிமிசையுங்
கதறித்திரைகள்தோயப் - பொங்கியரத்தஞ்
சிதறிக்கடலிற் பாயச் - செய்தப்ரளய
காலன்றன்னைக்கண்டு சீலமன்னர்விண்டு
காலோட்டமெடுத்தாரே - சுயோதனன்சிரை
வாலாட்டிக்கெடுத்தாரே - கெடுத்துவந்த

காரியமிலாதவின்னர் தேரியையவாவித்துரோணர்
கன்னன்அஸ்வத் தாமன் - என்னவொளி
துன்னியபுகழ்ச்சோமன் - உடன்கூடியே
கலந்துநாமுன்போலே விலங்கினுல்மண்மேலே
கற்பகாலஞ் சாரும் - வசைநமக்குத்
தப்பில்லாமல்நேரும் - ஆகையினுலே
களையகன்றேயொப்பாய்ச் சமர்புரிந்தாலப்பால்
கதிப்படிநடக்குதென்று - பேசிக்கொண்டு
விதிப்படிகடக்க நின்று - அத்தனைபேருங்
கருமுகில்மழைபோலே சரமதைவிடலாலே
காலநேமியை விடுத்தான் - சரங்களலங்
கோலமாகவேயொடித்தான் - இவர்கள்பின்னுங்
கடுத்துமிருதிடத்தைப் படைத்தவடிசாத்தைக்
கணக்கில்லாமற்கொழித்தார் - அந்தச்சக்ரத்தைக்
கணத்துக்குள்ளேயழித்தார் - பின்புகதையால்
கண்டகாள மும்பிடிக்க
முந்துகாளி யும்நடிக்க
கண்டராஜ ருந்துடிக்க
அண்டகோள மும்வெடிக்க
மாட்டினுனே

ரு. வீரத்தனுவொடிந்தும் பாரக்குடைமுறிந்தும்
வேகப்பரியொழிந்தும் பாகனுயிரழிந்தும்
வெம்போர்க்கடகம்விண்டுஞ் செஞ்சீர்ச்சகடப்பிண்டும்
மிகவுங்களத்திலொன்றும் பகைவர்தளத்தில்நின்றும்
வேறுதுணேயும்அற்றும் மாறுபடவேமற்றும்
வீசுங்கண்டகரண்டும் மோசங்கண்டுவெகுண்டும்
வீரங்கொள்சூரராஜன் - மனங்களிக்கும்
போனமக ராஜன் - கதையைக்கையில்
வேகமுடனேதூக்கிப் பாதகர்தமைத்தாக்கி
விழிக்கஅண்டகடாகம் - பலசிறப்பாற்
செழிக்கஇந்திரலோகம் - இப்பிரபஞ்சம்
விரியுஞ்சக்கிரவாளம் அரியசீர்பாதாளம்
மிகவும்நடுங்கி வாடிக் - கலங்குமாகிற்
பகையினுயர்ந்துநாடிச் - சமர்புரிந்த

வேந்தர்கெட்டகேட்டையும் மாந்தர்பட்டபாட்டையும்
விதியுடனெவ ராலே - சொல்லக்கூடும்
சதிர்பெறுபுவிமேலே - இப்படிக்கொத்த
விக்ரமஜெயதீரன் பொற்புளாணசூரன்
மேருபுயத்தையசைத்து - அஸ்வத்தாமன்
பாரதத்தையொடித்துப் - பின்னுங்கதையால்
வெய்யர்துடிக்கமோதி கையஅடிக்கும்போதில்
வெருண்டநேகரோடினார் - தேவருமனம்
மருண்டுசோகம்நாடினார் - தனக்குநிகர்
வேறொருவருமின்றி வீறபிமனுமொன்றி
விசயச்சங்க நாதஞ் - செய்துவானும்
அசையச்சிங்கநாதம் - புரியக்கண்டு
வேந்தருடன்துர்ச்சனி காய்ந்தகதிரைப்பனி
மேவும்வகையென அடுத்தான் - தேர்மேல்நின்றப்
பாவியொருகணைதொடுத்தான் - அபிமன்சீறி
மேகமேழாய்த்துலங்க லோகங்கூழாய்க்கலங்க
வெகுண்டுகணையைஒடித்தான் - ரதமுறியத்
தகுந்தகதையால் அடித்தான் - துச்சனியும்ஓர்
மினுங்கதைஏந்தினான் சினந்தனில்நீந்தினான்
மெச்சும்அபிமன்சண்டை - செய்யவந்த
துர்ச்சனிதலை மண்டை - பிளக்கமோத
விசைகொண்டவனுமோத இசைதங்கபிமன்குரோத
விதியுடன்அடித்தவனைக் - கொதிக்கும்போது
பதிதர்கள்கடுத் திவனைக் - கொலநினைந்து
வெடுக்கென்றோர்கோடிகதை அடுத்தங்கேபோடவதை
விலக்கித்தன்கதையாலே - துர்ச்சனியைக்
கலக்கித்திண்புவிமேலே வதைசெய்தவன்
மின்னிய ஆவியொட்டும்
பொன்னுல கேகவிட்டும்
அன்னவ ஞேடுகிட்டுந்
தன்னுயிர் போகுமட்டும்
மாட்டினனே

———:( * ):———

## அபிமன்னு அநேகவீரர்களை மடித்துத் தான் சுவர்க்கஞ் செல்லுதல்.

சந்தவிருத்தம் உஎ.

சக்கரயூகம்அதப்படராடு-தளத்ததி ரதவிஜயத்
தாமர்கள்கோடி மகாரதர்கோடி-பதாதியர் கோடிமணி
விற்கையர்கோடி யயிற்கையர்கோடி-விதக்ஷண மருவுரண
வீரர்கள்கோடி குமாரர்கள்கோடி-விதேகர்கள் கோடிவரு
கைக்கரிகோடி வயப்பரிகோடி-கணக்கற எழில்மிகுவிற்
காரணனோடு மகாபலராஜர்கள்-காலற வோடநிலை
அக்கணமேவிய தூர்ச்சனியாவி-அதப்பட வடாபிமன்
ஆதரவாமொளி நீடியமேலுல-காளவு மேகினனே.

---

## அபிமன்னு இறந்ததைக்குறித்து இருபடையிலுள்ளோரும் அவனைக்கண்டு துக்கித்தல்.

விருத்தம் உஅ.

கனிவுடனேயீயெறும்புமுலகில்வாழ்ச
கலவுயிருமிரங்கியழக்களத்தின்மாண்டு
தினகரன்போற்பணிகளொளிவீசவீழ்ந்த
ஜெயவீரதீரசிங்கவபிமனைப்பார்த்
தினமுறுபாவிகளுல்வரன்றிமற்ற
விருதிறத்திலுள்ளபடையொடுவில்வேந்தர்
அனைவர்கண்ணீராலுமவன்மேலாம்ரத்த
மலம்பினர்விதம்விதமாய்ப்புலம்பினரே.

ரு. திபதை-இராகம்-ஆநந்தபைரவி-ஆதிதாளம்.

**கண்ணிகள்.**

க. கசகேசரிவிஜய-புஜபலவபிமன்னைக்
களத்திற்கண்டழுதார்கள் சிலபேர்கள் - முக
வசிகரந்தன்னைப்பார்த்தால்-பசிதீருமேயென்ன
வன்னெஞ்செமனுக்கென்றார் சிலபேர்கள்

உ. கட்டழகெங்கேயுன்றன்-காட்சியெங்கேயென்றுள்ளங்
கரைந்துவிரைந்துநைந்தார் சிலபேர்கள் - திசை
எட்டினுஞ்செயஸ்தம்பம்-இட்டுநின்றநீயிப்போ
தெங்கேமறைந்தாயென்றார் சிலபேர்கள்

ங. அடலையமைத்தபாவி-ஆயுவையும்பூரணமா
அமைக்காமற்போனானென்றார் சிலபேர்கள் - யாருந்
தடமாறஇன்றிவன்செய்-சண்டையால்திருஷ்ட்டிதோஷம்
தாங்கிமாண்டானென்றார் சிலபேர்கள்

ச. இந்திரன்பாட்டன்சீர்-முருந்தனன்மாமனாக
இருந்தும்பலனென்னென்றார் சிலபேர்கள் - மேலும்
தந்தையரைவர்துணை-வந்தோர்பலரிருந்துந்
தாங்கினதென்னென்றார் சிலபேர்கள்

ரு. ஆரிருந்தாலுமென்ன-பாரிற்கொடும்விதியை
அகற்றக்கூடுமோவென்றார் சிலபேர்கள் - வேறே
தேரொன்றிருக்குமானால்-விதியேதப்போதல்லவோ
தெரியுஞ்சேவகமென்றார் சிலபேர்கள்

சு. உள்ளங்கால்வெள்ளெலும்பு-தேயஎத்தனைவிசை
ஓடினான்கன்னனென்றார் சிலபேர்கள் - அந்தக்
கள்ளன்றானேபின்வந்து-மெள்ளப்பதுங்கிவில்லைக்
கண்டித்தானையோவென்றார் சிலபேர்கள்

எ. இவன்வீரம்அறிந்துதான்-தவபீஷ்மரன்றேயர்த்த
இரதனாயமைத்தாரென்றார் சிலபேர்கள் - இன்றிங்
கவரவர்சேவகங்கள்-அனைத்தும்நன்றாய்வெளிச்சம்
ஆச்சுதிவனாலென்றார் சிலபேர்கள்

அ. கதித்திடுந்தனுவேதங்-கற்றதுரோணரேதுரோகங்
கருதிச்செய்தாரென்றார் சிலபேர்கள் - இன்று
மதித்திடுந்தர்மநீதி-மனுநூலெவையுங்கேட்டு
மண்ணாய்ப்போச்சுதென்றார்கள் சிலபேர்கள்

கூ. எத்தனைக்கோடிவீரர்-ஒற்றைச்சேவகன்பேரில்
எதிர்ப்பதென்றிசைத்தார்கள் சிலபேர்கள் - ஒன்றாய்
அத்தனைபேருங்கூடி-தானேயழித்தாற்றேரை
அதுவீரந்தானோவென்றார் சிலபேர்கள்

ய. ஒருவில்லேந்தியநேக-கோடியதிரதர்கள்
உயிரைவாட்டினானென்றார் சிலபேர்கள் - கையில்
இருவில்லிருக்குமானால்-ஈரேழுலகுமின்றைக்
கென்படுமோவென்றார் சிலபேர்கள்

யக. அருமையுடன்போர்செய்த-அபிமன்மீதிற்றேவர்
அலர்பொழிந்தார்த்தாரென்றார் சிலபேர்கள் - தனுக்
குருவுடனஸ்வத்தாமன்-கன்னன்பட்டதைநம்மாற்
கூறவசமோவென்றார் சிலபேர்கள்

ωஉ. சுத்தவீரர்க்கேயிவ்-வனர்த்தம்வந்தால்மற்றோரைச்
சொல்லியென்பயனென்றார் சிலபேர்கள் - இந்த
முத்தலமுந்துதிக்குஞ்-சித்ரவேலாயுத
முருகனேயிவனென்றார் சிலபேர்கள்

ωங. அந்தரத்தும்பரும்-அரம்பையருங்கண்பிசைந்
தழுவார்களென்றுசொன்னார் சிலபேர்கள் - இந்த
மைந்தனைப்போலின்னொரு-வனையுலகிற்சிருஷ்ட்டிக்க
மாட்டானேபிர்ம்மாவென்றார் சிலபேர்கள்

ωச. விஜயனொருவனேவில்-லாளியென்றால்லவே
வில்லாளியிவனென்றார் சிலபேர்கள் - உக்கிர
கஜவீமன்கதைக்கென்றார்-கதையாச்சுதவன்சண்டை
கதைக்கிவனேயென்றார்கள் சிலபேர்கள்

ωரு. திருட்டுச்சண்டைகள்செய்து - பசிக்குப்பனம்பழத்தைத்
தின்றார்களிவரென்றார் சிலபேர்கள் - இவர்
புரட்டையர்ச்சுனன்கேட்டால்-இன்றேயுலகமூழ்கிப்
போகுமென்றுசொன்னார்கள் சிலபேர்கள்

ωசா. வாசவனைமற்றோரைப்-பேசப்போமோவிந்தநிர்
வாகனுக்கொப்பாயென்றார் சிலபேர்கள் - முக்கண்
ஈசனைச்சொன்னாற்சொல்ல-வேணுமல்லாலிணைவே
றில்லையென்றுசொன்னார்கள் சிலபேர்கள்

---

## அபிமன்னு இறந்ததைக்குறித்து தருமராஜன் துக்கப்படல்.

### விருத்தம் உகூ.

படைமுழுதுமிவ்வாறுசொல்லிநொந்து
பாதவிக்கநாராசந்தன்னைக்காச்சிச்
சடுதியினில்கடுச்செவியில்விட்டாற்போலே
தருமனிந்தச்சேதிதனைகேட்டுத்தேகந்
துடிதுடிக்கமனம்பதைக்கவசந்துகைகால்
சோரவிருகண்களில்நீர்சொரிந்துவாடி
அடமகனேயபிமன்னேமோசஞ்செய்தை
யாவென்றனழுதையையோவென்றனே.

உ௯. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

ஐயோமகனேயபிமன்னே - என்ன
மாயினியுய் - வேனே

அநுபல்லவி.

ணையுமிந்தப்பாழுமண் ணுசையினுலேகெட்டேன்
நானேயுன்னுயிர்க்கெம னுகவந்துநேரிட்டேன்
ஐயோ

சரணங்கள்.

க. தக்கதுரோணர்க்குத்தலை-பத்தோநானிருக்கவுன்
றனைப்பிடிக்கவென்றுளம் பரிந்து - மிகத்
தயிரியமதைச்சொல்லி-ஒண்டியாயொருதேரிற்
சார்ந்துவடவாக்னிபோல் எரிந்து
முக்கியமாம்பத்மயூக முறிந்திடஎதிர்சென்று
மூலைக்குமூலைமன்னர் முடியுருளவேகொன்று
திக்கெட்டும்புகழ்ந்திடச் செயஸ்தம்பம்நாட்டிநின்று
செற்றுயென்வயிற்றிற்செந் தீயைமூட்டிவிட்டின்று
ஐயோ

உ. இலகுங்கிருஷ்ணமூர்த்தியும்-இசைவீமனும்பார்த்தனும்
இளையோரிருவர்களும் இன்னும் - முடி
இராஜர்பலரும்பாதி-நீபாதிபலமென்றென்
இதயந்தனின்மதித்துப் பின்னும்
உலகிற்பிள்ளைகட்குள்நீ யொருத்தனேயாண்பிள்ளை
உன்னுல்நிர்மூலமாக ஒழித்துப்பகைவர்துள்ளை
பலனடையலாமென்று பார்த்தேன்வளர்த்தகிள்ளைப்
பறந்தோடினதைப்போலே பறந்தாயீதென்னகொள்ளை
ஐயோ

ங. தொடருமிந்தக்குலத்திற்-சுதந்தரமுங்கல்வியுந்
துலங்கநீயொருபிள்ளை பிறந்தாய் - அந்தத்
துரோகிசிந்துபதிசெய்-சூதினுலேவேறு
துணையில்லாமலமரில் இறந்தாய்
அடல்சிங்கம்போல்நீபிறந் தாயென்றுலென்னகோரம்
அரிகரியழிந்ததின் றடியோடெங்கள்கம்பீரம்
கடையாம்பகைவர்முன்னே கையறப்போச்சுவீரம்
கட்டிநானினியாண்டு கெட்டேனேராச்சியபாரம்
ஐயோ

## துரியோதனன் ஜயித்திரதனைப் புகழ்தல்.

விருத்தம் ௩௰.

தருமனிவ்வகையழுதுதேர்மேற்சாய்ந்தான்
    தம்பிமாரொடுவீமன்றதும்பிமண்மேல்
ஓருமலைபோல்விழ்ந்தானிக்கோலங்கண்டங்
    குளம்பதைத்துத்தினகரன்மேற்கடலிலாழ்ந்தான்
நிருபர்பலர்வந்திவருக்குபசரித்து
    நீதிபலவிதமோதிப்பாடிசேர்த்தார்
துரியோதனன்சயித்ரதனைப்பார்த்தன்பாய்த்
    துதித்திட்டானவன்பலத்தைமதித்திட்டானே.

௨௧. தரு-இராகம்-மோகனம்-சாப்புதாளம்.

பல்லவி.

உன்னாலன்றிவேறில்லைமற்-றொருவரால்தீராதித்தொல்லை

அநுபல்லவி.

மன்னும்சிந்துமகிபா மனதில்யான்கொண்டபயம்
மாறியென்குடியின்றீ டேறப்பெற்றஜெயம்
உன்னா

சரணங்கள்.

௧. விறல்வீமனபிமனை மேவாமற்போனதும்
அறன்மகன்சேனையங்கே யலைந்தழிவானதும்
உன்னா

௨. மடிந்தசேனைபோக மற்றோர்கள்தழைத்ததும்
நடுங்கியிருந்தநாங்கள் இடங்கண்டுபிழைத்ததும்
உன்னா

௩. அடிதேய்க்தோடுங்குரு அருஞ்சிந்துபாடுவதும்
பொடியாமென்றிருந்தவென் கொடியின்றைக்காடுவதும்
உன்னா

௪. சிலனுமென்பிள்ளை செத்ததைமறந்ததும்
காலன்அபிமனலங் கோலமாயிறந்ததும்
உன்னா

௫. வயிற்றிலெனக்கிருந்த வாளெரிதணிந்ததும்
ஜெயித்தோம்பகையையென்றென் சிந்தையிற்றுணிந்ததும்
உன்னா

## வியாசர்வந்து தருமராஜனைத் தேற்றுதல்.

விருத்தம் ௩௧.

விடவரவக்கொடியனிவ்வாறேதிச்சிந்து
 வேந்துகுருகிருபாஸ்வத்தாமன்கன்னன்
படைவீரர்பலர்மகிழச்செயங்கொண்டாடிப்
 பாசறையிற்போய்ச்சேர்ந்தானிங்கேமண்ணிற்
கடகடெனப்புரண்டழுதுவாடுந்தன்மன்
 கண்ணெதிரேவியாசமுனிவந்திறந்த
அடலபிமனுக்காயிக்கிலேசமேனோ
 வகற்றென்றுனிவ்விதந்தான்ஜெகத்தென்றானே.

௨௨. தரு-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

இறந்தவபிமனுக்காய்க்கிலேசந் - தனைக்கொண் - டிரங்கலாமோ இதென்ன [பாசம்

அநுபல்லவி.

சிறந்ததன்மபூபாதன் சீரைவானுடனெட்டுத்
திசையும்நீடூழிகாலஞ் செப்பநிறுத்திவிட்டு
 இறந்த

சரணங்கள்.

௧. இறப்பதென்றும்நிச்சயம்-இறப்பதினும்வேந்தரெண்
 ணிறந்தகோடிபேர்தலை கொய்து - இந்த
ஏழுகடலுஞ்சிவந்தே-இரத்தக்கடலாய்ப்பொங்க
 இணையில்லாஅமாது செய்து
சிறக்கும்உக்கிரவீர சிங்கமென்பதைக்காட்டித்
 திகழும்வீரலட்சுமிதன் திருமார்பில்மாலைசூட்டி
குறிப்போடுமணஞ்செய்து கொள்ளவேபாராட்டிக்
 குவலயந்தன்னிலின்று நவஜெயஸ்தம்பம்நாட்டி
 [illegible]ந்த

௨. சதகிருதுக்கள்புரிந்து-[illegible] ச்செய்தனந்த
 தானதர்ம்மங்கள்ம[illegible] பிரிய - முடன்
சற்பாத்ரமதிற்செய்[illegible] யடைந்தமேலாஞ்
 சாதுக்களாலுங்கா[illegible] அரிய
புதுமையாம்அரம்[illegible] பூசிதமொழிவிள்ள
 புகலும்வானவ[illegible] பூமழைபெய்தேதுள்ள
மதித்துமேலும்வா[illegible] மண்ணுசைதனைத்தள்ள
 மன்னும்விரசெ[illegible] தக் காணியாட்சியாக்கொள்ள
 இறந்த

ங. தழுவும்க்ஷத்ரியகுல-தருமஞ்சத்ராதிகளைச்
சாதிக்கவேணுஞ்சமர் தன்னில் - அது
தவிர்ந்தாலிறக்கவேணும்-இறக்கும்போதும்வெகு
தக்கலட்சணமுண்டென்ன என்னில்
முழுதும்பயப்படாமல் தைரியம்விடாமலோடி
முதுகுகாட்டாமற்சல முறியாமலுடல்வாடி
விழிசோராமற்கவிழ்ந்து வீழாமல்மண்ணில்நாடி
வீறவேணும்அவ்வாறே தீரலட்சணங்கூடி
இறந்த

---

## அருச்சுனன் தீயில்விழும் அந்தணனைத் தடுத்தல்.

விருத்தம் ௩௨.

அறன்மகனைமுனிதேற்றியகன்றபின்ன
ரருச்சுனன்சஞ்சத்தவரைவென்றுமீளத்
திறமைமிகுமபிமனிறந்ததைமுகுந்தன்
சிந்தித்திந்திரனைவாநினைக்கவன்றானுன்
விறன்மிகுதீக்கட்டிவளையோர்குண்டமாக்கி
விழவதனைச்சுற்றவரிதனஞ்சயற்கிம்
மறையவன்றீவீழ்வதன்முன்மாற்றென்றோத
மற்றவன்போய்நற்றவனைமறித்திட்டானே.

ச. திபதை-இராகம்-அடாணு-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. அனைத்தும்அறிந்துதேர்ந்த-அந்தணரோயின்று
அறியாதவர்போல்மனம் வெந்து - இந்தச்
சினைத்தெழுந்தோங்கிவளர்-தீயில்வீழ்ந்திறக்கத்
திருவுளங்கொண்டதென்ன நொந்து

உ. செப்புமெனமுநியென்-சிறுவ றல்
தியங்கிமனமிகவும் முறிந்து - அரிய
ஒப்பில்லாத்திறன்மிகும்-உயர்சு பின்
ஒன்றுமுவாசையை எறிந்து

௩. இந்தத்தீயில்விழுந்தே-இறப்பதுங
எண்ணினேன்தடுக்காதே ன்று - முனிவன்
சிந்தைநைந்துரைக்கவுந்-திசழ்தனஞ்ச
சிறந்தநின்னுயிருண்டேல் று

௪. அல்லஅநேகம்புத்ரர்-ஐயாவுனக்குண்டாகும்
அன்றியிறத்தல்பிழைத்தல் எல்லாம் - நூலில்
சொல்லும்விதிவழியே-அல்லால்ஆதலழிதல்
சொற்பனம்மாலுண்டோசொல் வல்லாய்

ரு. அம்புவிதன்னில்பாவர்-அருஞ்சுதனோடுமாண்டார்
ஐயாஇறத்தல்நல்ல தல்ல - என்று
நம்பத்தனஞ்சயனுந்-தடுக்கஅவன்வெகுண்டு
நாளைச்செருவிலுன்றன் வல்ல

௬. மகனிறந்தாலிச்சொல்-மறவாதொழிவையாயின்
மாண்டிலனென்றான்முநி அடுத்து - விஜயன்
பகரும்இம்மொழிபிச-கேனென்றனதன்பின்பு
பலித்ததெனவகன்றான் விடுத்து

---

## அருச்சுனன் அபிமன்னுவைக்குறித்துத் துன்புறல்.

விருத்தம் ௩௬.

அரியவந்தணனைத்தீயினில்வீழா
தகற்றிநற்றேரினிலேறி
அச்சுதன்றன்னோடங்கிருந்தகன்றே
யடைவுடன்விரைவொடுமகிழ்ந்து
வரும்வழிதன்னிற்கண்டதுன்னிமித்த
வகையினாலுளமிகக்கலங்கி
மாயனைப்பார்த்தின்றென்னமோதீங்கு
வந்திருக்கின்றதென்றோதி
யுருகினனனைத்துமறிந்தஎம்பெருமா
னோங்குமத்தேரினிலிருந்த
உன்னதப்படைகள்யாவையுமெடுத்தே
யொளித்தனனோர்புறமப்பால்
அரியசீர்பார்த்தன்பாடியிற்புகுந்தங்
கபிமன்விண்ணுலகினையாள
அடைந்தனனென்றேகேட்டுளம்வாடி
அழுதுமண்மீதுவீழ்ந்தனனே.

௫. திபதை-இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧. என்னசெய்வேனான்-என்னசெய்வேனினி
என்கண்மணியே யபிமன்னே - ஓகோ
உன்னைப்பிரிந்தெப்படி-யுலகிலரைக்கணம்நான்
உயிர்கொண்டிருப்பேனையோ அபிமன்னே

உ. அரசேயருந்தவமே-ஆருயிரேசெல்வமே
அமுதேயருங்கனியே யபிமன்னே-என்னை
கரைசேர்ப்பாயென்றிருந்தேன்-நடுக்கடலினிற்கைவைக்
கழுவிவிட்டுமாண்டாயே யபிமன்னே

ங. உயிர்போயுடல்கிடக்கும்-என்பாருயிர்கிடக்க
உடல்போனமாயமென்னோ அபிமன்னே - அந்தச்
செயலையெனக்காரோதித்-தெளிவிப்பாரையோசிந்தை
திகைக்குதடாமகனே யபிமன்னே

ச. காலையிலெழுப்பியென்-கைச்சிலையைத்தந்துபோர்க்
களத்திற்கனுப்புவாயே யபிமன்னே - பின்னும்
வாலசூர்யன்போலென்பின்-வந்தென்னிலுமதிக
வன்சமர்புரிவாயே யபிமன்னே

ரு. இனியாருதவிசெய்வார்-யார்முகம்பார்ப்பேனினி
என்வாழ்விப்படியாச்சே யபிமன்னே - இந்த
அனியாயக்கொள்ளையைப்போல்-அவனியிலிந்தமட்டும்
யார்க்குநடந்திருக்கும் அபிமன்னே

சு. என்றும்அவியாத்தீயை-என்னடிவயிற்றினில்
இட்டென்னைப்புவிமிசை யபிமன்னே - இளங்
கன்றிழந்தபசுப்போற்-கதறியலையவிட்டுக்
கண்மறையநின்றாயே யபிமன்னே

எ. வீரத்தையுன்பிரபல-வெற்றியைவில்வலியை
விபவத்தைவிக்கிரமத்தை யபிமன்னே - மகா
தீரத்தைச்செழுங்கல்வித்திறத்தைநீஎங்கேவிட்டுச்
செத்தாயமர்க்களத்தில் அபிமன்னே

அ. அப்புவியையுன்னாலே-யாளலாமென்றுபே
ராசைகொண்டையையோ அபிமன்னே - மிக
நம்பியிருந்தஎங்க-ளைந்துபேர்வாயிலும்
நலியமண்ணிட்டாயே அபிமன்னே

கூ. உன்னன்னைமார்கள்தேடி-யுருகுவார்களேயென்னென்
றுரைப்பேனவர்கட்கையோ வபிமன்னே - இதைச்
சொன்னஉடன்யாரார்க்குத்-துன்மரணம்நேர்ந்தென்ன
தொல்லையின்னமுண்டாமோ அபிமன்னே

ய. வண்ணமும்வாழ்வும்புய வல்லமையுஞ்செல்வமும்
வரிசையுமாதவமும் அபிமன்னே - எங்கள்
எண்ணமுஞ்சந்தோஷமு-மெல்லாச்சீரும்உன்னுடன்
இன்றுதொலைந்துபோச்சு தபிமன்னே

மக. வடவாக்கினிபோலென்றன்-வயிறுபற்றியெரிய
வைத்தலையக்கண்டாயே யபிமன்னே - உன்றன்
தடவனசமுகத்தைச்-சற்றேகாட்டியிந்தத்
தணலையவிக்கொணுதோ அபிமன்னே

மஉ. காலனுன்னோடெதிர்த்துக்-கச்சைகட்டானேயெவன்
கட்டினுன்கச்சையையா அபிமன்னே - அந்த
மூலந்தெரியவேணும்-வந்துரைத்துன்திரு
முகத்தைக்காட்டிப்போடா அபிமன்னே

மங. நாட்டுக்குள்ளுன்னைக்கண்டு-நமக்காரீடென்றுகர்வம்
நான்கொண்டிருந்தேனப்பா அபிமன்னே - தெய்வம்
ஆட்டுக்குவாலள-வறிந்துவைத்தாப்போலென்னை
அபலமாக்கிவிட்டாயே அபிமன்னே

மச. இனிப்பகைவர்முகத்தில்-எப்படிமுழித்துநான்
என்னென்றுசெய்வேன்சண்டை யபிமன்னே - என்னை
அனியாயஞ்செய்யத்தான்-பழிகாராநீபிள்ளை
யாய்ப்பிறந்தாஎனக்கு அபிமன்னே

மரு. பதைக்குதுயிரிருகண்-பஞ்சடையுதுமேனி
பற்றியெரியுதெங்கும் அபிமன்னே - என்
சதைக்குச்சத்துருவாக-யிருந்துமடித்தகொடுஞ்
சதிகாரப்பாவியாரோ அபிமன்னே

மசு. மாதவாவைகுந்த-வாசாமதுசூதன
வாமனுவனதாம ரிஷிகேசா - என்றன்
மீதித்தனைகருணை-யிருந்திந்தக்கோலஞ்செய்து
விடுத்தாயேயரிகரி செகதீசா

---

## அருச்சுனன் அபிமன்னுவைக் காக்காமற் போனர்க ளென்று அரசரை நிந்தித்தல்.

விருத்தம் ருச.

அங்கிந்தவகைபார்த்தனழுதையையோ
அபிமன்னேயபிமன்னேயென்றுகூவிச்
செங்கையிசைந்தணிமுகத்திலறைந்துகொண்டு
சினமொருபாற்பொங்கிவிழிசிவக்கமன்னர்
தங்களைப்பார்த்தொருசிறுவன்றன்னைக்காக்கத்
தயங்கியஉங்களுக்கேனிக்கோலமென்று
வெங்கனல்போலெரிந்துகோபாக்னிதன்னை
வீசினுன்பலவிதமாவசினனே.

உசு. தரு-இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

உங்களுக்கேனபிமன்-றனைக்காக்கமாட்டாமல்-ஒளித்துக்கொண்டிருந்தீரே

அநுபல்லவி.

தங்கமுடிமன்னரே தபசெபகுருபூசை
தன்னுடனேமுகத்திற் கன்னங்கரியமீசை
உங்களுக்

சரணங்கள்.

க. ஊரேன் உயர்ந்தமணித்
தேரேன் சுகந்தமலர்த்
தாரேன் வீரர்களென்னும்
பேரேன் அரியசீரும்
உங்களுக்

உ. குடையேன் வில்லொடுபல
படையேன் இறுமாப்புள்ள
நடையேன் பசியபொற்பட்
டுடையேன் இந்தக்கடையேன்
உங்களுக்

ங. படியேன் ஜெயவிருதுக்
கொடியேன் நவரத்னமா
முடியேன் பேரிகையொடு
துடியேன் மிகுநொடியேன்
உங்களுக்

---

## தருமராஜன் அருச்சுனனைப்பார்த்து அரசர்களென்ன செய்வார், அபிமன்னு இறந்ததற்குக்காரணம் சயித்திரதனெனல்.

விருத்தம் ஙரு.

அருச்சுனனிவ்வாறுரைத்துக்கொதிக்கவேந்தர்
அகங்கலங்கினர்தருமனப்பாமூளும்
நெருப்பெரிந்தாற்றண்ணீராலவிக்கலாந்தண்
ணீரேசெந்நெருப்பானலவிப்பதெத்தாற்
கருத்தினில்நீஇக்கோபங்கொண்டாலியாருன்
கண்ணெதிர்நிற்பார்நமதுதிருவயிற்றிற்
றரித்தமைந்தன்போனதற்கேனிவர்மேற்கோபந்
தானென்றன்பழிகாரன்நானென்றனே.

உச. தரு-இராகம்-சங்காபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தமன்னர்மேலேதுக்-கித்தனைஆபாசம்-இவராலென்னமோசம்

அநுபல்லவி.

நொந்திடஎய்தோனை நோகாமலேஅம்பை
நொந்துகொள்வதுபோலே சிந்தையிலொருக்காலே
இந்த

சரணங்கள்.

க. புதல்வனைநான்தான்-அனுப்பினேன்என்சொற்படி
போனான்சக்ரயூகத்தை யழிக்க - ஐயோ
போனவன்செய்தான்சண்டை-வானவரும்இருகண்
பொறிகலங்கிப்பேய்போல் முழிக்க
எதிரினில்நாங்களும்-பதறிச்சென்றோம்இம்மன்னர்
யாவரும்படைகளும் செழிக்க - அந்த
ஈசன்வரத்தினாலே-சயிந்தவனழித்திட்டான்
எங்கள்பலத்தையெல்லாம்-பெண்கள்கூடப்பழிக்க
இந்த

உ. சர்ப்பகேதனனைப்பார்த்-தபிமன்னேடிவர்களைச்
சாராமற்றடுக்கிறேன் என்றான் - என்ற
சத்தியந்தனைக்காக்கச்-சித்ரவதைகள்செய்தித்
தனைபேரையுமடித்து வென்றான்
அற்புதவீமனாலே-ஆனபாடெல்லாம்பட்டான்
அவனையுந்தடுத்தெதிர் நின்றான் - ஓகோ
யார்கொன்றார்மகனையவ்-வாகாத்தியக்காரப்பாவி
அஷ்டமச்சனிபோலே-மத்தியில்நின்றுகொன்றான்
இந்த

ௗ. பருத்ததேரொன்றுமாத்ரம்-மகனுக்குதவினாலிப்
பாரோனேயாள்வேனிந் நேரம் - அந்தப்
பாவிகெடுத்தானுங்கள்-பட்டதைப்பட்டோம்பட்டும்
பலனில்லாமற்போச்சுகிரா சாரம்
வருத்தம்நமக்குநேர்ந்தா-லூரையெல்லாம்வெறுத்து
வைவதோராஜகெம் பீரம் - மனை
மக்கள்தமைவெறுத்து-நமக்காயுயிர்கொடுக்க
வலியவந்தாரையுடல் மெலிய - இத்தனைதூரம்
இந்த

## அருச்சுனன் தருமராஜன் சொல்லக்கேட்டுப் பின்னும் வருந்துதல்.

விருத்தம் ௩௬.

கொதித்திடுந்தீக்கோலையிருசெவியிலேற்றுங்
 கொள்கையைப்போலித்துயரவார்த்தைதன்னை
உதிட்டிரன்சொன்னதைக்கேட்டவனும்வாடி
 யுடல்நடுங்கவுயிர்வருந்தவுள்ளநைந்து
பதைத்துருகவிருகண்ணீராறுய்ப்பொங்கப்
 பார்மீதில்வீழ்ந்துபுரண்டையையோவென்
னதிஷ்டமிப்படிக்காச்சோவபிமன்னுவென்
 றாற்றினன்காண்டிபஞ்சேர்கரத்தினனே.

உரு. தரு-இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

அபிமன்னேநானுன்னைப்-பிரிந்தெப்படி-அரைநொடியுய்வேனே

அநுபல்லவி

விபரீதகாலத்தினு லெனக்குமயங்கிமதி
விட்டுப்போனேன்இந்த விதமாச்சுதுன்கதி

அபி

சரணங்கள்.

௧. தத்தளித்தஇந்திரன்-பகையைவேரறுத்துத்
 தந்தேனவருக்குப்பொன் னாடு - அக்னி
தனக்குக்காண்டவனந்-தன்னையாகுதிதந்து
 தவிர்த்தேனவன்பட்டிடும் பாடு
எத்தனைபேர்க்கிப்படி-யுதவிசெய்துயிர்ப்பிச்சை
 யிட்டுநான்முழுமனத் தோடு - இரும்
பிடித்தேன்அசனுக்கெல்லாந்-தமக்காய்த்தவிடிடிக்க
 இல்லாமல்நேர்ந்ததையோ இன்றைக்கெனக்குக்கேடு

அபி

௨. அரவானைமுன்னம்பலி-கொடுத்ததுபோதாதென்றே
 அப்பாவுன்னையுந்தாரை வார்த்து - என்றன்
ஆவிவைத்திருக்கின்ற-அனியாயத்துக்குலகில்
 ஆர்நகையார்கைதட்டி யார்த்துத்
தரியலரைமடித்த-பேரெனன்றிந்தானுன்னைத்
 தருந்தேவர்களாலன்பு போர்த்து - அங்கு
தருவித்துக்கொண்டதற்கென்-செய்வேனென்றைக்கென்துயர்
 தணியும்உன்னிணையில்லா அருள்முகத்தினைப்பார்த்து

அபி

ங. சாகிறநாய்வீடேறும்-என்பதுபோற்சயிந்
தவன்போர்க்களமேறிவில் லோசை - காட்டிச்
சம்புவரத்தாற்றுள்ளி-யுனக்காய்த்துணைவந்தோரைத்
தடுத்துத்தந்தானதிபிர யாசை
ஆகையாற்றடைபட்டார்-நீயொண்டியாய்நின்று
அமர்செய்துமாண்டாயென் ஆசைக் - குரிய
ஐயனேஎன்கண்ணே-யருஞ்செல்வனேயென்றென்
ஆருயிரேயிப்படி ஆச்சாநான்செய்தபூசை
அபி

ச. மக்கள்மெய்தீண்டி-லுடற்கின்பமென்றபடி
மகனேயென்றுனையினிக் கூவி - அழைத்து
வாஞ்சித்துமுத்தாடவே-ஊனையேபாழுங்கும்பி
மண்டியெரியுதனல் மேவி
தக்கஉன்போற்பிள்ளையைச்-சாகக்கொடுத்திந்நேரஞ்
சகிப்பாரோயாரொனும்நான் பாவி - ஆனதால்
தலைக்கிடுங்கொள்ளியை-வயிற்றிலிட்டுப்போனுய்த்
தணலினாலேதானே தகனமாகுமென்னாவி
அபி

---

## கிருஷ்ணன் அபிமன்னு இறந்ததைக்குறித்து வருந்துவோரைக்கண்டு அவரைத் தேற்றுதல்.

விருத்தம் ௩௭.

பார்த்தனிவ்வாறழுதுகளைபட்டான்தன்மன்
பதைத்துருகினன்மற்றோர்பார்மேல்வீழ்ந்தங்
கார்த்தழுதார்மன்னரொல்லாமலறினரிவ்
வலங்கோலமாமைவர்தம்மைக்கிருஷ்ண
மூர்த்திகண்டோர்பிள்ளைக்காய்ச்சமஸ்தசாஸ்திர
முறைதெரிந்தநீங்கள்துயர்கொள்ளலாமோ
நீர்க்குமிழியித்தேகம்யார்க்குமில்லை
நிலையென்றுனழிவொன்றுக்கில்லையென்றனே.

௨௬. தரு-இராகம்-அசாவேரி-சாப்புதாளம்.

பல்லவி.

ஏனிவ்விசாரம்-போதும்போதும்-இதிலென்னசாரம்

அநுபல்லவி.

மானமிகுத்தபாண்ட வர்களேயிருள்பொருந்தும்
வையமென்பதுசத்தப் பொய்யென்றறிந்திருந்தும்
ஏனிவ்

சரணங்கள்.

க. தந்தையையன்பாகத் தாங்கிப்பெற்றதாயைத்
தம்பியைத்தமயனைச் சார்ந்தகிளையைச்சேயை
அந்தமாருந்துணையா யெண்ணுமனப்பேயை
அகற்றவேணும்இந்த வாறும்பெரியமாயை
ஏனிவ்

உ. அனித்தியமாமுலகில் வினையினால்வந்தகாயம்
அழியுமென்றுதவஞ்செய் யறிஞருக்கும்அபாயம்
நினைக்குமுன்னேவந்து நேருமென்றுவாலாயம்
நீங்கள்கேட்டதில்லையா நீதிநூற்சொல்லும்ஞாயம்
ஏனிவ்

ங. அமைத்தகுருவைப்பொம்ம லாட்டமாட்டியநேக
அரசர்தலையைச்சூறை யாடிச்சக்கரயூகம்
இமைப்பிற்குலையப்போரிட் டெதிரிலாமற்றிரிலோகம்
எங்குஞ்செயத்தைநாட்டி இறந்தமைந்தனுக்காக
ஏனிவ்

ச. வினையையனுபவிக்க வேண்டிமனிதரிந்த
மேதினிதனிலேசென் மித்தழகாவளர்ந்த
மனைக்கும்பால்தந்தஅன்னை மார்க்குங்கணக்கிட்டந்த
மலரயன்சொல்லவரு வானோதுணிந்துமுந்த
ஏனிவ்

---

## அருச்சுனன் தீயில்வீழ்வதை இந்திரனாகிய பிராமணன் தடுத்தல்.

விருத்தம் ருஅ.

அரிசொலியுந்தேருமலையனின்றோரை
அங்கிவளர்த்திடுகவெனக்கிரீடிசொல்ல
மருவுதம்பிதீவளர்க்கவதனில்வீழ்ந்து
மாய்ந்திடுவெனெனச்செல்லமுகுந்தனுள்ளிங்
திரனையுன்றன்மகனைக்காவென்னவன்னோன்
செய்தவனவந்தெனக்குச்சொன்னதிந்தத்
தருணமதின்மறந்தனையோவென்னநின்று
சாற்றினான்சபதமெரிமாற்றினானே.

## அருச்சுனன் நாளை அஸ்தமானத்துக்குள்ளாக சயிந்தவனைக் கொல்லுகிறேனெனச் சபதஞ்செய்தல்.

விருத்தம் ௯௯.

அரியமறையவற்குமுனமறைந்தவாற்று
லங்கிவிழாதொழிந்துமனங்கொதித்துச்சீறி
மருவுமென்றன்பிள்ளைக்காய்த்துணைவந்தோரை
மறித்தசிந்துபதிதலையைநாளைக்குள்ளே
செருமுகத்திலறுத்திடுவேனறுக்காவிட்டாற்
றீக்குழிபாய்ந்திறந்துபாவிகள்போய்ச்சேரு
நரகமடையக்கடவேனெனவேகோபம்
நண்ணினன்பலசபதம்பண்ணினனே.

உஎ. தரு-இராகம்-உசேனி-ஆதிதாளம்.

பல்லவி.

பாவிகள்சேரும் கதியினைநேரே - சேர்ந்ததையனு
பவிக்கக்கடவேனனுமறையோரே.

அநுபல்லவி.

தாவுஞ்சேய்க்குத்துணை வந்தோர்கள்முன்னின்று
தடுத்தோனையிந் நேரமேகொன்று
ஆவியைப்போக்கிறேன் போக்காவிட்டாற்சுடும்
அக்கினிதன்னில்வீழ்ந் தழிந்துமாகொடும்
பாவிகள்

சரணங்கள்.

௧. மைந்தனுக்குத்துணை வந்தோரைவென்றச
யிந்தவனைநாளை யந்திபடுமுன்னே
சிந்துசெய்யாவிடில் தந்தையைநோய்க்கிர
மந்தப்பியெப்போதும் நிந்தித்தசண்டாளப்
பாவிகள்

௨. என்னரும்பிள்ளைக்குப் பின்னேதுணைவந்த
மன்னரைத்தடுத்தோன் சென்னியறுவிட்டால்
தன்னையளித்ததாய் இன்னுயிர்ப்பசியால்
முன்னேபோகக்கண்டும் அன்னமுண்ணும்படு
பாவிகள்

ந. புத்திரன்பின்னே யடுத்துவந்தோரைத்
தடுத்தோனோநாளே வதைத்துக்கொல்லாவிடில்
மெத்தவும்நம்பிவ ருத்தத்துடன்சா
னுற்றேனைப்பாரில்வஞ் சித்திடும்பொல்லாத
பாவிகள்

ச. வாய்ந்தவென்பிள்ளைபின் ஏய்ந்துவந்தோர்களைக்
காய்ந்தோனோநாளைக்குட் பாய்ந்துகொல்லாவிடில்
நேர்ந்தவழக்கினை ஆய்ந்துபார்த்தும்பொருள்
ஈய்ந்தவன்பக்ஷத்தில் சேர்ந்தோரம்பேசிய
பாவிகள்

ரு. வாதுசெய்மைந்தனுக் காதரவகற்றும்புன்
சூதனோநாளைக்குள் சேதித்திடாவிடில்
மேதகுங்கற்புள்ள மாதரைச்சேரஎப்
போதுமனத்தினிற் காதல்கொண்டேதிரி
பாவிகள்

சா. மாசில்லாப்பிள்ளைக்கு மோசம்வரச்செய்த
நீசனோநாளைக்குள் நாசஞ்செய்யாவிடில்
வாசத்துளவணி கேசவன்பாதத்தை
நேசமாப்புகழும் தாசரையிகழும்
பாவிகள்

---

## சயித்தவன் தனஞ்செயன்செய்த சபதத்தைக் கேட்டு துரியோதனனோடு சொல்லி வருந்துதல்.

விருத்தம் சய.

சபதமிவ்வாறுரைத்துவின்னுணிட்டுதேவ
தத்தமதைப்பூரித்தான்றருமராஜன்
விபவமாயனைப்பார்த்திப்பார்த்தன்சொல்லெவ்
விதமாமென்றான்மாயனவனுக்கேநற்
சுபமுண்டாமெனக்கேட்டசிந்துபூபன்
சுயோதனனிடத்தினிற்சென்றேநாளைக்குத்
தபனன்போமுன்விஜயன்கையாற்போமென்
றலையென்றானதற்கையமிலையென்றனே.

உஅ. தரு-இராகம்-சௌராஷ்டகம்-சாப்புதாளம்.

பல்லவி.

என்னசெய்வேன்துரி-யோதனராஜனே-இனிமேலென்னயோசனே

அநுபல்லவி

அன்னங்கிடைத்தாற்போதும் என்றெண்ணியொருமூலே
தன்னிலிருந்தவெந்தன் தலைக்கேவைத்தாயேவேலை
என்ன

சரணங்கள்.

க. இப்படிநேருமென்-றெள்ளளவுதெரிந்தால்
எடுத்தடிவையேனுன் அழியும் - காலம்
இன்றுநெருங்கினதால்-எனக்குமதிமயங்கி
எதிர்த்தேனிவ்விடாரால் ஒழியும்
விற்பனஅபிமனைக்-கொன்றதாரவன்செத்த
விதம்நானறியேனொரு வழியும் - ஐயோ
வெண்ணெயுண்டோனிருக்க-விரல்சூப்பினேன்மீது
விளைந்ததுபோலென்மேல்
விளைந்துதெல்லாப் பழியும்
என்ன

உ. ஆபாசம்வேண்டாஞ்சொன்-னேனென்றகண்டசக்கி
ராதிபதியாயிந்த நாட்டை - நீயே
ஆண்டாலும்அவர்களே-ஆண்டாலும்எனக்கென்ன
அளிப்பீர்களோபொருள் மூட்டை
தாயாதிகள்நீங்கள்-சண்டைபோட்டுநாளை
சரிப்பட்டாவீரொரு பாட்டை - நான்
சங்காச்சுதாண்டிவா-யாச்சென்றுபோகாமல்
தாடிக்குப்பூச்சுற்றித்
தேடிக்கொண்டேன் கேட்டை
என்ன

௩. ஈடின்மூவருமவன்-எதிர்நிற்கவஞ்சுவார்
எனிலினியாராலே கூடும் - அவன்
இயம்பியசபதத்தின்-ஜெயமின்றென்னநாளை
யிந்நேரம்நின்றுகூத் தாடும்
ஓடிப்போவோமென்று-நாளேதொருராவிதில்
ஓகோயார்க்குத்தான்கைகா லோடும் - அல்ல
தொளித்தாலுமண்டலத்தில்-அவன்பாணம்விடுவதோ
உண்டில்லையென்றுயிரைக்
கண்டுவலைத்துப் போடும்
என்ன

## சயிந்தவனுக்கு துரியோதனன் தயிரியஞ்சொல்லல்.

விருத்தம் ௬௧.

செருக்கொழிந்தொடுங்கியந்தச்-சிந்துபூபதியிவ்வாறு
கருத்துறச்சொன்னவார்த்தை-காதசப்பாவிகேட்டு
வருக்கமாமென்றன்றம்பி-மாருடன்மலையைப்போல்நான்
இருக்கிறேன்பயப்படாதே-யென்னுவான்பன்னுவானே.

உகூ. தரு-இராகம்-பைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

பயப்படவேண்டாம்-நீயொருக்காலும்-பயப்படவேண்டாம்

அநுபல்லவி.

நயத்தசிந்துமகிபா நன்ருய்ப்பாரென்னிலையை
நாக்கிரண்டல்லநாளேக் காக்கிறேனுன்றலையை
பயப்

சரணங்கள்.

க. ஈசனேயவனுக்குத் துணையாகிப்படைக்கலம்
ஈந்தாலுந்தடுத்திட எனக்கில்லையாபலம்
ஆசலழியாதுன்னைக் காப்பேன்வருமாபிழை
ஆனைமேய்கிறகாட்டில் ஆட்டுக்கில்லையாதழை
பயப்

உ. அடங்காவிற்குருமுதல் அனந்தம்வீரரையென்னை
அடித்துக்கொன்றபினல்லோ மடிக்கவேணும்உன்னை
நடுங்கிச்சாகிருயென்ன காணும்அவன்செந்தீயோ
நாங்களார்அவன்வீட்டு மாங்காய்புளியங்காயோ
பயப்

ங. புவியில்யானைதானே மண்ணைத்தன்றலைமீது
போட்டுக்கொள்வதுபோலிப் போதவனுக்குத்தீது
அவனேதேடிக்கொண்டான் அவன்மேற்ருனேபழியை
அமைத்துநாளைச்சுற்ற வடிக்கிறேன்தீக்குழியை
பயப்

---

## சயிந்தவனை நாளைக்குக் காக்கவேண்டுமென துரோணசாரியருக்குத் துரியோதனன் சொல்லல்.

விருத்தம் ௬௨.

வினையொடுமன்னனிந்த-விதஞ்சொல்லிக்குருவைப்பார்த்துக்
கனமுறுசிந்துவேந்தைக்-காத்திடவெண்ணில்நீரே
முனைமுகந்தன்னில்நாளை-முழுவதுநின்ருல்யார்க்கும்
இனிநல்லகாலந்தானென்-றேத்துவான்சாற்றுவானே.

௬௰. தரு-இராகம்-கலியாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இனிமேல்நல்லகாலந்தான் - நாளைக்கொருநாள்சித்தம் - இராங்கிச்செய்திட [வேண்டும்யுத்தம்

அநுபல்லவி.

நனிபுகழ்துரோணரே நன்மையுண்டாகுது
நம்மைப்பிடித்தசனி நாளைவிட்டுப்போகுது
இனி

சரணங்கள்.

க. பரிவிற்சயித்ரதனை நாளைமுழுதும்வில்லைப்
பற்றிநீர்காப்பாற்றப் படுவீராகில்தொல்லை
அருச்சுனன்தீயில்வீழ்ந் தழிந்திளிப்பான்பல்லை
அவன்மாண்டால்நமக்கெங்கும் அப்பால்சத்துருவில்லை
இனி

உ. பார்த்தன்தீக்குழிதனில் பாய்ந்திறந்திடுங்கோரம்
பார்த்தால்மற்றவர்சகிப் பாரோஅந்தவிசாரம்
ஏற்றெள்ளுந்தண்ணீரும் இறைக்கக்கூடஆதாரம்
இல்லாமலனைவரும் இறப்பார்நாளையிந்நேரம்
இனி

ங. இறந்ததிவனுக்கொருத் தனுக்குத்தானுபிள்ளை
என்பிள்ளைபோனதற் கேதுங்காணேங்கொள்ளை
அறிந்துதானேதெய்வம் அடக்கிப்போட்டதுதுள்ளை
அவனிநம்மதேகட்டோ டற்றுப்போச்சுதுசள்ளை
இனி

---

துரியோதனன் துரோணனையும், கன்னனையும்பார்த்து, நாளை யொருபொழுது அணியில், சாக்கிரதை யிருந்து சயிந்தவனைக் காக்கவெனல்.

விருத்தம் ௬ங.

இந்தவகைகுருதனைப்பார்த்தோதிபங்கே
யிருக்குமன்னவர்க்கினிமைசொல்லிப்பின்னுஞ்
சந்ததமுமொருவரையும்வணங்காக்கர்வந்
தனையகற்றிக்கன்னனைப்பார்த்தப்பாநாளை
யந்திபடுமட்டுநமக்காகப்போரிட்
டபிமனைக்கொல்வித்துவெற்றிதன்னைநாட்டுஞ்
சிந்துபதிதனைக்காக்கநீயஞ்சாமற்
செல்லென்றான்அப்பாலேன்வில்லென்றானே.

சு. திபதை-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்

## கண்ணிகள்.

க.

திரகன்னராஜனே - தனஞ்
செயனுடனமர் புரிய
யாருமஞ்சிஞலப்பால் - நடப்பதெவ்
விதஞ்சொல்வாய்நீ தெரிய

உ.

உனைவிடவீரரில்லை - என்றமன்
உறுதியைக்கொண்டு தானே
வினையுடன்சயித்திரத - னுக்குப்பல
விதபலங்கள்சொன் னேனே

ங.

உரைத்ததபலமாகாமல் - நாளைக்
கொருநாள்மாத்திரங் காணுந்
தருக்குடனேரண - முகத்தில்நின்று
சண்டைநீசெய்ய வேணும்

ச.

செய்துசேனைமழை - யெனத் திவ்
வியாஸ்திரங்களையொரு மிக்கப்
பெய்துநீநிற்க - வேணுமர்ச்சுனன்
பேய்தனைப்போல் முழிக்க

ரு.

எனச்சொல்லாதேவுனக்-காளாகநான்
இருந்துபலனை முடிக்கி
தனித்ததேர் அம்புவில்-முதல்யாவுந்
தருவிப்பேன்அடிக் கடிக்கு

சு.

மேலும்பாண்டவர்தமைநீவென்றால்
வேந்தருன்புகழ் விரித்துச்
சாலமதிப்பாரென்றான் - துரியோ
தனராஜன்மனஸ் கரித்து

எ.

என்னலொன்றுமிலா - விடினுமுன்
னினியவன்னவி சேஷந்
தன்னலாகிலுமெனக்-குண்டாகாதா
சமர்முகத்தினில் ரோஷம்

அ.

நிசமாச்சயித்ரதனை - நாளைக்கிங்
நேரமட்டுமென் கோனே
அசைவில்லாமற்காப்பேன்-என்றான்
அப்பொழுதுதுரோணன்நானே

கூ.

மதில்களாற்சூழ்ந்திட்ட-தென்ன நா
லுவகைச்சேனைகளை யிருத்தி
அதனுள்ளோர்புறஞ் - சயித்திரதன்
தலையதனைக்காக்க நிறுத்தி

ய.

அந்தயூகமுதல் - அணிதனில்
ஆக்கிரச்சிங்கம் போலே
சிந்தையெவருங்கலங்கச் - சண்டை
செய்கிறேனொருக் காலே

யக.

அதனைபேதித்துள்வர - அர
ஞர்க்குமுண்டோநிர் வாகம்
எதிரிகளெவ்வளவானுலுங் -கொஞ்ச
ம் எனக்குண்டொருசந் தேகம்

யஉ.

அமைத்ததேகபலமுந்-தெய்வ
பலமுமஸ்திர பல்மும்
நமக்கேதருச்சுனனுக் - கமைந்தது
நலத்துடனேச கலமும்

யங.

இருந்தாலும்பயமில்லை - நாமின்
றெடுத்ததும் அடங் காது
வருந்தும்பாவபுண்ணிய - மென்றிரு
மார்க்கமுண்டேமண் மீது

யச.

இருவகைதனிற்செயம் - அபஜெயம்
எய்ந்ததெய்வச காயம்
தரணியிலவர்க்கோ - நமக்கோ
சாற்றக்கூடாதுநி யாயம்

௰௫.

காளையர்ச்சுனன்மொழியும்-நம்மருங்
 கருத்துமின்றென்னப் பிரியும்
நாளையந்திப்படும்போ - தல்லவோ
 நன்றுயார்க்குந் தெரியும்

௰௬. [ப்போ

எனச்சொல்லியிருந்திட்டான் - அ
 திணையில்லாத கம்பீரம் [த்துத்
தனைப்படைத்ததுரோணனைப் - பார்
 தலையசைத்துநீ வீரம்

௰௭. [வினுல்

படைத்தென்னபலனென்னை -யே
 பார்த்தனுடைந்த மாயன் [ட்ட
துடிக்கவாட்டுவேனென்றுனே - கெ
 துன்மருடனென்னும் பேயன்

௰௮. [ம்பியர்

மற்றுமுள்ளதுரியோதனன் - த
 வானுங்கலங்க இளைத்து [டைட்
கொற்றவனேநாங்களே -போதும்வி
 கொடுமென்றுநின்றுர் - உரைத்து

௰௯.

ஆங்குப்பின்னும்இந்த - வீரர்கள்
 அரசனைப்பார்த்துன் பயத்தை
நாங்கள்தீர்த்துத்தருகிறே- மெய்யா
 நாளையிந்நோஞ் செயத்தை

௨௰. [லிச்சென்றுர்

அஞ்சவேண்டாமெனச்சொல்
 அவரவர்பா சறைக்கு
வஞ்சச்சுயோதனன்மன - மகிழ்ந்தா
 மன்னர்சொன்ன உரைக்கு [னம்

---

## அரசர்சொன்னசாமர்த்தியத்தைக்கேட்டுத்துரியோதனனைப் பார்த்து, அஸ்வத்தாமன் சொல்லுதல்.

விருத்தம் ௪௪.

மிகுத்தபகையுடனிவ்வாறரசர்சொன்ன
 வீரமதைவிறல்கொளஸ்வத்தாமன்கேட்டு
நகைத்தரவக்கொடியோனைப்பார்த்திவ்வேந்தர்
 நவின்றமொழியிரவியைமின்மினிக்கூட்டங்கள்
பகைத்துவெல்வோமென்றதற்கொப்பாமல்லாமற்
 பயனில்லைநாளையிச்சேனைகளைப்பார்த்தன்
குகைக்குளெழுமுக்கிரசிங்கம்போலெழுந்து
 கொல்லுவானவனையெவன்வெல்லுவானே.

௬௧. தரு-இராகம்-பேகடா-சாப்புதாளம்.

பல்லவி.

பார்த்தனுடனேசண்டை-செய்யஇரும்பால்-படைத்தோர் ஆர்தலைமண்டை

அநுபல்லவி.

மூர்க்கத்துடனெழுந்து தட்டுகின்றுர்கள்தோளை
முடிமன்னவனேஇந்த நெடுஞ்சபையினில்நாளை

பார்த்த

சரணங்கள்.

௧. அவர்களைமாயன்விடு வானுபடுவோன்பாடு
 அன்றியுங்கிரீடிகைவில் லாண்மையறியும்நாடு

இவராலொன்றுநடக்கும் என்பதைத்தள்ளிப்போடு
எதுபிள்ளைபிழைப்ப திதுஎண்ணெய்க்குக்கேடு
பார்த்த

உ. அடல்சயித்ரதனைக்காப் பாற்றலாம்வாரும்வாரும்
ஆரம்மைவிடயாரொன் ருர்ப்பரித்துனைச்சாரும்
படையிலொருவன்வேணும் பார்த்தால்இல்லையாரும்
பஞ்சம்மழைபெய்யாமல் பனித்துளிவீழ்ந்தாதீரும்
பார்த்த

ரு. ஆனசிந்துபதியை யழித்திடப்போய்க்கவியும்
அருத்தமுஞ்சொல்கின்றார்க ளதையேற்குதுன்செவியும்
நீநினைத்ததெந்த நெறியினாலேகுவியும்
நெடுங்காட்டுத்தீகுடுவை நீரைவிட்டோஅவியும்
பார்த்த

---

## அரசர்கள் கிருஷ்ணனைநோக்கிச் சொல்லல்.

விருத்தம் சரு.

புந்திமிகுபரிமுகன்சொன்னதுவுமற்றோர்
புகன்றதுவுமைவர்சாரணர்கள்கேட்டு
வந்துதருமனுக்குரைத்தார்மாயன்கேட்டும்
மன்னர்களையறிவமெனப்பார்த்தன்கேட்கச்
சிந்துபதிதனைநாளைக்குள்ளேயந்த
தீரர்கள்முன்வெல்வதரிதென்றுன்மன்னர்
எந்தைநீயிருக்கவிஜயனுக்கோர்தீமை
யேதென்றுரிதுவென்னசூதென்றுரே.

ரு௨. தரு-இராகம்-செஞ்சுருட்டி-சாப்புதாளம்.

பல்லவி.

நீயிருக்கதாழ்ச்சியேதையா-எங்கள்-நெஞ்சறியக்கேட்கிறாய்மெய்யா

அநுபல்லவி.

தூயபார்த்த னெனுங்காளை
துவசங்கட்டப் போரான்நாளை
நீயிருக்

சரணங்கள்.

க. வந்தவீரர்கள்தம்மை வென்று - திரிலோகம்
நொந்திடியக்கர்ச்சித்து நின்று
சிந்துபதிதலைவிண் சேரவங்குள்ளோர்மீசை
சிந்தப்பத்திரகாளிக்குச் செய்குவான்ரணபூசை
நீயிருக்

உ. ஓடமருந்துண்டோர்மென் மேலே - குந்தி
யுறங்கிவிழுந்தாரென்றுற் போலே
ஆடம்பரஞ்செய்தோர்கள் அடங்கமூலேக்குமூலே
அதிசயித்துக்கொண்டாட அணிகுவான்ஜெயமாலே
நீயிருக்

ங. தந்திக்குமுன்வந்த கோனே - அன்னை
தந்தைகுருதெய்வமா னேனே
நந்தகோபாலச னர்த்தனதேவதேவ
நாராயணசஹஸ்திர நாமாமகானுபாவா
நீயிருக்

---

## அருச்சுனன் கிருஷ்ணனைப்பார்த்து நீயிருக்க, என்வாக்கி ஞற்சொன்னது தவறுதெனல்.

விருத்தம் சசு.

மன்னரங்கிருந்தவீரர்-மனஸ்க்கரித்திந்தவார்த்தை
சொன்னதைப்பார்த்தன்கேட்டென்-சொல்லவமாகிப்போமா
துன்னுபைங்கொண்டல்மேனித்-தூயவைகுந்தநாதா
என்னிறையேயென்றன்பா-லேத்துவான்சாற்றுவானே.

ருரு. தரு-இராகம்-கலியாணி-சாப்புதாளம்.

பல்லவி.

என்வாக்கிஞல்வந்த-சபதம்தப்பிப்போமா-எங்கேயாகிலும்பரந்தாமா

அநுபல்லவி.

உன்வாக்கிஞற்சொன்னதென் றுலகில்மென்மேலும்
ஓதித்துதிக்கும்நாலு வேதந்தப்பிப்போனலும்
என்வாக்

சரணங்கள்.

க. அந்தயமனவனுக் காளதிர்ப்பட்டாலும்
ஆகண்டலனும்வச்சி ராயுதந்தொட்டாலும்
சந்த்ரசூரியர்கதி தடுமாறிக்கெட்டாலும்
தாழ்கடலுலகங்கள் கீழ்மேலாய்விட்டாலும்
என்வாக்

உ. காண்டீபஞ்சிலேதேரோ அழியாதமர்க்குமிக்க
கச்சைகட்டிஞனெவன் கனசண்டைசெய்யத்தக்க
பாண்டவமந்திரியனும் பார்த்தனன்றியுமொக்கப்
பரம்பொருள்நீயேதேர்ப் பாகனுகஇருக்க
என்வாக்

௩. அங்கிருக்கும்வீரர்வில் லாண்மையுஞ்செருக்கும்
அடியேன்வில்லாண்மையும் தெரியும்அனைவருக்கும்
சங்கையேன்சிவனருள் தன்னுடென்றுஞ்செருக்கும்
சக்கிரதரனேயுன்றன் தாளைநம்பியிருக்கும்
என்வாக்.

---

## கிருஷ்ணனும், அருச்சுனனும், சுபத்திராதேவி வீட்டுக்குப் போனபோது, அவளபிமனைநினைத்துத் துன்புறல்.

விருத்தம் சஎ.

அடல்விஜயனிவைசொலமால்தருமனுக்கும்
அரசருக்குமற்றோர்க்குமுறுதிசொல்லி
விடைகொடுத்துப்பார்த்தனொடுசுபத்திராதேவி
வீட்டினிற்சென்றானிவர்கள்தம்மைப்பார்த்து
மடமயிலுத்தரையொடுபாஞ்சாலியோர்பால்
வாய்விட்டுக்கதறியழச்சுபத்ராதேவி
படபடெனமனந்துடிக்கவபிமாவென்று
பதறினளழுதழுதுகதறினளே.

எ. திபதை-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. விருதுபெறுமன்னவ-ராலும்வீரர்களாலும்
மேலாம்நிர்வா கத்தைக் - கொண்டவுன்றன்
பெரியதந்தைகளாலுஞ்-சிறியதந்தைகளாலும்
பேதிக்கவொண்ணு யூகத்தை

உ. ஒண்டித்தேருடனே-சென்றழித்துக்காலாக்னி
உருத்திரன்போ லெரிந்து - அகன்றமூ
தண்டகூடம்வெடித்து-ரெண்டாய்ப்பிளக்கபாணம்
அனந்தமாகச் சொரிந்து

௩. பலகோடிவீரர்கள்-தலைகளந்தரத்தினில்
பந்துபோலெழக் கொன்று - பின்னுமநேகர்
மெலிவாலிறந்துரத்த-நதியெங்குமோடும்படி
வெற்றிகொண்டாயே இன்று

ச. கொண்டநீதந்தையர்-முன்வந்தையோகுலாவி
கொஞ்சியவர் பரவசம் - அடையும்படி
கண்டிதமாகவுன்பிர-சண்டவுத்தண்டவீரங்
களைச்சொல்லாயென்ன தாமசம்

ரு. வாசவனுக்குப்பேரன் - கேசவனுக்குநன்
மருகனெனவுஞ் சிறந்தாய் - மேலுந்திரிலோக
பூசிதகாம்பீர-ராஜசிம்மகிரீடிக்குப்
புதல்வனெனவும் பிறந்தாய்

சு. தனுசாஸ்திரமுதலான-சாஸ்திரங்களனைத்துஞ்
சம்பூர்ணமாகப் படித்தாய் - தேவருமபி
மனைவிடவீரரெவ-ரெனத்துதித்துக்கொண்டாடி
மதிக்கவிற்கையிற் பிடித்தாய்

எ. பிடித்தவுனைமானிட-ரடித்துக்கொல்லஅந்த
பிர்ம்மதேவன்முன் னாலே - நினைத்தமைத்தப்
படிக்குநடந்துபோச்சு-துடித்தழுதார்மீதில்நான்
பழிசொல்வதினி மேலே

அ. நல்லதுன்வீரமும்-வல்லமையுந்துணிவும்
நாடரும்புஜ பலமும் - ஜெயசிங்கம்போல்
மல்லிடவந்தவீரரெல்லவர்கள்பலமும்
வன்படையுஞ் சகலமும்

கூ. போகவழிகொண்டுதான்-போனுலுமையையோ
புனிததர்ம்ம பூபதி - செய்ததர்மம்
ஆகிலுமுன்றனை-போகாமல்காக்கொண்ணு
தாஅதற்குநேர்ந்ததோ அவதி

ய. மாதாபிதாசெய்தது-மக்களைக்காக்குமென்ற
வார்த்தையும்பொய் தானே-மெய்யாயிருந்தால்
ஏதேனுமொருதர்ம்மம்-பாதுகாவாதாஉன்னை
யென்னென்றுசொல் வேனே

யக. எதைச்சொல்லியென்ன-நான்பதைத்தழுதென்ன
மகனேநான்கொடிய பாவி - ஆகையினலே
பொதுநிற்குந்தெய்வங்கூட-சதிசெய்ததினல்விட்டுப்
போச்சுதப்பாவுன் ஞவி

யஉ. மணிமாலனைக்கொன்ற-பெரியதந்தைமுதலா
மன்னர்கோடானு கோடி - பேரிருந்தும்
துணைவராமுனைத்-தனித்தேருடனனுப்பத்
துணிந்தாய்மகனே வாடி

௰௩. அவர்களையும்வெறுக்க-விதியில்லைத்துணைவந்த
அனைவர்களையுந் தடுத்துப் - பாவமீதென்
றெவர்களும்பழித்திட-அவனிவேந்தரிற்கோடி
யினர்கள்படை யெடுத்து

௰௪. சிறுபிள்ளையாகிய-ஒருவில்லாளிமேலமர்
செய்ததென்ன கோலம் - புவியின்மேல்
இறைமையாகவிளங்க-மனுசொன்னசாஸ்திரத்துக்
கின்றேவினச காலம்

௰௫. சதிசெய்துகொன்றஇந்த-பதிதரையல்லால்யாரைத்
தானேவதுநீ யோது -மகனேயுன்னை
எதிரில்லாச்சமரினுக்-கனுப்பிப்பறிகொடுத்த
யெங்கட்கிந்தமண் மீது

௰௬. உற்றபதியேன்ஊரேன்-உயர்செல்வமேன்இன்பமேன்
ஊக்கமேனிது பொய்யோ - சண்டைதானேன்
வெற்றியேன்வீரமேன்-விபவமேன்தெய்வத்தின்
விரதமேனை யையோ

௰௭. பனியைவெல்லுஞ்சூரியன்போல்-பகைவர்குலத்தைநாசப்
படுத்திப்பின்ன நேகம்-வீரரையெல்லாம்
முனைபங்கஞ்செய்தநின்-முகத்தைக்காட்டாமற்சென்றாய்
முறையுடன்சுவர்க்க லோகம்

௰௮. பற்றிவயிறெரிந்து-பதைக்கவிடுத்தாயேயப்
பாஉன்னன்பெங்கே போச்சு - உலகமெங்கும்
பெற்றமனம்பித்தென்றும்-பிள்ளைமனங்கல்லென்றும்
பேசியதுமெய் யாச்சு

௰௯. தேட்டமாந்துவாரகையிற்-பிறந்துவில்வீரனுக்குத்
தேவியாயுனையீன் றேனே-ஐயையோபெருங்
கோட்டையிற்பிறந்தாலும்-போட்டபுள்ளியிற்சற்றும்
குறையாதென்பதுமெய் தானே

உ௰. அரசேயருந்தவமே-யாருயிரேசெல்வமே
யமுதேயருஞ்செம் பொன்னே-எனையையையோ
கரையில்லாதத்துயர்க்-கடலிற்றள்ளிச்சுவர்க்கங்
காணச்சென்றாயேயபி மன்னே

## அழுதவர்களைக் கிருஷ்ணன் அமர்த்தி, அருச்சுனனை யோர் சோலையி லழைத்துப்போய்ச் சிவனுநானு மொன்று என்னைப் பூசைசெய்யெனல்.

விருத்தம் சஅ.

மருவியிவ்வாறழுதசுபத்திரைக்குமற்ற
வர்க்குமாலிதவுரைத்தோர்மலர்ச்சோலைக்குள்
அருச்சுனனைக்கூட்டிப்போயுன்பூசைக்கிங்
கானபொருளில்லையெனைச்சிவனுளண்ணித்
தீரமொடுபூசித்தாற்சிவனுக்கேற்குஞ்
சிவன்வேறுநான்வேறன்றப்பாநாங்கள்
இருவர்களுமொருருவேயென்றுன்னெஞ்சி
லெண்ணென்றுனெனைப்பூசைபண்ணென்றுனே.

ஙச. தரு-இராகம்-காபி-சாப்புதாளம்.

பல்லவி.

எனைப்பூசைசெய்யர்ச்சுனு - சிவனுக்கேற்கும்
எனைப்பூசைசெய்யர்ச்சுனு.

அநுபல்லவி.

மனதிலக்கடவுளாய் மதித்துநீசேவித்து
மாட்சிதருமந்திரபஞ் சாட்சரத்தைச்செபித்து
எனைப்

சரணங்கள்.

க. மாநன்னீர் அபிஷேகஞ் - செய்துபுட்ப
வகைகளிலே யனேகந்
தானமறிந்துநீ நிதானமுடனேசாற்றி
சம்போசங்கராவென்று சகஸ்த்ரநாமத்தைப்போற்றி
எனைப்

உ. அருமையாகவே லோகந் - தனிற்பிறந்த
அறிஞர்க்கில்லைசந் தேகம்
இருவுருவுமொன்றுய் இருப்பதைமதிக்க
இணையில்லாஆனந்தத் தினிலேமீகதிக்க
எனைப்

ங. குறியுடனீ நின்று - பார்த்திடிலக்
கோனுநானுமொன் றென்று
அறிவிலாரறியார்நம் பாதேயவர்கள்சொல்லை
அரனுக்குமெனக்குமோ ரணுவும்பேதமேஇல்லை
எனைப்

## அருச்சுனன் கிருஷ்ணனைச் சிவனாகப் பாவித்துப் பூசைசெய்தல்.

விருத்தம் ௪௧௬.

எந்தையுரைத்தென்னவயவங்கண்மீதி
 லிவ்விடத்திலின்னமலர்வைத்தோமென்று
சிந்தைதனிற்குறியாகவைத்திடந்தச்
 சிவன்மீதுகாண்பிப்பேனெனவேபார்த்தன்
விந்தைமுகமலர்ந்தன்னோனுரைத்தவாறே
 விதியாகச்சிவபூசைதனைப்புரிந்து
அந்திவண்ணவருள்புரியென்றவன்சீரைக்கொண்
 டாடினன்பரவசமாய்ப்பாடினனே.

௩௫௫ தரு-இராகம்-மோகனம்-சாப்புதாளம்.

பல்லவி.

அருள்செய்யிவ்வேளை - அடிமைசரண்
அடைந்தேனுன்றாளை.

அநுபல்லவி.

சாணம்புயசிவ சங்கரவாகர
அருள்

சரணங்கள்

௧. சகலபுங்கவ தோத்திரா - உக்கிரதிரிபுர
 தைத்தியாந்தக க்ஷாத்திரா
 மிகும்உன்னத காத்ரா மேருசாபசற்பாத்ரா
 தருசகசால சூத்ரா தாரியெனுந்திரிநேத்ரா
அருள்

௨. படிகரூப கோலா - கலவினோத
 பகவதியனு கூலா
 நடனபத விசாலா ஞானசின்மயசீலா
 கடினஜெபகபாலா காளகண்டத்ரிசூலா
அருள்

௩. ஞானசித் விலாசா - சகலலோக
 நாதகன்ம கேசா
 பானுகோடிப்பிரகாச புந்ததுரிதநாச
 தீனரட்சக நேச சித்ரக்கைலாசவாச
அருள்

## கிருஷ்ணன் தாரகனுக்குச் சிலசங்கதிசொன்னவுடன் அருச்சுனன் சொப்பனங்கண் டெழுதல்.

விருத்தம் ருய.

இந்தவகைசநற்றேத்திரஞ்செய்-யெழில்சேர்பார்த்தன்முன்னர்வந்து
தொந்தமுடனேவிளங்கிவிண்டு-துன்னுந்தர்ப்பைசயனத்திற்
சிந்தைமகிழ்ந்தேயிருத்திரித்ரை-செய்யென்றேதித்தன்பாகன்
அந்தமிகுந்தாரகனுடன்போ-யடுப்பான்சொல்லத்தொடுப்பானே.

---

விருத்தம் ருக.

சென்றகிருஷ்ணன்புட்பசயனத்திற்சேர்ந்து
தீரசாரதியுடனேநாளைப்பார்த்தன்
துன்றுசிந்துபூபதியைக்கொல்லாவிட்டாற்
றொடுவேன்யானுழியென்றுப்பார்த்தன்போரில்
வென்றிசெய்யாவிடில்யான்சங்கந்தொனிப்பேன்
வெம்படைதேருடனேநீவருவாயென்றும்
மன்கனிவாய்திறந்திரவைக்கழிக்கநல்ல
மனங்கொண்டான்கிரீடியுஞ்சொப்பனங்கண்டானே.

௩௬. தரு-இராகம்-பியாகடை-ரூபகதாளம்.

பல்லவி.

சொப்பனந்தர்ப்பைசயனத்திற்கண்டானே-கண்டபடிக்கந்தநல்ல
சுகுணகிரீடிதன்னினைவிற் கொண்டானே.

அநுபல்லவி.

ஒப்பில்லாதகிருஷ்ணன் வந்ததாகவும்
உடனேஅர்ச்சுனன் பணிந்ததாகவும்
அப்பொழுதுமாயன்வேண்டி-யதைக்கேளென்ற
தாகவுமிப்படியிவன் சொன்னதாகவும்

சொப்

சரணங்கள்.

௧. சயித்திரதன்றன்னைக்கொல்ல-வேணுமென்றுமால்
தன்னுடன்சொன்னது போதும் - அவன்
தனைக்கொல்வதரி-தென்றும்நாம்கயிலை
சார்வோமென்றது போதும்
நயத்துடனிரு-வருங்கயிலையை
நாடியேசேர்ந்தது போதும் - உயர்
நற்றவத்தோர்முனி-வர்களுந்துதிக்கும்
நாதத்தைக்கேட்டது போதும்

கயிலையீசனைத் தொழுததுபோலே
கனிந்தின்பக்கண்ணீர் சொரிந்ததுபோலே
அயிற்கண்ணுளுமை பங்கனீரிங்கே
அன்பால்வந்தகாரியஞ் சொல்லுமென்றுற்போலே

சொப்

உ. அதற்கிவருன்னம் பரல்-அசுராமாய்த்திட்டோம்
அரசருயிர்வாங்கத் தேடும் - பாணம்
அளித்திடுவாயெனத்-தொழுததாகவென்
ஐயன்கேட்டொன்றுைச் சாடும்
எதிரில்லாவில்லம்பை-யோர்தடாகத்தில்வைத்
திருக்கின்றேனெளி நீடும் -வில்
லிணைப்பாணத்திணைக்-கொண்டுவருவீர்கள்
என்றேபதிகிருபை நாடும்
சதுருடன்சொன்ன தாகத்தோற்றவே
தகும்வழியன்பர்காட் டியதாத்தோற்றவே
இதமுள்ளோர்சென்று பார்க்கும்போதக்கினி
யிணைக்கக்குஞ்சர்ப்பங் களைப்போற்றேற்றவே

சொப்

௩. அரவுகளல்ல-சாம்பமூர்த்திவில்
லாமென்றுதாமுள்ளங் தேர்ந்து - நீ
ராடியுருத்திர-செபஞ்செய்ததாகவல்
லரவத்தின்தோற்றம் பேர்ந்து
பருத்தசிலைபாண-மாகக்கண்டெடுத்துப்
பரமேசனிடஞ் சேர்ந்து - மிகு
பரிவாகவைத்துப்-பணிந்ததாகநற்
பாரவில்லினிட நேர்ந்து
ஒருபிரமசாரி யெடுத்துநாட்டி
உக்கிரமிகும்அம்பை யதிலேபூட்டித்
தெரிவிக்கத்தெளிந்தப் பிரமசாரியைச்
சேவித்ததாகநல் லன்பிணைக்காட்டி

சொப்

ச. அவன்காதினிலே-சந்திரசடாதரன்
அருமைகொள்பந்த்ரோப தேசம் - அங்
கருளொடுசெய்து-சத்துருக்களை
அப்பாநீதப்பாமல் நாசம்
எவருங்காணச்செய்-வாயென்றதாக
எழில்வில்லம்பைமலர் வாசம் - சூழ்ந்த
இனியதடாகத்திற்-சேர்த்துமாபதி
யிடஞ்சேர்ந்ததாவிசு வாசம்

தவிராமற்பார்த்தன் மாயன்மேற்கொண்டு
சாற்றியபுட்பத்தைச் சங்கரன்மேற்கண்டு
இவரோர்பொருளென் றறிந்தீசன்விடை
இனைப்பெற்றிட்டார்போ லின்பவமுதுண்டு
சொப்

---

விருத்தம் ருஉ.

கனவிற்கிரீடிகிருஷ்ணனொடு-கதிர்வெண்பிறைசூடியபரமன்
றனதுவிடைபெற்றெழில்மிகும்பா-சறைசேர்ந்தேகண்விழித்தபின்னர்
உனுதற்கெட்டாச்சிவபெருமா-னுபதேசித்தமந்திரமெல்லாம்
நினைவிற்கொளவப்பானருளை-நேர்ந்தான்கனிவுகூர்ந்தானே.

---

## பதினான்காநாட்போர்.

### தருமராஜன் அருச்சுனனைக்கண்டு உன்முகத்தில் ஏதுநயவிலாசமென அருச்சுனன் சொல்லுதல்.

விருத்தம் ருங.

பதினாலாநாளுதயத்தினிலேசத்ர
பதிதருமன்சித்ரமணிமண்டபத்தில்
மதிமிகுதம்பியர்புத்திரர்மன்னர்சூழ
மருவினனங்குநெடுமால்வந்தான்பின்
சதுர்பெறுபார்த்தனும்வந்தானவ்வேந்தந்த
தம்பிதனைப்பார்த்தின்றுன்முகத்திலேதிவ்
விதநயவிலாசமெனக்கிரீடியன்பில்
விறுவான்சொப்பனந்தான்கூறுவானே.

கஎ. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

இவர்மகிமைதானெல்லாம் - வேறென்னவென்கண்ணு - யென்றுமிருக்கும் [அண்ணு

அநுபல்லவி.

புவனங்களையெல்லாமோர் கவளமாகக்கொண்டிந்தப்
பூனையும்பால்குடிக்கு மோவெனவேமிருந்த
அவையடக்கத்துடனே ஆரோவெனவேர்சோலி
அறியார்போலிதோபார்க்கின் றாரேபுண்ணியசாலி
இவர்

சரணங்கள்

க. ஈசன்போற்றனையெண்ணிப்-பூசிக்கச்சொல்லித்தன்
இன்பவருளமுதை யூட்டியே - அன்பாய்
எனைக்கயிலைக்கழைத்துப்-போயவ்வீசன்மீதில்நான்
இங்கர்ச்சித்தமலரைக் காட்டியே

மாசகன்றிடச்செய்தார் நானவ்வுமாபதி
மலர்ப்பதச்சேவைகண்டு மகிழ்ந்துசெய்தேதுதி
ஆசீர்வாதமும்பூர்த்தி யாகப்பெற்றேனித்ததி
அறிந்திவ்வுதவிசெய்ய யார்நமக்கிங்கேகதி
இவர்

உ. அந்திவண்ணனெனுமென்-ஐயன்வாமபாகத்தில்
அமர்சித்ரமரகத வல்லி - உமை
யவளருட்சேவையுங்-காட்டிவஸ்துநிலையான்
அறியப்பலநியாயங்கள் சொல்லி
சிந்தித்தபேரெல்லாம் அளித்தோகோநமக்கிடு
செகத்திலாரெனும்படி செய்வித்தனந்தங்காடு
எந்தெந்தமலைகளோ சுற்றியேமிகநீடும்
இரவுமுழுதுநித்ரை யில்லாமற்பட்டார்பாடு
இவர்

௩. உததிநீருண்ணுமேகம்-உலகுய்யமழையைப்பெய்
துபகாரஞ்செய்குதுவிஸ் தாரம் - இந்த
உலகத்தாலோர்போதேனும்-ஒரெள்ளளவாகிலும்
உண்டோவதற்கோருப் காரம்
அதுபோல்நம்மையாள்வதல் லாமலும்விசுவாசம்
அடியேன்காணக்கூட்டிப்போய் அமைவித்தார்சிவநேசம்
விதியாயதனுவின்றென் வினைத்துயராகிநாசம்
விளங்குதென்முகத்தினில் வீரலட்சுமிவிலாசம்
இவர்

---

## கிருஷ்ணன் தருமனைப்பார்த்துச் செயம் உமக்கேயெனல்.

விருத்தம் ருச.

விஜயனுரைசெயத்தருமராசனந்த
வேணுகோபாலனைப்பார்த்தெங்களுக்கவ்
வசைகொள்மன்னன்செய்தவிடர்தீர்த்தாய்மாது
மானத்தைக்காத்தீரிப்போதுமிந்த
நிசவருளைக்காண்பித்தாய்முற்றுநீயே
நின்றுகாத்திடவேண்டுமென்னமாயன்
இசைத்தருமபூபதியேயிச்சந்தேக
மெனென்றுன்ஜெயமுனக்குத்தானென்றானே.

கூஅ. தரு-இராகம்-சஹானு-சாப்புதாளம்.

பல்லவி.

ஜெயமுனக்கேயதிப்பிரதாபா - வீர - சிம்மாசனதர்மபூபா.

அநுபல்லவி.

பயமேனுன்தம்பியை யறியுந்திரிலோகம்
பக்கத்துணைநானும் இருக்கயேன்சந்தேகம்
ஜெய

சரணங்கள்.

க. அருச்சுனன்மிகுங்கோபா வேசங்கொண்டுபொழியும்
அம்புமழையைப்பார்த்தால் அதிரும்அரன்விழியும்
பரிட்சைபார்ப்போமென்றெதிர் படுவோர்மண்டைகிழியும்
பார்க்கப்போருயின்றுபூ பாரம்பாதிகழியும்
ஜெய

உ. அமைசயித்ரதனுயிர் அகன்றுபோம்விண்மீது
அறிவாய்தம்பிசாக சத்தைநீயப்போது
எமன்பிடிக்கவும்பிள்ளை பிழைக்குமோபிழையாது
ஏகபத்னிவிரதனும் என்னுரைபிசகாது
ஜெய

ங. அலையும்வெள்ளாட்டிமேற்சன் னதம்வந்தாற்போற்கொழுத்து
ஆடிஞர்நேற்றின்றைக் காடிப்போகுங்கழுத்து
கிலிகொள்பாம்பைவிடுமா கிரிகொல்லாதிழுத்துக்
கிட்டுஞ்சிந்துபதிக்குக் கிழிந்துபோச்சுதெழுத்து
ஜெய

---

## துரோணர் தன்சேனையை யூகமாகவகுத்தல்.

விருத்தம் ருரு.

சக்ரதானிவ்வாறுசொல்லக்கேட்ட
தருமபூபதிமகிழ்ந்திராஜரோடுந்
திக்கதிரத்தேரேறிச்சென்றுன்மாயன்
செலுத்துமணித்தேர்மீதிற்பார்த்தனேறி
உக்ரகதாவீமனிளைஞர்கள்பார்வேந்தர்
ஒங்கியிருபால்வாமுச்சகங்கலங்கக்
கொக்கரித்துப்பிரளயாணமுகத்தில்வந்து
கொதித்திட்டான்வடவனல்போற்கதித்திட்டானே.

விருத்தம் ௫௬.

சிலைவிஜயனிந்தவகைகளத்தில்வந்து
ஜெயமிகுசேனாபதியால்வகுக்கப்பட்ட
தலைமைபெறுராஜமண்டலயூகத்தைச்
சார்ந்துகாலாக்கினிபோற்கொதித்துநின்றான்
வலிமருவுதுரோணர்சேனைகளையைந்து
வகையாகப்பிரித்துநெடுந்தூரமட்டும்
அலைகடல்போற்பரவநூன்முறைப்படிக்கங்
கமைத்திட்டார்கனயூகஞ்சமைத்திட்டாரே.

௩௯. தரு-இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

யூகஞ்செய்தாரே பரிந்து - மிகுந்தவந்த
யூகையார்சொல்வார் தெரிந்து.

அநுபல்லவி.

சாகரங்களேழுமிச் சகத்தினிலேபுரண்டு
தான்வந்தாப்போல்கௌரவ தளங்களாங்காரங்கொண்டு
வேகமுடன்வந்தோரை விதியாய்நிறுத்திநற்சீர்
மிகுத்தஉத்தண்டாண வீரதுரோணாச்சாரியார்
யூகஞ்

சரணங்கள்.

௧. இரதம்நாற்பதி னாயிரம் - மதம்பொழியும்
இயானையறுப தாயிரம் - அந்தரத்திற்பாய்
துரகங்கள்நூ றாயிரம் - பதாதிகள்
சொல்லும்பத்துநூ றாயிரம் - கணக்காய்ச்சேர்ந்து
சரியாயிந்தச்சேனையை மூன்றுயோசனைதூரம்
தங்கும்படிக்குத்தனு சாஸ்த்ரமுறைப்பிரகாரம்
அரிதாநிறுத்திச்சூசி காயூகம்செய்தன்னேரம்
அதற்குட்சயித்திரதனை அமைத்துச்செய்துகெம்பீரம்
பரிதிஅளித்த கன்னனையும் - புஜ
பலமிகும்அஸ்வத் தாமனையும் - தனு
பண்டிதனெனுங் கிருபனையும் - கன
பண்புறுசல்லிய ராஜனையும் - பூ
பதிபூரிசிராவெனுந் தீரனையும் - திணி
படர்விடசேனனுந் துரங்கனையுஞ் - சிந்து
பதிதேரைச்சூழவைத் துப்பினையும் - உப
பலஞ்செய்யச்சொல்லியெள் - ளத்தனையும்

திருகுவாமற்செய்து தென்றிசையெமனுங்கூட
திகைத்தந்ததிக்கைவிட்டுத் திசைதெரியாமலோட
அருச்சுனன்சொல்நடக்கு மாவென்றெல்லோரும்வாட
அந்தரவெளியெல்லாஞ் செந்தூட்படல்மூட

யூகஞ்

உ. விரிவாகச்செய்த கோர - சூசிகாயூக
மேற்கினிலொன்ற பார - பத்மவியூகம்
அரிதாகச்செய்து தீர - கிருதபன்மனை
அடல்காம்போஜனும் வீர - னையுமமைத்து
பாவியமற்றமூன்று பக்கத்திற்கடல்போலே
பதியமூன்றுவியூகஞ் சதிராய்ச்செய்தொருக்காலே
துரியனுடனேசில சுத்தவீரர்களாலே
சூழ்வித்ததனைக்காக்கச் சொல்லியேமென்மேலே
கருதுமிவையன்றி நல்லூரமும் - மிகு
கனமுங்கொள்யிந்த்ர சிந்தூரமும் - நாணுங்
கசங்களிருபத்தை யாயிரமும் - தேர்
களிலோர்முப்பதி னாயிரமும் - துர
கங்களினூற்பதி னாயிரமும் - புவி
கலங்கும்படைகள்நூ றாயிரமும் - ரண
கண்டகாறுப தாயிரமும் - இவ்வை
களையொன்றாச்சேர்த்தெழு சாகரமும்
மருவினைப்போலவ்வைந்து யூகத்தைச்சூழ்வாக
வளைத்தாராம்யூகமென்று வகுத்ததைக்காக்கயோக
விரததுன்மருடனை விடுத்துலோகாதிலோக
மிக்கத்துடிதுடித்து திக்கென்றுபற்றிவேக

யூகஞ்

௩. இசைவாகச்செய்த ஆறு - யூகத்தின்முன்னே
ஏழாம்யூகமாய் வேறு - யூகமமைத்து
திசைகலங்கிடச் சீறு - நாலுலட்சம்
திரளமைத்ததன் வீறு - கலேந்திடாமல்
நிசகிருதவர்மனுந்துச் சாதனனுந்தரித்து
நின்றதைக்காக்கத்தூசி நிலையில்வைத்தேபிரித்து
தசமுகத்தோருங்கண்டு தளர்ந்துகையைநெரித்து
தளாச்சேனைகளெல்லாம் தாவியார்ப்பரித்து
விஜயச்சக்கரங்க ளனேகம் - ஒளி
மேவுமுசுண்டிக ளனேகம் - சமர்
விளக்குங்கப்பணங்க ளனேகம் - விசை
மேவியகவண்க ளனேகம் - அயில்

வேலொடுமெழுக்க ளனேகம் - கன
வீரதோமரங்க ளனேகம் - சிரம்
விழவெட்டுமேவர்க ளனேகம் - மக
மேருபோற்சிலைக ளனேகம்
அசையக்கைகளிற்பத்தி ஐவர்சேனையைக்கொன்று
அருந்தநாய்நரிசட்கு விருந்துசெய்கிறோமென்று
நிசமிதுவெனக்கூற நிறைமுப்புரத்தையன்று
நீறெழக்காய்ந்தோன்போற் சிறிமுனையில்நின்று

யூகஞ்

---

## அருச்சுனன் சாத்தகியைப்பார்த்துத் தருமனைக் காவெனல்.

விருத்தம் ருஎ.

சினமாகவிந்தவகையைந்துயூகஞ்
செய்திரண்டுயூகமதைச்சூழச்செய்தே
கனமேருவெனநின்றார்விஜயனிந்தக்
கபடத்தைப்பார்த்துச்சாத்தகியைக்கூவி
இனமாகநான்சமர்க்குச்சென்றவேளை
யினிற்றுரோணரிங்குவந்துநமதுவேந்தன்
றனைநாடிப்பிடித்திடுவார்வேந்தைக்காத்துத்
தரியென்றானுனக்கெவர்கள்சரியென்றானே.

சஸ. தரு-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

தருமனைக்காக்கவேணும் - சாத்தகிமன்னா
தருமனைக்காக்கவேணும்.

அநுபல்லவி.

குருதுரோணரின்றுவேசங் கொண்டார்செய்குவார்மோசம்

தருமு

சரணங்கள்.

க. நீண்டயூகத்தினையா னிர்த்தூளிசெய்யச்சென்று
நிற்கும்வேளையிலிங்கே நெருங்குவாரவரின்று
தூண்டிற்காரனுக்கு மிதப்பிலேகண்ணென்று
சொல்வாரேநீயுமந்தச் சூட்சமறிந்துநின்று

தரும

உ. ஆரியக்கூத்தாடினுங் காரியத்திற்கண்வைத்து
அவர்வருவாரதை யறியாமல்நீபிரம்மித்து
கோரயுத்தத்தில்நின்றால் கொள்வோம்நாம்ஆபத்து
குறிப்பறிந்துன்வீரத்தைச் சரிப்படக்காண்பித்து

தரும

கூ. விடியுந்தனிலுமிவர் போராட்டமானல்பெரும்
வெற்றிகொள்வதெங்சேநாம் வீரர்களியாவரும்
அடிமேலடியடித்தால் அம்மிகூடநகரும்
அவ்வாறடித்தோட்டிச்சக் ராதிபர்க்குள்ளுயரும்
தரும

## அருச்சுனன் முதுகிட்டோடுந் துச்சாதனனைப் பழித்தல்.

விருத்தம் ருஅ.

விஜயனீதுரைத்துத்தர்மபூபதியை
வீமனையன்பொடுபணிந்து
விடைகொண்டுதனக்குச்சக்ராட்சகராய்
மேதகுமுத்தமோசாவோ
டிசைவுதார்மனும்பின்வரவில்லைவளைத்தி
ரேழுலகமுநடுங்கப்போய்
இமைக்குமுன்முதல்வியூகத்தினையழித்தங்
கெதிர்த்ததுன்முகன்சிலைமணித்தேர்
புஜபலமழியச்சரம்விடுத்தவரைப்
புவிமிசைப்புரண்டிடச்செய்யும்
பொழுதுதுச்சாதனன்கண்டுவந்து
போரிடவவன்வியூகத்தின்
கசமுதற்சேனையனைத்தையுங்கொன்றக்
காதகன்விருதழித்தவன்தே
கத்தினைத்துளைத்துப்புவிமிசையோடக்
கண்டெதிர்சென்றுகூறுவனே.

சுக. தரு-இராகம்-அடாணு-ஆதிதாளம்.

பல்லவி.

நில்லுநில்லடாதுச்சாதனு-ஓடாமற்சற்றே
நில்லுநில்லடாதுச்சாதனு.

அநுபல்லவி.

வில்லெங்கேபாணமெங்கே மின்னுங்கிரீடமெங்கே
வீரமெங்கேதேரெங்கே விருதுக்கொடிகளெங்கே
மல்லெங்கேமுழுவஞ்ச மனமெங்கேகனமெங்கே
மாச்சரியங்களுமெங்கே போச்சுதுநீசொல்லயிங்கே
நில்லு

சரணங்கள்.

க. அன்றுசபையில்யாயைச்-சூதாலெங்கள்செல்வம்
அனைத்தும்அபகரித்துக் கொண்டு-கூத்
தாடிச்சிந்துகள்பாடி-எங்களையொருத்ராண
மாகமதித்துமுறைபு ரண்டு

குன்றுப் படிக்குப்பல கோடிவசைகள்பேசிக்
கொக்குக்கண்மூடல்மீனைக் கொல்லவென்றெண்ணுமலேசி
என்றுமிந்தச்சிராய்த்தான் இருப்போமென்றுகைவிசி
என்னென்னவெளிதங்களோ சொன்னதெங்கேபோச்சுச்சீச்சி

நில்லு

உ. பாலையூதிக்குடிப்பார்-மோரையூதிக்குடிக்கும்
பதர்நீயுனைக்கொன்றுபூ பாரங்-தீரப்
பண்ணுவேன்வீமராஜன்-பௌரிகூதங்கெடுமென்று
பார்த்துத்தப்பிவிட்டேனிந் நேரம்
கொல்லாமல்நான்விட்டாலும் உனக்கென்னடபயன்கூடுங்
குடலறுபட்டநரி மடியாமலெங்கேயோடுங்
காலமுடிந்ததென்றுங் களையன்புடனேதேடுங்
கதையைக்கதையாயெண்ணுதே சிதையவதைத்துப்போடும்

நில்லு

ங. ஓடம்வண்டியில்வண்டி-யோடத்திலேறுமென்ற
உரையையெண்ணுமலனி யாயஞ்-செய்தீர்
உங்களுக்காகுமா-எப்படியாகுமாகா
தோர்போதெனுந்தெய்வச காயம்
வாடிநீயிப்படி யோடுங்கிலியைமேவி
வருந்தித்தவிப்பதிலும் வைத்திருப்பதேனுவி
பாடிக்கறக்கவேண்டும் பட்டிமாட்டண்டைக்கூவி
பாடாமற்கறந்தாற்பலன் கூடாதெதிரிற்பாவி

நில்லு

---

## அருச்சுனன் துரோணர் முகத்தைப்பார்த்துச் சயிந்தவனிடத்துச்செல்ல, விடை கொடுமெனல்.

விருத்தம் ருகூ.

தனஞ்சயனிவ்வாறுரைத்துப்பின்னுமத்துச்
சாதனன்மேலிரண்டுகணைவிடுக்கவன்னோன்
மனங்கலங்கித்துரோணர்மணித்தேர்க்குப்பின்னே
மறைந்தனனக்குருமுகத்தைப்பார்த்தன்பார்த்து
முனைந்தும்மோடெதிர்ப்பவராரையாவின்று
முப்பதுநாழிகைக்குள்ளேசிந்துபூபன்
பினுஞ்சிரத்தைத்துணித்துவரவேண்டுந்தாரும்
விடையென்றுன்செயவேண்டாந்தடையென்றுனே.

சஉ. தரு-இராகம்-ஆரபி-திரிபுடைதாளம்.

பல்லவி.

விடைதரவேணும்-ஐயா அன்பாய்-விடைதரவேணும்

அநுபல்லவி.

தடையில்லாமற்சயித் திரதன்றலைகொய்து
அடியேன்வரநீரும் ஆசீர்வாதஞ்செய்து
விடை

சரணங்கள்.

க. தாலமீதெங்களைத் தாங்குமிக்கண்ணனைத்
தந்தையாம்பாண்டுவைச் சாருமென்னண்ணனைச்
சீலங்கொளும்உம்மைநற் றெய்வத்தைப்போலெண்ணிச்
சிந்திக்கும்யானங்கே சோக்கிருபைபண்ணி
விடை

உ. வேதியரேயும்மை வென்றப்புறஞ்செல்ல
விண்ணோராலாகாதே வேறென்னநான்சொல்ல
ஆதலாவிச்சிறி யேன்சொன்னசொல்லை
அறிந்தும்பரிக்ஷிப்ப தாகாதுபொழுதில்லை
விடை

ங. நியாயமாச்சொல்கிறேன் செய்யவேண்டாஞ்சள்ளை
நானுமவ்வஸ்வத்தா மனைப்போலொருபிள்ளை
சேயின்மீதல்லவே செய்வதிக்ஷாத்திரஞ்
தேவரீருக்கெதிர் சிறியேனெம்மாத்திரம்
விடை

---

## அருச்சுனனைத் துரோணர்பார்த்து உன்னை விட்டுவிடுதல் முறையன்று போர்செய்து போவெனல்.

விருத்தம் கூ௰.

வீரனும்பார்த்தனிந்த-விதமுரைசெய்யத்துரோணா
சாரியர்கேட்டுமிக்க-சாந்தமாநகைத்துன்னோடு
போரிடாதனுப்பிவிட்டாற்-புரவலனென்னசொல்வான்
ஊரென்னசொல்லுமென்றே-யுன்னினன்பன்னினனே.

சங. தரு-இராகம்-காம்போதி-திரிபுடைதாளம்.

பல்லவி.

உன்னுடன்சண்டைநான்செய்யாமல்-ஒருக்காலும்விடலாமா

அநுபல்லவி.

தன்னிகரில்லாத தவஞ்செயுஞ்சற்சன
தாரகெம்பீரவு தாரங்கோளர்ச்சுன
உன்னுடன்

சரணங்கள்.

௧. இந்தயுக-மனைத்தையும்பேதித்
தின்றைக்குள்ளாகமென் மேலும்-அந்தச்
சிந்துபதிதலை-தனைக்கொய்துநல்ல
செய்ததைப்பெற்றுநீ நயப்பாயானாலும்
உன்னுடன்

௨. முந்துகுருவென்-றெண்ணிநீசொல்லும்
முறையிப்போதா ஆசாரி-பெற்ற
தந்தைதாயானவர்-வந்தமர்செய்து
தத்தளித்தபோதும்படு களத்திலேதொப்பாரி
உன்னுடன்

௩. வெம்புந்துரியோ-தனனுக்கனுமானம்
வீணுயுண்டாய்நெஞ்சந்தி கைக்கும்-மேலும்
நம்பினவனைக்கை-விடுத்தானென்றென்னை
நங்கஞ்சொல்லியிப்பா செங்குநகைக்கும்
உன்னுடன்

---

## அருச்சுனன் துரோணரையொருவகையாகவிட்டுநீங்கி எதிர்த்தவரோடு போர்செயல்.

விருத்தம் ௬௧.

குருசொல்லிச்சிலைவளைத்தானிவனும்வில்லைக்
குனித்துப்போர்செய்யும்போதையன்கிரீடி
திருமுகத்தைப்பார்த்துநீதாமசஞ்செய்யாதே
சிந்துபதியிருப்பதற்குமிதற்கும்நன்றுய்
இருபதுயோசனைதூரமிருக்குதென்ன
விவனவரையொருவகையாவிலக்கிவிட்டு
வருவதுகண்டெதிர்தடுக்கவந்தோர்தம்மை
வாட்டினனெமபுரத்துக்கோட்டினனே.

௬௪. தரு-இராகம்-ஆபி-ஆதிதாளம்.

பல்லவி.

சென்றுன்வீரதநஞ்சயன்-சிந்துபதியைவெல்ல-அந்திபடுமுன்கொல்லச்

அநுபல்லவி.

சென்றுன்வீரதநஞ்சயன் சிவனருளாலேமீறித்
தேவதேவன்விடுக்குந் திவ்வியரதத்திலேறி
குன்றுவுக்ரகாண்டீப கோதண்டத்தோடுவீறி
குருகுலமன்னரெல்லாம் வெருவிநடுங்கச்சீறி

குரூர வுக்ரவனு மக்கொடி நேர்பட
வீர விக்ரமகரிக் குலம் விரிட
கொடுமுடிவடகயி லாயங்குலுங்க
அடலரவிடருட னேயங்கொதுங்க
கூடியமாகட லேழுமதோகதி
யாக்கவனேக நராதிபர்மாய்வுறக்
குவலயங்கள்நீள்வேதை சொல்லித்துடிக்க
எவருமஞ்சிவேரோடும் புல்லைக்கடிக்கச்

சென்றான்

சரணங்கள்.

க. விருதுபெறுகாம்போஜன்-முதலாயனந்தவேந்தர்
வேகமாவந்து தடுத்து-நிற்கஅவர்மேல்
மேகம்போற்சரமழை-பெய்திதிசையைப்பின்னு
மேவாலோட விடுத்து-அப்பால்
குருசெய்பிரசண்டயூகத்-தருகில்நாடப்பல
கோடிவீரர்கள் கடுத்து-சக்ராயுதம்
குந்தமுசுண்டிபிண்டி-பாலமுதற்படையோர்
கோடிசுழற்றி விடுத்து-வேகமாகப்
பாவிவந்தோர்களைப் பருந்துகாக்கைகள்கூளி
பங்கிட்டுண்டுகளிக்கும் படிக்குச்செய்துநிர்த்தூளி
சரமொன்றால்கிருதவன்மன் தன்னைமூர்ச்சையாய்வீழ்த்திச்
சார்ந்துவந்தபட்டவர்த் தனரைவானுலகேற்றித்
தாவிநேரில்வந்த தேர்களழியவே
காவலாகநின்ற சேனையொழியவே
தடைசெயவரவ ருடனுயிர்துள்ளவே
அடலெமன்சமயமீ தெனவிரைகொள்ளவே
தந்திகள் தொந்த ரதங்கள் மதஞ்செறி
சந்துகம் நைந்து நெரிந்து மடிந்திடச்
சக்ரவாளகிரிவே ரறுந்தடியோடாட
முக்கியமாகியதன்தேர் அதிர்ந்திடிபோலோடச்

சென்றான்

உ. அடல்கொள்சுதாயுவந்து-தடுத்திவன்விடும்பாணம்
அனைத்துமறுத்தோர்கதை யெறிந்து-நிற்க
ஐயன்கண்டக்கதையை-தன்மார்பிலேற்றுக்கொள்ள
அவனிமேலவன்தலை தறிந்து-வீழ

திடம்பெறுபார்த்தனதி-சயமுற்றவன்மடிந்த
சேதியெம்பெருமானுற் றெரிந்து-கொண்டு
தியசுதிக்கணன்-சிரமற்றுவிழமூன்று
திவ்வியாஸ்திரங்களைச் சொரிந்து-பின்பு
தொடர்சதாயுநயுதாயு வென்னும்வீரரைமாட்டிச்
சுதராம்நிய்தாயு தீர்க்காயுவுயிரைவாட்டி
உடன்வருங்கலிங்காதிப னுடவன்யானைகளை
ஊழிக்கடல்போல்வந்து சூழுமச்சேனைகளை
உக்ரகோரவாய் வாஸ்திரந்தொடுத்து
மக்கிவாட வேகத்தொடுபடுத்து
உயிருடனொருவ ரிலாமறப்பதைத்து
அயர்வொடுவதைய வுலாவிச்சிதைத்து
உற்றெதிர் மொய்த்திடும் ஒட்டியர் பப்பரர்
கொச்சியர் குச்சரர் மச்சர்கள் பொப்பளர்
உயிரழிந்தவர்களுடல்கள் மண்மீதிற்றுடிக்க
செயமிருந்தனனென்றெவரும் விண்மீதிற்படிக்கச்
சென்றான்

௬. தேடிப்பலசேனாதி-பதிகளுடன்கம்பீர
தேசாதிபர்கள்பல கோடி-பேர்கள்
சிறந்தயெழுகடலும்-இரைந்துவந்தாற்போற்றங்கள்
சேனைகளுடன்வந்து நாடி-வீரம்
பாடவினைகைத்துத்தி-கந்தத்துடன்திரிலோகப்
பரப்பெல்லாம்பாணமே மூடிக்-கொள்ள
பத்துநூறுயிரம்-லட்சங்கோடிகள்விட்டுப்
பதறிவந்தோர்களெல்லாம் வாடி-அழிய
சாடிநடக்கும்போது விந்தானுவிந்தர்வந்து
தடுக்கஅவர்சிரத்தைச் சரமூன்றினாலரிந்து
நாடியபதினைந்து நாழிகைக்குள்நடித்து
நலங்கொளுமேழக்குரோணி தளங்கள்மாயமடித்து
நாகர்வாடமனிதர் வாடஅந்தர
லோகர்வாடமுனிவர் வாடசுந்தர
நளினமதனிலுறை பிரமனும்வாடவே
ஒளிவிடுமெதிகதிர் மறுகதிராடவே
நட்பறு பற்றலர் நற்சிரம் மற்புயம்
விற்கர மத்திரம் நிர்ப்பய கைக்கரி
நீண்டதேர்பரிகள்முற்றும் வெகுவாய்த்தறிந்து
மாண்டுபோயழியஅஸ்திர மழையாச்சொரிந்து
சென்றான்

## அருச்சுனன் தடாகமுண்டுபண்ணுதல்.

விருத்தம் சூஉ.

அமர்புரிந்துசெல்லுமொருபார்த்தன்கையா
லன்றுபதினைந்துநாழிகைக்குளிப்பார்
சுமைகழியமாண்டோர்க்குக்கணக்கேதத்தைச்
சொல்வோராரையனற்கிரீடியைப்பார்த்தப்போ
நமதுகுதிரைகள்களைகொண்டிருக்குதிங்கே
நன்னீருண்டாக்கித்தாவெனப்பார்த்தன்
சமரவருணாஸ்திரத்தைப்புவியின்மீதிற்
றூக்கினான்தடாகமொன்றுண்டாக்கினனே.

சரு. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

தடாகமொன்றுண்டாக்கினன் - பார்த்தனங்கே
தடாகமொன்றுண்டாக்கினன்.

அநுபல்லவி.

விடாதுதயமுதல் வேகமாப்பரிகள்செல்ல
விடுத்தவென்னையன்தண்ணீர் வேணுமென்றுசொல்லக்
கடாட்சமாகமுன்முக் கண்ணான்பாய்க்கொடுத்துக்
காத்தவருணாஸ்திரத்தைப் பார்த்தெடுத்துவிடுத்து
தடாக

சரணங்கள்.

க. நிருமித்துவிட்டவருணாஸ்திரம்சூதண நேரந் - தன்னிலந்த
நிலத்தினிற்பாய்ந்தங்கே - யொருயோசனை தூரம்
பாவிப்பறித்துநாலு பக்கமுங்கரைபெய்து
பாதாளகங்கைபுவி மீதாடிவரச்செய்து
ஒருமித்துவாவதி லுச்சிதம்பலகதிக்க
உம்பருங்கண்டுமதிக்க அம்புவியெல்லாந்துதிக்க
தடாக

உ. வெண்டாமரைசெந்-தாமரையொரு மிக்க - மலர்ந்துமணம்
விசிநன்றுய்ப்பத்து யோசனைபரி மளிக்க
அண்டாக்குவளைமல ரல்லிமலரரிய
ஆம்பலனந்தமல ரலர்ந்துபூத்துவிரிய
கண்டோரெல்லாந்திருப்பாற்-கடலிதுவெனக்கொண்டாடக்
கள்ளுண்டுவண்டுகள்பாடத் தெள்ளுமுனிவரும்நாடத்
தடாக

ங. அலைகடலினுமிது-நிலைகொளா தாழமென்னச் - சக்ரவாகங்கள்
அன்னங்கள்கின்னரங்கள்-வன்னவன்னமாய் மின்னக்
குலவுநரையான்நாரை கொக்குநீர்க்கோழிசூழக்
குலநீரமங்கையர்க் கூட்டங்கள்மிகவாழ
பலவிதமானசேல்கள் பருத்தெழும்விரால்கள்மேயப்
பண்புறும்வளேகள்தோய விண்முகில்கிழியப்பாயத்

தடாக

---

## துரியோதனன் அருச்சுனனால்மடிந்த தன்சேனையைக் கண்டு துரோணாச்சாரியனை வெறுத்துக் கொள்ளுதல்.

விருத்தம் - சுரு.

சூளமொன்றிவ்வாறமைத்தபின்பெண்ணையன்
குதிரைக்ட்குநீருத்திப்பார்த்தனோடு
விள்ங்குநீரைத்தானுமுண்டமைந்தான்
விசையாகத்துரியன்வந்துபதறிக்கண்ணால்
தளங்கள்மடிந்ததைச்சண்டைசெய்யத்தக்க
சமர்த்தில்லாக்கோலத்தைப்பார்த்தெரிந்து
களங்கடந்துகுருவிடம்போய்க்குறைகள்சொல்லிக்
கதித்திட்டான்அனலெனவேகொதித்திட்டானே.

சசு. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

உமக்காபல்லவோ-அன்பிருந்திந்தவேளை-உதவிசெய்யவேணுமையா

அநுபல்லவி.

சமர்க்குள்துரோணரேயின்றுர் சாபமவன்முன்குனியும்
தானுக்கனியாப்பழந் தடிகொண்டடித்தாகனியும்

உமக்

சரணங்கள்.

க. பிழைகள்வராமல்நாங்கள்-காக்கிறேமென்றவன்
பின்னாலேயேதேதோபி தற்றி - வீரம்
பேசுகிறாரவனைப்-பார்த்தால்நடுங்கியோட்டம்
பிடிக்கின்றூர்மானத்தைய கற்றி
முழுதுமிப்படிதானே-மோசஞ்செய்தாலெவனா
முக்கியமாநம்புவது நத்தி - இன்னம்
முகூர்த்தநேரத்திற்குள்ளே-மீந்தப்படையையும்நீர்
மூலமாக்கப்போறுன்வ ருத்தி

பொழுதுபோவதற்குள்ளே பூரித்திருக்குஞ்சிந்து
பூபனைக்கொன்றுநம்மையும் - புடைப்பான்கண்டிப்பாவந்து
அழுவதாருடனித்தை அன்பாய்நீசெப்படியும்
ஆனைக்குக்கோவணம் ஆராற்கட்டிமுடியும்
உமக்

௨. தெரிவைபெருவயிறு-கொண்டதையறிமற்
சீமந்தநாள்வைத்தாற் போலே-நீர்
செப்பியவஞ்சனை-யறியாமலுஞ்சொன்னேன்
சிந்துபூபதிக்கொருக் காலே
உரமாஅவனென்சொல்லை-நம்பிநம்மையசக்கு
வோர்களாரென்றுமென் மேலே-சூசி
யூகத்திலிருக்கின்றான்-அதைச்சேர்ந்தான்பார்த்தனீர்
உட்கைதந்திருப்பதி னாலே
காவேயும்மிடத்தில் வைத்துக்காலத்தைப்போக்கிக்
கன்றுகளெல்லாங்கூடி களம்பறித்தாற்போலாக்கிப்
பரவும்அண்டைவீட்டுச்சண்டை கண்ணுக்குக்குளிர்ச்சியென்று
பகர்வதுபோல்வேடிக்கை பார்க்கிறீர்கடக்கநின்று
உமக்

௩. தண்ணீரிலிறங்கினாற்-றவளைசடிக்குமென்று
தப்பித்துக்கொள்வதுவோகம் பீரம்-கொண்ட
சமர்த்தர்தப்பித்துக்கொள்ளார்-சண்டைசெய்தேகாட்டுவார்
தங்கள்பிரதாபவில்லின் வீரம்
மண்ணிலும்மைவிடவீரர்-யார்நீரைவர்மேல்
வைத்தஅன்பாவித்தனை தூரம்-வீணா
வந்ததுநெடுநாளா-நம்பினதற்குநானும்
மாற்கண்டதிந்தவுப க்ராரம்
கண்ணிலெண்ணெய்கரியா விட்டால்நான்என்செய்வது
காண்டீபனைப்போய்நானே கண்டிக்கிறேனிப்போது
உண்ணப்படையல்லாமல் வெல்லப்படையேயில்லை
உபசாரம்எந்தமட்டும் உரைத்துச்சொல்வதின்சொல்லை
உமக்

---

## துரோணர் துரியோதனனை நீயே அருச்சுனனோடு போர்செய்யப் போவெனல்.

விருத்தம் ௬௬௪.

துரியனிவைசொலக்கேட்டதுரோணரெற்குச்
சொன்னபடிஅவ்வீரர்பார்த்தனோடு

மருவாமற்காக்கின்றேன்மற்றோர்சொன்ன
வலியெங்கேசத்யமெங்கேமதமெங்கேதான்
ஒருநிமிஷம்நான்பிரிந்தால்வீமன்மற்றோர்
உபபலமாப்பார்த்தனுக்குச்செல்வாரப்பால்
திரிநேத்ரனுலுமிலேயிதுதான்வேளைச்
செல்லென்றன்சத்துருவைக்கொல்லென்றனே.

சஎ. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

நீதான்போனற்போகவேணுந்-துரியோதன - நெஞ்சுரங்கொண்டிந்தவேளை

அநுபல்லவி.

போதாதெங்கள்வீரங்கள் அவனுக்குமுன்னிடையும்
போருடன்தின்னுமாட்டுக்குப் -பொறுக்கிப்போட்டாஅடையும்
மீதாரண்டத்தகடு விதிர்விதித்துவெடிக்க
வேகத்தொடுவந்தவில் விஜயன்தனையடிக்க

நீதான்

சரணங்கள்.

க. இந்தப்புத்திவேண்டா-மென்றுகிளிக்குச்சொல்வ
தெனநான்பத்துவிதத்திலு ரைத்தும்-உன்றன்
தந்தைபீஷ்மர்கிருஷ்ண-மூர்த்திவிதுரர்மேலாம்
சாதுக்களெல்லாஞ்சொல்லிக்க ரைத்தும்
வெந்தபுண்ணிற்கோலிட்டாப்-போலெரிந்தெங்கள்சொல்லவ்
வேளையுன்காதுகளில் சற்றும்-ஏருமல்
நிந்தித்தந்தமகானு-பாவன்வில்லையொடிக்க
நீவம்புபேசியே முற்றும்
பொந்திப்பாத்துஷ்டர்செய்துர்ப் போதனையையந்நேரம்
பூசித்துக்கெட்டவரால் பொருந்தநின்றாய்கம்பீரம்
அந்திசந்தியும்நாங்கள் அடுத்துச்சொன்னவகையை
அறியாமற்றேடிக்கொண்டா யைவர்தங்கள்பகையைப்
பந்தமாஉனக்குறுதி படித்தோர்களெந்தவழி
பறந்தோடினர்அவரைப் பார்த்துநீசொல்லுபழி
வந்தியைப்பிள்ளைபெறச் சொல்கின்றாற்போலென்னைத்தேடி
வந்தாற்காரியமில்லை அந்தவிஜயனைநாடி

நீதான்

உ. அடருந்தேவர்களாலும்-அழியாதவில்லுமுக்ர
அசுவங்களுமிர தமும்-அனுமக்

கொடியுங்குறைவில்லாமற்-கொழிக்குந்தூணியுமீசன்
கொடுத்தநற்பாசுப தமும்
படியளந்தமாயனே-பார்கனுகவரவும்
பகாரும்பூசி தமும்-நித்திய
கடவுளர்பலபேர்கள்-கண்டுமகிழ்ந்துதந்த
கணக்கில்லாஅஸ்திரவி தமும்
உடையவர்நம்மிடத்தில் யாருமில்லையென்றும்
உரிமையாயவருடன் மருவிவாழலாமென்றும்
அடடாநான்தலையி லடித்துக்கொண்டுன்மீது
ஆயாசப்பட்டபோதெல்லாங் கேளாமலிப்போது
குடிமுழுகிப்போகுதென் றிப்போதென்னோடடித்துக்
கொண்டதாலென்னநானே குமிங்கித்துடிதுடித்து
மடம்பிடுங்கிக்கொண்டோடும் போதுநந்தவனத்துக்கு
வழியெங்கேகாட்டப்போறேன் முழுதுமென்னையொதுக்கு
நீதான்

௬. சுடுமக்கினியிற்பிறந்த-ராஜகன்னிகைகற்பின்
சுகுர்தத்தைரவை லேசம்-மனத்
திடைநினையாமலே-பங்கப்படுத்திச்செய்தீர்
இழிவானபரி யாசம்
மடமயிலங்கழுத-கண்ணீரென்னதண்ணீரா
வடிவாளதுபோகாது மோசம்-உன்றன்
குடிகுலமுன்னைச்சேர்ந்தோர்-குடிகுலமுங்கணத்திற்
கூண்டோடேமாளச்செய்யும் நாசம்
திடமில்லாமல்மாண்டஇச் சேனைக்கேயிந்தவேளை
ஜெகமுழுகிப்போச்சென்று செப்புகின்றாயேநானை
அடியோடழியப்போகு தேயந்தவேளைவந்து
ஆர்தான்சண்டைசெய்வார்கள் அவர்கள்முன்னேதுணிந்து
படிகொண்டமட்டுவரும் அதனமாயெங்கேதரும்
பானையிலிருந்தாற்றானே அகப்பைதனிலேவரும்
செடியிற்றலைனுழைக்குமிச் சேவகர்தம்மைநம்பிச்
செருக்கிமோசம்போகாதே அருச்சுனன்முன்தம்பி
நீதான்

---

## துரோணர் துரியோதனனுக்குக் கவசங்கொடுத்து அதன்பெருமை சொல்லல்.

விருத்தம் ௬௫.

விக்ரமஞ்சேர்குருமனத்தில்வெகுநாளாக
விதம்விதமாயிருந்தபலவெறுப்பையெல்லாம்

சக்கிஷத்தோடெடுத்தந்தத்துரியனுக்குக்
காட்டாதுபோற்காட்டியினிமேநேரும்
துக்கமதையுஞ்சொலியேயென்மேற்றோஷஞ்
சொலவேண்டாமென்றுரைத்துமகிமைபூண்ட
இக்கவசந்தருகின்றேனிதைத்தாங்கிப்போய்
இடியென்றான்சொன்னபடிமுடியென்றனே.

௯௮. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தக்கவசத்தையுனக்குநான்தருகிறேன்-ஈதென்னுலானவுபகாரம்

அநுபல்லவி.

அந்தச் சர்ப்பகேதனு
அப்பா துரியோதனு
இந்தக்

சரணங்கள்.

௧. பிரம்மதேவன்றரித்துப் பின்பவன்வெகுதவப்
பேறுகொளிந்த்ரனுக்குப் பிரியமாயுதவ
அம்மகவானதை யாங்கீரருக்குத்தொந்த
மாய்த்தரஅவரெனக் கனுக்கிரகிக்கவந்த
இந்தக்

௨. சுத்தவீராநேகர் சூழ்ந்துகொண்டஸ்த்ரமழை
சொரியினும்வாராது தரைமேலிதற்குப்பிழை
சத்தகுலபருவதங் கீளயும்பொடிக்குஞ்
சீளயாதக்னிமயமாய்த் தாவிவிழும்இடிக்கும்
இந்தக்

௩. பதறுமியமனிதைப் பார்த்தாலும்விலங்குவான்
பார்த்தனும்இன்றைக்குப் பயந்துளங்கலங்குவான்
இதராளிதைக்கண்ணலே திட்டுப்பார்ப்பாரோதெண்டன்
இடுவாரிவ்வகையான நெடியமகிமைகொண்ட
இந்தக்

---

## துரோணச்சாரியார் பாண்டவர்கள் சேனையோடெதிர்த்துப் பெருஞ்சண்டை செயல்.

விருத்தம் ௬௬.

மூடர்தமக்கரியகுருமுகுர்த்தமாய்வருந்தியன்முகமலர்ந்து
ஈடில்குருவருள்கவசந்தனைப்பூண்டுபோர்புரியவேகினன்பின்
தேடிநற்றன்மனைப்பிடிக்கத்துரோணர்நெடும்படைகளுடன்சென்றாங்கே
நீடுமன்னருமிவருமொன்றாகநேரிட்டார்போரிட்டாரே.

சக. ஓரடித்தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

போர்நடந்ததைக்கேளும்-அகோரமான
போர்நடந்ததைக்கேளும்.

அநுபல்லவி.

பார்புகழுந்தர்மபூ பதியைப்பிடிக்கமுந்தப்
பதறுந்துரோணருக்குப் பலமாகவேயநந்த
தேர்கரிபரிகாலாள் திரண்டுகடல்போல்வந்த
சேனைகளும்பாண்டவர் சேனைகளுமிருந்த
தீரத்துடனே நேர்ந்து-கொண்டபோது
சிலைகொண்டதுரோணர் சினந்து-திட்டத்துய்மன்றன்
தேரைவளைத்துக் கொள்ள-அவனுக்ரமாய்ச்
சிலையைவளைத்துக் கொண்டான்-இருவரும்போர்
திடமொடு புரிபொழு தடல்குருவவனெடுந் தேரை-ஒடித்துப்பின்னுந்
திணிபெறு சிலைமுறி தரவிரைவொடுசர தாரை-பொழிந்துநின்றார்
செருமுக முழுவது மடிபடஅவன்மிக மீறி-வாளினையேந்திச்
சினமுட னிருவிழி யனலெழவிசையொடு சீறிச்-குருவின்தேரின்
சித்திரப்புரவிகளை வெட்டித்தள்ளினான்
க்ஷத்திரியத்திறமையுற மிக்கத்துள்ளினான்
சிலனந்தவாளையொரு கணையாற்பொடித்தான்
தேடிவந்தகாளைநில மிசையேநடித்தான்
சீர்த்திகொள் சாத்தகி பார்த்திதை வேர்த்துடல்
ஆர்த்தடர் கூற்றென ஏற்றெதிர் தோற்றியே
தேரிலேகுதனுக்கும் இடந்தந்தேயவனுக்குமுன்பு
சாரும்வேதியருக்குந் துடங்குமிவனுக்கும்பின்பு
போர்

சரணங்கள்.

இருவருமெதிர்த்துக்கொண்டார்
எந்தைபின்புவரு மந்தத்தம்பிகுரு
இருவரும்
ஈடிலாதவாளி நாடியெடுத்துக்
கோடிகோடிவேக மாகவிடுத்து
இருவரும்
இகல்கொள்தனுசுழல-இலகு விழிசுழல
இரத மதுசுழல-இரவி மதிசுழல

சகன நிலைசுழல-கனக மலைசுழல
கடல்க ளவைசுழல-கமட முயிர்சுழல

இருவரும்

எண்டிசாதிபரும் அண்டரானவரும்
புண்டரீகமதி லண்டுவேதியனும்
இனியசித்தர்நய கருடகின்னரர்களும்
மனிதர்முக்கியபல மருவுபன்னகர்களும்
இதுவே யுத்தம் இதுவேவீரம்-இது கனம்
இதுவேஅஸ்தம் இதுவே தீரம்-இது மனம்
இதுசரிசரிசரி யெனக்கொண்டாடவே
எதிரெதிர்தலையறும் உடல்நின்றாடவே
இத்தல முற்று மெரிக்கு மனற்கணை
யைத்திக ழச்குரு பற்றி விடுத்திட
இமைப்பினிலவன்வரு ணாஸ்திரம்விட்டங்கதுபோக
அமைத்துலகினிற்கன கீர்த்திநிற்கும்படியாக

இருவரும்

இருவருமெதிர்த்துக்கொண்டார்-பாண்டவதளத்
திறைவர்இதனைக் கண்டார்
பரவியனேகர்கூடி சாத்தகிக்குப்
பலமாகவந்துநாடி நிற்பதைக்கண்டு
குருநெடும் வில்லைத்தொட்டுக்
கும்பாய்வந்தோர் வீரிட்டுக்
குமுங்கி மானங்கள்கெட்டுக்
குறைந்தோடும் படிவிட்டுத்
திரிநேத்ரன்போலோங்கியே நிற்கத்தருமன்
சிலைகைக்கையிற்றுங்கியே பிரசண்டமாகச்
சினமொடு பரவிய தனுதரு வெதிரினில் மேவி கடல்நீருண்ணும்
கனலென எரிபல கணைகளை விசையொடு தூவிக் கதிக்குஞ்சம
ரினில்முனி வெடுகுரு மினுமடல் பெறுகணை யேவி இருவர்களும்
முனைமுக முழுவது முறிபட வுரமொடு தாவி வீறும்வேளை
வேந்தன்வேதியன்கைச் சிலைதனைமுறித்தான்
சார்ந்தவேதியனுச் சிதைதநுவெடுத்தான்
வேந்தன்தேர்கொடிகுடை விழவெட்டியொடித்தான்
வேந்தன்வேறிரதத்தில் வியப்புடனடுத்தான்
மிகக்கடுத்த வுதிட்டிரன் தட்டாத வயிலொன்று
பகைமிகுத்து நினைத்துக் கிஷ்ணுப நமாவென்று

விடுக்கவந்தஅயில் பறந்துவரும்வேகத்தில்
நடுக்கவும்பர்கள்மெய் மறைந்தொடுங்கிமாகத்தில்
விழிகள்மூடவகல்-விண்டல மதுகரிய
அழிவிலாததிசை-அம்புவிநிலை தெரிய
விப்பிரதீபனிம் மாற்றத்தையோசித்து
நற்பிரதாபபிரம் மாஸ்திரத்தைப்பூசித்து
விடஇந்தஇரண்டும் போராடிநிலத்தில்விழ
தொடரன்புமிகுந்தபூ பாலன்சலத்தினொடு
மீறிவீரகு ரத்தினைமெத்தவுங்காட்டிக்
கோறவாளியேவக் குருஅஸ்திரம்பூட்டி
வில்லழிய மநுமுறைதேர்-தருமனுடையநல்
மல்லழிய வடலுயர்தேர்-முதலியகனமுள
விருதழித்தேஅவன்பிர்ம்மித்து நிலமுறவாட்டி
சூரமதித்தேப்சம்பிரசித்த செயமதுநாட்டி
மீறிய போதினி லோர்பதினயிர
மாமுடி மேவு நராதிபர் தாவவே
விக்கிரமத்தில் முக்கியமுற்றமாருதி
கொக்கரித்துமெய்த் திறத்தினோர்புறம்
விஞ்சியதம்பியர் மண்டலீகரொருபுறம்
செஞ்சிலைகொண்டிடு தந்த்ரவான்களொருபுறம்
விரைவாய்ப்புகுந்துபல சேனைகன்தமைவாட்டித்
தரைமேற்சிறந்ததனு வாளர்களையுமோட்டி
மெச்சிய திக்கினி - லுற்ற மதக்கரி
எட்டு மிகத்துயர்-முற்றி யிரைத்திட
மேருமலையுங்குலுங்க வேலைநிலையுங் கலங்க
வேதனுலகு மலங்க மேவுநமனும் விலங்க
விரிவாகவிப்படித் தருமன்படைத்தலைவருக்கும்
செருநாடியுற்றிடு குருகுலத்தலைவருக்கும்
போர்

---

## அருச்சுனன் கிருஷ்ணனைப்பார்த்து இத்துரியோதனன் என்னோடெத்தஞ்செயவந்த தேதெனல்.

விருத்தம் ௬௭.

சண்டையிவ்வாறுநடந்தபின்துரியன்
றன்கொண்டகவசத்தின்பலத்தால்

சமர்செயத்துணிந்துகுளத்தருகிருக்குந்
தனஞ்சயன்மீதினிலநந்த
மண்டலாதிபரைமகுடவர்த்தனரை
மற்றுமங்குள்ளவீரர்களை
வகையுடன்முன்னேயனுப்பவன்னோரை
வச்ரகண்டகனுங்கண்டெதிர்த்து
விண்டலைமுழுதும்வந்தவர்தலைகள்
மின்னியமகுடமும்பறக்க
விருதுதேர்கொடிகளழிந்துவந்தோர்கள்
வெந்தெரிந்தழிந்துபோம்போது
கண்டந்தத்துரியனெதிரினில்வந்து
கடுத்திடயிவன்சனார்த்தனனைக்
களிப்புடன்பார்த்தித்துசோகியென்னெதிற்
கதித்ததேதென்றுகூறுவனே.

௫௰. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

இவனேதின்றென்மேல் எதிர்த்துவந்ததுமெய்யா
எனக்குத்தெரியச்சொல்லும் ஐயா

அநுபல்லவி.

புவிமிசையிவன்தோன்றி இந்தமட்டும்வில்லைப்
போரினிலெடுத்தென்ற னேரில்வந்ததில்லை
இவனே

சரணங்கள்.

௧. இசையுமிந்தயுத்தத்தி லெனையையோவிவன்விழி
யினிற்பார்த்திருப்பானோ னென்சொல்வேன்வீண்பழி
பிச்கிவந்தானோவென்றென் பேர்சொன்னாலுங்கண்முழி
பிதுங்கிஓட்டப்பிடிப்பான் பதுங்கியோர்காதவழி
இவனே

௨. அருமையாகச்சண்டைசெய் தடியேனைவெல்லத்தினம்
ஆசையுண்டுவினாக வடுத்தேனானால்முனங்
கருடனைக்கண்டபாம்பாய்க் கட்டழிந்துபோய்மனங்
கலங்கியன்றுநித்ரையில் காண்பான்சிம்மசொப்பனம்
இவனே

௩. அடைவான்கில்லோதேரோ அபிலோவஸ்திரத்தால்பொடி
யாகாதகவசமோ வன்றியுஞ்சொன்னபடி
யிடர்செயும்அம்புகளோ விந்தவகையால்முடி
யேதோவோதிசய மிருக்குதில்லாவிடில்
இவனே

## துரியோதனனும், அருச்சுனனும், போர்செய்தல்.

விருத்தம் சுஅ.

இந்தவகைகேட்டிடபோர்த்தனைப்பார்த்தைய
னித்துரியன்குருவிடம்போயழுதுமோசம்
வந்ததெனக்கவசமொன்றுதந்தாரந்த
மதத்திலிங்குவந்தானென்னும்போது
வெந்தெரிந்ததுரியன்றன்வீரரோடும்
வேந்தரொடும்படைகளொடுமகன்றபூமி
அந்தரமுநடுங்கவந்தானிரண்டுபேரு
மடுத்திட்டார்கனசண்டைதொடுத்திட்டாரே.

ருக. தரு - இராகம் - கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

துரியோதனனுக்குந் - தனஞ்சயனுக்குமங்கே - தொடர்ந்துகொண்டதே [சண்டை

அநுபல்லவி.

விரிடமரமுரசு வெற்றிகொள்ரணபேரி
வீரசின்னங்காகளம் வெண்சங்கந்தாரைபூரி
பரவுமல்லரிகன்று பல்லியத்தோடனந்த
பட்டவர்த்தனர்சேனு பதிகளுஞ்சூழவந்த
துரியோ

சரணங்கள்.

க. வந்தபாதகன்வில்லை-வளைத்துக்ரமாமுகில்
வண்ணன்மேனி மீதும்-நிற்கும்
அந்தஅர்ச்சுனன்மீதும்-அசுவங்கள்மீதுங்கன
வனுமக்கொடியின் மீதும்
சந்தித்ததேர்மீதும்-தட்டாமற்படவெகு
சரங்களெடுத்துத் தொடுத்துப்-பின்னும்
வெந்தெரியுந்தன்மன-தெரிச்சல்தீரச்சில
வெங்கணைகளை விடுத்து
தந்த்ரமாயன்கரத்திற் சார்கோலிரண்டாய்போகத்
தறிக்கக்கண்டகிரீடிமுத் தலங்களும்பற்றிவேகப்
பந்திபந்தியாஒன்று பத்துநூறுஅநேக
பாணங்கள்விட்டான்யாருங் காணயிப்படியாக
துரியோ

உ. தக்கவிஜயனவன்-மீதில்விடுபாணமெல்லாம்
தவிடுபொடியா யுதிர்ந்து-போவதை
செக்கச்சிவந்தகண்க-ளாற்கண்டுதீப்பொறி
சிந்தக்கோப முதிர்ந்து

திக்செரிக்குஞ்சூரியாஸ்திரந்-தனைப்பூசித்துமந்த்ரஞ்
செபித்தவன்மீதி லெய்தான்-அத்தைப்
பக்கத்தில்நின்றஅஸ்வத்-தாமன்தெய்வாஸ்திரம்விட்டுப்
பக்குவமாகக் கொய்தான்
கக்ஷிஷமாகப்பார்த்தன் கண்டவன்துன்பங்கொள்ள
கணைவிட்டாளைதையந்தக் கசடனறுத்துத்தள்ள
மிக்கக்கிரீடிக்குமுன்பவ் வேந்தர்களெல்லாந்துள்ள
வெகுநேரமிந்தப்படி பகையுடன்வந்தகள்ளத்

துரியோ

௬. சிலக்கன்னன்கிருபன்-பூரிசிராவிட
சேனனஸ்வத் தாமன்-ரண
வீரசல்லியராஜன்-கலிங்கராஜன்சேதி
வேந்தன்சகுனி மாமன்
காரியமில்லாத்தம்பி-மார்கள்வேந்தரனேகர்
கனகத்தேரொரு கோடி-மத
வாரணமொருகோடி-பரிகளொருகோடிசே
வகரொருகோடி நாடி
வாரிபோலிருபுறம் மண்மறுகவேதாவி
வரக்குருவருள்செய்த கவசபலத்தால்மேவி
சிருயர்முடிமின்னச் செருக்கிக்கர்சித்துக்கூவிச்
சிந்தைக்கடுக்கம்விட்டு வந்தடர்கொடியபாவி
துரியோ

---

அருச்சுனன் கணைத்துத் தேர்மீதில்சாய கிருஷ்ணன் நீயேது கவசத்தைப் பார்த்துப் பயந்தாய்போலிருக்கின்றது அக்கவசம் உனக்கிந்திரன் கொடுத்த சத்தியால் பொடியாகுமெனல்.

விருத்தம் ௬௬.

வினயமோடிந்தவிதஞ்சமர்புரிந்த
விஜயனன்றளவறுகோடி
வேந்தரைக்கொன்றவருத்தத்தினுலும்
விபவவிக்ரமசௌந்தரிய
தநயன்மாண்டிரவுமுழுதுஞ்சோகத்தால்
தத்தளித்தலைந்ததினுலுஞ்
சமரகாண்டபத்தோடுதேர்மீதிற்
சாய்ந்தனனதனையென்னையன்

இனமொடுகண்டதேளிதமென்ன
எண்ணியேபாஞ்சசன்னியத்தை
எடுத்துவங்தெதிர்த்தகௌரவதளத்தோ
ரெவர்களுமூர்ச்சையாய்வீழ
சினமொடுவிஜயனெழுந்துமுன்னிற்கச்
சிந்தையினினைந்துபூரித்தான்
சிந்தித்தபடியேநடந்ததப்பார்த்தன்
திருமுகங்கண்டுகூறுவனே.



ருஉ. தரு-இராகம்-உசேனு-ஆதிதாளம்.

பல்லவி.

ஏன்கொண்டாய்சோகம்-அர்ச்சுனு
எங்கேயுன் விவேகம்

அநுபல்லவி.

மான்கொண்டசம்பு வுன்னெதிர்சிறந்து
வந்துதந்தஅஸ் திரத்தையுமறந்து
ஏன்

சரணங்கள்.

க. சயிந்தவ னெங்கே-நீஉரைத்த
சபதங்க ளெங்கே
நயங்கொண்டுநீ சண்டைபண்ணுமல்
நடுவில்நானிருப் பதையுமெண்ணுமல்
ஏன்

உ. சங்கையற நின்று-முத்
தலத்தையும் வென்று
எங்குஞ்சுத்தவீர னென்னும்பேரேற்று
இருக்கும்நீயிந்தக் கவசத்தைப்பார்த்து
ஏன்

௩. கையினிற் பிடிக்க-அபேத
கவசத்தைப் பொடிக்க
ஐயோவிந்த்ரனுனக் காய்நெடுத்துருக்க
மாய்த்தந்தசத்திவே லாயுதமிருக்க
ஏன்

## தருமராஜன் அருச்சுனனைப் பார்க்கச் சாத்தகியை அனுப்புதல்.

விருத்தம் எஎ.

சங்கேந்துமையனீதுரைத்தவ்வுக்ர
சத்திதனைத்தரவதனைப்பார்த்தன்தாங்கித்
துங்கமிகுமவ்வேலைத்தொழுதுவிட்டான்
துஷ்டனணிந்திடுகவசந்தூளியாகிப்
பங்கமுற்றுப்பறந்தானிவ்விருவர்சிந்து
பதிதனைத்தேடிச்சென்றாரங்கேதர்மன்
சங்கையுற்றுச்சாத்தகியைப்பார்த்துப்பார்த்தன்
தனைப்பார்த்துவாவென்றுசாற்றுவானே.

ருஈ. தரு-இராகம்-ஆநந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

அபஜெபமென்னமோ-வந்திருக்குதை-யறிந்துவாநீபோய் சாத்தகியே

அநுபல்லவி.

கபடநாடகசூத்ர கண்ணனேவண்மையாக
காக்கப்போயிருந்தும்அக் - காண்டீபனுக்குண்மையா
அபஜெய

சரணங்கள்.

க. ஜெயம்வந்திருக்குமானால் தேவதத்தமுன்னுந்
தேவதேவன்குறித்த திருச்சங்கநாதம்பின்னும்
நயமுடன்கேட்கவேணும் அப்போதில்லைதொல்லை
நமதுசந்தேகமற அவன்சங்கங்கேட்கவில்லை
அபஜெய

உ. குருசெய்தயூகமே யின்றுகபடயூகங்
கூடினசேனைகட்குத் தொகைகிடையாதமோகம்
பெருநெருப்புக்குண்டா ஈரமென்னதான்வீரம்
பெற்றோரானுலுமொரு பிசகுவருமிந்நேரம்
அபஜெய

ஙு. வில்லாளிகள்நாமே-யெனஎண்ணவேண்டாம்நேரே
வெகுபோங்குஞ்சுத்த வீரரிருக்கின்றாரே
கல்லாலெறிந்தவரை நெல்லாலாவதெரிந்து
கசக்காமல்விடுவாரோ வசைக்கிடமாய்ப்பரிந்து
அபஜெய

---

## சாத்தகி தருமனோடு அருச்சுனனுக்கு அபஜயம் வாராதெனல்.

விருத்தம் எக.

பொங்கமாமுடிகொள்தர்ம பூபதியிவ்வாறவ்வுத்
துங்கனுஞ்சாத்தகிக்குச் சொல்லவன்னோனகைத்துச்
செங்கனலினிற்புழுக்கள் சேருமாவென்னத்தன்மன்
சங்கைதீர்ந்திடப்பார்த்தன்சீர் சாற்றுவான்போற்றுவானே.

ருச. தரு-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

பார்த்தனுக்கபஜெயம்-வருமாவேன்சந்தேகப்-படுகிறீர்தர்மமூர்த்தி

அநுபல்லவி.

கீர்த்திகொள்ளென்னண்ணனே கிர்பைதப்பிக்கொதித்தாலும்
கிழக்கினில்வருஞ்சூரியன் வடக்கினிலுதித்தாலும்
பார்த்த

சரணங்கள்.

க. இந்தமன்னரோடின்னம்-இருக்கும்வீரர்களெல்லாம்
ஏகமுகமாயொரு கும்பு-கூடி-
வந்திடினும்அவரைப்-பாசுபதம்போல்வெல்ல
வருக்கம்வருக்கமாக
இருக்குதோர்கோடி யம்பு
பார்த்த

உ. முப்பத்துமூன்றுகோடி-தேவர்களும்அவ்வீரன்
முன்னக்கினிபோலேவந் தெரியும்-கோடி
அம்பினைச்சொரிந்தாலும்-என்னவிந்த்ரன்பட்டபா
டல்லால்நான்சொல்வானேன்
தேவரீர்க்குந் தெரியும்
பார்த்த

ங. என்னையும்மிடத்தில்-இருக்கும்படிக்கட்டளை
யிட்டுச்சொன்னான்காரியமென் மேலும்-அவன்
சொன்னத்தைக்கடந்துநான்-போனாலுங்காரியமென்ன
சுவர்க்கமத்தியபாதாளம்
ஒக்கவேபுரண் டாலும்
பார்த்த

---

## சாத்தகியாலடியுண்டு துச்சாதனன் குருவிடத்தில் வர அவரவனை நிந்தித்தல்.

விருத்தம்-எஉ.

சிலச்சாத்தகியுரைக்கத் தருமன்கேட்டுத்
திடத்தூய்மனிருக்கின்று னீபோய்பாரும்

மாலொடிருமைத்துனர்கள் க்ஷேமங்கண்டு
வரவேண்டுமெனவிடை தந்தனுப்பவன்னோன்
கோலமணித்தேர்மீதி லேறிச்செல்லக்
குருசெய்யூகத்துமுனை தனிலேயுக்ர
காலனெனமேவு க்ருதவன்மன்கண்டு
கடுத்திட்டான்சண்டைசெய்ய அடுத்திட்டானே.

---

விருத்தம்-எஙு.

அடுத்தக்ருதவன்மனை யங்கடித்துமூர்ச்சை
யாக்கிவருசலசந்தனலறப்போக்கித்
தடுத்ததுரோணனைவென்றுராஜராஜன்
றனையடக்கிவந்ததுச்சாதனன்காலோட்ட
மெடுக்கமணித்தேரையழித்தடிக்கும்போதி
லினியகுருவிடத்தினிற்போயடுத்தானந்தப்
படுக்காளிதன்னைப்பார்த்துன்னாலிந்தப்
பாடென்றுன்வந்ததுபோகேடென்றானே.

ருரு. தரு-இராகம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

உன்னாலேதானேஇம்-மகத்தானவிபரீத-முண்டாச்சுதுலகுக்கெல்லாம்

அநுபல்லவி.

மின்னார்முடிகொள்ளுந்துச் சாதனாவதைபட்டு
வெகுண்டோடிவருவானேன்-வீணாய்நீவெட்கங்கெட்டு
உன்னாலே

சரணங்கள்.

க. அந்தச்சகுனிமாமன்-றன்னைக்கொண்டுமாயச்சூ
தாடச்செய்தவர் நாட்டை-வீணாய்
அபகரித்துக்கொள்ளச்-செய்ததன்றியுஞ்செய்தாய்
ஐவர்முன்பல சேட்டை-இந்த
தந்திரஞ்சூதிந்திர-சாலமன்றியுமேலோர்
தாழ்ந்தோரென்றவிப காரந்-தன்னைச்
சற்றுஞ்நினைந்திடாமல்-வசைகளுஞ்சொன்னாய்ராஜ
சபையினிலவர்களந் நேரம்-மேவுங்
சந்தைக்குச்சரடேற-வெல்லாம்பலந்தானென்று
கருதிக்காலம்பார்த்துக்கொண்டி ருந்து-வந்து
முந்திமுகம்பாராமல்-முடுகிமூதண்டகோள
முகடுடையச்சண்டைசெய்து
திகைக்கின்றார்களே சண்டாளா
உன்னாலே

௨. அண்ணன்தூளியென்னுமுன்-நிர்த்தூளியென்றெழுந்த
தன்றிச்சோளப்பொறிபோற் றுள்ளி-முன்னம்
அரிவைதனைப்பங்கஞ்செய்தா-யப்போதேதேடிவைத்தா
யனைவருக்குந்தலைமாட்டுக் கொள்ளி-மேலும்
கண்ணைப்பிசைந்துகொண்டப்-புண்ணியஸ்த்ரீயமுதத்தைக்
கண்டைவரும்புவி மீது-வீரங்
காண்பியாமலாடு-கொழுப்பதிடையனுக்குக்
கனலாபமென்றெண்ணியப் போது-அவர்
பண்ணியபௌரிஷப்-படிக்குங்கள்நூறுபேரை
பார்த்திபராகஉபபலஞ்செய்ய வந்தோரை-இப்போ
நண்ணிவதைப்பதன்றி-நானென்செய்வேனென்னுவி
நடுங்கவென்னையும்வாட்டி
யடிக்கின்றூர் அடாபாவி
உன்னாலே

௩. மடிந்துபோனவர்போக-மற்றோரேனும்பிழைத்து
மண்மீதிலின்னங்கொஞ்ச காலம்-இருக்க
மனதிருந்தாலவர்கள்-பங்கைக்கொடுத்தொருச
மாதானஞ்செய்உண்டானு கூலம்-சும்மாக்
கடிந்தின்னம்பகைமுற்றிப்-போனாலவர்களொருக்
காலும்வாரார்களிந்த வழிக்கு-இரு
கண்கெட்டபின்புசூர்ய-நமஸ்காரஞ்செய்தல்போலாங்
காரியமப்பாலாரிந்தப் படிக்கு-நேர்வார்
இடங்கொடுத்தவர்களும்-நேரார்நான்சொன்னபடி
யிப்போதேபீஷ்மரோடு சொல்லி-முடி
திடங்கொண்டுசொன்னவாறே-முடிப்பானவ்வுத்தமனே
செழிக்கலாமிக்குலத்தை
யழிக்கவந்த எமனே
உன்னாலே

---

## முன்போன சாத்தகி வராமையால் தருமராஜன் வீமனை யனுப்ப, அவன் போதல்.

விருத்தம் எச.

சொன்னஅன்றுகுருதனக்குமறுமொழிசொல்லாடல்
துரோகிநடந்தானற்சாத்தகியம்பாலே
தன்னெதிரில்வந்தபலபேரைக்கொன்று
தடுத்ததுன்முகனையடித்தங்கோட்டிப்பார்த்தன்

முன்னனுகினனிங்கேகலங்குந்தர்ம
மூர்த்திவிபனைப்பார்த்துப்போனேனென்ன
சின்னபின்னமானுனேநீபோயங்கே
செறியென்றன்காரியத்தையறியென்றனே.

---

அ. திபதை-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

**கண்ணிகள்.**

க. விக்கிரமஜெயவீமா-நீசென்றுபார்த்தனே
மேகவண்ணனை இரண்டு-பேர்கள்
சக்ரரக்ஷகராச்சென்-றேனையிங்கிருந்தேகுஞ்
சாத்தகிதனைக் கண்டு

உ. இவரும்க்ஷேமந்தா-னென்றுநீசங்கத்தை
யங்கிருந்தே குறித்து-என்றன்
மெய்வருத்தத்தையும்-மனவருத்தத்தையும்
விலக்கிலுண்டு சமர்த்து

ங. என்றண்ணனுரைத்திட-மாருதிநமஸ்கரித்
தெழுந்துசிலசொல் உரைத்து-பின்பு
கனகத்தேர்மிசையேறிக்-கதையைத்தாங்கியெழு
கடலெனவே இரைத்து

ச. சுத்தவீரரனேகர்-சித்திரத்தேர்களுஞ்
சூழவிண்டல மீது-நிர்க்கும்
அத்தேவர்களும்பயந்-தலறத்துரோணர்யூகத்
தருகிற்செல்லும் போது

ரு. கலிங்காரியர்மச்சர்-கௌசலர்கொங்கணர்
கன்னடரோடு தெலுங்கர்-சினர்
மலேயாளர்மாளவர்-பப்பரர்யவனர்நல்
வயங்கொள்சோனகர் குலிங்கர்

சு. வந்துவளைந்துகொண்டார்-வளைந்தோர்கள்தலைகளை
வாளிக்கொன்றுத் தறித்து-தேகஞ்
சிந்துசிந்தாயற-அறுத்துத்தள்ளியப்பாற்
சென்றனேயார்ப் பரித்து

எ. விந்தன்விந்தானு-சுசர்மன்சுதர்ச்சினன்
வீறுகுண்டல மோடு-அநு
பந்ததீர்க்கலோசனன்-சித்திரசேனனென்னப்
பரவுநாமத்தோர் ஆகி

அ. விளங்குஞ்சுயோதனன்தம்பி-மார்களேழுபேர்கள்
வேந்தருடனே வந்து - வெரு
தளங்களுடனேவரும்-மாருதியைத்தடுத்துச்
சண்டைசெய்தார் முனைந்து

௯. அந்தயேழுபேரையுங்-கொன்றுவீரசொர்க்கம்
அடையும்படிக்குச் சேர்த்து-மன்னர்
சந்துபார்த்தோடவே-செல்லும்போதுதுரோணு
சாரியர்கண்ணுற் பார்த்து

௰. நில்லுநில்லும்வீமா-நில்லெனவேஅங்கே
நின்றவர்க் குபசாரம்-பல
சொல்லிக்குருவுடனே-சண்டைசெய்வதுநல்ல
துறையல்ல விந்நேரம்

௰௧. விடைதாருமெனஅவர்-கேளாமல்முன்வந்து
வில்லைவளைத்து மீறிச் - சுடர்
விடும்பலகணைகளைச்-சொரியவீமன்தேரை
விட்டிறங்கிச் சீறி

௰௨. வருங்கணைகளையெல்லாங்-கையால்விலக்கிக்கொண்டு
மனமறுகிடச் சென்று-நமது
சொருபத்தைக்காண்பியா-விடில்விடாரெனவே
சிந்தித்தெதிரில் நின்று

௰௩. ஐயரைத்தேரோடுந்-தூக்கிமேகமண்ட
லத்தைச்சேர வெறிந்து - இரு
கைகளைக்கொட்டினுன்-கண்டயாவர்களும்
கலங்கிநின்ருர் பயந்து

௰௪. அச்சுவேருணிவே-ருகிரதமுறிந்து
அங்கத்தின்எலும் பொடிந்து-மிக்கத்
தச்சுக்கெட்டுத்தடு-மாறினபின்பையர்
சலித்துநின்ருர் படிந்து

௰௫. வீமன்அப்பாற்சென்ருன்-செல்லும்போதுசில
வீரருடனே அரவக்-கொடி
மாமன்னன்பூரியென்-போன்வந்துதம்வில்லை
வளைத்துக்கொண்டு விரவ

௰௬. துரியோதனனையப்பூ-ரியையுமற்ருேர்களைத்
துணிசெய்துகளி கூர்ந்து - புவி
எரியவப்பாற்செல்லும்-போதுசாத்தகிதன்
இரதத்துடனே சேர்ந்து

௰எ. இருவருமகிழ்கொண்டு-கிருஷ்ணர்ச்சுனர்தேருக்
கிருபுறத்தினில் நாடி - நிற்க
நரநாராயண-ரிவர்களைக்கண்டுள்ளம்
நயந்தார்கள் கொண்டாடி

௰அ. அரியவீமன்அப்போது-சங்கத்தைப்பூரித்தான்
அண்டகோளம் வெடிக்க - பின்பு
இருவரும்பூரித்தார்-சங்கத்தைஉலகமீ
ரேழுந்நடுங்கித் துடிக்க

௰கூ. இந்தமுச்சங்கத்தின்-னோசைகேட்டுத்தருமன்
இதயக்கவலை நீங்கினான்-துணை
வந்தவீரரைப்பார்த்துத்-துரியோதனன்கலங்கி
வாடிமிகவும் ஏங்கினான்

உ௰. ஏங்கியசுயோதனன்-சேனைகளையெல்லாம்
இமைப்பொழுதினிற் பிரித்து - வெகு
பாங்குடன்விடவந்த-சேனைகள்கடல்போலே
படர்ந்தங்கே ஆர்ப்பரித்து

உக. அதைக்கண்டஇம்மூன்று-வீரர்மேருவசைந்
தாடவண்டம் அதிரப் - பூமி
கொதித்துடைபடஅஷ்ட-கஜங்களும்வீரிட்டுக்
கூவிமிகவும் பெதிரக்

உஉ. கடல்களேழுங்கலங்கக்-கண்கள்தீப்பொறிகொட்டக்
கடுங்கோபத்தொடு சென்றார்-சென்ற
திடங்கொள்வீரருக்குள்-வீமனுங்கன்னனுஞ்
சிலையைவளைத்து நின்றார்

உஙு. நின்றுபோராடும்போ-தவ்வீமன்கன்னனை
நிர்த்தூளிபட அடித்து-வென்ற
தன்றியும்பாகனை-அறுத்துத்தள்ளித்தேரை
அலக்கலக்கா ஒடித்து

உச. காலோட்டமாஓடச்-செய்தான்பின்னுமக்
கன்னன்வேறிர தத்தில் - ஏறி
வாலாட்டவந்தானப்-போதுமுதுகிட்டோட
வளைத்துக்கொண்டான் வெற்றி

உரு. பனிரண்டுதரமிந்த-வாறவனையபலப்
படுத்தினான்ஜெயமி குந்து - பின்னுந்
தினகரன்மகன்வெட்க-மில்லாமலேவேறு
தேரிலேறி வந்து

உசு. எதிர்த்திடவாவா-கன்னுவென்றுசிலகணை
ஏவிமூர்ச்சை ஆக்கி - அவன்
ரதத்தைப்பரியைக்கொடிக்-குடையைப்பாகனைவில்லை
இமைப்பினிலடித்துப் போக்கி

உஎ. உக்ரகதாவீம-னிற்கக்கன்னன்அஞ்சி
யோடினன்கெட மானம்-அந்தச்
சக்கிரதரனுமறி-வானோஅவன்தன்சஞ்
சலஞ்சொல்லஓர் நிதானம்

உஅ. முனைஅதிரதசிரேஷ்ட-கன்னராஜனிப்படி
முதுகிட்டோடி அசைந்து-வாமுன்
அனியாயந்தனைப்பார்த்துப்-பாவிமுழுகிப்போச்சென்
றழுதுகைகளைப் பிசைந்து

உகூ. துன்முகன்துச்சயன்-விஜயன்செயன்மாவி
துன்மதனொடு சித்ரன்-வீர
துன்மருடணன்சித்தி-ராக்கன்சாருசித்திரன்
துதிசித்திரசரன் விசித்ரன்

௩0. சித்திராயுதன்சத்துரு-ஜெயன்வாமசத்துரு
சித்திரபானு விகர்னன்-கண
சித்திரவன்மன்சுதே-சனன்மதனனத்துரு
திறல்மித்ர சம்பன்னன்

௩க. என்னும்பிரபலநாம-முடையதம்பிமாரை
எமபடர்களைப் போலே-பாவி
முன்னிறந்தோரையு-மெண்ணுமல்விடவந்து
முழுகினர்ஒருக் காலே

௩உ. முடிகிவில்லைவளைத்து-மொய்க்கக்காலருத்திர
மூர்த்திபோலிசை கோர-வீமன்
படபடெனப்பல்லைக்-கடித்துப்பார்த்துப்பதரும்
பதிரர்எல்லாஞ் சோர

௩௩. சூரங்கொண்டவர்கள்தேர்-குடைகொடிபரிபாகன்
தொட்டவிற்கள் அழிந்து-போக
ஓரிமைப்பினிற்செய்து-பின்னுமவர்கள்மார்பில்
ஒப்பிலாக்கணை சொரிந்து

௩ச. சல்லடைக்கண்களாய்த்-துளைத்துத்தம்பிவிகர்ன்னன்
தவிரமற்றோர் சிரத்தை-அந்த
வில்லாளிகன்னன்கண்ணுற்-காணஅறுத்துத்தள்ள
மேவினர்எம புரத்தை

௩௫. அந்தவிகர்ன்னனைப்-பார்த்துநீநல்லவன்
ஆகையால்உன் னோடு-நான்
சந்தித்துச்சமர்செய்வ-தில்லைநீபோய்உன்றன்
தாய்தந்தையுடன் கூடு

௩௬. என்றவனுரைத்திட-என்இனத்தோரெல்லாம்
இறந்துநானொரு பாவி-இங்கே
நின்றென்னபலனென்று-எடுவில்லையென்றவன்
நிர்ப்பயமாய்த் தாவி

௩௭. தனுவளைத்தவன்வெகு-சரங்களைவீமன்மேல்
தாக்கினான்அது கண்டு-வீமன்
முனையம்பாலவன்கையின்-மூரிவில்லைஇரண்டாய்
முறித்துக்கோபங் கொண்டு

௩௮. கன்னன்கண்டுபதைக்கக்-காதகத்தமையனுங்
கதறிகண்ணீர் சொரியப்-பெற்ற
அன்னைகாந்தாரிக்கும்-அரசனுக்கும்வயி
றனலாய்ப்பற்றி எரிய

௩௯. சண்டைசெய்அவ்விகர்னன்-தலைதனையோர்அர்த்த
சந்திரபாணத்தி னாலே-அறுத்
தண்டத்திலேற்றிவிட்-டாக்ரமித்துநின்றான்
அங்கேபொன்மலை போலே

---

## வீமனால் இறந்த தம்பிமார்களைக்கண்டு, துரியோதனன் கன்னனை வெறுத்துக்கொள்ளல்.

விருத்தம் ௭௫.

தம்பியர்களிந்தவகையிருபத்தெண்மர்
தனபதிகள்நரபதிகள்சார்ந்தவேந்தர்
கும்புகும்பாய்மதவீமன்கையினாலே
குவிந்தபிணக்கூட்டத்தைக்கொடியோன்கண்டு
வெம்பிரத்தக்கண்ணீர்விட்டழுதுநொந்து
வேதனையால்கன்னன்றனைபார்த்தெழக்கு
அம்புவியிலாரிருந்தும்பலன்என்னென்றே
அடுக்கின்றான்குறைகள்சொல்லத்தொடுக்கின்றானே.

ருசு. தரு-இராகம்-முகாரி-சாப்புதாளம்.

பல்லவி.

ஆரிருந்துமெனக்கென்ன-பலன்ஐயையோகன்னு-அதிகயவிற்பன்னு

அநுபல்லவி.

பாரிலிதுவரைக்கும் பட்டதுவீணுப்போச்சு
பார்ப்போருக்கெல்லாம்பரி யாசத்துக்கிடம்ஆச்சு
ஆரிருந்து

சரணங்கள்.

க. தலையாம்அர்ச்சுனன்வந்து சாடினன்வெகுபேரை
தாளாமல்அதற்கேநான் சலித்துவிட்டேனிப்போரை
மலைகள்போலேயிருபத் தெட்டுதம்பிமாரை
வயிறெரியஎரிய வார்த்துவிட்டேனேதாரை
ஆரிருந்து

உ. மாணும்பீமார்ச்சுனரால் மன்னர்கூட்டங்களழி
வதைப்பார்த்தெனக்கையையோ பிதுங்கிப்போய்க்கண்முழி
துரோணரிடத்திற்போனுல் அவரென்மேற்றுனேபழி
சொல்லிஇவ்வேளைதன்னில் மெல்லவிட்டாரேவழி
ஆரிருந்து

ங. இந்தமட்டும்வந்தவன் எவரையுமினிகொடி
யினிற்சேர்த்துவிடுவான் எமபுரத்தினிற்குடி
சந்தேகமில்லைநானிச் சமர்க்காயெடுத்தஅடி
தப்பிஎன்வாழ்வுக்கே தாட்சிவந்ததிப்படி
ஆரிருந்து

---

## வீமசேனனும், கன்னனும், போர்செய்தல்.

விருத்தம் எசு.

வென்றிபெறுவேந்தனுரைசெய்யக்கன்னன்
வெகுண்டுநானேகிஅந்தவீமன்றன்னை
கொன்றுனதுபகைதீரச்செய் வேனென்றுற்
கூடாமற்போகுமெனில்அவன்பாணத்தால்
இன்றிறப்பேனிவ்விரண்டிலொன்றுன்கண்ணுல்
இமைப்போதிற்காண்பாயென்றியம்பிப்பார்த்துச்
சென்றுகண்டான்வீமனுங்கண்டானிவ்வீரர்
சீறினர்சமர்புரியவீறினுரே.

ருஎ. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-சாப்புதாளம்.

பல்லவி.

மாருதிக்கும்கன்னனுக்கும்-பின்னுமகோரமாக- வாய்த்துக்கொண்டதேசண்[டை

அநுபல்லவி.

வாரிதிக்குமதிகமாய் வந்தபடையைக்கொன்ற
வச்சிரகதையைத்தாங்கி மனஞ்சலியாமல்நின்ற
மாரு

சரணங்கள்.

க. வில்லைவளைத்துக்கன்னன்-வீமன்தேரழிய
வேகமாய்ச்சிலகணை தெறித்தான்-அந்த
வீமன்வேறுதேரி-லேறிவந்தான்கணை
விட்டந்ததேரையும் முறித்தான்-கண்டு
பல்லைநெறநெறென்று-கடித்துவீமனொரு
பருங்கதையைச்சுழட்டி விடுத்தான்-கன்னன்
பரிகச்சைக்கொடியொடு-தேரும்வில்லுமழியப்
பார்த்துநடுங்கியோட்டம் எடுத்தான்-பின்னும்
மல்லிடஅக்கன்னன் வேறுதேரிலேற
வச்சிரகண்டகவீமன் மறலிபோலேவீற
மெல்லப்பதுங்கிக்கன்னன் கணைமழைபோற்றூற
வீமன்அந்தக்கணையை விலக்கிப்புலிபோற்சீற
வெற்பையொத்துயர் திக்கிலுற்றக
ரிக்குலங்களும் உட்கமற்புய
மாரு

உ. கோரமானசில-கணைகளைக்கன்னன்வெங்
கோபத்துடன்எடுத்துத் துள்ளி-வீமன்
கோலமணிமார்பினிற்-பாயவிடுத்தான்அதைக்
கோதிப்போடவன்முறித்துத் தள்ளி-நேரே
சேருங்கன்னன்தேர்மேல்-வாளொடுபரிசைதாங்கிச்
சிங்கத்தைப்போலவீமன் பாயக்-கன்னன்
திருடன்போல்தேர்தட்டிற்-குள்ளேபதுங்கிக்கொண்டு
திகைதிகைத்தான்கைகால் ஓயப்-பார்த்து
காரியமில்லையோடிப் போனுனென்றுநெடிய
கதிர்வாள்கட்கத்துடனே திரும்பும்போதிற்கொடிய
சூரியன்மகன்தேர்மே லுற்றுவீமனிடியத்
துலங்கிவஞ்சித்துக்கணை தொடுத்தான்கட்கமொடிய
தொட்டமர்ப்படை யற்றுசிற்பய
முற்றசித்த மிகுத்தவிக்ரம
மாரு

௬. அசந்துநித்திரைசெய்யும்-போதுவந்துகழுத்தை
அறுப்பதுபோற்கன்னன்றன் சீரை-அணு
வளவும்நினைத்திடாமற்-பின்னேநின்றுவாளை
அறுத்தானென்சொல்வதவன் பேரைக்-கன
மிசைந்தவீமனிரா-யுதனுகியும்முதுகிட்
டோடாமல்நின்றுதந் தோளைத்-தட்டி
எதிரில்நிற்கக்கன்னன்-அறிந்துசிலபாணத்தை
யெடுத்துத்தொடுத்தான்அந்த வேளை-மிக்க
கதிக்கவீமன்முன்னே தன்கதையாலறையக்
கலங்கிமாண்டபெருங் கஜப்பிணத்தில்மறைய
விசையொடுகன்னன்அவ் வீமன்பலங்குறைய
விடுங்கணைகள்பிணங்கள் மீதிலெல்லாநிறைய
வெற்றியற்று மிகுந்ததுற்பல
முற்றிளைத்திடு மட்டுமிப்படி

மாரு

---

## சாத்தகியும், பூரிசிராவும், அலம்புதன் முதலானவர்கள் போர்செய்தல்.

விருத்தம் எஎ.

சூதினால்வென்றுமதவீமன்முன்னே
துறைகெட்டகன்னன்அடுத்தடடாவீமா
போதுமென்றுசொல்லாமற்சோறுதின்று
போத்தெனத்திரியநீஆண்பிள்ளையல்லால்
வாதுசெய்போர்க்காண்பிள்ளையாவென்றேசி
வயிற்றிலேவில்நுனியைஊன்றிக்கொண்டு
தீதுவருமிங்கிருந்தால்போடாவென்று
சிறினன்வீமனுளமாறினனே.

௧. திபதை-இராகம்-அசாவேரி-சாப்புதாளம்

**கண்ணிகள்.**

௧. கனவீமன்துயருடன் ஏங்கிப்-போட்ட
கதையைக்கத்தலத்தினில் தாங்கி-மிகத்
தினமுங்குறையும்பிறை போலே-தேய்ந்து
திகைத்துச்சென்றனேஅப் பாலே

உ. அன்பார்சாத்தகியென்னுங் காளை-மீதில்
அனந்தம்வீரர்களந்த வேளை-நேர்ந்து
தென்பாய்வில்லைவளைத்துக் குதித்தார்-வெகு
தீரத்துடனேவந் தெதிர்த்தார்

ங. எதிர்த்தோரைக்கண்ணாலே நோக்கிச்-சிரித்
தெற்றிவில்வில்நாணைத் தூக்கி-ஈசன்
கொதித்துமுப்புரத்தைதீ றன்று-செய்த
கோலம்போலவரெதிர் நின்று

ச. பதறியகாலுடன் கரங்கள்-தோள்கள்
பளபளென்றொளிர்முடிச் சிரங்கள்-கண்டச்
சதைகள்தொந்திகளொடு மிடைகள்-மூளைகள்
சாருங்குடல்கள்பெருந் தொடைகள்

ரு. தொடரெலும்புகள் முதலாக-எல்லாந்
துண்டந்துண்டங்களாய்ப் போக-ரத்த
மடுக்களுமுண்டாக வாளி-சில
மாட்டிச்செய்தானேகிர்த் தூளி

சு. அப்பாலேநடக்கும் போது-கோர
அலம்புதனென்பவன் மோது-போர்க்கு
வெப்புலியெனவரக் கண்டு-மகா
வீரஆவேசத்தைக் கொண்டு

எ. அவன்விடும்பாணத்தைப் போக்கி-அவன்
அங்கமெல்லாங்காயம் ஆக்கி-வில்லைக்
கவனப்பரித்தேரையுங் கொய்து-அந்தக்
காதகனையுமோடச் செய்து

அ. துரோணரமைத்தயூ கத்தை-அழிக்கச்
சுருக்கமாய்ச்செலும்போதில் அத்தைப்-பார்த்து
மாணும்பூரிசிராவங் கடுத்து-வந்த
மாயன்றம்பிமேற்கடு கடுத்து

கூ. சரங்களையொருமிக்கச் சொரிந்து-நிற்கச்
சாத்தகியவனைக்கண் டெரிந்து-கணை
சொரிந்திட்டிருவர்வில்லுந் தேரும்-அழிந்து
தூளானபின்பிரு வோரும்

ம. வாளுங்கேடகத்தையும் அத்தங்-களில்
வாங்கிக்கொண்டுசெய்தார் யுத்தம்-அந்த
வேளைசாத்தகிக்குக்கை இளைத்து-வாளை
விடாதயர்ந்தான்கோபங் கிளைத்து

ரு௧. தரைமேற்சாத்தகியைத் தள்ளி-அவன்
தனக்கமைந்தவாத்தாற் றுள்ளி-காலால்
உரமுடன்மிதித்துக்கொண் டார்த்து-வெட்ட
ஓங்குமுன்னேமாயன் பார்த்து

ரு௨. அருச்சுனாஉன்சிஷ ஞவி-தன்னை
அழிக்கப்போகின்றான்பார் பாவி-அவன்
செருக்கொழித்திவனுக்கோர் தீங்கு-வாராமற்
செய்வதேஉனக்குநற் பாங்கு

ரு௩. எனச்சொன்னமாயனைக் கிரீடி-பார்த்து
இரண்டுவீரர்கள்போ ராடி-ஒரு
வனுக்குவருமானல் அபாயம்-நானெவ்
வகையால்செய்திடலாஞ் சகாயம்

ரு௪. அல்லல்செய்தானும்வி ரோதம்-நேரிட்
டானுமிப்படியென்றன் னீதஞ்-செய்து
வெல்லுவதுவோஉப காரம்-இந்த
வேந்தர்கள்முன்னேஇன் னேரம்

ரு௫. இவர்கள்விடும்பாணத்தைத் தடுக்க-நானும்
எதிரெதிர்பாணங்கள் தொடுக்க-இங்கே
அவதியில்லையாஎன்றன் கோனே-எனக்கும்
அமர்செய்பரெண்டுமை தானே

ரு௬. என்றல்லல்களையெல்லாஞ் சேர்த்துச்-சொன்ன
எழில்விஜயன்முகத்தைப் பார்த்து-சொல்வேன்
ஒன்றுகேளென்றான்அவ் வேதன்-தன்னை
உதவியருக்மணிச மேதன்

---

சாத்தகியைப் பூரிசிராவெட்ட ஓங்குமுன் தெரிந்துகிருஷ்ண மூர்த்திசொல்ல, அருச்சுன னவனது வலதுகையைத் துணிசெய அவன் அருச்சுனனை நிந்தித்தல்.

விருத்தம் எஅ.

பலகோடிவீரர்வீளேந்திடினுமச்சப்
    பட்டுமனங்கலங்காமற்கொன்றுதீர்த்து
மெலியாமல்அடுத்தோரைகாப்போனுக்கே
    விஜயனெனும்பெயருளதப்போர்நீகொண்டும்
வலிவில்லார்போற்பேசுகின்றாயென்ன
    வாளியொன்றால்அவன்வலக்கைதனைத்தறித்தான்
சலமொடந்தப்பூரிசிராவந்திவன்முன்
    சந்தித்தான்பலவகையாசிந்தித்தானே.

ருஅ. தரு-இராகம்-காபி-ஆதிதாளம்.

பல்லவி.

ஆர்சொன்னமதியிது-என்கையையேன்அனி-யாயமாகஅறுத்தாய்

அநுபல்லவி.

பார்மீதில்மிகுஜெயம் படைத்த அர்ச்சுனஉனக்கு
ஆர்சொன்ன

சரணங்கள்.

க. அவனும்நானும்வயிரத் தோடு-சமர்
ஆடிச்சாகின்றோம்எங்கள் பாடு
கவலைஉனக்குவந்த தென்னநடுவில்மண்டை
கலங்கஅடித்துன்னோடு கலந்துசேய்தேனுசண்டை
ஆர்சொன்ன

உ. தியசுனர்கள்கூட வைய-மீதிற்
செயத்தகாதபோர்நீ செய்ய
மாயனுத்தரமா மறையோன்கற்பித்ததா
வாட்டமில்உன்னப்பன் பாட்டன்போதித்ததா
ஆர்சொன்ன

ங. தருமராஜனுடனே பிறந்து-அதர்மந்
தனக்குள்ளாய்உன்னைநீ மறந்து
விருதுபெற்றத்ரிலோக விஜயனென்றோதுங்கீர்த்தி
வீணுய்ப்போகச்செய்தாயே வெகுநேத்திவெகுநேத்தி
ஆர்சொன்ன

---

## நிந்தித்த பூரிசிராவைப்பார்த்து அருச்சுனன் சில நீதிவார்த்தைசொல்லுதல்.

விருத்தம் எகூ.

வலக்கையழிந்திவ்வாறுவசனித்தபூரிசிரா
　　வதனந்தன்னை
சிலைக்குளுயர்காண்டீபத்திறல்விஜயன்பார்த்துநான்
　　செய்தகார்யம்
நலத்திலுயர்வீரர்செயுங் காரியந்தானுனக்குமிக
　　நலந்தான்செய்தேன்
சலித்தேதோசொலவந்தாய்உனதேமிக்கச்
　　சமர்த்தென்றுன்கோபத்தைஅமர்த்தென்றானே.

ருகூ. தரு-இராகம்-பேகடா-ஆதிதாளம்.

பல்லவி.

என்னமோவெகுநியாயஞ் சொல்லவந்தாய்வாய்விட்டு
இதுபோதும்போதுங் கடைகட்டு

அநுபல்லவி.

மன்னும்பூரிசிராவேஉன் மணிமுடிமேல்விடாமல்
வலக்கைமேல் வாளிவிட்ட
வகைக்குநீஎன்மீதில்
மிகச்சந்தோஷப் படாமல்
என்ன

சரணங்கள்.

க. அடைவாளனக்குப்படைத்-துணைவந்தவனைவெட்ட
அடுத்தஉன்கையைநானிந் நேரம்
அறுத்துத்தள்ளினேன்அத-னாலென்னபழிபாவம்
அறிந்துநான்செய்ததேவிவ காரம்
இடர்தீர்க்கவெவர்க்காக-வந்தாயோஅவர்க்கல்லோ
இருக்கவேணும்வெகு தூரம்
இவனம்மைநம்பினவன்-கைவிடலாகாதென்று
ஏற்றவுனையிப்போது
காத்தளிக்கத் தக்கபாரம்
என்ன

உ. அன்னைமுலைப்பால்மணம்-இன்னம்வாயில்மாறுத
அபிமனென்னும்பிள்ளையெம் மாத்ரம்
அவனொருத்தன்மேலந்தப்-புவனவேந்தர்களெல்லாம்
அடர்ந்துக்கொண்டையையோ க்ஷாத்ரம்
என்னென்னமோகாட்டி-எதிர்த்தணுவுமிரக்கம்
இல்லாமற்கொன்றபோதுன் னேத்ரம்
இரண்டுங்குளிரப்பார்த்-திருந்தாயேஅப்பொழு
தெங்கேபோச்சுதிப்போ
திங்கேசொன்னதர்ம சாஸ்த்ரம்
என்ன

ங. கபடஞ்செய்தீர்அனேகம்-இருக்கட்டுங்கன்னனேற்றுங்
கள்ளன்போல்பின்வந்துபீமன் வில்லை
கண்டித்தானப்படி-நாங்கள்அதர்மச்சண்டை
கனவிலுங்கூடசெய்த தில்லை
அபலமாங்குருவி-தின்றுபாழாகுமா
அடிவூற்றினுற்பழுத்த கொல்லை
அதுபோலுன்சண்டையால்-எங்கள்படைக்கொருதீங்
கண்டிடுமோபோபோவென்னைக்
கண்டுநீ கடித்துபல்லை
என்ன

## சாத்தகி பூரிசிராவின்தலையைத் துணிக்கக்கண்ட கன்னன் வீமனை இழிவுபடுத்திப்பேச அவனை அருச்சுனன் மிகவும் பழித்தல்.

விருத்தம் அழ.

பார்த்தனிவைசொலப் பூரிசிராவாளின்மேற்
பாய்ந்திறக்கப்போம்போது கண்டுவாளாற்
சாத்தகியன்னோன்சிரத்தைத்துணித்தான்பின்பு
தண்டவீமனைக்கன்னனிழிவாய்ச்சொன்ன
வார்த்தைகேட்டுபசரிப்பான்கிரீடிமாயன்
மணித்தேருநினைத்தபடிவந்ததப்பாற்
கூர்த்ததனஞ்செயன்கன்னன்பாற்போய்வீரங்
கூறுவானவனைமிகத்தூறுவானே.

கூஙி. தரு-இராகம்-தோடி-திரிபுடைதாளம்.

பல்லவி.

நீயென்னசொன்னாலுந்தா னென்ன-அதனாலேஒரு
நிகிருஷ்டமாளன் அண்ணனுக்குகன்ன.

அநுபல்லவி.

மாயனைப்பார்த்தனைக்கொல் வேனென்றேஅமையும்
வாயினாற்பந்தல் இட்டுக்கொண்டுதிரியும்
நீயென்ன

சரணங்கள்.

க. விருதழிந்தெத்தனை-விசைநீயுள்ளங்கால்
வெள்ளெலும்புந்தேய பல்லைக்-காட்டி
வெட்கங்கெட்டோடின-யப்போதுமுன்னைஅவ்
வீரனிகழ்ந்தோத இல்லை
ஒருதரம்நீசெய்த-மோசத்தினாலந்த
உத்தமன்றோற்றிட்டான் காணும்-செய்யும்
உத்தத்தில்யார்க்குங்-கெலிப்புந்தோர்ப்பும்பொது
உலகினில்என்றெண்ண வேணும்
அருமையாஅப்படி யெண்ணாதுன்தூர்க்குணம்
அனைத்துங்காண்பித்து நிந்தித்தாயே அக்கணம்
ஒருக்காலுஞ்சுரைப்பூவிற் குற்றிடுமோமணம்
ஊர்க்குருவிபருந் தாமாநீயோர்த்ரணம்
நீயென்ன

உ. நவசகுணத்தோகடு-மினியநற்சன்மார்க்க
நடையுமுடையோர் கண்டு-மனம்

சுயக்கவேபூஜித்-தாலுந்தூஷித்தாலும்
நன்மைதீமைஅதி லுண்டு
அவர்கள்பார்த்திவன்-யோக்கியனென்றால்
அதுதான்சாம்பிராச்ய பட்டம்-யோக்கியன்
அல்லவென்றாலது-தானீனம்நொந்ததற்
காகப்படவேணுங் கஷ்டம்
குவலயத்தி னிற்பிறந்தக்ஷேத்திரம்
குணங்குறிகுலங் கொற்றங்கோத்திரம்
எவ்வளவுமில்லை மேலும்சூத்திரம்
என்பதுமில்லாத ஏழைநீயெம்மாத்திரம்
நீயென்ன

௩. பாலனும்அபி-மன்பின்வந்துநேற்றுப்
பதுங்கியொடித்தாய் வில்லை-சந்து
பார்த்துஇன்றும்பின்னே-நின்றிந்தமகானு
பாவனைச்செய்தாய் தொல்லை
சீலங்கொள்வீரர்கள்-இப்படிசெய்வாரா
செய்யார்எப்போதும்இவ் வீர்யம்-சண்டை
செய்யத்தெரியாமற்-றிகைத்தோடும்வஞ்சத்
திருடர்செய்வார்கள்இக் கார்யம்
தாலமீதுன்பிள்ளை தனைக்கொல்லக்கச்சை
தான்கட்டிக்கொண்டேன் தவிர்த்திடவனிச்சை
ஏலவேவெட்கம்கெட் டாலும்நீபொச்சை
இட்டாற்போதுமென்று விட்டாயேலச்சை
நீயென்ன

---

## அருச்சுனன் சயித்ரதனைத் தேடிப்போவதைத் துரியோதனன்தெரிந்து கன்னனை நீ இவ்வேளை அருச்சுனனோடு போர்செய்தால் நலமாமெனல்.

விருத்தம் ௮௧.

விஜயனுரைத்தக் கன்னன்மீதுவாளி
விடஅவனுமிவன்மீதில்அனந்தம்வாளி
இசையவிடப்பார்த்தனெரிந்தவன்கைவில்லை
இரதத்தைதூளாக்கித்துரத்திவிட்டுத்
திசைகலங்கச்சயித்ரதனைத்தேடிச்செல்லுந்
திறல்கண்டசுயோதனன்கன்னனைப்பார்த்துன்றும்
பசையடையவேணுமிவ்வேளையிற்போய்ச்சண்டை
பண்ணென்றான்நீதானென்கண்ணென்றானே.

சுக. தரு-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவேளைகொஞ்சம் பால்மாறினுற்குடி-யேமுழுகிப்போய்விடும்

அநுபல்லவி.

அந்தமிருந்தகன்று அலைச்சலே இல்லைநாளை
அனைத்தும்இதற்குள்ளேதான் ஆகிப்போச்சுதுவேளை
இந்த

சரணங்கள்.

க. படைக்கும்ஒருத்தன்நல்ல-கொடைக்கும்ஒருத்தனென்று
பகரும்பேர்கொண்டாய்மண் மீது-அந்தப்
படிக்கேஇந்தமட்டும்-மனவஞ்சனையில்லாமல்
பாடுபட்டுத்தீர்த்தாய்அப் போது
மடித்துவெகுஜெனத்தைப் பார்த்தன்அச்சிந்துபதி
மருங்கிற்சேர்ந்தான்அவனை வதைத்துசெய்யவ்விதி
அடிக்கடிநானுன்னைச் செய்யவேண்டுமோதுதி
ஆனுலுமாகாவிட் டாலும்நீதான்கதி
இந்த

உ. புனிதசத்யத்துக்கில்லாப்-பிள்ளைதுக்கத்திற்கழப்
போகுதாவென்பாரது போலே-இந்தப்
பூண்டெல்லாம்நாளைக்கு-இருந்தென்னஇல்லாமற்றுன்
போயென்னஎனக்குமென் மேலே
வினவிஇவர்களையொன்ருய்ச் சேர்த்துனக்குதோற்றும்
விதஞ்செய்யவர்கள்சும்மா இருப்பாராஇதைப்பார்த்தும்
இனியபலனில்லைநீ இன்னேரமடங்காத்தும்
இனியொருநாழிகைக்குள் இருக்குதெல்லாக்கூத்தும்
இந்த

௩. இன்புடன்நான்சொன்ன-படிக்குநீசளையாமல்
எதிர்த்தால்சயித்ரதனே வாழ்வான்-நீ
இட்டவிளக்காயிருந்-திடுமப்பால்பார்த்தனவன்
எதிரில்தீக்குழிதனில் வீழ்வான்
பின்புநால்வருமாள்வார் அடங்கிப்போகுங்கொட்டம்
பிரபஞ்சத்தையெல்லாம்நானே ஆளப்போகிறேன்பட்டம்
அன்பாய்அப்போதுநீ யார்க்குமிட்டதேசட்டம்
ஆருமாதலாற்சற்றே அடையவேணுங்கஷ்டம்
இந்த

## கன்னன் துரியோதனனைப்பார்த்து நான்போய் அருச்சுனனுடனே எதிர்த்துபோர்செய்வேனெனல்.

விருத்தம் அ௨.

அரவகேதனனிவ்வாறுள்-ளஞ்சியங்குரைத்ததெல்லாம்
விரிபுகழ்கன்னன்கேட்டு-வேந்தர்கள்வேந்தேயுன்பால்
ஒருவனுனிருக்கஇந்த-யோசனையேனென்றேங்கும்
எரியெனகொதித்துதேர்மேல்-ஏறுவான்கூறுவானே.

சுஉ. தரு-இராகம்-பிலஹரி-சாப்புதாளம்.

பல்லவி.

நானிருக்கஇந்த-யோசனையேன்மகா-ராஜராஜேந்திரனே

அநுபல்லவி.

மானிலத்தில்உன்னால் வெகுபெருமைகள்கொண்டு
மன்னவனானதன்றி உன்அன்னத்தையுமுண்டு
நானிருக்க

சரணங்கள்.

க. வீமனோடமர்புரிந் தின்றுவந்ததத்தை
விலக்கிக்கொண்டுபட்டேன் வெகுவிதமாஅவஸ்த்தை
பாமரன்அவன்வார திருந்தாவிராத்ரிசொன்ன
படிஇன்னேரம்நடக்கும் பயமாஇப்போதும்என்ன
நானிருக்க

உ. இன்றுகொஞ்சமெலிந்தேன் இல்லாவிடில்ஆவி
இருக்குமாபார்த்தனுக் கின்னேரம்உடல்மேவி
ஒன்றும்இப்போதுமிஞ்சிப் போகவில்லைநற்காலம்
ஒடிக்கியவனைச்செய்கிறே னொடிக்குள்ளேஅலங்கோலம்
நானிருக்க

ங. ஆனைவிழுந்தாலும் குதிரை உயாமுடல்
அசந்தெனக்கிருந்தாலும் அவன்முன்இல்லையாவடல்
வானோரேவந்தாலும் அறுத்துக்காக்கிறேன்கதிர்
மறையுமளவும்சிந்து மன்னைஉன்கண்ணெதிர்
நானிருக்க

---

## அருச்சுனன் தம்முடன் எதிர்த்த கன்னன்முதலோரை மடிய அடித்தல்.

விருத்தம் அங.

வார்த்தையிவ்வாறுரைத்தந்தக்கன்னராஜன்
மன்னரொடுவெகுதளங்கள்சூழச்சென்று

சாத்தகியைக்கிரீடியைமாருதியைக்கண்டு
சண்டைசெய்யஎதிர்த்திட்டானவர்களும்
மூர்த்திகள்போல்விளங்கிநின்றாரவர்க்குள்நீடு
முச்சகமும்நடுநடுங்க முனைசெய்தோங்கும்
பார்த்தன்இந்தக்கூட்டத்தைக்கண்டுவீரம்
படித்திட்டான்அருக்கடையாய்மடித்திட்டானே.

௬௩. தரு-இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

மடித்தானேஎதிர்நாடிச்-சமுத்திரம்போலே
வந்ததளத்தைக் கிரீடி.

அநுபல்லவி.

தடுக்கவந்தஅதி ரதர்கள்புஜபலமற்றுச்
சமர்க்களத்தினில்வாடி தவிக்கும்படிவதைத்து
கடுத்துப்போர்மீதிலொரு கண்ணுமந்திமானமுற்றுக்
கழியும்பொழுதின்மேலோர் கண்ணுங்கண்டிப்பாகவைத்து

மடித்

சரணங்கள்.

௧. கோரச்சக்கரங்கள் அனந்தம்-பிரசண்டவுக்ர
குந்தம்முசுண்டி அனந்தம்-எரிந்துதாவி
கொல்லுமழுக்கள் அனந்தம்-முத்தலையுள்ள
கொடுஞ்சூலப்படை அனந்தம்-விரியுமகா
மேருவைநிகரென மினுங்கதைகளனந்தம்
வீரகடகந்தோமரம் விடும்அம்புகளனந்தம்
பாரஇருப்புலக்கை பருமட்டிகளனந்தம்
பாசத்துடனேபிண்டி பாலமங்குசமனந்தம்
வாரிஎதிரில் விடுத்து-கொல்வோமென்று
மதத்துடன்கடுகடுத்து-வந்தபேர்தம்
மணிமுடியுடனுயி ரிரிபுயமுனையடு கரங்கள்-வச்ரப்பணிகள்
வகையுடனிலகிய மிகுபலமருவிய உரங்கள்-பெருந்தொந்திகள்
வலியுறுகுடல்கிண மலிகுலையொடுதிக ழிடைகள்-நரம்புதோல்கள்
வடிவமைநயமதி முகமிணையுறுமிரு துடைகள்-தலைமூளைகள்
மக்கிப்பொடிப்பொடியாய்ப் போகச்செய்துசிறக்க
வந்தமன்னவர்மிக வதைந்துவாயைத்திறக்க

மதகரிபரிகளு மறுகிஅங்கங்கிறக்க
வர்னத்தேர்மணிகுடை சின்னபின்னமாய்ப்பறக்க

மடித்

உ. சிலைக்குருவருள் சுதன்-தனுமுறைகள்
தேர்கிருபனெனும் பண்டிதன்-சல்லியனெனச்
செப்புநாயங்கொள் அற்புதன்-திறங்கொள்விட
சேனனென்னும் பூஜிதன்-துரியோதனன்

கோலமாகப்பின்வரக் கொண்டுகன்னன்கடுத்து
கொதிக்குங்காலாக்னியென்ன கோபத்துடன்அடுத்து
ஆலகாலத்தைநிகர் அம்புகளைஎடுத்து
அரியுடன்பார்த்தனை அழித்திடவேவிடுத்து

தாலம்நடுங்க ஆர்த்து-நிற்கும்அவனைத்
தனஞ்சயன்கண்ணுற் பார்த்து மிகவுநெஞ்சு

சலமுடனவனுடல்களைபடவொருகணை எய்தான்-ஒருகணையால்
சதிருடனவன்வரு சரமதுபொடிபடக் கொய்தான்-பார்த்தன்பின்போர்
சரமதையவனுயி ருணவெகுவிசையுட னெய்தான்-அசுவத்தாமன்
தணல்விடல்சரம் நிலமிசைவிழ இருதுணிசெய்தான்-பார்த்தன்அசுவத்

தாமனுங்கன்னனுமோர் சரத்தினுளம்வாடத்
தாக்கிவிடுத்துக்கணை சாங்களெல்லாமூட
தாறுமாறுஇரத்த ஆறுகள்புரண்டோட
க்ஷணத்தினிற்செய்துசுவர்க்கத் தலமுமிகக்கொண்டாட

மடித்

ங. தகைகொள்அனுமக் கொடியைப் படைத்தோன்அஸ்வத்
தாமன்சிங்கக் கொடியைத்-திணிகொள்கிர்பன்
தமதுரிஷபக் கொடியை-மத்ரதேசனுஞ்
சல்லியன்யானைக் கொடியை-விருதுபேசி

வெகுண்டுவந்தஅக்கன்னன் மினுங்கச்சையங்கொடியை
விடசேனனென்னும்வீரன் திடமயூரக்கொடியை
பகைசேர்துரியோதனன் பாழ்த்தபாம்புக்கொடியை
பாணத்தால்அறுத்தண்ணன் பகர்முரசக்கொடியை

மகிமையாப்புவி மேலே-நாட்டிச்சொன்ன
வகைப்படிமென் மேலே-முடிக்கவெண்ணி

வந்தவர்சிந்தை கலங்கிடவடர்கணை தூற்றி-வெகுகூட்டத்தை
மைந்தர்கள்கண்டிட னங்கழளமனுல தேற்றிக்-கிரிகளோடு

மண்டலமெங்கு மதிர்ந்திடவருமுயர் காற்றில்-அலையும்பஞ்சாய்
வஞ்சாலைந்திட வெந்திடும்அனலெனத் தேற்றி-மூலைக்குமூலை
மகிபரெல்லாமோடி நவமுகமுமொளிக்க
மதகவந்தம்இரத்த நதிகளிலேகுளிக்க
வானோர்களாசிகூறித் தேன்மலரைத்தெளிக்க
வையமினியேதென்றென் ஐயனுந்தத்தளிக்க
மடித்

---

கிருஷ்ணமூர்த்தி சக்கரத்தாற் சூரியனைமறைக்க அருச்சுனன் மயங்கிநிற்கும்போது அவனைப்பார்த்து நீ சண்டைசெய் என்ன அருச்சுனன் பொழுதிலாமையால் நான் சத்தியந்தப்பச் சமர் செய்யேனெனல்.

விருத்தம் ௮௪.

வீரனிந்தப்படிக்குவெம்போர்செய்துநிற்கும்
வேளைதனில்மாதவன்றன்மாயையாலே
சூரியனைமறைத்துசக்கராயுதத்தால்
சூழசெவ்வானத்தினையுண்டாக்குஞ்சூதின்
காரியமதறியாமற்பார்த்தன்சித்தங்
கலங்கிநிற்கமால்பார்த்தேன்விடுத்தாய்செய்த
போரையென்றானவன்கேட்டுப்பொழுதிப்போது
போச்சென்றான்தப்புவனோபேச்சென்றானே.

௬௪. தரு-இராகம்-மணிறங்கு-சாப்புதாளம்.

பல்லவி.

நானினிசமர்செய்யலாமா-இந்த
ஞாலத்திற்பாந் தாமா.

அநுபல்லவி.

சேனைமன்னவர்களோ டிருந்தஉனக்குமுன்பு
செப்பியபௌரிஷந் தப்பிப்போனபின்பு
நானினி

சரணங்கள்.

௧. புகலுஞ்சிந்துபதியை இன்று-பொழுது
போவதற்குட்கொல்வேன் என்று
மிகவுரைத்ததுவீணாய் விளைந்ததெங்குமேச்சு
இருந்துகண்ணிலேகொஞ்சந் தெரிந்தபொழுதும்போச்சு
நானினி

௨. பாரத்தனேமொழிதப்பிஆவேசங்-கொண்டு
பண்ணுன்போரெனப்பரி யாசம்
பூர்த்தியாய்ச்செய்திந்தப் புவியெங்கும்பழியாமல்
புழுங்கச்செய்தீயினில் விழுந்திப்போதழியாமல்
நானினி

௩. மானம்போனபின்புதன் ஆவி-தன்னை
வளர்ப்போனேமகத்தான பாவி
ஆனதால்மூவுலகும் ஆளவேசெங்கோலும்
அருமையாஞ்செல்வமும் வருவதாயிருந்தாலும்
நானினி

---

## அருச்சுனன் அக்கினியில்வீழ்வேனென்னத் துரியோதனன் சயித்ரதனை யானையின்பேரி லேற்றிவித்துத் தம்மை அரசர்கள் புகழும்படி சந்தோஷத்துடன் ஜெயத்தைக் கொண்டாடுதல்.

விருத்தம் அ௫.

குலவிஜயன்இவ்வாறுசொல்லிஅக்னி
குண்டமதில்வீழ்வேனென்றான்அங்கேயாகுங்
கிலிதீர்ந்துதுரியோதனன்சக்ரேசர்
கிம்புரிக்கோட்டானையின்மேற்சிந்துவேந்தை
வலிமருவஅலங்கரித்துவைத்துஞ்சூழ்ந்து
வந்தடங்காமகிழ்ச்சியொடுவானோர்கேட்க
கலகலெனநகைத்திருந்தான்வேந்தன்வேஷ்டை
கழிந்திட்டான்தன்ஜெயத்தைமொழிந்திட்டானே

௬௫. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

இதைவிடஎனக்கென்னபாக்கியந்தான்வேணும்-இராஜரேசொல்லுங்காணும்

அநுபல்லவி.

கதறுஞ்சிந்துபதியின் கண்டந்தப்பிப்போச்சுது
காளைஅர்ச்சுனன்தீயில் மாளக்காலம்வாய்ச்சுது
இதை

சரணங்கள்.

௧. அகன்றபூமண்டலங்கள் அனைத்தும்நம்மதேகனி
வாகனங்களேஆண்டு அனுபவிக்கலாமினி
விகண்டஞ்செய்ஐவர்தீயில் வீழ்வார்கள்தனித்தனி
வெகுநாள்வருத்தப்பட்டோம் விட்டுப்போச்சுதுசனி
இதை

உ. தங்கும்விளக்குத்திக்கென் றெரிந்தவிவதையொத்துத்
தனஞ்செயநாடினுன் தவித்தேன்மிகப்பிர்மித்து
உங்களால்அவ்வாட்டம்போ யொழிந்தேன்மைத்துள்ளதத்து
ஒன்றாய்அவர்பிராணனுக் குண்டாச்சுதேஆபத்து
இதை

ங. ஆறுவடிவிற்பஞ்சந் தெளிவிலென்பாரொரண்டை
அதுபோற்றனஞ்செயன்இன் றழித்தானமதுதண்டை
வீறுமவனுக்கிப்போது மிகக்கலங்குதுகுண்டை
வில்லேனம்போடினிமேல் விளைப்போர்களில்லைசண்டை
இதை

௪. இந்தப்பாவிகளால் இராத்தூக்கம்பகற்றூக்கம்
இல்லாதலைந்துகெட்டிங் கிழந்தேன்மனத்தினூக்கம்
அந்தப்பாடுதீர்ந்த தன்றியும்எனதாக்கம்
அழியாவெற்றியும்பெற்றேன் அடியோடழிந்ததேக்கம்
இதை

ரு. பார்த்தன்விஜயன்கிரீடி என்னுப்பற்பலபேரை
பாழாக்கிக்காண்டீபத்தைப் பார்மீதெறிந்துதேரை
தீர்த்தவாரியாக்கினுன் திருப்பிக்கொள்ளாமல்பாரை
தீக்குள்ஐயோபிராணனை வார்க்கப்போகிறுன்தாரை
இதை

---

## தருமராஜன் அரசர்களைப்பார்த்து சயித்ரதனைக்கொல்ல பொழுதில்லாமையாற் றீயில்விழும் அருச்சுன ஞேடு நானும் தீப்பாய்வேனெனல்.

விருத்தம் அசு.

குருடன்மைந்தன்இவையுரைத்துக்களித்தானங்கே
குணங்கொள்தர்மன்மன்னவரைப்பார்த்தென்செய்வேன்
இரவிமறைந்திருள்மூடிப்போச்சுபார்த்தன்
இந்நேரம்சயித்திரதனைக்கொன்றிருந்தால்
அரியசங்கம்பூரிப்பான்ஜெயத்தைக்காட்ட
அவன்மாளஇல்லைஇனிகிரீடிஉய்யான்
எரியில்வீழ்வான்அக்ஷணத்தில்அப்பாலென்ன
இருப்பென்றுன்வயிற்றிலிட்டானெருப்பென்றுனே.

சுசு. தரு-இராகம்-வராளி-சாப்புதாளம்.

பல்லவி.

நானுந்தீக்குழி பாய்கிறேன்-மன்னரேஅரை
நாழிகைக்குள் மாய்கிறேன்.

அநுபல்லவி.

ஆனதனஞ்செயனுக் கனைந்துவிட்டதுதாழ்வு
அவனியின்மேல்ஏனக் கிப்பாலென்னவாழ்வு
நானுந்

சரணங்கள்.

௧. பட்டகாலிலேபட்டுப் பாழ்த்துப்போச்சுதுகுடி.
பற்றும்பற்றுத்துக்குப் பார்த்தன்வைத்தான்இடி
சட்டமவன்போனபின் நானெடுத்தஅடி
தப்புமன்றியேறுமா அஸ்தினபுரத்திற்கொடி
நானுந்

௨. அபத்தபஞ்சாங்கத்திற் கல்லும்பகலுந்தியாச்சியம்
ஆமெனல்போலெவையும் ஆகாமலாகிப்பூச்சியம்
விபரீதமிஞ்சிக்குச வேலையாச்சுதுராச்சியம்
விஜயனுக்குப்பின்பேது விட்டுப்போச்சுதுவியாச்சியம்
நானுந்

௩. உப்புமிஞ்சினல்தண்ணீர் தண்ணீர்மிஞ்சினுப்பு
உணர்ந்துபோடனம்மாலில் லாமற்போச்சுதுதப்பு
அப்படியவர்செய்தார் அதனாற்கொண்டார்வியப்பு
அதர்மத்துக்கேகாலம் அனைத்தும்என்றன்தப்பு
நானுந்

---

## கிருஷ்ணன் அருச்சுனு சயித்ரதன் தலையைக்கொய்து சிமந்தபஞ்சகமடுவில், தவஞ்செய்யும் அவன் தகப்பன் கரத்தில் விழும்படி செய்வா யென்று சூரியனைக்காட்டுவித்தல்.

விருத்தம் ௮௭.

தருமன்இவ்வாறுதளர்ந்தனன்அங்கே
சாமிஅக்கிரீடியைப்பார்த்துச்
சயித்ரதனேரில்இருக்கின்றான்சென்னி
தறிபடக்கணைதொடுவென்றான்
இரவிபோனதற்பின்எனைச்சமர்செய்யென்
றெப்படியுரைத்தனையென்ன
இன்னமும்பொழுதோவிருக்குதஞ்சாதே
இவன்பிதாசிமந்தபஞ்சகமாம்

அருமடுவினிற்றன்மகன்றலை அறுத்திங்
கவனிமேற்றள்ளுவோன்றலை நூ
ருயிரந்துகளாய்வெடித்துவீழ்ந்திடவே
அகத்தினில்எண்ணிராப்பகலும்
விரதமோடர்க்கியம்விடுக்கின்றான் அந்த
வேந்தன்கையினில்இவன்சென்னி
விழச்செயென்றேதிச்சூரியன்முன்போல்
விளங்கிடக்காட்டிநின்றனனே.

---

## அருச்சுனன் பாசுபதத்தாற் சயித்ரதன் தலையைத் துணித்துக் கொன்றபின்பு துரியோதனன் மனக்கவலையுறுதல்.

விருத்தம் அஅ.

நவமாகச்சூரியனைக்கண்டபார்த்தன்
நயந்துமுகமலர்ச்சியொடுஞாலமீது
சிவனருளாற்பெற்றவில்லைக்கரத்திலேந்திச்
சிந்துபதிதலையினைப்பாசுபதத்தாற்கொய்து
தவஞ்செய் அவன்றந்தைகரத்திட்டான் அன்னோன்
தலையென்றுதெரியாமல்நிலத்தில்விட்டான்
அவன்றலையும்வெடித்துதப்பால்துரியன்கொட்ட
மடங்கினான்பிதற்றுதற்குத்தொடங்கினனே.

ம. திபதை-இராகம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. பகருஞ்சூர்யனையின்று வான்மீது-கிட்டிப்
பாம்புவிழுங்கதர்க்கு மில்லைஹேது
மகனிறப்பானென்றிந்திர னெண்ணிச்சூது-முகிலை
மறைக்கச்சொன்னானோ யென்னமோ இப்போது

உ. அந்திமானமிட்டபின்னர் இந்தத்தாலம்-மீதில்
அருக்கனைக்கண்டோர்க ளெவர்என்னகோலம்
சிந்துபதியொடுநம்மையு நிர்மூலம்-செய்யச்
செய்தானின்றுபெரிய இந்த்ரஜாலம்

க. ஆயுதந்தொடமாட்டே
அசுவத்தையோட்டுவனென்
நியாயப்பழுதாய்ச்சக்ரந்
நாசகாலனென்செய்கு

ஞன்தேரிலேறிக்-கோலால்
றென்னுடன்கூறி
தொட்டான்சீறி-இன்னம்
வானோமீறி

ச. ஆயர்வீடுகள்தோறும்போய்
அவர்கள்கண்டிவனைத்தூ
வாயின்மேலடித்துத்தலை
வைதும்வெட்கமில்லா

வெண்ணெய்ச்சட்டி-திருட
ணுடுகட்டி
மீதிற்குட்டி-மிக
துலாவுமட்டி

ரு. நீதியாய்ச்சுதாவுபார்த்தன்
நெடுங்கதைக்கெதிரினி
ஓதுந்தன்மார்பிலேற்றுக்
உருட்டினுன்எண்ணில்

மீதிலேவி-விட்ட
விவன்மேவி
கொண்டுபாவி-அவனை
நடுங்கிடுதாவி

சு. இப்புவிநடுங்கவந்த
பூரித்துமூர்ச்சை
அப்போதேகளைதீரச்செய்து
அழித்துசெய்தான்சண்டாளன்

மன்னரையெனை-வெண்சங்கெடுத்துப்
யாக்கிப்பார்த்தனை
என்றன்யோசனைஎல்லாம்
அங்குஞ்சர்ப்பனை

எ. தனுவாசாறுற்பெற்
தனஞ்செயனிலைக்கேட்டுக்
சனிபோலித்துரோகிஅவ்வேளை
தகரச்செய்தான்கவசத்

றவபேதகவசத்தை-கண்டு
கொண்டானேஅவத்தை
யேதேதோவித்தை-செய்து
தோடென்பலத்தை

அ. தாவிஐயோவொருத்திப்
தாயென்றெண்ணுமல்அங்கே
பாவிதிரிகின்றுனே
பண்ணவென்னசந்தேகஞ்

பாலைக்குடித்து-அவளைத்
தானேமடித்து
நம்மைக்கெடுத்து-சதி
சொல்லுமெடுத்து

கூ. கையினுற்றூக்கிப்பசுவின்
கனிமேலெறிந்துகொன்று
வையத்திலின்னமிவன்கூத்
வரும்வந்தானென்குடிக்கே

கன்றைமென்மேலே-விளவின்
தீர்த்தான்முன்னுலே
தாற்கொருக்காலே-சொல்ல
மறலியைப்போலே

ய. இவ்வகையானதேர்ப்
இருக்குங்கிரீடியேசெயிப்
எவ்விதத்தவனுக்குண்
எனக்கின்றுதான்தெரிந்த

பாகன்சகாயம்-பெற்றே
பான்வாலாயம்
டாம்அபாயம்-இல்லை
திந்தநியாயம்

## அருச்சுனன் துரியோதனன் சேனைகளைக்கொன்று தருமனைக்கண்டு பணியும்போது அதிக மகிழ்ச்சியுடன் கிருஷ்ணமூர்த்தியைப் புகழ்ந்து பேசுதல்.

விருத்தம் ௮௬.

என்றுரைத்தவேந்தன்இந்தப்பொழுதுபோமுன்னே
அவரைவென்றிடுவோம்வாருமென்று
சென்றெதிர்க்கத்தனஞ்செயன்அன்னோர்களாவி
சேணுலகம்போய்ச்சேரக்கணையால்வாட்டி
நன்றியுளதருமனிடம்போய்ப்பணிந்து
நடந்தசெயல்தனையுரைக்கஅன்னோன்கேட்டு
வென்றியொடும்வந்தவரைத்தழுவிஅன்பு
மீறினான்மாயனிசைகூறினானே.

௬௭. தரு-இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்

பல்லவி.

ஐயா-சங்குசக்ரக் கையா

அநுபல்லவி.

உய்யும்படிஎங்களுக் குயிர்பிச்சைதந்தாயே
ஐயா

சரணங்கள்.

௧. அன்றென்னமோ பிறந்தோம்
அலைந்துகெட் டிறந்தோம்
இன்றுன்னாலேபிறந்
திவ்வுலகிற் சிறந்தோம்
ஐயா

௨. அபாரதருட்கண் பார்த்தாய்
அனந்தங்குறைகள் தீர்த்தாய்
தயங்கிநின்றழுதபாஞ்
சாலிமா னத்தைக்காத்தாய்
ஐயா

௩. வனத்தில் எங்கள்காயம்
மடியவந்த அபாயம்
அனைத்துந்தீர்த்துச்செய்தாயே
அடிக்கடிக்குச் சகாயம்
ஐயா

௪. அனைக்குஞ் சலித்துப்போகும்
அருந்தந்தைக் குளநோகும்
உனக்குச்சலிப்பில்லாமல்
உவந்தாயென் சொல்லலாகும்
ஐயா

ரு. பிசகில் அனந்தம்பேறு
பெறச்செய் தெங்கட்குவீறு
இசைவித்தஉனக்கிப்போ
தென்செய்வோங் கைமாறு
ஐயா

சு. நிறைய உன்றனைப்பேணும்
நெறிகொண்டு வந்துகாணும்
முறைதந்திவ்வன்புடனே
முற்றிலுங் காக்கவேணும்
ஐயா

---

## துரியோதனன் துரோணரிடத்திற் கொண்ட அவநம்பிக் கையைக் கன்னன் மாற்றுவித்தல்.

விருத்தம் கூ௰.

தருமபூபதியுரைத்துமகிழ்ந்தான்அங்கே
சர்ப்பகேதனன்சிந்துபதிமாண்டத்தை
குருவிடம்போயுரைக்கஅன்னோன்விதிக்கென்செய்யக்
கூடும்அஞ்சவேண்டாம்நாமிப்போதேபோய்
மருவலரைவென்றிடலாம்வாவென்றோதும்
வசனத்தைஅவனம்பாதங்கர்கோனுக்
குரைசெயவிச்சந்தேகம்குருமேல்எதுக்
கொழியென்றான்கேட்பாயென்மொழியென்றானே.

சூ௮. தரு-இராகம்-சஹானா-சாப்புதாளம்.

பல்லவி.

நமக்கேதெரியுமனு போகம்-வீணாகத்
துரோணர்மேலேன்சந் தேகம்.

அநுபல்லவி.

அமர்க்களத்தினில்நொடி யளவில்நடந்தபொடி
நமக்கே

சரணங்கள்.

க. தனித்தொருமித்துச்-சகுனியொடு
தானேயோசித்து

அனத்தில்விஷமிட்டோமே அதையுண்டுநொந்தாரா
அரக்குமாளியிற்சேர்த்தோம் அதனிற்றான்வெந்தாரா
நமக்கே

௨. ஓதனல் தாவும்-யாகத்தினில்
உண்டாக்கிவும்
பூதத்தைக்கண்டஞ்சிப் புலம்பிப்பறந்தாரா
போனதூர்வாசரால் ஈனமாஇறந்தாரா
நமக்கே

௩. நாட்டைகைக்கொள்ள-அவர்களாசை
நண்ணுமல் விள்ளக்
காட்டில்விட்டோமேயென்ன கைகூடாமல்நின்று
கலங்கினூர்அவர்மிக்க காரியவான்களென்று
நமக்கே

---

## துரோணர் துரியோதனனைப்பார்த்து நான்போய் உனது பகைவரை வெல்லுவேனெனப் போர்செய்யும்போது குந்திபோஜனுடைய இரண்டுகுமாரரும் வாகு லீகன் முதலினோரும் இறந்துபோகுதல்.

விருத்தம் ௯௧.

அங்கர்கோன்உரைத்தான்துரோணர்வேந்தனைப்பார்த்
தைவரைவென்றிடுவேனே
ராவிடிற்சாவேனெனத்தளத்துடனே
ஐவர்மேற்சென்றனன்அவரும்
பொங்கியசேனையோடமர்புரியும்
பொழுதினில்வெகுதளபடிந்து
போச்சுதஞ்சனமன்மனையெழிற்குந்தி
போஜன்மைந்தர்களிருவர்களை
வங்கையோடஸ்வத்தாமன்நேரிட்டு
மாய்த்தனன்மகத்தவாகுலிகன்
மன்னவன்தம்பிமார்கள்பன்னிருவர்
மாருதியாலுயிரிழந்தார்
பங்கமுற்றிடும்பாதகனவன்றன்னைப்
பார்த்துமோயாமலேசண்டை
பண்ணுவனென்றான்பரிதிஅப்போரைப்
பார்த்திட்டுவெறுத்தகன்றனனே.

## பதினாலாநாள் இரவில் இருவர்படைகளும் கலந்து பெரும்போர்செய்யும்போது கிருஷ்ணமூர்த்தி அருச்சுனனைப்பார்த்து உனது பகைவரை வெல்லுவதற்குத்தக்கவன் கடோர்க்கஜனாதலால், அவனை நீவருவிப்பாயெனல்.

விருத்தம் கூஉ.

பரிதிமறைந்திட்டபின்புவேந்தன்தீபம்
　பலகோடியாகஅமைத்துலகிலுள்ள
இருளையெல்லாந்துரத்திவிட்டான்தருமராஜன்
　இரதங்கண்மீதுமுயர்யானைமீதும்
உரிமையுடன்பலவிளக்கிட்டோங்கினான்பின்
　பொருவரெதிரொருவர்முறையிட்டுநின்று
மருவுமீரேழுலகும்நடுநடுங்கவில்லை
　வளைத்திட்டார்கனத்தசண்டைவிளைத்திட்டாரே.

மக. திபதை-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

### கண்ணிகள்.

க. இரவினிற்சண்டை　　　　செய்ய-அத்துரியன்
　இட்டசட்டப்படிமன　　　　தொத்துப்பைய
　ஒருவர்க்கொருவர்　　　　ஆர்த்து-சமர்செய்யும்
　ஊற்றத்தைக்கண்களினாற்　　　　பார்த்தன்பார்த்து

உ. பகலிற்சூரிய　　　　வெளிச்சந்-தன்னிற்சண்டை
　பதினாலுநாட்செய்துந்　　　　தனதுபக்ஷம்
　மிகவுந்தோற்பென்று　　　　நண்ணி-தீபாக்கினி
　வெளிச்சத்திற்போர்செய்தாற்ஜெயம் பலிக்குமென்றெண்ணி

ங. எதிர்த்தான்துரியன்　　　　வீறும்-அக்கினிக்கும்
　இவனுக்கும்பற்றுண்டாநன்றாய்கவனித்துக்கூறும்
　சதிக்கேயோசனை　　　　செய்தான்-அவனுக்கேதான்
　சல்யம்வரும்யோசித்துநான் சொல்வதுமெய்தான்

ச. எனக்குண்டுமிகப்　　　　பற்று-எப்படியென்னில்
　வந்திழைதிரௌபதிதன்னைத்　　　　தான்தானென்று
　மனக்களிப்பொடு　　　　தந்து-எனக்குநன்
　மாமனாகிருன்மேலுமென்　　　　னேமந்தெரிந்து

ரு. வாகைபெறுதேர் கொடுத்தான்-பரிகொடுத்தான்
மைற்றும்வில்லுடனேதேவ தத்தங்கொடுத்தான்
ஆகையாலெனக்கே நீதி-படிக்குச்ஜெயம்
ஆண்டவனறிய வேண்டுமென்றோதி

சா. கன்னனெதிரிற் கிட்டி-கொடித்தேர்துர
கத்தொடுபாகன்றலை தெறிக்கவெட்டி
வென்னிட்டோடவே அடித்தான்-கன்னராஜன்
வெகுண்டுமுகம்பார்த்துக்கொண் டோட்டம்பிடித்தான்

எ. தருமன்பற்களைக் கடித்து-கிருதபன்மன்
சாரதியைக்கொன்றுபெருந் தேரையொடித்து
வெருவஅவனை அடித்து-பின்னிட்டோட
விட்டான்தேவருமா னந்தப்பட்டார்கடித்து

அ. உரகேதனன் கண்டு-துரோணருடன்
ஓதினன்தர்மன்சேதி அப்போதுமிரண்டு
குருதாமன்றனை எதிர்த்துக்-கொண்டுபல
கோடிகணைவிட்டார்பகை நாடிக்கொதித்து

கூ. உதிட்டிரனச் சரங்களை-அறுத்துத்தள்ளி
உலவுங்குருமேலெய்தான் பலசரங்களை
மதிக்குங்குரு அவைகளை-அறுத்துயர்பிர்ம்
மாஸ்த்ரம்விட்டார்கிருஷ்ண மூர்த்தியுங்களை

ம. தருமனும்பிர்ம்மாஸ்த் திரத்தை-பூசைசெய்து
சந்தித்துவிட்டுத்தடுத் தான்அந்தசரத்தை
குருபார்த்திந்த மன்னனை-வெல்லநம்மால்
கூடாதென்றுபோனார் துரியனடிவீமனை

மக. அடுத்துச்சண்டை இட்டு-தேர்முதலா
அக்கணம்பறிகொடுத்து வெட்கங்கெட்டு
கடுத்துவந்தப்பாவி மனம்-மிகக்கலங்கி
கன்னனைப்பார்த்தெல்லாம் சின்னபின்னமாயினம்

மஉ. ஒருநாழிகைக்குள் மடித்து-ஐவர்தம்மை
ஒடுக்கஉனக்கன்றியாருக் கடுக்குங்கடிந்து
விரைவிற்செல்லென்று கூறி-உபசரித்தான்
வெற்றிகொள்ளக்கன்னன் ரதத்திலேறி

மஙா. பார்த்தனெங்கேயெங்கே என்று-தேடிவந்து
பாரவில்வளைத்துமக மேருபோல்நின்று
ஆர்த்திடக்கிரீடியு மறிந்து-வந்துவளைத்து
அஸ்திரமழையாய்ஒரு மித்துச்சொரிந்து

௰௪. வந்தகன்னன்பரித் தேரை-உயர்பாகனை
வன்னக்கொடியையமார்பினில் மின்னுந்தாரை
சிந்துசிந்தாயற தூறித்-தூரத்தக்கன்னன்
சீறிப்பின்னுமொருபெருந் தேரிலேறி

௰௫. வாஅப்போதுங் கிரீடி-அத்தேரையும்
மடக்கியொடித்தானரை நொடிக்குள்நாடி
இரவிமைந்தனந்தப் படியே-அனந்தம்விசை
இளைத்தோட்டம்பிடித்துக்கொண்டா னுளத்திற்கிடியே

௰௬. அதைக்கண்டதுரியன் இன்று-கிரீடியைநா
மாவதுகொல்வோமல்லது சாவோமென்று
பதறிஉயிராசை விண்டு-போவதைப்
பாரில்புகழ்கொண்டகிருபா சாரியர்கண்டு

௰௭. மருமகனும்அஸ்வத்தா மனைப்-பார்த்திம்மன்னன்
வையமீதிற்பார்த்தனோடு செய்யவேமுனை
விரைவாய்ச்செல்கின்றான் வில்லினை-வளைத்துநீபோய்
வெற்றிபெற்றுவாபோஇப்போ தென்றசொல்லினை

௰௮. ஏற்றுக்கொண்டவ்வீரன் விருத்தம்-செய்யாமற்றேரில்
ஏகியும்மன்னைப்பார்த்துனக் கேனிவ்வருத்தம்
பார்த்தனைநானே வெல்ல-செல்கிறேனீ
பார்த்திருவென்றுண்மையுடன் வார்த்தைசொல்ல

௰௯. அவனதைக்கேட்டு முற்றும்-உங்களுக்கவ்
அர்ச்சுனன்மேல்மானமுண்டே யதனையோசித்து
எவரையும்நம்பாமல் நானே-போகிறேனென
எங்களஸ்வத்தாமன்மனம் நொந்தெங்கோனே

௨௰. நன்றாய்ச்சொன்னாய்என்று வெறுத்து-தங்களுக்குள்ள
நன்னெறியைச்சொல்லிவந்த மன்னைமறுத்து
சென்றுபாண்டவர்கள் படையை-வளைத்துக்கொண்டு
சிலைவீரர்கொடித்தேரை இலகுங்குடையை

௨௧. கரிபரிகாலாள் களை-பின்னுமனந்த
காவலரைச்சண்டைசெய்ய மேவுவோர்களை
பரவும்வீரரைத் துண்டுதுண்டாய்வெட்...
பதறும்போதுசேனாதி பதியுங்கண்டு

௨௨. வந்தஅஸ்வத்தாமன் தோளி-லேறச்...
வளைத்துக்கிரமொடு தொடுத்தானேவாளி
அந்தவீரன்மழை போலே-வ...
அன்னேரஞ்சொரிந்தான்திருஷ்டத் துயுமன்னன்மேலே

௨௩. இப்படியாஇரு வோரும்-வெகுநேரம்
எதிர்த்துச்சண்டைசெய் தார்த்துமிக்கயாரும்
ஒப்பிலகும்புத்திரன் அப்போது-திருஷ்டத்துயுமனன்தன்
ஊக்கமழிந்திட்டுமூர்ச்சை யாக்கிமண்மீது

௨௪. வந்தகுலன்சா தேவனை-சில்வாளியால்
வாடும்படிச்செய்துபின்னும் தேடினான்வினை
இந்தகோரந்தனை மாலே-கண்டுபொறாமல்
ஏமத்தேர்விட்டுஅஸ்வத் தாமன்மேலே

௨௫. குருசுதனும் விஜயனும்-ஈரேழுலகும்
கொதிக்கத்தேவருடன் சதிக்குமயனும்
வெருவக்கர்ச்சித்துத் தாவி-சிங்கங்களைப்போல்
வீறிநேருக்கு நேராயுலாவி

௨௬. கோடிகோடிபாணங் தெறித்து-இடியெனவே
குமுறிவரும்பாணங்களைச் சமரிற்றறித்து
ஈடுகுலையாமல்மென் மேலே-வெகுநேரம்போர்
இட்டார்மாயனொடுந்தேரை விட்டான்அப்பாலே

௨௭. பின்பெதிர்த்தசோம தத்தன்-தலையைக்கொய்து
பின்னஞ்செய்துசாத்தகி யென்னும்பிரசித்தன்
மினும்புகழ்கொள்பூரி உரத்தைக்-கலக்கிஐயோ
விண்டலத்திலேற்றினான் கண்டன்சிரத்தை

௨௮. அப்பால்உக்கிரவீமன் ஒருபால்-அறத்தில்மிக்க
ஆசைகொண்டிருக்குந்தர்ம ராஜன்ஒருபால்
ஒப்பில்லாதெழுந் தாவேசங்-கொண்டுதுரி
யோதனன்பலத்தைச்செய்தார் மோதிநாசம்

௨௯. ஒருச்தாரீரகன் பாய்ந்து-சல்லியன்வில்லை
ஒடித்தவனையோட்டிவிட்டான் முடுக்கிக்காய்ந்து
பெருங்கடோர்க்கஜ னேக்கினான்-அஸ்வத்தாமன்
பேச்சழித்தோர்கணத்தினில் மூர்ச்சையாக்கினான்

௩௰. ஓங்கியசகா தேவன்-கன்னனைப்போய்
ஊனப்படுத்தஅந்த மகானுபாவன்
தாங்கிப்பார்த்துத்தாய்க்குப் பரிந்து-சொன்மொழியாலும்
தம்பியெனும்வாஞ்சையாலும் பண்புமிகுந்து

க. அவனைக்கொல்லாம லோட்டி-விட்டுப்போனான்
அப்புறந்திருஷ்டத்துய்மனன் வீரத்தைக்காட்டி
கவனப்பரிவேந்தர் பலபேர்-செயசங்கிராம
கார்முகம்படைத்தரண வீரர்பலபேர்

௩௨. தழையைப்போலஇந்த தளத்தை-குருவைவாட்ட
தத்தளித்தோடினர்அவர் விட்டுக்களத்தை
குழையுங்கன்னன்அவரை மடக்கி-ஓடவேண்டாம்
சூத்தனுனேற்பட்டனமென்றன் வார்த்தைப்படிக்கி

௩௩. அஞ்சவேண்டாமென உரைத்து-கடல்கள்எழும்
ஆர்ப்பதுபோல்படைகளைப் பார்த்தங்கிரைத்து
மிஞ்சுங்காலருத்ர னென்ன-பலவேந்தர்
விடசேனனென்னும் பிள்ளையுடனேமன்ன

௩௪. சீறியேசென்றனர் பாண்ட-வர்களின்சேனை
தெரிகொட்டோடியெல்லைக் குறிதாண்ட
தாறுமாறுய்க்கணை சொரிந்து-ஓடினோர்போக
ததியிலிருந்தோர்தலையைத் தரித்தானெரிந்து

௩௫. தருமன்கண்டுமாய னோடு-சொல்லக்கிரீடி
தாக்கியேஅக்கன்னனுக்குண் டாக்கிறேன்கேடு
அரிபரந்தாமா ரதத்தை-திருப்பெனவென்
ஐயனர்ச்சுனுகேட்டிடிவ் வையகத்தே

௩௬. அவனுருத்திராமிச முற்று-வந்திருக்கிறன்
அர்ச்சுனுதேவாங்கசமும்நீ பெருக்கமாய்ப்பெற்று
உவகைகொண்டாய்சண்டைக் கிரவில்-நீவெல்லமாட்டாய்
உரங்கொள்கடோர்க்கஜனைவரச் செய்வாய்விரைவில்

௩௭. என்றுகமழ்தண் குல்லை-மாலையணியும்
ஈசனுளத்தன்பினோடு பேசுஞ்சொல்லை
அரித்தியாய்க்கொண்டு தானே-கடோர்க்
கஜனைவரவேணுமென்று கருத்திசைந்தானே

---

அருச்சுனன் நினைத்தமாத்திரத்திற் கடோர்க்கஜன் வந்து பணிந்து நிற்க கிருஷ்ணமூர்த்தி அங்கவனைப்பார்த்து இன்றைக்குன்னால் வெற்றிபெற வேண்டுமென வதற்கவனிசைந்து மருவலருடனெதிர்த் துச் சண்டைசெய்தல்.

விருத்தம் கூ௩.

தாரணியிற்புகழ்கொள்கடோர்க்கஜன்கேட்டுற்றுன்
சக்ரதரன்அவனைப்பார்த்திரவில்வெற்றி
நேருமுனக்காகையினால்இந்தவேளை
நீயேபோய்ச்சண்டைசெய்யென்றோதஅன்னோன்

நாரணனைத்தந்தையரைப்பணிந்துலோகம்
நடுநடுங்கஅண்டகடர்கமும்வெடிக்க
கோரரணமுகந்துடிக்கவடவையைப்போற்
கொதித்திட்டான்சண்டைசெய்யஎதிர்த்திட்டானே.

௬௬. தரு-இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

சண்டைசெய்தான்கடோர்க்கஜன்-பிரமாதமாகச்
சண்டைசெய்தான்கடோர்க்கஜன்.

அநுபல்லவி.

அண்டரண் டங்கள்வெடிக்க
அரசர் புல்லைக்கடிக்க
கண்டனும் ஓட்டம்பிடிக்கத்
தந்திகள் எட்டுந்துடிக்கச்
சண்டை

சரணங்கள்.

௧. கடுத்தவந்தகன்னன்மீது
சிலவாளிகள் தொடுத்தான்-அதனைக்கன்னன்
நொடிக்குள்ளறுக்கவே
சிலகணைஎதிரினில் விடுத்தான்-விடுத்துப்பின்னும்
பிடித்தவில்லையும்பொடி
செய்யவீமன்மகன் கடுத்தான்-கடுத்துக்கதை
எடுத்தெல்லோரையுமொரு
மிக்கக்கொல்லவேமுன மடுத்தான்-அடுத்தவீரன்
ஏந்துங்கதையாலடித்து
வேந்தர்களனேகம்பேரைச் சாய்த்தான்-வீரிட்டுவரும்
காந்துகண்யானைகண்மீதிற்
பாய்ந்துகரங்களினாலே தேய்த்தான்-வில்லுடனிற்கும்
மாந்தர்களனந்தம்பேர்க
ளாந்தைபோல்முழிக்கவெட்டி மாய்த்தான்-மற்றோருயிரும்
சோர்ந்திடக்கைகளால்வாரிப்
பாய்ந்திடும்ரத்தக்கடலிற் றோய்த்தான்-இதனைக்கண்ட
மதமிக்கோர்அலம்புதன் மலையெனவே எதிர்வந்து-சீறிமாருதி
அதனுற்றஅந்தஇராக்கதனைக்கண்டனல்போ லெரிந்து-மேவவேவிரண்
டதிவுக்கிரவீரர்களு மெதிரெதிராய்நின்று சினந்து-லோகாலோகங்கள்
சிதைவுற்றழியமதி கதிர்களுங்கதிமாறி நொந்து-போகமிகுந்த

செருக்குடன்வீமன்மகன்
உறுக்கியந்தரமட்டுந் தாவி-எழும்பிஇந்த
அரக்கன்மேற்பாய்ந்தவனை
நெருக்கிப்பிடிக்கஅவன் கூவி-வீரிடத்தள்ளி
உருக்குலேயக்கிழித்துச்
செருக்களமெங்கும்போயு லாவி-அதைக்கண்ணுற்பார்த்
திருக்குமாசன்தேர்மேற்
கருக்குடன்அவனும்போய் மேவி-தேசாதேசர்கள்

ஏக்கங்கொண்டிவனை நோக்கிநோக்கியிடிய
எத்தும்புகழ்கொளைவர் எண்ணப்படிமுடிய
நாக்குவாண்டுயிரைப் போக்கிச்சிலர்படிய
இராக்கதப்படையெல்லாம் பார்க்குள்ளேமடிய

சண்டை

உ. அலம்புதன்மடிந்தபின்
சலங்கொளலாயுத னென்றேது-மொருவன்பல
பலங்களுடனேயெழு
தலங்களுந்நடுங்க அப்போது-தீப்பொறிகளை
இலங்குங்கண்களாலிட்டு
வலங்கொள்ளும் வீமனைவிடாது-வளைந்துகொண்டு
கலங்கிப்பாண்டவர்தளம்
விலங்கிடஅமர்செய் யும்போது-கடோர்க்கஜன்

கண்டுமகாப்பிரளய
கண்டனெனவேஒங்கிக் கொதித்து-வீறவேவந்த
மிண்டனும்வீறஇவ்
விரண்டுபேர்களுநோா எதிர்த்து-பரமன்வாழ்வே
தண்டமும்வேறஇம்மண்
டலமும்பிளந்திடக் குதித்து-கைகளினலே
கொண்டவிடிவீழ்ந்தாற்போ
லண்டியொருவர்க்கொருவர் அதிர்த்து-கட்டிப்புரண்டு

குகைக்குளிருக்குஞ்சிங்கம்பகைத்திட்டப்படியுடன் கூடிச்-சிலநேரத்தில்
நிகரிகென்றண்டமட்டு முறைமுறையாய்வளர்ந்து நீடி-எமனுமஞ்ச
பிறைபோலொளிர்தந்தத்தைநறநறென்றேகடித்தங் காடி-கடுங்கோபத்தோ
டறைகள்கூறியேபல துறையினுமிருவருங் கோடி-மாயங்கள்செய்போ

தடருமிருவர்களிற்
றிடங்கொள்கடோர்க்கஜன் செழித்து-அலாயுதனைப்
படியினிற்றள்ளியவ
னுடலிருபிளவாகக் கிழித்து-அவனுடனே
அடங்கியேவந்தபெரும்
படைகளைநொடியினில் அழித்து-கௌரவதளம்
நடுநெடுங்கப்பலரை
யடிகளினாலேதேய்த் தொழித்து-நரிகள்நாய்கள்

நத்தியுலவிநிதஞ் சுற்றும்நெடியகள
முற்றுஞ்சமர்புரிய உற்றவராக்கர்தள
மெத்தமடிந்தங்கங்கே தத்திதத்தியுருள
ரத்தவெள்ளங்களெழுந் தெத்திசையும்புரள

சண்டை

௩. கோரமாமிரண்டுபேரை
யப்படிக்கொன்று படுத்து-பின்னும்அனந்த
வீரரையெமபுரஞ்
சேரஅன்னேரமே விடுத்து-எங்குந்தானாக
ஓரிமைப்பினிற்கோடி
வீரராட்சதவுரு வெடுத்து-மீந்தசேனையை
வாரிவாரியடித்துச்
சாரும்போர்களுக்கிரை கொடுத்து-கனத்தபெரு

வரையெனவானளவும்
பெருகியோர்புரத்தினில் நின்று-வடவையொக்கும்
எரிதனைப்போற்கனிந்
தெரிந்தொருபுரத்தினில் நின்று-ஒலித்துவரும்
பரவைபோல்பொங்கிப்
பறந்தொருபுரத்தினில் நின்று-காடாந்தகார
இருளைப்போல்மிகுந்
திருண்டொருபுரத்தினில் நின்று-புவனமெல்லாம்

இடியவடிக்குங்காற்று யடர்ந்தொருபுரத்தினில் நின்று-ஊதலினோடு
தொடருமழையாளழுந்திடர்செய்தோர்புரத்தினில்நின்று கண்கள்தெரிக்கும்
நெடியமின்னலிடியாய் நடமாடியோர்புரத்தில் நின்று-தேவருமஞ்சும்
கொடியவிக்கிரமபூத வடிவாயோர்புரத்தினில் நின்று-கொல்லும்போதில்

கூர்த்தமன்னவர்சிலர்
பார்த்துரத்தக்கண்ணீர் பொழிந்தார்-சிலர்உடலம்
வேர்த்துமூர்ச்சையாகியோர்
மார்க்கமில்லாமலுயிர் ஒழிந்தார்-சிலர்வாயைவிட்
டார்த்துத்துடிதுடித்துப்
பூர்த்தியாய்ப்பயந்துடல் அழிந்தார்-சிலரித்தீங்கை
தீர்த்திடுவோரெவரிப்
போர்க்குள்நமக்கெனவே மொழிந்தார்-பின்னும்பின்னும்

திண்டிறல்கொண்டனல்போல் மண்டிமகாப்பிரசித்தி
கொண்டவேந்தர்களுயிர் விண்டிடவேவருத்தி
அண்டகூடத்தகடும் பிண்டிடமிகளற்றி
தண்டுகொண்டுபின் மண்டலமெலாஞ்சுற்றி

சண்டை

---

## கன்னன்விடுத்த வேலாயுதத்தினால் கடோர்க்கஜன் மாண்டதைக்குறித்து, ஐவர்களும் மனவருத்தமுற, கிருஷ்ணமூர்த்தி அவர்கள் மனதைத் தேற்றுதல்.

விருத்தம் ௬௯.

சண்டைசெய்கடோர்க்கஜனைவேந்தன்பார்த்துத்
தயங்கியக்கன்னனைப்பார்த்துன்வேலால்இந்த
கண்டகனைக்கொன்றிடில்லாவிடிலிச்சேனை
களுநாமுமாளுவமெனவன்றோன்வச்ர
தண்டன்சேய்க்காய்பெற்றவேலைவீமன்
தநயன்மீதெறியஅவன்தடிந்தானப்பால்
அண்டுபாண்டவர்கலங்கினரென்னையன்
ஆற்றினன்அவர்துயரைமாற்றினனே.

௭௰. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

சந்தோஷப்படவேண்டு-மல்லால் விசனங்கொள்ளத்-தகுமோதர்மபூபதி

அநுபல்லவி.

இந்தக்கடோர்க்கஜன் சமர்செய்துமலைபோலே
இரவினிலிறந்ததை எண்ணில்நாமொருக்காலே

சந்தோ

சரணங்கள்.

க. விதியாகக்கன்னன்இந்த விஜயனைக்கொல்லமீளா
வேலொன்றுவைத்திருந்தான் விருப்புடன்வெகுநாளா
அதுவுங்கள்ஐவரையும் அழிக்குமதுபூண்டு
அவன்றலையோடுபோன அதிசயந்தனைக்கண்டு
சந்தோ

உ. தழையும்ராட்சதமாயை தனைக்கண்டொடுங்கிமன்னன்
சாற்றக்கடோர்க்கஜனைச் சத்தியாற்கொன்றுகன்னன்
பிழையில்லாக்கிரீடிக்குயிர் பிச்சைதந்தொருமித்து
பிடிக்கவுமக்குச்செங்கோல் கொடுத்ததையோசித்து
சந்தோ

ங. அல்லல்செய்கன்னன்பெற்ற அயிலிவ்வகையாநஷ்டம்
ஆனதென்சொல்வேனீங்கள் ஐவர்செய்தஅதிஷ்டம்
இல்லாவிடிற்பார்த்தனை எங்கேகாணலாம்நாடி
இன்றுபிழைக்கச்செய்த இரவிசேயைக்கொண்டாடி
சந்தோ

---

## பதினாலாநாளிரவில் போர்செய்த இருவர்படைகளும் பின்பு, குருக்ஷேத்திரத்தில் இருக்குதல்.

விருத்தம் கூச.

மாயவனிவ்வாறுரைத்தனனந்த
மறையவன்பினுமமர்புரிந்து
மச்சநாடனைப்பாஞ்சாலனைஅங்கே
மாய்த்ததாற்றிடத்துய்மனெதிர்த்து
தூயவென்றந்தைதனைக்கொன்றவுன்னைத்
துணிசெய்வேனையென்றோதித்
துடிப்பொடுசென்றான்மாமனைக்கொன்ற
தொல்லையாற்கிரீடிஅக்குருவை
ஆயிரமம்பால்வதைத்திளைக்கச்செய்
தமர்தனைநிறுத்திவன்படையோ
டவனிடஞ்சேர்ந்தானந்தணனிவ்
வமர்க்களம்விட்டுபாசறைக்கென்
வாயினாலுரைத்தபடிமுடியாமல்
வந்திடேனெனஅனைவர்களும்
மாமுனியுடனேஇரவெலாமிருந்தார்
வளர்குருக்ஷேத்திரந்தனிலே.

## பதினைந்தாநாட்போர்.

துரோணர் பாண்டவாள்சேனைகளை யதஞ்செய்துகாலருத்திரனைப்போல நிற்பதை சத்தரிஷிகளுங்கண்டு நீர் அந்தணராகவிருந்தும், யாகாதிகிர்த்தியஞ் செய்வதைத்தவிர்த்து, சமர்புரிவது நலமாகாதெனல்.

விருத்தம் கூடு.

பதினைந்தானுளுதயந்தனில்இரண்டு
பட்சத்தின்வேந்தர்களும்படையுஞ்சேர்ந்து
விதியாகச்சமர்விளைக்கும்போதுதுரோணர்
மீறிப்பாண்டவதளத்தைமிகவுங்கொன்றே
எதிரில்லாஉருத்திரன்போல்நின்றார்அங்கே
இனியசத்தரிஷிகள்வந்தாரவரைக்கண்டு
மதியினொடுபணிந்ததுரோணன்செய்திங்கை
மாற்றினார்நன்னெறியைச்சாற்றினாரே.

எக. தரு-இராகம்-பரிசு-ஆதிதாளம்.

பல்லவி.

விடும்விடும்இந்தமட்டும்-இத்தொழிலைப்பிர்ம-வித்தாகியதுரோணரே

அநுபல்லவி.

கடும்பகைஎன்னஇரு கண்ணிற்றீப்பொறியென்ன
அடங்காஇக்கோபமும்மை அறியாமல்வந்ததென்ன
விடும்

சரணங்கள்.

க. அந்தணர்க்குஸ்நானஅநுஷ் டானம்ஆசாரம்விதி
யானகிருதுகள்ஜபத் தால்வரவேணுங்கதி
சிந்தியாததைவிட்டுச் செருக்காற்சேனாதிபதி
சேவகஞ்செய்துகொல்லத் திரிகின்றீரென்னமதி
விடும்

உ. எப்போதும்க்ஷத்ரியர்கள் இந்தஉலகிற்காயம்
எடுத்ததுசண்டைசெய்ய இயற்கையதுநியாயம்
அப்படிபிராமணருக் கடுக்குமாசாம்பிரதாயம்
அண்டும்வேந்தரனேகர் கொண்டாரும்மாலபாயம்
விடும்

ரு. அல்லல்தீரமன மடங்கிச்சகத்தைத்துரும்
பாகஎண்ணிமெய்யாம் ஆத்மபோதத்திலிரும்
விலலேன்படையேன்தேரேன் வேதக்கொடியேனரும்
வீறேனிவைகளென்ன பேறையுமக்குத்தரும்
விடும்

## கிருஷ்ணன் தருமநந்தனை அஸ்வத்தாமாவென்னும் யானை இறந்ததென்று துரோணர்கேட்கச்சொல்லவேண்டு மெனத் தருமன் நான் நரகத்திற் கேதுவாகிய பொய்யைப் பேசேனெனல்.

விருத்தம் கூசு.

முனிவரீதோதிச்சென்றனர்துரோணர்
முனைவிட்டுப்பரப்பிர்மநிலையை
முன்னியேநின்றாரிவையெலாங்கிருஷ்ண
மூர்த்திகண்டருச்சுனர்க்கோதிச்
சினமகல்குருவைத்திடத்துய்மன்கொல்லச்
செலவிடுத்தறன்மகனிடத்திற்
சேர்ந்தஸ்வத்தாமாவென்னுமாளவன்றன்
சிந்துரங்கிரீடியாற்பூமி
தனிலிறந்ததைநீயுரைப்பையேல்அஸ்வத்
தாமன்மாண்டானெனவில்லைத்
தரைமிசையெறிந்துசோகமேலிட்டுத்
தனுகுருஉயிர்விடுமப்பால்
உனையெதிர்ப்பவரார்சமுத்திரஞ்சூழ்ந்த
உலகெலாமுன்னதேயென்ன
உதிட்டிரன்மாலைப்பார்த்துநானிப்பொய்
யுரைசெயேனென்றுகூறுவனே.

எஉ. தரு-இராகம்-காப்பி-சாப்புதாளம்.

பல்லவி.

பொய்சொல்லலாமா-உயிர்போனாலும்
பொய்சொல்லலாமா.

அநுபல்லவி.

மெய்சொல்லியே நித்தம்
விளையுதிந்த அனர்த்தம்
பொய்

சரணங்கள்.

க. மனமகிழ்செல்வமெல்லாம் மாண்டபோதேகழியும்
வாய்திறந்தோதுமுன் வருமெல்லாப்பழியும்
இனிதாகும்இல்லறத் தின்பமுங்கெட்டழியும்
இங்கேவாவென்றழைக்கும் எரிநரகக்குழியும்
பொய்

உ. தவங்களெல்லாங்கெட்டுத் தாழ்வாம்பவமேநீளுந்
தரைமேற்குடிவிளங்கித் தழையாமலேமாளும்
அவிதிசெய்மிடிகுடி யாயிருந்தரசாளும்
அநித்தியத்திற்கழுத்தை அறுக்கும்எமன்கைவாளும்
பொய்

௩. சகத்தினிவில்லாத சஞ்சலத்தைக்கொடுக்கும்
தாளாண்மையோடுநற் றயிரியத்தைக்கெடுக்கும்
பகுத்தநன்மைகளெட்டிப் பாராவகைதடுக்கும்
பாவிகளாய்த்தெருவிற் பரதவிக்கவிடுக்கும்
பொய்

---

## தருமன் துரோணரிடஞ்சென்று அஸ்வத்தாமா ஹதாவென்று சொல்லியமாத்திரத்திற் கிருஷ்ணமூர்த்தி வெற்றிச்சங்கம் தொனிசெய்து துரோணாச்சாரியாரை சுவானுபவத்திருத்தல்.

விருத்தம் கூஎ.

தருமனுரைசெயமாயன்அனந்தங்கோடி
ஜனங்கள்துயர்தீர்ந்திடவோர்பொய்யுரைத்தால்
வருநன்மையெனமன்னன்போயஸ்வத்தா
மாஅதாவெனுமளவும்பொறுத்துப்பின்குஞ்
சரமெனும்போதுயர்ந்தசங்கந்தொனித்தசொல்லைத்
தடுத்ததனாற்றுரோணன்மகன்மாண்டானென்று
உருகிநின்றுநற்பிராணவாயுதன்னை
யூக்கினன்யுச்சியினாற்போக்கினனே.

---

## திருஷ்டத்துய்மனால் துரோணர் இறந்ததற்கு அஸ்வத்தாமன் வாய்விட்டு மிகவும்புலம்பல்.

விருத்தம் கூஅ.

அசைவறநின்றிடுங்குருவின்சென்னிதன்னை
அறுக்கச்சேனாதிபதிஅம்பெடுக்கும்போது
விஜயன்பார்த்திதிற்பிழையுண்டாகும்அம்பை
விடவேண்டாமெனவுங்கேளாமல்விட்டுப்
பிசகாமற்சிரந்துணித்தான்அஸ்வத்தாமன்
பிதாவிறந்தசேதியைக்கேட்டருகில்வந்து
பசையிழந்தநெடுமரம்போல்மண்மேல்வீழ்ந்து
பதறினன்அழுதழுதுகதறினனே.

௰உ. திபதை-இராகம்-மத்தியமாவதி-சாப்புதாளம்.

## கண்ணிகள்.

க. ஐயனேயென-தையனேயென
தையனேயென்ன மாயம்-இந்த
வையமீதென்னை-விட்டுவிட்டுநீ
மாத்ரம்போவதோ நியாயம்

உ. உன்னைவிட்டொரு-கணப்போதேனுமென்
உயிரதனையே மேவி-பின்னும்
இந்நிலத்திலிருப்-பேனுகில்யார்
என்னைப்போற்கொடும் பாவி

௩. நானும்பின்னேவந்-தேன்வந்தேனிதோ
நாடியுன்றனை மெய்யா-நீ
போனசேதியைக்-கேட்டும்பூமியிற்
பொருந்துமோஉயிர் ஐயா

௪. நிறைகொளுந்தனு-முறைகளும்மனு
நீதியும்புவி மீது-நாலு
மறைகளும்பல-துறைகளுங்கெட்டு
நாசமாம்இனி மீது

௫. மோதுபோர்க்குச்சே-னுதிபத்திய
முடிபுனைந்திரா ஜனையே-நித்தம்
பாதுகாரென்று-வீடுமன்சொன்ன
பண்பையும்மறந் தனையே

௬. முனைபுரிந்திந்தக்-கனைகடற்புவி
முழுதும்வேந்தனைச் சாரும்-படி
இனிகொடுப்பவ-ரெவருனக்குப்பின்
பில்லைப்பார்மிசை யாரும்

எ. மாட்சியும்என்றன்-ஆட்சியும்புய
வலுமையுமின்று போச்சே-இந்த
காட்சிக்குள்ளாகும்-படிவிட்டுன்னுடல்
களைத்துப்போம்படி யாச்சே

அ. சந்திரன்போலிவ்-வேந்தராகும்நட்
சத்திரகூட்டத்திற் றிருந்தி-மிகச்
சுந்தரத்தோடி-ருந்தநீயெங்கே
துன்னினுய்சுகம் பொருந்தி

கூ. வில்லெங்கேநெடும்-விருதெங்கேசாஸ்த்ர
விஊவெங்கேவிட்டுத் துறந்தாய்-இங்கே
மல்லுசெய்துக்கொண்-டிருந்தநீஐயோ
மாயமாயெங்கே பறந்தாய்

ஸ. வாதமாதவ-மகத்வஅந்தண
வமிசர்யாவருந் துதியே-செய்யுஞ்
சாதசௌமிய-சமஸ்த்தபூஜித
சாந்தசற்குண நிதியே

---

## அஸ்வத்தாமன் தன்தந்தையாகிய துரோணரைக்கொன்ற தாரென கிருபன்கேட்டு திருஷ்டத்தூய்மன் கொன்ற தாகச்சொல்ல, மிகுந்த கோபங்கொண்டு பேசுதல்.

விருத்தம் கூகூ.

குருசுதனிவ்வாறழுதென்றந்தைதன்னைக்
கொன்றதாரெனக்கிருபன்கேட்டுமாயன்
தருமனைஅஸ்வத்தாமாஇறந்தானென்று
சாற்றெனச்சொன்னான்அவனவ்வாறுசொன்னான்
அரிஅரியென்றுந்தைசிலையெறிந்துதியான
மடைந்தவேளையிற்றுரோகிதிருஷ்டத்தூய்மன்
ஒருகணையாற்றுணித்துவிட்டானெனஅச்சூதை
உன்னினான்சீறிமிகப்பன்னினனே.

எங. தரு-இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

இனிவிடுவேனுபாண்-டவரையவர்களுடன்-இருக்கின்றமன்னரையும்

அநுபல்லவி.

புனிதரென்றுவேஷம் போட்டுக்கொன்றுநின்றாரே
பொய்சொல்லிஎன்றந்தையைப் போர்முகத்திற்கொன்றாரே
இனி

சரணங்கள்.

க. யாருமறிவாரென்றன் அடலை-ஓர்
அம்பினாலேஅவர்கள் உடலை
பாரிற்றுண்டுதுண்டாகப் படவெட்டிச்சேர்க்கிறேன்
பருந்துகாக்கைக்கின்று விருந்திட்டுத்தீர்க்கிறேன்
இனி

உ. அந்தரமெங்குந்தலை யாடப்-பூமி
அடங்கலும்ரத்தவெள்ள மோடச்
சந்துவிடாமல்வெட்டித் தறிக்கிறேன்மென்மேலும்
சமரைவிட்டவர்அந்த எமலோகம்போனாலும்
இனி

ங. ஆயுதத்தையெறிந்து தியானந்-தன்னை
அடைந்தஎன்றந்தைதனை ஊனம்
தீயனாற்செய்வித்தோரிச் செருவிற்றுள்ளிபதைக்கச்
சின்னாபின்னங்களாக என்னாலாகும்வதைக்க
இனி

---

## திருஷ்டத்தூய்மனனை நிந்தனைபேசின அருச்சுனன் சேனைகளின்பேரில் அஸ்வத்தாமன் நாராயணாஸ்திரம்விட்டு சமர்செய்து தோற்படையும் சமையத்தில், வேத வியாசர்வருதல்.

விருத்தம் ௩.

விரைவில்அஸ்வத்தாமன்இந்தவிதங்களோதி
விண்டலமண்டலநடுங்கத்தேரிலேறி
வருவதுகண்டுதிட்டிரன்மால்தன்னைப்பார்த்து
வருமிவனால்என்னவிளைவாமோவென்றான்
அரியுள்ளபடிமுடியுதென்றான்கிரீடி
அனைத்தும்இத்திருஷ்டத்தூய்மனாலேயென்று
எரியுமனற்பொறிபறக்கக்கோபத்தோடு
இரைந்திட்டான்பலர்கேட்கவுரைத்திட்டானே.

௰ங. திபதை-இராகம்-கல்யாணி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

க. வில்லையெறிந்துபிரபஞ்-சத்தைவெறுத்துஞான
விளைவில்நின்றுதன்னை மறந்து-உச்சி
வெடிக்கப்பிராணவாயு-வைச்சோதியாளமுப்பி
விட்டுத்தனக்குத்தானே இறந்து

உ. சபமாயிருந்தஅந்தப்-பிரபுகுருநாதன்மேற்
சாம்விடாதேயென்று நானே-சொன்னேன்
அபலமாகப்பாவி-திருஷ்டத்தூய்மனோடி
அம்பாற்சிரத்தைஅறுத் தானே

௩. அறுத்தோன்என்னபல-னடைந்தானுலகிலேபிர்ம
ஹத்தியடைந்தான்குருத் துரோகம்-செய்து
வெறுக்கும்பழியடைந்தான்-ஐயோஇதுவாசுத்த
வீரன்செய்கின்றநிர் வாகம்

௪. எனஅருச்சுனன்சொல்லச்-சினமாய்த்திஷ்டத்தூய்மனுன்
எரியுந்தியிற்பிறந்த வீர்யம்-இந்தச்
சனியாந்துரோணனைக்கொல்லத்-தானேமாயன்முதலாஞ்
சகலர்க்குந்தெரியுமக் கார்யம்

௫. பாஞ்சாலகுலத்தைப்பா-ழாக்குமிந்தப்பாவியைப்
பாரில்நான்கொன்றதனி யாயம்-நீ
வாஞ்சைபூண்டபீஷ்மனென்னும்விரதசிகா
மணியைக்கொன்றதுமாத்ரம்நி யாயம்

௬. என்னச்சாத்தகிதிருஷ்டத்-தூய்மனைப்பார்த்திங்கே
ஏன்பேசுகிருய்போவீண் சூது-பீஷ்மன்
தன்னைக்கொன்றான்சிகண்டி-தனுக்குருவைக்கொன்றாய்நீ
தப்போஎன்சொல்லென்னும் போது

௭. வீமன்பார்த்தனைப்பார்த்து-நீயுஞ்சாத்தகியும்
வீணுதிருஷ்டத்தூய் மனைத்-தூறி
நேமம்பேசுகின்றீர்-தம்பிநீசெய்ததை
நெஞ்சினிற்சற்றே நினை

௮. வந்தபூரிசிரா-உனையென்செய்தான்அவன்
வலக்கையையேன் கொய்தாய்-உன்றன்
தந்தைக்கனுபந்தனும்-பகதத்தநற்சென்னி
தறியஎன்அம் பெய்தாய்

௯. சொன்னஇவைகள்தர்மந்-தானுஅவரவர்க்காத்
தோற்றவேணு மென்றான்-அங்கே
மன்னன்தருமன்அன்னோர்-வதனம்பார்த்துச்சில
வார்த்தையினிதாப்பு கன்றான்

௰. கண்ணன்அவ்வேளையிற்-புண்ணிற்கோலிட்டாற்போற்
காண்டீபன்குரு மேலே-வைத்த
உண்மையானஅன்பி-னாலேவெறுத்தானென்று
உரைத்தையோமென் மேலே

௰௧. நடந்துபோனகார்யத்தைத்-தொடர்ந்துபேசினத்தி
னாலேயென்ன லாபம்-[illegible]
அடங்கலுக்குமுன்னே-வரும்அஸ்வத்தாமனை
அடக்குமுண்டுபிர தாபம்

௰உ. என்றுரைத்தம்மாயன்-தேரைநடத்திமன்ன
ரிருபுறஞ்சூழ்ந் தார்த்து-வரச்
சென்றான்காலன்போல-வருமஸ்வத்தாமனிச்
சேனைகள்தமைப் பார்த்து

௰௩. படபடென்றுபல்லைக்-கடித்துகண்களிற்செந்தீ
பறக்கக்கோப முதிர்ந்து-லோகம்
இடுகிடென்றசைய-வில்லைவளைத்துமாலுங்
கிடிகொளவே எதிர்ந்து

௰௪. உரத்தநாராயணாஸ்-திரத்தைமகாமந்த்ர
மோதிக்கொண்டே எடுத்தான்-அவ்வஸ்
திரத்தைநமஸ்க்கரித்து-வில்லிற்பூட்டியந்தச்
சேனைகள்மேல் விடுத்தான்

௰௫. விடுத்தஅஸ்திரம்அண்ட-வடுக்குதோறும்சுத்தி
மீண்டுவிண்ணிற் படர்ந்து-சுடர்
கொடுக்கும்அக்கினிமய-மாய்கனிந்தெரிந்து
புகைந்துகுவலயத்திற் றொடர்ந்து

௰௬. ஒன்றுபத்துநூ-றாயிரங்கோடியாகி
உரைக்கடங்காமற் பின்னும்-போரில்
நின்றோர்மயிர்க்காலுக்கொவ்-வோரஸ்திரமாய்வந்து
நெருக்கிடவே மன்னும்

௰௭. தருணத்தில்மாயனுங்-கிரீடியும்வெறுங்கையாய்த்
தரைமேல்நின்று சோரும்-மன
தொருமித்துக்கைகூவித்-தட்டாட்சரமந்திரம்
உரைத்தார்களிரு வோரும்

௰௮. இதைக்கண்டபலரும்நி-ராயுதராகவே
இருந்தார்கள்துதி புரிந்து-ஒரு
மதப்பட்டவீமன்மாத்ர-மதைத்திரணமாக
மதித்தான்கோபம் விரிந்து

௰௯. அவன்மீதில்அஸ்திரங்கள்-எல்லாந்திரும்பஅதை
அஸ்திரங்களாற் போக்க-அந்தத்
திவ்யநாராயணாஸ்-திரமேவந்தவ்வீரன்
திண்புயத்தினிற் றாக்க

உ௰. வீச்சினுலும்பெரு-மூச்சினுலுங்கோப
வீறினுலு முலக-மதிர
பேச்சினுலுஞ்சொல்லு-மேச்சினுலும்அஸ்திரம்
பின்னிட்டோடி விலக

உக. வீமன்விஷபரிக்ஷை-செய்கின்றான்அஸ்திரம்
விடுமாவெனமென் மேலே-பாங்
தாமன்யோசித்தவனே-யுந்தொழச்செய்வித்தான்
தரையில்நின்றெருக் காலே

உஉ. சார்ங்தநாராயணுஸ்-திரம்இயாவருமிகத்
தாழ்ந்தாரெனவே மதித்து-நாணிப்
பேர்ந்துபோகஅதைக்-கண்டஅஸ்வத்தாமன்
பிரளயமாகக் கொதித்து

உ௩. அண்டமெக்கினியாஸ்திரம்-விடவத்தனஞ்சயன்பிரம்
மாஸ்திரம்விட்டுப் பொடித்தான்-இந்தச்
சண்டைசெய்வதிலுஞ்-சாகலாமென்றஸ்வத்
தாமன்சொல்லித் துடித்தான்

உச. துடித்துக்கையிலிருந்த-வில்லும்அம்பும்அம்புறுத்
தூணியும்புவி மேலே-எறிந்து
நடக்கும்போதுவியாச-பகவானெதிரில்வந்து
நண்ணினுர்மலே போலே

---

வியாசர் அஸ்வத்தாமனைப்பார்த்து பிராரத்துவப்
படிக்கு நடந்துவிட்டது ஆனுலும் நீர் நிரா
யுதனுக எண்ணமிட்டுலைருவது யாதுகா
ரணம் சொல்லுமென அவன்
சொல்லுதல்.

விருத்தம் ாக.

கண்ணுமுனியுன்றந்தைதன்னைக்கொல்ல
நாடிப்பாஞ்சாலன்வெகுதவம்புரிந்து

திண்ணியதிருஷ்டத்தூய்மனைப்பெற்ருன்அச்
செயலாலேஅவன்படிந்தான்இல்லாவிட்டால்
விண்ணவரால்முடிந்திடுமோஅதுபோகட்டும்
வில்லையெறிந்தமரைவிட்டுவெகுதூரம்நீ
எண்ணமிட்டுவந்ததுதானென்னஅன்பால்
ஏத்துவான்குருவின்மகன்சாற்றுவானே.

௭௪. தரு-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

என்னசண்டைசெய்வதையா-நான்
என்னசண்டைசெய்வதையா.

அநுபல்லவி.

அன்னவாகனத்தோனை அன்பாய்ப்பெற்றதிருமால்
அருள்செய்தநாராயணுஸ் திரம்வீணாய்ப்போனல்

என்ன

சரணங்கள்.

௧. மேலர்கநம்பிநிதம் வேண்டு-மந்திர
விதிப்படிமகிமைகள் பூண்டு
காலனைப்போலேவுயிர் கவருமகாபயங்
கரமாம்அஸ்திரங்களெல்லாந் தருமானல்அபஜெயம்

என்ன

௨. வாய்த்தஆயுதவீர மேகித்-தே
வர்களும்பக்ஷபாதக ராகி
நியாயந்தப்பினுலும் வெல்வோமெனவிருப்பால்
நம்பினமந்திரங்கூட நட்டாற்றில்விட்டாலப்பால்

என்ன

௩. பார்த்தனுக்கும்எனக்கு மொன்று-வித்தை
பகுத்துச்சொன்னர்என்தந்தை நன்று
ஏற்றஅவன்வித்தைக்குன் றிசிவிட்டவிளக்காச்சு
என்வித்தைகுடத்தினி விட்டவிளக்காப்போச்சு

என்ன

## வியாசர் அஸ்வத்தாமனுக்குச் சிலநீதியுரைத்துதருமனையுங் கிருஷ்ணமூர்த்தியையுங்கண்டுபேசிப்போனபின்பு அவரவர்கள் தங்கள் தங்கள் பாசறையில் போய்சேருதல்.

விருத்தம் ௱உ.

பரித்தாமன்சொலவியாசர்அனந்தநீதி
பகர்ந்தவனைக்குருக்ஷேத்ரந்தன்னிற்சேர்த்தே
அருச்சுனனைமாயனைக்கண்டிதனைச்சொல்லி
அவர்போனார்பின்பிரண்டுதளமும்பூமி
வெருக்கொளப்போர்புரிதலைக்கண்டஞ்சினன்போல்
வெய்யவன்மேற்கடலினிற்போய்வீழ்ந்தான்அப்பால்
உரைக்குமன்னரனைவர்களுந்தங்கள்தேரை
ஊர்ந்திட்டார்பாசறையிற்சேர்ந்திட்டாரே.

——: (*) :——

துரோணபர்வம் - முற்றிற்று.

---

துரோணபர்வத்தில்-விருத்தம்-௱உ. தருக்கள்-௭௪. திபதைகள்-௰௬. ஆக ௱அ௬௯.

———(*)———

பாயிரம்-௧-க்கும், பர்வம்-௭-க்கும், கூடிய-வெண்பா-௬. கலித்துறை௬-கொச்சகம்-௪. கட்டளைக்கலிப்பா-௧. விருத்தம்-௪௪௪. தருக்கள்-௬௱௰௫. திபதைகள்-௫௫.

ஆக அ௱௨௰௫.

---

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.




எட்டாவது

# கன்னபர்வம்.

## பதினாறுநாட்போர்

### கண்ணன் - துதி.

விருத்தம் க.

கலைமாதைசுருதிவிதிநாவிருந்து
கற்பனையும்விற்பனையும்சழன்றுபின்னர்
மலைமாதாயாணிடப்பாகத்திருந்து
மடித்துமயிடவனுயிரைக்குடித்துமீண்ட
நிலைமாதைத்தலைமாதைஅன்பர்தங்கள்
நெஞ்சகத்தைநீங்காதநித்யமாதை
மலர்மாதைவேங்கிடலட்சுமியாமாதை
மார்பினில்வைத்திடுமாலைவணங்கிவாழ்வாம்.

### கன்னனுக்குச் சேனுதிபதிபட்டங்கட்டி யதன்பின்நடக்கும் யுத்தத்தில், வீமனுல் கேமதூர்த்தி இறந்துபோகுதல்.

விருத்தம் உ.

பதினாறுநாளங்கர்கோனைச்சேனு
பதியாக்கஅவன்மகரவியூகஞ்செய்து
சதிரொடுநின்றான்திஷ்டத்தூய்மன்இங்கே
சக்ரவியூகஞ்செய்தெதிரேநின்றான்
விதியொடிருபடையும்அமர்செய்யும்போது
வீமனுயர்யானைமிசைஏறித்தன்முன்
மதயானைமீதில்வருங்காசிவேந்தை
வளைத்திட்டான்அரியசண்டைவிளைத்திட்டானே.

அக

க. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

வீமனுக்குங்காசி வேந்தன்கேமனுக்கும்-விளைந்ததேசண்டை

அநுபல்லவி.

ம்மாமகாமேரு வரையும்வேரறுந்தாட
மண்ணைச்சுமக்குஞ்சேடன் கண்முழிபிதுங்கிவாட
வீம

சரணங்கள்.

க. இருவரும்விற்களை இணையாக்கையிலெடுத்து
இருவரும்நாணியிட் டெதிரெதிராஅடுத்து
இருவருங்கணைகளை இலக்கில்லாமல்விடுத்து
இருவருங் கடுகடுத்து
விரவும்போதுகாசி வேந்தன்குறுகுறுத்து
வீமன்மேலொருவேலை விடுக்கஅதைமறுத்து
மகிழ்விலைவனேறி வந்தயானையைக்கொன்று
மாருதிசிறஅம் மன்னன்தரையில்நின்று
வலியகதையொடு சீறிமிஞ்சவே
அலறிஇறையவர் யாரும்அஞ்சவே
வீம

உ. கதையினாலேவீமன் கரியைமடித்துநூறிக்
காசிவேந்தன்பிரளய காலனெனவேசீறிக்
காயவீமனும்வச்ர கதையைத்தாங்கிமீறிக்
கடுங்கோபத் தொடுதூறி
அதிவுக்ரமாஅவனை அடிக்கக்கதையினாலே
அவனுங்கதையாலோங்கி அடிக்கவேயொருக்காலே
சதிர்கொள்வீமன்பின்னுந் தாங்குங்கதையைக்கொண்டு
தலைமேல்மோதஅவனத் தத்தைவிலக்கிக்கொண்டு
சரபமென்னவெதி ருற்றுறுக்கவே
தரணிமுழுவதுந் தத்தளிக்கவே
வீம

ந. எதிரெதிராய்ப்பின்னு மிரண்டுவீராருந்தாவி
ஏகநாதமாக இடியும்நடுங்கக்கூவி
எடுத்தகதையொடிப்பார் இடிபடவேயுலாவி
எரியுங் கனலைத்தூவி
கொதிகொள்ளும்போதடல் கொண்டுவீமனைகைத்துக்
குரூரத்துடன்வந்தஅக் கோமான்திகைதிகைத்துக்

கதறித்தரையில்விழக் கதையால்அவனுரத்தை
கலக்கி அங்குடைத்துத்தேங் காய்போலவன்சிரத்தை
கதித்தான்மிகுஉக்ர மேவிஅடல்முந்த
மதித்தகேமனுயிர் போமளவும்அந்த
வீம

---

## கன்னன் நகுலராஜனுடன் சண்டைசெய்து, அருச்சுனனால் அடிபட்டிளைத்தவருத்தத்துடன் கோபமுற்று வந்தெதிர்த்த கன்னனை அருச்சுனன் நீநாளைக்குச் சண்டைசெய்யவருவாயெனல்.

சந்தவிருத்தம் ௯.

காசிநகர்க்கிறை மாண்டபின்னிரு படைகளுமிகஅமர்செய்து
கடிகியபொழுதினில் அடலுறுதளபதி கன்னனெனும்பெயரோன்
வாசிதனக்கொரு நகுலனுடன்சமர் வண்மையொ டிட்டுயர்தேர்
வரிசிலைமுறிபட அவனுடல்அயர்வுற வாளிவிடுத்தப்பால்
ஆசற்றிடமடல் விஜயனையெதிரிட அவனிவனுடல்முழுதும்
அம்பைவிடுத்து வருத்தமனத்துய ராகினன்அதுகண்டு
நாசப்படஅமர் செயலாகாதென நலமதுதனையெண்ணி
நாளைக்கமர்செய வர்வெனவிஜய னயத்துடனோதினனே.

௨. தரு-இராகம்-பிலஹரி-ஆதிதாளம்.

பல்லவி.

நாளைவாகன்று-யோசனையென்று
நாளைவாகன்று

அநுபல்லவி.

பாளையத் துடனேங்கிப்
பருத்த வில்லையுந்தாங்கி
நாளை

சரணங்கள்.

௧. நாடியென்முன் முளைத்தாய்-சினமுடனே
நீடும்வில்லை வளைத்தாய்
ஈடுகுலையாமலே ஏதோசமர்விளைத்தாய்
இப்போதொடுங்கிப்போய்கை யிளைத்தாய்மேனிகளைத்தாய்
நாளை

௨. நல்லதொழி லாச்சு-கையிலிருந்த
வில்லுமுறிந்து போச்சு

அல்லிக்கொடிபோல்உன்றன் அங்கந்துவண்டுபோச்சு
அடங்கிப்பெருமூச்சுமுண் டாச்சுதென்னவச்சு
நாளை

௩. மன்னனளித்த பெரிய-சேனுபதி
என்னும்பவுஷு தெரிய
பன்னுஞ்சேமத்தேர்கள் பக்கத்தினில்விரியப்
பார்த்திபர்கள்துணையாய்ப் பரியச்சமர்புரிய
நாளை

---

அருச்சுனன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியுத்திரவிஞல் சஞ்சத்த நாராயண கோபாலரை இந்திராஸ்திரத்தாற் கொன்ற பின்பு அங்கே வந்தெதிர்த்த துரியோதனனை தருமன் நிராயுதனுகச்செய்து பற்பலவாகப் பழித்துப்பேசுதல்.

விருத்தம் ௪.

தனஞ்சயனீதுரைக்கஅங்கர்கோன்சென்ருன்
சஞ்சத்தநாரணகோபாலர்கள்வந்தார்த்தார்
சினங்கொடுமால்கொல்லென்ருன்கிரீடிஇந்த்ராஸ்
திரத்தாற்கொன்ருனரசன்பின்பனந்த
சனமருவவந்தெதிர்த்தான்தருமனப்பா
தகனைநிராயுதனுக்கித்தரையின்மீது
மனமெரியநின்றிடச்செய்தவனைப்பார்த்து
வைகுவான்எளிதங்கள்செய்குவானே.

௩. தரு-இராகம்-கல்யாணி-சாப்புதாளம்.

பல்லவி.

எதுக்குப்படுகிருய் துக்கந்-துரியோதனு
இலையாகொஞ்சமும்வெட்கம்.

அநுபல்லவி.

சாதிக்கிறேனென்று வந்தையோபெண்டு
சாகக்கொடுத்தோன்போற் றலையைக்கவிழ்ந்துகொண்டு
எதுக்

சரணங்கள்.

௧. தீயசகுனிசூதால் எங்கள்நாட்டைகிரகித்து
தெரிவையைச்சபையில்வஸ்த் திரபங்கஞ்செய்வித்து
வாயினுலேபிதற்றி வலதுகாட்டிச்சிரித்து
மகிழ்ந்தாற்போலிங்குமகி ழாமற்கையைவிரித்து
எதுக்

௨. பாம்பரைஆண்டியானுற் றெரியும்பற்பலவிதி
பஞ்சத்தாண்டிநீஉனக் கேதுதருந்தமதி
அரும்பாச்சிகையானல் ஆடிச்செய்வாய்சதி
அம்பாற்சண்டைசெய்ய ஆகாமனூற்றவிதி
ஏதுக்

௩. அதுலவீமன்சொற்பழு தாமென்றெண்ணிக்காளை
யாமுனைவிடுத்தேனில் லாவிடினுன்மூளை
சிதறஅடிப்பேன்இந் நேரமதற்கும்வேளை
சோராததாற்சண்டை செய்யநீவாநாளை
ஏதுக்

---

## துரியோதனன் தருமனல் மரணமூர்ச்சையாகி விழ்ந்து தெளிந்தோடிமறைந்தனன். தருமார்ச்சுனரால் இறந்தவர்போக மற்றவர்கள் அவரவர் பாசறையிற் சேர்ந்தபின்பு சூரியன் மறைந்தானெனல்.

விருத்தம் ௫.

தருமனீதுரைக்கத்துரோகியோர்தண்டந்
தனைவிட்டான்அதைப்பொடிசெய்து
சத்தியாலவன்மார்பினைத்துளைசெய்யச்
சவமெனமூர்ச்சையாய்வீழ்ந்தான்
நிருபன்மாண்டானென்றனைவரும்வந்து
நெருங்கிஅன்புடனுபசாரம்
நேர்மையாய்ச்செய்யக்களைதெளிந்தெழுந்து
நீங்கினனோர்புறம்அப்பால்
வரும்படைமன்னர்யாவருமொன்றாய்
வளைந்தனர்தருமனப்பார்த்தன்
வடவைபோற்பொங்கிவளைந்தவர்சிரங்கள்
மண்மிசைமலைகள்போற்குவிய
சரம்விடும்போதுதறிந்தவர்போகத்
தப்பினோர்பாசறைசேர்ந்தார்
தபனனுமறைந்தான்பாண்டவர்களித்துத்
தமதிடஞ்சென்றுசேர்ந்தனரே.

## பதினேழாநாட்போர்.

---

### தருமன் கிருஷ்ணனைப்பார்த் தின்றைக்கு அருச்சுனன் கன்னனைக்கொன்று வெற்றிபெறுவானோவென அவர் அவ்வாறே உன்கண்முன்னாக நடக்குமென்று சொல்லத் தருமன்மகிழ்ந்து கிருஷ்ண மூர்த்தியைப் புகழ்ந்துபேசுதல்.

விருத்தம் சு.

பதினேழாம்நாட்சக்கிரபதியுஞ்சேனை
பதிகன்னனுந்தளமும்பகைமிகுந்து
விதியாகக்களத்தில்வந்தார்தர்மனும்அவ்
வேளைபடையொடுவந்துசேர்ந்துமாயன்
மதிமுகம்பார்த்தின்றுகன்னன்தன்னைக்கொன்று
வருவானோகிரீடியெனமாலவ்வாறுன்
னெதிர்நடக்குமெனத்துன்பக்கடலில்நின்று
மேறினான்ஐயனிசைகூறினானே.

சு. தரு-இராகம்-சாரங்கம்-அடதாளம்.

பல்லவி.

இந்தமட்டும்உன் னருளாலே-பிழைத்தோமின்னமும்
இரங்கிமுற்றிலுங் காத்தருள்மென்மேலே.

அநுபல்லவி.

அந்தமிகுந்தவை குந்தநிரந்தரா
தந்திரமிகுந்தகோ விந்தசவுந்தரா
இந்த

சரணங்கள்.

க. கங்கையில்வசியின்மேல்-வீழாமல்வீமனைக்
காக்கவண்டுருவாய் வந்தாய்-உன்
றங்கைபாஞ்சாலி-கிருஷ்ணாவென்றழைத்திடச்
சார்ந்துமாளாத்துயில் தந்தாய்
துங்கத்தூர்வாசருக்-கன்னமிட்டெங்கள்
துயர்போகவேமனது வந்தாய்-இரு
பங்கயப்பாதஞ்சிவக்க-ஐயோஅந்தப்
பாவிபால்தூதும் நடந்தாய்
சிங்கமாம்விதுரன் சிலையைப்போக்கிச்
சீலன்அஸ்வத்தாமன் பட்டதைநீக்கி
அங்கம்பூரித்திட அன்பையுண்டாக்கி
அருளாலெங்களைவிட் டாயேகைதூக்கி
இந்த

உ. கோலப்பார்த்தன்-றனைத்தெளிவித்துக்
கொடுஞ்சண்டைசெய்ய விடுத்தாய்-காத்
தாலேஆயுதந்-தீண்டேனென்ப
தையுமகற்றிச்சக்கர மெடுத்தாய்
சிலபீஷ்மர்-தமைக்கொல்லச்
சிகண்டியைவிடக்கிர்பை தொடுத்தாய்-ஒரு
வேலைக்கதையை-மார்பினிற்றாங்கி
விஜயன்றனக்குயிர் கொடுத்தாய்
தூலபாசுபதம் வரக்கூட்டி
சூரியனைப்பதி நாலாநாளோட்டி
ஏனுங்கிரீடிக்குச் செயத்தைநாட்டி
எங்களைக்காத்தாயுன் னன்பைப்பாராட்டி
இந்த

ங. வரதவானவ-மாதவயாதவ
வமிசபூ பாலா-கன
விரதவிபுத-விஜயவிக்ரம
வேணுகான லோலா
பரமபக்த-தயாபரபதித
பாவனகோ பாலா-அதி
சரதசங்குசக்ர-கதாகட்ககோ
தண்டகர சீலா
அரியபைங்கொண்டல் மேனிகொள்மாயனே
அண்டத்தைவெண்ணெய்போ லுண்டசெவ்வாயனே
சுரர்கள்நித்தமுந் துதிசெய்தூயனே
தொண்டுசெய்யெங்களுக் கண்டுஞ்சகாயனே
இந்த

---

கன்னன் துரியோதனனைப்பார்த்து எனக்கு சல்லியனைத் தேர்ச்சாரதியாகச் செய்வித்தால், மிகவும் நன்மை யாமென அவ்வாறே துரியோதனன் சல்லிய ராஜனை வேண்டுதல்.

விருத்தம் எ.

வாதனுதிட்டிரன்சொல்லால்மகிழ்ந்தான்அங்கே
மன்னனைப்பார்த்தக்கன்னன்பார்த்தனுக்குத்
திரமிகுசாரதியாலேமிக்கநாளுஞ்
செயங்கிடைக்குதப்பாகன்றனைப்போலிங்கு

ஒருசல்லியனிருக்கின்றுன்அவனென்தேரை
ஓட்டினுல்இன்றுயான்பாண்டவரைக்கொன்று
தரைமுழுதுமுனக்களிப்பேன்என்னமன்னன்
தாண்டினுன்சல்லியனேவேண்டினுனே.

ரு. தரு-இராகம்-மோகனம்-ரூபகதாளம்.

பல்லவி.

காக்கவேணுஞ்சல்லியபூபாலா-மிகுந்தயாளா
காக்கவேணுஞ்சல்லியபூபாலா

அநுபல்லவி.

ஏற்கும்என் னிதயமிகநொந்து
இரங்கிக்கேட்கும் வரந்தனேத்தந்து
காக்க

சரணங்கள்.

க. ஐவரைமாயன்-கைவிடாமல்
ஆக்கந்தந்து காப்பதுபோலே
நைவிலென்புங்கிற்-றெய்வமாகநீ
நாடிமெய்யன்பு கூடிமென்மேலே
காக்க

உ. நடுக்கந்தீர்ந்து-படுக்கமிருந்த
நலத்திலுயர்ந்த கெலிப்பில்வீறவே
கெடுக்கஎன்றனே-அடுத்துப்பகைவர்
கிடிநீங்கியென்றன் குடியீடேறவே
காக்க

ங. ஏற்றமாநீறு-பூத்தநெருப்பென்
றின்றுன்சேதி நன்றுய்த்தெரிந்து
வேற்றுமையின்றிச்-சாற்றவந்தேன்
வெறுப்பில்லாமலென் குறிப்பைஅறிந்து
காக்க

---

சல்லியராஜன் துரியோதனனேநோக்கிசூதபுத்திரனுகியகன்ன னுக்கு என்னேச்சாரதியாக விருக்கும்படி என்னமதியினுல் அச்சமில்லாமல் நீசொல்லவந்தாயென்றுமிகுந்தகோப முற்றுப் பேசுதல்.

விருத்தம் அ.

அரசன்உரைகேட்டசல்லியன்சமுத்திரஞ்சூழ்ந்த
அம்புவியனைத்தினுக்குங்கர்த்தனுக
மருவும்உனக்கொருத்ரணமாம்யான்கொடுக்கும்
வாமென்னமாயனேப்போற்காப்பதென்ன

தெரியஉரையெனமாயன்றனைப்போர்கன்னன்
தேரினிற்சாரதியாகவேண்டுமென்றான்
இருவிழிகள்சிவந்துகனலெழவேகையை
இடித்திட்டான்சல்லியனும்படித்திட்டானே.

௬. தரு-இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

என்னமதியால்என்னைச் - சாரதியாகச்சொன்னாய் - இசைத்திடுதுரியோதனா

அநுபல்லவி.

சன்னதங்கொண்டிவ்வார்த்தை என்முன்னுரைக்கலாமா
சாலக்கடுகுசிறுத் தாலுந்தன்காரம்போமா
என்ன

சரணங்கள்.

௧. எவர்க்கும்அரசனென்ற இறுமாப்பால்அல்லோநயம்
இல்லாதுரைத்தாய்உன் னதேகுண்டைதைரியம்
புவிக்குளுழைத்தையோஎப் போதுங்கொண்டுபயம்
புல்லைத்தின்னுமாட்டுக்குப் புலியாசெய்யும்ஊழியம்
என்ன

௨. புல்லும்பெரும்பாரத்தாற் பொருந்துங்கற்றாணொடிந்து
போம்வளைந்திடாத்து போலவிசைபொருந்து
நல்லமானிகளுயிர் விடுவாரல்லாற்பரிந்து
நங்கமாந்தொழிற்செய்யாரெந் நாளுமனதுவந்து
என்ன

௩. அயலார்சொன்னவிந்நேரம் அவர்களின்உயிருக்கு
அல்லல்தேடிநாக்கையும் அறுப்பேன்பொறுத்துனக்கு
தயவாயுயிர்பிச்சைதந் தேன்புவிக்குள்ளோர்திக்கு
சாதிகுலமில்லாத சூதபுத்திரனுக்கு
என்ன

---

## துரியோதனன் சல்லியராஜனே பிர்மா விஷ்ணு முதலானோர் சாரதித்தொழில் மேலானதென்று செய்திருகக அதை நீர் இழிவுபேசுதல், நன்மையல்லவென்றுரைத்து கன்னனுடைய பிரதாபங்களை அவன்கேட்கச் சொல்லுதல்.

விருத்தம் ௬.

சல்லியன்சொற்கேட்டமன்னன்இத்தொழிற்குத்
தாட்சியுண்டோபிரமனும்இத்தொழிலைச்செய்தான்
வல்லபமால்செய்கின்றான்உனக்குமுற்ற
வத்தினாலேபலித்ததில்லாவிட்டால்

எல்லவர்க்கும்பலியாதா அருணன்மால்நீ
யென்றுரைப்பானேன்கன்னன்மேல்வஞ்சத்தாற்
சொல்லுகின்றாயீதிழிவோவென அன்னோன்சீர்
துதித்திட்டான் அவன்மகிழமதித்திட்டானே.

எ. தரு-இராகம்-சாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தக்கன்னனுக்கு - மிஞ்சினபுண்ணியவான்கள் - எவர்சொல்சல்லியபூபதி.

அநுபல்லவி.

தொந்தகவசகுண்ட லத்துடனேபிறந்தோன்
சுவர்க்கவாகண்டலனுந் துதித்திடவேசிறந்தோன்
இந்த

சரணங்கள்.

க. சூரியதவகு மாரன்-கனவிலும்பொய்
சொல்லாதகுண சாரன்
பாரசோதிமயவிப வஞ்சேர்வஜ்ரசரீரன்
பஞ்சதாருவும்நாணி அஞ்சத்தருமுதாரன்
இந்த

உ. பரசிராமனெனும்பேர மைந்த-தீரன்
பாற்போய்வில்வித்தைகற்று வந்த
வாத்தோன்மிகுபிரதாப வள்ளல்மேலும்வைகுந்த
மாயனுக்கிணையாகப் பூதலத்தினில்வந்த
இந்த

௩. அடுத்தும்பர்கெடத் தீங்கும்-துயருஞ்செய்யும்
அசுரர்கள்மிக ஏங்கும்
படிக்குக்ரமிகுங்காண்டீ பத்தைக்கையினிற்றாங்கும்
பார்த்தனுயிரையுண்ணக் கூற்றுவன்போலோங்கும்
இந்த

---

துரியோதனன் சல்லியனைப்பார்த்து நீசாரதியாகச்சென்று
அருச்சுனனைக்கொன்று வெற்றி பெற்று வந்தா
லுத்தமமாமென, அவன் அதற்கிசைந்து
தேரைநடத்த கன்னன் அத்தேரி
லேறி யுத்தகளத்திற்போய்
சேருதல்.

விருத்தம் ம.

அரவகேதனனிவ்வாறுரைத்துன்னலின்
வருச்சுனன்மாண்டிடவேண்டுட்உலகையெல்லாம்

ஒருநடையில்நாளுளவேண்டுங்கன்னன்
உயர்ந்தவெற்றிபெறவேண்டுமாதலாலே
தாமொடுநான்சொன்னபடிசெய்யென்றேதச்
சல்லியனும்சம்மதித்தான்அங்கர்கோன்கேட்
டுசெம்பெறுமன்னேனுடன்தன்னிரதந்தன்னை
யூர்ந்திட்டான்ரணமுகத்தைச்சேர்ந்திட்டானே.

---

## கன்னன் சல்லியனைப்பார்த்து நெடுநாளாய் நான் அருச்சுனன்பேரில் கொண்டிருக்கிறபகைதீர இன்றவனைக் கொல்லாமல் விடுவதில்லை யென்று தனதுவல்லமையை பற்பலவாகப் புகழ்ந்துபேசுதல்.

விருத்தம் ௰க.

சேர்ந்தகன்னன்பார்க்கவமாமணிவகுத்தச்
சேனைகட்கெல்லாஅங்கேகாவலாகத்
தேர்ந்தசுயோதனன்முதலாம்வீரர்தம்மைச்
சேரஅமைத்துத்தனதுபாகனைக்
நேர்ந்தசல்லியபூபதியைப்பார்த்தென்நெஞ்சில்
நெடுநாளாக்கொண்டிருந்தவஞ்சமெல்லாந்
தீர்ந்திடஇன்றருச்சுனனைக்கொல்வேனென்று
சீறினன்தன்வலிமைகூறினனே.

அ. தரு-இராகம்-பேகடை-சாப்புதாளம்.

பல்லவி.

பாரின்றுவேடிக்கைஅன்புற்றே-என்தேர்ப்-பாகனுகநின்றுசற்றே

அநுபல்லவி.

வீரசல்லியபூபாளன் விக்ரமத்தைமென்மேலே
வெருண்டிடாமல்உன்றன் இரண்டுகெண்களாலே
பாரின்

சரணங்கள்.

க. பரசிராமர்கொடுத்த-வில்லொட்டம்பினது
பாரவிக்ரமசா கத்தைக்-கண்டு
அரசராகும்இந்த ஐவர்களும்பதைத்
தடையப்போ கின்றதத்தைப்
படையி லென்சமர்த்தைப்
பாரின்

௨. வீம்புபேசியென்னை-வெல்லநினைத்திருக்கும்
விஜயன்மிருந்தமன வேட்டை-கொண்டு
பாம்பொன்றினால்ஆவி பதைக்கப்பதைக்கத்துள்ளிப்
படப்போ கின்றபாட்டை
நொடிப்போதில் வருங்கேட்டை
பாரின்

௩. பாகனுனஉன்றன்-துணையைக்கொண்டிக்கொடும்
பகைவர்தம்மையெல்லாம் படுக்கிறேன்-இந்தச்
சாகாஞ்சூழ்புவி முழுதுந்துரைதுரைதுரியோ
தனனுளக் கொடுக்கிறேன்
சினமூள வடுக்கிறேன்
பாரின்

---

சல்லியன் கன்னராஜனே நீர் அனந்தசமயங்களில், அருச்சுனனால், அடிபட்டோடி வந்திருப்பதை மறந்து இப்போதவனைக் கொல்லுவேனென்று வல்லமையாகப்பேசுதல் வீணுகுமென கன்னன் சல்லியனைப்பழித்தல்.

விருத்தம் ௰௨.

நல்லியல்சேர்கன்னனுரைகேட்டசல்லியன்
நகைத்துன்வாயதினால்இவ்வகையாநித்தஞ்
சொல்லுகின்றுயல்லாமல்ஒருநாளேனுந்
தொடர்விஜயன்றனைவெற்றிகொண்டதில்லை
மல்லிலவனால்அநந்தவிசைநீதோற்று
வந்ததறிவாரெவருமென்னக்கன்னன்
பல்லைநெறநெறவெனவேகடித்தன்னேனைப்
பழித்திட்டான்கனற்பறக்கவிழித்திட்டானே.

௬. தரு-இராகம்-அடாணு-சாப்புதாளம்.

பல்லவி.

போதும்அடக்குப்பேசவந்தாய்த்தெரிந்தவனைப் - போலேசல்லியராஜனே

அநுபல்லவி.

சாதகந்தெரியாமல் ஏதுக்கிந்தப்பேச்சு
சண்டிபிடாரிதன்னைப் பெண்டுகொண்டாற்போலாச்சு
போதும்

சரணங்கள்.

௧. தேரோட்டவந்தநீயச் செயற்குள்ளவிபகாரஞ்
செய்துநில்லாமல்மனத் திடங்கொண்டுவெகுதூரம்

போராபிராஜகார்யத்தைப் பேசுகின்றாயிந்நேரம்
பித்தனைக்குருவிச்கேன் ஆஸ்தானராயபாரம்
போதும்

௨. பெரியபாம்பின்வாய்க்கிரை யாகஇயோஅபாக்யம்
பெற்றகிரீடிசெயித்துப் பெறுவானென்றாய்சிலாக்யம்
சரியவன்பலத்தையென் பலத்தைப்பகுத்துன்வாக்யந்
தன்னால்விரித்துச்சொல்லத் தானுனக்குண்டாயோக்யம்
போதும்

௩. தனஞ்சயனென்னுடனே சந்தித்துக்கொதித்துமோது
சமரைமனத்தில்அலட் சயமாய்நினைத்தப்போது
சினங்கொளாமற்காலம்பார்த் திருந்தேன்இந்தமண்மீது
தென்றல்முற்றிற்பெருங்காற்று மென்றுனக்குத்தெரியாது
போதும்

---

## கன்னன் பழித்துப்பேசக்கேட்ட சல்லியன் கோபமுற்று பிரபலகாண்டீபார்ச்சுனனைத் துதியாதவரும் உன்னைத்துதிப்பவருமில்லை ஆகையால் அருச்சுனனே ஜெயம் பெற்று வாழ்வானெனல்.

விருத்தம் ௰௩.

அங்கர்கோன்இந்தவகையுரைக்கச்சல்லியன்
அகங்கொதித்துப்பிரபலகாண்டீபவுக்ர
சிங்கமெனுங்கிரீடிதனைத்துதியார்இந்தச்
செகத்திலொருவருமில்லைஉன்றன்சீரை
எங்கெடுத்துத்துதிசெய்கின்றார்நான்கேட்ட
திலையிந்தமட்டுமுன்றன்நெஞ்சினுள்ளே
வங்கைவிட்டுப்பார்தெரியுமறைப்போபார்த்தன்
வயமென்றான்உனக்கெங்கேஜெயமென்றானே.

௰. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

பல்லவி.

மறந்துவிட்டாயோசற்றே-நினைத்துப்பாரையாகன்ன-மகாராஜனேஇப்போது

அநுபல்லவி.

சிறந்தவிஜயன்செய்த திருவிளையாட்டையெல்லாம்
மறந்து

சரணங்கள்.

௧. காலகேயநிவாத-கவசர்மூன்றுகோடிபேர்
கணையொன்றினாற்சாம்பலாய்க் கழிந்துபோகஅழித்து
வாலகேசரியெனச் சிலமுள்ளமேலோர்கள்
வாழ்த்திடப் பெற்றதையும்

எனுமிந்த்ரன்விடுத்தஇமையோரணிகிரீடத்தை
இரண்டாய்ப்பிளந்தக்கினிக் கியல்காண்டவனத்தைச்
சிலமாய்த்தந்துநெடுஞ் சிலைதூணியொடுமாயாத்
தேர்முதலாகப்பெற்ற செயலையும்அறியாயா
மறந்து

௨. சித்திரசேனனெனுங்-கந்திருவனுலரசன்
சிறைப்படவிட்டெல்லோருந் திகைதிகைத்துக்கலங்கி
உற்றஇடந்தெரியா-தோங்கும்அவ்வனத்தினில்
ஒளித்துக் கொண்டபோது
மித்திரவிஜயன்இந்த-வேடிக்கைதனைப் பார்த்து
விரைந்துவந்துமுடி வேந்தன்சிறையைமீட்டுத்
தத்தளிக்குமுங்கள்வருத் தங்களைத்தீர்த்ததையுந்
தாரத்துடனேஅஸ்த்தின புரத்தினிற்சேர்த்ததையும்
மறந்து

௩. கூட்டமாஞ்சேனைபீஷ்மர்-குருமுதலாம்பெரியோர்
கொற்றவனீஅனந்த கோடிமுடிவேந்தர்கள்
பூட்டகஞ்செய்துமாட்டை-மடக்கஅவ்விராட
புரத்துக்குப் போனபோது
ஓட்டைரதத்தையுத்ர-னோட்டவதனி லேறி
உங்கள்தளத்தையெல்லாம் பங்கமுற்றிடனூறி
சேட்டைசெய்தோர்ஆவிக்குச் செய்தஅபாயத்தையும்
திடங்கொண்டஉன்னுடலில் விடுமம்பின்காயத்தையும்
மறந்து

---

கன்னனும், சல்லியனும், மிருந்தகோபத்துடனே வாளை எடுத்து ஆர்ப்பரித்துநிற்கத் துரியோதனன்கண்டு சமரசப்படுத்தியனுப்ப அங்கேவந்திருந்த சேனைகளைப்பார்த்து கன்னன் சல்லியனிடத்தில் தன்குறைகளைச்சொல்லி முறையிடுதல்.

விருத்தம் ௰௪.

சல்லியனுரைக்கக்கேட்டஅக்கன்னன்
தனஞ்சயன்தேர்விடமுக்கட்
சம்புவேவரினும்படைத்துணைஅமரர்
சாரினுங்கொல்லுவேனென்ன
வில்லியல்மத்திரன்சிங்கத்தையானை
வென்றிடுமெனில்விஜயனைநீ
வெல்லுவாயென்னஅங்கர்கோன்பொங்கி
வெட்டுவேனென்னவாளெடுக்க

...லியனுந்தேன ... ங்கி
வாளெடுத்தெதிர் ... றன்
மன்னவன்கண்டங்கிரு ... ற
வன்பகைதடுத்தம...
செல்லுமென்றுரைத்தா ... மகிழ்வாய்த்
தேர்மிசையேறமன்...
செறிந்திடும்போதுசல்யனைப்பார்த்துத்
தினகரன்மதலைகூறுவனே.

௰க. தரு-இராகம்-பூரிகாரி-சாப்புதாளம்.

பல்லவி.

எனக்குவந்தவிதி-தன்னைக்கேளாய்மக-ராஜசல்லியபூபதி

அநுபல்லவி.

மனத்திடத்தாற்செய்யுஞ்சென் மாந்திரபாபத்தினாலே
வசனித்திடும்ஒருபொய் வார்த்தையாற்புவிமேலே
எனக்கு

சரணங்கள்.

க. வீரபரசிராமர்தமைக் கண்டு-தனு
வித்தைகற்பிக்கவேண்டுமெனத் தொண்டு-மிகு
விநயமாச்செய்யும்போது கிர்பைதழைத்து-மன
விருப்புடனெனையரு கினிலழைத்து-உன்
பேராமுன்குலமென்ன சொல்லெனவேநல்ல
பிர்மகுலமென்றுநான் பின்புத்தியாற்சொல்ல
ஆரியன்நம்பிபிர்மாஸ்த் திரந்தந்துபதேசிக்க
அமராவரைநோக எமகண்டமாமிக்க
எனக்கு

உ. குருவென்துடைமேல்அன்பு கொண்டு-படுத்துக்
கொண்டாரிந்திரன்விட்ட வண்டு-மிகக்
குடைந்ததென்தொடையயவ் வருத்த-மதைக்
கொண்டுநான்பொறுத்து மிரத்த-மெங்கும்
பாவித்ததனால்நித்ரை பங்கமாயிதென்ன
பாவமெனநடந்த படிநான்நிசமாப்பன்ன
சரிநீபிராமணன்அல்ல வென்றுகொண்டேகோபம்
சமரிற்தோற்பாயென்று கிரமமாஇட்டார்சாபம்
எனக்கு

ங. இதுவன்றியும்நான்தேர் மீதி-லேறி
இராஜவீதியிற்செல்லும் போதி-லொரு
இளம்பசுவின்கன்று தாவி-தேர்க்கிழ்
இறந்ததம்மாவென்று கூவி-அந்தப்

பதலாமைகண்டொரு பதறவனுபசாரம் சதிராஞ்சண்டையில்உன்தேர்ச் தனைப்போற்சாவாயெ | பார்ப்பானெ லவந்து படித்தும்மனதிநோக்து சக்ரம்புதைந்துகன்று சபித்தானென்னெதிர்நின்று

இருவர்படை கலந்து பெருஞ்சண்டைசெய்தல்.

விருத்தம் ௰௫.

கன்னன்இந்தவகைசொல்லித்தேர்விடென்னக்
கனமிகுசல்லியன்விடுத்தான்துணையாவந்த
மன்னர்மற்றுமுள்ளபடைத்தலைவர்வேந்தன்
வாகினிகளுஞ்சூழச்சென்றான்அங்கே
பன்னரியநற்புகழ்பாண்டவர்கள்சேனை
பதிதிடத்துய்மனும்படையினொடுசெறிந்தான்
மின்னுமிருதளமும்நல்வேந்தர்களுஞ்சீறி
மேவினார்சண்டைசெய்யத்தாவினாரே.

௰௨. தரு-இராகம்-பந்துவராளி-சாப்புதாளம்.

பல்லவி.

நேர்ந்துகொண்டதேசண்டை-விபரீதமாய்
நேர்ந்துகொண்டதேசண்டை.

அநுபல்லவி.

தேர்ந்ததுரியோதனன் சேனைகட்குமொருக்காலே
தீரமிகும்பாண்டவர் சேனைகட்குமண்மேலே
நேர்ந்து

சரணங்கள்.

௧. தேர்மன்னவர்களுடன் தேர்மன்னவர்களுஞ்
சிந்துரக்காரருடன் சிந்துரக்காரர்களுந்
திகழ்பரிக்காரருடன் திகழ்பரிக்காரர்களும்
சிலைவல்லோர்களுடன் சிலைவல்லோர்களும்
தேர்ந்தமர்செயப் பார்த்து-கன்னன்மிகுந்த
சினத்துடனே யார்த்துச்-சிலைவளைத்துத்

திடமுறுகணையுல கிடர்கொளவிரைவினிற் சொரிந்து
கடுத்திடப்பார்த்
தடர்திருஷ்டத்துய்மன்கணை முடிகியெய்தனலென எரிந்து
நின்றனனன்னோன்
நெடியதேர்மிசைமூர்ச்சை படக்கன்னன்கொடுஞ்சமர் புரிந்து
சென்றபின்வந்த
விடசேனனும்பீமனும் படிநடுங்கிடக்கோபம் விரிந்து
போரிடும்போது

வெற்றிகொள்வீமன்மீதில்
அஸ்திரங்களைக்கன்னன் தூக்கி-எதிர்க்கவீமன்
சித்திரக்கணையாலெதிர்த்த்
அன்னோனைக்களை யாக்கி-சாரதியான
உத்தமச்சல்லியனை
மெத்தவும்அன்புடனே கன்னனுக்குன்னால்
இத்தினம்வீரமென்
றுரைத்துப்பலாழியப் போக்கிச்-செல்லச்சாத்தகி
ஏர்கொள்விடசேன னோடார்வமாகொடிய
போர்செயச்சோழனால் மாகதனுமடிய
சார்பாண்டியனாற்பல பேருயிரேமுடிய
வேறுந்திந்தப்பெரும் பார்முழுதுமிடிய
நேர்ந்து

உ. வருமஸ்வத்தாமனுடன் தனஞ்சயன்போரிட்டு
மணித்தேர்தனைஅழித்து மண்மீதிலோடவிட்டு
மகிழ்வுகொள்நற்சுதாக்கண னென்போன்வில்லைத்தொட்டு
வரஅவன்முன்னகுலன் மறலிபோலெதிர்ப்பட்டு
வடிவாளிகளை யுரத்தி-லேறவிட்டவன்
மருண்டோடவே துரத்தி-வீறவேகன்னன்
மற்படையுடனே கதித்தனனெனவே சினந்து-வரவேநல்லு
திட்டிரன்கண்டுலகந் திப்பிர்மைகொளவே எதிர்ந்து-நிற்கஅங்கர்கோன்
ஒப்பறுகணைவிட வப்பிரமுகன்மனது வெந்து-துடித்துக்கன்னன்
கைப்படைதனையொருநற்பெருங்கணையால் அரிந்து-அவன்மெலியக்
காரெனச்சரமழை
நேர்மையொடுபொழிந்து மீறி-மருவஅப்பால்
பேர்கொள்சுயோதனன்தம்பி
மார்கள்ஆறுபேர்வீரங் கூறிக்-கனகமணித்
தேர்களுடனேவந்து
சீர்கொள்பீமனைக்கண்டு சீறிக்-கையிற்பற்றிய
வார்சிலையைவளைத்துக்
கூர்மைகொள்பாணங்களைத் தூறி-வளைந்துகொள்ள
மதவீமன்கண்டவர்க ளிதயம்பதைத்துநோகச்
சிதையவதைத்தாவியற் புதஞ்சேர்விண்ணுலகேக
அதிவிரைவினிற்செய்யக் கதிகொண்டதாற்றிரிலோகம்
மதிகதிர்நட்சத்திரம் அதிர்ந்ததிப்படியாக
நேர்ந்து

௩. தக்கவிப்பிரகுலத்திற் தலைமைபெற்றேனெனுந்
தனுபண்டிதனனவுத் தண்டஜெயகிர்பனும்
சண்முகநாதனைப்போற் சாரும்அஸ்வத்தாமனும்
தகைபெ... தரித்தகிருதபன்மனும்
சார... ...தித்து-பாண்டவர்தளங்
தய௩ ...மதிர்த்து-முடுகிநிற்கும்

தாட்டியைத்தம்பியரொடீட்டமாவருந்தர்மன் ஆகம்-பதைக்கக்கண்டு
நாட்டமாச்சென்றுயிரைவாட்டும்வெங்கணைகள நேகம்-ஆகத்தொடுத்து
ஆட்டங்குலையச்செய்ய மேட்டியாங்கன்னன்தன்நிர் வாகம்-தனைமுழுதும்
காட்டியுதிட்டிரனை மாட்டிமார்பிலிரத்தப்பிர வாகம்-ஓடவேயேழு

கணைவிட்டுத்தோளிலெட்டுக்
கணைவிட்டுமயங்கிடச் செய்து-கர்ஜ்ஜிக்கதர்மன்
துணிவுற்றுநோக்கியப்போ
திணையற்றஒருகணை பெய்து-மார்பைத்துளைத்து
மணிச்சித்திரதத்தையுந்
துணிப்பட்டுபோகக்கணை எய்து-மருவநல்ல
குணமுற்றகன்னன்தர்மன்
திணியுற்றதேரைவில்லைக் கொய்து-மிகவுமோங்கக்

குரூரமாய்த்தர்மன்அவன் றேரைப்பின்னுமொடிக்கச்
சூரியன்மகனந்த வீரனேட்டம்பிடிக்க
ஓரிமைப்பிற்செய்துகெம் பீரமிகப்படிக்க
வாரணமெட்டுமிக விரிட்டுளந்துடிக்க

நேர்ந்து

---

## தருமன் சமர்செய்து நிராயுதனாக கன்னன் பழித்தல்.

விருத்தம் ௧௬.

விருதுசேர்தர்மனிந்த விதமாகச்சமர்புரிந்து
மருவுதேர்வில்லழிந்து மண்மீதுநிற்கஅந்தப்
பரிதிதன்மதலைபார்த்துப் பரிந்துமுன்னணுகியன்னோன்
பெருகியசீரனைத்தும்-பேசுவானேசுவானே.

௧௩. தரு-இராகம்-ஆநந்தபைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

நீதோற்கலாமா-தர்மபுத்திரா-இன்னிந்தனைபோமா

வி.

ஆர்தோற்ருலும்நின் இல்லை அரியவெற்றி
அடைந்துபுவனமெ ஆண்டசக்கரவர்த்தி

க. முத்தலந்துதி கலசாஸ்த்ர
முமுறைதெரிந்தசற் ரன்
தத்துவமிருந்த தவர்முதலாஞ்
சகலர்க்குமிரு நேத்ரன்
உத்தமர்க்குத்தமன் ஒருபொய்யுரையாநாவன்
ஊனமில்லாதநி தானமகானுபாவன்

நீதோற்க

உ. தனஞ்சய ஞெடுமிக்க-சௌரியமுள்ளத்
தம்பிமார் பூசிக்க
இனங்களெல்லா மதிக்க-பலபேர்தெய்வ
மெனஅன்பாற்கை குவிக்கக்
கனங்கொள்வதனசோமன் சற்றோர்மகிழும்நேமன்
கனகசிம்மாசனப் புனிதசார்வபூமன்

நீதோற்க

ங. தாலமீதுயர் சீலன்-உறவினத்தைத்
தழையச்செய்பரி பாலன்
கோலக்கிர்பைவி சாலன்-பகைவர்தங்கள்
குலத்தையழிக்குங் காலன்
மேலுமோர்கவளமாய்த் தாலந்தனை அருந்தும்
வேதநாதன்துணையெப் போதுங்கொண்டிருந்தும்

நீதோற்க

---

## கன்னனும், அருச்சுனனும், போர்செய்தல்.

விருத்தம் ௰எ.

அங்கர்கோனிவ்வாறுரைத்துமாருதியோ
டமர்செய்துகளையடைந்தெழுந்தங்
கடர்ந்தபாஞ்சாலரெழுவரைக்கொன்றான்
அர்ச்சுனனற்பரித்தாமன்
பங்கமாய்மூர்ச்சைகொண்டெழுந்தெதிர்த்த
பாண்டியன்றனைக்கொன்றுநிற்கப்
பரவுசஞ்சத்தர்சினத்துடனெதிர்க்கப்
பார்த்தன்அன்னோர்களைஅழித்துச்

சிங்கம்போலோங்கி... ...ன்
திருமுகம்நோக்கி
தேர்விடுவிஜயன்மீதென
...ருவினில்நால்வ... ...
...ர் ...தாற்
...ன அதனைத்
...ான்விஜயனுங்கோபந்
...தெதிர்த்தனனே.

௰௪. தரு-இராகம்-...ட்டை-ஆதிதாளம்.

பல்லவி.

அர்ச்சுனராஜனுக்கும் - கன்னராஜனுக்கும் - அடர்ந்துகொண்டதேசண்டை

அநுபல்லவி.

கர்ச்சனைசெய்யெழு மேகங்களுங்கரிய
கடலும்புவியும்பற்றி மடமடென்றெரிய
அர்ச்சுன

சரணங்கள்.

க. பார்த்திபரெல்லாங் களைத்துப்-புவியில்வீழப்
பாரதனுவை வளைத்து
ஏற்றண்டந்தனைத் துளைத்துப்-போடுங்கணை
எண்ணிலாமற் கிளைத்து
ஆர்த்திட இவர்வீறி
ஆலகாலம் போற்சீறி
கூர்த்த பௌரிஷங்கூறிக்
கொண்டு பகையால்மீறி
கொலைபுரிபலகணை சலமொடுகரங்களி லெடுத்து-அண்டத்தைமுட்டும்
மலைகளுமுடைபட அலைகடல்மறைந்திடத் தொடுத்து-அனந்தங்கோடி
சிலைபெறும்அரசர்கள் நிலமிசையிறந்திட வடுத்துக்-கணைகளெய்து
பலதிரள்களைஎம னுலகினைஅடைந்திட விடுத்துக்-கடுகடுத்துப்
பற்றியநற்றிசை யுற்று மதப்படு
கைக்கரியெட்டும் வருத்தமிகுத்திடப்
பகர்பதிநாலுலக மிகவுயிர்ப்பொடுநோக
மகபதியோடமரர் வெருவஇப்படியாக
அர்ச்சுன

உ. வீரமானுமென் மேலே-ஓங்குங்கார்த்திகை
வீரனும்முன் ...ஞ்லே

கோரமாநேர்ந்தாப் போலே-பகையில்நேர்ந்து
கொண்டிந்தப்புவி மேலே

ஆரும் நெஞ்சத்திகைக்க
அரிஅயனும் பிர்மிக்க
மேரு மலையுமிக்க
வேராறுங் தாடிநிற்க

மின்னுசீர்பெறுகிரீடி கண்ணிணையனலெனச் சிவந்து-பலகணையை
கன்னன்மேல்விசையாக விண்மழைநிகராதாச் சொரிந்து-கர்ஜ்ஜிக்கக்கன்னன்
வன்னிபோலெதிர்நாடி யுன்னருமடர்சின முதிர்ந்து-தனஞ்சயன்மேல்
மன்னுகூர்முகவாளியெண்ணறவகையொடு பொழிந்து-கனமிகுந்து

மற்பெறு வஜ்ர மலைக்குநிகர்த்து
வயத்தின் மிகுத்த புயத்தினுறத்தொடு
மருவஇவனுமுக்ர காலனெனவேகொதிக்க
அரியவரசாற்பி ஞெடுசமமாத்துதிக்க

அர்ச்சுன

௬. முனைஅசுரர்கள் தேகம்-வீழவேநிர்ம்
மூலஞ்செய்தேம லோகங்
தனிற்சேர்த்தரிய மாகந்-தன்னிலிந்த்ரான்
தழையப்பட்டாபி ஷேகங்

கனமுடனே செய்வித்த
கண்யலோகப் பிரசித்த
தனஞ்சய னந்தசுத்த
தபனன் மகனைப்பற்ற

தகைபெறுமாயிரங் கணைகளை அத்ததியிற் றூற்றி-மருவக்கன்னன்
பகையுடனுயிரங் கணைகளைவிட்டதனை மாற்றி-பார்த்தனுரத்திற்
றொகைபெருமாயிரங்கணைகள்தைத்திடும்வகை யேற்றி-ஓங்கவிஜயன்
புகைவிடுமாயிரங் கணைவரிமக்குரிசில் கீர்த்தி-பெறும்புயத்திற்

பொற்று மிகத்துளை யிட்டு வருத்த
விடுத்து மனத்திணி வுற்று மதிப்பொடு
பொங்கமுடியாவு மங்கியுடல்நெளிக்கவே
தங்கமுடிமகிபர் அங்கலறியொளிக்கவே

அர்ச்சுன

## கன்னனைக்கொன்று வெற்றிபெற்றுவராத அருச்சுனனைத் தருமன் கோபித்தல்.

விருத்தம் ௰அ.

இருவருமிவ்வாறமர்புரிந்தெனைத்தி
ரதத்திடைதயங்கிடமாயன்
இசைகொள்கிரீடியைப்பார்த்தேன்சமர்விடுத்தா
யெனஅவன்கன்னனைப்பார்க்கிற்
றருமனைப்போலேயிருக்குதென்கையிற்
சாபமும்வளைந்திலையதனாற்
றக்கவென்றமையன்முகத்தைநோக்காமற்
சமர்செயேனெனஇரதத்தை
விரைவொடுதிருப்பித்தருமவேந்தெங்கே
மேவினனெனச்சகோதரர்கள்
வீறியகன்னனாற்சமர்தன்னில்
மெலிந்துயர்பாடிவீடதனில்
மருவினனெனச்சென்றவன்றனைத்தருமன்
மடித்தையோகன்னனையென்றான்
மாயவனிவனைத்துவந்தனனென்ன
மகிபதிசினந்துகூறுவனே.

௰௫. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

போபோஇங்கென்னகாரியம்-போபோநில்லாமல்அப்பால்- போபோஅர்ச்சுனா

அநுபல்லவி.

தீபாக்கினிக்குமுன்பு சென்றுமடியும்அந்தாய்த்
திகழுக்கன்னனைக்கொன்று தீராமலேன்வந்தாய்
போபோ

சரணங்கள்.

௧. செருக்கும்அக்கினிதேவன்-தேருடனேகொடுத்த
திவ்யகாண்டீபத்தையுந் தொட்டாய்-ஈசன்
வெறுப்பில்லாமற்கொடுத்த-பாசுபதமும்பெற்றாய்
மேதினிக்குள்ளேவெகு குட்டாய்-மாயன்
இறுக்கிவிடுந்தேரினி-லுக்ரஅனுமக்கொடி
யேழுலகும்நடுங்க இட்டாய்-முடிவில்
அறுக்கமாட்டாதவனுக்-கன்பத்தெட்டருவாள்போ
லடைந்தபடையையெல்லாம்
அனியாயஞ் செய்துவிட்டாய்
போபோ

௨. இட்டசூதாலிராச்சியம்-போனபோதேசும்மா
இருந்திடாமற்கடு கடுத்தாய்-கடுத்துப்
பட்டவர்த்தனர்கேட்கக்-கன்னனுடனேசண்டை
பண்ணிக்கொன்றிடுவேனென் றடுத்தாய்-அடுத்துத்
தட்டிக்கொடுத்தேயென்னைக்-காரமேற்றியிதனிற்
றலையிட்டுக்கொள்ளும்படி விடுத்தாய்-இன்று
கட்டினவனையுங்கறந்-தவனையும்பேயாக்கி
காசுக்காகாமற்கா
ரியத்தையெல் லாங்கெடுத்தாய்

போபோ

௩. கன்னனை இப்பொழுது-போமுன்கொல்லாவிடில்நீ
கையிற்பற்றியகாண் டீபம்-தனக்
கென்னமகிமைஇப்போ-தில்லாமல்அதனாலே
இனிமேல்வரப்போகுதோ லாபம்-இது
முன்னமேதெரிந்தால்-இந்தசோலிக்குவந்து
முழிப்பனோபெற்றுமனஸ் தாபம்-ஐயோ
குன்னம்நேர்ந்ததுமன்றி-என்னமோஅவ சரக்
கோலமள்ளித்தெளித்த
கூறுச்சு துன்பிரதாபம்

போபோ

———(*)———

## தருமனைக் கொல்லுவேனென்றெழுந்த அருச்சுனன் மனதை கிருஷ்ணமூர்த்தி தேற்றுவித்தல்.

விருத்தம் ௰௯.

இசைத்தருமனுரைகேட்டபார்த்தன்கோபித்
தெனையிகழ்ந்தாய்நியாயந்தான்காண்டீபத்தை
வசையுரைப்போர்களைமுடிப்பேனெனயான்சொன்ன
வசனமதைக்கேட்டிருந்தும்பயப்படாமற்
பிசகுரைத்தாயுனைமடிப்பேனெனநீள்வில்லைப்
பிடித்திடமால்அவன்றனைச்சேர்த்தணைத்தேஅண்ணன்
மிசைவருமாஇக்கோபமென்றன்றனை
விலக்குவான்அவன்மதியைத்துலக்குவானே.

யசு. தரு-இராகம்-தோடி-சாப்புதாளம்.

பல்லவி.

இப்படியார்செய்வார் - போதும்போதும்உன்னை - இதற்காவளர்த்ததர்ச்சுன

அநுபல்லவி.

சர்ப்பனைக்காரன்றலையைத் தறிட்டிடப்பயந்தாயே
தர்மமூர்த்தியாம்அண்ணன் றனைக்கொல்லவந்தாயே
இப்படி

சரணங்கள்.

க. இதங்கொள்பெரியோர்தமக் கிஷ்டமுள்ளோர்மேற்குற்றம்
இயம்புவாரன்றிப்புகழ்ந் திட்டுக்கொள்வாரோமுத்தம்
அதையோர்பேச்சாஎண்ணி வீணுகச்செய்தனர்த்தம்
அடிமடியிற்கைபோட அடுத்தாய்மிகுந்துபித்தம்
இப்படி

உ. பதறிக்காண்டீபத்தைப் பழிப்போர்களைஅன்னேரம்
பாரிற்கொல்வேனென்ற படிக்குச்செய்வதேவீரம்
அதைக்காட்டுமிடத்திற்காட் டாமல்நீவெகுதூரம்
ஆடிவுள்வீட்டிற்கன்னம் போடுவதோகம்பீரம்
இப்படி

ந. அன்பாகதூஷித்த அண்ணன்கருத்தையொட்டி
அறியாமல்அவமதி யாலேயெதிரிற்கிட்டி
வன்கொலைபுரிந்துபா வத்தைமூட்டைக்கட்டி
வாழ்வாருமுண்டோநீ வந்தாயேதொடைதட்டி
இப்படி

---

## வீமசேனனுல் துச்சாதனனும், அவன் தம்பிமார்களும் இறத்தல்.

விருத்தம் உய.

மாலுரைக்கும்போதுதன்மனடவிசே
மனமறுகிச்சென்றனன்மால்கிரீடியோடி
கோலமுறவணங்கியுபசரித்துமுன்போற்
குருக்ஷேத்ரஞ்சேர்ந்துபகைமிகுந்துபார்த்தன்
தாலநடுநடுங்கநின்முன்பாவிதுச்சா
தனன்பத்துத்தம்பியர்கள்சூழவுக்ர
காலனெனவீமனெதிர்அடுக்கப்பல்லைக்
கடித்திட்டான்அவனுயிரைக்குடித்திட்டானே.

க. திபதை-இராகம்-அடாணு-ஆதிதாளம்.

## கண்ணிகள்.

க. பாவிதுச்சாதனன்-ஆவியைக்குடிக்கப்
பதறும்வீமன்முன் ஆர்த்து-மிக்கச்
சேவகஞ்செய்பத்து-தம்பிமாரைச்செக்கச்
சிவந்தகண்களாற் பார்த்து

உ. வில்லைக்குனித்தொவ்வொரு-பாணத்தாலொவ்வொரு
வீரன்றலையைக் கொய்து-ஆவி
நல்லவிண்ணுலகேற-விடுத்துநின்றான்சகம்
நடுங்கஆர்ப்பாடஞ் செய்து

ங. தம்பிமாரிறந்த-தாழ்வைக்கண்டுதுச்சா
தனன்மிகத்துடி துடித்துப்-பாயும்
அம்பினாலேவீமன்-அங்கமெல்லாங்காய
மாக்கித்தேரை ஒடித்து

ச. மூர்க்கமாநின்றானதுன்-மார்ச்கன்கைவில்லைவீமன்
முறித்துத்தேரையும் போக்கினான்-அவர்
ஏற்கும்பெருங்கதையோன்-றேந்திமண்மீதில்நின்
றிறுமாந்தெமன்போல் நோக்கினான்

ரு. தேரைவிட்டுவீமனும்-பாரிற்குதித்தொருவச்
சிரக்கதைதனைத் தாங்கினான்-தாங்கி
வீரவுக்ரசிங்கம்போல்-மீறஅப்பாதகனு
மிஞ்சியெதிரில்வந் தோங்கினான்

சு. இருவருங்கதைகளைத்-திரமுடனேதாங்கி
இடம்வலமாக உலாவி-ஆரும்
வெருவஅகல்மூதண்ட-கோளம்படீரென்று
வெடிபடவே கூவி

எ. எழும்பிஅந்தரமட்டும்-புவியிற்குதித்துநின்
றிரண்டுதோள்களைத் தட்டியே-எட்டுச்
செழுங்கரிகள்வீரிடத்-தலையோடுதலையைச்
செந்தீப்பறக்க முட்டியே

அ. இடிக்கும்இடியுமஞ்சப்-பிடித்தகதைகளாலே
யெழும்பிஉழும்பி மோதியே-கடு
கடுத்துப்பின்னுமொருவர்க்-கொருவர்வீரவசனங்
களைக்குரூரமாய் ஓதியே

௯. தொட்டகதைகள்துணி-பட்டுப்போமளவும்
தொடர்ந்துநின்றப் பாலே-திசை
எட்டும்நடுநடுங்க-முட்டியுத்தங்தனக்
கெதிர்த்தார்கள்மலே போலே

௰. எதிர்த்தோரில்வீமனந்தப்-பதிதனைத்தூக்கித்தன்
இருகையிலேந்திக் கொண்டு-தீபோற்
கொதித்துத்திரிலோகமும்-பதைத்தொடுங்கிவருந்திக்
குமுங்கவேமனம்வெ குண்டு

௰௧. கன்னராஜனேஅண்ணா-துரியோதனருசூது
கற்றசகுனி மாமனே-முடி
மன்னர்களேதம்பி-மார்களேசமர்செய்ய
வந்தஅஸ்வத் தாமனே

௰௨. எனப்பெயர்களைச்சொல்லிக்-கூவிக்கூவிஇங்கே
இந்நேரமிகத் துள்ளும்-இவனைக்
கனவதைசெயப்போகிறேன்-வீரமுள்ளோர்வந்தென்
கையினில்மீட்டுக் கொள்ளும்

௰௩. முந்திமீட்டுக்கொள்வோரே-சுத்தவீரவர்கள்
முகத்திலுள்ளதே மீசை-பயந்து
பிந்தினால்வசைநேரும்-வாருமென்றனன்புவி
பிளந்திடக்கொண்டே யோசை

௰௪. இதைக்கேட்டயாவரு-மதிகலங்கிப்பின்னுங்
கிடைந்தையோதங்கள் வீர-மெல்லாம்
உதவாமல்அபலராய்ப்-பதைபதைத்தழுதங்
குற்றார்கண்ணீர் சோர

௰௫. அவ்வேளையினில்வீம-னவனைச்சபத்தைப்போலே
அவனிமீதினிற் கிடத்தி-வாயிற்
திவ்வியபற்களெல்லாந்-தூவும்பொரிபோற்சிந்தச்
செங்கைசலிக்கக் குத்தி

௰௬. இசையுமுடம்பிலுள்ள-விசைநரம்புகில்நரம்
பெனுநரம்புந் தெறித்துப்-போக
பிசகிடாமற்காலால்-விசைகொண்டமட்டுமூர்ச்சை
பெருகப்புரட்டி உதைத்து

௰௭. உதிரவெள்ளம்பெருக-வூட்டிதன்னைக்கடித்
தொருமிக்கவே சிரித்து-உயிர்
வதையவயிற்றைக்கிறி-மணிக்குடலைப்பிடுங்கி
மாலையாகத் தரித்து

௰அ. இத்தலத்திற்கற்புள்ள-வுத்தமிகுழலைத்தொட்
டிழுத்தகையிது தானே-என்று
உற்றவாளையுருவிப்-பத்துவிரல்களையும்
ஒன்றொன்றுஅறுத் தானே

௰௯. அறுத்தவாளினாலே-அங்கமெல்லாந்துளைக
ளாகவேகுத்தி ஆவி-தன்னைச்
செறியும்எமபுரத்திற்-சேர்த்துவிட்டும்அக்கோபந்
தீராமற்பகை மேவி

உ௰. அபலன்தேகத்திலிருந்-தாறுய்ப்பெருகுரத்த
மனைத்தையும்அள்ளிக் குடித்து-என்றன்
சபதமுடிப்பேனென்று-சார்ந்துநின்றான்பிரசண்ட
சண்டன்போல்வாயை மடித்து

உக. ஒப்பில்லாவுத்தமனீஅப்-பாவிஇரத்தமுண்ப
துயர்வல்லவா யாலே-சும்மா
கொப்புளித்துமிழ்ந்துன்றன்-கோபந்தீர்த்துக்கொள்ளென்று
கூறினானெடு மாலே

உஉ. அந்தப்படிதன்றுக-மடங்கக்கொப்புளித்துமிழ்ந்
தரும்படைதனிற் சேர்ந்து-உயிர்
நந்தஇரணியனைப்-பிளந்தநரசிங்கம்போல்
நடித்தானேகளி கூர்ந்து

---

## கன்னனை சல்லியன் வயிறெரிந்து பேசுதல்.

### விருத்தம் உக.

மாருதியிவ்வாறமர்ந்தான்சல்லியராஜன்
மனமெரிந்துகன்னனைப்பார்த்தையோகொஞ்சு
காரியஸ்த்தன்அவ்வீமனவனைவென்றக்
காளைதனைமீட்கவுன்னால்வகையில்லாமல்
தூரநின்றாய்அப்போதேதெரிந்ததுன்றன்
சூறுக்கினிகிரீடியைவென்றுவேந்தைக்காத்துத்
தாரணஞ்செய்வாயென்னேன்குடிக்குநீயே
சனியென்றான்சொல்வதென்னஇனியென்றானே.

யஎ. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

இத்தனைபாடும்இந்த-விபரீதமும்உன்னாலே-யல்லாலாரலேகன்ன

அநுபல்லவி.

நத்தியொருவரைவணங் காமல்இந்தப்படிக்கு
நாதனாகியதுரி யோதனன்தன்குடிக்கு
இத்தனை

சரணங்கள்.

க. நல்லோர்சொல்அவன்காதி-லேறவொட்டாமற்படி
நானேகிரீடியைக்கொல்வேன் என்றுயே-உன்னை
நம்பிஅவனமரி-லெதிர்த்தஎல்லோரையும்
நட்டாற்றினில்விட்டுநீ அகன்றுயே
சல்லியமவர்கட்கு-மாத்ரமாநீயுந்தான்
சாகஇத்தேர்மீதில் நின்றுயே-ஐயோ
தான்கெட்டதுமல்லாமற்-சந்திரபுஷ்கரணி
தன்னையுங்கெடுத்து
இன்னம் பேசுகின்றுயே
இத்தனை

உ. சண்டையிலொருநாளா-கிலும்நீயவனைவென்று
சாதித்ததுண்டாசொல்லுன் நலத்தை-மூளை
தன்னிற்றெரியும்வினை-யும்பயிர்க்குறிப்பிங்கு
தானறியாரோஉன்றன் பலத்தை
அண்டிஇராப்பகலாத்-தாறுகுத்திகுத்தி
அந்தப்பாண்டவர்கள்மேற் சலத்தை-வேந்தன்
அகத்தினிலுண்டாக்கி-யமமையொன்றுமூட்டி
யழித்துவிட்டாயேஎங்கும்
செழித்த ராஜகுலத்தை
இத்தனை

ங. இன்னம்பொலிகடாபால்-கறக்குங்கறக்குமென்றே
இதவாகச்சொல்லுமுன்றன் பேச்சே-முக்யமென்
றிருப்போருக்குன்னாலெள்-ளத்தனைபலன்கிடைக்கு
மென்பதுதான்கன வாச்சே
சின்னமாய்ப்பார்த்தனாற்-சாவதினும்நீயே
செத்தாலில்லையொரு எச்சே-இந்தச்
செகத்திலுள்ளபிரஜைக-ளெல்லாம்வந்துசேர்ந்து
தேலாமலழிந்துநிர்
மூலமா கிப்போச்சே
இத்தனை

## கன்னன் மிருந்தகோபமுற்று வீமனோடெதிர்த்தல்.

விருத்தம் ௨௨.

உத்தமனுஞ்சல்யனிவ்வாறுரைக்கக்கன்ன
 னொறுத்துத்துச்சாதனனைவீமன்செய்த
சித்ரவதைதனைப்பார்த்துக்கண்கள்பூத்துத்
 திகைத்தொன்றுந்தோற்றமல்நின்றேனல்லால்
சத்துருக்கட்கஞ்சிநின்றதில்லைத்தேரைத்
 தாழாமலோட்டெனஅன்னோனும்விட்டான்
எத்தலமும்நடுங்கிடப்போய்வீமன்றன்னை
 யெதிர்த்திட்டான்வடவையெனக்கொதித்திட்டானே.

---

## விடசேனன் இறந்ததைக் கன்னன்கேட்டு மூர்ச்சையடைய, அஸ்வத்தாமன் துரியோதனனுக்கு புத்தியுரைத்தல்.

---

## இதுவுமது.

விருத்தம் ௨௩.

அங்கர்கோன்வீமனுடனெதிர்த்தான்மன்ன
 ரனைவர்களுமொருவருடனொருவர்நேர்ந்தார்
துங்கவிடசேனன்நகுலனைவென்றார்த்துத்
 துலங்கஅவன்சிரத்தையொருஅம்பாற்பார்த்தன்
சங்கரித்தான்அதைக்கன்னன்கேட்டுமூர்ச்சை
 தனையடைந்துசல்லியஞ்ற்றெளிந்தான்அப்பாற்
பொங்குமஸ்வத்தாமனந்தமன்னன்முன்போய்ப்
 புல்லினன்நல்லமதிசொல்லினனே.

௰௮. தரு-இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தமட்டும்போரை-நிறுத்தினற்றுணமாவ-திருக்கலாம்புவிமேலே

அநுபல்லவி.

சந்திரகுலத்துரியோ தனராஜனெகொள்ளி
தலைக்குத்தேடிக்கொள்ளாமற் சார்ந்தபகையைத்தள்ளி
இந்த

சரணங்கள்.

௧. தருமராஜனும்நீயும்-பகைத்துப்பதினெட்டுநாள்
சண்டையென்றுகுறித்து நின்றீர்-நின்று
சகத்திலுள்ளபிரசைக-ளனைத்தையுஞ்சேர்த்தொருத்
தரையும்விடாமல்வீணிற் கொன்றீர்-இன்னம்
மருவிவொன்றரையிருப்-பதையுங்கொன்றுவிட்டிந்த
மண்ணைஎவ்விதமாள்வீர் காணும்-அதில்
மனதுக்கென்னசுகம்-யோசித்துப்பார்சுவரை
வைத்துக்கொண்டல்லவோ
சித்ர மெழுதவேணும்
இந்த

௨. வரவரக்ஷீரணமாத்-தம்பிமார்முதலோர்கள்
மடிவதைக்கண்டுமனஸ் தாபம்-மிக
வளர்ந்துவயிரெறிந்து-நின்றலைகின்றாயல்லால்
வந்ததோஎள்ளத்தனை லாபம்-நல்ல
கருவறிந்தபீஷ்மர்-முதலோர்களாலும்ஆ
காமல்மாண்டார்களிம் மண்ணில்-இனி
கடைந்தத்திற்காணுமற்-குடைந்தத்திலாகண்டு
கைகூடப்போகுதுசெ
வையா யோசனைபண்ணி
இந்த

௩. தூண்டிக்கொடுத்தின்னம்-மீந்தபிரசைகளும்நிர்த்
தூளியாப்போகக் கொல்லாமல்-கெட்ட
துர்மந்திரிகள்பேச்சைக்-கேட்டுவிலங்கைவிட்டுத்
தொழுவில்மாட்டிக்கொண்டு நில்லாமல்-செத்த
பாண்டுசிறியதந்தை-அசலானல்லஅந்தப்
பாத்யத்தைநான்சொல்வானேன் புட்டு-காச்சும்
பானையைப்பாராவிட்-டாலும்பாலையாவது
பார்த்துப்பாண்டவர்பங்கைத்
தீர்த்துக் கொடுத்துவிட்டு
இந்த

---

## துரியோதனன் கன்னன் மனோதுக்கத்தை மாற்றுவித்தல்.

விருத்தம் ௨௪.

குருசுதனீதுரைத்திடவேந்தெரிந்திப்பாரைக்
கொண்டுநான்வாழ்ந்திடஎண்ணும்போதுன்பால்

வருகின்றேனிம்மதிகேட்டிடவேபோரில்
மாய்வோனுக்கிவ்வசனமேனென்றோதித்
தாணிபுகழ்பரித்தாமன்றனக்கன்னேனுஞ்
சமர்நடத்தும்விதமுரைத்தேயழைத்துக்கொண்டு
பரிதிமைந்தனிடத்தினில்வந்தவனைஅன்பாய்ப்
பார்த்திட்டான்மனத்துயரைத்தீர்த்திட்டானே.

௰௬. தரு-இராகம்-மணிறங்கு-ஆதிதாளம்.

பல்லவி.

என்னஇப்படியானாய்கன்னா-புவியில் - இணையில்லாதவிற்பன்னா

அநுபல்லவி.

முன்னமிறந்தோர்க்கெல்லா முயங்கினேனாவெருண்டு
உன்னொருபிள்ளைபோரில் உயிர்விடுத்ததைக்கண்டு
என்ன

சரணங்கள்.

௧. மலைகலங்கினும்வழு வாரிதியும்விலங்கி
நிலைகலங்கினுங்கலங் காதநெஞ்சங்கலங்கி
என்ன

௨. வானும்மண்ணும்மயங்க வளைக்கும்வில்லைவிடுத்து
ஆனைதன்பலத்தினை அறியாதுபோற்படுத்து
என்ன

௩. முறையாம்உன்வீரத்தை முனையைவிட்டுத்துறந்து
உறவாயெனக்குச்சொன்ன உறுதிகளைமறந்து
என்ன

---

கன்னன் சல்லியனைத் தேரோட்டெனை, அவன் இன்றைக்கு
நீ சென்றால் வெற்றிபெறமாட்டாயெனல்.

விருத்தம் ௨௫.

துதியாகஅரசனிதுசொல்லக்கன்னன்
சோகந்தீர்ந்தென்னுடையமகனைக்கொன்ற
சதிகாரன்றனைமடிப்பேனென்றுகூறிச்
சல்லியனைப்பார்த்துவிடுதேரென்றோத

மதிமிகுசல்லியனீயின்றேகில்வீணு
 மடிந்திடுவாயன்றிவெற்றிநேர்வதில்லே
இதமாகளன்னுரையைக்கேட்டுநாளேக்
 கேகென்ருன்உனக்கதுவேவாகென்ருனே.

உ௰. தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்றுபோகாமல்நின்றுபோகன்ணு-நின்றுபோய்நாளேக்
கேகினுலுனக்கேஜெயம்வருமன்ணு.

அநுபல்லவி.

ஒன்றுமிஞ்சிக்கெட்டுப் போகயில்லேவைய
முரைக்கும்அர்ச்சுனனுடன் தருக்கிநீசண்டைசெய்ய
இன்று

சரணங்கள்.

க. ஊனமாப்புடவி திடுதிடென்றதிருது-பகலில்விண்ணில்
உலவுநட்சத்திரங்கள் பலபலென்றுதிருது
தேனுறுமலர்மாலே துர்க்கந்தம்வீசுது
தீயவாந்தைகள்கிர்த்தி யங்களேப்பேசுது
ஆனேகுதிரைகளழு தருங்கண்ணீர்வடிக்குது
அடிக்கடிஒகோஉன்ற- னிடப்புறந்துடிக்குது
இன்று

உ. கொடுமிரத்தமழைபெய்துன் கொடிநுனேந்திருக்குது-ஓரிகளெங்கும்
கூவிவூளயிட்டுத் தாவிமுன்செருக்குது
படையின்முனேகளெல்லாம் பற்றியேபுகையுது
பருந்துகள்வட்டமிட்டுப் பாதையைத்தகையுது
இடமாய்க்காக்கைகள்சண்டை யிட்டுத்தேர்மிதிற்றற்றுது
எரிகுரற்பல்லிக ளேகமாக்கூடிகத்துது
இன்று

௩.பருத்ததேர்சக்கரங்கள் பாரிற்புதைந்துபோச்சுது-நீதரித்தஆ
பரணவொளிபோய்இரும் பைப்போற்காணலாச்சுது
பொருத்தும்பெண்ணுனேக்குப் பொங்கிமதமொழுகுது
போரினிலெங்கும்நாய்கள் சூர்யனேப்பார்த்தழுகுது
அரற்றும்பேரிகைஓசை அடங்கிபோச்சுமென்மேலே
அருஞ்சந்தம்மார்பினுல ராதிருக்குதாதலாலே
இன்று

## அருச்சுனனும், கன்னனும், பெரும்போர் புரிதல்.

விருத்தம் ௨௬.

மத்திரன்இவ்வாறுரைத்திடக்கன்னன்
மகிமைசேர்நாகபாசத்தால்
வயம்பெறுகிரீடிமடிந்திடாவிடினுன்
வார்த்தையைக்கேட்கிறேனென்றான்
சித்திரத்தேரைச்செலுத்தெனச்சல்யன்
திரும்பிடானெனநினைத்துத்தேர்
செலுத்தப்போய்ஐவர்தள்ங்களைநீறு
செய்தனனோர்புறமன்னர்
அத்திரமழையாப்பொழிந்தொருபுறம்போ
ராடினர்அங்கர்கோன்மீதி
லருச்சுனன்தேரைச்செலுத்தினன்மாயன்
அவனும்நேராகவந்தெதிர்த்துச்
சத்தசாகரமுங்கலங்கவூதண்டத்
தகடுடைபடத்திசைசுமக்குந்
தந்திகள்நடுங்கமிகுந்தகோபாவே
சத்தொடுசமர்புரிந்தனரே.

௨௧. தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

கன்னராஜனுக்கும் - அர்ச்சுனராஜனுக்கும் - கனசண்டையூண்டுகொண்டதே

அநுபல்லவி.

மன்னியமுப்பத்து மூன்றுகோடிதேவரும்
மாதவம்புரிகின்ற நீதர்களியாவரும்
பன்னகர்கருடகந் திருவர்களுங்கைலாச
பதியுமானுமயனும் பார்த்துப்பிரமித்துக்கூச

கன்ன

சரணங்கள்.

௧. வீரகன்னன்சல்லியன் விடுந்தேரிற்றருக்கினன்
விஜயனும்லோகநாதன் விடுந்தேரிற்செருக்கினன்
வீரகன்னன்பகம் வெகுண்டுபல்லைக்கடித்தான்
விஜயனடங்காக்கோபா வேசவுரைபடித்தான்
வீரகன்னன்சேனை விதிர்விதிர்க்கநோக்கினன்
விஜயன்கௌரவசேனை மெலிந்தோடத்தாக்கினன்

அடு

வீரகன்னன்திர வில்லைக்கையிற்பிடித்தான்
விஜயன்காண்டீபத்தை விருத்தாங்கிநடித்தான்
மேதகுவிற்படை குனித்தரிமகன் வீறுடுபலகணை தூற்றினன்
நீதறுமர்ச்சுன னைத்தருமைக்கொள தேசுறுகணைகொடு மாற்றினன்
மேதினியுட்கிட எடுத்தவனனல் வீசிடுங்கணைபினு மேற்றினன்
கோதகல்பற்குன னுத்தனைவெகு குரூரமொடெமனிகர் தோற்றினன்.

வெற்றிகொள்தேருடன் தேர்மோதித்தத்தவே
மீறியிடம்வலமா விசையொடுசுற்றவே
மெச்சுங்கன்னன்பரா பரந்தனைப்பூரித்தான்
விஜயன்தேவதத்தந் தனைக்குறித்தார்ப்பரித்தான்
வெற்புக ளுடைபட நற்றிசை கிடிகொள
மெய்த்தவர் பிரமையுற முத்தர்கள் நிலைசெட
விந்தையுற்றிடு கண்களிற்பல வெங்கனற்பொறி சிந்தமுற்றிலும்

வெருவ மூவரும்-வெருவ யாவரும்
வெருவ லோகரும்-வெருவ நாகரும்
வெருவ அண்டமும்-வெருவ பிண்டமும்
வெருவ மதிகதிர்-வெருவ வுடுவினம்

கன்ன

உ. அனலாஸ்திரம்பார்த்த னாக்ரமித்துக்கொழித்தான்
அதனைக்கன்னன்வரு ணாஸ்திரத்தாலழித்தான்
அரியவாயுவர்ஸ்திரப்பற் குனன்விட்டுக்ரஞ்செழித்தான்
அதைக்கன்னன்நாகாஸ்திரத்தா லதமாக்கிப்பழித்தான்
அண்டுமேகாஸ்திரத்தை விஜயன்விட்டுநகைத்தான்
அடிக்கும்வாயுவாஸ்திரத்தா லவனழித்துப்பகைத்தான்
அருச்சுனனிந்திராஸ் திரத்தைவிட்டுக்கடுத்தான்
அருக்கன்மகன்சூரியாஸ் திரத்தினுலேதடுத்தான்

ஆசறுமர்ச்சுனன் கணைகளிந்தவகை யற்றதைநாடிமனஞ் சினந்து
ஆதவபுத்திரன் முனிவுகொண்டசப ரற்பமதாமெ நினைந்து
ஆலமுமுட்கிட முடிகியெண்டிசையும் அச்சமொடோடிநிலை குலைந்து
ஆகுலமுற்றிட நமனும்நெஞ்சலர அற்புதநீடுவிழி சிவந்து

அண்டும்பிர்மாஸ்திரத்தை பூசித்துடன்றெடுத்தான்
அவனும்பிர்மாஸ்திரத்தை பூசித்தெதிர்விடுத்தான்
அவ்விரண்டும்நேராக் கூடிமிகப்போராடி
அம்பரமெங்குஞ்சுற்றி அமர்க்களத்தைநாடி

அற்புறு கரிகளை தத்திய பரிகளை
வெற்றிகொ ளரசரை முற்றிய படைகளை [றிடுமுன்
அழித்திரத்தநதி பெருக்கியஸ்திரத்தின் விருத்திபெற்றவவ ரிடத்திலும்

அத்திகள் கலங்கவே-வெற்புகள் மலங்கவே
அரவு முலையவே-சரிக ளலையவே
அகிலம் நடுங்கவே-முகில்க ளொடுங்கவே
அசனியும் பொரியவே-திசைகளுங் கரியவே

கன்ன

கூ. சர்ப்பக்கணையைக்கன்ன னெடுத்துநமஸ்கரித்துத்
தனஞ்சயன்மணிக்கண்டந் தனக்குலட்சயம்வைத்துத்
தாக்கப்போகும்போது தயவாயடுத்துநின்று
சல்லியன்மார்பைலட் சயம்வைத்தாற்குணமென்று
சமஸ்த்தவிதத்துஞ்சொல்ல அதைமறுத்துவெகுண்டு
தான்கொண்டஎண்ணமே சரியென்றெண்ணிக்கொண்டு
சார்ந்தவிதிவழியே மதியுஞ்செல்லஅந்தத்
தபனன்மகனக்கணை தனைவிடுத்தான்முந்தத்

தாழ்வுறுசர்ப்பமும் வங்கைகொண்டுவிஷச்சுவாலையொடண்டமுற நாடிச்
சாகசவர்ச்சுன னெங்கேயெங்கேபகை சாடுவேனென்றுசின நீடிச்
சாலவுமக்களம் வெந்துமங்கவனல் சாரவேசிந்தியெதி ரோடித்
தாவிடஅக்கண முகுந்தனன்புரி தாசன்மேலின்பமிகக் கூடித்

தத்துந்தேர்ச்சக்கரம் பன்னிரெண்டங்குலம்
தரையிற்புதையத்தாளால் அழுத்திச்செய்திடநலம்
தனஞ்சயன்முடியைவா யாற்கவ்விக்கொண்டார்த்துச்
சர்ப்பம்பின்னுக்கோடஅச் சைவசாசியும்பார்த்துச்
சட மறுந்திட அடல் குறைந்திட
விட மறிந்திட இடர் செறிந்திட [தடுக்கச்
சரங்கள்பட்டிரவி மகன்கணுற்றுமறு தரங்குறித்துவிடப் பரிந்ததைத்

சல்லியன் சிரிக்க-வல்லர் விறக்கச்
சக்கரம் புதைய-விக்ரமஞ் சிதையத்
தார்மன்னன் முழிக்கத்-தேர்மன்னர் பழிக்க
சமர்முகத்திற் குன்ற-எமன்பிடிக்க நின்ற

கன்ன

## கிருஷ்ணன் வேதியனாகவந்து கன்னனைத் தியாகங் கேட்குதல்.

விருத்தம் உஎ.

புனிதநற்கிரீடிகன்னனோடெதிர்த்துப்
போர்செயும்வேளையிற்புவியிற்
புதைபடுந்தேரைத்தூக்குமக்கன்னன்
புயமெலாம்அம்புகள்நிறையத்
தனஞ்செயன்விடுத்தான்அதையவன்பார்த்துத்
தர்மமாவுனக்கிதுமிக்க
தாழ்வெனக்கூறஅதற்குமாயவனுந்
தாஞ்சொலித்தேற்றிடஅந்தத்
தினகரசுதனும்வேறுதேரேறச்
சீதானருள்கணையாலே
சிலைபெறுவிஜயன்அவனுடல்முழுதுஞ்
சிதைத்தனனதனைமால்பார்த்து
இனியமர்தன்னைநிறுத்தெனவோதி
இங்குநற்சாதியாக
இருந்துவேதியனாய்க்கன்னன்முன்சென்றே
இயல்பொடுபுகழ்ந்துகூறுவனே.

உஉ. தரு-இராகம்-மோகனம்-சாப்புதாளம்.

பல்லவி.

ஏதாகிலுந்தந்தின்னேரம்-எந்தன்இடர்-நீக்கினாலுண்டுசாரம்

அநுபல்லவி.

ஆதவன் றருஞ்சீலா
ஐயா கன்னபூபாலா

ஏதா

சரணங்கள்.

க. மேருமலைச்சாரலில் வெகுநாள்தவம்புரிந்தேன்
சாருமகாதரித்திரத் தாலேஉன்பால்வந்தேன்

ஏதா

உ. இல்லையென்போர்களுக் கில்லையென்னமல்கையா
லல்லும்பகலுமுவக் தளிக்கும்பிரபலதுய்யா

ஏதா

ங. மொழிபிசகாமல்நீதி முறைபிசகாமற்றேனே
வழியப்பேசிதரித்திர வான்கட்கருள்சீமானே

ஏதா

## கிருஷ்ணமூர்த்தி தன் நிஜஸ்வரூபத்தைக்காட்டக் கன்னன் தரிசித்துத் தோத்திரஞ்செய்தல்.

விருத்தம் உ௮.

மறையவன்இந்தவகைசொலக்கன்னன்
வல்லுயிர்பிரியும்வேளையிலே
வந்தனையையாஇப்பொழுதினில்யான்
மகிழொடுதரும்பொருளுரைத்தால்
தருகிறேனெனமால்நீசெய்தசகல
தருமமுந்தாவெனவுட்லிற்
றைத்திடும்அம்பைபிடுங்கியேயிரத்த
தாரையைக்கையினில்விடுத்தான்
உருகியம்மாயன்உனக்கெனவேண்டு
முரையெனப்பிறவிகடோறும்
உற்றெனைக்கேட்டோர்க்கில்லையென்னாத
வொருவரமருளெனவையன்
திருவுளமகிழ்வாய்த்தந்துதன்மார்பிற்
சேர்த்துமுன்கஜேந்திரன்காணச்
சென்றநல்வடிவாக்காட்டஅக்கன்னன்
சிரத்தினூற்பணிந்துகூறுவனே.

உரு. தரு-இராகம்-காம்போதி-சாப்புதாளம்.

பல்லவி.

காணப்பெற்றதைவிட பாக்யம்-எவர்கள்
கைக்கொண்டுபெறுவார்சிலாக்யம்.

அநுபல்லவி.

நீணெறியில்லாத நீசனென்பாபத்தை
நிக்ரகித்தவுன்ன னுக்கிரகரூபத்தைக்
காணப்

சரணங்கள்.

க. யாகங்கள்செய்துப்புண்ய-தீர்த்தந்தனிலாடியும்
யெரியுங்கானகத்திடை திரிந்தும்-யோகத்
திசைந்தும்பொல்லாதகாயக்-கிலேசங்களையடக்கி
யினியமாதவங்கள் புரிந்தும்
வாகாரவிக்கிரகரூ பம்வைத்தர்ச்சித்துமற்றும்
மானிசிகத்தில்நி தானமாகப்பூசித்தும்
ஏகாப்பிரசித்தனரா யிருப்போற்கும்புவிமேலே
யெட்டாத்திருவடியை என்னிருகண்ணாலே
காணப்

௨. அலர்ந்தசெந்தாமரை-முகத்தையருள்விழியை
அமலரத்னமுடிகொள் சிரத்தை-நற்பஞ்
சாயுதத்தைவபய-வரதங்களைப்பகருந்தே
னமைதுழாயலங்கல் உரத்தை
உலவும்பசுங்கொண்டலை யொத்தமேனிநயத்தை
வொப்பறுமலையென வோங்குமணிபுயத்தை
நலங்கொள்பொற்பீதாம் பரத்தையந்தவைகுந்த
நாட்டிற்காண்பதுபோற்கூத் தாடுமென்வினைசிந்த
காணப்

௩. முப்பொருளாயுமுத்-தொழிலாய்முக்குணமாய்
முத்தலமாயெங்கு மிலங்கும்-நல்ல
முச்சுடராய்முப்-பொழுதாயரியவாதி
மூலப்பொருளாய்நாளும் விளங்கும்
அற்புதமிகுந்தகோ பாலாஆயர்கோவே
அத்தாவமலாயென்றன் ஐயாதேவதேவே
நற்கருணைச்செங்கண் மாலேபுவியிலென்னை
நலமாய்த்தொண்டுகொண்ட ஜகதீசனேஉன்னை
காணப்

---

## கன்னன் இறந்ததற்காகக் குந்தி புலம்பல்.

விருத்தம் ௨௬.

அந்தமாங்கன்னன்துதிசெயமகிழ்ந்தாங்
கணுகியன்னோனைக்கொல்லென்ன
அர்ச்சுனன்அஞ்சரீகமென்றோது
மம்பினைவிடுத்தனனந்தச்
சுந்தரவாளிதூயவர்வாயாற்
சொல்லியமொழிபிசகாமற்
சூழ்ந்ததுபோலேகன்னனைநிலத்திற்
சுறுக்கினில்மாய்ந்திடச்செய்து
சிந்தையாவர்களுங்கலங்கியேயோடச்
சென்றதுகன்னன்மாயவனைச்
செகத்தினிற்கண்டாற்போலவீசனையுந்
தேவர்கள்தம்மையுமங்கே
வந்தனையுடன்கண்டனன்சுயோதனன்மெய்
மறந்தழுதனனெழிற்கன்னன்
மாண்டசேதியைகுந்திக்கசரீரி
வழுத்திடஅங்குவந்தனளே.

௨௬. தரு-இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

மகனேயென்னசெய்வேனே-இப்படிநேரும்
வகையைநானறி யேனே.

அநுபல்லவி.

அகிலத்தில்சிறந்தவுன் ஞவிவிட்டுப்போச்சுதே
பகபகென்றென்கும்பி பற்றியெரியலாச்சுதே
மகனே

சரணங்கள்.

௧. கன்னிமாடத்திருக்கும்-போதுசூரியனருளாற்
கனிந்துன்னைப்பெற் றெடுத்தேன்-எடுத்து
கருணையெள்ளளவுமில்-லாமற்பொற்பெட்டியிலக்
கணமிட்டாற்றினில் விடுத்தேன்-விடுத்த
பின்புஅரசன்பால்நீ-யிருக்குஞ்சேதியுமுன்றன்
பெருமையனைத்துநன்ருக் கேட்டு-நாம்செய்
பெருந்தவமென்றெண்ணிக்கொண் டிருந்தவென்வாயிலொரு
பிடிமண்ணடித்துவிட்டுக் கடுகிவானுளச்சென்றாய்
மகனே

௨. தருமன்முதல்நூற்றைந்து-தம்பிமார்பணிந்துன்னுத்
தாரப்படிதொண்டு புரிய-இருந்துஞ்
சகத்தையெல்லாமாளுந்-தன்மையிருந்துமிறந்
தாயேயென்கும்பி எரிய-நான்
அரிசரிநீயிப்படி-யாவாயென்றறியாமல்
அடுத்திருவரும்பெற் றேனே-என்னை
அரும்பாவியென்றெண்ணும லனைஎன்றெண்ணிசொல்லைக்காப்
பாற்றினவுன்னைக்கொன்ற கூற்றுவன்யார்நான்றானே
மகனே

௩. அருமையாயுன்னைப்பெற்றும்-வளர்த்தெடுக்கபாக்யம்பெ
றுமற்போனேன்பார் மேலே-அதுதான்
அமையாவிடினும்பாண்டு-வுடனாகிலுமிறவா
தாவிகொண்டொருக் காலே-இன்று
மருவுமிக்கோலங்காண-வன்னெஞ்சுடனிருந்த
மாபாதகியெவ்வாறு துணிவே-னென்கண்
மணியேமாசிலா மாணிக்கமேயிந்த
வையத்திலிழந்தேனுன் கையினாற்பெறும்பேறு
மகனே

## கன்னன் இறந்தபின்பு பாண்டவர்கள் ஐவரும் புலம்பல்.

விருத்தம் ௩௰.

இந்தவகைகுந்தியழக்கேட்டோரோடி
இரண்டுதளத்திலுஞ்சொல்லத்தருமன்கேட்டு
அந்தமாயனையீதென்னென்றுகேட்க
வனைத்துமாயவன்சொலப்பாண்டவர்கள்வாடி
சிந்தைபதைத்துடனெழில்மால்வேந்தர்சூழ
தீபங்கள்பலரேந்தக்களத்திற்சென்று
பந்தமொடுகன்னனைப்பார்த்தண்ணாவென்று
பதறினாருளமுருகிக்கதறினாரே.

௨. திபதை-இராகம்-சௌராஷ்டகம்-சாப்புதாளம்.

### கண்ணிகள்.

க. என்னசெய்வோம்நாங்க-ளேதுசெய்வோம்நாங்கள்
எங்களுக்குமூத்த அண்ணாவே
கன்னமகாராஜா-வுன்னைமறைத்ததிந்த
கண்ணன்செய்தமாயமோ அண்ணாவே

௨. படைக்குங்கொடைக்கும்நீ-ஒருவரல்லால்வேறார்
பந்தைக்குதேயெங்கள்தேகம் அண்ணாவே
கடைக்கண்திறந்துசற்றே-தம்பியரைப்பாரீரோ
களந்தனிலெழுந்தெங்கள் அண்ணாவே

௩. ஐவரென்றிருந்தோமே-அறுவரென்றறியோமே
ஆர்செய்தவஞ்சனையோ அண்ணாவே
செய்யபதமலரைப்-பிரியாமலனுதினம்
தெண்டன்இட்டிருப்போமே அண்ணாவே

௪. நாடும்நாமேயாண்டோம்-காடும்நாமேயாண்டோம்
நடுவிற்போர்செய்வானேன் அண்ணாவே
சாடைகொஞ்சந்தெரிந்தால்-ஐவரும்வந்துந்தன்
சரணத்தில்வீழ்வோமே அண்ணாவே

ரு. பஞ்சபாண்டவர்பேர்போய்-பஞ்சபாதகரென்றிப்
படியிற்பேரெடுத்தோமே அண்ணாவே
சஞ்சலக்கடலின்-மூழ்கி அமிழ்ந்தநாங்கள்
தரணிமேலாசைவையோம் அண்ணாவே

சு. தேருக்கும்சாரதியாய்ப்-போருக்கும்சாரதியாய்த்
திருமாலேஇருந்தானே அண்ணாவே
ஆருக்குந்தெரியாமல்-கபடநாடகனிந்த
அனியாயஞ்செய்தானே அண்ணாவே

எ. பெற்றதாய்பிள்ளைகளுக்-கொளித்துவைக்கின்றஇந்த
பேதகமறியோமே அண்ணாவே
வெற்றிவீரசொர்க்கம்-அடைந்தநின்திருமுக
மேவவென்றுகாண்போம் அண்ணாவே

அ. தாய்சொற்படியாக-மறுகணைதொடுக்காத
சத்தியசந்தனை அண்ணாவே
பாயுந்தேர்பன்னீரங்-குலம்பூமிமேலெழும்பும்
படிசெய்தபுஜபல அண்ணாவே

கூ. பாருக்குள்உந்தனை-யன்றிச்சுத்தவீர
பராக்கிரமர்வேறுண்டோ அண்ணாவே
கூறுக்குமுன்னுதைத்தோர்-காலுக்குச்சேதம்போல்
குலைகாரரானோமே அண்ணாவே

ய. நாடும்நகருமாண்டோம்-நீர்போனஅவ்வழியே
நாங்களும்வருகின்றோம் அண்ணாவே
போடுங்கணைகளெல்லாம்-எங்கள்மேல்நாங்களே
போட்டுக்கொண்டோம்ஐயோ அண்ணாவே

யக. ஆனைதலையில்தானே-மண்ணைப்போட்டுக்கொள்ளும்
அருங்கதையானோமே அண்ணாவே
மானிலந்தனில்நாங்கள்-பிராதுர்வதைசெய்த
வஞ்சகரானோமே அண்ணாவே

யஉ. தனக்குத்தானேகொள்ளி-தலையில்வைத்துக்கொண்டாப்போல்
சண்டைசெய்தோமேஐயோ அண்ணாவே
அனைக்குச்சொன்னவுண்மைபோல்-எமக்குச்சொல்லாததென்ன
அங்கதேசாதிபதி அண்ணாவே

காடாண்டோரும், நாடாண்டோரும், பாண்டவர்களென்று துரியோதனன் மனவருத்தமுற்று தமதிருப் பிடஞ் சென்றபின்பு பாண்டவர்கள் பாசறை சேர்ந்தாரெனல்.

விருத்தம் ௯க.

இந்தவகைகன்னராஜன்றன்னைக்கண்டே
ஏங்கியழும்பாண்டவர்கள்தம்மைநோக்கி
மந்தரபுயாசலசுயோதனன்றான்
மாம்போலேநின்றேங்கிமதிகலங்கி
அந்தமுடனேயிருந்துநாடுங்காடும்
ஆண்டவர்பாண்டவரென்றேயிருக்கைசேர்ந்தான்
சிந்தைதுயரந்தவிர்த்துப்பாண்டுமைந்தர்
தேர்ந்திட்டார்பாசறையைச்சேர்ந்திட்டாரே.

---

கன்னபர்வம் - முற்றிற்று.

———(*)———

கன்னபர்வத்தில்-விருத்தம்-௯க. தருக்கள்-உச. திபதைகள்-உ.
ஆ ௫ள.

---

பாயிரம்-க க்கும், பர்வம்-அ க்கும், கூடிய-வெண்பா-௯, கலித்துறை-௯.
கொச்சகம்-ச. கட்டளைக்கலிப்பா க. விருத்தம்-சஎ௫.
தருக்கள்-௯௯௬. திபதைகள்-௫எ.
ஆ அஅ௨.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

திருத்து திரையடம் வி. வே. கி. நாராயணசாமிபிள்ளையவர்கள் புத்தகம்
19th March 1907.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

ஒன்பதாவது

# சல்லியபர்வம்.

---

## பதினெட்டாநாட்போர்

---

### கண்ணன் - துதி.

விருத்தம் க.

தாவிவிடமுண்டானை பொற்கலைதரித்தானை
　　தலைமையானை
ஆவையாதரித்தானை பாம்பைவிட்டகலானை
　　அருளுள்ளானை
மேவுமலர்மகட்குரிய நாயகனை தாயகனை
　　விரைந்தேஹென்னூர்
ஏவுமான்றொடர்ந்தானை மூவினையுங்கடந்தானை
　　இறைஞ்சுவோமே.

---

### சேனாதிபதியாகிய சல்லியன் தருமராஜனால் மரணமடைதல்.

விருத்தம் உ.

முடிவுறுபதினெட்டாந்தினந்துரியன்-முகமதைக்கிருபர்தாம்பார்த்து
　　முனைதனைநிறுத்திஐவரோடுறவாய்-மொய்த்திடில்நலமெனக்கூற
திடமுறுபீஷ்மர்குருமுதலோர்கள்-செருவினிலென்னிமித்தத்திற் [ன்
　　செத்தனர்யானுஞ்செருச்செய்துவெல்வேன்-திறப்படாவிடிலுயிர்விடுவே
தடையிதற்கேதுமிலையெனக்கூறிச்-சல்பனையெவர்களுமறியத்
　　தகைகொள்சேனதிபதியெனச்செய்யச்-சர்வதோபத்ரமென்றோதும்
அடலுறுவியூகஞ்செய்தவனிற்க-ஐவர்சேனபதிஆங்கே
　　அத்திரவியூகஞ்செய்தனன்மன்னர்-அடர்ந்தனர்போர்புரிந்திடவே.

க. திபதை-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

## கண்ணிகள்.

க. இரண்டுதளத்தி-லுள்ளமன்னரும்
எதிர்த்துக்கொண்டு நேரே-மிக
முரண்டுடன்செய்த-சண்டைதன்னை
மொழியவல்லவர் யாரே

உ. தேர்க்காரருடன்-தேர்க்காரர்மிகச்
செருக்கினின்று வாய்ந்தார்-மதத்
தார்க்கும்யானைக்-காரருடன்யானைக்
காரர்முனைசெய்யக் காய்ந்தார்

௩. பரிக்காரருடன்-பரிக்காரர்நெஞ்சம்
பதறிஆயுதம் வீசினர்-மனஞ்
செருக்குங்காலாள்க-ளுடனேகாலாள்கள்
சினந்துவீரங்கள் பேசினர்

ச. இந்தவகையாய்-நேர்ந்துக்கொண்டுசண்டை
இடும்போதனந்தங் கோடி-மதத்
தந்திகள்பரிகள்-ஜனங்களும்மடிந்து
சாய்ந்துதங்கங்கே வாடி

ரு. குருதிரத்த-நதிகளாஇந்தக்
குவலயமெங்கும் ஓட-அந்தச்
சமையமதிற்சல்-லியன்சமரிட
தருமன்மேல்வந்து நாட

௬. இருவரும்வில்லே-வளைத்துலகமீ
ரேழும்நடுங்கக் கடுத்து-கனற்
சொரியுங்கணைகள்-முறைமுறையாகத்
தொகையில்லாமலே தொடுத்து

எ. பின்னுமனந்தங்-கோடியஸ்திரத்தைப்
பிரளயமாகவே விடுத்து-தேவர்
பன்னகர்முதல்-மதிகதிர்களும்
பயங்கொள்ளசங்கை எடுத்து

அ. ஆர்ப்பரித்தார்கள்-சல்யன்அவ்வேளை
அனலெனவிழி சிவந்து-மிகக்
காற்பிண்ணியத்தொடுயேமனைப்போலக்
கதிக்குந்தர்மன்முன் வந்து

௯. தெரியுமுரசக்-கொடிமீதிலொன்றுந்
தேர்மேற்பாகன்மேல் ஊக்க-முற்ற
பரிமேல்மூன்று-கணைவிட்டிரண்டு
பகழிவில்லின்மேல் தாக்க

௰. தனுவுந்தேரு-மழிந்துதர்மன்
தரைமிசைநிற்கக் கண்டு-பசுங்
கனகத்தேர்மிசை-இருந்தவுக்ர
கதாயுதவீமனும் வெகுண்டு

௰௧. வில்லைவளைத்தவன்-யானைக்கொடியற்று
வீழவொருகணை எய்து-கன
மல்விடும்நெடிய-வில்லைஇரண்டு
வாளியினற்றுணி செய்து

௰௨. தேரும்பாகனு-மழியவேஇரு
செஞ்சரங்களைத் தூற்றி-அவன்
மேருபுயத்தின்-வலியறவேசில
வெங்கணைகளை ஏற்றி

௰௩. வீறும்போதிற்-சல்யனுந்தர்ம
வேந்தனும்வேறா தத்தி-லேறி
சீறும்போதிற்-சல்லியன்பீமன்
தேரைஅழித்தான் சுற்றி

௰௪. கதையோடுக்ர-வீமன்பாய்ந்தந்தக்
காவலன்தேரை ஓடித்து-முடி
சிந்தஅடிக்க-அவன்தரைமிசை
திகைத்தானேதுடி துடித்து

௰௫. மைற்றும்பீமன்-தூரியன்சேனைகள்
மாயக்கொன்றனே ஓடி-மிகத்
தத்தித்தியங்கித்-தளர்ந்துநிலத்தினிற்
சாய்ந்துதேபல கோடி

௰௬. இதைக்கண்டசல்யன்-பீமனைத்தீபோல்
எரியுங்கண்களால் நோக்கி-நல்லச்
சதிர்கொள்தோமரம்-விடுத்தன்னேனைத்
தரைமேல்மூர்ச்சை ஆக்கி

௰௭. பாண்டவர்மீதிற்-சென்றான்கன்னபூ
பாலன்மைந்தர்களில் இரண்டு-பேர்கள்
தாண்டவம்புரி-நகுலனல்மண்மேற்
சாய்ந்தனர்முடி பிண்டு

௰அ. சகுனிமைந்தர்க-ளிருவர்சாதேவன்
சரத்தால்நொந்தோட்டம் எடுத்தார்-வீரத்
தகைகொள்சாளுவன்-திரிகர்த்தன்சஞ்
சத்தர்பார்த்தன்முன் கடுத்தார்

௰கூ. கடுத்துவந்தோர்கள்-சிரமெல்லாமொருக்
காலத்திலறவே எறிந்து-யாருந்
தடுக்கொணுமலே-முடுக்குங்கோடி
சரங்கள்வேகமாய்ச் சொரிந்து

௨௰. இன்னம்பகைவர்-யாரொருவரு
மிலையென்றேபார்த்தன் நின்றான்-அந்த
மன்னன்சல்யன்-தர்மனைத்தேடி
வாய்மதம்பேசியே சென்றான்

௨க. சென்றுதருமன்-தேர்முதல்யாவுஞ்
சிதையக்கணைகள் தூறினன்-அதை
வென்றிகொள்தருமன்-சிலகணையாலே
வெட்டிவெட்டித்தள்ளி மீறினன்

௨௨. பீமன்நகுலன்-சாதேவன்சாத்தகி
மேவுந்தர்மனைச் சார்ந்து-அந்த
மாமுடிச்சல்யன்-மீதுகணைகள்
மழையெனப்பெய்தார் நேர்ந்து

௨௩. இந்தஐவர்களை-யுந்திரணமாய்
எண்ணிப்அவன்மதி காய்ந்து-எதிர்
வந்தநகுலன்சா-தேவன்றனைக
வாளிவிட்டானே ஆய்ந்து

௨௪. மாருதிகண்டு-அவன்தேரைப்பத்து
வாளியால்ஒடித் தார்த்து-நிற்க
வீரவஸ்வத்-தாமனிந்த
வேடிக்கைதன்னை பார்த்து

௨௫. வரத்திரிலோக-விஜயன்கண்டவன்
மதமொடுங்கவே யழித்து-பல
சாத்திஞலன்றனன்-தேர்கொடிக்குடை
தனுவும்போக அழித்து

௨௬. கடுக்கும்போதிற்-பரித்தாமன்பல்லைக்
கடித்தகனுமே தண்டம்-ரெண்டாய்
வெடிக்கவீறுவீ-றென்றுசுத்திகையால்
விடுத்தானேர்வஜ்ர தண்டம்

உள. அதைப்பொடியாக்கி-நின்றான்பார்த்தன்
அசுவத்தாமன் பின்பு-ஒரு
கதித்தபடையை-விடுத்தானதையுங்
கண்டித்துக்கொண்டானே தென்பு

உஅ. தயங்கிவோட்ட-மெடுத்தானேபரித்
தாமன்அந்த வேளை-வீர
நயங்கொள்கிர்பனும்-பார்த்தனெதிரே
நண்ணித்தட்டினான் தோளை

உகூ. வந்தகிருபனை-சிலவாளிகளால்
வதைத்தோட்டினான்மென் மேமேல்-கண்டு
சிந்தைகொதித்து-கிருதபன்மன்கணை
சிந்தினான்மழை போலே

௩௰. வெம்பியவனுங்-கலங்கிமண்மிசை
வென்னிட்டோடவே அடித்து-அவன்
தம்பிமார்களேழு-பேரைச்செஞ்
சாத்துக்கிரையாய் மடித்து.

௩க. பின்னுமனந்தங்-கோடிவேந்தரைப்
பிணங்களாகத் தறித்து-கையில்
மன்னன்தேவ-தத்தமதனை
வானுமறுகக் குறித்து

௩உ. தருமராஜன்பாற்-சேர்ந்தானந்த
சர்ப்பகேதனன் அசைந்து-மனம்
பொருமிப்பொங்கிப்-புலம்பிநின்றனன்
புடைத்துக்கைகளைப் பிசைந்து

௩௩. முந்திச்சல்யன்-சாத்தகிதன்னை
மூர்ச்சையாகத் தள்ளி-வந்த
அந்தநால்வரைப்-பின்னுக்கிடைய
அடித்துமிகவுந் துள்ளி

௩ச. உதிட்டிரன்நெற்றிப்-பிளக்கவிடுத்தா
னோர்கணைதனைக் கொதிப்பாய்-பீமன்
அதைக்கண்டவன்சென்-னியைப்பிளந்தானே
அருங்கதையாலே கதிப்பாய்

௩ரு. துரியன்கண்டு-பாண்டவர்மீதிற்
றுடர்ந்துவோட்டினான் வீரம்-பீமன்
பெரியகதையால்-அவன்கிரீடத்தைப்
பிளந்தோட்டினனந் நேரம்

ருசு. பரித்தாமன்கிருபன்-சகுனியச்கிருத
பன்மன் துணைக்கொண்டு மத்ரன்-வர
உரித்தாம்தம்பியர்-சாத்தகிதுணையா
யுற்றிடவேதர்ம புத்ரன்

ருஎ. நின்றனனிவ்வி-ரண்டுபுரத்து
னிருபர்களும்போர் புரிந்து-அங்கே
கொன்றசேனையை-சேடனல்லாமற்
கூறவல்லோரெவர் தெரிந்து

ருஅ. அந்தவேளைத்-தருமன்தம்பி
யர்களைப்பார்த்தங் கிரைத்து-நீங்கள்
பந்தமாயென்-வீரத்தைச்சற்றுப்
பார்த்திருங்களென்று உரைத்து

ருகூ. மாமாசல்யரே-வாரும்வாரும்வில்லே
வளையுமெனஅக் கோனும்-பெரும்
பூமிமுழுது-மாளனிற்குந்தர்ம
பூபதியெனுஞ்சீ மானும்

சும். நாடிச்சண்டை-செயும்போதுசல்யன்
நரபதிதர்மன் மீது-ஒரு
கோடிகணைவிட்-டன்னேன்சின்னத்தைக்
குலைத்தானேஅப் போது

சுக. அகிலந்துடிக்க-அண்டங்கள்வெடிக்க
யானைகளோட்டும்வீ றிடவே-சத்த
முகில்களொளிக்க-மதிகதிர்நிதம்
மூரிச்செல்லுங்கதி கெடவே

சுஉ. தாருகாசூரனைப்-பிளந்தநற்சிவ
சண்முகநாதன்போல் ஓங்கி-அதி
வீரவிசாலவி-னேதங்களோர்சத்தி
வேலையங்கையினில் தாங்கி

சுங. சொல்லவரிய-மகாமந்திரமோதி
சுழட்டிவிட்டானேகை யாலே-வீர
சல்லியபூபாலன்-மாமுடிரெண்டாய்த்
தறிந்துவீழ்ந்துதேகமண் மேலே

சுச. மத்திரன்வீழக்-கண்டவன்தம்பி
மார்பலர்நெஞ்சம் வெந்து-செழுஞ்
சித்திரத்தேர்க்கார-ரெழுநூறுபேர்கள்
செறியதர்மன்முன் வந்து

௪௫. தாவத்துரியன்-அவற்குத்துணையாய்த்
தளத்துடன்வந்து பாய-வந்த
சேவகர்சண்டை-செய்தாரேஇந்த
சகமுமேல்கீழாய் சாய

௪௬. வந்தசேனையை-பீமன்முதலோர்
மாளவேகொன்று தீர்த்து-பீமன்
அந்தத்துரியன்-தம்பியரெழு
வரைஎமபுரஞ் சேர்த்து

௪௭. செயமுடனந்தப்-பாண்டவர்மிகச்
செருக்கினுளங் களித்து-ஐயோ
பயமிகுந்தந்த-கௌரவசேனை
பரந்துதேதிகை திகைத்து

---

சல்லியபர்வம் - முற்றிற்று.

(*)

சல்லியபர்வத்தில்-விருத்தம்-௨. திபதைகள்-௧.
ஆ ௩.

---

பாயிரம்-௧ க்கும், பர்வம்-௯ க்கும், கூடிய-வெண்பா-௩, கலித்துறை-௩.
கொச்சகம்-௪. கட்டளைக்கலிப்பா ௧. விருத்தம்-௪௭௭.
தருக்கள்-௩௱௩௯. திபதைகள்-௫௮.
ஆ ௮௱௮௫.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

பத்தாவது

# சுயோதனபர்வம்.

## பதினெட்டாநாட் போர்.

### கண்ணன் - துதி.

சந்தவிருத்தம்-க.

மந்தமாகியபில்லிசூனியம்-வைப்புபேய்கள்கடும்பிணி
பந்தவெம்பகையாளர்தீமைகள்-பஞ்சுபோலபறக்கவே
வந்துமன்பர்கள்முன்புநின்றருள்-மலர்மடந்தைவிளங்கிய
நந்தநந்தன்வரத்துதித்திட-நரகவேதனையில்லையே.

### துரியோதனன் தன்தம்பியரும், சல்லியன்முதலான அரசர்களும், இறந்ததைப்பார்த்து மனதுகலங்கி முன்புதான் நடத்தியகாரியங்களைக் குறித்துச் சிந்தித்தல்.

விருத்தம் உ.

மத்திரனிவ்வகைமாண்டான்அனந்தங்கோடி
மன்னவரும்அவன்தம்பிமாருமாண்டார்
உற்றமன்னன்தம்பியர்களிருபத்தோர்பேர்
ஒருவீமன்வாளியினாலொழிந்தார்கண்டு
தத்தளித்துமிகத்துரியன்அழுதுவாடித்
தலைமீதிற்செங்கையாலறைந்துகொண்டு
சித்தநடுங்கிடத்தம்பிமாரையெண்ணித்
தியங்கினான்வலதழிந்துமயங்கினானே.

க. தரு-இராகம்-முகாரி-சாப்புதாளம்.

பல்லவி.

நல்லோர்சொற்கேட்டிருந்தால்-இப்பாடேன்வருகுது - நமக்கையோபுவிமேலே

அநுபல்லவி.

வல்லாண்மை பேசாதன்று
மருவிக்கிரம மாய்நின்று
நல்லோர்

சரணங்கள்.

க. மதியயர்ந்திடுனீதி மார்க்கங்களையனந்த
வகையாய்ரிஷிதுல்யரு மறையோனுமனுபந்த
விதுராராஜனுஞ்சில வீஷ்மாச்சாரியும்வந்த
வேந்தருமோதிக்கெட வேண்டாமென்றுரேஅந்த
நல்லோர்

உ. பேய்த்தனமாகயெப் போதும்வாய்விஸ்தாரம்
பேசுங்கண்ணன்சொல்லையும் பிரியாமலேகாரம்
ஏற்றும்பாவிசகுனி சொல்லையுமுள்ளீரம்
இல்லாத்தம்பிசொல்லையு மேற்காமலன்னேரம்
நல்லோர்

ங. கொசுகிருக்கமண்தரை நின்றசொற்போயிப்பாரைக்
கொடுத்துவிட்டதன்றியுங் குருமுதற்பாட்டனை
விசுவாசமானதொண்ணூற் றென்பதுதம்பிமாரை
வீணுய்ச்சாகக்கொடுத்தோம் வெறுத்துக்கொள்வதிங்காரை
நல்லோர்

---

## துரியோதனன் மனதைச் சகுனிதேற்றிச் சமர்செய்யச் சொல்லுதல்.

விருத்தம் ங.

இந்தவகைதுரியன்அழச்சகுனிமாமன்
இறைவனேயினித்துன்பமுற்றுச்சிந்தை
வெந்ததினலாவதென்னசெத்தோர்மீளும்
விதமுண்டோஅக்கவலைமாற்றிப்போடு
குந்திசுதர்தமைமடித்துஉலகெல்லாமோர்
குடைதன்னில்நீயாளும்விதமுரைப்பேன்
பந்தமுடன்யானுரைத்தபடியேசெய்துப்
பாரென்றானுனக்கிணையிங்கியாரென்றனே.

உ. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

புறப்படுபுறப்படு துரியோதனராஜனே
பிரபலகீர்த்திப் பிரகாசனே

அநுபல்லவி.

குறைபட்டழுவானேன்வி ஞகனிகளைமாறி
குந்திசுதரைக்கொல்லச் சிந்தையுடன்தேரிலேறி
புறப்படு

சாணங்கள்.

௧. இறந்துபோனவர்போக-இருப்போர்தம்மிற்சித்ரவே
லேந்துமுருகன் போலே-இன்னம்
இகலஸ்வத்தாமன்கிருபன்-கிருதப்ன்மனேடுநீஞன்
இருக்கின்றேம்புவி மேலே-மேலும்
சிறந்தவீரர்சில ரிருக்கின்றாகல்வானே
சகத்தையழிக்கும்படி யிருக்குதுசிலசேனே
திறங்கொளிவைகளேவொன் றுய்க்கூட்டிப்போய்மண்டை
திறக்கஐவரைவாட்டிப் பறக்கச்செய்யலாஞ்சண்டை
புறப்படு

௨. துறவிக்குலகமெல்லாந்-துரும்புசூரருக்குயிர்
துரும்பெனத்தெரிந் திருந்தும்-அந்த
தொண்ணூற்றென்பதுதம்பி-மாருமற்றேருமாண்ட
துக்கத்தால்நீ வருந்தும்-காரியக்
குறைவையெண்ணிப்பார்த்தால் இன்னம்வெகுவபாயம்
கொள்வோமல்லால்கிஞ்சத்துங் கூடிவாராதாதாயம்
முறையிதல்லதயிரியத் துடன்போயம்பைக்கொழிப்போம்
முடுகும்பாண்டவர்கள்தங் குடியைஇன்றைக்கழிப்போம்
புறப்படு

௩. முற்றும்நனேந்தவருக்-கீரமில்லையென்னும்
மொழிப்படியானேம்வீர மேவி-ஒரு
முகூர்த்தனேரமாத்ரங்-கட்டுவிடாமலவர்
முன்னின்றெருமுகமாய்த் தாவி-நின்று
வெற்றிவேல்சக்ராயுதங் கதைகட்கம்பிண்டிபாலம்
வீரதோமரம்பாசம் வெய்யமுத்தலைச்சூலம்
அத்திரங்கள்வெகுவாய் விட்டவருடன்லோகம்
அழியச்சண்டையிடுவோம் அகத்தில்வேண்டாஞ்சந்தேகம்
புறப்படு

## வீமனால் துரியன் அஸ்வத்தாமன் முதலானவர்களெல்லா மூர்ச்சையாய் விழுந்தபின்பு நகுலன் சகுனியின் சிரசைக் கண்டித்தல்.

விருத்தம் ச.

சகுனியிவ்வாறொருகோடிதைரியஞ்சொல்லச்
சற்பகேதனன்வீரரோடுவீமன்
பகைமேவவடுக்கஅவன்கதையினாலே
பருத்ததேர்மன்னர்கரிபரிகாலாள்கள்
மிகமடியக்கொன்றஅஸ்வத்தாமனோடு
வேந்தர்களுமூர்ச்சையாய்விழச்செய்தார்த்தான்
தகுநகுலன்சகுனிதலைதன்னைவேலால்
தறித்திட்டானிரண்டுதுண்டாய்முறித்திட்டானே.

௬. தரு-இராகம்-அசாவேரி-சாப்புதாளம்.

பல்லவி.

சகுனிமாண்டானே-பொல்லாத
சகுனிமாண்டானே.

அநுபல்லவி.

மகிழ்கொள்துரியோ தனராஜன்தீர்க்க
வமிசத்தைநிர்மூல மாக்குந்துன்மார்க்க
சகுனி

சரணங்கள்.

க. என்றும்பற்பலசித்து-மாயவஞ்சனையுஞ்செவ்
வெண்ணெயிலேக்லந் துண்டு-மிகுந்
திணையில்லாவாகாசப்-பொய்யெல்லாந்திரண்
டெழுந்ததெனவேஉருக் கொண்டு
இத்தலத்தினிலுதித் தெமலோகப்பிரட்ட
னென்றபெயரைக்கொண்டு நின்றமகாதுஷ்ட
சகுனி

உ. மாதவர்சொற்களுங்-காதினிலேறாத
மார்க்கந்தேடிவாயைப் பூசி-உள்ளே
வைத்தபகையினால்-அவனைக்கெடுக்க
மதுரமொழுகப் பேசி
ஆதரமாம்அவன் குடிக்கொருனவி
ஆகவேதோன்றிய மாகொடும்பாவி
சகுனி

௩. தனக்குமுன்செய்த-பகையைமனத்திற் வைத்து-தில
சாகிறவரைக்கும்
தர்ப்பணஞ்செய்யவும்-ஒருவரில்லாமற்
சமரினில்மாள விடுத்து
பனுங்கௌரவற்கு வேற்புழுகாயடுத்த
பகையாளிக்குடியை உறவாடிக்கெடுத்த
சகுனி

---

## சகுனியிறந்தபின்பு துரியோதனன் தன்னிடத்தில் மடியாம னின்ற சிலசேனைகளோடுபோய் பாண்டவர்களை வளைத்துக்கொண்டதை அருச்சுனன்கண்டு நகைத்தல்.

விருத்தம் ௫.

மாண்டகொடுஞ்சகுனிதனைத்துரியன்பார்த்து
மனமறுகிஐவர்களைமடித்திப்பாரை
யாண்டிடுவேனெனப்படையையொன்றாய்ச்சேர்த்தான்
யானைகளாயிரம்பரியாயிரம்நானூறு
நீண்டதேர்நாலாயிரம்பதாதினின்ற
திவைசூழப்போய்வளைத்துக்கொண்டானந்தப்
பாண்டவவீரர்களொறுத்தார்பார்த்தன்கண்டு
பகைத்திட்டான்பகபகென்றுநகைத்திட்டானே.

---

## கிருஷ்ணன் அருச்சுனனுக்குத் துரியோதனனுடைய சாதகப்பலனை விவரமா யெடுத்துரைத்தல்.

விருத்தம் ௬.

நகைத்தருச்சுனன்மாலைப்பார்த்தனந்த
நரபதிகளோடுபீஷ்மர்துரோணன்கன்னன்
மிகுத்தபடையிருந்தபோதெல்லாம்நம்மை
வெல்லாமலிப்படையைக்கொண்டுவெல்ல
திகைத்துவந்தானிவனறிவுதனையென்னென்று
செப்புவதென்றுனரியன்றனைப்பார்த்து

சகத்திலவன்வி திவிடுமாசொலக்கேளன்னேன்
தாழ்வென்றான்கெட்டுதின்றேவாழ்வென்றானே.

ச. தரு-இராகம்-கலியாணி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தத்துரியன்துஷ்ட-சாதகப்பலனையான் - என்னென்றுசொல்வேன்அர்ச்சு [னா

அநுபல்லவி.

நிந்தனையேனீள-நின்றமகாசண்டாள
இந்தத்

சரணங்கள்.

க. அங்கேநான்தூதுபோன-போதுபாண்டவர்பகை
யால்நேர்ந்திடுமுனக்குக் கேடு-அதற்கோர்
சங்கையில்லையென்றோர்-தரமல்லவாயிரந்
தாஞ்சொன்னேனையோயிளைத் தோடு
பங்கமற்றிருப்போனல் நான்சொன்னபுத்தி
படிக்குநடவானுமுற் பவத்தால்அதையகற்றி
பொங்குந்துஷ்டர்கள்வெல்வோ மென்றவாய்களைநக்கி
போனனழிந்துதானே போட்டசண்டையிற்சிக்கி
இந்தத்

உ. காந்தாரிகெற்பத்தினிற்-பிறந்தபோதிவன்சாத
கத்தின்பலனை நாடி-நன்றாய்
தேர்ந்தகணிதநூலோர்-மறைவல்லோர்முதலான
தெள்ளியோரொன்றாய்க் கூடி
ஆய்ந்துபார்த்திவனிந்த அவனிபிரசையைக்கூட்டி
அழித்துவிட்டிவனுஞ்சா வான்வஞ்சம்பாராட்டி
சார்ந்தஇவனுக்குநாராந் தகனெனும்நாமமிட்டார்
தகுமென்றந்தச்சபையிற் சாற்றினாவர்கட்டாய்
இந்தத்

ங. சிவசபங்களாக-விருக்குமிந்தக்கொஞ்சச்
சேனைகளும்பதைத்துக் கூவி-இங்கே
மேவிப்பிணங்களாக-வீழாமலிவனுக்கு
விட்டுப்போமாகொஞ்சத்தில் ஆவி
பாவிபிறந்தலக்ன பலனிந்தவலங்கோலம்
பார்த்துமுழித்தழுது பதறநேர்ந்துதுகாலம்
ஆவலாஇவனெந்த கவைக்குவந்தானேவது
வனுவும்பிசகிடுமா யார்மேற்பழிசொல்வது
இந்தத்

## துரியோதனன் தன்னோடுவந்த சேனைகள்யாவற்றையும் பீமார்ச்சுனர்களிருவரும் நாசமாக்கியதைக்கண்டு ஓர்மடுவிற் போய்ச்சேர்ந்து அங்குதன்னைத் தானே நிந்தித்துக் கொள்ளுதல்.

விருத்தம் எ.

உண்மையொடுமாயனிதுசொல்லபீம
னொருபுரத்திற்கிரீடியொருபுரத்தில்மேவி
கண்ணிமைக்குமுன்னந்தப்படையைக்கொன்றார்
காவலனுங்கலக்கமுற்றுகண்ணீர்சோர
வண்மைபோய்மகுடம்போய்ஏறிவந்த
மணித்தேர்போய்மாலைபோய்வாக்கில்நின்ற
திண்மைபோயோடிவொருமடுவிற்சேர்ந்து
சிந்தித்தான்றனைத்தானேநிந்தித்தானே.

ரு. தரு-இராகம்-பைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

நம்மால்வந்தவினைக்கு-யார்மேற்பழிசொல்வது - நாமினியெங்கேவெல்வது

அநுபல்லவி.

சும்மாவாய்க்கொழுப்புச் சீலையால்வடிந்ததென்று
சொல்வதுபோல்நமது சொல்லால்தேடினோமன்று
நம்மால்

சரணங்கள்.

க. சூதாடிஐவர்கள்-குடியைக்கெடுக்கநாம்
தூத்தினோம்வன வாசம்-அந்தத்
தீதேநம்மைஇப்படி-கெடுத்ததெல்லோர்களுமாளச்
செய்துவிட்டது நாசம்-வந்து
போதநாரதர்சம-தக்கினிகண்ணுவர்சொன்ன
புத்தியாவை லேசம்-கேட்டு
வாதுசெய்யாதிருப்போ-மானாலிப்பாடேது
மடக்கினதாலல்லவோ
கிடைத்துதிப் பரியாசம்
நம்மால்

உ. ஆர்வமாய்ச்சொன்னோர்சொல்லைக்-கேளாமலிக்குலத்தை
அழிக்கவொருகோ டாலி-காம்பாய்
பார்மிசையுதித்தழித்-தேர்மேலும்யாவரும்
பழிக்கநேர்ந்துது கேலி-பின்னும்

நேர்மையாகநமக்குந்-தம்பிமார்க்குங்கழுத்தை
வீட்டுமாதர்கள் தாலி-எல்லாம்
ஓர்முகுர்த்தத்திலற-நாமும்பீமன்கதையால்
உருளத்தேடிக்கொண்டோமே
திறமுடன் மிகுசோலி
நம்மால்

௩. கொற்றஞ்சேர்பீஷ்மர்முத-லானோர்நமக்காய்ப்பழி
கொடுத்தார்கள்நாமும்பொன் னூடு-சேர
செத்துப்போவதழகல்-லாமல்ஜீவற்கிதஞ்
செப்பிப்போகாதவ்வுருச் சூடு-மேலும்
சுற்றமந்திரமொன்-றிருக்குதேவதைநீர்க்குள்
கம்பித்துனின்றினத் தோடு-செபித்
தெத்தனித்துப்பார்ப்போ-மெண்ணப்படிமுடிந்தால்
ஏமாற்றுமைவற்கு
நாமாற்று வோங்கேடு
நம்மால்

---

## துரியோதனன் சஞ்சயனைப் போரில் நடந்ததையும் தன்னிருப்பையும்போய் தாய்தந்தையர்களுக்குத் தெரிவித்து அவர்களைக் காப்பாற்றும்படி வேண்டிக்கொள்ளுதல்.

விருத்தம் அ.

இந்தவகைதுரியன்மனத்தெண்ணுதெல்லாம்
எண்ணியொருவகைதேறிக்கொண்டுநின்றான்
அந்தவேளையில்வானத்திருந்தசஞ்ச
யன்வந்தானவனைப்பார்த்துடலங்குன்றி
எந்தவகைநீபிழைத்தாயெனவேவியாச
ரிஷிவரத்தாற்பிழைத்தனென்றானன்றேனெந்தன்
தந்தைதாய்தமைக்கண்டிங்கென்னிருப்பைச்
சாற்றென்றான்அவர்களைக்காப்பாற்றென்றானே.

சு. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

சஞ்சயாஇச்சேதிதாய்-தந்தையற்கோதிநீர்
தயவாய்க்காப்பாற்ற வேணும்

அநுபல்லவி.

வஞ்சகர் தமைக்கொன்று
வருகிறேன் மனைக்கின்று
சஞ்சயா

சரணங்கள்.

க. பதினெட்டுநாட்சண்டையிற்-புத்ரமித்ரர்தொண்ணூற்றோன்
பதுதம்பிமார்கள் சிறந்து-நின்ற
பாட்டனார்குருகன்னன்-சல்யன்சகுனிசிந்து
பதிமுதலோர்களெல்லாம் இறந்து
சிதைவானார்களென்றுநீ சிந்தித்துப்பரியாசம்
செய்யவேண்டாம்பாண்டவர் செய்தசண்டையேமோசம்
பொதுவாய்த்தெய்வமிருக்க வெனைமாத்ரமல்ங்கோலம்
புரியுமமர்புரிந்திடில் புவியேயாகுநிர்மூலம்

சஞ்சயா

உ. திறமாகவெனக்கொரு-ரிஷியுபதேசித்தமந்
திரமுண்டதைமென் மேலே-யோதில்
செத்தோரெல்லாம்பிழைப்பா-ரந்தமந்திரத்தையான்
செபித்தெல்லாரையுமுன் போலே
உரமாகவெழுப்பிக்கொண் டந்தப்பாண்டவர்கொற்றம்
ஊக்கமுதியமுயி ரொழியச்செய்தனர்த்தம்
தரைமேற்பகைவர்சோலி தவிர்த்துசெயமிருந்து
தாராளமாகவூர்க்கு நோாய்ச்சேர்கிறேன்வந்து

சஞ்சயா

௩. இந்தவிதமாப்பலியா-விட்டாலுமொருவன்நான்
எதிர்த்துக்கதையைக்கையிற் பற்றி-என்னை
ஈடுகுலைத்திவ்வண்ண-மாக்கிமிகவுங்கொர்வித்
திருக்குமைவர்களையும் வருத்தி
சிந்தைபதைத்தமுது தியங்கிடவேகொன்று
தீர்க்கிறேன்மாளாவிட்டால் சகத்தாசையைஅகன்று
அந்தபீமன்கதையால் ஆசையைவிட்டென்வர்க்கம்
அனைத்துஞ்சேர்ந்தாப்போல்நானும் அடைகிறேன்வீரசொர்க்கம்

சஞ்சயா

## அஸ்வத்தாமன் தடத்துளிருக்குந் துரியோதனன் மனதைத் தேற்றுதல்.

விருத்தம் கூ.

அரசனீதுரைக்கச்சஞ்சயன்சென்றான்
அவ்வரசனைக்களமுழுதும்
அடலஸ்வத்தாமன்கிருபன்கிருதபன்மன்
அன்புடன்தேடிக்காணமல்
வரும்பொழுதெதிரில்சஞ்சயன்கண்டு
வகையுடனவன்செய்லுரைத்து
மாதர்களிருக்கும்பாசறைக்கேகி
வயிசியபுத்திரனுயிச்சியினல்
தருமனுத்தாரம்பெற்றந்தமாதர்
தமையத்தினபுரஞ்சேர்த்து
தந்தைதாயழஇச்சேதியைச்சொல்லுந்
தருணத்தில்விதுரன்வந்தான்பின்
குருசுதனந்தயிருவரோடேகி
குளத்தினில்மூழ்கியேசெபிக்குங்
கொற்றவன்றன்னைக்கண்டுவீரங்கள்
கூறியன்னேனைத்தேற்றுவனே.

எ. தரு-இராகம்-தோடி-சாப்புதாளம்

பல்லவி.

துரியோதனராஜனே-விதுவென்னகாரியஞ்-சொல்லிதுவாவீரியம்

அநுபல்லவி.

கரியாகச்சங்கைசுட் டாலும்வெண்மைபோகாது
காசினியாண்டநீ தைரியம்விடுவதேது
துரியோ

சரணங்கள்.

க. உரமானபாரத்தைத்-தாங்கினலுங்கற்றா
ணெடியுமல்லால்வளைந்து நோமா-என்றும்
உரைத்துச்சந்தனம்மிகத்-தேய்ந்துபோனலுமணம்
உயர்ந்திடாமல்அபல மாமா-அதுபோல்
பரிவாரமுதலிய-சமஸ்தவாழ்வுபோனலும்
பயந்தொளித்துக்கொள்வது நாமா-இதைப்
பார்த்தோரெல்லாம்நகைப்பார்-நகைத்தாலும்நகைக்கின்றார்
பாருள்ளமட்டுமிப்
பேருங்கீர்த்தியு யும்பேர்மா
துரியோ

உ. இனியபாட்டனுர்குரு-முதலோர்கள்சொன்னபோ
தெல்லாமவர்மேல்முகஞ்சுளித் தாயேநெஞ்சு
இட்டசகுனிமாமன்-சொல்லைக்கன்னன்சொல்லை
யேமேலாய்நம்பியன்பளித் தாயே-கெட்ட
வினைசெய்பவருறத்தை-நம்பிக்கலசமூட்டி
விட்டும்பயப்படாமறகளித் தாயே-அந்த
வீரத்துடனேனின்று-சண்டைசெய்தவர்களை
வேர்களைந்தழியாமல்
நீர்க்குள்ளே யொளித்தாயே
துரியோ

ஈ.சண்டைசெய்துவெல்ல-வேணுமில்லாவிட்டால்
சாகவேணுமது வீரம்-அதைத்
தவிர்த்துவிட்டுநீர்க்குள்-ளொளித்துக்கொண்டிருப்பதா
சக்ராதிபருக்குகெம் பீரம்-முன்னே
அண்டும்ஐவர்சிரத்தை-இன்றைக்கந்திபடுமுன்
பாகவுன்மனவி சாரந்-தீர
அறுக்கிறேன்செய்யா-விட்டால்நான்குருபுத்ர
னல்லசண்டைக்குச்செல்வோம்
மெல்லவா இன்னேரம்
துரியோ

---

## வீமன் தடத்துளொளித்திருக்கும் மன்னனை வெளியில் புறப்படச்சொல்லுதல்.

விருத்தம் ௰.

குருசுதன்சொற்கேட்டமன்னனிக்குளத்திற்
கொஞ்சபொழுதிருந்துவருகின்றேனீங்கள்
மருவலரிங்கெய்தாமலந்தவால
மரத்தின்கீழிருங்களெனச்சென்றாரப்பால்
தருமன்முதலானோர்கனிவனைத்தேடித்
தடத்துளிருக்கின்றனென்றறிந்தெல்லோரும்
விரைவில்வந்தார்வீமன்பார்த்தவன்மேற்கோபம்
வீசினன்கனமழியப்பேசினனே.

அ. தரு-இராகம்-கலியாணி-ஆதிதாளம்.

பல்லவி.

அண்ணதுரியோதனு-வெளியிற்புறப்படுயிர்-ஆசையைவிட்டுவிடு

அநுபல்லவி.

எண்ணுமல்நீசெய்த சதிக்கெல்லாமடியாமல்
இருக்கின்றேமேவப்பா லெதனிலுமுடியாமல்
அண்ணு

சரணங்கள்.

க. ஊருங்கனகமணித் தேரும்நந்தியாவட்டத்
தாருமுடியொடுநற் சீரும்ராசேந்த்ரனெனும்
பேரும்போய்த்துணையாகச் சாருங்கனங்கொள்பாட்ட
ளுரும்பிறந்த தம்பி
மாரும்வேந்தர்களனை வோருமழிந்துசெய்த
போரும்பலமாகி யாருந்துணையில்லாமல்
நேரும்பாவத்தினுலே சோர்வும்நாணமுங்கொண்டின்
னீரிலொளித்தாயுந்தன் தீரமென்சொல்வேனெந்தன்
அண்ணு

உ. ஞானமும்புண்ணியதீர்த்த ஸ்நானமுநற்றேவதா
தியானமுமாமந்த்ரநி தானமுமரிதான
மோனமுந்தூய்மையாம்பிர தானமுமுலகிற்சன்
மானமுள்ளோர்க் கல்லாமல்
ஈனமுங்கொடியவஞ் ஞானமுங்கொண்டபாவி
யானவுனக்கெவ்வித மூனமற்றுப்பலிக்குந்
கானிற்புலிவிரதமாய்த் தானமையுமல்லாமல்
நீனினைத்ததாகுமா யேனலைகிறாய்சும்மா
அண்ணு

௩. இக்குவலயத்திற் சவுக்கியமிலையென்றுனீ
மிக்கமனம்வருந்தி துக்கமுற்றிடவேண்டாம்
சொர்க்கத்தலத்திலுன்னைப் பக்குவமாகச்சேர்த்தம்
மைக்கண்மடவா ரெல்லாம்
சக்ரபதிவந்தானென் றக்கணமெதிர்வந்துன்
னற்காத்தைப்பிடித் தாருக்கமுடனேபேசி
முக்கியகற்பகக்காவில் மெய்க்களிப்புறவைத்து
தக்கசல்லாபத்தோ டிருக்கனலஞ்செய்கிறேன்
அண்ணு

௪. கடல்சூழ்புவியெல்லாமோர் குடைநீழலிலடக்கித்
திடமாயாண்டுசெம்பொன்மா முடியரசர்களெல்லாம்
அடிமலரிற்பணியக் கெடியுலகெல்லாமேவ
நெடுமெரசாள யிருந்தவன்

தடமதிலொளித்தானென் றிடையுமாதருமேசி
நொடிசொல்வாரென்றெனக்கே வுடலருவருக்குதே
அடவுனக்கெள்ளளவும் படபடப்புண்டாய்நெஞ்சத்
திடைவெட்கமில்லாமற் சடம்போலிருக்கின்றாயே
அண்ணா

ரு. இத்தனைசொல்லைக்கேட்டு சற்றும்ரோஷமில்லாமல்
சுற்றும்படிவில்னீ யொளித்திருந்தாலின்னம்
உத்தமனெங்கள்ராம பத்திரன்கடல்மேல்விட்டு
வற்றச்செய்தகணை போலே
நற்றுமென்தம்பியான வெற்றிவிஜயனக்கினி
அஸ்திரத்தாலிதனை வற்றவடித்துனையும்
அத்தினஞ்சொன்னபடி சித்திரவதைசெய்துச
தைத்திடாதகல்வேனோ சற்றேதயவுசெய்து
அண்ணா

---

## துரியோதனன் மனதிலுற்ற சந்தேகத்தை கிருஷ்ணன் நீக்கி இனிநடக்குஞ் சண்டையின் சீரை அவனுக்குத் தெரியச்சொல்லுதல்.

விருத்தம் ௰க.

கனவீமன்சொலக்கேட்டுன்வாயைமூடென்
கதையால்மாய்த்திடுவேனென்றெவரையும்பார்த்
தினமானபடைகளில்லைக்கதையைத்தாங்கி
யிருக்கின்றேனாயுதத்தோடிருக்கும்நீங்கள்
அனைவருமாவென்றனொடுசண்டைசெய்வ
தல்லதொருவன்றானுசொல்லுமென்றான்
வனமாலியந்தமன்னன்சந்தேகத்தை
மாற்றுவான்சண்டையின்சீர்சாற்றுவானே.

௬. தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்

பல்லவி.

ஒருவீமன்மாத்ரந்தான்-சண்டைசெய்யவருவான் - உன்னோடுதுரியோதனா

அநுபல்லவி.

அருட்டர்மனிப்பதி னெட்டுனாள்வெகுகன
மாச்செய்தசண்டையை யறியாதாவுன்மனம்
ஒருவீமன்

சரணங்கள்.

க. சத்தியில்லாச்சூதாடி பாண்டவர்கள்குடிக்குச்
சலனந்தேடியத்துச்சா தனனைப்பார்த்துமுடிக்கிப்
பத்தினியையிழுத்து வரச்சொலியேயொடிக்கிப்
பங்கஞ்செய்யும்போது பதறிச்சொன்னபடிக்கு
ஒருவீமன்

உ. பதிமூன்றுநாளொரு பாலனபிமன்சித்தம்
பதறக்கொடிவேந்தராப் பரவிச்செய்தார்கள்யுத்தம்
அதுமாத்ரமாவில்லைப்பின் ஞல்வந்தறுத்துக்குற்றம்
அனைத்துஞ்செய்தார்கள்நாங்க-ளதுபோற்செய்யோமனர்த்தம்
ஒருவீமன்

௩. விரிவாகுமுக்கிரகோபா வேசத்துடனநேக
விதமாப்பாய்ந்துகர்ச்சித்து விண்ணெடுமிந்தலோக
மெரியநீசெய்யும்போரை எங்கஞ்சந்தேகமேக
யெதிரினில்நின்றுபார்த் திருப்போம்சாட்சிகளாக
ஒருவீமன்

---

## வீமனுந் துரியோதனனுஞ் சண்டைசெய்யும்படியான இடம் சிமந்தபஞ்சக நதிக்கரையென கிருஷ்ணன் நேமித்தல்.

விருத்தம் ௰உ.

மாயனுரைகேட்டதுரியோதனன்வீ
மனைப்பார்த்துவில்முதலாயுதத்திலோ
தீயநெடுங்கதையாலோஎதனுற்சண்டை
செய்குவாயெனவீமன்கதையாலென்றான்
தூயநெடுமாதவனைநோக்கிநாங்கள்
தொடர்ந்துசண்டைசெய இடஞ்சொல்லென்னவையன்
காயுமிப்போர்க்கிடஞ்சிமந்தபஞ்சகத்தின்
கரையென்றான்வேறில்லைஉரையென்றனே.

௰. தரு-இராகம்-எமுனு-ஆதிதாளம்

பல்லவி.

சிமந்தபஞ்சகநதிக்கரையேநீங்கள்சண்டை-செய்வதற்கிசைந்தது

அநுபல்லவி.

அமைந்தரத்தத்திறைப்பா தாளமட்டுங்கணைந்த
சிமந்த

சரணங்கள்.

க. தாவும்பரசிராமர் வேந்தர்களைவெறுத்து
தக்கஇருபத்தோர்வம் சத்தைக்கருவறுத்து
ஆவிபதைக்கத்துள்ளி அலையக்கண்டதுண்ட
மாக்கவமைந்துரண மண்டலமெனப்பேர்கொண்ட

சிமந்த

௨. எரியுமக்கினியேழு நாவினாலேயுமுண்டு
இதயங்களித்துத்திர்ப்தி என்றேஆனந்தங்கொண்டு
அரியகூத்தாடஅவிர்ப் பாகஞ்சொரிந்துமுற்ற
அன்பாய்நரமேதயா கங்கள்செய்திடப்பெற்ற

சிமந்த

௩. மேலுமந்தஸ்தானத்தை மிதித்தால்வினைகளேகும்
வீரவிக்கிரமத்தொடும் மெய்வலிமையுண்டாகும்
கோலப்புயங்கள்வீறிக் குன்றுபோலாமென்மேலே
கூடும்பலவெற்றியுங் குறைவற்றகையினாலே

சிமந்த

---

## தருமன் துரியோதனனைப்பார்த்து இனியாவது சண்டையை நிறுத்தி உலகத்தை நீயே ஆளெனல்.

விருத்தம் ௰௩.

கொண்டல்வண்ணன்சொலத்துரியன்கேட்டுக்கால்கள்
கொப்புளிக்கப்புவிமீதில்நடந்தான்தர்மன்
கண்டுபதைத்தேஇவனுக்கிவ்வனர்த்த
காலம்நேர்ந்திடுமெனில்இங்கினியாருக்கு
மண்டலத்திற்செல்வநிலையென்றெண்ணித்தன்
மணித்தேரைவிட்டிறங்கிவலதழிந்தங்
கண்டுமவனெதிரணுகிஉலகைநீயே
யாளென்றான்சொன்னபடிகேளென்றானே.

௰க. தரு-இராகம்-காபி-சாப்புதாளம்.

பல்லவி.

தம்பிதுரியோதனா-இந்தமட்டும்போதுஞ்-சண்டையைவிட்டுவிடு

அநுபல்லவி.

அம்பலமாயிய மின்னம்இந்தமுர[illegible]
அறிந்துதான்சாகவே மருந்துண்ணுவாரு[illegible]

தம்பி

சரணங்கள்.

௧. படிந்தாடத்தெரியாதோன் பந்தயம்வைக்கச்சரிப்
பட்டுத்தோற்றதாச்சுன்சீர் பார்மீதில்அரிகரி
மடிந்தோர்மடிந்தார்கள்நா மாகிலுமித்தாலம்
மதிக்கும்படியிருந்து வாழலாஞ்சிலகாலம்
தம்பி

௨. பிசகிடுங்கிணற்றடி பிள்ளைபோலிருந்து
பேசுகின்ருய்க்கோபம் பெருகத்தீப்போலெரிந்து
நிசமாகச்சொல்கிறேன் நேற்றேயென்வியாச்சியத்தை
நீக்கிவிட்டேன்சும்மா நீயேயாள்ராச்சியத்தைத்
தம்பி

௩. பாரையினிஇச்சித்துப் பங்கேகேட்பதில்லைப்
பரந்தாமன்சாட்சியாய்ப் பகர்கின்றேன்இச்சொல்லை
காரியஸ்த்தராகவுன் நிழலிலிருந்துய்கிருேங்
காலாற்காட்டுந்தொழிலைக் கையிஞற்செய்கிருேம்
தம்பி

---

## துரியோதனன் மிகுந்த கோபமுற்றுத் தருமனைப் பழித்தல்.

விருத்தம் ௰௪.

வன்னமாமுடிகொன்ஸ்ரீமன்-மகாமண்டலேசனை
நன்னயத்தருமனிந்த-நியாயத்தைச்சொல்லக்கேட்டு
பன்னகக்கொடியோன்பொங்கிப்-பளாபளாஎனக்குநன்மை
சொன்னதுபோதுமென்றே-தூறுவான்கூறுவானே.

௰௨. தரு-இராகம்-சஹாணு-சாப்புதாளம்.

பல்லவி.

நல்லநியாயஞ்சொன்ணுய்-தர்மபுத்திரா இந்த-நியாயமுனக்கேசரி

அநுபல்லவி.

கல்லையாகவோகோ நீசொல்வதுவாதுறை-
கட்டில்மீதேறியுங் கேட்பதுண்டாமுறை
நல்ல

சரணங்கள்.

[illegible]மென்தொண்ணூற்-ருென்பதுதம்பி
[illegible]யுமிளையுங் கொன்று
[illegible]த்தை-நீங்களேவரும்
[illegible]வாழவேநினைத் தன்று

விரியுமென்குலத் தோரைவேந்தரை
வெட்டினீர்சமர் முகத்தில்நின்று
ஒருவனுன்பிழைத் திருந்துபிணம்போல்
உலகையாளவோ கலகமென்று

நல்ல

உ. எண்டிசையும்நா-னுண்டுகழித்
திட்டஎச்சில்தானே அத்தை
அண்டுநீங்களே-கட்டிக்கொண்
டழுதடையுமவ்வின் பத்தை
விண்டுபோனார்கள் எனக்குள்ளோரெல்லாம்
விளம்பக்கே ளென்கிசத்தை
ஒண்டியாயுங்க ளிடத்திலிருந்துவாழ்ந்
துடைவதினுஞ்செத்தே யடைவேன்மோக்ஷத்தை

நல்ல

ங. அந்தக்குருமுத-லோர்களெனக்காய்வா
னடைந்தார்சமர்செய்து வாடி
யெந்தக்கொடும்பாவி-யேனுமவர்க்குப்பின்
னிருப்பானோஉயிர் நாடி
பிந்துநீங்களென்று விருப்பீர்பிராணனைப்
பெரிதாயெண்ணிக் கொண்டுதாடி
வெந்தெரியும்போது நெருப்புக்கேட்கவந்த
விதமாயழுமென்னோ டிகஉறவாடி

நல்ல

---

## கிருஷ்ணமூர்த்தி வீமனைப்புகழ்ந்து பேசுதல்.

விருத்தம் ௰௫.

நெஞ்சிரக்கமில்லாமலிவ்வாறோதி
நீங்கியவச்சுயோதனனும்போய்ச்சிமந்த
பஞ்சகத்திற்சேர்ந்தான் அவ்வைவரும்வெம்
படைகளொடுமவ்விடம்போய்ச்சேர்ந்தார் அந்த
வஞ்சகனுக்கெதிர்நின்றூர்ப்பரித்துச்சீறும்
மாருதியைப்பார்த்துனக்கிடாரென்றோதி
மிஞ்சுமவன்செயலைஒவ்வொன்றாச்சொல்லி
விரித்திட்டானுலகையெல்லாம்பரித்திட்டானே.

௴௩. தரு-இராகம்-பேகடா-ரூபகதாளம்.

பல்லவி.

உனக்கீடாகஆரைச் சொல்வது-இப்புவிமேலிப்போதும்
உரங்கொண்டுன்னெதிருற்றெவர் வெல்வது.

அநுபல்லவி.

கனத்தமந்தர புயவிசாலா
கண்ணிற்றீசிந்தும் பிரளயகாலா
நினைக்கருங்குணம் அமைந்தசீலனே
நேமமிகும்ஜெய விம்பூபாலனே
உனக்

சரணங்கள்.

க. நஞ்சிட்டராசனுனைக்கொல்லக்கங்கா
நதியிலமுழுத்தின போது-அந்த
நாகலோகஞ்சேர்ந்தமுதுண்டுப்பல
நன்மைகொண்டிப்புவி மீது
அஞ்சாமற்பின்னும் வந்தன்னைபாற்கூடி
அவனுக்கேமார்பாணி யாளதிர்நாடி
விஞ்சும்பிரதாபக தாயுததீரனே
மேருவைநிகர்த்த வீராதிவீரனே
உனக்

உ. அரக்குமாளிகையொன்றமைத்துங்களை
அடைத்தானேயதில் அன்று-அப்போ
தன்னையமற்றநால்வரையெடுத்துக்கொண்
டந்தநிசிதனிற் சென்று
இரைந்துவந்த இடும்பனைக்கொன்று
இடும்பியைச்சேர்ந் தன்பிலேநின்று
உாத்தகடோர்க்கஜன் தனைத்தருஞ்சோமா
உக்ரபராக்கிரம ஒறுஞ்சார்வபூமா
உனக்

௩.பகனைக்கொன்றங்கந்தணர்குலப்
பகையைநீஅன்று தீர்த்து-என்னைப்
பங்கஞ்செய்சராசந்தனுவியமன்
பட்டணஞ்சேரவே சேர்த்து
திகழ்கிம்மீரனைக் கொன்றுபாஞ்சாலியை
சென்றுமீட்டுவந்து செல்வத்திரிசூலியை

நிகர்த்தசடனை வதைத்துத்தினியே
நிறையக்கொண்டாரா ஜசிகாமணியே
உனக்

௬. வடவளகைக்குபேரன்மந்திரிமணி
மாலனுயிர்தன்னை முடித்துப்-புவி
மறுகவேவருங்கீசகனேச்சித்ர
வதைகள்செய்தங்கே மடித்து
கொடியதுச்சா தனனைத்தூக்கிக்
கொண்டங்கிருந்த வீரர்களைநோக்கி
விடுவித்துக்கொள்ளுமென் றுரைத்தநாவனே
மேதகுஞ்சீர்கொள் மகானுபாவனே
உனக்

---

## வீமன் துரியோதனனைத் துடைமுறிய அடித்தல்.

விருத்தம் ௰௬.



மாலிவையோதக்கேட்டவீமன்உள்ள
மகிழ்ந்துதுரியோதனனுக்கெதிரேஆல
காலமெனச்சீறிநின்றான்அவனுங்கண்ணிற்
கனலுதிரச்சீறிநின்றான்அந்தவேளை
சீலபலராமவந்திங்கமர்நடந்த
சேதிதனைக்கேட்டுத்தான்யாத்ரைபோன்
கோலமுரைத்தவர்களுக்கங்கமர்க்குத்தாரங்
கொடுத்திட்டார்அவர்கள்சண்டைக்கடுத்திட்டாரே.

௰௭. தரு-இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பல்லவி.

வீமசேனனுக்குந்-துரியோதனனுக்கும்-விளைந்துதேசண்டை

அநுபல்லவி.

பூமிகிடுகிடென் றசைந்தயர்ந்தாடவே
பொன்னுலகத்தோர்களுங் பொறிகலங்கிவாடவே
தீமைசெய்காலஎமன் திடுக்கிட்டங்கோடவே
செறிந்தகோபாக்கினி செகமெங்குமூடவே
சிந்தைத்துயரொடு நாகருநெளிக்கவே
அந்தத்தினிலுயர் மூவருமொளிக்கவே
வீமசே

சரணங்கள்.

க. ஒருவர்க்கொருவரெதி-ரெதிர்நின்றுசபதங்கள்
உரைத்திந்தப்புவி மேலே-யாரும்
வெருவிவிதிர்விதித்து-வெம்பியோடவேஇரு
மேருமலைகள் போலே-நின்று
பெரியகதைகளொடு-மிடம்வலமாய்ச்சுற்றிப்
பெருகியசினத் தாலே-அண்டம்
பிளக்கவுற்பாதகர்ச்-சனையிட்டிரத்தங்கள்
பிரிடவொருக் காலே-கிட்டி
அரியபெருங்கதைக ளாலேயெழும்பிமொத்தி
அண்டத்தெழும்பிப்பின்னு மவனிமேல்வந்துசுற்றி
விரியுங்கைகளாலிடி வீழ்வதெனவேகுத்தி
விசையாக்கால்களினாலே மேனிநடுங்கயெத்தி
வீறியவெண்டிசை முற்றிலும்நோகவே
மீறியஅண்ட மணுப்பொடியாகவே

வீமசேன

உ. பயங்கொள்ளரவக்கொடிக்-கதிபனவ்வீமனைப்
பார்த்துவெகுண்டு சித்தம்-உன்றன்
உயிர்நிலைதனைச்சொல்லு-நானுஞ்சொல்லுகிறேனப்பால்
ஒத்துச்செய்குவோம் யுத்தம்-என்று
நயமுடன்கேட்கஇவ-னெனக்குச்சிரத்தினில்நீ
நவிலெனவெக்கு குற்றங்-கொண்ட
கபவனெனக்குஞ்சிரத்-தினிற்றுனென்றுமுக்
கானுஞ்சொல்லிஅ பத்தம்-மிகு
வயங்கொளந்தவீமன் சிரத்தின்மேலடித்து
வருத்தஅவன்மூர்ச்சையாய் வீழ்ந்தான்பல்லைக்கடித்துச்
செயங்கொள்வீமன்பின்னு மெழுந்தப்பாவிதுடித்துச்
சிந்தைகலங்கிவிழச் செய்துவாய்மையடித்து
சீறிவயப்புலி யென்னவேகூறும்
மாறுபுயத்தினி நண்ணியேவீறும்

வீமசேன

௩. அந்தச்சுயோதனன்பின்னும்-வீமனுயிர்நிலையை
அறிந்தடித்தங் கார்த்து-நிற்க
நொந்துவீமன்கை-இளைத்தடிக்கடிவிழும்
நோக்கத்தைப்பார்த்தன் பார்த்து-ஐயன்
விந்தைமுகத்தைநோக்கி-இதுவென்னகோலமென்றான்
வீமன்மெய்சொன்னா னேற்று-அவன்
தந்திரஞ்சொல்லியிவ-னுயிர்நிலைதனிற்றாக்கச்
சாய்கிறானுடல் வேர்த்து-சமர்
முந்துமவனுயிர்நிலை துடையில்நீகாட்டென்று
மொழிய அவ்வாறுகிரீடி முறையாக்காட்டினனின்று
தொந்தவீமன்அந்தச் சைகையறிந்தேயன்று
துடைமுறிய அவனை அடித்துத்தள்ளியென்று
சுத்தத்தொடுகன் முற்றும்நிலாவிய
அத்திக்கிணையென முற்றுமுலாவிய
வீமசேன

---

## வீமன் துரியோதனனை உதைக்கத் தருமன்பார்த்துக் கோபித்தல்.

விருத்தம் ௰௭.

துடைமுறிந்துமண்மீதில்வீழ்ந்துவாடுந்
துரியோதனனைப்பின்னும்வீமன்கையால்
குடிலமொடுவாய்மேல்நெற்றியின்மேற்குத்திக்
கொக்கரித்துக்கோபத்தோடெழுந்துகாலால்
முடிசிதையஉதைத்திட்டான்தருமன்கண்டு
மூச்செறிந்துகண்ணீர்விட்டழுதையையோ
அடபாதகாஇவ்வாறமர்செய்வோர்கள்
ஆரென்றான்கெட்டதென்றன்பேரென்றானே.

௰௫. தரு-இராகம்-தன்னியாசி-சாப்புதாளம்.

பல்லவி.

இவனையா இப்படிசெய்வது-அரிகரிவீமா
இவனையா இப்படிசெய்வது.

அநுபல்லவி.

நவகண்டமுந்துதி வணங்காமுடிமன்னவன்
இவனையா

சரணங்கள்.

க. நரபதிகள்பணியுந்-தாளானிந்தப்பதி
நாலுலகுந்துதிசெய்ப்ர சித்தன்-நல்ல
குருகுலத்திலொரு-குஞ்சரம்போலுதித்துக்
குலவித்திரிந்தோன்மேலு
மூலகத்துக்கொரு கர்த்தன்
இவனையா

உ. முந்துந்தெய்வபல-மிருந்துநீஅன்றுடை
முறியவடித்துக்கொன்று வதைத்தாய்-வதைத்தோன்
அந்தமட்டுமிருந்தால்-யோக்யந்தானகந்தையி
னாலேதலைமீதினிற்
காலினாலேன் உதைத்தாய்
இவனையா

௩. நேற்றையவரைக்கும்நாம்-செய்தசண்டைதன்னில்
நேர்ந்ததாயெள்ளத்தனை வச்சே-இன்று
நூற்றைக்கெடுத்தது-குறுணியென்பதுபோலே
நோக்காமற்செய்துவிட்டாய்
தீர்க்கச்சக்கிரேசன் ஆச்சே
இவனையா

---

## துரியோதனன் துன்பப்படுவதை பலராமர்கண்டு வீமனோடெதிர்த்தல்.

விருத்தம் ௰அ.

சலமாகத்தருமன்சொலப்பீமன்கோபந்
தணிந்துநின்றான்அரசனுறுமவஸ்தையெல்லாம்
பலராமர்பார்த்திருந்துநெஞ்சம்பொங்கிப்
பாதகாவடபீமாஅகந்தையாலே
கிலமானகாரியத்தைச்செய்தாய்உன்றன்
கொர்வத்தைப்போக்கியுனைக்கொன்றிடாமல்
விலகேனீதேரேறியென்னையிங்கே
வெல்லென்றான்சண்டைசெய்யநில்லென்றானே.

௰௬. தரு-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

நில்லடாவீமா-ஒருகைபார்ப்போம்
நில்லடாவீமா.

அநுபல்லவி.

கல்லுமலாயுதத்தால் உன்சிரத்தினைமெல்ல
கண்டியாவிட்டாலென்பேர் பிரசண்டபலராமனல்ல
நில்லடா

சரணங்கள்.

க. அரையின்கீழடித்தவன்-றுடையைமுறித்தாய்த்தெரி
யாதவனென்றப் போது-பொறுத்
தடங்கினேன்பின்னுமஞ்-சாமற்றலைமீதுதைத்தா
யதைப்பார்க்கிலென்ன நீது
எரிகிறகொள்ளியை-யேறத்தள்ளினும்மத
மேறிஇம்மண் மீது-கையி
லேற்குந்திருமஞ்சனக்-குடத்தினிலொருவானை
யிருக்குமானுற்றிருக்குளத்தி
லெத்தனைவானை இராது
நில்லடா

உ. நயங்கொள்தனுசாஸ்திர-முறைபுரண்டுவீரர்கள்
நகைக்கஅவனுளமும் நோகச்-சற்றும்
நியாயத்தையோசியாமற்-றுடையிலடித்தாயுன்னண்
ணன்தம்பிமார்பேர்கெட்டுப் போக
கயவனீவுனக்கென்ன-சண்டைசெய்யத்தெரியும்
கதையினல்நற்புகழுண் டாக-நல்ல
கணைவேணுமாதிருஷ்ட்டித்துப்-பார்த்தால்நீசாகாயா
கழுவினதண்ணீர்போதாதா
பழுதில்லாமற்கிரை வேக
நில்லடா

ங. அவனிமீதினுனக்கு-மிவனுக்குமனத்தினில்
ஆயிரங்கோடி வருத்தம்-இருந்
தாலுமெண்ணிப்பாராமல்-முறைபிசகியிப்படி
ஆர்செய்யச்சொன்னர் அனர்த்தம்
இவனைச்செய்ததல்லநீ-யென்னைச்செய்ததேபற்றி
எரியுதேயென்றன் சித்தம்-ஓகோ
இளையவனுகினு-மாளுவான்மூப்பனென்
றியம்புமொழிகேட்டிருந்தும்
பயங்கொளாமற்செய்தாய் குற்றம்
நில்லடா

## கிருஷ்ணமூர்த்தி பலராமருடைய கோபத்தை இனிய வசனத்தினுல் மாற்றுதல்.

விருத்தம் யகூ.

மொய்த்தலாயுதனிவ்வாறு-மொழிந்துகாலாக்னியென்னச்
சித்தம்வெந்திட்டபோது-செகமெலாம்உண்டமாயன்
அத்தனேயெனத்துதித்தங்-கடிமிசைவீழ்ந்திறைஞ்சி
இத்தனைகோபமேதுக்-கென்னுவான்பன்னுவானே.

யள. தரு-இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

அண்ணுஇத்தனைகோபமேதுக்கு-இந்தவீமனுக்கெதிர்
அனற்போற்காயலாமோஇதுக்கு.

அநுபல்லவி.

பண்ணுதசூத்தெல்லாம் பண்ணிமெய்வருந்தும்
படிக்கைவரைச்செய்த இடக்கறிந்திருந்தும்
அண்ணு

சரணங்கள்.

க. விருந்திட்டுப்பகைகொண்-டவர்களைக்கெடுத்து
விட்டபின்னும்பேய்போற் பறந்து-பிள்ளைக்
கிருந்தகஞ்சியைக்-கூடவுருட்டிவிட்
டேழாட்டீங்கொண்டதை
எண்ணுமல் மறந்து
அண்ணு

உ. புருஷரைத்தான்பல-கோலஞ்செய்தான்அது
போகட்டும்பாவை பதைத்தது-கண்டும்
அரிகரிபங்கமேன்-செய்தான்அதனிலும்
அநியாயமோபீமன்
முனையில் உதைத்தது
அண்ணு

ங. மாபத்தினிஅப்போது-துடைமுறிந்தழிந்து
மடியப்போகிறுயென்று சித்தம்-நொந்து
சாபமிட்டாளந்தச்-சாபத்தாலல்லாமற்
சாதுவாமிவ்வீமன்
மீதிலுண்டா குற்றம்
அண்ணு

## வீமன் துரியோதனனை உதைத்ததற்காகத் தருமன் கிருஷ்ணனைப்பார்த்துச் சிலநீதிசொல்லுதல்.

விருத்தம் உ௰.

கண்ணனீ துரைக்கஅலாயுதன்துவார
காபுரிக்கேகின்ன்பினுமால்
கனிந்துதன்மனைப்பார்த்திவன்செய்தவஞ்ச
கத்தையெல்லாமறந்தல்லோ
புண்ணியவீமன்றனையிகழ்ந்தாயிப்
புல்லன்செய்தத்தினும்இவன்செய்
போர்கொடிதோரீபுகலெனத்தர்ம
புத்ரனைமாருதிபணிந்தின்
றண்ணலேஇவனைச்சிந்துசிந்தாக
வறுத்தெரிந்தாலுமென்கோபம்
அடங்குமாஇறக்கும்போதும்பொய்யுரைத்தென்
னுவியைக்கவர்ந்திடப்பார்த்தான்
எண்ணறுகோடிபாபஞ்சித்திக்கு
மிவனுக்காய்ப்பரிந்திடிலென்றான்
எம்பெருமானைநோக்கியத்தருமன்
இதமுறுநீதிகூறுவனே.

௰அ. தரு-இராகம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்.

பல்லவி.

இவனுதைக்கக்கூடாது-வஞ்சமே
இருந்தாலுமிப்போது.

அநுபல்லவி.

அவனமக்குப்பலகுற் றங்கள்செய்தபோதிலும்
இவனு

சரணங்கள்.

க. சூதுபலவஞ்சனை துரோகம்பகைவிரியும்
சுழலிவைஅவன்செய்யுந் தொழிலென்றூர்க்குந்தெரியும்
ஆதலாலிப்போதும்பொய் அவன்சொல்லிக்கொண்டானேச்சே
அவனுஇவன்புவிகொண் டாடும்புனிதனுச்சே
இவனு

உ. விரையொன்றுபோடவே காயொன்றுகாய்க்குமா
வெறுப்பானேன்அவனுக்கு மெய்சொல்லவாய்க்குமா
பரியும்பகலில்நட்சத் திரங்கண்டேனென்பானே
பகர்வீமன்தெரிந்தசற் பாத்ரனுச்சேயென்கோ...
இவனு

௬. தீயோர்பொல்லாங்குசெய்தால் ஜெகம்நிந்தைசொல்லாது
தெரிந்தோர்செய்தால்நிந்தித்துச் சிரிக்கும்அதுபொல்லாது
தூயவெண்மதிதனிற் றோன்றுங்களங்கம்போலே
தோன்றுவீமன்செய்தது தோஷமாகையினாலே
இவனு

---

## கிருஷ்ணன் துரியோதனனைப்பார்த்து என்னை நீவெறுத்துக்கொள்ளுதல், வீணென்மெனல்.

விருத்தம் உக.

உற்றமாலொடுநல்லுதிட்டிரனிவ்வா-றுரைசெயஅரசன்கேட்டரியை
ஒறுத்துப்பார்த்தவர்கள்பிழைமறந்தல்லோ-யோக்யராய்ப்பேசுகின்றூர்கள்
சுற்றவாசானைப்பீஷ்மரைக்கொன்றூர்-கன்னனங்கபலமாய்நின்ற
காலத்திலடித்தார்சயிந்தவன்றலையைக்-கபடவஞ்சனையினலறுத்தார்
மற்றும்பூரிசிராவலக்கையைக்கொய்தார்-மறையவனுக்கெதிர்தருமன்
மருவிபொய்யுரைத்தான்இன்றுநீயென்றன்-வலத்துடைமுறியச்செய்தாயிக்
குற்றங்கள்யாவும்நடத்தினையெனையுங்-கொன்றுதீர்த்தாய் இனியேனுங்
கோவிந்தாசுகமாவிருவெனமாலக்-குரிசிலைப்பார்த்தியம்புவனே.

௰௬. தரு-இராகம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

சும்மாஎனைவெறுத்துக்-கொண்டதாற்காரியமென்ன - துரியோதனராஜனே

அநுபல்லவி.

சம்மதியெப்படியோ அவ்வகையேஅப்போது
தலைதெரியாச்சன்னதந் தானடிவிட்டிப்போது
சும்மா

சரணங்கள்.

௧. அத்தினபுரத்துக்குத்-தூதுவந்தபோதென்னல்
ஆனபுத்திகளெல்லாம் உரைத்தேன்-பின்
பனைவருங்காணக்கைக-ளேந்திப்பிச்சையுங்கேட்டுன்
அகத்தைக்கரையாதெல்லாங் கரைத்தேன்-ஒகோ
இத்தனைபாட்டுக்குமுன்-னிதயங்கரையாமல்நீ
இருந்தஇறுமாப்பையான் கண்டு-வீமன்
எடுத்தகதைவீண்போமா-அதனூற்றுடைமுறிந்தே
இறப்பாயென்றுரைத்தேனன்வெ குண்டு-இது
மத்தியில்பீஷ்மர்குரு மாதவரித்திரிலோகம்
மதிக்கும்விதுரான்பாய் வகுத்துச்சொன்னாரநேகம்
ஒத்தெதையுங்கேளாம லுலகில்நாமெல்லாங்கட்டாய்
உய்யலாமென்றெண்ணிக்கொண் டுன்னாலேநீயேகெட்டாய்
சும்மா

௨. குறிகொள்சிகண்டிதிருஷ்டத்-துய்மன்பீஷ்மர்குருவைக்
கொல்லப்பிறந்தார்களென் றறிந்தும்-நீயே
கூட்டிவந்துகொன்ரு-யந்தப்பாவமுனக்கே
கூடுமல்லாலெவர்க்குப் பொருந்தும்-மிகு
திறல்சேர்கன்னனுக்குச்-சாபத்தாற்புதைபட்டத்
தேரெழும்பாவிட்டாலக் குற்றம்-பார்த்தன்
திகைக்கும்நிராயுதன்மேல்-பாணம்விட்டானதனுற்
செத்தானென்கிருய்மகா யுக்தம்-நீதி
யறிபார்த்தன்துணைவந்த சாத்தகிதனைக்கொல்ல
வடுத்தபூரிசிரானைகயை அம்பாலறுத்தான்மெல்ல
முறையாஅவனைநீகாப் பாற்ருமலேன்பிரண்டு
முழித்தாயிவ்வகையாய்த்தான் முழுதுங்கெடுத்துக்கொண்டு
சும்மா

௩. இசைவீமனைநீஉயிர்-நிலைகேட்டாய்த்தலையினி
லென்றுரைத்திட்டானவன் மெய்யை-உனக்
கெங்கேஉயிர்நிலையென்-றவன்கேட்டால்மெய்சொல்லாம
லெனக்குந்தலையிலென்று பொய்யைச்-சொல்லிப்
புஜபலத்துடனவன்-தலையிலடித்தாய்நாங்கள்
பொறுத்திருந்தாலுந்தெய்வங் கூட-பார்த்துப்
பொறுக்குமாவதுகாட்டி-விட்டதுநான்சொல்லிக்கிரீடி
புகன்ருனென்றுற்ருய்பழி போட-மேலும்
உசிதபாஞ்சாலிதுடை யொடிந்துநீமனஸ்தாபம்
உற்றுமாள்வாயென்ருளே தப்புமா அந்தசாபம்
பிசகுன்னுதுன்பாவந் தீர்ந்துதெய்வகடாட்சம்
பிந்திடாவீரசொர்க்கம் பெறச்செய்தேனிதுருட்சம்
சும்மா

---

## திருதராட்டிரன் கிருஷ்ணமூர்த்தியை நிந்தித்தல்.

விருத்தம் ௨௨.

பகவனுரைத்தைவர்கள்தம்மோடுநீடு
பாசறைபக்கத்திருந்தான்சூரியனுழ்ந்தான்
திகழ்மாயனவருடன்பாதகன்மாண்டத்தைத்
திருதராட்டிரன்றனக்குநான்போய்ச்சொல்லி
அகந்தேற்றிவருகின்றேனென்றுனைவ
ரப்படிசெய்யாவிடிற்சபிப்பானென்னத்
தகும்வியாசருடனிருந்தவேந்தைச்சென்று
சந்தித்தான்அவன்மிகவும்நிந்தித்தானே.

௨௰. தரு-இராகம்-முகாரி-திரிபுடைதாளம்.

பல்லவி.

இப்போதாவதுன்மனங்குளிர்ந்ததா-கபடநாடககிருஷ்ண
இப்போதாவதுன்மனங்குளிர்ந்ததா.

அநுபல்லவி.

நிர்ப்பாக்கியானன எம்மைவிடுத்தாயே
நினைத்தபடியே அனைத்தையுமுடித்தாயே
இப்போ

சரணங்கள்.

௧. காமுறுமென்மக்கள்நூறுபேர்மீதிலுங்
கடும்பகையுள்ளத்தில் ஏற்றாயே-ஏற்று
வீமன்கதையடியாலேமண்மீதில்
மெய்சோரவிடுத்
தையோகொன்று தீர்த்தாயே
இப்போ

௨. அதஞ்செய்திக்குடும்பத்தைநேத்திரமில்
லாயென்னைஅலைய விட்டாயே-விட்டுக்
கதறுமெங்கள்வயிற்றில்அவியாத
கனலையையோவுன்
மனதறிந் திட்டாயே
இப்போ

௩. வேணுமென்றுன்னெஞ்சிலெண்ணிஞலிச்சண்டை
விளையுமாசெய்திந்த்ர சாலம்-மார்
பாணியாநீயேயேற்பட்டென்றன்வர்க்கத்தை
ஐயுறவில்லாமற்
செய்தாயே நிர்மூலம்
இப்போ

---

## கிருஷ்ணமூர்த்தி திருதராட்டிரன் காந்தாரி இவர்கள் மனதைத் தேற்றுதல்.

விருத்தம் ௨௩.

அரசனிந்தப்படிசொலக்காந்தாரிகேட்டு
அங்கலறியழுதாள்மாலன்னோரைப்பார்த்து
பொறுமியெனைவெறுக்கின்றீர்என்னுலான
புத்திகளெல்லாஞ்சொன்னேனீங்கள்சொன்னீர்

பெரியோர்கள்பலர்சொன்னார்தருமனின்றும்
பிரபஞ்சம்நீயாளென்றேஅனந்தஞ்சொன்னான்
கரிகாலன்கேளாமல்வீமன்மீதே
காய்ந்திட்டானவன்கதையால்மாய்ந்திட்டானே.

௨௧. தரு-இராகம்-மோகனம்-சாப்புதாளம்.

பல்லவி.

அவனுக்காகவனிவ்விசாரங்-கட்டோ-டகற்றுமகற்றுமென்னசாரம்

அநுபல்லவி.

தவமுற்றகாந்தாரித் , தாயேதிரிதராட்டிரனே
அவனுக்கா

சரணங்கள்.

௧. சேயென்றவனைநீங்கள் சிந்தித்தெண்ணக்கூடாது
தீயனற்கதிநீங்கள் சேர்வதற்கில்லைஹேது
பேயாட்டமாடிவெகு பேரைக்கொன்றுற்றானேச்சே
பிள்ளையாஅவனிந்தப் பிரபஞ்சத்திற்கெமனச்சே
அவனுக்கா

௨. பரிந்தஉங்கள்வயிறு பண்ணபாவங்கொடும்
பாவிகள்பிறந்ததப் பட்டார்மறந்துவிடும்
தெரிந்தபாண்டவர்களைச் சேர்ந்தால்நல்லகதி
சித்திக்குமிப்போதே தீருமுங்கள்அவிதி
அவனுக்கா

௩. சிலஐவர்கள்காண வருவார்நீங்கள்கோபஞ்
செய்திடப்போறீர்கள் சிந்தைநொந்துசாபம்
பாலரவர்களென்றே பாவித்துநன்னலத்தைப்
பண்ணுங்கோளடைவீர்கள் பகர்பரமபதத்தை
அவனுக்கா

---

## தேரெரிந்துபோனபின்பு கிருஷ்ணமூர்த்தி ஐவர்களையும் வனத்திற் கழைத்துக்கொண்டு போகுதல்.

விருத்தம் ௨௪.

அரிசொல்லாற்றிருதராட்டிரன்காந்தாரி
அகத்துயர்தீர்ந்திருந்தார்மால்ஐவர்பாற்போய்
விரைவிற்றான்போய்வந்தசேதிசொல்லி
விஜயனைப்பார்த்திரதம்விட்டிறங்கென்றோதத்
தரையிலன்னோன்வந்தான்பொற்றேரும்வெந்து
தணிந்ததுபாசறையதிற்செல்லாமல்ஐயன்
ஒருதம்பியுடனைவர்சூழத்தேர்மேல்
ஊர்ந்திட்டான்ஒருவனத்திற்சேர்ந்திட்டானே.

துரியோதனன் பீமனால் தான்பட்டகுறைகளைச் சொல்ல அஸ்வத்தாமன் கோபமாகச் சிலதுபேசுதல்.

விருத்தம் உரு.

மாலிந்தவகைஇரவுமுழுதும்பாண்ட
 வர்களுடனவ்வனத்திருந்தான்அங்கேமூவர்
ஆலின்கீழிருந்தோர்களரசைத்தேடி
 அலைந்தவன்வீழ்ந்ததையறிந்தங்கவன்பாற்சேர்ந்து
தாலமிசைவிழுந்தழும்போதவனவ்வஸ்வத்
 தாமனொடுகிருபன்கிருதபத்மனையும்பார்த்துக்
கோலமுறுவீமன்செய்கொடுமையெல்லாங்
 கூறினான்குருவின்மகன்சீறினானே.

உஉ. தரு இராகம்-பியாகடை-சாப்புதாளம்.

பல்லவி.

இப்போதுபாரென்சாக சத்தை-பூச்சக்
கிரேசனேதருகிறேன்ஜெயத்தை.

அநுபல்லவி.

அப்போதென்னைநம்பாமல் அனைத்துங்கெடச்செய்தாயே
இப்போது

சரணங்கள்.

க. தழைத்தசேனாபதி பட்டம்-எனக்கே
 தந்திருந்தாலவர்கள் கொட்டம்-அனைத்தும்
அழித்துன்னைச்சக்ரேச னாக்குவேனிப்பேச்சுக்
கழிவுண்டாதுர்ப்பாக்ய னாய்தொலைந்துப்போச்சு
இப்போது

உ. இருக்குமிருவர்தமை நோக்கி-அவர்க்
 கென்னைச்சேனாபதி யாக்கி-விட்டால்
செருவிலுனையுதைத்த தீயன்முன்செல்கிறேன்
சென்றவனுயிர்வானஞ் சேரவேகொல்கிறேன்
இப்போது

ரு. மாச்சரியங்கொள்ளேவர் தலையை-அறுத்து
 வருகிறேன்பாரென்சொல் நிலையை-இந்தப்
பேச்சின்படிசெய்யாமற் போவேனானல்கல்ல
பிர்ம்மகுலத்தினிற் பிறந்தபிள்ளையேயல்ல
இப்போது

சுயோதனபர்வம்-முற்றியது.

சுயோதனபர்வத்தில்-விருத்தம்-உரு. தரு-உஉ. ஆ சஎ.

---

பதினெட்டாநாட்பகற்போர்-முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

பதினோராவது

# சவுத்திகபர்வம்.

பதினெட்டாநாள் இராத்திரி

# பாசறை யுத்தம்.

கண்ணன் - துதி.

விருத்தம் க.

வைநதேவன்முதுகேறிவேழமுன்
வந்துகாட்சிகொடுத்தவன்
துயரகன்றிடவண்டரண்டர்தொழ
சோனைமாரிதடுத்தவன்
புயலுறும்படிவதுளபதாமன்மறை
புகலுமாயிரநாமன்வண்
ணயனவேங்கிடலட்சுமிமார்பனை
நமஸ்கரித்திடுவாமரோ.

சேனாதிபதியான அஸ்வத்தாமன் பூதமாகவந்த சிவபெருமானிடத்தில், வரமும் வாளாயுதமும் பெற்றுத் துதிசெய்தல்.

விருத்தம் உ.

குருமகனுரைக்கஅரசன்அவ்வாறே
கொற்றசேனாபதிபட்டங்
கொடுத்திடஅன்னோன்பாசறைதனக்குக்
கொடும்பகையொடுநடந்தான்பின்
அரியசஞ்சயன்அச்சுயோதனன்தனைப்பார்த்
தழுதஸ்வத்தாமன்இவரையும்
அழித்திடச்செய்தசபதமுமவன்போம்
அவசரந்தன்னையுங்கேட்டு

வெருவியேஅஸ்திநபுரஞ்சேர்ந்திவ்
வேந்துயிர்நீங்குமென்றுரைக்க
வெதும்பினர்பலருந்தந்தைதாய்ச்சோக
மீறினர்அவர்களைத்தேற்றி
மருவுபாசறையில்நடப்பதைக்கண்டு
வருவதற்கேகினன்அங்கே
மனுமஸ்வத்தாமன்மருள்கொளப்பூத
வடிவமாய்ச்சம்புவந்தனனே.

க. திபதை-இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

**கண்ணிகள்.**

க. எரியுங்கண்க ளிலங்கச்-செஞ்சடை
இருபுறத்திலு மலங்க-ஒரு
பெரியபூதவடிவ மாய்ச்-சிவ
பெருமானேவந்து துலங்க

உ. அதைஅஸ்வத்தாமன் பார்த்துக்-கண்சிவந்
தவ்ஷ்டகாசஞ்செய்தார்ப் பரித்து-கன்
னுதிரும்பாணங்கள் கோடி-கோடியாக
ஓயாமல்விட்டான்அதைத் தரித்து

௩. எதிர்வரும்பாணத்தைக் கையாற்-பிடித்துமி
யெனத்தேய்த்துக்காற்றிற் றாவிக்-குரு
சுதன்தேரைக்கிருபன்கிருத பத்மன்-தேரைத்
தூக்கிவிண்சேரக் கடாவி

௪. கொக்கரித்துக்கொண்டு நிற்க-இம்முத்தேருஞ்
கொடுங்கைகுத்துக்கால்கள் செறிந்து-மேவும்
சக்கரந்தவிடு பொடிக-ளாகித்
தரையில்வீழ்ந்திட்டன முறிந்து

௫. அச்சத்துடன்கிருப னஸ்வத்-தாமனைப்பார்த்
தப்பாநமக்கிந்தப் பூதம்-உயிர்ப்
பிச்சைகொடுத்த தினிமே-லிருப்போமானால்
பிழையோம்வரும்பிர மாதம்

௬. ஓடிப்போவதே மார்க்க-மில்லாவிட்டா
லொருநொடியிற்பூதங் கொல்லும்-என்று
வாடிச்சொன்ன கிருபனை-அவன்பார்த்து
மயங்காமல்நீங்கள் நில்லும்

எ. இதைக்கண்டு திரும்பே-னொருத்த
னேநின்றுசிவத்தி யானஞ்-செய்து
மதிக்கும்வரம் பெற்றுப்-பாண்டவரை
வதைத்துச்செய்கிறேன் ஊனம்

௮. எனச்சொல்லிப்பரித் தாமன்-ஸ்நானஞ்செய்
தெழுந்துமெய்யன்பிற் சிறந்து-இந்த
அநித்யமாயப்பிரபஞ் சத்தி-ஞசையை
அகத்தில்வையாமல் மறந்து

௯. ஐம்புலன்தன்னை அடக்கிப்-பஞ்சாட்
சரத்தையுச்சரித் தின்று-மிக
நம்புமடிமை சொற்பமு-தாகாமல்
நயந்தருள்புரி யென்று

௰. சொல்லித்தொழ வீசன்-இன்னமிவனைச்
சோதித்துப்பார்க்க வேண்டு-மெனக்
கொல்லும்பூதங்களைக் கோடி-கோடியாகக்
கூட்டிவிட்டானருள் பூண்டு

௰௧. ஒருதலையுடன் அநந்தம்-பலவாய்
ஓங்குந்தலையுடன் அநந்தம்-உற்ற
இருகைகளுடன் அநந்தம்-பலவா
இலகுங்கைகளுடன் அநந்தம்

௰௨. நரிமுகத்துட னநந்தங்-கோடி
நாய்முகத்துட னநந்தம்-பாயும்
அரிமுகத்துட னநந்தஞ்-சிவந்த
அசமுகத்துட னநந்தம்

௰௩. பரிமுகத்துடன் அநந்தம்-இனிய
பசுமுகத்துடன் அநந்தம்-ஓங்கும்
கரிமுகத்துடன் அநந்தம்-நீடுங்
கலைமுகத்துடன் அநந்தம்

௰௪. வந்துவளைந்துக் கொண்டு-கண்களில்
வடவைபோற்றண லுதிரக்-கோர
தந்தத்தைக்காட்டிச் சிந்தப்போ-மென்று
சார்ந்துலகங்க ளதிர

௰௫. பிடியுங்கூழாகப் பிசையும்-மண்டைப்
பிளக்கவேமோதி அறையும்-வாயாற்
கடியுங்கைகளாற் கசக்குந்-திக்கு
களில்வீழவாரி இறையும்

௧௬. என்றேதிவந்தக்கணங் களைப்-பார்த்திவ
னேக்கமில்லாமல்மென் மேலே-அந்தக்
கொன்றையணிபரன் பதத்தில்-மனத்தைக்
கூட்டினுனேயொருக் காலே

௧௭. வந்தபூதங்க ளிவனை-வெல்லநம்மால்
மாளாதென்றுபின்னுக் கிடைந்து-நிற்க
அந்தப்பூதங்களி லொரு-பூதம்வட
வாக்கினிபோலேமுன் னெரிந்து

௧௮. நின்றிடவோர் பூதம்வந்து-இவனைப்பற்றி
நெருப்பிற்கொண்டுபோய்த் தள்ளக்-குரு
மைந்தனென்செய்குவோ மிந்த-நெருப்பினில்
மாள்வதேநன்மையென் றுள்ள

௧௯. மதில்நினைத்தந்த நெருப்பில்-வீழும்போ
தந்திவண்ணனெதிர் வந்து-நின்று
சதிர்பெறுமுக்ரவா ளுடன்-வரந்
தந்தானேமன துவந்து

௨௰. உவந்தபரமன் றன்னைக்-கண்டுள்ள
முருகியன்பினில் விரிந்து-மிகப்
பரிந்துமெய்விதிர் விதிர்க்க-வானந்த
பாஷ்பக்கண்ணீர்கள் சொரிந்து

௨௧. பிர்ம்மாதிதேவர் துதிக்கவே-எங்கும்
பிரிவற்றிருக்கு மனுதியே-வரு
மும்மைதெரிந்த முனிவர்கள்-நெஞ்சில்
முயன்றுநடிக்கும்வி ஞேதியே

௨௨. சந்திரசடாதர சங்கர-சங்கரி
சந்ததமகிழ்திரி சூலியே-மகா
மந்திரமகேச வரோதய-வானவர்
மகிழ்கொள்பிர்ம்ம கபாலியே

௨௩. நித்தியநிரஞ்சன நிர்க்குண-நிர்மல
நிகிலநிராமய பூரண-பரி
சுத்தரிதய சுதந்திர-சுராஜித
ஸ்தூலசூட்சுமஜெகத் காரண

௨௪. வித்தகவிமல விக்கிரம-வேதவே
தாந்தநித்யகோலா கலனே-சுக
முத்திமுதல்வமுக் கண்ணு-முத்தொழிலே
முறையாகச்செய்யு மமலனே

உ௫. பச்சைப்பசுங்கொடி வாமத்தில்-மேவுஞ்செம்
பவளமேனிகொள் நாதனே-புவி
அச்சப்படவெழும் ஆல-காலத்தினை
அருந்தியபஞ்ச பூதனே

உ௬. அண்டசராசரங் களை-யெல்லாம்
அசைப்பித்திடுஞ்சூத்ர தாரியே-யாரும்
விண்டிடற்கரிய புவன-கோடியை
விர்த்திசெய்யுமதி காரியே

உ௭. எண்ணுவோரெண்ணப் படிக்-கருள்புரியு
இசைகிர்பாசமுத் திரனே-என்
கண்ணுங்கருத்துநற் காயமு-மாகிக்
கலந்துறையும்விசித் திரனே

உ௮. உனைக்கண்ணுற்கண்டு களிக்க-நானென்ன
உயர்தவங்கள்செய் தேனே-என்று
மனக்களிப்புடன் துதித்தே-ஈசன்
மலர்ப்பதத்தில்வீழ்ந் தானே

உ௯. அவனைப்பார்த்திவ் வாளா-விரவில்
அடைவாய்வெற்றிநீ மீறிப்-போன
கவனப்பரித்தேர் முதல்வரு-மென்றையன்
கழறிச்சென்றான்மகழ் வீறி

---

## அஸ்வத்தாமன் இளம்பஞ்சபாண்டவரையும், திருஷ்டத்தூய்மன் முதலானவர்களையும், சமர்செய்து கொல்லுதல்.

விருத்தம் ௧.

பரமனருளாற்சகலவரமும்பெற்ற
பரித்தாமன்பாண்டவர்பாசறையிற்சேர்ந்து
காவில்கிருபன்கிருதபத்மனையுமவ்வாசற்
காவலாளர்களாகவைத்துமுன்னே
அரிதனக்குச்சொன்னதையுமறந்தைவர்க்கா
யாதிமுதற்பட்டதையுமறந்தேதேதோ
கருதிக்கண்சிவந்துநெறநெறென்றுபல்லைக்
கடித்திட்டான்வெகுஜனத்தைமடித்திட்டானே.

க. தரு-சிந்து-இராகம்-சௌராஷ்ட்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

மடித்தானேஅஸ்வத்தாமன்-இரவிற்சென்று
மடித்தானேஅஸ்வத்தாமன்.

அநுபல்லவி.

மடித்தானேஅஸ்வத்தாமன் பிடித்தக்கைவாளினாலே
அடுத்தபாண்டவர்சேனை துடித்துச்சாகமென்மேலே
மடித்தானே

சரணங்கள்.

க. மிரண்டுபலபேர்பயந்
தஞ்சப்பரித்தாமன் ஆர்த்து-வடவாக்கினிபோல்
இரண்டுகண்களுஞ்
சிவந்தனவெழவுடல் வேர்த்து-பதினெட்டுநாள்
திரண்டசமர்செய்த
வனுப்பெல்லாந்தீரமகிழ் பூர்த்து-பாசறைக்குள்ளே
அரண்டுநித்திரைசெய்
திருக்குந்திருஷ்டத்துய்மனைப் பார்த்து-நமதுசத்தி
ராதியகப்பட்டானென்ற வன்கழுத்தில்விற்கயிற்றைச் சுற்றி
யாகப்பசுவை
வேதியர்களிழுத்து வருவதுபோலிழுத்துவந்து நிறுத்தி
அவர்கள்சொல்லும்
நீதிமந்திரம்போ லநேகவசைகளைச்சொல்லி இருத்தி
பிடித்தவாளால்
காதுமூக்குச்சதைகள் கழிந்துவிழவத்ததியிற் குத்தி
அவனுடலை
கத்திக்கத்தனைச்சதை
யறுத்துமகத்தானவதை செய்து-புகழ்தனுவே
தத்தினுயருங்குருவை
வெட்டினுயென்றுமிகவும் வைது-அவன்மனது
தத்தளித்தயரவேகி
ரத்தவெள்ளமோடும்படி பெய்து-அக்னிதன்னினு
தித்தவுத்தமன்றலையைத்
தத்திவிழும்படியாகக் கொய்து-பின்னுமங்குள்ள
உலைவறுமன்னரெதிர் மலையெனவேகிட்டி
பலபலமொழியால்நன் னிலைகுலையவதட்டி
சிலைமுதலாயுதங்கள் நிலமிசைவிழத்தெட்டி
கொலைபுரிவாளினாலே தலைதலையாகவெட்டி
மடித்தானே

உ. பின்னுமங்கேநித்திரைசெய்
வீரர்காதிலிவ்வோசை விழுந்து-அவர்களெல்லாம்
என்னவனர்த்தகாலம்
பிறந்ததென்றேருதிக்கொண் டெழுந்து-அடங்காக்கோபச்
சன்னதமுடனுக்
கிரமித்தந்தரமட்டுங் கொழுந்து-விட்டெரிந்திடும்
வன்னிபோலெழுந்தஸ்வத்
தாமனதோகதியி. லழுந்து-முறையாவில்லே

வளைத்தார்களஸ்வத்தாமன் கிளைத்தஇம்மன்னர்மேற்கை நீட்டி
வாளாலவர்கள்
களைத்துப்புவியின்மிசை இளைத்துவிழும்படியா வாட்டி
நிற்கப்பாஞ்சால
தளத்தோடுத்தமோசா வுதாரமனும்வந்துக்கிரங் காட்டி
சேவகஞ்செய்யக்
களத்திலவர்தலை சிகண்டிதலையும்விழவே மாட்டி
அவர்களுக்குக்

காவலாகவந்த
சேவகரெல்லாமனம் வாடி-வருந்தஅந்தத்
தேவதேவன்தந்த
வாளினுலேயெதி ரோடி-விக்ரமத்துடன்
தாவியவாள்வீசிப்
பாவியகன்றுவிண் ணுடிப்-போகும்படிக்குக்
கூவிக்கூவிவெட்டிப்
பாவிகொன்றுன்சின மேவி-இதல்லாலங்கே
குணத்துடன்வீறுமன்னர் கணத்தினில்மாண்டிறைய
கணக்கில்லாப்பேய்களங்கே நிணத்தினையுண்டுறைய
வணக்கங்கொளேவர்தளம் திரணப்பிராயமாக்குறைய
ரணக்களமெல்லாம்ஐயோ பிணக்கூட்டமாநிறைய

மடித்தானே

௩. இந்தவகைபாசறைக்கு
ளிருந்தராஜர்களும்நொந் திறந்து-போனதுந்தங்கள்
தந்தையர்கள்தங்களைத்
தனியாகவிட்டுவிட்டு மறந்து-போனதையுமவ்
வைந்துபேரிளம்பஞ்ச
பாண்டவர்கள்நினைத்துப் பறந்து-அநீதஞ்செய்ய

வந்தஅஸ்வத்தாமனை
வாட்டுவோமென்றவன்முன் சிறந்து-வில்லைவளைத்து
வாளிகளையெடுத்தொரு கோடிகோடியாக விடுத்து
அஸ்வத்தாமன்றன்
றேளினிற்றுக்க அவனுளிபோலெதிர்கடு கடுத்து
இவ்வைந்துபேர்கள்
நீளுமுயிர்களைத்தன் வாளினுக்கிரையாகக் கொடுத்து
மாமிசங்களைக்
காளிகள்கூளிகள் நீளிதமாவுண்ண விடுத்து
மீந்தஜனத்தை
கதறிவிழச்சிலரைக்
கறுவிவிழச்சிலரைக் கொன்று-வலித்துக்கைகால்
உதறிவிழச்சிலரை
உருகிவிழச்சிலரைக் கொன்று-வலியநெஞ்சம்
பதறிவிழச்சிலரை
பயந்துவிழச்சிலரைக் கொன்று-மூலைக்குமூலை
சிதறிவிழச்சிலரைத்
திகைத்துவிழச்சிலரைக் கொன்று-பாசறைக்குள்ளே
தேறியொருவர்மீ ராமலேயெரிந்து
நீறுநீறுப்போக வேகொலைபுரிந்து
மீறியசினந்தலைக் கேறியேவிரிந்து
ஆறுமுகனைப்போல் வீறியங்கிருந்து
மடித்தானே

---

## சஞ்சயனைத் துரியோதனன்பார்த்துத் தன்மரணத்தைத் திருதராட்டிரனுக்குத் தெரிவிக்கச் சொல்லுதல்.

விருத்தம் ௪.

இந்தவகைபரித்தாமன்பாடிதன்னி
விருந்தசிசுக்களைச்சோழன்தமையுங்கொன்றே
வந்தகிருபன்கிருதபத்மனோடங்கேகி
மன்னனுடனடந்தசெயலுரைக்கஅன்னோன்
சிந்தைமகிழ்ந்தினிநீங்களேவரோடு
சேராமற்செல்லுமென்றனவர்சென்றார்பின்
மந்திரசஞ்சயன்வந்தான்அவனைப்பார்த்து
மறுகினன்பலசொல்லிக்குறுகினனே.

உ. தரு-இராகம்-கேதாரகௌளம்-சாப்புதாளம்.

பல்லவி.

இனியார்நீயொருத்தன்தான்-மருந்துபோலே-இருக்கின்றாயேசஞ்சயனே

அநுபல்லவி.

வினையாற்சந்திரகுல வேரேஅறுந்துபோச்சு
விதியினாலேயென்றன் கதியுமிப்படியாச்சு
இனியார்

சரணங்கள்.

க. அங்கேதாய்தந்தையர்-அழுதுவுந்திரசோக
மடைவாரது பொல்லாது-நீபோய்
அவர்க்குச்சமாதானஞ்-சொல்லித்தேற்றுவிட்டால்
ஐயோஅவர்காயம் நில்லாது-மேலுந்
தங்கும்நூறுபுத்திரரை சாகக்கொடுத்தோர்பூணும்
சஞ்சலந்தீருமாவறிந்து நீகாப்பாற்றவேணும்
இனியார்

உ. தம்பியர்களும்நானுந்-தாலிகட்டியபெண்கள்
தவித்தையோமிக இரைந்து-துக்கச்
சாகரத்திலழுந்தி-தவிப்பார்களவர்க்கெல்லாஞ்
சகத்தினியலே உரைத்து-வீணாச்
சம்பவித்தஅவர்கள் சஞ்சலத்தைக்கல்லு
தடையில்லாமல்நல்ல வழியில்நடக்கச்சொல்லு
இனியார்

௩. எதிர்வருங்காரியத்தை-யெண்ணாமல்நாங்கள்சண்டைக்
கெதிர்த்துபோராடி வம்பில்-ஐயே
இறந்தோமெங்களை-யெண்ணாமற்பாண்டவர்க
ளேபிள்ளைகளாய் நம்பி-நல்ல
விதியாத்தாய்தந்தையரைக் கதிபெறவேயோது
விள்ளும்த்தினபுரத் துள்ளோர்க்கிப்புவிமீது
இனியார்

---

இளம்பஞ்சபாண்டவா ளிறந்ததற்காகத் திரௌபதாதேவி புலம்பல்.

விருத்தம் ௫.

இந்தவகையரசனுரைத்திறந்தான்அந்த
எழிற்சஞ்சயன்கிருபன்நகரைச்சேர்ந்தார்

அந்தகிருதபன்மன்துவாரகைக்குப்போனன்
அஸ்வத்தாமன்வியாசரிடத்தமர்ந்தான்
முந்துமைவர்பாசறைக்குள்நடந்தசேதி
முழுதுங்கேட்டாங்குவந்துபார்த்துநொந்தார்
பிந்திவந்தபாஞ்சாலிகண்டுகண்ணீர்
பெருகினள்மக்களைப்பார்த்துருகினளே.

௩. தரு-இராகம்-தன்னியாசி-சாப்புதாளம்.

பல்லவி.

என்னசெய்வேனுனென்னசெய்வேன்ஐயோ - இனிநானென்னசெய்குவேன்

அநுபல்லவி.

இன்னிலந்தன்னில்யான் யார்க்கென்செய்தேன்சதி
இடைவிடாமலெனக்கே வருகுதேஅவதி
என்ன

சரணங்கள்.

௧. நீண்டசீரைவர்பேர்-நிலைக்கச்செய்வீர்களென்று
நினைத்தயெண்ணத்தைமாற்றிப்புவி மேலே-ஐயோ
மாண்டிடாஇளம்பஞ்ச-பாண்டவர்களேயென்றன்
மக்களேநீங்களும்
மடிந்தீர்மலைகள் போலே
என்ன

௨. அண்ணதிருஷ்டத்துய்மா-உத்தமோசாவுதாமா
ஆவென்னையெப்படி மறந்தீரே-இரு
கண்ணுகஉங்களை-யெண்ணியிருந்தஎன்னைக்
கைநழுகவிட்டிந்தக்
கபடனல் இறந்தீரே
என்ன

௩. வீரமிகுந்தஅண்ண-மாரேபுத்ரரேநீங்கள்
விழுந்தபோதேவந்த தேச்சு-இந்தப்
பாரேன்பதியேன்செல்வப்-பண்பேன்நண்பேன்ஒகோ
படியிலின்றென்பெருங்
குடியேமுழுகிப் போச்சு
என்ன

## வீமன் அஸ்வத்தாமனை போர்செய்ய அழைத்தல்.

விருத்தம் ௬.

அந்தப்பாஞ்சாலிதனைத்தருமன்தேற்றி
யரனருள்பெற்றஸ்வத்தாமன்இங்கே
வந்திக்கோலஞ்செய்தானெனக்கேட்டன்னேன்
மணிமுடியைத்துணித்தந்தமுடிமேல்நின்று
கொந்தலர்பூங்குழல்முடிக்கவேண்டுமென்றுள்
குலவீமன்அவ்வகைசெய்வேனென்றேகி
பந்தமுறும்வியாசராசிர்மத்தில்நின்ற
பரித்தாமன்றனைப்பார்த்துப்பகறுவானே.

௬. தரு-இராகம்-காபி-ஆதிதாளம்.

பல்லவி.

எழுந்துவாடா-பரித்தாமா-சண்டைக்
கெழுந்துவாடாபரித்தாமா.

அநுபல்லவி.

அழுந்திநித்திரைசெய்யு மாசசரைக்கொன்றுகெட்டாய்
ஆருமில்லாவூரிலஸ்வ மேதயாகஞ்செய்துவிட்டாய்
எழுந்து

சரணங்கள்.

க. களிகொண்டெதிர் நில்லாமல்-தூங்குவோர்கள்
கழுத்தறுத்த தல்லாமல்
சளையாமல்வீதியி லளவாமண்களைத்தூவி
விளையாடுஞ்சிறுபிள்ளை களையுங்கொன்றமாபாவி
எழுந்து

உ. குருவளித்தகு மாரன்-எதிர்நின்றமர்
கொடுத்தாலல்லோ வீரன்
திருடன்போற்பதுங்கி இரவிற்பாசறைக்கேகி
அரிவாளினாற்கழுத்தை அறுத்தசாமித்துரோகி
எழுந்து

௩. காற்பண்யத்தோடிச் சேஷ்ட்டை-செய்தாயேஎன்ன
கட்டிக்கொண்டாய்க் கோட்டை
ஏற்காதுன்குலத்திற்கொப் பேயழிந்துபோச்சு
பார்ப்பானுநீமகா பதிதன்பதிதன்சிச்சி
எழுந்து

## அஸ்வத்தாமன் பாண்டவாள்பேரில் பிம்மாஸ்திரப் பிரயோகஞ் செய்தல்.

விருத்தம் எ.

சதிர்பெறுபீமனிதுசொலஅஸ்வத்
தாமனுஞ்சீறினன்அங்கே
தருமனைப்பார்த்தென்னையன்வீமனுக்குச்
சகாயமாநாம்செலாவிடிலப்
பதிதனால்மாள்வானெனெனில்எனையே
பரிட்சிக்கவோர்தினம்வந்துன்
பாரசக்கிரத்தைத்தாவுனக்கியானோர்
பாணந்தந்திடுகிறேனென்றான்
எதிரினிலிருக்குதெடுத்துக்கொள்ளென்றே
னெடுக்கமாட்டாமலேசென்றான்
இசைபிர்மசரமென்றவனிடத்தினிலொன்
றிருக்குதக்கணைதனைவிடுத்தாற்
சிதைகுவான்வீமன்வாருமென்றேதச்
சென்றனரைவரைக்கண்டத்
தீயனற்பாண்டுகுலமொழிந்திடவச்
செஞ்சரந்தனைவிடுத்தனனே.



ரு. தரு-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

பல்லவி.

பிரமசாத்தைத்தொட்டானே-அஸ்வத்தாமன்
பீகரப்பட விட்டானே.

அநுபல்லவி.

நன்மைபெறுபாண்டவர் நடுநடுங்கிப்போக
ஞாலமெங்கும்பற்றிக் காலாக்கினிபோல்வேக
பிரமசரத்தை

சரணங்கள்.

க. மலைகள்பொடிப்பொடியாய் வெடிக்க-உயர்
மாதவரெல்லாங்கிலி பிடிக்க
பலஜீவகோடிகள் துடிக்க-நெஞ்சிற்
பரந்தாமனுக்கிடி இடிக்க
தலைமையானயெட்டுத்
தந்திகள்வீறிடச்
சத்தசாகரமுஞ் சுவறியெரியவே
வற்றிமேகங்கள் சரியாய்க்கரியவே
பிரமசரத்தை

உ. சந்திராதித்தர்பயந்து விலங்க-அந்தச்
சர்ப்பராஜநடுங்கி ஒதுங்க
இந்திராதிதேவருங் கலங்க-ஜெக
மீசன்வேதண்டமு மலங்க

சந்தருவர்சித்தவித்
யாதாருமலைய
கவியுமே தண்டம்பிளக்க
அவனிமேற் கண்டோரிளைக்க
பிரமசரத்தை

௩. செங்கனல்மழையாப் பொழிய-பிர்ம்ம
சிருஷ்ட்டியெல்லாங்கட் டொழிய
பங்கயனுலகைவிட்டு டொழிய-எமன்
பயந்திக்கோலமென்னென்று மொழிய
சங்கரிஈசனைத்
தழுவிக்கொண்டுமருளச்
சக்கரவாளகிரி வெடித்துப்பொடிபட
திக்கிலியாவர்களுந் துடித்துப்பதறிட
பிரமசரத்தை

## அருச்சுனனுக்கும், அஸ்வத்தாமனுக்கும், நேரிட்ட சண்டையை வியாசரும், நாரதரும் தடுத்தல்.

விருத்தம் அ.

தகைகொளஸ்வத்தாமனெய்தக்கணை இவ்வாறு
தகிக்கஅதைமாருதிபார்த்தடங்கினின்றான்
திகழுமவன்தனக்குப்பின்துணையாவந்து
சேர்ந்திடுநால்வரிற்பார்த்தன்றனைப்பார்த்தையன்
இகலுமிப்பாணந்தனைப் போலுன்னிடத்தி
லிருக்கும்பாணத்தையெய்திடென்னவெய்தான்
புகலுமிருகணைகளையும்பார்த்துவியாசர்
புகலுவார்நாரதரும்புகலுவாரே.

௬. தரு-இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்தக்கணைகளையெவ்-விதமழைப்பித்துக்கொள்வீர்-எங்களுக்குரைசெய்யும்

அநுபல்லவி.

முந்துமர்ச்சுனபரித் தாமாவீண்கலகம்
மூட்டிவிட்டுநிற்கின்றீர் முழுகிப்போகுதுலகம்
இந்தக்

சரணங்கள்.

௧. பாரெங்குந்நீருக எரிக்குதே-இந்தப்
பதினாலுலகத்துஞ்சஞ் சரிக்குதே-ஐயோ
வாரிதியேழும்வற்ற
வறுக்குதே வுறுக்குதே
வடவைக்கனலையும் டையவொழிக்குதே
இடருற்றெவர்களும் ணையஅழிக்குதே
இந்தக்

உ. ஆலகாலம்போலெங்குஞ் செல்லுதே-பல
ஆத்மவர்க்கத்தையெல்லாங் கொல்லுதே-அந்த
காலனுலகைக்கூடக்
கல்லுதே வெல்லுதே
கண்ணுதல்வேதண் டத்தையுமிடிக்குதே
விண்ணவர்சோகம் பெற்றிடநடிக்குதே
இந்தக்

ந. முனிவர்செய்தவத்தையும் நீக்குதே-மும்
மூர்த்திகட்கும்பயமுண் டாக்குதே-மேலும்
கனகமலைபுகையக்
கருக்குதே வுருக்குதே
கந்திருவர்களுல கத்தையும்வாட்டுதே
சந்திரசூரியர் களைநடமாட்டுதே
இந்தக்

## கிருஷ்ணமூர்த்தி அஸ்வத்தாமனுக்குச் சாபங்கொடுத்தல்.

விருத்தம் கூ.

முனிவரீதோதியருச்சுனுவுங்கள்
முனிவினுலுலகழிந்திடுதே
மொய்த்தனின்சரத்தையழையெனவன்ஞேன்
முடிதனிலிருக்குமாணிக்கந்
தனைத்தருவித்தாலழைக்கிறேனெனவந்
தணனதைச்சம்மதித்தீந்தென்
சரம்வீணுய்வருமாவவரைக்கொல்லுந்
துப்பினுல்அவர்கள்தையலர்கள்
உனுகருப்பத்தையழித்திடுமிரண்டி
லொன்றுசெய்யாமல்வாராதென்
ரேதினுனையனுத்தரைகருப்ப
மொழியமற்றவர்கருப்பத்தைச்
சினமொடுசிதையென்றேதினன்அதையே
சிதைப்பனென்றவள்மிசையேவ
தீனரக்ஷகன்அச்சிசுதனைக்காத்துத்
திருவுளஞ்சினந்துகூறுவனே.

எ. தரு-இராகம்-மோகனம்-சாப்புதாளம்.

பல்லவி.

பிடியடாசாபம்-அடாஅஸ்வத்தாமா
பிடியடாசாபம்.

அநுபல்லவி.

பிடியடாவிற்குரு குடியிற்பிறந்ததாலுன்
முடியைத்தப்பவிட்டேனுன் சடிலமெல்லாங்குன்ற
பிடியடா

சரணங்கள்.

க. அருமையாம் பாண்டவர்
மருவுமின் ளுர்கள்தம்
கருவழிக்க நினைத்த
குருத்துரோகி இப்போது
பிடியடா

உ. எளிதமென் றெண்ணமல்
நீளும்பிள்ளைகள் தம்மை
வாளினு லறுத்தச்
சண்டாளப் பாதகனே
பிடியடா

ந. இவ்வாறு செய்தநீ
மூவ்வாயிரம் வருஷம்
கவ்வும்பெரும் வ்யாதியாற்
கூவியலைய வேண்டும்
பிடியடா

---

திரௌபதாதேவி அஸ்வத்தாமனுடைய வல்லமையைக் குறித்துக் கிருஷ்ணமூர்த்தியைக் கேட்குதல்.

விருத்தம் ய.

பகவனிட்டசாபத்தைவியாசர்கேட்டிப்
பாவிக்குத்தகுமிதென்றார்அஸ்வத்தாமன்
இகலுடனிவ்விருவரையுங்கடிதினிற்பார்த்
தீனமுறுமனிதர்முறையாகநீங்கள்
ஜகமதனிலிருக்கவென்றுசபித்துப்போனன்
சாமியொடுபலர்வந்தப்பாஞ்சாலிக்குத்
திகழுமந்தமணிகொடுத்தார்அவள்பார்த்துள்ளந்
தேறினள்களிப்புடனேகூறினளே.

அ. தரு-இராகம்-கலியாணி-சாப்புதாளம்.

பல்லவி.

அஸ்வத்தாமனுக்கிச்-சக்திவந்ததைச்சொல்வா-யண்ணசெங்கண்ண

அநுபல்லவி.

விஸ்வேஸ்வராசகல விபவவிக்கிரமமாயா
விண்ணையுமண்ணையு முண்ணுஞ்செங்கனிவாயா
அஸ்வத்

சரணங்கள்.

க. திறமாய்ப்பதினெட்டுநாள் செருக்களத்தினில்வல்ல
சேனபதியாய்நின்று ஜெகத்தரசரைவெல்ல

அரியகீர்த்தியடைய மேலுந்துதிகள்புல்ல
அக்னியிற்பிறந்தஎன் னண்ணன்தனையுங்கொல்ல
அஸ்வத்

உ. அகல்பாடியிலிருந்த அரசர்கிலிபிடிக்க
அடித்ததஞ்செய்தானிந்த அவனியெல்லாந்துடிக்க
சகசந்தானதுதேவர் தாமும்புகழ்படிக்கத்
தழைந்தவென்மக்களையும் க்ஷணப்போதினில்மடிக்க
அஸ்வத்

ங.அச்சுதாஅமலாஅற் புதஆயர்குலசோமா
ஆதிகேசவபுவ ஞதாரபாந்தாமா
பச்சைமுகில்வண்ணாஇன் பங்கொள்சார்வபூமா
பாயிரமறைநான்கும் பகருமாயிரநாமா
அஸ்வத்

---

## கிருஷ்ணபகவான் துரோபதைக்கு அஸ்வத்தாமனது வல்லமையும், சிவபெருமானது மகிமையுங் கூறல்.

விருத்தம் ௰க.

பைங்தொடியீதுரைக்கவரிஅஸ்வத்தாமன்
பரமனருளாலிவைசெய்தானென்றூர்அங்கே
தொந்தமுடனிருந்தவைவருடன்பாஞ்சாலித்
துளபமாற்பதம்பணிந்தெங்களுக்குஅந்த
சுந்தரஞ்சேர்சிவபெருமான்விளையாட்டேதோ
சொல்லுமென்றூர்அதற்கையன்அன்பினுலே
கொந்தலர்பூங்குழலினெடுமைவர்கேட்கக்
கூறினூர்அவர்மகிழ்வுமீறினூரே.

---

சவுத்திகபர்வம் - முற்றிற்று.

———(*)———

சவுத்திகபர்வத்தில்-விருத்தம்-௰க. தரு-அ. திபதை-க.
ஆ உ௰.

---

பாயிசம்-க க்கும், பர்வம்-௰க க்கும், கூடிய-வெண்பா-ங, கலித்துறை-ங
கொச்சகம்-௪. சட்டளைக்கலிப்பா க. விருத்தம்-ருாய௰ங.
தருக்கள்-ஙாசுகூ. திபதைகள்-ருகூ.
ஆ கூாரு௰உ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

பன்னிரண்டாவது

# ஸ்ரீ பர்வம்.

---

## கண்ணன் - துதி.

சந்தவிருத்தம் க.

ஓதியபஞ்சவர்மாமுடிகொண்டிட-தூதுநடந்திடுமொண்சரணம்
ஓகைமிகுந்திடுமாபலியின்சிர-மீதிலமர்ந்திடுவண்சரணம்
போதநிறைந்திடுமோர்விதுரன்குடி-லேகியமர்ந்திடுபொன்சரணம்
பூசிதமங்களகோவியரன்புறு-கோகனகந்திகழும்சரணம்
பூதலமெண்டிசைவாரிதியந்தர-மோதியளந்திடுமின்சரணம்
பூமகளம்புவிமாதுகருங்குழ-னீளைவிருப்பியமென்சரணம்
தாதுகலங்கியபாலன்வருந்திய-வேளையுவந்திடுதிண்சரணம்
சாமிமுகுந்தபிரானிருசெஞ்சர-ணேதகடுங்கலிவிண்டிடுமே.

---

## திருதராட்டிரன் காந்தாரிமுதலானோர் களம்பார்க்க வருதல்.

விருத்தம் உ.

இந்தவகையாக்கேட்டானந்தமுற்று
இருந்தனரைவருடன்பாஞ்சாலிஅங்கே
அந்தகன்காந்தாரிநொந்தார்வியாசன்றோ
ரகந்தேற்றிநீங்கள்களத்தினிலிறந்த
மைந்தர்களைமற்றோரைப்பார்த்தாலன்றி
மனந்தெளியாதெனஅன்றேன்அவ்வூரிலுள்ளோர்
சிந்தையதுபதைபதைக்கஉடனேசெல்லத்
திறப்பட்டார்களம்பார்க்கப்புறப்பட்டாரே.

க. தரு-இராகம்-மத்தியமாவதி-சாப்புதாளம்.

பல்லவி.

களம்பார்க்க வந்தாரே-வந்துநின்று
கண்கலங்கிநொந்தாரே.

அநுபல்லவி.

உளமுங்குருடாந்திருத ராட்டிரனுடன்காந்தாரி
ஓவென்றலறிஅந்தத் தேவதேவனைத்தூறி

களம்

சரணங்கள்.

க. பாவிகாந்தாரிபாலர்-நூறுபேர்களின்
பத்தினிமார்களுந் தத்தளித்துத்துவண்டு
வாவியல்லிக்கொடிபோல்-வடிவங்கசங்கித்தலை
மயிரைவிரித்துக்கண்ணீர் வடியஅழுதுக்கொண்டு

களம்

உ. மேலுமத்தினபுரத்-துள்ளமாதர்களெல்லாம்
மிருந்துகும்புகும்பாய்க் கலங்கிக்கலங்கிச்சென்று
பாலர்கள்கணவர்கள்-பட்டார்நாங்களிந்தப்
படியிலினியிருக்கோ மடியோடிறப்போமென்று

களம்

ங. பாண்டவர்பாசறை-தனிலுள்ளமாதரும்
பாஞ்சாலியுங்குந்தியும் பதறித்துயரத்தொடு
மாண்டவரைநினைத்து-மறுகிமறுகிக்கையால்
வயற்றிலடித்துக்கொண்டு பயித்தியமீறிப்படு

களம்

---

## வீமனைக் காந்தாரிபார்த்துப் புலம்பிச் சொல்லுதல்.

விருத்தம் ங.

வந்தவரிற்றிருதராட்டிரன்தன்னைத்தர்மன்
வணங்கினன்பின்பெழில்வீமனைப்போற்செய்த
தந்திரபாவையையெதிரேவைத்தார்பாவி
தழுவினனதுபொடியாய்ப்போச்சுவீமன்
நிந்தித்தான்மாயவனும்பழிசொன்னனங்
நிருபனஞ்சியிருந்துவிட்டான்பீமன்மற்றோர்
பந்தமுடன்பணிந்துயர்காந்தாரிதாளைப்
பற்றினாரவளழுதரற்றினளே.

௨. தரு-இராகம்-காம்போதி-சாப்புதாளம்

பல்லவி.

அப்பனேவீமாவுன்மனது-சந்தோஷ
மாச்சாஇப்போ தாவது.

அநுபல்லவி.

ஒப்பிநூறுபேரைக் கொல்லமுன்னடுத்தாயே
கப்பலேக்கவிழ்த்தாற்போற் கவிழ்த்தென்னைக்கெடுத்தாயே
அப்பனே

சரணங்கள்.

௧. தடமகுடத்துரியோ தனன்றனைநீவென்று
தரைமேற்றள்ளினயது சகசந்தான்பின்னின்று
இடாவுதைக்கலாமா இசைந்தஅண்ணனல்லவா
என்வயிற்றெரிச்சலை இன்னமுஞ்சொல்லவா
அப்பனே

௨. ஏகமனதாயுங்க ளிடத்திலேநண்ணி
இதஞ்சொன்னேனையுமிவ ரோடுசமமாயெண்ணி
வேகிறவீட்டிற்பிடுங்கு வதுலாபமென்றாற்போல்
விகர்னன்தனையுங்கொன்று விட்டாயேஇப்புவிமேல்
அப்பனே

௩. குடியிற்பிறந்ததுச் சர்தனனிரத்தத்தைக்
குடித்தாயேயென்சொல்வேன் கொடியநின்சித்தத்தை
அடடாஇந்தக்காரிய மாயிரங்கோடிகாலம்
ஆனாலுமறக்குமா அறிந்துசெய்தாஇக்கோலம்
அப்பனே

---

## சகுனிக்காகவருத்தப்பட்ட காந்தாரிமனதைப் பாண்டவர்தேற்றுதல்.

விருத்தம் ௪.

பத்தினிகாந்தாரிசொல்லபீமனம்மா
பழியெனக்கேதுரைத்தசபதப்படிக்கு
உற்றதொண்ணூற்றென்பதுபேர்களையுங்கொன்றே
னொருவிகர்னன்அரசாளக்கொல்லாமல்நேரே
எத்தனைசொல்லியுங்கேளாதெதிர்த்திறந்தா
னெல்லார்க்குந்தெரியுமென்றான்சாதேவன்மேல்
சித்தம்நொந்துசகுனியைக்கொன்றாயேயென்று
சீறினாள்இவர்களுங்கூறினரே.

௩. தரு-இராகம்-சங்கராபரணம்-சாப்புதாளம்.

பல்லவி.

அவனைக்கொன்றதற்காக-உன்மனதுக்கித்தனை-ஆயாசமேனம்மணி

அநுபல்லவி.

குவலயத்திலவனாற் குடியேமுழுகிப்போச்சே
குருகுலத்தினைக்கொள்ளை கொளவந்தசமனாச்சே
அவனைக்

சரணங்கள்.

௧. அல்லிதாமரைகள்போ-லிருந்த்இக்குடியிரண்
டாகிப்பிரிந்த தாராலே-சூ
தாடினதாராலேநாங்கள்-வனத்தினிற்போய்
அலைந்துகெட்ட தாராலே
கொல்லைக்குப்பல்லிஇந்தக் குடிக்குச்சகுனியென்று
கூறுவாரதுமெய்யாக் கொள்ளச்செய்தானேநின்று
அவனைக்

௨. வைக்கஇடமில்லாமல்-வைக்கப்போரில்வைத்தாற்போல்
வைத்தாயேஅவன்மீதில் நேசம்-உன்றன்
மக்களாரால்மாண்டார்-மகாசியானஉன்
மனதுக்கேன்வந்ததிக்கி லேசம்
சர்க்கரைப்பேச்சினால் முழுத்தினானுன்குடியைத்
தந்திரச்சூதாடித் தாழ்த்தினானென்கொடியை
அவனைக்

௩. படிக்குட்துரியோதனன்-தன்னைக்கெடுக்கத்தந்த்ரம்
படித்துவீண்கலகத்தை மூட்டிக்-கொடும்
பாவிசெய்தசதியை-இவ்வளவாமென்றேற்
படுத்தலாமோதொகை கூட்டிக்
குடிக்குக்கொள்ளியாக வாய்த்தான்துர்விவேகி
குலைநடுநடுங்கஇக் கோலஞ்செய்தான்துரோகி
அவனைக்

---

## துரியோதனனுக்காக பானுமதி புலம்பல்.

விருத்தம் ௫.

இந்தவகையைவருரைத்தடிதனில்வீழ்ந்
திறைஞ்சிபுத்திரர்நாங்களிருக்கும்போது
சிந்தைவருந்துவதென்னநீக்கென்றன்பாய்ச்
செப்பினார்பின்புதிரௌபதிபணிந்தாள்

அந்தஅருந்ததிதன்னைவாழ்த்திவந்த
அனைவரொடுங்களம்பார்க்கச்சென்றாங்கே
பந்தமுடனிறந்தசுயோதனனைப்பார்த்துப்
பதறினுள்பானுமதிகதறினளே.

க. திபதை-இராகம்-எதுகுலகாம்போதி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. என்னசெய்வேனென்னசெய்வேன் மன்னர்மன்னனே-என்றன்
எழுத்திப்படியாச்சுதா மன்னர்மன்னனே
சொன்னதெல்லாந்தடுத்தாயே மன்னர்மன்னனே-பெண்
தோஷத்துக்குட்பட்டாயே மன்னர்மன்னனே

உ. இருக்குமைவர்கள்பகை மன்னர்மன்னனே-வேண்டா
மென்றுநானுஞ்சொன்னேனே மன்னர்மன்னனே
நெருப்பைமுடிந்துக்கொண்டு மன்னர்மன்னனே-குடியை
நிர்மூலஞ்செய்தாயே மன்னர்மன்னனே

௩.ஆறுபேர்தாலியு மன்னர்மன்னனே-உன்னால்
நொடிப்போதினிலறுப்பார் மன்னர்மன்னனே
வேறுகநினையாதே மன்னர்மன்னனே-என்று
வேந்தரெல்லாஞ்சொன்னாரே மன்னர்மன்னனே

ச.தந்தைவிதுராராஜன் மன்னர்மன்னனே-நல்ல
தனுகுருமுதலானோர்கள் மன்னர்மன்னனே
புந்திதெளியநித மன்னர்மன்னனே-சொன்ன
புத்தியைமறுத்தாயே மன்னர்மன்னனே

ரு.பெரியோர்கள்தாமேவந்து மன்னர்மன்னனே-நலம்
பெறவேவேண்டிவேண்டி மன்னர்மன்னனே
பரிவாய்ச்சொன்னதைக்கேட்டால் மன்னர்மன்னனே-இந்த
பாடுவரமாட்டாதே மன்னர்மன்னனே

சா.நல்லநெறியில்நின்று மன்னர்மன்னனே-உன்றன்
நாட்டைநீயாளாமல் மன்னர்மன்னனே
கல்லைக்கடித்தையையோ மன்னர்மன்னனே-பல்லைக்
கழலச்செய்துக்கொண்டாயே மன்னர்மன்னனே

எ. கொடியெங்கேமுடியெங்கே மன்னர்மன்னனே-உன்செங்
கோலெங்கேவேலெங்கே மன்னர்மன்னனே
படியெங்கேகுடியெங்கே மன்னர்மன்னனே-ஏறும்
பரியெங்கேகரியெங்கே மன்னர்மன்னனே

| | |
|---|---|
| ௯. சகுனிமாமனெங்கே | மன்னர்மன்னனே-துர்ப்போ |
| தனைசெய்தகன்னனெங்கே | மன்னர்மன்னனே |
| மிகவுமவரைநம்பி | மன்னர்மன்னனே-இந்த |
| விதமாகமுடிந்தாயே | மன்னர்மன்னனே |
| ௰. சித்திரக்குடைபோச்சுதே | மன்னர்மன்னனே-கழுகின் |
| சிறைநிழலாச்சுதே | மன்னர்மன்னனே |
| கொற்றவர்துணைபோச்சுதே | மன்னர்மன்னனே-நாயின் |
| கூட்டங்கள்துணையாச்சுதே | மன்னர்மன்னனே |
| ௰. மேனிகசங்கிப்போச்சே | மன்னர்மன்னனே-முகம் |
| வெய்யலிற்கரியுதே | மன்னர்மன்னனே |
| வானுங்கலங்கிடுமே | மன்னர்மன்னனே-உன்றன் |
| வாகுவலியைக்கண்டால் | மன்னர்மன்னனே |
| ௰௧. பதினெட்டுநாளைக்குள்ளே | மன்னர்மன்னனே-உன்சம் |
| பத்திப்படியாச்சுதா | மன்னர்மன்னனே |
| விதிவசமோஇது | மன்னர்மன்னனே-அந்த |
| மெல்லியிட்டசாபமோ | மன்னர்மன்னனே |
| ௰௨. கும்பியெரியுதையோ | மன்னர்மன்னனே-என்மேற் |
| கொடுமையென்னசொல்லுவேன் | மன்னர்மன்னனே |
| தென்பொடுவாழ்ந்ததெல்லா | மன்னர்மன்னனே-ஊர் |
| சிரிக்கஇடமாச்சுதே | மன்னர்மன்னனே |
| ௰௩. பிள்ளைபோய்நீயும்போய் | மன்னர்மன்னனே-உற்றூர் |
| பெற்றூருறவினர்போய் | மன்னர்மன்னனே |
| கொள்ளிவாய்ப்பேய்சூழ | மன்னர்மன்னனே-மேனி |
| குலைந்ததைக்காணநின்றேன் | மன்னர்மன்னனே |
| ௰௪. பாவியைத்தீண்டொண்ணுதென்று | மன்னர்மன்னனே-எமனும் |
| பயந்திருக்கின்றனே | மன்னர்மன்னனே |
| ஆவிஇனிவைத்திரேன் | மன்னர்மன்னனே-உன்முன் |
| ஞகனானும்வருவேன் | மன்னர்மன்னனே |

---

## காந்தாரி கிருஷ்ணமூர்த்தியைக்கண்டு சாபமிடல்.

விருத்தம் ௬.

அரசனன்மனைவிஇவ்வகையழுதாள்
அன்னைதந்தையர்களும்நொந்தார்
அபிமன்மற்றோரைப்பார்த்தவர்தேவி
யருமிகதுடிதுடித்தழுதார்

விரைவினிற்கன்னன்மிசைஅவன்றேவி
விழுந்தழக்குந்தியுமழுதாள்
வீடுமென்றன்னைநோக்கியெல்லோரு
மிகமனங்கலங்கினார்மற்றத்
தெரிவையரெல்லாந்தங்கள்காதலரைச்
சேர்ந்துவந்திரங்கினார்தருமன்
திகைத்தனன்வியாசர்விதுரர்வந்தங்கே
தேற்றினார்காந்தாரிமாலைப்
பொருமியேபார்த்துபாவியுன்னாலென்
புத்திரர்மாண்டனர்உன்றன்
பூண்டெலாமிந்தவிதத்தினில்மாண்டு
போகவென்றேசபித்தனளே.

௪. தரு-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

உன்குலத்தோர்யாரு-மமர்செய்தேவுன்கண்முன் - உருளப்போகின்றார்பாரு

அநுபல்லவி.

வன்மனச்சண்டாள கிருஷ்ணாயென்னலாபம்
வந்துதுகாந்தாரி வாயினால்விட்டேன்சாபம்
உன்குலத்

சரணங்கள்.

௧. பாண்டவர்போர்செய்வாரா அவர்கள்செய்யமாட்டார்
பாவிநீசெய்யச்சொன்னப் படிக்கவர்களுங்கேட்டார்
ஈண்டவரையுந்துரோகி யென்னமீறவிடுத்தாய்
என்குலத்தைஅழிக்க இந்தவேஷமெடுத்தாய்
உன்குலத்

௨. ஒருத்திஇரண்டுபேரா நூறுபேர்மனஸ்தாபம்
உற்றுமங்கல்யம்வாங்கச் செய்தாயேஅந்தபாபம்
வருத்தாதுனைவிடுமா வையமீதொருக்காலே
வருக்கமாச்சண்டைசெய்து மாண்டஎன்மக்கள்போலே
உன்குலத்

௩. பட்டபேரைநினைத்துப் பார்க்கப்பார்க்கவென்கும்பி
பற்றுதுன்செருக்காலிப் படிசெய்துவிட்டாய்தம்பி
கட்டைகோணலடுப்பில் நிமிர்ந்துபோய்விடுகுது
கட்டுரையாச்சொல்கிறேன் விட்டுப்போகாதிது
உன்குலத்

## தருமன் நான் அரசுபுரியேனெனல்.

விருத்தம் எ.

உத்தமிகாந்தாரிசொன்னாள்மாயன்தக்க
உரைசொன்னான்பின்பெவரும்போய்த்தருக்கள்
மொய்த்தவனஞ்சேர்ந்திறந்தோர்கடன்கழித்து
முறையாகவங்கிருக்கும்போதுவியாசர்
வித்தகநாரதர்வந்துதருமனுக்கு
விதிபலவுமோதிமுடிசூட்டிக்கொண்டே
இத்தரையையாளெனவேதருமன்வேண்டாம்
என்னுவான்மனவெறுப்பைப்பன்னுவானே.

ரு. தரு-இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

அரசுநானாள லாமா-செய்தபாவம்
அந்நீதமாப்போமா.

அநுபல்லவி.

முரசகேதனனாற்பார் முற்றுமுழுகிப்போச்சே
மூடனென்றேயெவரும் நாடரும்பாவியாச்சே
அரசு

சரணங்கள்.

க. சூரியன்போலிருந்த-பாலரைமடிவித்துத்
துக்கப்படும்பாவிக ளாரே-ஐயோ
போரிலும்கொள்ளியிட்டு-வாயிலடித்துக்கொள்ளும்
புத்திகெட்டவனுச்சே
வெற்றிகொள்முனி வோரே
அரசு

உ. தாங்கொள்திருஷ்டத்தூய்மனு-மைந்துபுத்ராவது
சாகாதிருந்தாற் றானே-என்றன்
அருமைபாராட்டுவா-ரவர்களையும்கொல்ல
அநியாயமாயவற்குஞ்
சனியாகவிருந் தேனே
அரசு

௩. சதைக்குச்சதையாடுமே-அப்படியுமாடாமற்
றனஞ்செயனேநீ ஏகி-கொடிக்குட்
பதைக்கக்கன்னனைக்கொன்று-வாவென்றுவிட்டுக்கூத்து
பார்த்துக்கொண்டிருந்த
தூர்த்தன்மகா துரோகி
அரசு

## வீஷ்ம ருத்தரம்பெற்றுத் தருமன் அஸ்தினபுரத்திற்குப் போகுதல்.

விருத்தம் அ.

தருமபுத்திரன் இவையுரைக்கமுன்னேவந்து
தம்பியர்கள்பலமுனிவர் தடுத்துரைத்தார்
ஒருவர்மொழிகேளாமற்காடேசெல்வே
னுலகைஇனியான்வேண்டேனென்னஅந்த
கருவறிந்தபீஷ்மரிதுமுறையேயல்ல
கனகமுடிதரித்துலகாளென்னவொப்பி
உரிமையொடுபலர்சூழமணிநெடுந்தேர்
ஊர்ந்திட்டான்அன்னகாஞ்சேர்ந்திட்டானே.

---

## தருமராஜனுக்குப் பட்டாபிஷேக மண்டபம் அலங்கரித்தல்.

விருத்தம் கூ.

வதிட்டமுனிமுதல்முனிவர்சூழ்ந்துகொண்டு
மகுடாபிஷேகங்கொண்டுலகாளென்ன
உதிட்டிரனுமதற்கிசைந்தான்உம்பர்கூற
உசிதநவரத்நபொற்பிரபைகள்வீச
விதவிதமாச்சித்திரத்தாற்சிற்பர்கூடி
வேடிக்கையாஇந்த்ரலோகம்போலச்
சதிர்பெருகுமபிஷேகமண்டபத்தைச்
சமைத்திட்டார்கொலுப்பீடம்அமைத்திட்டாரே.

கூ. தரு-இராகம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

மண்டபஞ்சிங்காரித்தாரே-மகுடாபிஷேக
மண்டபஞ்சிங்காரித்தாரே.

அநுபல்லவி.

தண்டாளங்கள்சந்திர மண்டலம்போல்விசேட
சஹஸ்த்ரகிரணன்போற் செகத்திற்சொலித்துநாட
தண்டிகைஅழகினு லெண்டிசையுங்கொண்டாட
தருமராஜனுக்கன்று திருமகுடஞ்சூட
மண்டபஞ்

சரணங்கள்.

௧. ஒளிர்தமனியத்திலும்-வளரபரஞ்சியிலும்
ஒத்தத்தூண்கள்பிர சித்தமாகவேநாட்டி
வளமிகுபத்மமுஞ்-சித்ரவிசித்திரமும்
மாணிக்கத்துடன் கூட்டி
தளமிகுவச்சிரத்தாற் சார்ந்தபோதிகைநீல
சம்பிரமமாகவே சமைத்தபீடமுங்கோல
வளர்பத்மராகத்தாற் பதித்திடுமனுகூல
மாநகரிற்சிறந்த வானவருலகம்போல

மண்டபஞ்

௨. வாசமருவுமலர்-மாலைகள்வகைவகை
மாட்டிஅலங்காரமாய் மேலெங்குமேதொடுத்து
பேசும்வெண்சாமரை-வீசவரிசையாகப்
பிரதமைகள்கையிற் கொடுத்து
மாசகலப்பளிங்கு தேசின்மாடங்கண்மின்ன
மாதகதகவென்ன வர்ன்னச்சுவர்களுன்ன
ஈசனிருக்குங்கை லாசமிதுவேஎன்ன
எவருமகிழஇனி தாகஅமைத்தச்சொன்ன

மண்டபஞ்

௩. இப்பிரபஞ்சமதிற்-சுப்ரதீபம்போல
இருக்குமிந்திரலோக மிதற்கிணையோவென்றேச
நற்புகழ்கொண்டளகை-யுற்றுவாழுங்குபேரன்
நயனங்களித்துப் பேச
செப்பருங்கண்ணாடிகள் சந்திரன்போல்நிகழ
சிறப்பினிலிதுநாக லோகமெனப்புகழ
விப்பிராதிநான்கு வருணங்களும்மகிழ
விதரணமயனுமே விந்தையாகத்திகழ

மண்டபஞ்




# தருமர் பட்டாபிஷேகம்.

விருத்தம் ‍ஶ்.

மருவுமணிமண்டபத்தில்விஜயங்கொண்டு-மண்டலத்தோர்விண்டலத்தோர்சேவைகொண்டு
அருளுதவும்பதமலரையகத்துட்கொண்டு-அன்புள்ளசோதரர்செய்பணியுங்கொண்டு
தருமமேகைக்கொண்டுசெங்கோற்கொண்டு-தாவுசிங்காசனங்கொண்டதருமராஜன்
கிருபைகொண்டுலட்சுமிதிரௌபதியுங்கொண்டு-கெடிகொண்டான்நவரத்நமுடிகொண்டானே.

எ. தரு-இராகம்-பிலகரி-ஆதிதாளம்.

பல்லவி.

பட்டாபிஷேகங்கொண்டானே-தர்மபூபாலன்-பட்டாபிஷேகங்கொண்டானே

அநுபல்லவி.

பத்தியாகச்சூரரும்-பத்தியாக நாரும்-பத்தியாக்கொற்றவரும் - பத்தியாய்நற்றவரும்
பன்னிருசூரியரும்-பன்னிருவீரியரும்-பன்னகச் சேடரும் - பன்னரு நாடரும்
படைகர்த்தமார்களும்-படையுற்றபேர்களும்-பரிவாகவுற்றிருந்து - அரியாசனத்திருந்து
பட்டாபிஷேகம்

சரணங்கள்.

க. சாத்திரமுனிவரர் தாமேவ-பிர்ம்ம-கோத்திரர்சுருதிகள் சொலிக்கூவ
சதுர்பெறுசுரர்தரு மலர்தூவ-பல-பொதுமகணிர்த்தன மொடுதாவ
சப்தமாநதி தீர்த்தமும்-சுத்தசமுத்ர தீர்த்தமுஞ்-சம்பிரமமாகச்சில ரெடுத்துவர
சித்திரஆலாத்திகொண்டு-உத்தம மங்கல்யப்பெண்கள்-ஜெயமங்களங்கள்சொல்லி அடுத்துவர
தாமதத்தில் நடத்தாமல்-சேமமுற்ற சுரக்யானம்-சங்கீதசாஸ்திரிகள் தொடுத்துவர
தேமகுத்வ பூசுரர்கள்-தாமிகுத்த ஆசீர்வாதஞ்-செய்துமகிழ்ச்சியுடன் விடுத்துவர
சகித வடுகர் பலர்-குடக ரவுணர் பலர்-தழுவு துளுவர் பலர்-அருணர் மகதர் பலர்
சவ்வீரங் குந்தளத்து ளோர் பலர் வெவ்வீரங் கொங்கணத்து ளோர் பலர்
சந்தித்தன்புற்-றிறைஞ்சமணிமுடி யும்பட்டங்கிற்-சொரிந்தமணிபொடி
தக்கபதத்தை-யழுத்தியுருத்தவும் மத்தியிலுற்றப்ர-சித்தர்பொருத்தவும்
தப்பிலாத சுப-யோகசுப சரண-வொப்பயாவர்களு-மொய்க்கவேவிஜய
ஜயவெனநயமுட - னேபுகழ்ந்துசொல - பயமுறுமருவல-ரேமகிழ்ந்துசெல
தாராபராக்குபுஜ-வீராபராக்குஅதி - சூராபராக்குவெகு-தீராபராக்குவென
தாசருக்கும்-நேசருக்கும்-தேசருக்கும்-ஈசருக்கும்
சல்லாபமகிழோங்க-உல்லாசமொடுதேங்க-நல்லாதரவுதாங்க-எல்லார்கலியும்நீங்க

பட்டாபிஷேகம்

உ. தும்புருநாரதன்மறை வியாசன்-வரை-கும்பமுனிவிநெடு தூர்வாசன்
சூதபுராணிக னந்தீசன்-சுகன்-கோதமன்காசிப்ன் பரத்வாசன்
துய்ய பூந்துகிலிட்ட-செய்யமாந்தழைசுற்று-சொர்னபூரணக்கும்ப மிவரீய
நெய்யுடு நற்பொரியும்-பெய்ய நுகர்ந்தக்னி-நிமிர்ந்துநிமிர்ந்துலவி மிகப்பாய
தொடர்ந்த முகூர்த்தம்வந்-தடர்ந்திடச் சிற்சில-சுகிர்தபுரோகிதர்கள் மிகநேய
திடந்தரு முனிவரர்-சுடந்திடு நவக்கிரக-ஜெபங்கணடத்திடவு மதிதாய்
சோபித மாமத-பேதமிலாதவர் மாபிர தாபரை-தூறு சொலாதவர்
சுற்றிலும்நின்று-பளாவெனும்படி வெற்றிமிகுந்தவ-ராமெனும்படி

சொல்லியும்பட்-டிட்டவட்டவெண்குடை - பல்லியங்கட் - சட்டதிட்டபண்புடை
சொரிந்திடும்பொற்-ப்ரகாசம்வீசிட பரிந்திடும்சற்-குணத்தரேசிட
சுந்தர விந்தை-மிகுந்தகனத்தியர் பந்தென வந்த-சுகந்த தனத்தியர்
சொர்க்கமலர்க்கை-களிற்கொடுமிக்கவும்-பொற்கிளியொப்பவர் - முற்றுமிறைக்கவும்
தொண்டாடுவார்சிலர்கள்-செண்டாடுவார்சிலர்கள்-கண்டாடுவார்சிலர்கள்-கொண்டாடுவார்சிலர்கள்
சுற்றவரும்-பெற்றவரும்-கற்றவரும்-மற்றவரும்
௳ சோபிதமாகவேலோக-பூபர்தொழுநாகரீக-மாபதிவிர்தவிவேக-திரௌபதிசமேதனுக

பட்டாபிஷேகம்

௯. தந்தைதாஇருவரும் அருகிருக்க-அதி-சமர்த்துளவீமன்வலப் புறத்திருக்க
பந்த்ரபுஜகிரீடியு மெதிரிருக்க-அங்கு-மற்றைஇருவர்களும் பின்னிருக்க
தங்கக் கலசப்புனல்-அங்கைகளிலெடுத்து-தாய்தந்தையர்களிரு வரும்விடுக்க
கங்கண முதலிய-துங்கநவ மணிநிரை-கஜிதரத்நாபரணங் களைத்தொடுக்க
சந்த கதம்பங்களுங்-கந்தகஸ்தூரிகளுஞ்-சவ்வாதுவாசமு மிகமுடுக்க
விந்தை யாகத்தொடுத்த-அந்தமுள்ளபாரிஜாத-விகசிதமாலைகள் தானடுக்க
சசிமுகச்சுந்தரமும் - சபையினற்சுந்தரமும்-விஜயன்றன்சுந்தரமும்-விருதுகள்சுந்தரமும்
தரணிபர்சுந்தரமும் - சதிர்தரு சுந்தரமும்-வரிசை துருபதியின்-மலர்முகச்சுந்தரமும்
ஜெகங்கண்டத்தியந்த-வாச்சர்யங்கொண்டிட யுகமெங்கும்சொற்-புதுமைகள்கண்டிட
தங்கவிசித்திர-மாமுத்துக்குடை இங்கிதமாக-கவிழ்ந்திடஅதனிடை
தப்பிலாதஜ் - பெரும்பூதூர்பொன்னு - சுப்பராயபூ - பாலன்றன்மரபினர்
பொற்பிரகாசமாய்-வீசியமணிமுடி - துப்பமதாகவே - மாமலர்க்கரங்களில்
தாங்கியளித்திட-வோங்கியதவுமியர்-வாங்கிகளித்திட-பாங்குறவ்யாசர்தர
ஜாலவஸ்து-காலவஸ்து-நீலவஸ்து-மூலவஸ்து
சாமது கரமொய்க்க-மருமலர் துளவொக்க-பரிவர்ன்ன மதுமிக்க-பரவாசுதேவன்வைக்க

பட்டாபிஷேகம்

---



# திருமுடி தரித்தல்.

---

# தருமர் அரசியல்

---

விருத்தம் ൰க.

தினகரஜோலிதரத்நகிரீடாபி-ஷேகமங்களமஹோச்சவத்தைச்
சிறப்பொடுகொண்டதருமன்றன்தம்பி-ஜெயகதாயுதபலபீமன்
தனக்கிளவரசாயிருந்திடப்பட்டந்-தரித்துச்சேனாபதியாகத்
தனஞ்சயன்றன்னையமைத்துமற்றங்கே-தனபதியாகவேநகுலன்
றனையுமாமதியிற்சிறந்தசாதேவன்-றமக்குமந்திரியெனவிருத்தி
சதுமுகன்றன்னையளித்தகோபாலன்-சாத்தகிஇவர்களைநீங்கா
மனத்தினனுகப்பேரிகைவாச்யம்-மகபதியுலகுறமுழக்கி
மருவலர்துதிக்கக்காட்சியாயுலகர-சாட்சிசெய்திருந்தானே.

அ. தரு-இராகம்-மோகனம்-ஆதிதாளம்.

பல்லவி.

அரசாட்சிசெய்தானேதருமன்-செகமுழுதும்
அரசாட்சிசெய்தானேதருமன்.

அநுபல்லவி.

வரநாரதமுனி
வாசவன்முதலிய
மருவும்பாம்புமெலியோர்
மற்புலியும்பசுவோர்
வரும்வசிட்டர்புகழ
வானவர்கண்மகிழ
வளையிற்குடிபொருந்த
துறையிற்றண்ணீருந்த

அரசாட்சி

சரணங்கள்.

க. மாதமும்மாரி
வற்றாக்கடல்போல்
சேதம்வராமல்
சிரமந்தப்பாமல்
தீர்க்கக்ஷேமமென்றி
பார்க்குள்ராமர்தர்ம
பொழிய-ஏரிகுளங்கள்
வழிய
ஒழிய-சாதுர்வர்ண
செழிய
யாவரும்பன்ன
ராச்யமொன்றென்ன

அரசாட்சி

உ. தேசமுழுதுஞ்
சிறந்திடமுத்துக்
நேசசர்ச்சன்
நிலத்தில்நற்காலங்
நீதியாகவேமன்
பேதமில்லாதுதன்
செழிக்க-முப்போகமுஞ்
கொழிக்க
ரொழுக்க-மாகவிருந்து
கழிக்க
னுயிர்களனைத்தும்
னுயிரெனநினைத்தும்

அரசாட்சி

கூ. தானதருமஞ் சிறக்க-மலடிகட்குங்
தனயர்அனேகம் பிறக்க
ஆனிரைகலப்பாற் கறக்க-நித்தியசுப
மாகவேமிடி பறக்க
அஷ்டலட்சுமிகளு மகமலர்ந்திருக்கவே
துஷ்டநிக்கிரகசிஷ்ட பரிபாலிக்கவே
அரசாட்சி

---

## வாழி விருத்தம் ௰உ.

தண்மருவுசந்த்ரகுலமார்த்தாண்டசக்ரேச
தருமபூபதியும்வாழி
தம்பியர்கள்வாழியாகத்துதித்தோங்குபொற்
றையல்திரௌபதியும்வாழி
திண்மருவுமேழ்பரித்தேவனுக்கினியளாய்த்
திகழருங்குந்திவாழி
செகமாயையோர்ந்தொறுத்தாண்டவனருட்பெற்று
சித்தவுச்சாகமெய்தும்
பண்மருவுநாரதவியாதமாமுநிவாழி
பகர்பரித்தாமவிதுரன்
பண்பாகவாழியுமபதிவாழிகதிர்வாழி
பார்த்திபர்கடாமும்வாழி
கண்மருவுமமர்நான்மறையர்ளர்வாழிக்
கவீச்சுரர்கள்வாழியிதனைக்
காதலாய்க்கேட்போர்படிப்போர்கள்குறைவிலாக்
கமலையருளால்வாழியே.

---

ஸ்ரீபர்வம் - முற்றிற்று.

---(*)---

ஸ்ரீபர்வத்தில்-விருத்தம்-௰உ. தரு-அ. திபதை-க. ஆ உ௰க.

---

பாயிசம்-க க்கும், பர்வம்-௰உ க்கும், கூடிய வெண்பா-கூ, கலித்துறை-கூ.
கொச்சகம்-ச. கட்டளைக்கலிப்பா-க. விருத்தம்-ருஈஉரு.
தருக்கள்-கூஈஎஎ. திபதைகள்-கூ௰.
ஆ கூஈஎ௰கூ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

உ

# புத்தக விளம்பரம்.

இதனடியிற்கண்ட புத்தகங்களல்லாமல் தமிழ், தெலுங்கு, கிரந்தம், இங்கிலீஷ் முதலிய பாஷைகளில் வேண்டும் எவ்வகையான புத்தகங்களும் நானுவித சாமான்களும் பிணியாளர்களுக்குரிய ஔஷதங்களும் சென்னை சூளை, தொட்டிக்கலைகுமரப்ப முதலியார் வீதி 2-10 வது நம்பர் வீட்டில் ஸ்தாபித்திருக்கும் பரப்பிரம்ம முத்திராக்ஷரசாலை ப்ரோபிரைடர் **தி. இராஜூமுதலியாரிடத்தில்** வேண்டியவர்கள் வி. பி. மூலமாய் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| ஸ்ரீமஹாபாரதக்கீர்த்தனை என்று வழங்கும் ஸ்ரீமஹாபாரத நாடகம். ஆதிபர்வம் ஆதியாக ஸ்ரீபர்வம் அந்தமாக உள்ள பர்வம் பன்னிரண்டும் சங்கீத வித்வான்களாகிய ம-ா-ா-ஸ்ரீ, வேலூர் - சுப்பராய முதலியார், கோ-முத்திராமக்கவிராயர், கதிர்வேல் கவிராஜ பண்டிதராகிய மூவர்களால் பாடப்பெற்று முன் அச்சிட்டு வழங்குவனபோல் இரண்டாமுறை அதற்கியைந்தபடி சில சங்கீதவித்வான்கள் முன்னிலையில் பரிசோதிக்கப்பட்டு அச்சியற்றப்பட்டுள்ளது. முன்அச்சிட்டதிலும் அதிக தளமான கடிதத்தில் பதிப்பிக்கப்பட்டது. ராயல் 8 பேஜ்சயிஸ் 752 பக்கமுள்ளது. உயர்ந்த காலிகோகட்டடம் கிலிட்டு. ஷை புத்தகத்தில் ஏககாலத்தில் 10 புத்தகம் வாங்குபவர்களுக்கு ஒரு புத்தகம் கமிஷனாகக் கொடுக்கப்படும். | 2 | 8 | 0 |
| ,, கிளேஸ் காலிகோ பைண்டு | 3 | 8 | 0 |
| திருவிளையாடற் புராணவசனம் (படத்துடன்) | 1 | 2 | 0 |
| பெரியபுராணவசனம் படத்துடன் | 1 | 2 | 0 |
| பாகவதவசனம் படத்துடன் | 1 | 4 | 0 |
| ,, செய்யுள் 1-வது பாகம் | 1 | 4 | 0 |
| ,, 2-வதுபாகம் | 1 | 12 | 0 |
| விநாயகபுராணவசனம் | 2 | 0 | 0 |
| கருடபுராணவசனம்படத்துடன் | 0 | 3 | 0 |
| விஷ்ணுபுராணவசனம் | 0 | 8 | 0 |
| காசிகாண்டச்செய்யுள் | 0 | 8 | 0 |
| பிரமோத்ரகாண்ட மூலமும் உரையும் உயர்ந்தபதிப்பு | 1 | 4 | 0 |

| | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| அருணாசலபுராணம் மூலமும் உரையும் கிளேஸ் காலிகோ கட்டடம் | 0 | 12 | 0 |
| அரிச்சந்திரபுராண மூலமும் உரையும் கிளேஸ் | 0 | 14 | 0 |
| பக்தவிஜயம் 1-ம்பாகம் | 0 | 8 | 0 |
| ஷை இரண்டாம்பாகம் படத்துடன் | 1 | 8 | 0 |
| தேவாங்கபுராணம் | 1 | 4 | 0 |
| ஸ்ரீ கம்பராமாயணவசனம் 7 காண்டம் | 1 | 2 | 0 |
| பாரதவசனம் 18 பர்வம் 4 வாலியம் காலிகோபயிண்டு | 3 | 8 | 0 |
| பாரதக்கவி வில்லிபுத்தூரார் அருளிச்செய்தது | 2 | 0 | 0 |
| மூவர் அடங்கன்முறை | 3 | 0 | 0 |
| அகஸ்தியர் தேவாரத்திரட்டு திருவாசகம், திருவிசைப்பா திருப்பல்லாண்டு, பெரிய புராணச் செய்யுட்டிரட்டு ஆக ஐந்தும்சேர்ந்தது | 1 | 0 | 0 |
| இராமலிங்கசுவாமிகள் திருஅருட்பா 6திருமுறைகளடங்கியது | 2 | 0 | 0 |
| திருவாசகம் உயர்ந்த பதிப்பு | 0 | 10 | 0 |
| தாயுமானவர்பாடல் உயர்ந்த பதிப்பு | 0 | 12 | 0 |
| ஞானவாசிட்டம் மூலமும் உரையும் 2 வாலியம் | 2 | 4 | 0 |
| சிவதருமோத்திரம் | 1 | 8 | 0 |
| திருவிளையாடற் புராணம் செய்யுள் | 2 | 0 | 0 |
| திருவள்ளுவர் நவரத்ன சிந்தாமணி 800 பாடல் பெரியது | 0 | 12 | 0 |
| தட்சணா மூர்த்தி திருமந்திரம் 1500 (வைத்தியம்) | 1 | 0 | 0 |
| போகர்நிகண்டு 1200 (வைத்தியம்) | 0 | 12 | 0 |
| 18 சித்தர்கள் வைத்தியமூலிகை அகராதி பெரிது | 0 | 8 | 0 |

☞ கடிதங்களுக்குப் பதிலுத்தரம் வேண்டுகிறவர்கள் ½-அணா தபாற்றலையாவது ரிப்ளை போஸ்டுகார்டாவது அனுப்பவேண்டும். நட்பெயிட் கடிதங்கள் வாங்கப்பட்டா.

